2

# நிலச் சீர்திருத்தங்களும் பொருளாதார முன்னேற்றமும் -II

(LAND REFORMS AND ECONOMIC DEVELOPMENT)

எஸ். சபாநாயகம்




தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

# நிலச் சீர்திருத்தங்களும் பொருளாதார முன்னேற்றமும்

## (இரண்டாம் பகுதி)

ஆசிரியர்

**எஸ். சபாநாயகம்**, எம்.ஏ.,

துணைப் பேராசிரியர், பொருளாதாரத் துறை,

மாநிலக் கல்லூரி,

சென்னை.




தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க.வெ.) வரிசை எண்—487

# நிலச் சீர்திருத்தங்களும் பொருளாதார முன்னேற்றமும்

## (இரண்டாம் பகுதி)

ஆசிரியர்

எஸ். சபாநாயகம், எம். ஏ.,

துணைப் பேராசிரியர், பொருளாதாரத்துறை,
மாநிலக் கல்லூரி,
சென்னை.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—August, 1973

T.N.T.B.S. (C.P.) No. 487



**Land Reforms and Economic Development (Part-II)**

S. SABHANAYAKAM

**Price Rs. 10–75**

'Published by the Tamil Nadu Text Book Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.'

Printed by:
HALE ACHAGAM,
86A, Chellappa Mudali Street,
Madras - 12.

# அணிந்துரை

## திரு. இரா. நெடுஞ்செழியன்

(தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதின்மூன் ருண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழி லேயே கற்றுவந்தனர். 1968ஆம் ஆண்டின் தொடக்கத்தில் புகுமுக வகுப்பிலும் (P.U.C.), 1969ஆம் ஆண்டிலிருந்து பட்டப் படிப்பு வகுப்புகளிலும் அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறை களிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்றுவருகிறது. இவ் வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்க்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறு வதற்கு மதுரைப் பல்கலைக்கழகம் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், தத்துவம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல், வேதி யியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் தனி நூல்கள், மொழி பெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ்நாட்டுப் பாட நூல் நிறுவனம் வெளியிட்டுவருகிறது.

இவற்றுள் ஒன்ருன **'நிலச் சீர்திருத்தங்களும் பொருளாதார முன்னேற்றமும் - II'** என்ற இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 487ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இது வரை 522 நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக் கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை. ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெற வேண்டும். அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

**இரா. நெடுஞ்செழியன்**

# பொருளடக்கம்

பக்கம்

பக்கம்

# 14. பூதான கிராமதான இயக்கங்கள்

## (Bhoodan and Gramdan Movements)

வேளாண்மைத் துறையைச் சார்ந்த நிலமற்ற விவசாயிகள் பலவித இன்னல்களைக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய இன்னல்களைத் தீர்க்க அரசு பல முயற்சிகளை மேற்கொண்டது. அரசின் முயற்சிகளைத் தவிர ஆச்சாரிய விநோபா பாவே முதலியவர்களும் நிலமற்ற விவசாயிகளின் வாழ்வைப் புனரமைக்க உதவியுள்ளார்கள். அவருடைய பூமிதான, கிராமதான இயக்கங்கள் பல நன்மைகளை அளித்துள்ளன.

இந்தியாவில் நிலச்சிக்கல் அமைந்திருக்கின்றது. மக்களிடையே நிலம் சரியாகப் பகிர்ந்தளிக்கப்பட்டிருக்கவில்லை. நிலச்சிக்கலுக்கு முக்கியக் காரணம் விரைவாகப் பெருகி வரும் மக்கள் தொகையேயாகும். நில அளவைக் கூட்ட முடியாது. பிற இயற்கை வசதிகளும் குறைந்த அளவில் மட்டுமே கிடைக்கின்றன. இந்தியாவின் 70 சதவீதச் சாகுபடியாளர்கள் சாகுபடி நிலத்தில் 16 சதவீதத்தை மட்டுமே கொண்டுள்ளனர் என்பதைத் தேசிய மாதிரிக் கணக்கெடுப்பு-எட்டாவது சுற்று (National Sample Survey-Eighth Round) உணர்த்துகிறது. ஆந்திரப் பிரதேசத்தின் தெலுங்கானா பகுதியில் சிலர் ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலத்திற்குச் சொந்தமானவர்களாக இருந்தனர். பலர் ஓர் ஏக்கர் நிலத்தைக்கூட உடைமையாகக் கொண்டிருக்கவில்லை. அப் பகுதிகளில் சோவியத் ரஷ்யா, சீனா முதலிய பொதுவுடைமை நாடுகளின் புரட்சிக் கருத்துகள் தோன்றின. அதன் விளைவாகப் [redacted] கலவரங்கள் உருவெடுத்தன. அத் தீவிரப் புரட்சியினால் கொலைகள் பல செய்யப்பட்டன. நிலப்பறி இயக்கம் தோன்றியது. எங்கும் பயங்கர நிலை சூழலாயிற்று. அக் கொடுமைகளை நீக்க

மகாத்மா காந்தியின் வழிவந்த ஆச்சாரிய வினோபா பாவே 'பாத யாத்திரையை' (Padh Yatra) மேற்கொண்டார். இவ்வகையில், சிக்கலுக்குத் தீர்வு காண உதவிய முறையாகப் பூமிதான இயக்கம் அமைந்தது. சர்வோதய தத்துவத்தைச் செயல்படுத்த இவ் வியக்கம் தோற்றுவிக்கப்பட்டது.

சர்வோதயா என்பது வாழ்வின் தத்துவம். புதுமையான வாழ்வுத்துறைத் தேவைகளைப் பெருக்கிப் பல பிரச்சினைகளையும் உருவாக்குகின்றது. சர்வோதயத்தின் அடிப்படை எளிய வாழ்வு முறையேயாகும். தேவைகள் பெருகும்போது, வலியவர்கள் எளிய வர்களைச் சுரண்டுகின்றார்கள். பலரும் வறுமையில் வாடும்போது சிலரிடம் பொருளாதாரச் சக்திகள் குவிகின்றன. இப் பிரச்சினைக்குத் தீர்வு காண மக்கள் தங்களுடைய விருப்பங்களைக் குறைத்துக் கொள்ளவேண்டும். அதன் மூலமே, கிடைக்கக்கூடிய வளங்களைப் பயன்படுத்தி எல்லாருக்கும் தேவையான இன்றியமையாத பண்டங்களை உற்பத்தி செய்யலாம். தேவைகளைக் குறைத்து, எளிய வாழ்வு வாழவேண்டியதன் அவசியத்தைச் சர்வோதய முறை உணர்த்துகிறது. பெருநிலக்கிழார்கள் தங்களுடைய நிலத்தின் ஒரு பகுதியை நிலமற்ற விவசாயிகளுக்குத் தானமாக அளிக்கலாம் எனப் பூதான இயக்கம் அறிவுறுத்துகிறது. பின் வருபவை அவ் வியக்கத்தின் அடிப்படைத் தத்துவங்களாக இருக்கின்றன.

1. நிலம் கடவுளின் அன்பளிப்பு. அதன் பயனை மக்கள் அனைவரும் அடையவேண்டும். சூரிய ஒளி, காற்று, நீர் முதலிய இயற்கை வசதிகளை எல்லாரும் பொதுவாகப் பெறுவதுபோல, நிலத்தின் பயனை அனைவரும் அடைவது அவசியம். தனிப்பட்டவர்களின் நில அளவுகள் குறைக்கப்படவேண்டும். ஆனால், அதற்காக நிலவுடைமைகளின் மீதான உரிமைகளை நீக்கத்தேவையில்லை.

2. மக்கள் சாகுபடி செய்ய முடியும் என்ற அளவிற்கு நிலத்தை உடைமையாகக் கொண்டிருக்கலாம். அதற்கு அதிகமாக உள்ள நிலத்தை அவர்கள் நிலமற்ற விவசாயிகளுக்கு அளிக்க முன்வரவேண்டும். சாகுபடி செய்யத் தயாராக இருப்பவரிடம் மட்டுமே நிலத்தை அளிப்பது நல்லது.

3. பொருளாதார ஏற்றத் தாழ்வுகளை நீக்குவதற்கான சூழ்நிலைகளை, உருவாக்கப் பெரிய நிலவுடைமையாளர்கள் தங்களுடைய நிலங்களை நிலமற்றவர்களோடு பங்கிட்டுக்கொள்ளவேண்டும். இதன் மூலமே குறைந்த வாய்ப்புகளைப் பெற்றுள்ளவர்களின் நிலையை உயர்த்த இயலும்.

4. இம் முறை நல்லெண்ணத்துடனும், அகிம்சையுடனும், அமைதியுடனும் மேற்கொள்ளப்படவேண்டும். சகோதரத்துவமும், பெருந்தன்மையும் மக்களால் பின்பற்றப்படவேண்டும். சட்டங்களை இயற்றிக் கட்டாயப்படுத்தும் நிலை சிறப்பான நன்மைகளைத் தோற்றுவிக்காது.

ஒரு கணக்கெடுப்பின்படி, இந்தியாவில் சாகுபடி நிலம் சுமார் 266.4 மில்லியன் ஏக்கர் என்ற அளவுக்கு இருந்தது. அப்போது, வேளாண்மையில் ஈடுபட்டிருந்தவர்களின் எண்ணிக்கை 249 மில்லியனாகும். அவருள், 48.8 மில்லியன் என்ற அளவுக்கு நிலமற்ற விவசாயிகள் இருந்தனர். நிலவுடைமையாளர் ஒவ்வொருவரும் தங்களுடைய நிலத்தின் ஆறில் ஒரு பகுதியைத் தாங்களாகவே தானமாக அளிக்க முன் வந்தால், நாட்டின் நிலச் சிக்கலைத் தீர்க்கலாம் என விநோபா பாவே எண்ணினார். அதுவே, நிலமற்ற விவசாயிகளின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த உதவும் நல்ல முறை என்றும் கருதினார். நிலவுடைமைகளைக் கொண்டிருப்பவர்கள் மனமுவந்து நிலத்தைத் தர முன்வரவேண்டுமென்று அவர் கூறினார். இம் முறையின் மூலம், 50 மில்லியன் ஏக்கர்கள் நிலத்தைப் பெறலாம் என விநோபா திட்டமிட்டிருந்தார். இது சாகுபடி நிலத்தில் ஆறில் ஒரு பங்காகும்.

தெலுங்கானாவின் நாள்கொண்டா மாவட்டத்தில் உள்ள போச்சம்பள்ளி என்ற இடத்தில் திரு வி. ஆர். ரெட்டி என்பவரிடமிருந்து நூறு ஏக்கர் நிலம் முதன்முதல் பூதானமாகப் பெறப்பட்டது. நாட்டின் சமுதாய-பொருளாதாரப் புனரமைப்பிற்குப் பூதான இயக்கம், பெரிதும் உதவும். விநோபா பாவே கூறியதாவது, 'நிலவுடைமையாளர்கள் தங்களுடைய நிலத்தை அளிக்க முன்வராவிட்டாலும், நிலச் சீர்திருத்தங்களைச் செய்வதற்கான சூழ்நிலைகள் உருவாகாவிட்டாலும் பெரிய புரட்சி உருவாகும். என் முயற்சி அத்தகைய கொடிய முன்னேற்றத்தைத் தடுப்பதேயாகும். அமைதியான முறைகள் வெற்றியடையும் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது' என்பது. இம் முறையை அவர் 'பூதான யக்ஞ' (Bhoodan Yagna) என வழங்கி வந்தார். பூதான இயக்கத்தின் கொள்கைகளைப் பின் வருமாறு குறிப்பிடலாம்.

1. ஒவ்வொரு கிராமத்திலிருந்தும் போதுமான நிலத்தைப் பெற முயற்சிகள் எடுக்கப்படவேண்டும்.

2. பூதான இயக்கத்திற்கு எல்லா நிலவுடைமையாளர்களையும் நிலமளிக்குமாறு செய்ய வேண்டும்.

3. பெறப்பட்ட நிலங்கள் யாவும் கிராமத்திற்குள்ளாக மறு பகிர்வு செய்யப்படல்வேண்டும்.

4. நிலத்தைத் தவிர, பணம் பிற அன்பளிப்புகள் முதலியவற்றையும் பெறலாம்.

5. பூதான இயக்கத்தைப்பற்றிய அறிவை வளர்க்க முயற்சி [redacted] மேற்கொள்ளப்படல்வேண்டும்.

6. 'சர்வ சேவா சங்கத்தின்' (Sarva Seva Sangh) மையங்கள் எல்லா இடங்களிலும் ஏற்படுத்தப்படல்வேண்டும்.

நில அன்பளிப்பு இயக்கமென அழைக்கப்படும் இது, 1951 ஆம் ஆண்டில், வினோபாவால் தோற்றுவிக்கப்பட்டது. இவ் வியக்கத்தை முதல் திட்ட நிலச்சீர்திருத்தக் கொள்கையின் [redacted] பகுதி என்று கூற இயலாது. ஆனால், பின்னர், பூமிதான, கிராமதான இயக்கங்களுக்குச் சாதகமான சட்டங்கள் சில மாநில அரசுகளால் இயற்றப்பெற்றன. நிலம் எல்லாருக்கும் உடைமையானதாக இருக்கவேண்டுமென இவ் வியக்கங்கள் கருதின.

நிலத்தைத் தானமாகப்பெற ஆச்சாரிய பாவே நாடு முழுவதும் ஆர்வத்துடன் பயணம் செய்தார். பூதான முறையில் சிறிய அளவு நிலவுடைமைகள் அன்பளிபபாகத் தரப்படுகின்றன. இதன் முதிர்ந்த நிலையே கிராமதானம் என்பது. இம் முறையில், கிராமம் முழுதுமே தானமாக அளிக்கப்படுகின்றது. கிராமதான இயக்கத்தின் முக்கிய நோக்கம், இலட்சியக் கிராமங்களை அமைப்பதாகும். சாகுபடி நிலங்களின் உரிமை கூட்டுச் சமுதாயம் முழுவதையும் சார்ந்ததாக இருக்கும்.

பூதான இயக்கத்திற்கும், சர்வோதய முறைக்கும் நெருங்கிய தொடர்பு அமைந்துள்ளது. சர்வோதயத் தத்துவத்திற்குச்செயல் வடிவம் கொடுப்பதே பூதான இயக்கமுறையாகும். கிராமதானம், சம்பத்திதானம் (Sampattidan) முதலிய இயக்கங்கள் நிலத்தோடு பணம் முதலிய பிற அன்பளிப்புகளையும் தானமாகப் பெறுகின்றன. புத்திதானம் (Buddhidan), ஜீவன்தானம் (Jivandan), ஆகியவற்றில் அறிவுத் திறனும், வாழ்வும் அர்ப்பணிக்கப்படுகின்றன. பூதான இலட்சியங்களின் வெற்றி இவற்றைச் சார்ந்துள்ளது. சர்வோதயத் திட்டத்தின் ஒரு பகுதியாகப் பூதான இயக்கத்தைக் கருதலாம். வறுமை வட்டத்தை உடைப்பதும், மனித விருப்பங் [redacted] அளவைக் குறைப்பதும் சர்வோதயத் திட்டத்தின் நோக்கங்கள் ஆகின்றன.

பண்டங்களின் உற்பத்திப் பெருக்கத்தை மட்டும் சர்வோதயத் தத்துவம் முன்னேற்றமாக ஏற்றுக்கொள்ளவில்லை. உண்மையான முன்னேற்றத்தைப்பெறத் தெள்ளிய அறிவுவளர்ச்சியும், பண்பாட்டு வளர்ச்சியும் ஒருங்கே கூட்டாகத் தேவைப்படுகின்றன. அது சமதர்மத்தின் எல்லா நன்மைகளையும் கொண்டுள்ளது. ஆனால், தொழில்களைத் தேசிய மயமாக்கவேண்டுமென அது குறிப்பிடவில்லை. பொருளாதாரச் சக்திகள் ஒரு சிலருடைய கைகளில் குவிந்திருப்பதைத் தவிர்ப்பதன் அவசியத்தை, அது உணர்த்துகிறது. சிந்தித்துச் செயலாற்றும் உரிமையை ஒவ்வொரு மனிதனும் கொண்டிருக்கவேண்டுமென்று அது கூறுகின்றது.

சர்வோதயத்தின் பஞ்ச சீலங்கள் (Panch Sheel of Sarvodaya) பின்வரும் நிலைகளைக் கொண்டிருக்கின்றன.

1. 'சர்வோதய சமாஜத்தின் (Sarvodaya Samaj) ஒவ்வோர் உறுப்பினரும் சிந்தனையிலும், செயலிலும் அஹிம்சாவாதியாகவும், எல்லாருடைய நன்மையைக் கருதுபவராகவும் இருக்கவேண்டும்.

2. ஒவ்வொருவரும் எளிய வாழ்வு வாழ்ந்து தேவைகளை முடிந்த அளவிற்குக் குறைக்கவேண்டும்.

3. உடல் உழைப்பையும், அறிவு உழைப்பையும்கொண்டு வருமானத்தைப் பெற்று, ஒவ்வொருவரும் வாழவேண்டும். மக்கள் சுய நலத்தைக் கருதாமல், சமுதாய நலனைக் காக்கவே முயல வேண்டும்.

4. ஒவ்வொருவரும் தம்மைச் சொத்தின் உடைமையாளராகக் கருதாமல், அதன் காப்பாளராகக் கருதவேண்டும். சொத்துகள் சமுதாயம் முழுமைக்கும் நன்மையளிக்குமாறு பயன்படுத்தப்பட வேண்டும்.

5. வேளாண்மை, தொழில் முதலியவற்றைப் 'பரவலாக்க' (Decentralisation) வேண்டும். அதன்மூலமே, பொருளாதாரச் சக்திகள் ஒருவரிடமோ அல்லது ஒரு சிலரிடமோ குவிவதைத் தடுக்கமுடியும்.

பூதான இயக்கம் கணிசமான வெற்றியைக் கண்டுள்ளது. 1964 ஆம் ஆண்டுவரை சுமார் 11 இலட்சம் ஏக்கர்கள் நிலம் இவ் வியக்கத்தால் பெறப்பட்டிருக்கின்றது. இந் நிலம், நிலமற்ற விவசாயிகளுக்கு அளிக்கப்பட்டு விட்டது. [redacted] வியக்கம் அரசின்

இயக்கமன்று. ஆனால், மறைமுகமாக அரசு இதன் இயக்கத்திற்கு உதவுகிறது. இதைக் காந்திய வழியில் வேளாண்மையை மாற்றியமைக்கும் முறை எனலாம். இதன்மூலம், மக்கள் தரும சிந்தனையையும், சமுதாய விழிப்புணர்ச்சியையும் பெறுகின்றார்கள். தானமாகப் பெறப்படுகின்ற நிலம் நிலமற்ற உழைப்பாளரிடையே பங்கிட்டு அளிக்கப்படுகிறது. ஒவ்வொரு குடும்பத்தின் அளவிற் கேற்பவும், தேவைக்குத் தக்கவாறும் நிலம் தரப்படுகின்றது.

1951ஆம் ஆண்டுமுதல் வினோபா பாவே கால் நடையாகவே நாடு முழுவதும் பயணம் செய்து நிலத்தைப் பெற்று வருகின்றார். 1957ஆம் ஆண்டின் மத்தியிலிருந்து, கிராமதான இயக்கத்திற்கு அதிக முக்கியத்துவம் தரப்படுகிறது. எல்லா நிலத்தையும், கிராமச் சமுதாயம் உடைமையாகக் கொள்ளவேண்டுமென்பதை இஃது இலட்சியமாகக் கொண்டுள்ளது. கூட்டுறவு முறையில் கிராம முன்னேற்றத்தைப் பெறக் கிராமதானம் பெரிதும் உதவும்.

பூதான இயக்கத்திற்கு எதிரான கருத்துகளும் நிலவி வருகின்றன. எல்லாருக்கும், நிலத்தை அளிக்கவேண்டுமென்ற எண்ணம் சராசரிச் சாகுபடி நில அளவைச் சுருங்கச் செய்து விடும். பெரிய அளவில் அமைந்துள்ள சாகுபடி நிலங்களும்கூடப் பிரிக்கப்பட்டு உள்பிரிவு செய்யப்படும். இதனால், உற்பத்தி மிகவும் குறைந்துவிடும்; விற்பனைக்கான உபரியின் அளவும் தாழ்ந்து விடும். கிராமப் புறங்களிலிருந்து நகரப் புறங்களுக்குச் செல்லும் வேளாண்மைப் பொருள்களின் அளவு குறைவாகவே இருக்கும். மேலும், பூதான இயக்கத்தின் தலைவர்கள் நிலத்தைத் தானமாகப் பெற்று, அதை நிலமற்ற விவசாயிகளுக்கு அளிப்பதிலேயே அதிக அக்கறை கொண்டிருக்கின்றனர். நிலவுடைமையாளர்கள், தாங்களாகவே நிலத்தை அன்பளிப்பாக அளிக்க முன்வரவேண்டுமென்று பூதான இயக்கத்தின் தலைவர்கள் எண்ணுகின்றார்கள். அவர்கள், புதிதாக நிலத்தைப் பெற்றவர்களின் வாழ்வைப் புனரமைப்பதற்கான வசதிகளை அளிக்க முடிவதில்லை. கடன்கள், கால் நடைகள், கருவிகள் முதலியவற்றை அவர்களால் அளிக்க இயலுவதில்லை. பூதான நிலத்தைப் பெறுபவர்கள் நிலமற்ற விவசாயிகளாக இருந்தவர்களேயாவர். எனவே, சாகுபடிக்குத் தேவையான சாதனங்களை அவர்கள் உடைமையாகக் கொண்டிருப்பதில்லை. இதன் காரணமாக நாட்டின் மொத்த வேளாண்மை உற்பத்தி பழைய உற்பத்தி அளவைவிடக் குறையவும் வாய்ப்பு உண்டு.

இந்தியாவின் நிலவுடைமை முறையில் எண்ணற்ற சிக்கல்கள் இருக்கின்றன. பூதான இயக்கத்தின் மூலமாக மட்டும் இச்சிக்கல்களுக்குத் தீர்வு காண முடியாது. இவ் வியக்கம் தொடக்கத்தில் நல்ல வெற்றியைப் பெற்றது. அதற்குக் காரணம் ஜமீன்தாரி முறை ஒழிப்பைப்போன்று பெரிய நிலவுடைமையாளர்களின் நிலமும் பறிக்கப்படக்கூடும் என்ற எண்ணமேயாகும். பூதான இயக்கத்தின் வளர்ச்சி நீண்ட காலத்திலேயே ஏற்பட்டது. விநோபா பாவே நாட்டின் பல இடங்களுக்கும் கால் நடையாகச் சென்றது அதற்கு ஒரு காரணமாயிற்று. இம் முறை இந்தியாவின் திட்டமிட்ட பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவாது என்று சொல்லப்படுகின்றது. இதன் மூலம் பொருளாதாரத்தில் விரைவான இயக்கத்தைப் பெற இயலாது. எனினும், இதன் முக்கியத்துவத்தைக் குறைத்துக் கூற முடியாது.

நில அமைப்பு முறையின் சிக்கல்களைப் பூதான இயக்கத்தால் முழுமையாகத் தீர்க்க இயலாது. இச் சிக்கல்களின் இயல்புகள் குறுகிய காலத்தில், தீர்க்கக்கூடியவைகளாகவும் இல்லை. இவ் வியக்கம், அரசின் புதிய வேளாண்மைக் கொள்கைக்கு உதவும். நாக்பூர் காங்கிரஸ் கூட்டத்தில் கூட்டுறவுப் பண்ணை முறையை வளர்க்க வேண்டியதன் அவசிய நிலை உணர்த்தப்பட்டது. பூதான இயக்கத்தால் பெறப்பட்ட நிலத்தை இணைப்புக் கூட்டுறவுப் பண்ணைகளை ஏற்படுத்தப் பயன்படுத்தலாம். ஆனால், மிக முக்கியச் சிக்கல் அடங்கியுள்ளது. பூதானத்தின் காந்திய இலட்சியங்களுக்கும் பண்ணை முன்னேற்றத்திற்குத் தேவையான தொழில் நுணுக்க உற்பத்தி முறைகளுக்கும் இடையே தொடர்பை ஏற்படுத்துவது கடினம். வேளாண்மை உற்பத்தியைப் பெருக்க உற்பத்தி முறைகளில் முன்னேற்றங்கள் தேவை. உற்பத்தியில் எந்திரங்கள் பயன்படுத்தப்பட வேண்டும். ஆனால், பூதான இயக்கத்தின் மூலம் சாகுபடி நிலங்கள் சிறிய அளவிலேயே அமைகின்றன. அவற்றில் எந்திர உற்பத்தி முறையைக் கைக்கொள்வது இயலாது.

## நிலவுடைமைகளின் அமைப்பு முறை

பதினெட்டாவது சுற்றுத் தேசிய மாதிரிக் கணக்கெடுப்பின்படி "கிராமப் பகுதிகளில் சுமார் 6.95 கோடி குடியிருப்பாளர் குடும்பங்கள் வசித்தன. இதில், சுமார் 28 சதவீதத்தினர் நிலச் சொந்தக்காரர்களாக இருக்கவில்லை; சுமார் 24 சதவீதத்தினர் ஓர் ஏக்கருக்கும் குறைவான அளவிலேயே நிலத்தைக் கொண்டிருந்தனர். எனவே, 50 சதவீதத்திற்குச் சற்றுக் குறைவான குடும்

பங்கள் நிலமற்றனவாகவோ அல்லது ஓர் ஏக்கர் அளவுக்குக் குறைவான நிலத்தை உடைமையாகவோ கொண்டிருந்தன. அவை மொத்தச் சாகுபடி நிலத்தில் சுமார் ஒரு சதவீதத்தை மட்டுமே உடைமையாகப் பெற்றிருந்தன. சுமார் $\frac{3}{4}$ பகுதி குடும்பத்தினர் நிலமற்றவர்வளாகவோ அல்லது 5 ஏக்கர் நிலத்திற்குக், குறைவான நிலவுடைமையாளர்களாகவோ இருந்தனர். அவர்களுடைய பங்கு மொத்தச் சாகுபடி நிலப்பரப்பில் ஆறில் ஒரு பகுதியாகும். சுமார் $\frac{1}{8}$ பகுதி குடும்பத்தினர் 10 ஏக்கர்களுக்கு அதிகமான அளவில் நிலவுடைமைகளைக் கொண்டிருந்தார்கள். மொத்த நிலப்பரப்பில் அவர்கள் பெற்றிருந்தது சுமார் $\frac{2}{3}$ பகுதி நிலமாகும். சுமார் ஒரு சதவீதக் குடும்பத்தினர் 50 ஏக்கருக்கு அதிகமான அளவில் நிலவுடைமைகளைப் பெற்றிருந்தார்கள். மொத்த நிலத்தில் அவர்களுடைய நிலம் சுமார் $\frac{1}{5}$ பகுதியாகும். எல்லாக் குடும்பத்தினரின் சராசரி நில அளவு 4.8 ஏக்கர்களாகும். இதனின்றும், நிலமற்றவர்களை நீக்கிவிட்டால் சராசரி, நில அளவு [illegible] ஏக்கர்களாகும்.[1]

## பூதான இயக்கத்தின் தத்துவம்

நிலத்தை உடைமையாகக் கொண்டிருப்பவர்கள் நிலமற்றவருக்குத் தங்களுடைய நிலத்தின் ஒரு பகுதியை அன்பளிப்பாக அளிப்பதே பூதானமாகும். பழைய காலங்களில் நிலத்தைத் தானமாக அளிப்பது பரவலாக அமைந்திருந்தது. அப்போது, தரும காரியங்களும் ஏராளமாகச் செய்யப்பட்டன. கடவுளை வழிபட்டு அருளைப் பெற மதச் சடங்குகள் பலவும் கைக்கொள்ளப் பட்டன. விநோபா பாவேயின் பூதான இயக்கம் இந் நோக்கங்களுக்கு அப்பாற்பட்டது. அவர் கூறுவதாவது, 'நிலம் அனைவருக்கும் அன்னையைப் போன்றவள். அவளுக்குப் பணிபுரிய எல்லாருக்கும் உரிமை உண்டு, இயற்கையின் அன்பளிப்பாகிய நிலம் தனி ஒருவருக்குச் சொந்தமன்று. எல்லாரும் அதைப் பங்கிட்டுக் கொள்ள உரிமை பெற்றவர்கள். அதன் உற்பத்தியை அனைவரும் பெற வேண்டும். ஏழைகளுடைய நிலையை, உயர்த்த நிலம் பங்கிட்டு அளிக்கப்படவேண்டும்' என்பது.

பூதான இயக்கம் அஹிம்சைக்கான உணர்வையும், சூழ்நிலையையும் தோற்றுவிக்கின்றது. மக்கள் தங்களுடைய சிக்கல்களைத் தாங்களே தீர்த்துக்கொள்ள [illegible] உதவுகிறது. இவ் வியக்கத்தைப்பற்றி, டாக்டர் ராதாகிருஷ்ணன் குறிப்பிடுவதாவது, 'பூதான இயக்கம் மக்களுடைய மனத்தில் புரட்சியையும், அடிப்

1. National Sample Survey Report No. 122.

படை மாற்றத்தையும் தோற்றுவிக்கிறது. இப் புரட்சி கட்டாயப் படுத்தப்படாமல் இயல்பாக ஏற்படுமாறு செய்யப்படல் வேண்டும்.' வினோபாவின் முயற்சிகளை அவர் புகழ்ந்துரைக்கின்றார். நாட்டின் சமுதாயப் பொருளாதாரப் புனரமைப்பிற்கு அது மிகவும் உதவு மென்று குறிப்பிடுகின்றார்.

பூதான இயக்கத்தின் தத்துவத்தை நகர மக்களைக் காட்டிலும் கிராம மக்கள் நன்கு உணர்ந்துள்ளார்கள். கட்டாயப்படுத்துவதன் மூலம் நிலத்தைத் திரட்டுவது எளிதானதன்று பெருநிலக்கிழார்கள் நிலத்தை அன்பளிப்பாகத் தருவதற்குப் பூதானத் தத்துவமும் ஒரு காரணமாகும். சர்வோதய முறையின் அடிப்படையில் பூதான இயக்கம் செயல்படுகிறது.

**சர்வோதயத் தத்துவம்**

எளிய வாழ்வில் உண்மையான மகிழ்வைக் காணவேண்டு மெனச் சர்வோதயம் உணர்த்துகிறது. அது வாழ்வின் தத்துவ மாக அமைகின்றது. புதுமையான வாழ்வு பலவிதச் சிக்கல்களைத் தோற்றுவிப்பதால் மகிழ்வற்ற நிலை நீடிக்கிறது. எனவே, பல சிக்கல்களையும் தவிர்த்து மகிழ்வைப் பெற முயலவேண்டும். மேலும், பொருள்களின் அளிப்புப் போதுமானதாக இல்லை. மாறாக மனித விருப்பங்கள் எண்ணிக்கையில் பெருகிக்கொண்டு இருக்கின்றன. இவற்றின் காரணமாகச் செல்வத்தைச் சேர்க்க வேண்டுமென்ற விருப்பால் வலியவர்கள் எளியவர்களைச் சுரண்டு கின்றனர். எதிர்காலத் தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ளச் செல்வத்தைக் குவிக்கவேண்டுமென்ற எண்ணத்தை மக்கள் அடைகின்றார்கள். இதனால், பொருளாதாரச் சக்திகள் ஒரு சிலரிடம் குவிந்திருக்கின்றன; தீமைகள் பெருகுகின்றன.

வறுமை வட்டத்தை நீக்கவும், பிற சிக்கல்களைத் தீர்க்கவும் மனித விருப்பங்கள் குறைக்கப்படவேண்டும். விருப்பங்களைக் குறைக்கும் கோட்பாடாகச் சர்வோதயம் அமைந்துள்ளது. உண் மையான பொருளாதார முன்னேற்றத்தைப்பெற பொருள்களின் உற்பத்தி பெருகவேண்டும். முன்னேற்றத்திற்கு அறிவியல் வளர்ச்சியும், பண்பாட்டு வளர்ச்சியும் தேவைப்படுகின்றன. சமதர் மத்தின் எல்லா நன்மைகளையும் கொண்டுள்ள இம் முறையில், தொழில்கள் நாட்டுடைமையாக்கப்படல் வேண்டுமென்று கூறப் படவில்லை. ஆனால், பொருளாதாரச் சக்திகள் ஒரு சிலரிடம் குவிவதை [redacted] தடுக்கின்றது. தனிப்பட்டவர் ஒவ்வொருவரும் எல்லாச் சுதந்திரங்களையும் பெற்றிருக்கின்றார்.

**பூதான இயக்கத்தின் அவசியம்**

உலகின் பல நாடுகளிலும் வேளாண்மை சிக்கலே பெரிய ஒரு பிரச்சினையாக அமைந்துள்ளது. செல்வநிலையில் உள்ள பெருநிலக்கிழார்கள் எவ்விதப் பணியையும் செய்யாமல் கொள்ளை இலாபத்தைப் பெறுகின்றனர்கள். நிலத்தை உழுகின்ற உழைப்பாளர்களை அவர்கள் சுரண்டுகிறார்கள். நிலமற்ற உழைப்பாளர்களின் சிக்கலைத் தீர்க்கப் பல வழிமுறைகள் பின்பற்றப்படுகின்றன. சோவியத் ரஷ்யாவில் புரட்சியாளர்களின் ஆட்சி ஏற்பட்ட பின்னர், பாட்டாளி வர்க்கத்தின் வாழ்க்கைத்தரம் உயர்ந்தது. இரத்தம் சிந்திப் புரட்சியை மேற்கொண்டு, பாட்டாளிகள் பொதுவுடைமை அரசை ஏற்படுத்தினார்கள். சீனாவிலும் இம் முறையே பின்பற்றப்பட்டது.

இந்தியாவின் வேளாண்மைத்துறை தீர்வு காண்பதற்குக் கடினமான பல சிக்கல்களைக் கொண்டுள்ளது. அச் சிக்கல்களைக் குறைக்க நிலச் சீர்திருத்தங்கள் கொண்டு வரப்பட்டன. காஷ்மீரில் ஜமீன்தாரி முறை ஒழிக்கப்பட்டபோது இழப்பீட்டுத் தொகை வழங்கப்படவில்லை. பல மாநிலங்களிலும் ஜமீன்தாரி முறை ஒழிக்கப்பட்டுவிட்டது. ஆனால், இம் மாநிலங்கள் எல்லாவற்றிலும் அதிக அளவு பணம் இழப்பீட்டுத் தொகையாக அளிக்கப் பெற்றது. இந்தியாவில், அவசியமாகத் தீர்க்கப்படவேண்டிய உணவு சிக்கல் அமைந்துள்ளது. உணவு இன்றியமையாததாக இருப்பதால், இச் சிக்கலைத் தீர்ப்பது அவசரத்தன்மை கொண்டதாகவும் இருக்கிறது. இதற்காக 'உணவு உற்பத்திப் பெருக்கத் திட்டம்' (Grow More Food Campaign) கைக்கொள்ளப்பட்டது. இச் சிக்கலைத் தீர்க்க எல்லாத் திட்டங்களும் பல முறைகளைப் பின்பற்றின. நிலமற்ற வேளாண்மை உழைப்பாளர்களின் மறுவாழ்விற்காக உடனடி நடவடிக்கைகளை மேற்கொள்வது அவசியமாகும்.

சிறிய சிக்கல், பெரிய சிக்கல் என்று எதுவாக இருப்பினும், அதற்குத் தீர்வு காணப் பல முறைகளைப் பின்பற்றலாம். ஆனால், அம் முறைகள் நியாயமானவையாக இருத்தல் அவசியம். அவை மக்கள் அனைவருடைய நலனையும் பெருக்குவதாக அமைதல் இன்றியமையாதது. இந்திய வேளாண்மைச் சிக்கல் வெவ்வேறு முனைகளினின்றும் தாக்கப்படுகிறது. நிலக்கிழார்களுடைய மிகையான செல்வாக்கை ஒழித்தல் முக்கியமான ஒரு தீர்வாக அமைகின்றது. குத்தகையாளர்களுக்கு நிலத்தின்மீது உரிமையளித்துக் குத்தகைக்காலம் உறுதியளிக்கப்படவேண்டும். நிலவுடைமைகளின் மீது உச்சவரம்பைக் கொண்டுவருவது, நிலமற்றவர்களின் நிலையை

உயர்த்த உதவும். வேறு வகைப்பட்ட தீவிரக் கொள்கைகளும் நிலச் சீர்திருத்தங்களில் கைக்கொள்ளப்படல் வேண்டுமென்று சொல்லப்படுகிறது. எனினும், கட்டாயப்படுத்தப்படாத, தீவிர நிலைகளைக் கொண்டில்லாத பூதான இயக்கம் நல்ல இயல்புகளைக் கொண்டது என்றும் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது.

இந்தியா செல்வத்தைத் திரட்டுவதைவிட அதை அளிப்பதிலேயே பெயர்பெற்றது. இந்தியர்கள் தியாக மனப்பான்மை கொண்டவர்கள். அத் தியாக மனப்பான்மையின் அடிப்படையிலேயே, பூதான இயக்கம் ஓரளவு வெற்றியைப் பெற்றுள்ளது. அதன் மூலம், நிலமற்ற விவசாயிகள் பலர் நிலத்தைப் பெற்றிருக்கின்றனர்.

ஏப்ரல் 18, 1951-ல் தொடங்கிய பூதான இயக்கத்திற்கு முதன்முதலாகத் தெலுங்கானாவில் 100 ஏக்கர் நிலம் அளிக்கப்பட்டது. அந்த நிலம், நிலமற்ற ஹரிஜன மக்களிடையே பகிர்ந்தளிக்கப்பெற்றது. அதன் பின்னர், இவ் வியக்கம், செல்வாக்கைப் பெறலாயிற்று. இதைத் தாழ்ந்த மட்டத்தில் ஏற்பட்ட ஒரு புரட்சி என்று கூறலாம். மக்கள் எல்லாருடைய முன்னேற்றத்திற்கும் அவர்களே அடிப்படையை அமைத்துக்கொண்டார்கள். பூதான இயக்கத்தைத் தவிர, விநோபா சம்பத்திதானம் (Sampattidan), கூப்தானம் (Kopdan), ஹால்தானம் (Holdan), கிரிதானம் (Grihdan), சிரமதானம் (Shramdan), புத்திதானம் (Buddhidan), கிராமதானம் (Gramdan), ஜீவன்தானம் (Jivandan) முதலிய இயக்கங்களையும் தோற்றுவித்தார்.

டாக்டர் ராஜேந்திர பிரசாத் குறிப்பிட்டதாவது, 'ஸ்ரீ ஆச்சாரிய விநோபாவின் பூதான இயக்கம் முழுமையான வெற்றிபெற நிலமற்றவர்களுக்கு நிலத்தை அளிப்பது மட்டும் போதாது. வேளாண்மை, புனரமைப்பிற்கான பிற உதவிகளும், அவர்களுக்கு அளிக்கப்படவேண்டும்'. இவ் வியக்கம், படிப்படியான வளர்ச்சியைப் பெற்றது. முதன் முதலாகத் தானமாக நிலத்தைப் பெற்று விநோபா கூறியதாவது, 'என்னுடைய வயிறு மிகச்சிறியது; தரித்திர நிலை மிகப்பெரியது. தரித்திர நிலையைத் தீர்க்க எனக்கு 5 கோடி ஏக்கர் சாகுபடி நிலம் தேவைப்படுகிறது. அதன் மூலமே, ஒவ்வொரு கிராமக் குடும்பத்திற்கும் குறைந்த அளவு நிலத்தையாவது அளிக்கமுடியும்'.

பூதான இயக்கம் எவ்விதப் பணிகளை நிறைவேற்றுகின்றது, எவ்வாறு அது செல்வாக்கைப் பெற்றது என்பதற்கான காரணங் [illegible] பின்வருமாறு குறிப்பிடலாம்.

1. நில அன்பளிப்புகள் திரட்டப்பெற்று, அவை நிலமற்ற விவசாயிகளிடையே பகிர்ந்தளிக்கப்படுகின்றன. நிலச் சீர்திருத்தச் சட்டங்கள் நிலமற்ற விவசாயிகளுக்கு நிலமளிக்கத் தவறிவிட்டன. இக் குறைபாட்டைப் பூதான இயக்கம் நீக்குகின்றது.

2. பூதான இயக்கம் தன்னலம், வெறுப்பு, வகுப்பு வாதம் முதலியவற்றை நீக்க உதவுகிறது. இதன் மூலம், மக்கள் தேவைக் கேற்ப பொருள்களைப் பெறமுடிகிறது. குறைந்த அளவிலோ அல்லது அதிக அளவிலோ எவ்வகைத் தானத்தையும் அளிக்கலாம். தேவையின் அடிப்படையில், அத் தானம் மக்களிடையே பகிர்ந்தளிக்கப்படுகிறது.

3. அஹிம்சா முறையில்தான், எல்லாச் சிக்கல்களுக்கும் தீர்வு காணமுடியும் என இவ் வியக்கம் கருதுகின்றது. அழிவுப் பாதையினின்றும் ஆக்கப்பாதைக்கு, மனிதனைத் திருப்பவும் இஃது உதவும். சமுதாயச் சிக்கல்களுக்கு எளிதில் தீர்வுகாண இது [illegible] செய்கிறது.

**பூதான இயக்கத்தின் நோக்கங்கள்**

இந்திய நிலச்சிக்கல் பல பிரச்சினைகளைக் கொண்டுள்ளது. விரைவான மக்கள் தொகைப்பெருக்கத்தின் காரணமாக நிலவுடைமை முறையில் பல குறைபாடுகள் தோன்றுகின்றன. வளங்களும், வளங்களைப் பயன்படுத்துவதற்கான வசதிகளும் குறைவாக உள்ளன. சுமார் 75 சதவீத வேளாண்மை மக்கள் தொகை சாகுபடி நிலப்பரப்பில் 16.31 சதவீதத்தை மட்டுமே உடைமையாகக் கொண்டுள்ளது[1]. இதற்கு உதாரணமாக, தெலுங்கானுவின் பாலாபள்ளியைக் குறிப்பிடலாம். அக் கிராமத்தின் மக்கள் எண்ணிக்கை 3000 என்ற அளவில் இருந்தது. 90 குடும்பங்கள் மட்டுமே சாகுபடி நிலம் முழுவதையும் உடைமையாகக் கொண்டிருந்தன; எஞ்சிய 600 குடும்பத்தினர் நிலமற்ற உழைப்பாளர்களாக இருந்தார்கள்[2].

நிலவுடைமை முறையில் இருந்த குறைபாடுகளால் ரஷ்யாவிலும் சீனுவிலும் புரட்சித் தீ கொழுந்துவிட்டு எரிந்து, அதன் புகை வானத்தை மறைக்கும் மேகத்தைப்போல அமைந்தது[3]. பொதுவுடமைவாதிகளின் குருதி சிந்திய தீவிரப் புரட்சியின்

1. The National Sample Survey, Eighth Round, No 36, p. 18
2. R.P. Masani, 'The Five Gifts' 1957, p. 39.
3. Wolf Lodejinsky. Agrarian Revolution in Japan (The American Review, January 1964) p. 68.

விளைவாகப் பாட்டாளிகளின் சர்வாதிகார அரசு அந் நாடுகளில் ஏற்படுத்தப்பட்டது. அதைப்போன்ற சூழ்நிலை இந்தியாவின் தெலுங்கானு பிரதேசத்திலும் தோன்றியது. நிலவுடைமை முறையின் குறைபாட்டால் பொதுவுடைமைவாதிகள் எனப் பட்டவர் பலர் புரட்சி நடவடிக்கைகளில் ஈடுபட்டனர். அங்குப் பயங்கரமான சூழ்நிலை உருவாயிற்று. நிலக்கிழார்கள் கொலை செய்யப்பட்டனர். நிலப்பறி முறைகளும் கைக்கொள்ளப்பட்டன. அச் சமயத்தில் காந்திய வழிச்சென்ற ஆச்சாரிய விநோபா பாவே பாதயாத்திரையை மேற்கொண்டார். 'சிலர் ஆயிரக்கணக்கான ஏக்கர்களை உடைமையாகக் கொண்டிருந்தபோது, பலர் ஓர் ஏக்கர் நிலத்தை உடைமையாகக் கொண்டிருந்ததும், பலர் ஓர் ஏக்கர் நிலத்தைக்கூட உடைமையாகப் பெற்றில்லாத நிலையையும் விநோபா கண்டார். நிலப் பகிர்வுகளின் ஏற்றத்தாழ்வுகளை அமைதியான முறையில் குறைக்கவேண்டுமென்று அவர் எண்ணினுர். காந்தியக் கொள்கைகளைப் பின்பற்றிச் சமுதாயத்தைத் திருத்தியமைக்க அவர் விரும்பினுர்[1], மக்களைப் பூமிதான இயக்கத்தின் மீது நம்பிக்கை கொள்ளுமாறு செய்தார்.

விநோபா மக்களிடையே மன மாற்றத்தைப் பெறச்செய்து அவர்களுடைய வாழ்க்கைத்தரத்தை உயர்த்தக் கருதினுர். சமுதாய முன்னேற்றத்திற்கு அஃதே உதவுமென அவர் எண்ணினுர். பூதான இயக்கத்தின் நோக்கம் மக்களையே சுயமாகச் சிந்திக்கச்செய்து, தீமைகள் விளையாத வகையில் பொருளாதாரத்தின் குறைப்பாடுகளை நீக்குவதாகும். நிலம் எல்லாருக்கும் சொந்தமானதாக இருக்கவேண்டுமென்று விநோபா விரும்பினுர். முதலில் தெலுங்கானுவிலும், பின்னர் மத்தியப் பிரதேசத்திலும் அவர் பாதயாத்திரை செய்தார். பூதான இயக்கம் நிலத்தை யாசிக்கவில்லை. ஏழை மக்கள் நிலத்தைப் பெறுவதற்கு எல்லா உரிமைகளையும் கொண்டிருக்கிருர்கள். அதன் அடிப்படையிலேயே நிலமானது கேட்கப்படுகின்றது.

மக்கள் அனைவரும் நிலத்தை உடைமையாகப் பெறும்போது வெறுப்புணர்ச்சி, பகையுணர்ச்சி முதலியவை மறையும். மக்களிடையே கூட்டுறவு மனப்பான்மை வளரும். இதுபற்றி விநோபா மேலும் கூறியதாவது, 'நிலவுடைமையாளர்கள் தங்களுடைய நிலத்தின் ஒரு பகுதியை அளிக்காவிட்டால் புரட்சி தோன்றும். என்னுடைய முயற்சி கொடுமையின் வளர்ச்சியைத் தடுப்பதாகும். தெலுங்கானு, உத்தரப்பிரதேசம் ஆகிய மாநிலங்களில் எனக்குக்

1. Walter C. Neale, India: "The search for unity, Democracy and Progerss, 1965, p. 50'.

கிடைத்த அனுபவங்களிலிருந்து அமைதி முறையில் எதையும் வெற்றி காணலாம் என்பதை உணர்கிறேன்.[1]

அந்நிய ஆட்சியினின்றும் இந்தியா விடுதலைபெற அஹிம்சா முறையைப் பின்பற்ற வேண்டுமென்று அண்ணல் காந்தியடிகள் குறிப்பிட்டார். அம் முறையில், நம்மால் வெற்றியைப் பெறவும் முடிந்தது. அதே அஹிம்சை வழியில் சென்று கொண்டிருப்பவர் விநோபா ஆவார். கிராம மக்கள் தொகையில் சுமார் 20 சத வீதத்தினர் நிலமற்றவர்களாக இருக்கின்றனர்.[2] அவர்களுடைய நிலையை உயர்த்தவே விநோபா பூதான இயக்கத்தைத் தோற்று வித்தார். வேளாண்மை அல்லாத துறையினின்றும் வேறுவகையில் தானங்கள் பெறப்பட்டன. அவற்றில் சம்பத்தி தானம், புத்தி தானம், ஜீவன் தானம் முதலியன குறிப்பிடத்தக்கவை.

இவ் வியக்கத்தின் முக்கிய நோக்கங்களில் ஒன்று ஜனசக்தியை உருவாக்குவதாகும், தங்களைச் சார்ந்து தாங்களே வாழ்கின்ற சமுதாயம் ஏற்படுத்தப்படவேண்டும். இராணுவச் சக்தி, அரசியல் சக்தி ஆகியவற்றைவிட, ஜனசக்தி வலியது. ஜனசக்தியைத் திரட்ட அன்பே சிறந்த வழி. அன்பு பெருகும்போது உதட்டளவு பணிகள் மட்டும் அங்குச் செயல்படுவதில்லை, அன்போடு தியாக மனப்பான்மையையும் மக்கள் பெற்றிருக்க வேண்டும். நிலவுடைமை முறையில் மாற்றங்கள் தேவை என்று விநோபா கூறுகின்றார். தனியார் நிலவுடைமை உரிமைகள் மறைந்து, அவ் வுரிமைகளைக் கிராமமோ அல்லது சமுதாயமோ பெறவேண்டு மென்று அவர் குறிப்பிடுகின்றார்.

நிலத்தை உழுகின்ற ஒவ்வொருவருக்கும் தேவையான பொருள்கள் கிடைக்கவேண்டும். உண்ணுகின்ற ஒவ்வொரு வரும், உடல் உழைப்பைத் தருவது அவசியம். சமுதாயத்திட மிருந்து நமக்கு என்ன கிடைக்கும் என்று எண்ணுவதைவிடச் சமுதாயத்திற்கு நாம் என்ன செய்யலாம் என்ற எண்ணமே மேலோங்கி நிற்க வேண்டும். சொத்தின் காப்பாளராக அனை வரும் இருக்க வேண்டுமே தவிர, உடைமையாளராக இருக்கக் கூடாது. இம் முறையின் மூலம், இந்தியாவில் அமைதியான வேளாண்மைப் புரட்சியைத் தோற்றுவிக்கலாம். பூதான இயக்கத்தைப்பற்றி விநோபா மேலும் குறிப்பிடுவதாவது, 'இவ் வியக்கத்தால் நிலம் எல்லாருக்கும் உடைமையாகும்; சமத்துவச் சமுதாயத்தை ஏற்படுத்த இயலும்' என்பது.

1. Vinoba Bhave, 'Bhoodan yajna' (Land - Gifts Mission), p.21.
2. G. D. Patel, 'The Indian Land Problem and Legislation,' 1954, p.p. 209—10.'

### பூதான இயக்கத்தின் வளர்ச்சி

கணிசமான வளர்ச்சியைக் கொண்டிருந்த பூதான இயக்கம், படிப்படியாக நாடு முழுவதும் பரவலாயிற்று. இம் முறையில் நிலமற்றவர்களுக்கு நிலமளிக்க நிலவுடைமையாளர்கள் தாங்களாகவே முன்வருகின்றனர். மக்கள் தங்களுடைய சொத்துகளை மற்றவர்களோடு பங்கிட்டுக் கொள்ளுகின்றனர்கள். கூட்டு முயற்சியின் மூலம் வளர்ச்சி காக்கப்படுகின்றது. மனிதாபிமானமும், இரக்கக் குணமும் கொண்ட நிலக்கிழார்கள் தங்களுடைய நிலத்தின் ஒரு பகுதியை அன்பளிப்பாக அளிக்கின்றனர்கள். பூதானத் தொண்டர்களால் அந்த நிலம் பெறப்படுகிறது. அகில பாரத சர்வ சேவா சங்கம் (Akhil Bharat Sarva Seva Sangh) அத் தொண்டர்களுக்கு வழிகாட்டியாக அமைகிறது. நிலத்தானத்தைப் பெருநிலக் கிழார்கள், நடுத்தர நிலவுடைமையாளர்கள் மட்டும்தான் அளிக்க வேண்டுமென்பது தவறு. சிறிய நிலவுடைமையாளர்களும் தங்களுடைய நிலத்தின் ஒரு பகுதியை அளிக்க முன்வரலாம். தொடக்கக் காலத்தில் இவ் வியக்கம் கணிசமான வளர்ச்சியைப் பெற்றது. இதற்கு உதாரணமாகப் பீஹார் முதலிய மாநிலங்களில் சிறப்பான வெற்றி கிடைத்ததைக் குறிப்பிடலாம். ஆனால், காலம் செல்லச் செல்ல இவ் வியக்கம் செல்வாக்கிழந்து விட்டது. நிலத்தானங்களின் அளவும் மிகத் தாழ்ந்த நிலையில் அமைந்துள்ளது. இதைப் பின்வரும் அட்டவணை நன்கு உணர்த்தும்.

**பெறப்பட்ட மொத்த நிலத்தானங்கள்**[1]

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 18 ஏப்ரல் 1951 முதல் | 25 மார்ச் | 1954 | வரை | ... | 27.63 |
| | 25 மார்ச் | 1955 | வரை | ... | 31.71 |
| | மார்ச் | 1956 | ,, | ... | 43.07 |
| | டிசம்பர் | 1957 | ,, | — | 43.82 |
| | ஜூன் | 1958 | ,, | — | 44.01 |
| | நவம்பர் | 1959 | ,, | ... | 44 10 |
| | ஆகஸ்ட் | 1960 | ,, | .... | 44 11 |
| | [2]டிசம்பர் | 1961 | ,, | — | 41.78 |
| | செப்டம்பர் | 1963 | ,, | ... | 42 00 |
| | மார்ச் | 1964 | ,, | ... | 42.27 |
| | மார்ச் | 1965 | ,, | ... | 42.37 |
| | மார்ச் | 1966 | ,, | ... | 42 45 |
| | மார்ச் | 1967 | ,, | ... | 42 64 |

1. India, 1968, p. 251.
2. Revised by the Akhil Bharat Sarva Seva Sangh on March 23, 1968.

முதல் ஐந்து ஆண்டுகளில் சராசரி ஆண்டொன்றிற்கு 10 இலட்சம் ஏக்கர் நிலம் தானமாகப் பெறப்பட்டன. அடுத்த ஐந்து ஆண்டுகளில் ஆண்டொன்றிற்குச் சராசரியின் அளவு 20 000 ஏக்கர்களாகக் குறைந்துவிட்டது. இதிலிருந்து 1956 ஆம் ஆண்டின் இறுதிக்குள்ளாகவே பூதான இயக்கம் செல்வாக்குக் குன்றியதை உணர முடிகிறது. 5 கோடி[1] ஏக்கர்கள் நிலத்தைப் பூதானத்தின்மூலம் பெறத் திட்டமிட்டிருந்தாலும் மார்ச் 1967 வரை 42, 64, 096 ஏக்கர்கள் மட்டுமே பெற இயன்றது. இதில் சுமார் 50 சதவீத நிலம் பீஹார் மாநிலத்திலிருந்தே பெறப்பட்டது. நிலத்தை அளிப்பதில் அடுத்தடுத்த நிலையில் இருந்தவை உத்தரப் பிரதேசம், ராஜஸ்தான், மத்தியப் பிரதேசம், ஆந்திரப் பிரதேசம், ஒரிஸ்ஸா, மஹாராஷ்டிரம், குஜராத் ஆகிய மாநிலங்களாகும்.

**நிலப்பகிர்வு**

1952 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் சேவபுரித் தீர்மானம் (Sevapuris Resolution), 'தானமாக அளிக்கப்பட்ட நிலம் வேளாண்மைத் தொழிலில் பழக்கமுடைய நிலமற்ற உழைப்பாளர்களுக்குத் தரப் படவேண்டும்; வாழ்க்கையைப் பராமரிக்க வேறு வசதிகள் இல்லாதவர்களாகவும், சாகுபடியை வேண்டி விரும்பிச் செய் பவர்களாகவும், இருக்கவேண்டும்' என்று குறிப்பிட்டது. பூதான இயக்கத் தொண்டர்களால் நிலப்பகிர்வு செய்யப்படுகிறது. நிலமற்ற விவசாயிகளின் நிலையை அவர்கள் தீர்மானிக்கிருர்கள். ஒரு வேளாண்மைக் குடும்பத்திற்கு எந்த அளவு நிலத்தை அளிக் கலாம் என்பதும் அவர்களாலேயே தீர்மானிக்கப்படுகின்றது. ஒவ்வொரு கிராமத்திலும் கிராமத்தைச் சேர்ந்தவர்களுக்கு மட்டுமே நிலம் வழங்கப்படுகிறது. பழக்க வழக்கங்களின் அடிப் படையில் கெட்டிமேளம் கொட்டி கிராமத்தில் நிலப்பகிர்வு செய்யப் படும் நாள் அறிவிக்கப்படுகின்றது. அந் நாளில் பூதான இயக்கத் தொண்டர்கள் அலுவலர்களோடு அக் கிராமத்திற்கு விஜயம் செய் கிருர்கள். தொண்டர்கள் கிராம மக்களிடம் எவரெவருக்கு நிலம் அளிக்கலாம் என்று கேட்கின்றனர். அவர்களுடைய கருத்திற் கேற்பவும், தகுதியின் அடிப்படையிலும் நிலம் தரப்பெறுகின்றது. ஹரிஜனங்களுக்கும், அனுபவம் மிக்க நிலமற்ற விவசாயிகளுக்கும், பின்தங்கிய வகுப்பினர்களுக்கும் முக்கியத்துவம் அளிக்கப்படு கின்றது. நிலத்தைப் பெறுபவர்கள் சிறப்பான சாகுபடியைச் செய்வார்கள் என்பதை மற்றைய கிராமவாசிகள் உறுதி கூற வேண்டும்.

1. Gregory Kotovsky, 'Agrarian Reforms in india,' 1964, p. 121.

நிலப்பகிர்வு செய்யப்படுவதற்கு முன்னர், நிலவுடைமைகள் பற்றிய விவரங்கள் அரசின் நிலவரி வருவாய் அதிகாரிகளால் சரி பார்க்கப்படுகின்றன. நிலத்தைப் பெறுபவர் அந்த நிலத்தைப் பத்து ஆண்டுகள்வரை விற்க இயலாது. எனினும், இவ்வித நில மாற்றங்கள் செய்யப்படும்போது பதிவுத் தொகையோ (Registration Fee) முத்திரைக் கட்டணமோ (Stamp Duty) வாங்கப்படுவதில்லை. இது போன்று 1967 ஆம் ஆண்டு மார்ச் வரை 11.91 இலட்சம் ஏக்கர் நிலம் அளிக்கப்பட்டுள்ளது. இந்த நிலம் தானமாகப் பெறப்பட்ட மொத்த நிலத்தில் நான்கில் ஒரு பங்கிற்குச் சற்றுக் குறைவாகும்.

தெலுங்கானாவில் பொதுவுடைமையாளர்களின் தீவிர நடவடிக்கைகளால் இவ் வியக்கம் தோற்றம் பெற்றது. அதிகப் பரப்பளவுள்ள நிலம் ஒரு சிலரிடம் குவிந்திருப்பதால் பலரும் நிலமற்றவர்களாக இருக்கின்றார்கள். அல்லது குறைந்த அளவு நிலத்தையே கொண்டிருக்கின்றார்கள். மக்களிடையே வறுமையும், மகிழ்வின்மையும் நிகழ்வதற்கு இதுவே முக்கியக் காரணம். நிலச் சீர்திருத்தத்தைச் செய்வது பூதான இயக்கத்தின் ஒரு நோக்கமாகும். எனினும், அது சமுதாய பழக்க வழக்கங்கள், பண்பாடு ஆகியவற்றைச் சாதகமாக ஆக்கிக்கொண்டு நிலவுடைமைச் சிக்கலுக்கு அமைதியான வழியில் சுமுகமான தீர்வைக் காண விழைகின்றது.

பின்வரும் அட்டவணை மூலம் 1957 டிசம்பர் முதல் 1967 மார்ச் வரை தானமாகப் பெறப்பட்ட நிலம் எந்த அளவிற்கு வெவ்வேறு காலங்களில் பங்கிடப்பட்டது என்பதை அறியலாம்.

பகிர்வு செய்யப்பட்ட மொத்த நிலம்

| | | | | (இலட்சம் ஏக்கர்களில்) |
|---|---|---|---|---|
| டிசம்பர் | 1957 | வரை | ... | 6.54 |
| ஜூன் | 1958 | ,, | ... | 7.83 |
| நவம்பர் | 1959 | ,, | ... | 8.41 |
| ஆகஸ்ட் | 1960 | ,, | ... | [illegible] 73 |
| [1]டிசம்பர் | 1961 | ,, | ... | 8.69 |
| செப்டம்பர் | 1963 | ,, | ... | 10.00 |
| மார்ச் | 1964 | ,, | ... | 10 70 |
| மார்ச் | 1965 | ,, | ... | 11.01 |
| மார்ச் | 1966 | ,, | ... | 11·51 |
| மார்ச் | 1967 | ,, | ... | 11.91 |

1. Revised by the Akhil Bharat Sarva Seva Sangh on March 23, 1962.

**பூதான இயக்கம் செயல்படும் முறை**

குறிப்பிட்ட பகுதிகளில் பூதான இயக்கத்தைச் செயல்படுத்த 'பிரதேசப் பூதான குழுக்கள்' (Pradesh Bhoodan Committees) அமைக்கப்பட்டுள்ளன. 'நில அன்பளிப்புப் பத்திரங்கள்' (Land Gift Deeds) இரு நகல்களில் தயாரிக்கப்பட்டுச் சாட்சியோடு கையெழுத்துகள் வாங்கப்பெறுகின்றன. பிரதேசக் குழுக்கள் இப் பணிகளைச் செய்து பத்திரங்களை ஆச்சாரிய வினோபா பாவேயின் கையெழுத்தைப்பெறச் சேவா கிராமத்தில்உள்ள சேவா சங்கத்திற்கு அனுப்புகின்றன. பின்னர் நிலம் மறு பகிர்வு செய்யப் படுகின்றது. பிரதேசக் குழுக்கள் மாவட்ட அளவிலும் நிலத்தைத் தானமாகப் பெறப் பணியாளர்களை நியமிக்கின்றன.

நிலப்பகிர்வு செய்வதற்கு ஏழு நாட்கள் முன்பாகக் கிராம மக்களுக்கு அது பற்றிய விபரம் அறிவிக்கப்படுகிறது. நில மளிக்கப்படுவதற்கு ஒரு நாள் முன்னர், முரசறைந்து விபரம் தெரிவிக்கப்படுகின்றது. கிராம மக்கள் யாவரும் அத் திட்டத்தைப் பற்றி நன்கு உணர்த்தப்படுகிறார்கள். இதற்கு இடைப்பட்ட காலத்தில் நிலப் பகிர்வைச் செய்யும் பணியாளர்கள் தானமாகப் பெறப்பட்ட நிலத்தின் வள நிலையை ஆய்வு செய்கின்றனர். கிராமப் பஞ்சாயத்தின் உதவியோடு ஒரு விவசாயக் குடும்பத் திற்கு எவ்வளவு ஏக்கர்கள் நிலம் அளிக்கலாம் என்பதைத் தீர்மானிக்கின்றனர். நிலப்பகிர்வு செய்யப்படும் இடமும், காலமும் 'மாவட்ட நீதிபதிக்கும்' (District Magistrate), பிற அலு வலர்களுக்கும் முன்னதாகவே அறிவிக்கப்படுகின்றது. நிலப் பகிர்வின் போது இவர்களுடைய உதவியையும் பூதான இயக்கக் குழுக்கள் பெறுகின்றன.

நிலம் பகிர்ந்தளிக்கப்படும் நாளில் கிராமம் முழுதும் ஓரிடத்தில் கூடுகிறது. அங்குப் பூதான இயக்கத்தின் நோக்கங்கள் விளக்கப் படுகின்றன. நோக்கங்கள் உணர்த்தப்பட்ட பின்னர், நிலமற்றவர் களுக்கு நிலம் வழங்கப்படுகின்றது. நிலமளிப்பதில் நிலமற்ற வேளாண்மை உழைப்பாளர்களுக்கு முதல் முக்கியத்துவம் அளிக்கப்பெறுகிறது. இவர்களுக்கு அளித்தது போக, நிலம் எஞ்சியிருந்தால் அது போதுமான அளவு சாகுபடி நிலத்தைக் கொண்டில்லாதவர்களுக்கும் பிற தொழில்களில் ஈடுபடாதவர் களுக்கும் தரப்படுகிறது. பகிர்வு செய்வதற்கான நிலம் குறை வானதாக இருந்தால் நிலமற்றவர்களில் சிலருக்கு மட்டுமே நிலத்தை அளிக்க முடிகிறது. 'சீட்டுக் குலுக்கல்' முறையிலும் பெயர்கள் தெரிந்தெடுக்கப்படுவதுண்டு.

நிலத்தைப் பெறுபவர்களுக்கு நிலத்தின் மீதான உரிமையை நிலை நாட்ட பத்திரங்கள் வழங்கப்படுகின்றன. அதற்கு முன்னர் நிலத்தை வேண்டுபவர்கள் விண்ணப்பங்களைக் கையெழுத்திட்டு அளிக்கின்றனர். பூதானக் குழுவின் பிரதிநிதிகள், மாவட்ட நீதிபதி, க்ராமப் பஞ்சாயதுத் 'தலைவர்' (Chairman) ஆகியோர் கையொப்பமிட்ட சான்றிதழ்கள் தரப்பெறுகின்றன. நிலத்தை அன்பளிப்பாகப் பெறுபவர்களிடமிருந்து எவ்விதத் தொகையும் வசூலிக்கப்படுவதில்லை.

நிலத்தைப் பெறுபவர் குறைந்தது 10 ஆண்டுகளுக்காவது தானே சாகுபடியைச் செய்யவேண்டும். நிலத்தைப் பெற்ற திலிருந்து மூன்று ஆண்டுகளுக்குள்ளாகச் சாகுபடிப் பணிகளைத் தொடங்கிவிடவேண்டும். ஆனால், சூழ்நிலைக்கேற்ப சில சலுகை களும் அளிக்கப்படலாம். நிலமானது உடனடிச் சாகுபடிக்கு ஏற்றதாக இல்லாதபோது சலுகைகள் அளிக்கப்படுகின்றன. அளிக்கப்படும் நிலம் தேவைக்குச் சற்று குறைவாக இருக்கும் போது அந்த நிலத்திற்கு அருகில் உள்ள நிலவுடைமையாளர் களிடமிருந்து நிலம் தானமாக வேண்டப்படுவதுண்டு.

மேற்குறிப்பிடப்பட்ட நியதிகள், கொள்கைகள், நோக்கங்கள் ஆகியவற்றிற்கேற்ப நிலம் பகிர்ந்தளிக்கப்படுகிறது. பகிர்வின் மூலம் உற்பத்தியின் அளவு பாதிக்கப்படாமல் பார்த்துக்கொள் ளப்படுகின்றது. பூதான இயக்கம் எளிதில் செயல்பட ஆந்திரப் பிரதேசம், பீஹார், குஜராத், மத்தியப்பிரதேசம், தமிழ்நாடு, மைசூர் ஒரிஸ்ஸா, பஞ்சாப், ராஜஸ்தான், உத்தரப்பிரதேசம், டில்லி ஹிமாசலப்பிரதேசம் ஆகிய மாநிலங்களின் அரசுகள் சட்டங்களை இயற்றியுள்ளன. இச் சட்டங்கள், பூதான இயக்கம், நிலத்தை அன்பளிப்பாகப் பெறுவதற்கும், அளிப்பதற்கும் பல வசதிகளைச் செய்து ஊக்குவிக்கின்றன.

## பூதான இயக்கத்தின் முக்கிய நிலைகள்

நிலத்தைத் திரட்டுவதும், அதைப் பகிர்ந்தளிப்பதும் பூதான இயக்கத்தின் முக்கிய இரு நிலைகளாக அமைந்துள்ளன. இந்தி யாவின் சாகுபடி நிலத்தில் ஆறில் ஒரு பங்கைத் (50 மில்லியன் ஏக்கர்கள்) திரட்ட விநோபா திட்டமிட்டிருந்தார். அதை 10 மில்லியன் நிலமற்ற குடும்பங்களுக்கு அளிக்கக் கருதினார். நிலத்தைத் திரட்டுவதிலும், பகிர்வதிலும் பல சிக்கல்கள் அடங்கி யுள்ளன. அன்பளிப்பாக நிலத்தைப் பெறுவதைக் காட்டிலும் அதைப் பங்கிடுவதே அதிகப் பிரச்சினைகளைத் தோற்றுவிக்கிறது.

பூதான இயக்கத்தின்மூலம் நிலம் சரியான அடிப்படையில் திரட்டப்படுகின்றது. ஆனால், அந்த நிலம் பங்கிடப்படும்போது பல சிக்கல்கள் உருவெடுக்கின்றன. 1965 ஆம் ஆண்டு அக்டோபர் வரை 42 இலட்சம் ஏக்கர்கள் தானமாகப் பெறப்பட்டன. அவற்றில் 11 இலட்சம் ஏக்கர்கள் மட்டுமே மறு பங்கீடு செய்யப்பெற்றன. பீஹார் மாநிலத்தில் மட்டுமே அதிக வீதத்தில் நிலப்பகிர்வு செய்யப் பட்டது. நிலப்பகிர்வு செய்யப்படும்போது மாநில அரசின் உதவிகள் பெறப்படவில்லை. 'அரசின் தலையீடு இயக்கத்தின் அடிப்படை இயல்பை மாற்றிவிடும்' என்று வினோபா கூறுகின்றார். இக் கூற்றை டாக்டர் வி.கே.ஆர்.வி. ராவ் ஆதரித்துள்ளார். அவர் குறிப்பிடுவதாவது, 'அரசின் குறுக்கீடு அமைந்திருந்தால் பூதான இயக்கம் சிறப்பாகச் செயல்பட முடியாது' என்பது. ஆனால், இதற்கு மாறான கருத்தைத் திரு.வி டி கிருஷ்ணமாச்சாரி கொண்டிருக்கின்றார். அவர் கூறுவதாவது, 'மக்களிடம் நிலத்தைத் தானமாக அளிக்க வேண்டுமென்ற பிரச்சாரங்களை அரசின் அலுவலர்கள் செய்யத் தேவையில்லை. அரசின் நோக்கமும் அது வன்று. ஆனால், அரசு நிர்வாக நடவடிக்கைகளின்மூலம் அலுவலர்கள் பூதான இயக்கத்தை ஊக்குவிக்க முடியும்; சாகுபடி நில முன்னேற்றத்திற்கான வசதிகளை அளிக்க இயலும். இரக்க உணர்வோடு கூடிய நடவடிக்கைகளைக் கைக்கொள்வது அரசின் கடமையாகும் என்பது.'

தொடக்க காலத்தில் பூதான இயக்கம் சிறப்பான வெற்றியைப் பெற்றது. பின்னர், அது செல்வாக்கைப் பெரிதும் இழந்து விட்டது. 31 மார்ச், 1968வரை 42,64 096 ஏக்கர் நிலம் மட்டுமே தானமாகப் பெறப்பட்டுள்ளது. ஆனால், இவ் வியக்கத்தின் நோக்கம் 50 மில்லியன் ஏக்கர்களைத் தானமாகப் பெறுவதாகும். தானமாகப் பெறப்பட்ட நிலத்தில் 11,90,718 ஏக்கர்கள் மட்டுமே மறுபகிர்வு செய்யப்பட்டுள்ளன. நிலமற்ற விவசாயிகளிடம் நிலம் அளிக்கப்பட்டிருக்கின்றது. நிலத்தானங்களில் சுமார் 40 சதவீத நிலம் சாகுபடிக்கு ஏற்றதாக இல்லை. எனவே, அவ்வகை நிலம் வாங்கப் பெறாமல் மறுக்கப்பட்டுவிட்டது. 21,21,462 ஏக்கர்கள் என்ற அதிக அளவிற்குத் தானமாக நிலத்தை அளித்துள்ள மாநிலம் பீஹார் ஆகும். ஆனால் அந்த நிலத்தில் 59 சதவீதத்தைப் பகிர்வு செய்ய இயலாது. தரக்குறைவான, சாகுபடி செய்ய முடியாத நிலமாக அஃது அமைந்துள்ளது. சீரிய நோக்கங்களைக் கொண்டுள்ள இவ்வியக்கம் குறிப்பிடத்தக்க அளவிற்கு வெற்றியைப் பெறவில்லை. ஓரளவே வெற்றியைப் பெற்றிருந்தாலும், இது மக்களுடைய கவனத்தைக் கவர்ந்திருக்கிறது. இவ் வியக்கத்தின்

நோக்கங்கள் முழுமையாக நிறைவேற்றப்படவில்லை. ஆனால், மக்களிடையே இஃது இரக்க உணர்வையும், தயாள சிந்தையையும், தானமளிக்கும் நல்லெண்ணத்தையும் தோற்றுவித்துள்ளது.

பூதான இயக்க முன்னேற்றத்திற்குச் சில காரணிகள் தடையாக அமைந்துள்ளன. அவற்றைப் பின்வருமாறு சுருக்கமாகத் தொகுத்துக் கூறலாம்:

1. சாகுபடியில் அமைந்தில்லாத மலைப்பிரதேச நிலம், சதுப்பு நிலம் (Marshy Land) முதலியவையே தானமாகப் பெறப்பட்டன. பயன்படுத்த இயலாத நிலமே பூதான இயக்கத்திற்கு அன்பளிப்பாகத் தரப்பட்டது. பூசல்களைக் கொண்டுள்ள நிலங்களும் தானமாக அளிக்கப்பெற்றன. நிலவுடைமைகளின்மீதான உரிமைகள் பற்றிய தகராறுகள் தோன்றுவதுண்டு. அதன் காரணமாக நீதிமன்றங்களில் வழக்குகள் உரைக்கப்படுகின்றன. இவ் வகை நிலங்களும் தானமாகப் தரப்படுகின்றன.

2. வினோபா பாவேயின் முன்பாகச் சிலர் நிலத்தை அன்பளிப்பாகத்தர உறுதியளிக்கின்றனர். ஆனால், பூதான இயக்கத் தொண்டர்கள் அவர்களை அணுகும்போது நிலத்தானம் மறுக்கப்படுகின்றது. நிலம் மறு பகிர்வு நடவடிக்கைகள் இதனால் பெரிதும் பாதிக்கப்படுகின்றன.

3. பூதான இயக்கத்தில் பயிற்சி பெற்ற பணியாளர்கள் அமைந்திருக்கவில்லை. தானமாகப் பெறப்பட்ட நிலத்தை மறு பங்கீடு செய்வது இதனால் கடினமாகின்றது. நிலத்தை மறுபங்கீடு செய்வதற்கான நிதி, அகில பாரத சர்வ சேவாசங்கம் (Akhil Bhart Sarva Seva Sangh), காந்தி ஸ்மாரக் நிதி (Gandhi Smarak Nsdhi), வினோபா பெற்றபண நன்கொடைகள், அரசின் மானியம் (Government Grant) ஆகியவற்றின் மூலம் பெறப்படுகிறது. ஆனால், அந்த நிதி போதுமான அளவிற்குக் கிடைக்கப்பெறவில்லை.

**இயக்கத்திற்கான நிதியாக்கம்**

மேற்கண்ட வழிகளால் பூதான இயக்கத்திற்குத் தேவையான நிதி பெறப்படுகின்றது. இந்திய அரசு 1956-57 ஆம் ஆண்டில் 11.92 இலட்சம் ரூபாயும், 1957-58 ஆம் ஆண்டில் 10 இலட்சம் ரூபாயும் பூதான இயக்கத்திற்கு மானியமாக அளித்தது. பூதான இயக்கப்பற்றிய விபரங்களைச் சமுதாய முன்னேற்ற, கூட்டுறவு அமைச்சகம்' சமுதாய முன்னேற்றப் பிரிவுகளுக்கு (Community

Development Blocks) அளிக்கிறது. இத் திட்டத்திற்காக 1958-59 ஆம் ஆண்டில் 1.82 இலட்சம் ரூபாயும், 1959-60 ஆம் ஆண்டில் 2.65 இலட்சம் ரூபாயும் செலவழிக்கப்பட்டுள்ளது. அதே அமைச்சகம் கிராமதானப் பகுதிகளில் சிறு தொழில்கள், கிராமத் தொழில்கள் ஆகியவற்றின் வளர்ச்சிக்காக 1.66 இலட்சம் ரூபாய்கள் செலவழித்திருக்கிருக்கின்றது. ஆந்திரப் பிரதேசம், ஆஸ்ஸாம், கேரளம், தமிழ்நாடு, ஆகிய மாநிலங்களின் அரசுகள், கிராமதான இடங்களின் முன்னேற்றப் பணிகளுக்காகக் கடன்களை அளிக்கின்றன. 'சர்வோதயக் கூட்டுறவுச் சங்கங்களும்' (Sarvodaya Co-operative Societies) இக் கிராமங்களில் அரசின் உதவிகளைப் பெறுகின்றன.

**பூதான இயக்க வளர்ச்சியின் பிற நிலைகள்**

தற்பொழுது சாகுபடியில் அமைந்துள்ள நிலத்தின் அளவு சுமார் 266.4 மில்லியன் ஏக்கர்களாகும். வேளாண்மைச் சாகுபடியில் ஈடுபட்டுள்ள மக்கள் தொகை 249 மில்லியன் ஆகும். அதில் 48.8 மில்லியன் மக்கள் நிலமற்ற விவசாயிகளாக உள்ளனர். பூதான இயக்கத்தால் இவர்களுக்கு நிலமளிக்க முடியுமென்று விநோபா நம்பினர். இவ் வியக்கம் நிலவுடைமையாளர்களைக் கட்டாயப்படுத்தி நிலத்தைத் தானமாகப் பெறுவதில்லை. நிலவுடைமையாளர்கள் தாங்களாகவே நிலத்தை அளிக்க முன்வருகிறார்கள். நில உச்ச வரம்புச் சட்டங்களைப் பெருநிலக்கிழார்கள் எப்பொழுதுமே விரும்புவதில்லை. கட்டாயநிலை அமைந்திருப்பதால் அவர்கள் அச் சட்டங்களுக்கு எதிர்ப்புத் தெரிவிக்கின்றனர்.

பூதான இயக்கத்தின் மூலம் மக்கள் விரிந்து பரந்த கண்ணோட்டத்தைப் பெறுகின்றார்கள். 1957ஆம் ஆண்டிற்குள்ளாக 50 மில்லியன் ஏக்கர்களைத் தானமாகப் பெற விநோபா கருதினர். பெருநிலக்கிழார்களோடு சிறிய நிலவுடைமையாளர்களும் தங்களுடைய நிலத்தில் ஒரு பகுதியை அளிக்க முன்வரவேண்டும் என்று விநோபா அறிவுறுத்தினர். சாகுபடியாளர்கள் அனைவரும் நிலத்தை உடைமையாகப் பெற்றிருக்கவேண்டுமென்ற தத்துவத்தைப் பூதான இயக்கம் கொண்டுள்ளது. அமைதியான சமுதாயத்தை உருவாக்க அதுவே வழிவகுக்கும். நிலம் மறுபகிர்வு செய்யப்பட்ட பின்னர், நிலவுடைமையாளர்கள் யாவரும் தங்களைச் சார்ந்து தாங்களே வாழவேண்டும். அந்த அளவிற்கு அவர்கள் நிலவுடைமைகளின் உற்பத்தியைப் பெருக்கவேண்டியது அவசியம்.

பல மாநிலங்களில் இவ் வியக்கத்தின் மூலம் நிலம் தானமாகப் பெறப்பட்டது. எனினும், இம் மாநிலங்களின் எல்லாப் பகுதி

களிலும் பூதான இயக்கத்தின் செல்வாக்குப் பரவியிருக்கவில்லை. எண்ணிக்கையில் குறைவான நிலச்கிழார்கள் மட்டுமே அதிக அளவு நிலத்தைத் தானமாகக் கொடுத்துள்ளனர். நிலத் தானங்கள் குறைந்த வேகத்திலேயே அளிக்கப்படுகின்றன; அதைக் காட்டிலும் குறைந்த வேகத்திலேயே அந்த நிலங்கள் நில மற்றவர்களிடையே பகிர்ந்தளிக்கப்படுகின்றன.

பூதானமாக அளிக்கப்படும் தரிசு நிலங்கள் சாகுபடிக்கு ஏற்ற விளைநிலங்களாக மாற்றப்படுகின்றன. அதற்காக அதிகச் செலவு களைச் செய்யவேண்டியுள்ளது. பல அன்பளிப்புகளும் பயனற்ற வைகளாக இருக்கின்றமையால், விநோபாவின் எண்ணங்கள் உண்மையான வெற்றியைப் பெறவில்லை. சில மாநில அரசுகளின் நிலச்சட்டங்களில் பல குறைபாடுகள் உள்ளன. இதனால், நிலவு டைமை உரிமைகளை மாற்ற நீண்ட காலம் தேவைப்படுகிறது. நிலச்சட்டங்களில் உள்ள குறைபாடுகளால் நிலப்பகிர்வைக் குறுகிய காலத்தில் விரைவாகச் செய்ய முடிவதில்லை.

பூதான இயக்கம் குறைந்த வெற்றியையே பெற்றிருந்தாலும், அது மக்கள் பண்பாடுகளில் சிறப்பான மாற்றங்களைத் தோற்று வித்துள்ளது. இவ் வியக்கம் சீரிய நோக்கங்களைக் கொண்ட மக்கள் எண்ணிக்கையைப் பெருக்கியுள்ளது. இம் முறையில் எல்லா மனிதர்களுக்கும் முன்னேறச் சமமான வாய்ப்புத் தரப்படுகிறது. நிலமற்ற விவசாயிகள் வறியவர்களாகவும், மகிழ்வற்றவர்களாகவும் இருக்கின்றனர். இஃது இந்தியப் பொருளாதாரம் தேக்கநிலையில் அமைந்துள்ளமைக்கு ஒரு காரணமாகிறது. பூதான இயக்கத்தின் மூலம் வேலையின்மைச் சிக்கலுக்கும் தீர்வு காண முடியும். கிராம மக்களிடையே நிலவும் போட்டி, பொருமை, பூசல் முதலியவற் றைக் குறைக்கவும் இஃது உதவுகின்றது. இருள் மயமான கிராமப் பொருளாதாரத்திற்கு ஒளியூட்டப் பலருக்கும் நிலம் அளிக்கப்பட வேண்டும். தேவைகள் தீர்த்து வைக்கப்படும்போது, அமைதி யான வாழ்வு மலர்கின்றது. உற்பத்தி பெருகி வருமானம் அதிகரிக் கும்போது, வாழ்வின் தரம் உயர்வடைகின்றது. மகிழ்ச்சியற்ற சூழ்நிலையில் சிலர் இருக்கும்போது அவர்களைச் சார்ந்தவர்களும் துன்புறுகின்றனர். தன்னலங் கருதாமல் பிறர் நலம் பேண பூதான இயக்கம் வாய்ப்பை ஏற்படுத்தித் தருகின்றது.

உயர்ந்த குறிக்கோள்களைக் கொண்டிருந்த சமதர்மவாதி களான ராபர்ட் ஓவன் (Robert Owen) சிஸ்மாண்டி (Sismondi), லூயிஸ் பிளாங்க் (Louis Blanc), ஃப்யூரியர் (Fowrier) முதலிய

வர்களின் கருத்துகள் பூதான இயக்கத்தில் காணப்படுகின்றன. இவ் வியக்கத்தின் உயர்வான நோக்கத்தை எவரும் குறை கூற இயலாது. பூதான இயக்கத் தொண்டர்களின் தீவிர ஆர்வத்தை அவரும் இகழ்ந்துரைக்க முடியாது. போட்டியிட்டுக் கொண்டு நிலத்தைத் தானமாக அளித்தவர்களும் போற்றுதற்கு உரியவரே ஆவர். ஆச்சாரிய வினோபா பாவே தன்னுடைய தனிச் செல்வாக்கைப் பயன்படுத்தித் தானமாகப் பெறப்பட்ட நிலத்தில், நான்கில் மூன்று பகுதியைப் பெற்ருர். இது வினோபாவின் தனிப்பட்ட வெற்றியைக் காட்டுகின்றது.

பூதான இயக்கத்தின் இலட்சிய நோக்கங்கள் அனைவராலும் உணரப்பட வேண்டும். அதன் மூலமே இவ் வியக்கம் திட்டமிட்டுள்ளபடி 50 மில்லியன் ஏக்கர்கள் நிலத்தைத் தானமாகப் பெற இயலும்; பிற நோக்கங்களிலும் வெற்றி பெற முடியும். ஆனுல், பூதான இயக்க வளர்ச்சி ஊக்கமளிப்பதாக அமையவில்லை. இவ் வியக்கத்தின் ஆர்வத்தை ஊக்குவிக்க நிதியுதவிகள் அளிக்கப்பட வேண்டும். பொருளாதார வசதிகள் பலவும் திரட்டப்பட்டு அவை பலரிடையேயும் பகிரப்பட வேண்டியது அவசியமாகின்றது. உண்மையான தியாக மனப்பான்மை, தொண்டுணர்ச்சி ஆகியவற்றைக் கொண்டவர்கள் இவ் வியக்கத்தை மேலும் வளர்க்க முன்வர வேண்டும். இவை யாவற்றையும்விடக் கிராம மக்களிடையே உள்ள 'நிலப் பசியைப்' (Land hunger) போக்குவது மிகவும் இன்றியமையாதது. பூதான இயக்கத்தின் மூலமாக மட்டும் நிலப்பசியைப் போக்கிவிட முடியாது. அதற்குத் தீவிரக் கொள்கைகளைக் கைக்கொண்டு நிலச் சீர்திருத்தங்களைச் செய்வதே சிறந்த வழியாகும்.

**கிராமதான இயக்கம்**

பூதான இயக்கம் குறைபாடுகளைக் கொண்டிருந்தமையால், வினோபா கிராமதான இயக்கத்தைத் தோற்றுவித்து, அதற்கு அதிக முக்கியத்துவம் அளித்தார். கிராமதானத்தில் உள்ள எல்லா நிலமும் 'கிராமச் சமுதாயத்திடம்' (Village community) ஒப்படைக்கப்படுகிறது. ஒவ்வொரு குடும்பத்திற்கும் சொந்தச் சாகுபடியைச் சுதந்திரமாகச் செய்ய 5 ஏக்கர்கள் நிலம் அளிக்கப்படும். எஞ்சியுள்ள நிலத்தில் சமுதாயம் முழுவதும் கூட்டாகச் சாகுபடி செய்கிறது. பத்தாண்டுகளுக்கு ஒரு முறை நிலம் மறுபகிர்வு செய்யப்படலாம். குடும்ப அளவின் அடிப்படையில் மறுபகிர்வு நடைபெறும். அதிக அங்கத்தினர்களைக் கொண்டுள்ள குடும்பத்திற்கு 5 ஏக்கர்களுக்கு அதிகமான நிலமும், குறைந்த அங்கத்தினர்களைக் கொண்டிருந்த

குடும்பத்தினருக்கு 5 ஏக்கர்களுக்குக் குறைவான நிலமும் வழங்கப்படும். கிராமத்தின் பொது நிலத்திலிருந்து பெறப்படும் உற்பத்தி வரிகளைச் செலுத்த பயன்படுத்தப்படும். கிராமச் சமுதாயத்தில் பணியாற்றும் 'கைவினைஞர்கள்' (Artisans) தங்களுக்குத் தேவையான தானியங்களைப் பொது நிலத்தினின்றும் பெறுகின்றார்கள்.

இவ் வகைக் கிராமச் சமுதாயத்தில் லேவாதேவிக்காரர்கள் இருப்பதில்லை. பொது நிலத்தின் உற்பத்திப் பொருள்கள் சமுதாயத்தின் கூட்டுறவுச் சங்கத்தால் விற்பனை செய்யப்படும். கிராம மக்கள் ஒவ்வொருவரும் எளிய வாழ்வை மேற்கொள்கிறார்கள்; தங்களுடைய தேவைகளைக் குறைத்துக்கொள்கின்றார்கள். கிராமம் முழுவதும் தன்னிறைவைப் பெற்றதாகின்றது. கிராமப் பஞ்சாயத்து நிர்வாகம், பாதுகாப்பு, ஆரோக்கியம் ஆகியவற்றைக் கவனிக்கிறது. கிராம சேவக் தால் சமுதாயப் பணிகளை மேற்கொள்வதற்கான உடல் உழைப்பைத் தரும் நிலையில் உள்ளவர்களை உறுப்பினர்களாகக்கொண்டுள்ளது. சுருங்கக் கூறின் 'கிராமராஜ்யமே' (Gram Raj) அங்கு ஏற்படுத்தப்படுகிறது. பல நல்ல இலட்சியங்களைக் கொண்டதாக அச் சமுதாயம் அமைகின்றது. அங்கு மக்கள் போதையூட்டும் மதுவகைகளை அருந்துவதில்லை. மக்கள் தீய வழிகளில் செல்வதில்லை. சமூக விரோதச் செயல்களில் அவர்கள் ஈடுபடுவதில்லை. கிராமதானக் கிராமங்களின் சர்வோதய சமாஜ் பொருளாதாரத் தன்னிறைவு பெறுவதை அடிப்படை நோக்கமாகக் கொண்டுள்ளது. சர்வோதய சமாஜ் எவ்வாறு செயல்படுகிறது என்பது முன்பக்கத்தில் காட்டப்பட்டுள்ளது.

இவ் வியக்கம் உத்தரப் பிரதேசத்தின் ஹமிர்பூர் மாவட்டத்தில் உள்ள மங்க்ராத் என்னும் கிராமத்தில் மே 24, 1952-ல் முதன் முதலாகத் தொடங்கபபெற்றது. கிராமதான இயக்கம் அன்பளிப்பாகப் பெற்ற முதல் கிராமம் அதுவேயாகும். அதன் பின்னர், இவ் வியக்கம் ஒரிஸ்ஸா மாநிலத்தின் கொராபட் மாவட்டத்தில் பரவலாயிற்று. அம் மாவட்டமே அதிக எண்ணிக்கையில் கிராமதானக் கிராமங்களைக் கொண்டிருந்தது. மஹாராஷ்டிரம், ஆந்திரப் பிரதேசம், மத்தியப்பிரதேசம், பீஹார் முதலிய பிற மாநிலங்களிலும் கிராமதான இயக்கம் வளர்ந்தது. ஆகஸ்டு 1968 ஆம் ஆண்டுவரை கிராமதான இயக்கம் தானமாகப் பெற்ற கிராமங்களின் எண்ணிக்கை 62,556 ஆகும்.

விநோபா பாவே, முக்கியத்துவத்தைப் பூதான இயக்கத்தினின்றும் கிராமதான இயக்கத்திற்கு மாற்றியமைத்தார். அதன் பின்னர், சம்பத்திதானம், புத்திதானம், ஜீவன்தானம், கூப்தானம்

## கிராமதானக் கிராமங்களில் சர்வோதய சமாஜ்

1. [illegible]



ஒவ்வொரு குடும்பத்திற்கும் 5 ஏக்கர் நிலம் 10 ஆண்டுகளுக்கு
ஒருமுறை தேவைக்கேற்ப மறுபகிர்வு

கிராமப் பொது நிலம்
(கிராமச் சமுதாயத்தால் நிர்வாகம்)

- வரிகளை அளித்தல்
- கடன்களைத் திருப்பியளித்தல்
- கிராமத்தின் கைவினைஞர்களுக்கான தானியம்

உபரி உற்பத்தி

அவசியப் பொருள்களை வாங்கவும் உற்பத்திப் பொருள்களை
விற்கவும் பல நோக்குக் கூட்டுறவுச் சங்கம்

2. கிராமச் சமுதாயம்

- கிராமப் பஞ்சாயத்து
  (1) நிர்வாகமும் சுகாதாரமும்
  (2) காவல்
- கிராமத் தொழில்கள்
  பொது நன்மைக்கான சிறிய அளவுத் தொழில்கள்
  (பேரளவுத் தொழில்கள் இல்லை)
- கிராம சேவக் தால்
  சமுதாயப் பணி
  (கிராம நிர்மானப் பணிகள்)

3. மதுவிலக்கு — எளிமை — சமுதாயத்தின் தேவையின்மை

முதலியவற்றையும் தோற்றுவித்தார். கூப்தானம் என்பது கிணறுகள் தோண்ட அன்பளிப்புகள் அளிக்கப்படுகின்ற நிலையைக் குறிப்பதாகும். பூதான இயக்கத்தின் குறியளவாகிய 50 மில்லியன் ஏக்கர்கள் நிலத்தைத் தானமாகப் பெறுவதற்கு முன்னரே வேறு வகைத் தான இயக்கங்களை வினோபா தோற்றுவித்தமைக்குச் சில காரணங்கள் உள்ளன.

முதலாவதாக, பூதான இயக்கத்தின் மூலம் எதிர்பார்த்த அளவிற்கு நிலத்தைப் பெறமுடியாது என்பதை வினோபா உணர்ந்துவிட்டார். இரண்டாவதாக, பூதான இயக்கத்தை நடத்துவதில் பல சிக்கல்கள் அமைந்திருந்தன. எனவே, அவ்வியக்கத்தின் நோக்கங்கள் நிறைவேறவில்லை.

வினோபா சிறிய குடும்பங்களுக்குப் பதிலாகப் பெரிய குடும்பங்களை அமைக்க விரும்பினார். கிராமம் முழுவதையும் ஒரு பெரிய குடும்பமாக மாற்ற அவர் எண்ணினார். அதன் விளைவே பூதானதிலிருந்து கிராம தானத்திற்கு முக்கியத்துவம் மாற்றியமைக்கப்பட்ட நிலையாகும். ஒவ்வொரு குடும்பமும் அதன் தேவைக்கேற்ப நிலத்தை உடைமையாகக் கொண்டிருக்க வேண்டுமென்பது வினோபாவின் கருத்தாகும். பொது நிலத்தினின்று பெறப்படும் உற்பத்தியினின்றும் வரிகள் செலுத்தப்படும்; 'தக்கவிக் கடன்களும் (laccavi Loan) திருப்பித்தரப்படும். கைவினைஞர், கொல்லர், முடிதிருத்துபவர் முதலியோர் பொது நிலத்திலிருந்து தேவை [redacted] தானியத்தைப் பெறுவார்கள். உற்பத்திக்கு உதவாத பணிகளுக்காகக் கடன் எவராலும் வாங்கப்படாது. மதச் சடங்குகள், திருமணங்கள், விருந்துகள் முதலியவற்றிற்குக் கடன் அளிக்கப்படமாட்டாது. ஆக்கப் பணிகளுக்கான கடனைச் சமுதாயம் குறைந்த வட்டி வீதத்தில் அளிக்கும். கிராமச் சமுதாயத்தில் தனி வணிகர்களும், சில்லரை வாணிபத்தில் ஈடுபடும் கடைக்காரர்களும் இருக்கமாட்டார்கள். பல நோக்குக் கூட்டுறவுச் சங்கங்களால் வெவ்வேறு வசதிகளையும் சமுதாயத்தினர் பெறுவர். அவ்வகைச் சங்கங்களால் உபரி உற்பத்திப் பொருள்கள் விற்பனை செய்யப்பட்டுத் தேவையான பிற அவசியப் பண்டங்கள் வாங்கப்பெறும். கிராமத்தில் உற்பத்தி செய்யப்படாத சில பொருள்கள் பிற பகுதிகளினின்றும் வாங்கப்படுகின்றன.

சாகுபடியாளர்கள் தேவையான உணவுப் பொருள்களை உற்பத்தி செய்கின்றார்கள். கைவினைஞர்கள் கிராமப் பொருளாதாரத்திற்குத் தேவையான பிற பொருள்களை உற்பத்தி செய்து

அளிக்கின்றார்கள். உதாரணமாக வேளாண்மைக் கருவிகள் பானைகள், பாத்திரங்கள், காலணிகள், துணிப்பொருள்கள் முதலியவை அவர்களால் உற்பத்தி செய்யப்படுகின்றன. குறைந்த அளவிற்கு மக்கள் தங்களுடைய தேவைகளைக் குறைத்துக் கொள்கின்றனர். வெளியுலகைச் சார்ந்து வாழ வேண்டிய அவசியம் கிராமதானக் கிராமத்திற்கு அமைந்திருக்காது. அது தன்னிறைவு பெற்றுத் தன்னைச் சார்ந்து தானே வாழ்கின்ற பொருளாதாரமாக உள்ளது.

ஒவ்வொருவரும் தங்களுடைய நிலத்திலேயே சாகுபடி நடவடிக்கைகளை மேற்கொள்ளுகிறார்கள். அதிகப் பணியாளர்கள் தேவைப்படும் சாகுபடிக் காலங்களில் மட்டும் கூலி உழைப்பாளர்கள் அமர்த்தப்படுகின்றார்கள். உடல் உழைப்பு மட்டுமே வருமானத்தைப் பெறுகின்றது. அறிவுப் பணிக்கு எவ்வித ஊதியமும் தரப்படுவதில்லை. பொது நன்மைக்காக அறிவுப் பணிகள் அளிக்கப்பெறுகின்றன. கிராமச் சமுதாயத்தால் சிறு தொழில்களும் குடிசைத் தொழில்களும் நடத்தப்படுகின்றன. இலாப நோக்கத்தோடு இவை செயல்படுவதில்லை. பொது நன்மைக்காகவே இவை இயங்குகின்றன. பெரிய தொழில்கள் கிராமத்தில் தோற்றுவிக்கப்படுவதில்லை,

சர்வோதய சமாஜத்தில் ஒருவர் மற்றவரைச் சுரண்டி வாழ்வதில்லை. பொருளாதாரச் சக்திகள் ஒரு சிலரிடம் குவிந்திருப்பதில்லை. பாலும் தேனும் போன்ற மகிழ்ச்சி நிறைந்த வாழ்வை மக்கள் கொண்டுள்ளனர். கொடிய மனிதர்கள் அங்கு அமைந்திருப்பதில்லை; கொடுமைகளும் இழைக்கப்படுவதில்லை.

பூதான இயக்கத்தைவிடக் கிராமதான இயக்கம் சில சிறப்பான தனி இயல்புகளைக் கொண்டுள்ளது.

1. கிராமதான இயக்கத்தில் சர்வோதயக் கொள்கைகள் நிலத்திற்கு மட்டுமல்லாமல் கிராமச் சமுதாய வாழ்வு முழுமைக்கும் பயன்படுகின்றன. பூதான இயக்கத்தில் சர்வோதயக் கொள்கை நில அமைப்பு முறையில் மட்டுமே பின்பற்றப்படுகின்றன.

2. நிலத்தைத் திரட்டுவதிலும், பகிர்வதிலும் உள்ள சிக்கல்கள் கிராமதான இயக்கத்தில் தீர்க்கப்படுகின்றன. இம்முறையில் கிராமம் முழுவதும் உள்ள நிலம் தானமாகப் பெறப்படுகிறது. தேவையின் அடிப்படையில் நிலம் பங்கிடப்படுகின்றது. சாகுபடி செய்ய இயலாத நிலங்கள் பூதான இயக்கத்தில் அன்பளி

பாகப் பெறப்படுகின்றன. கிராமதான இயக்கத்தில், தரம் மிக்க நிலங்களும், தரம் குறைந்த நிலங்களும் ஒருங்கே கிடைக்கப்பெறு கின்றன. அந்த நிலங்கள் யாவும் சமுதாயத்திற்குச் சொந்த மாகின்றன. ஆச்சாரிய விநோபா பாவேயின் 'சர்வோதயசமாஜ' இலட்சியத்தில் வெற்றியடைய கிராமதான இயக்கம் பெரிதும் உதவும்.

3. கிராமதான இயக்கத்தையும், நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கான திட்டங்களையும் தொடர்புபடுத்துவதன் மூலம் பலநன்களைப் பெற இயலும். கிராமதானக் கிராமங்கள் பொதுநலனைக் கருதும் இலட்சியக் கிராமங்களாக அமைந்துள்ளன. வீணான நுகர்வு தவிர்க்கப்படுவதால், வருமானம் அதிகரித்துச் சேமிப்பு முதலீட்டு வீதமும் உயர்வடையும்.

### கிராமதானம்-ஒரு புதிய இயக்கம்

ஜனவரி 1957 ஆம் ஆண்டிலிருந்து கிராமதான இயக்கத் திற்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டு வருகின்றது. உத்தரப் பிரதேசத்தின் ஹமிர்பூர் மாவட்டத்தில் தொடங்கிய இவ் வியக்கம் பிற மாநிலங்களிலும் பரவலாயிற்று. இது மிகச் சிறப்பாகச் செயல் படுவது ஒரிஸ்ஸாவின் கொராபட் மாவட்டத்திலாகும். எனினும், இதன் வளர்ச்சி குறைவான வேகத்திலேயே அமைந்துள்ளது. ஆகஸ்டு 1967வரை கிராமதானத்தின்மூலம் கிடைக்கப்பெற்ற கிராமங்களின் எண்ணிக்கை 39 672 மட்டுமேயாகும். 'சுலாப்' (Sulabh) கிராமதான இயக்கத்தின்கீழ் வரும் கிராமவாசிகள் சில உறுதிகளைக் கைக்கொள்ளுகிறார்கள். சில அடிப்படை நிபந்தனை களுக்குச் சம்மதித்து, உறுதியளித்து அவர்கள் கையெழுத்திடு கின்றனர். அவையாவன:

1. கிராமத்தில் உள்ள நிலமற்றவர்களுக்காக எங்களுடைய சாகுபடி நிலத்தில் குறைந்தது 5 சதவீதத்தையாவது அளிப் போம்.

2. எங்களுடைய நில உடைமை உரிமையைக் (நிலமற்றவர் களுக்கான 5 சதவீதச் சாகுபடி நிலத்தைக் கொடுத்தது போக) கிராமச் சபாவில் கிராமத்திற்காக அளிக்கிறோம்.

3. நாங்கள் ஒரு கிராம நிதியைத் தோற்றுவித்து, அதற்காக எங்களுடைய நிலத்தின்மூலம் பெறப்படுகின்ற உற்பத்தியில் நாற்பதில் ஒருபங்கை அளிப்போம்.

4. கிராமத்தில் உள்ள வயது வந்தவர்கள் யாவரும் கிராம சபாவை ஏற்படுத்தி ஒற்றுமையுடன் செயல்படவேண்டும். கிராம மக்கள் அனைவரும் நன்மையடையும் வகையில் அது பணியாற்ற ஒற்றுமை நிலவவேண்டும்.

ஒரு கிராமத்தில் 75 சதவீத நிலவுடைமையாளர்கள் இந்த நிபந்தனைகளை ஏற்றுக்கொண்டு கையொப்பம் இட்டுக் குறைந்தது 51 சதவீதச் சாகுபடி நிலம் கிடைக்கப்பெற்றால், அது கிராமதானக் கிராமமாக அறிவிக்கப்படும்.

கிராமதான இயக்கம் செயல்முறை வெற்றியைப் பெற்றுள்ளதை இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் ஏற்றுக்கொண்டது. கூட்டுறவுக் கிராம முன்னேற்றத்தைப் பெற இஃது உதவுமெனவும் கூறப்பட்டது.

1955 ஆம் ஆண்டின் இறுதியிலிருந்து கிராமதான இயக்கம் வளரலாயிற்று. இவ் வியக்கம் கிராமம் முழுவதையும் தானமாகப் பெறவேண்டியது. கிராம தானங்கள் அளிக்கப்படும்போது கிராம மக்கள் தங்களுடைய நிலச் சொத்துரிமைகளைத் தாங்களே கொடுக்க முன்வருகிறார்கள். சமுதாய நலன்களைக் காப்பதற்காக நிலச் சொத்துரிமைகளை அவர்கள் இழக்கிறார்கள். இதன் மூலம் கிராமம் முழுவதும் ஒரே குடும்பமாகிறது. நிலத்தின் மீதான சொத்துரிமைகள் நீக்கப்பட்டிருக்கின்றன. தன்னிச்சைப்படி இயங்குகின்ற அக் கிராமம் தன்னிறைவுப் பொருளாதாரத்தைக் கொண்டுள்ளது. இவ்வித சமுதாயப் புரட்சியைத் தோற்றுவிப்பதன்மூலம் அமைப்பு முறை மாற்றங்கள் ஏற்படுகின்றன. சமூகத் தொடர்புகளில் சாதகமான முன்னேற்றங்கள் தோன்றுகின்றன.[1]

[illegible] கிராமத்தில் உள்ள அனைவரும் நிலத்தைத் தானமாக அளிக்க முன்வரும் நிலையே கிராம தானம் எனப்படுகிறது. அன்பும், பண்பும், அறமும், நெறியும், அகிம்சையும் அடங்கிய 'கிராம இராஜ்யத்தை' அமைப்பதே முக்கிய நோக்கமாகின்றது. அதன் வழிகாட்டும் கொள்கைகள் கூட்டுறவின் நன்மைகளைச் சமமாகப் பங்கிட்டுக்கொள்வதாகும். கிராம சமாஜம் சமுதாயத்தின் பொதுச் சொத்துகளை நிர்வகிக்கின்றது. கிராம சபாவைக் கிராமத்தை ஆளும் மன்றம் என்றும் கூறலாம். வயது வந்த ஆண்

1. Gyan Chand, Gramdan and Social Revolution (Khadi Gramudyog, Annual Number, October, 1967), p. 49.

களும், பெண்களும் அதில் உறுப்பினர்களாக இருக்கின்றனர். நில நிர்வாகத்தைச் செய்வது அதுவேயாகும். சமுதாய நன்மைக் [redacted] பலவேறு பணிகளையும் அது நிறைவேற்றுகின்றது.

கிராமதான இயக்கத்தால் ஏற்படும் சமுதாயப் புரட்சி விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற உதவும். கிராமப் பொருளாதாரத்தில் கிடைக்கக் கூடிய உழைப்பு முழுமையாகப் பயன்படுத்தப்படும். செறிவுமுறைச் சாகுபடியால் உற்பத்தி உயர்வடையும். தொழில் சீரமைப்பு (Rationalisation) பெற்றதாக வேளாண்மை அமையும். விஞ்ஞானச் சாகுபடி முறைகள் திட்டமிட்டுக் கைக்கொள்ளப்பெறும். கிராமத் தொழில்கள் வளரும். வசதிகள் யாவும் திரட்டப்பட்டு முன்னேற்றத்திற்குப் பயன்படுத்தப்படும். 'இவ் வியக்கத்தின் மூலம் பொருளாதார முன்னேற்றம், சமுதாயமாற்றம் ஆகியவற்றைப் பெறவேண்டிய பொறுப்பு மக்களிடமே ஒப்படைக்கப்படுகின்றன. முன்னேற்றம் மிகத் தாழ்ந்த நிலையிலிருந்து தொடங்கப்படுகின்றது. அவ்வாறு முன்னேற்றத்தைத் தொடங்குவதே நியாயமானதும் ஆகும்.'[1]

எதிர்காலத்தில் எல்லாக் கிராமங்களும் கிராமதானக் கிராமங்களாக மாறும் என எதிர்பார்க்கப்படுகிறது. அந்த நிலை, கிராமப் பொருளாதாரத்தில் வளர்ச்சிக்குச் சாதகமான முழுமையான புரட்சியைத் தோற்றுவிக்கும். கண்மூடிப்பழக்கங்கள் மண் மூடிப் போகும். சமுதாயப் பொருளாதார அமைப்புகளில் புதிய மாற்றங்கள் ஏற்படும்.

முன்னேற்றத்திற்கு உதவும் இவ்வித மாற்றங்கள் கணிசமான அளவிற்குக் கிராமதானக் கிராமங்களில் ஏற்பட்டிருக்கவில்லை. மேற் குறிப்பிடப்பட்டவை யாவும் நோக்கங்களாகத் திகழ்கின்றன. அந்த நோக்கங்களில் பல இதுவரை வெற்றி பெறவில்லை. கிராமதானக் கிராமங்கள் புரட்சியின் தொடக்க நிலையில்கூட அமைந்திருக்கவில்லை. கிராம தானத்தால் நிலவுடைமையாளர்கள் நிலத்தின் மீதான உரிமைகளை இழக்கின்றனர். நிலவுடைமைகளின் உரிமைகளைக் 'கிராமச் சபா' பெறுகின்றது. உறுப்பினர்களிடையே நிலவுடைமைகள் யாவும் பகிரப்படுகின்றன. பெரிய சிறிய, நடுத்தர நிலவுடைமையாளர்கள் அனைவருக்கும் சம வாய்ப்புகள் அளிக்கப்பெறுகின்றன. சமத்துவ நிலையைப் பின்பற்றுவது முக்கிய நோக்கமாக அமைகிறது. கிராம தானத்திற்குச் சம்மதிக்கும் பலர் ஒரே அளவில் அனைவருக்கும் நிலம் பகிரப்படு

1. 'Ibid.' p. 49.

வதை விரும்புவதில்லை.[1] தங்களுடைய நிலம் முழுவதையும், அளித்துவிட்டுக் குறைந்த அளவு நிலத்தை மட்டுமே உடைமையாகப் பெற பலரும் முன்வருவதில்லை.

இவ்விதக் கிராமதான இயக்கம் தீவிர அடிப்படை மாற்றங்களைத் தோற்றுவிப்பதாக இருக்கின்றது எனவே, செயல்படுத்துவதற்கு எளிதான 'சுலாப் கிராமதானம்' தோற்றுவிக்கப் பெற்றது. இது நெகிழ்வான இயல்புகளைக் கொண்டது.

1. இம் முறையில், 80 சதவீத நிலத்தின் சொத்துரிமைகள் காக்கப்படுகின்றன. அந்த நிலம் சொந்த சாகுப்படிக்குப் பயன்படுத்தப்படுகிறது. நிலவுடைமையாளர்கள் நிலத்திலிருந்து வருமானத்தைப் பெற முடிகின்றது. அவர்களுடைய சொத்துகள் வாரிசுதாரர்களைச் சென்று சேர்கின்றன. சொத்துகளின் மீதான உரிமைகள் எவ்வகையிலும் பாதிக்கப்படுவதில்லை. சொத்துகளின் மீதான உரிமைகளை அவர்கள் எவ்வாறு வேண்டுமானாலும் பயன்படுத்திக் கொள்ளலாம்.

2. கிராமச் சமுதாயத்திடம் நிலம் அளிக்கப்பட்டாலும் நிலவுடைமையாளர்கள் உரிமைகளை இழப்பதில்லை. தங்களுடைய நிலத்தை விற்கலாம்; அடைமானம் வைத்துக் கடன் பெறலாம். ஆனால், கிராமச் சமுதாயத்தின் அனுமதியைப் பெற்றே இவ்வாறு செய்ய இயலும். தவிர்க்க முடியாத சில நிலைகளில் மட்டுமே இவ்வாறு செய்ய அனுமதிக்கபடுகின்றன.

3. 20 சதவீதச் சாகுபடி நிலத்தை நிலவுடைமையாளர்கள் இழக்கின்றனர். அந்த நிலத்தைத் தானமாக அளித்தவர்களே அதை நிலமற்றவர்களிடையே பங்கிட்டு அளிக்கின்றனர்.

4. எஞ்சியிருக்கும் நிலத்திலிருந்து பெறப்படும் வருமானத்தில் 5 சதவீதத்தைக் 'கிராமக் கருவூலத்திற்கு' (Village Treasury) அளிக்க வேண்டும். அது சமுதாய நலப் பணிகளுக்காகச் செலவிடப்படும். வேளாண்மையல்லாத தொழில்களின் மூலம் ஏற்படும் வருமானத்தில் முப்பதில் ஒரு பங்கு சமுதாய நிதிகளுக்காகத் தரப்படவேண்டும்.[2] இவற்றைத்தவிர கிராம முன்னேற்றத்திற்காக உழைப்பாளர்கள் இரண்டு நாட்கள் உழைப்

1. Planning Commission: 'Gramdan Movement' A Hand book, 1964, p. 3 - 4.

2. Gyrn Chand, 6p. Cit , p. 49.

யையும், ஊதியத்தைப் பெறுபவர்கள் ஒருநாள் ஊதியத்தையும் அளிக்க வேண்டும்.[1]

முதலில் உத்தரப் பிரதேசம், ஒரிஸ்ஸா ஆகிய மாநிலங்களில் தொடங்கிய கிராமதான இயக்கம், பீஹார், மஹாராஷ்டிரம், அஸ்ஸாம்' ஆந்திரப் பிரதேசம், மத்தியப்பிரதேசம், ராஜஸ்தான், தமிழ்நாடு, கேரளம் ஆகிய மாநிலங்களிலும் பரவிற்று. பின்வரும் அட்டவணை கிராமதானங்களின் எண்ணிக்கை வெவ்வேறு ஆண்டுகளிலும் எவ்வாறு இருந்தது என்பதை உணர்த்தும்.

**தானமாக அளிக்கப்பட்ட கிராமங்களின் எண்ணிக்கை**

| | | | | |
|---|---|---|---|---|
| டிசம்பர் | 1957 | வரை | ... | 3,547 |
| டிசம்பர் | 1958 | ,, | ... | 4,475 |
| நவம்பர் | 1959 | ,, | ... | 4,456 |
| ஆகஸ்ட் | 1960 | ,, | ... | 4,640 |
| டிசம்பர் | 1961 | ,, | ... | 4,643 |
| [2]நவம்பர் | 1963 | ,, | ... | 6,412 |
| மார்ச் | 1964 | ,, | ... | 6,807 |
| மார்ச் | 1965 | ,, | ... | 8,928 |
| மார்ச் | 1966 | ,, | ... | 18,879 |
| மார்ச் | 1967 | ,, | ... | 37,775 |
| ஆகஸ்ட் | 1968 | ,, | ... | 62,556 |

கிராமதான இயக்க வளர்ச்சி ஏப்ரல் 1964ஆம் ஆண்டு வரை குறைந்த வேகத்திலேயே அமைந்திருந்தது. அதன் பின்னர் விரைவான வளர்ச்சியே அது பெற்றது. மாநில அடிப்படையில் ஆராயும்போது பீஹாரில் 13,198 கிராமதானக் கிராமங்கள் உள்ளன. அதற்கு அடுத்தபடியாக அதிக எண்ணிக்கையில் கிராமதானக் கிராமங்களைக் கொண்டுள்ள மாநிலங்கள் முறையே ஒரிஸ்ஸா, ஆந்திரப் பிரதேசம், தமிழ்நாடு ஆகியவை ஆகும். அக்டோபர் 2, 1968ஆம் ஆண்டிற்குள் பீஹார் மாநிலம் முழுவதையுமோ அல்லது பீஹார் மாநிலத்தின் 75 சதவீதக் கிராமங்களையோ கிராமதான இயக்கத்தின்கீழ்க் கொண்டுவரத் திட்டமிடப் பெற்றது.[3] அக்டோபர் இரண்டாம்நாள் மகாத்மா காந்திஜி பிறந்த தினம் என்பது குறிப்பிடத்தக்கது.

1. National Herald, Lucknow, July 12, 1968.
2. Revised by The Akhil Bharat Sarva Seva Sangh On March 23, 1962.
3. Sarva Seva Sangh Monthly News Letter, August 1968, p. 4

**பிரகன்தானமும், ஜில்லாதானமும் (Prakhanddan and Ziladan)**

கிராமதான இயக்கத்தை, மேலும் பெரிதாக்கவே பிரகன் தானமும், ஜில்லாதானமும் ஏற்படுத்தப்பட்டன. இவை முக்கியத் துவம் வாய்ந்தவையாகவும் இருக்கின்றன. கிராமப்பொருளா தாரத்தில் இணைவான முன்னேற்றத்தைப் பெற இவை உதவு கின்றன. ஒரு குறிப்பிட்ட பகுதியின் 75 சதவீத மக்கள் தொகை சம்மதித்து, மாவட்டத்தின் 85 சதவீதக் கிராமங்கள் கிராமதானத் தைச் செய்தால், அதைப் பிரகன்தானப் பகுதி எனலாம். ஒரு மாவட்டத்தில் 85 சதவீதக் கிராமங்கள் கிராமதானக் கிராமங்களாக இருந்தால், அதை ஜில்லாதானம் எனக் குறிப்பிடலாம். இம் முறையில் சராசரிச் சாகுபடி நில அளவு முன்னேற்ற உற்பத்தி முறைகளைப் பின்பற்றுவதற்குச் சாதகமாக இருக்கின்றது. பூதான கிராமதான இயக்கங்களைவிட இம் முறை, சிறப்பான சில தனி யியல்புகளைக் கொண்டுள்ளது. ஆகஸ்ட் 1968 வரை, பீஹாரின் தர்பங்கா, பூர்ணியா ஆகிய இடங்களிலும், தமிழ்நாட்டின் திரு நெல்வேலியிலும், உத்தரப்பிரதேசத்தின் உத்தரகாஷி, பாலியா ஆகிய பகுதிகளிலும், மத்தியப் பிரதேசத்தின் திக்காம்காரிலும் 333 பிரகன்தானங்களும், 6 ஜில்லர்தானங்களும் அளிக்கப்பட்டன. செப்டம்பர் 11, 1963-ல் பீஹார் மாநிலத்தின் முசாஃபார்பூர் விநோபாவிடம் தானமாகக் கொடுக்கப்பட்டது. செப்டம்பர் 11 விநோபாவின் பிறந்தநாளாகும்.

பிரகன்தான இயக்கத்தில் பல கிராமங்கள் அமைந்துள்ளன. ஏப்ரல் 1967 வரை பீஹார், ஒரிஸ்ஸா, தமிழ்நாடு, மஹாராஷ்டிரம், ஆந்திரப் பிரதேசம் ஆகிய மாநிலங்களில், முறையே 68, 21, 20, 11, 6 பிரகன்தானங்கள் பெறப்பட்டன. இவ் வியக்கம் கணிசமான வெற்றியைக் கண்ட மாநிலங்கள் இவையே ஆகும்.

**சட்ட நடவடிக்கைகள்**

பல மாநிலங்கள் பூதான, கிராமதான இயக்கங்களை ஊக்கு விக்கவும், அவற்றிற்கு உதவவும் சட்டங்களை நிறைவேற்றின. குத்தகையாளர்கள், தங்களுடைய உரிமைகளை, மாற்றியமைத்துக் கொள்ள முடியாதவர்களாக இருந்தனர். நிலத்தை அன்பளிப் பாகத் தருவதும் இயலாததாக இருந்தது. நிலவரி வருவாய் அலுவலர்கள் நிலவுடைமைபற்றிய உரிமைகளைச் சரிவரப் பதிவு செய்யமுடியவில்லை. இவற்றின் காரணமாக அமைப்புமுறை, சட்டமுறை, நிர்வாகமுறை ஆகியவற்றில் பல சிக்கல்கள் இருந்தன. இச் சிக்கல்களைத் தவிர்த்துப் பூதான, கிராமதான இயக்கங்களுக்கு

ஏற்ற வகையில் சட்டங்களை இயற்றுவது, அவசியமாயிற்று. நிலங்களைத் தானமாக அளிப்பதை ஊக்குவிப்பதற்குச் சாதகமான சட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. இவற்றின் மூலம், நிலமற்றவர்களுக்கு நிலத்தை அளிப்பது எளிதாயிற்று. பூதான இயக்கத்தின் மீதான சட்டங்கள் பீஹார், குஜராத், ஜம்முகாஷ்மீர், தமிழ்நாடு, மஹாராஷ்டிரம், மத்தியப்பிரதேசம், மைசூர், ஒரிஸ்ஸா, பஞ்சாப், ராஜஸ்தான், உத்தரப்பிரதேசம், மேற்கு வங்காளம், டெல்லி ஹிமாசலப் பிரதேசம் ஆகிய மாநிலங்களில் இயற்றப்பெற்றன. கேரளத்திலும், குஜராத்திலும் (சௌராஷ்டிரம் நீங்கலாக) பூதான நிலங்களைப் பகிர்வு செய்யத் தனிச் சட்டங்கள் நிறைவேற்றப் பட்டன.

ஆந்திரப் பிரதேசத்திலும், அஸ்ஸாமிலும் சட்டங்கள் இயற்றுவது தள்ளி வைக்கப்பட்டுள்ளது. அகில பாரத சர்வ சேவா சங்கம் அமைத்த உபக் குழுவின் பரிந்துரைகளுக்காக அவை காத்திருக்கின்றன. 1958-ல் சென்னை பூதான யாக்ஞ மசோதா (Madras Bhoodan yagna Bill) கொண்டுவரப்பட்டது. அதன் மூலம் நிலங்களைத் தானமாகப் பெறுவது எளிதாயிற்று. நிலமற்ற ஏழை விவசாயிகள் அதனால், பயனடைந்தார்கள். சமுதாய நலனைப் பெருக்கக்கூடிய பணிகளுக்காகவும் தானமாகப் பெற்ற நிலம் பயன்படுத்தப்பட்டது. பஞ்சாபிலும், டில்லியிலும் சட்டங்கள் இயற்றப்பட்டு வந்தாலும், அவற்றில், சில மாற்றங்கள் தேவைப்படுகின்றன. இவ் வகைச் சட்டங்களின்மூலம் பூதான வாரியங்கள் (Bhoodan Boards) அமைக்கப் பெறுகின்றன. அவ் வாரியங்கள் நிலம் மாற்றப்படுவதைப் பரிசீலிக்கின்றன. நிலத்தை மறுபகிர்வு செய்வதில் உள்ள குறைபாடுகளை நீக்குகின்றன. நியாயமான வழிகளில் நிலமற்ற விவசாயிகள் நிலத்தைப் பெற உதவுகின்றன. பூதான வாரியங்கள் வினோபாவால் அமைக்கப் படவேண்டும் என்ற நியதி அமைந்துள்ளது. பூதான நிலங்களை மாற்றும்போது முத்திரைத் தீர்வை, பதிவுக் கட்டணம் ஆகியவற்றைச் செலுத்தத் தேவை இல்லை.[1] ஆந்திரப் பிரதேசம், அஸ்ஸாம், குஜராத், மஹாராஷ்டிரம், கேரளம், தமிழ்நாடு ஆகியவற்றில், கிராமதானக் கிராமங்களின் முன்னேற்றத்திற்காகக் கடன் வசதிகள் அளிக்கப்படுகின்றன. அவ் வகைக் கிராமங்களில், 'சர்வோதயக் கூட்டுறவுச் சங்கங்களும்' ஏற்பட்டுள்ளன. கிராமதானக் கிராமங்களின் நிர்வாகத்திற்கான சிறப்புச் சட்டங்கள் அஸ்ஸாமிலும், ராஜஸ்தானிலும் நிறைவேற்றப் பட்டிருக்கின்றன.

1. Planning Commission, Gramdan Movement-A Hand Book, 1964, p.3.

### [redacted] உதவி[1]

கிராமதானக் கிராமங்களிலும், பூதானப் பகுதிகளிலும் உற்பத்தியைப் பெருக்க உரிய காலத்தில் போதுமான கடன் வசதி அளிக்கப்படாமையே முக்கியமான சிக்கல்களில் ஒன்ருக இருக்கின்றது. இச் சிக்கலை, மத்திய அரசும், மாநில அரசுகளும் உணர்ந்தன. தற்பொழுது அமைந்துள்ள சட்டங்களின்படி 'கிராம சபாவிடம் அல்லது பூதான யாக்ஞ குழுவிடம் தானமாக அளித்த நிலத்தை விற்கவோ, அல்லது அடைமானம் வைத்துக் கடன் பெறவோ முடியாது. எனவே, அப்பகுதிகளில் லேவாதேவிக்காரர்கள், வணிகர்கள் ஆகியோரிடமிருந்து சாதாரணமாகப் பெறக் கூடிய கடனைப் பெறுவதுகூடக் கடினமாகிறது. இதே சிக்கலால் கூட்டுறவு நிதியாக்க நிறுவனங்களாலும் கடன் அளிக்க இயலுவதில்லை. எனவே, இந்திய அரசு, கடன் வசதிகளைப் பெருக்கப் பல திட்டங்களைத் தோற்றுவித்து ஆங்கீகரித்தது.

இரண்டாவது திட்டக் காலத்தில் 250 குடும்பங்களின் 'கூட்டுறவுக் குடியிருப்புக்காக' (Co - operative settlement) 25 லட்சம் ரூபாயும், பிறிதொரு 10,000 குடும்பங்களின் குடியிருப்புக்காக 30 இலட்சம் ரூபாயும் பீஹார் மாநிலத்திற்கு அளிக்கப்பட்டது. இந்த அதிக அளவு உதவியானது, பயன்படுத்தப்பட்டு வருகின்றது. இந்த நிதியின்மூலம் சுமார் 15,000 குடும்பங்கள் பயனடைந்துள்ளன.

மூன்ருவது திட்ட காலத்தில் பூதான நிலங்களில் 15,000 குடும்பங்களைக் குடியிருப்புச் செய்ய ஒரு திட்டம் பீஹாரிலும், கேரளத்திலும் நிறைவேற்றப்பட்டது. அதை, மத்திய அரசு அங்கீகரித்தது. மத்தியப் பிரதேசத்தின் ஷிவ்புரி மாவட்டத்தில் உள்ள காண்டி காலனியில் 20 ஹரிஜனக் குடும்பங்களைக் குடியமர்த்த 1962ஆம் ஆண்டில், பூதான நிலங்கள் பயன்பட்டன. மேலும், மூன்ருவது திட்ட காலத்திலேயே பூதானப் பகுதிகளிலும், கிராமதானக் கிராமங்களிலும் கூட்டுறவுகளுக்கு நிதியாக்கம் செய்ய ஒரு கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டது. 1955 - 56 ஆம் ஆண்டிற்கும், 1960 - 61ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் நிர்வாகச் செலவிற்கான இடைக்கால மானியமாக மாநில அரசுகள் 820.18 இலட்சம் ரூபாய் அளித்தன. பல வசதிகள் அமைந்திருந்தாலும்கூடப் பூதான, கிராமதான இயக்கம் செயல்படும் இடங்களில் போதுமான அளவிற்குக் கடன் வசதிகள்

[1]. Ibid. pp. 3,4 and 56.

கிடைக்கப்பெறவில்லை. அங்கெல்லாம் நிதி வசதிகளைப் பெருக்கு வதன் மூலமே சிறப்பான வெற்றியைக் காணலாம்.

## திறனாய்வு

பூதான, கிராமதான முறைகள் நல்ல பல நோக்கங்களைக் கொண்டிருந்தாலும், சிறப்பான வெற்றியைப் பெறவில்லை. பூதான இயக்கம் பலவற்றின் அடிப்படையில் குறை கூறப்படுகின்றது. அதன் நோக்கம், ஓர் எல்லைக்கு உட்பட்டதாக இருக்கின்றது. வறுமைச் சிக்கலைத் தீர்க்க மேலும் தீவிர நடவடிக்கைகள் தேவை. நாட்டின் சமுதாயக் குறைபாடுகளைக் களையப் பூதானத்தைத் தவிர வேறு பல முறைகளும் பின்பற்றப்படவேண்டும்.

### 1. சிறிய நிலவுடைமைகள்

பூதான இயக்கமும், கிராமதான இயக்கமும் சிறிய அளவு நிலவுடைமைகளைத் தோற்றுவிக்கின்றன. உத்தம அளவில் சாகுபடி நிலங்கள் அமைந்திருப்பதில்லை. சிறிய அளவு சாகுபடி நிலங்கள் விவசாயிகளின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த உதவமாட்டா. ஒரு குடும்பத்திற்குப் போதுமான வருமானத்தை அளிக்கக்கூடிய அளவு நிலத்தை அக் குடும்பம் பெற்றிருக்க வேண்டும். அக் குடும்பத்தினர் அனைவரும், முழுவேலை வாய்ப்பைப் பெற்றிருப்பது அவசியம். பொருளாதார ரீதியில் இலாபத்தைத் தரக்கூடிய நிலவுடைமைகளை அமைத்தல் இன்றி யமையாதது. நிர்வாகத்தை எளிதாக்கும் வகையில் பண்ணை களின் அளவு அமையவேண்டும். தனிப்பட்ட வேளாண்மைக் குடும்பம் சாகுபடியைத் திறமையாகச் செய்ய வசதிகளைப் பெருக்க வேண்டும். திறமையான சாகுபடியாளர்கள் சிறிய அளவு நிலத்தில்கூட உயர்வான உற்பத்தியைப் பெறுவார்கள்.

சாகுபடி செய்ய முடியாத வரட்டு நிலங்களும், மலைப்பிரதேசங் களும் பூதானமாகத் தரப்படுகின்றன. பல மாநிலங்களிலும் சராசரி சாகுபடி நில அளவு 5 ஏக்கருக்குக் குறைவாக இருக்கின்றது. டாக்டர் கால்வெர்ட், பஞ்சாபின் 63.7 சதவீத சாகுபடியாளர்கள் 5 ஏக்கர்களுக்கும் குறைவான நிலத்தையே உடைமையாகக் கொண்டிருப்பதாகக் குறிப்பிடுகின்றார். ஐந்து பேர்கள் அடங்கிய ஒரு குடும்பத்துக்கு 5 ஏக்கர்கள் போதுமானது. தற்பொழுது அமைந்துள்ள சூழ்நிலைகளில் அவற்றின்மூலம், அதிக உற்பத்தியைப் பெற இயலும். தனித்தனியாக ஒவ்வொரு வருக்கும் ஓர் ஏக்கர் நிலமளித்தால் உற்பத்தி பெரிதும் பாதிக்கப் படும். கூட்டுக் குடும்ப முறையில், இவ்விதத் தீமை அமைந்திருக்க

வில்லை. ஆனால், ஓர் ஏக்கர் நிலத்தைக்கூட இந்தியாவின் விவசாயிகளில் பலர் கொண்டிருக்கவில்லை. இந்தியாவில் தலா ஒருவருக்கான சாகுபடி நில அளவு 0.87 ஏக்கராகும். வேளாண்மை உற்பத்தியில் சிறந்துள்ள மைசூர், தமிழ்நாடு, மேற்கு வங்காளம், பீஹார், உத்தரப்பிரதேசம் முதலிய மாநிலங்களில் தலா நில அளவு இதைக் காட்டிலும் குறைவாக உள்ளது. ராஜஸ்தானும், அஸ்ஸாமும் இதற்கு விதி விலக்காக இருக்கின்றன.

பல காரணிகளையும் அடிப்படையாக வைத்து ஆராயும் போது 5 ஏக்கர்கள் புன்செய் நிலத்தையும், ஓர் ஏக்கர் நன்செய் நிலத்தையும் பொருளாதார நோக்கில் உத்தம அளவு நிலங்கள் என்று கூறலாம்.

பூதான இயக்கத்தின் மூலம் நிலமற்றவர்களுக்கு அளிக்கப் படுகின்ற நிலத்தின் அளவு மிகக் குறைவாக உள்ளது. அதிக மக்கள் நெருக்கம் உள்ள பகுதிகளில் ½ முதல் 1 ஏக்கர் நிலமும், மக்கள் நெருக்கம் சற்றுக் குறைவாக உள்ள இடங்களில் 2 முதல் 3 ஏக்கர்கள் நிலமும் பகிர்ந்தளிக்கப்படுகின்றன. இதனால், சிறிய அளவு நிலவுடைமைகளே எண்ணிக்கையில் பெருகுகின்றன. வேளாண்மை உற்பத்தியைப் பெருக்குவதற்கு இந் நிலை தடையாக உள்ளது. இதனால், கிராம வேலை வாய்ப்புகளும் அதிகரிப்பதில்லை. வேளாண்மைத் தொழிலைச் சீரமைப்புச் செய்ய இது உதவாது. சூழ்நிலைகள் ஊக்கமளிப்பதாக அமைந்திருக்கவில்லை என்று டாக்டர் ஏ. எம். குஷ்ரோ கூறுகின்றார். ‘சிறிய அளவு நிலவுடைமைகளில் குடும்ப அங்கத்தினர்களின் உழைப்பும், கால் நடைகளின் உழைப்பும் முழுமையாகப் பயன்படுத்துவதில்லை; நிர்வாகத் திறமையும் சரியாக வெளிப்படுவதில்லை. 2½ ஏக்கர்கள் அளவுள்ள நிலத்திலும் உபரி உற்பத்தியைப் பெறுவது கடினமானது. விவசாயிகள் தங்களுடைய எருதுகளை முழுமையாகப் பயன்படுத்த முடிவதில்லை. மனித உழைப்பும் வீணடிக்கப்படுகின்றது. பின்தங்கிய நாடுகளில் இவ்வாறு மனித உழைப்பு முழுமையாக உற்பத்தியில் ஈடுபடுத்தப்படுவதில்லை. புலனாகா வேலையின்மையும் திகழ்கின்றது. மனித உழைப்பும், நில வளமும் சிறப்பாகப் பயன்படுத்தப்பட வேண்டியது இன்றியமையாதது.’[1]

பல நிலமற்ற விவசாயிகளிடையே சிறிய அளவில் நிலங்கள் பங்கிடப்படும்போது வேளாண்மை வளர்ச்சி தடைபடுகின்றது.

1. Dr. A. M. Khusro, The Indian Bureau of Parliament Studies: Problems of Production in an Under - Developed Economy, 1960 p. 51.

மோசமான நிலையில் இருக்கின்ற வேளாண்மை மேலும் மோசமடைய இது காரணமாக அமையும்.

நிலங்கள் பிரிக்கப்பட்டு உள்பிரிவு படுத்தப்படுகின்ற நிலை பூதான இயக்கத்தின்மூலம் தோன்றுகிறது. நிலவுடைமைகளின் அளவுச் சிக்கலை இது மேலும் தீவிரமாக்குகிறது. அரசு, கூட்டுறவுப் பண்ணைகளை வளர்த்துச் சிக்கலுக்குத் தீர்வு காண விழைகின்றது. ஆனால், கூட்டுறவுப் பண்ணை முறைக்குப் பூதான இயக்கத்திற்கும் இடையேயான இயல்புகள் எதிரிடையாக இருக்கின்றன. இக் குறையைத் தவிர்க்கப் பூதானமாகப் பெறப்பட்ட நிலங்களில் கூட்டுறவுப் பண்ணைகளை அமைக்கவேண்டும். சிறிய அளவில் பலருக்கும் நிலத்தைப் பகிர்ந்தளிப்பதால் எவ்வித நன்மையும் விளையாது.

சிறிய அளவுச் சாகுபடி நிலங்களை ஒருங்கிணைப்பதன் மூலமே உற்பத்தியை அதிகரிக்க இயலும் என்ற உண்மையைப் பல ஆய்வுகள் உணர்த்தியுள்ளன. 'நிலவுடைமைச் சிக்கலால் உள்ளங்கள் பிரிவுபடுகின்றன; அந்த நிலையைத் தவிர்க்க நிலத்தைப் பிரிவுபடுத்துவது தவறாகாது', என்று விநோபா கூறுகின்றார். நிலங்களைப் பிரிப்பதாலும், உள்பிரிவு படுத்துவதாலும் குறைகள் தோன்றக்கூடும். ஆனால், அவற்றைக் காட்டிலும் கொடுமையான நிலைகள் தற்பொழுது நிலவுகின்றன. நிலமற்றவர்கள் பெருநிலக் கிழார்களால் சுரண்டப்படுகின்றனர். இதன் காரணமாக, வறுமையே தொடர்ந்து நீடிக்கின்றது.

சீனாவிலும், ஜப்பானிலும் சாகுபடி நிலங்களின் அளவு சிறியதாக இருக்கின்றது; எனினும், உற்பத்தி உயர்ந்த அளவில் பெறப்படுகின்றது. ஆகவே, சிறிய நிலவுடைமைகளில் உற்பத்தியைப் பெருக்க முடியாது என்று கருதுவது தவறானது. பூதான இயக்கமும், கூட்டுறவுப் பண்ணை முறையும் வெவ்வேறானவை. அவை ஒன்றையொன்று சார்ந்திருக்கத் தேவையில்லை. இரு முறைகளையும் வளர்ப்பதன்மூலம் வேளாண்மைச் சிக்கல்கள் பலவற்றைத் தீர்க்க முடியும். மேலும், சிறிய அளவில் நிலங்களைப் பூதான இயக்கத்தால் பெற்றவர்கள் சாகுபடி நடவடிக்கைகளைக் கூட்டாகச் செய்யலாம்.

**2. குறைந்த வேகவளர்ச்சி**

பூதான இயக்கத்தின் மூலம் 1957ஆம் ஆண்டிற்குள் 5 கோடி ஏக்கர் நிலத்தைத் தானமாகப் பெற வேண்டுமென்று கருதப்பட்டது. ஆனால், இவ் வியக்கம் தோன்றிப் பதினேழு ஆண்டு,

களுக்குப் பின்னரும் திட்டமிட்டப்படி குறியிலக்கை எட்ட முடியவில்லை. மேலும், கிடைக்கக் கூடிய புள்ளி விவரங்களின் அடிப்படையில் ஆராயும்போது, 1956ஆம் ஆண்டிலிருந்து பூதான இயக்க வளர்ச்சியில் தொய்வு ஏற்பட்டுள்ளதை உணர முடிகிறது. அதன் பின்னர், பல ஆண்டுகளாகத் திரட்டப்பெறுகின்ற நிலத்தின் அளவில் உயர்வே தோன்றவில்லை. தவிர, தானமாகப் பெறப்பட்ட நில அளவு 44 இலட்சம் ஏக்கர்களிலிருந்து 42 இலட்சம் ஏக்கர்களாகக் குறைந்துள்ளது குறிப்பிடத்தக்கது. சில காரணங்களால் தானமாக நிலத்தை அளித்தவர்கள் திரும்பவும் அதைப் பெற்றுக் கொண்டார்கள். பூதானத் தொண்டர்களிடமிருந்து அவர்கள் திரும்பவும் பெற்றுக்கொண்டமையே நிலஅளவு குறைந்தமைக்குக் காரணமாகும்.

போதுமான அளவிற்குப் பூதானத்தின் மூலம் நிலம் கிடைக்கப் பெறவில்லை. எனவே, நிலமற்றவர்களில் பெரும்பாலானவர்களுக்குச் சிறிதளவு நிலத்தைக்கூட அளிக்க முடியவில்லை. பூதான இயக்கம் எதிர்பார்த்த அளவிற்கு வெற்றியைப் பெறவில்லை. எனவே, இவ் வியக்கம் தொடர்ந்து செயல்படவேண்டுமா என்ற வினா எழுப்பப்படுகின்றது. எதிர்பார்த்த அளவிற்கு வெற்றி கிட்டவில்லை என்றாலும், ஓரளவு வெற்றி யடைந்துள்ளமையால், பூதான இயக்கத்தை, மேலும் வளர்க்க முயற்சிகளை மேற்கொள்வது நல்லது.

### நிலவுடைமையாளர்களுக்கும் நிலம்

பூதான இயக்கம் நிலமற்றவர்களுக்கு நிலமளிப்பதை நோக்கமாகக் கொண்டுள்ளது. நிலமற்றவர்களின் நிலைகள் வெவ்வேறு வகைகளிலும் வரையறுக்கப்படுகின்றன. நிலமற்றவர்கள் தங்களுடைய வாழ்க்கையை நடத்தப் பிற வேலை வாய்ப்புகள் இன்மையால், வேளாண்மையில் உழைப்பைத் தருபவர்களாக இருத்தல் வேண்டும். சாகுபடி செய்யும் திறமை பெற்றவர்களாக அவர்கள் இருத்தல் அவசியம். சாகுபடி செய்யத் தயாராக உள்ளவராகவும் அவர்கள் இருத்தல் வேண்டும். இவ்வாறான நிலைகளில், இருந்தால் தான் அவர்களுக்கு நிலம் அளிக்கப்படும். நடைமுறையில் பார்க்கும்போது நிலம் வணிகர்களுக்கும் தரப்படுகிறது. ஒரு குடும்பத்தில் உள்ள உறுப்பினர்கள் யாவருடைய பெயரிலும் நிலமானது அமைந்திருப்பதில்லை. ஆனால், நிலத்தின் உற்பத்தியை அனைவரும் பங்கிட்டுக் கொள்கின்றனர். நில உரிமை பதிவு செய்யப்படாமல் இருந்தாலும், அனுபோக உரிமையை அவர்களே பங்கிட்டுக் கொண்டிருக்கின்றனர். இவ்வித நிலையில் உள்ளவர்

களும் பூதான இயக்கத்தின் நிலத்தைப் பெறுகின்றனர். கிராமத் தலைவர்கள் நிலம் வேண்டுகின்ற ஏழை விவசாயிகளிடமிருந்து கையூட்டுகளைப் பெறுவதும் உண்டு. இவ்வாறு, கையூட்டுகளைத் தரும் சிலருடைய பெயரைப் பூதான இயக்கத் தொண்டர்களிடம் பரிந்துரைக்கிறார்கள். பூதான இயக்கத்தால் நிலப்பசி அடங்கு வதற்குப் பதிலாக அஃது அதிகரித்துள்ளது.

நிலத்தை அன்பளிப்பாகப் பெறுபவர்கள் சாகுபடிக்கு அதை வேறு சிலரிடம் ஒப்புவிக்கவும் வாய்ப்பு உண்டு. ஆனால், இந்த நிலை ஏற்பட வகையில்லை என்று வேறு சிலர் குறிப்பிடுகின்றனர். ஏனெனில், நிலம் வறியவர்களுக்கும், நிலமற்றவர்களுக்கும், நிலத் தைச் சாகுபடி செய்யும் திறமை பெற்றவர்களுக்கும், சாகுபடி செய்யும் விருப்பம் உள்ளவர்களுக்கும் மட்டுமே அளிக்கப்படு கின்றது. எனவே, அவர்கள் நிலத்தை மற்றவர்களிடம் அளிப் பார்கள் என்று கருத முடியாது.

## 4. சிறிய நிலவுடைமையாளர்களிடம் இருந்தும் தானம் வேண்டுதல்

73.76 சதவீதச் சாகுபடியாளர்கள் சராசரிச் சாகுபடி நில அளவாகிய 4.81 ஏக்கர்களுக்குக் குறைவான அளவில் நிலத்தை உடைமையாகக் கொண்டிருக்கின்றார்கள்.[1] 4.81 ஏக்கர்களே உத்தம அளவிற்குக் குறைவானது என்று சொல்லப்படுகின்றது. சிறிய நிலவுடைமையாளர்களையும் பூமிதானத்தை அளிக்குமாறு பூதான இயக்கம் வேண்டுகிறது. இதனால், சாரசரிச் சாகுபடி நில அளவு மேலும் சிறியதாக அமையும். தவிர நிலத்தைத் தானமாக அளிப்பவர்களைப் பூதானத் தொண்டர்கள் நிலத்தைப் பகிரும் போது கலந்து ஆலோசிக்கின்றார்கள். சிலர் சிறிது நிலத்தை அளித்துவிட்டுத் தமக்கு வேண்டியவர்களுக்கு நிலம் அளிக்குமாறு பரிந்துரைக்கிறார்கள். ஒரிஸ்ஸா மாநிலத்தின் கொராபட்டில் கிராமதான இயக்கம் எவ்வாறு செயல்படுகிறது என்பதைத் திட்டக் குழுவின் 'நிலச் சீர்திருத்தப் பிரிவு' ஆய்வு செய்தது. அதன் மூலம் இந்த நிலை தெரியவந்தது.

## 5. சாகுபடிக்கு உதவாத நிலங்களை அளித்தல்

பெருநிலக்கிழார்கள் விளம்பரத்திற்காக நிலத்தைத் தானமாக அளிக்கின்றனர். சாகுபடி செய்ய இயலாத நிலத்தையே அவர்கள் பெரும்பாலும், தருகின்றனர். இவ்வாறு, தரக்குறைவான நிலமே அளிக்கப்படுகின்றது. பூமிதானத்தை அளிப்பவர்கள் சமுதா

1. The National Sample Survey, Op. Cit., pp. 15 - 16.

யத்தின் தனி மதிப்பையும், அந்தஸ்தையும் பெறுகின்றார்கள். ஒரிஸ்ஸா மாநிலத்தில் கிராமதான இயக்கத்தின் மூலம், 1,575 கிராமங்கள் பெறப்பட்டன. அவற்றுள், 1,226 கிராமங்கள் மலைப் பிரதேசங்களிலும், வனப்பகுதிகளிலும் அமைந்திருந்தன.[1] அவை யாவும் முன்னர் மன்னராட்சி அமைந்திருந்த கொராபட் பகுதியில் அமைந்திருந்தது குறிப்பிடத்தக்கது. திட்டக்குழுவின் மதிப்பீட்டின்படி இப் பகுதியின் ஐந்தில் இரு பங்கு நிலங்கள் சாகுபடி நிலங்களாக அமைந்திருக்கவில்லை; ஆனால், அவை பூசல் நிலையையும் கொண்டனவாக இருந்தன. இதற்குக் காரணம் பூதான இயக்கத் தொண்டர்கள் முறையாக எல்லாவற்றையும் சரிபார்க்காத நிலையேயாகும். நில உரிமைகளை மாற்றியமைப்பதிலும் அவர்கள் அதிக ஆர்வம் கொண்டிருப்பதில்லை. முறையாக எல்லாவற்றையும் செய்யவேண்டுமென்று அவர்கள் கருதுவதில்லை.[2] பூதானப் பத்திரங்களை முறையாகப் பெற்று நிலங்கள் சரியான வழிகளில் பகிரப்படுவதுமில்லை.

### 6. கையூட்டாகப் பூதானம்

பூதான இயக்கத் தொண்டர்களில் பலர் ஆளும் கட்சியைச் சார்ந்தவர்களாக இருக்கின்றனர். அவர்களைத் திருப்தி செய்து சலுகைகளைப் பெறப் பலர் நிலத்தைத் தானமாக அளிக்கின்றனர்.[3] இதை மறைமுகமான கையூட்டு என்று அழைக்கலாம். தங்களுடைய கோரிக்கைகள் நிறைவேறாதபோது அவர்கள் நிலத்தைத் திரும்பப் பெறவும் முடிகிறது. பெரும்பாலும், தானமளிக்கும் இறுதி நிலைக்குள்ளாக அவர்கள் சலுகைகளைப் பெற்று விடுகிறார்கள். இதற்கான புள்ளிவிவரங்கள் முழுமையாகக் கிடைக்கப் பெறவில்லை. பூதான அமைப்பு, பொது நிறுவனங்கள் ஆகியவை வெளியிட்ட புத்தகங்கள், துண்டுப் பிரசுரங்கள் முதலியவற்றால், இதை ஓரளவு உணர முடிகிறது. உதாரணமாக, ஒரு வெளியீட்டின்படி[4] தானமாகப் பெறப்பட்ட நிலத்தின் அளவு ஆகஸ்ட் 1960-ல் 44.11 இலட்சம் ஏக்கர்கள் என்று அறிவிக்கப்பட்டது; டிசம்பர் 1961-ல் அதன் அளவு 41.78 இலட்சம் ஏக்கர்கள் என்று குறிப்பிடப்பட்டது. பூதான இயக்கத்தின் தொண்டராகிய ஒருவர் கூறியதாவது: பெரும்பாலான பூதன

1. Manmohan Choudri, The Gramdan Movement, 1956, p. 2.
2. Brij Bhardwaj, Bhoodan; Vinoba's Unfulfilled Dream (Hindustan Times, January 24, 1968).
3. R.P. Masani, Op. cit p. 138.
4. India-A Referenee Annual 1968.

இயக்க ஊழியர்கள் நேரடியாகவோ, மறைமுகமாகவோ அல்லது இரகசியமாகவோ ஏதாவது ஓர் அரசியல் கட்சியோடு தொடர்பு கொண்டுள்ளார்கள். சிலர் தேர்தலில் வெற்றி பெறப் பூதான அமைப்பைப் பயன்படுத்திக் கொள்கிறார்கள். அதனால், அவர்கள் நன்மையையும் அடைகிறார்கள். ஆனால், உண்மையான நற்பணிகளை ஆற்றுபவர்களைப் பலரும் கட்சியின் பிரதிநிதிகளாகக் கருதுகின்றனர். கட்சி உணர்ச்சிக்கு ஆளாகாத பணியாளர்களும் பூதான இயக்கத்தில் உள்ளார்கள், அவர்கள் எவ்விதப் பாரபட்சமும் இல்லாமல் செயல்படுகின்றார்கள்.[1] ஆச்சாரிய விநோபாவின் யாத்திரை ஊக்கத்தை உயர்த்தியுள்ளது என்பது உண்மையே கிராம மக்களின் ஆர்வம் சிறப்பான நிலையிலேயே அமைந்திருக்கின்றது. எனினும், இவ்வியக்கம் மேலும் விரைவாக முன்னேறுவதற்கான தீவிர நடவடிக்கைகளைப் பூதான இயக்கத் தொண்டர்கள் எடுக்கவில்லை.

### 7. நிலத்தைப் பெறுபவர்களின் வசதியின்மை

நிலமற்றவர்களுக்கு நிலத்தை அளிப்பதன்மூலம் மட்டும் சிக்கலுக்குத் தீர்வு கண்டுவிட முடியாது. சாகுபடிக்குத் தேவையான வசதிகள் பலவும் அவர்களுக்கு அளிக்கப்படவேண்டும். இந் நிலையைப்பற்றி விநோபாவே பின்வருமாறு குறிப்பிடுகின்றார்; 'நில அன்பளிப்புகளைத் திரட்டுவது பூதான இயக்கத்தின் சாதாரணப் பணியாகும். அதற்குப் பின்னர்த்தான் முக்கியப் பணிகள் தொடருகின்றன. திரட்டப்பட்ட நிலம் பகிரப்படவேண்டும். நிலத்தைப் பெறுபவர்கள் சாகுபடி நடவடிக்கைகளை மேற்கொள்ளப் பலவித உதவிகளைப் புரிய வேண்டும். அவர்கள் பாதுகாப்பான நிலையில் நிலவுடைமைகளைக் கொண்டிருக்க வேண்டும்.[2] சாகுபடியாளர்கள் கூட்டுறவுச் சங்கங்களின்மூலம் கடன் பெற முடிவதில்லை. கிராமங்களிலுள்ள லேவாதேவிக்காரர்களும் கடன் அளிக்க முன் வருவதில்லை. நிலத்தை அடைமானம் வைத்துக் கடன் பெறுவதும் இயலாது, நிலவுடைமைகளை மட்டும் அளித்துப் பிறவசதிகள் கிடைக்கப் பெறாதபோது பல இன்னல்கள் தோன்றுகின்றன.

### 8. நிலப் பகிர்வில் காலதாமதம்

பூதானமாகப் பெறப்பட்ட நிலத்தைப் பகிர்வு செய்வதிலும் காலதாமதம் ஏற்படுகின்றது. நிர்வாக, சட்ட அமைப்புகள் விரை

1. Suresh Ram, Vinoba and His Mission, 1958, p. 248.
2. Ibid., p. 248.

வான நிலப்பகிர்வுக்குச் சாதகமாக அமைந்திருக்கவில்லை. பூதான இயக்க வளர்ச்சிக்கு உகந்த வகையில், சட்டங்கள் இயற்றப்பட வேண்டும். அன்பளிப்பாகப் பெறப்படும் நிலம் பல ஆண்டுகள் வரை சாகுபடிக்குப் பயன்படுத்தப்படாமல் வீணடிக்கப்படுகின்றன. அந்த நிதிக்கான வரியை நிலம் பகிர்ந்தளிக்கப்படும்வரை அன்பளிப்பைச் செய்பவரே செலுத்தவேண்டும். இதன் காரணமாக வேளாண்மை உற்பத்தியின் அளவு பாதிக்கப்படுகின்றது. பீஹார் மாநிலத்தில் மட்டும், பூதானக் குத்தகையாளர்களுக்கு நிலத்தை மாற்றியமைப்பதற்கான விண்ணப்பங்கள் 40,000 முதல் 45,000 வரை வரி வருவாய் அதிகாரிகளிடம் தேங்கிக் கிடக்கின்றன.

### 9. நீண்டகாலச் சிக்கலுக்குத் தீர்வு [redacted] முடியாமை

பூதான, கிராமதான இயக்கங்கள் குறுகிய காலப் பொருளாதாரச் சிக்கலுக்குத் தீர்வு காணவே உதவுகின்றன. நீண்ட கால அடிப்படையில், ஆராயும்போது இவற்றின்மூலம் நாட்டின் பொருளாதாரச் சிக்கலுக்குத் தீர்வு காண முடியாது என்பதை, அறியலாம். கிராமங்களின் உபரி உழைப்பாளர்களை நகர்ப் புறங்களின் பேரளவுத் தொழில்களுக்கு மாற்றி அமைக்கவேண்டும். விநோபாவின் இயக்கங்கள் உபரிக் கிராம மக்கள் தொகையை நகரங்களுக்கு வெளியேற்ற உதவமாட்டா. இவை மறைந்துள்ள வேலையின்மையை நீக்குவதைக் கடினமாக்குகின்றன. நாட்டின் பொருளாதார அமைப்புகளின் மாற்றம் இதனால், தடைப்படுகின்றது. மாற்றம் ஏற்பட்டாலும், அது விரைவான பொருளாதார முன்னேற்றத்திற்குச் சாதகமாக அமையாது.

### 10. அடைய முடியாத இலட்சியம்

பூதான இயக்கம் வெற்றி பெறத்தக்க இயல்புகளைக் கொண்டதாக இல்லை. அதன் நோக்கத்தை, நிறைவேற்றுவது எளிதானதன்று. விநோபாவின் திட்டம் வெற்றி பெறுமை, ஒரு வகையில், கிராம மக்களுக்கு உதவியுள்ளது. அவரது திட்டம் வெற்றி பெற்றால், விவசாயிகள் பலரும் வறுமையிலேயே வாடிக்கொண்டிருக்கவேண்டியிருக்கும். ஏனெனில், பொருளாதாரத் தன்னிறைவை நிலத்தை மறுபகிர்வு செய்வதன்மூலம் பெற்றுவிட முடியாது; தலா வருமானத்தை அதிகரிப்பதும் இயலாது. சாதாரண மனிதன் ஒருவனால் விநோபாவின் உபதேசங்களுக்கு ஏற்ப வாழ முடியாது. தன்னைச் சுற்றி ஆடம்பரமான படாடோப வாழ்வைப் பார்க்கின்ற எந்த ஒருவனும் அத்தகைய வாழ்வைப் பெறவே விழைகிறான். வறுமைக்கிடையே மகிழ்வான வாழ்வைக் கொண்டிருப்பது எங்ஙனம் கூடும்?

பண்டங்கள், பணிகள் ஆகியவற்றை மிகுதியாக நுகர்வது தான் வளமான வாழ்க்கை என்று கருதுவது தவறுனதென்று மகாத்மா காந்தியும், அவர் வழிசெல்லும் விஞேபாவும் கூறினுர்கள். ஆனுல், ஒவ்வொருவரும் மகாத்மாவாக மாறுவதென்பது பகற் கனவாக வேண்டுமானுல் இருக்கலாம். சர்வோதயத்தை எண்ணிப் பார்க்கின்ற மக்கள் சிலராவது நம்மிடையே, இருக் கின்றுர்கள் என்பதற்காக நாம் பெருமை கொள்ளலாம். சர்வோ தயத்தின் கொள்கைகளை மக்கள் பலரும் பின்பற்றுவது மிகவும் கடினம். ஆச்சாரிய விஞேபாவின் இப்போதைய கருத்துகளுக்கு ஏற்ப அப்போதைய மகாத்மா காந்தி வாழ்ந்து வந்தார். அப்போது தன்னலம் கருதாத பணிகளையும் தொண்டர்கள் செய்தனர்.

மகாத்மா காந்தி, விஞேபா பாவே முதலிய ஒரு சிலரால் மட்டுமே சர்வோதயத் தத்துவத்தைப் பின்பற்ற முடியும். சாதாரண மனிதன் அத் தத்துவத்தைப் புரிந்து கொள்ளுமளவிற்கு மனப் பக்குவத்தைப் பெற்றிருக்கமாட்டான். புரிந்துகொண் டாலும் அதில், அவனுக்கு அதிக ஈடுபாடு அமைந்திருக்கமாட்டா. எனவே, பூதான, கிராமதான சர்வோதயத் திட்டங்கள் தோல்வி யடைகின்றன. அல்லது அவை மிகக் குறைந்த அளவுமட்டுமே வெற்றியைப் பெறுகின்றன. இதனுல், முயற்சிகளுக்கேற்ற நன்மைகள் விளைவதில்லை. முற்றும் துறந்த முனிவனுக மாறுவது கடினம். அதைப்போன்ற கடின நிலையையே சர்வோதய முறையும் கொண்டிருக்கின்றது. மக்கள் யாவரும் சர்வோதயத்தில் ஒரு மனமாக நம்பிக்கை வைத்தால் வெற்றிபெறலாம்.

இந்திய வாழ்க்கை முறையை எடுத்துக்கொண்டால், நாம் மேலை நாடுகளின் நாகரிகத்தைப் பின்பற்றிச் செல்கின்றோம். நம்முடைய விருப்பங்கள் நாளுக்குநாள் பெருகிக்கொண்டே செல் கின்றன. விருப்பங்களைக் குறைத்துக் கொள்ள எவரும் முன் வருவதில்லை. ஆடம்பரத் தேவைகள் அதிகரித்துக்கொண்டே இருக்கின்றன. வாழ்வின் மகிழ்ச்சிகளை, இழக்கப் பலரும் தயாராய் இருப்பதில்லை. அவசியத் தேவைகளை மட்டுமே குறைந்த அளவிற்கு நிறைவேற்றிக் கொள்ளவேண்டுமென்று சர்வோதயம் புகலுகின்றது. ஒரே மாதிரியான சாதாரண வாழ்க்கையை வாழ மக்கள் விரும்புவதில்லை. ‘வாழ்க்கை வாழ்வதற்கே’ என்று அவர்கள் எண்ணுகிறுர்கள். குறைந்த விருப்பங்களைக் கொண் டுள்ள வாழ்வு வாழ்வாகவே கருதப்படுவதில்லை. வளமான வாழ்வைப் பெற அதிக அளவு பண்டங்களையும், பணிகளையும் நுகர வேண்டுமென்று எண்ணப்படுகிறது. இந் நிலைகளில், உயர்

நோக்கங்களையும், இலட்சியங்களையும் கொண்ட பூதான இயக்கம் வெற்றியடையாமற் போனதில் வியப்பேதும் இல்லை.

## 11. பூதான இயக்கத்தில் தலையிடாமைக் (Laissez Faire) கொள்கை

பூதான இயக்கத்தைப்பற்றிப் பிறிதொரு குறைபாடும் கூறப்படுகின்றது. காலத்திற்கு ஒவ்வாத தலையிடாமைக் கொள்கை இதில் அமைந்திருப்பதாகச் சொல்லப்படுகிறது. தலையிடாக் கொள்கையின்படி, அரசு ஒரு சில நடவடிக்கைகளில் மட்டுமே ஈடுபட வேண்டும். உள் நாட்டில் அமைதியை நிலைநாட்டுவதும், பிற நாடுகளின் தாக்குதலிலிருந்து நாட்டைக் காப்பதும் அரசின் கடமைகளாகும். மக்களுடைய பொருளாதார வாழ்வில், அரசு குறுக்கிடக் கூடாது. தற்பொழுதுள்ள சூழ்நிலைகளுக்கு இவ்வகைத் தலையிடாமைக் கொள்கை பொருந்தாது. தற்காலத்திற்குப் பொருந்தாத இக் கொள்கையைச் சார்ந்து பூதான இயக்கம் அமைந்துள்ளது. 'பொருளாதாரத் தன்னிறைவுக்' (Economic Self-Sufficiency) கொள்கையைச் சார்ந்தும், இஃது அமைந்திருக்கின்றது. தன்னிறைவையே மக்கள் நோக்கமாகக் கொண்டிருந்தால், உண்மையான வாழ்வின் சுவையை ருசிக்க இயலாது. இதன் மூலம், கிடைக்கப் பெறுகின்ற வசதிகள் பலவும் வீணடிக்கப்படும். ஒரு கிராமத்தில் உள்ளவர்கள் தங்களுடைய தேவைக்காக மட்டும் உற்பத்தியைச் செய்வது தவறு. மேலும், அவர்கள் தங்களுக்குத் தேவையான எல்லாப் பொருள்களையும் உற்பத்தி செய்ய முடியாது. அவ்வாறு, செய்தாலும் உற்பத்தி நடவடிக்கைகள் திறம்பட அமையமாட்டா. பொருளாதார ரீதியில் இலாபகரமான உற்பத்தி அளவு அமைவது கடினம்.

சர்வோதய சமாஜத்தில், உள்நாட்டு வாணிபமும், வெளிநாட்டு வாணிபமும் அமைந்திருப்பதில்லை. வட்டார வேலைப்பகுப்பு, பன்னாட்டு வேலைப்பகுப்பு ஆகியவை செயல்படுத்தப்படுவதில்லை. உயர்ந்த அளவு தேசீய ஆக்கத்தைப் பெறுவது இதனால் தடைப் படும். நன்மைகள் பலவற்றைப் பெறுவதைப் 'பொருளாதாரத் தன்னிறைவுக் கொள்கை' தடை செய்கின்றது. எதிர்கால விரைவான முன்னேற்றத்திற்கு இடையூறாக இவ்விதக் கொள்கைகள் அமைகின்றன.

பூதான இயக்கத்தின் குறைபாடுகள் கீழ்க்காணும் வகையிலும் விளக்கப்படுகின்றன.

நிலத்தை அன்பளிப்பாகப் பெறுபவன் கடனைக் கிராம லேவா தேவிக்காரர்களிடமிருந்து பெறுகின்றான். அதன் பின்னர், லேவா தேவிக்காரர்களின் பிடியினின்றும் மீளுவது எளிதன்று. கடன் பெறப் பிற வசதிகள் இன்மையால், நிலத்தில் முதலீடு செய்ய இவ் வழியைப் பின்பற்றுவது தவிர்க்க முடியாததாகின்றது. மேலை நாட்டு வேளாண்மை உற்பத்தி முறையைப் பின்பற்ற வேண்டு மென்பது நம் நோக்கமன்று; முழுமையான இர்திய மயமாக்கப் பட்ட சாகுபடிமுறையைக் கைக்கொள்ளவேண்டுமென்பது நம் எண்ணமன்று. அதற்கு, அதிக மூலதனம் தேவைப்படும். ஆனால், குறைந்த அளவிற்கு முதலீடு செய்யும் நிலையில்கூட நம்விவசாயி கள் அமைந்திருக்கவில்லை. வேளாண்மையில் நிலம், உழைப்பு, மூலதனம் ஆகிய ஆக்கக் காரணிகள் முக்கியத் தன்மையைக் கொண்டுள்ளன. நம்மிடம் நிலம் இருக்கிறது; அதை, வளமுடைய தாக்கலாம். அதிக எண்ணிக்கையில் உழைப்பாளர்களை நாம் கொண்டிருக்கிறோம். அவர்களுடைய உழைப்பை முழுமையாகப் பயன்படுத்தலாம். ஆனால், இவற்றையெல்லாம் சரிவரச் செயல் படுத்த நம்மிடம் போதுமான மூலதனம் கிடைக்கப்பெறவில்லை. இதன் காரணமாகவே, உற்பத்தி பல துறைகளிலும், குறைவாக உள்ளது. அவற்றுள், வேளாண்மைத் துறையும் ஒன்றாகும். இக் குறையைத் தவிர்க்க கிராமங்களில் கூட்டுறவுச் சங்கங்களின் மூலம் குறைந்த வட்டியில் கடன் அளிக்கவேண்டும். அரசும் எளிய கடன் வசதிகளை அளிக்க முன்வருவது அவசியமானது.

பூதான இயக்கத்தின்மூலம் செய்யப்படும் நில மறு பகிர்வுக்கு நீண்ட காலம் பிடிக்கின்றது. உணவுப் பற்றாக்குறை அமைந்துள்ள இன்றைய நிலையில் நிலம் பயன்படுத்தப்படாமல், வீணே விடப்படு கிறது. இது தேசிய நோக்கில் பேரிழப்பாகும். சரியானவர்களைத் தெரிந்தெடுத்து நிலத்தை அளிப்பதாலேயே கால தாமதம் ஏற் படுகிறது. தவறான நபர்களிடம் நிலத்தை ஒப்புவித்தால், பூதான இயக்கத்தின் நோக்கம் நிறைவேறாது. மேலும், உற்பத்தி பாதிக்கப் படும் என்று கூறுவதும் தவறாகும். ஏனெனில், மறுபகிர்வு செய்யப் படும்வரை அன்பளிப்புச் செய்தவரே சாகுபடி செய்யவேண்டு மென்று விண்ணப்பத்தில் தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆகவே, நிலம் உற்பத்தியில் ஈடுபடுத்தாமல் இருக்காது.

பொதுவுடைமைவாதிகளின் தீவிரப்போக்குக் காணப்பட்ட இடங்களிலிருந்து மட்டுமே விநோபா அதிக நிலத்தைத் தானமாகப் பெற முடிந்தது. அவர் முதன் முதலாகப் பூதானத்தைப் பெற்ற தெலுங்கானா மாவட்டத்தில் பொதுவுடைமைவாதிகளின் நட

வடிக்கைகள் அமைந்திருந்தன என்பது குறிப்பிடத்தக்கது. அங்குப் பல பெருநிலக்கிழார்களும் அஞ்சிய நிலையிலேயே இருந்தார்கள். இதன் காரணமாகவே ஜமீன்தார்கள் பலரும் நிலத்தைத் தானமாக அளிக்க முன்வந்தார்கள். தங்களைக் காத்துக் கொள்ளவே அவர்கள் நிலத்தை அளித்தார்கள் என்பது புரிந்து கொள்ளப்பட வேண்டிய ஒன்று, பூதான இயக்கத்தில் அக்கறை கொண்டு அவர்கள் அன்பளிப்பைச் செய்யவில்லை. பிற மாநிலங்களில் இவ் வியக்கம் சிறப்பான வளர்ச்சியைப் பெற்றிருந்தது. ஆனால், அங்கெல்லாம் பொதுவுடைமைவாதிகளின் செல்வாக்குப் பெருகி யிருக்கவில்லை

சண்டைச் சச்சரவுகளில் இருந்த நிலவுடைமைகள் பலவும் தானமாக அளிக்கப்பெற்றன. மொத்த பூதான நிலத்தில் இவை 50 சதவீதம் என்ற அளவில், அளிக்கப் பட்டிருந்தன. திரட்டப் பட்ட நிலத்தில் சுமார் 70 சதவீதம் செழுமையற்றதாக இருந்தது. ஆனால், இவற்றை நம்பக்கூடிய புள்ளி விவரங்கள் என்று கூற முடியாது. இவை ஊகத்தில் குறிப்பிடப்பட்டவையே ஆகும்.

பூதான இயக்கம் நிலப்பசியை அடக்குவதற்குப் பதிலாக, அதை, மேலும் தீவிரமாக்குகிறது. ஆனால், எரியும் நெருப்பைவிட அணைக்கப்படும் நெருப்பு மேலானது அன்றோ?

அரசின் திட்டங்களுக்குச் சாதகமான நிலையைக்கொண்டு பூதான இயக்கம் அமையவில்லை. சிறிய நிலங்களை ஒருங்கிணைப்பது இதனால், தடைப்படுகிறது. பூதான இயக்கத்தால் மறுபகிர்வு செய்யப்படும் நிலங்கள் உச்ச வரம்பால் பாதிக்கப்படுவதில்லை, ஏனெனில், அந்த அளவிற்கு மிகக் குறைவாகவே நிலமற்றவர்களுக்கு நிலம் அளிக்கப்படுகிறது. இவ்வாறு, அளிக்கப்பட்ட நிலத்தில் உற்பத்தியைப் பெருக்குவது இயலாது. நில அளவு குறைவாக இருப்பதோடு நிலத்தைப் பெறுபவர்களும் வசதியற்றவர்களாக இருப்பதே இதற்கு முக்கியக் காரணமாகும்.

பொதுவுடைமைவாதிகளின் நடவடிக்கைகளைக் குறைப்பதற்காகவே விநோபா இவ் வியக்கத்தைத் தோற்றுவித்தார் என்று சிலர் கூறுகின்றனர். ஆனல். இக் கருத்தைச் சரியானதென்று ஏற்றுக்கொள்ள இயலாது. ஏனெனில், பொதுவுடைமைவாதிகளின் செல்வாக்கு மிகுதியாக இருந்த பகுதிகளிலிருந்து பூதானமாகப் பெறப்பட்ட நிலம் மற்ற பகுதிகளிலிருந்து பெறப்பட்ட நிலத்தைக் காட்டிலும் மிகக் குறைந்த வீதத்திலேயே அமைந்தது. எனவே இவ்வித வாதத்தை அடிப்படையற்றது என்றே கூறலாம்.

பூதான இயக்கம் 1951ஆம் ஆண்டில் தொடங்கப்பெற்றது. 1957ஆம் ஆண்டின் இறுதி வரை குறியிலக்கில் [redacted] சதவீத நிலத்தை மட்டுமே அன்பளிப்பாகப் பெற முடிந்தது. தன் இலட்சியத்தில் வெற்றியை 1961ஆம் ஆண்டிற்குள் பெற வேண்டுமென விநோபா விரும்பினர். மக்களைத் தாங்களாகவே உணரச் செய்து நிலத்தைப் பெற நீண்ட காலம் பிடிக்கும். மேலும் நிலவுடைமையாளர்கள், அவர்களாகவே நிலமளிக்க முன்வருவார்களா என்பது ஐயத்திற்குரிய ஒன்ருகும்.

சிலர் பூதான இயக்கத்தால் நிலம் மேலும் பிரிக்கப்பட்டு உள் பிரிவு படுத்தப்படும் என்று கருதுகின்றனர். அதற்கு விநோபா கூறும் பதிலாவது, 'பூதான இயக்கத்தின் மூலம் நிலவுடைமைகள் பிரிக்கப்படலாம்; அல்லது ஒருங்கிணைக்கப்படலாம். எனினும், பேரளவுப் பண்ணைமுறை பொருளாதார ரீதியில் இலாபகரமானதா என்பது நிரூபிக்கப்படவேண்டிய ஒன்ருகும்' என்பது.

பூதான இயக்கம் யாசிப்பதை ஊக்குவிக்கும் என்று சொல்லப்படுகிறது. ஆனுல், சமுதாய நன்மைக்காக நிலத்தைத் தானமாகப் பெறுவது தவருகாது. விநோபா செய்யும் பணி புனிதமானது. அவர் தன்னுடைய நன்மைக்காக இதைச் செய்யவில்லை.

ஐந்து ஏக்கர்களுக்குக் குறைவான நிலத்தைக் கொண்டவர்களின் வாழ்க்கையைப் புனரமைப்பதும் இன்றியமையாதது. ஆனுல், இவர்களுக்கு அளிப்பதற்கான அளவில் போதுமான நிலத்தைப் பூதான இயக்கம் பெற்றிருப்பதில்லை. இவர்களுடைய வாழ்க்கையைத் திருத்துவதைவிட நிலமற்ற விவசாயிகளுக்கு நல்வாழ்வை அளிப்பதே அதிக அவசியமானது.

அரசு வேளாண்மைத் துறையைச் சார்ந்தவர்களின் எண்ணிக்கையைக் குறைக்க முயலுகின்றது. மாருகப் பூதான இயக்கம் சாகுபடியாளர்களின் எண்ணிக்கையைப் பெருக்கிவிடும். அரசு நிலமற்றவர்களுக்கு நிலத்தை அளிப்பதைவிட வேறு வேலை வாய்ப்புகளைத் தருவது நல்லது. விநோபா இதுபற்றிக் குறிப்பிடுவதாவது, 'குடிசைத் தொழில்கள் இன்றி விவசாயிகள் நிலத்தைப் பெற்றிருத்தல் சிக்கலைத் தீர்க்க உதவாது. கிடைக்கக்கூடிய கச்சாப் பொருள்களைப் பயன்படுத்திச் சில விலை மதிப்புள்ள பொருள்களைக் கிராமவாசிகள் உற்பத்தி செய்ய முயலவேண்டும். அதன்மூலமே அவர்கள் ஓரளவு சேமிக்கும் திறனைப் பெறுவார்கள்' என்பது.

விநோபாவின் கொள்கை வேறு வகையிலும் குறை கூறப்படுகின்றது. பூதான இயக்கம் நிலத்தை உடைமையாகக்

கொண்ட ஒவ்வொருவரிடமிருந்தும் ஆறில் ஒரு பங்கு நிலத்தை வேண்டுகிறது. பெருநிலக்கிழார்களிடமிருந்தும், சிறிய நில வுடைமையாளர்களிடமிருந்தும் ஒரே வீதத்தில் நிலத்தைக் கேட்பது நியாயமானதன்று. இதன்மூலம் சிக்கனமற்ற நில வுடைமைகளும் அமையும் என்பது அது.

பூதானமாகப்பெற்ற நிலத்தைப் பங்கிடுவதில் பல பிரச்சினைகள் தோன்றுகின்றன. எளிய முறை நிலப்பகிர்விற்கு மாநில அரசுகள் சட்டங்களை இயற்றுதல் வேண்டும். தனியார் சிலர் நிலத்தை மறுபகிர்வு செய்யும்போது காலமும், பணமும் விரயமாகின்றன. விரைவான பகிர்வையும் செய்ய முடிவதில்லை. தானமாக அளிக்கப் பட்ட நிலங்கள் பல ஆண்டுகள் சாகுபடிக்குப் பயன் படுத்தப் படாமலேயே கிடக்கின்றன. நிலமற்றவர்களிடையே நிலத்தைப் பங்கிட நீண்ட காலம் தேவைப்படுகிறது.

வினோபா தம் சொந்த வழிகளில் பூதான இயக்கத்தைத் தொடங்கினார். அவரிடம் ஐயத்தோடுகூடிய பல வினாக்கள் எழுப்பப்பட்டன. பூதான இயக்கம் விரிந்து பரந்த நோக்கத்தைக் கொண்டதாக இல்லை. நாட்டில் மக்களிடையே திகழும் வறுமையைக் களையவும், சமுதாயப் பண்பாட்டுக் குறைபாடுகளை நீக்கவும் பேரளவில் முயற்சிகள் தேவைப்படுகின்றன. இந்த ஐயத்திற்கான விளக்கத்தை வினோபா சரியாகத் தருகின்றார். நம் நாட்டில் உணவுப் பற்றுக்குறை சிக்கல் தீவிரத்தன்மை கொண்டதாக இருக்கின்றது. நிலவுடைமை முறையில் சில மாற்றங்களைச் செய்வதன் மூலமே இச் சிக்கலுக்குத் தீர்வு காண இயலும்; பிற பிரச்சினைகளுக்கும் தீர்வு காண இதுவே உதவும். இந்திய மக்கள் தொகையின் பெரும்பகுதி வேளாண்மையில் ஈடு பட்டுள்ளது. அவர்களுடைய பொருளாதாரப் பண்பாட்டு நிலை களில் முன்னேற்றத்தைக் காண வேளாண்மைத் துறையிலேயே முயற்சிகள் மேற்கொள்ளப்படவேண்டும். வேளாண்மைத் துறை யில் உணவுத் தானியங்களைத் தவிர, தொழில் துறைக்குத் தேவையான கச்சாப்பொருள்களும் உற்பத்தியாகின்றன. எனவே, நாட்டு மக்களின் பொருளாதார வாழ்வை உயர்நிலையில் மாற்றி யமைக்க நிலச் சிக்கலுக்கு முக்கியத்துவம் அளிப்பது இன்றி யமையாதது. நிலச்சிக்கலுக்குத் தீர்வு காணப் பூதான இயக்கம் ஓரளவு உதவும்.

பெரிய நிலவுடைமையாளர்களை மட்டும் நிலத்தை அன் பளிப்பாக அளிக்கவேண்டுமெனக் கேட்பதே நியாயமானது என்று பலரும் குறிப்பிடுகின்றனர். சிறு நிலவுடைமையாளர்

களிடமிருந்து நிலத்தை வேண்டுவது, சமூக நீதிக்குப் புறம்பானது. ஆதலால்தான் எவரையும் கட்டாயப்படுத்தி நிலத்தை வாங்கவில்லை என்று விநோபா இதுபற்றி விளக்குகிறார். சமூகக் கடமையாகக் கருதியே நிலவுடைமையாளர்கள் நிலம் அளிக்க வேண்டுமென்று அவர் கூறுகிறார். நிலமற்றவர்களைக் காட்டிலும் சிறிய நிலவுடைமையாளர்களின் வாழ்க்கைத் தரம் உயர்வானதே என்றும் அவர் குறிப்பிடுகிறார்.

நில மறுபகிர்வை விரைவாக்க அரசு சட்டங்களை இயற்ற வேண்டுமென்பது சிலருடைய கருத்தாகும். ஆனால், அரசின் நடவடிக்கைகளால் மக்கள் மனத்தில் அன்பையும், பண்பையும், பரிவையும் விதைக்க முடியாது. மற்றவர்களுடைய சுக துக்கங்களைப் பங்கிட்டுக்கொள்ளத் தூண்டுவது பூதான இயக்கமேயாகும். இவ் வியக்கத்தின் முக்கிய நோக்கம் பண்பாட்டில் முன்னேற்றமான மாற்றத்தைத் தோற்றுவிப்பதும், மக்களிடையே பரஸ்பர அன்பை வளர்ப்பதும் ஆகும். இது மக்கள் மனத்தில் உயர் எண்ணங்களை ஏற்படுத்தும்; எளிய வாழ்வைப் பின்பற்றவும் தூண்டும். அரசின் சட்டங்களால் இவ்வித நன்மைகளைப் பெற இயலாது.

கட்டாய முறைமூலம் செய்யப்படும் சீர்திருத்தம் நீண்ட காலத்திற்கு நீடிக்காது. 'அன்பால் மற்றவர்களைக் கொள்ளையிடு' என்கிறார் விநோபா. தியாக உணர்வோடு மக்கள் நிலத்தைத் தானமாக அளிக்க முன்வர வேண்டும். பூதானத்தைச் செய்பவர்களுக்கு மனக்கசப்பு இருக்கக்கூடாது. பூதான, கிராமதான இயக்கங்களில் செயல்படுத்துவது கடினமானது. ஆனால், விரும்பத்தக்க நன்மைகள் பல அடங்கியுள்ளன.

சர்வோதய சமாஜத்தின் ஒரு பிரிவே கிராமதான இயக்கமாகும். சர்வோதயம் என்பது வாழ்வின் தத்துவம். சர்வோதயத் தத்துவம் தற்காலத்திற்கு ஒவ்வாதது. அதைத் தீவிரமாகச் செயல்படுத்தினால் நிர்வாகம், தொழில், வாணிபம் ஆகியவை பரவலாகிவிடும். அரசின் பணிகள் குறைக்கப்படும். மக்களுடைய நலன்கள் பலவற்றைக் காக்கும் அரசு அமையாது. நாட்டின் பாதுகாப்புச் செலவு குறைக்கப்படும். விமானப்படை, கப்பற்படை, இராணுவம் ஆகியவை முழுமையாக நீக்கப் படாவிட்டாலும்கூட, அவற்றின் பலம் தாழ்த்தப்பெறும். நிலம் சார்ந்த நடவடிக்கைகளின் எண்ணிக்கையும் குறைவடையும். இவற்றிற்குப் பின்னர் எந்த ஒரு நாட்டிலும் இருள் மயமான எதிர்காலத்தையே எண்ணிப்பார்க்க இயலும். விரைவான பொருளாதார முன்னேற்றத்திற்கும், அதிக அளவுப் பண்டங்களின் உற்பத்திக்கும், மாறி வரும் சமுதாய

அமைப்பு முறைக்கும் ஏற்றதாகச் சர்வோதய முறையின் தன்மைகள் அமையவில்லை.

**நிறைவுரை**

பூதான இயக்கம் சிறப்பாகச் செயல்படப் பின்வரும் வழி முறைகள் குறிப்பிடப்பட்டுள்ளன.

**1. சாகுபடி [redacted] அலகுகளை விரிவாக்கம் செய்வது**

[redacted] நாட்டு மக்கள் தொகையின் பெரும்பகுதி வேளாண்மையில் ஈடுபட்டிருந்தால் அங்கு வறுமை நிலை திகழும் என்பது பொதுவான பொருளாதாரக் கொள்கையாகும். அந்த நிலை மக்களுடைய வாழ்க்கைத் தரத்தைத் தாழ்த்திவிடுகிறது. திட்டக் குழுவின் அந்நாளைய உறுப்பினராக இருந்த திரு ஆர். கே. பட்டீல் குறிப்பிட்டதாவது, 'எதிர்காலத்தில் உணவு உற்பத்தியில் ஈடுபட்டிருக்கும் மக்கள் தொகையைக் குறைவாகக் கொண்ட கிராமச் சமுதாயத்தை அமைக்கவேண்டும். பிறருக்குக் குடிசைத் தொழில்களிலும், சிறிய அளவுத் தொழில்களிலும் வேலை வாய்ப்பு அளிக்க வேண்டும்' என்பது. 1952ஆம் ஆண்டின் 'உத்தரப் பிரதேச பூதான யாஜ்ஞ சட்டம்' (Uttar Pradesh Bhoodan Yajna Act) பூதான யாஜ்ஞவின்மூலம் பெற்ற நிலத்தானங்களை நிலமற்றவர்களிடையேப கிர்வதை முக்கிய நோக்கமாகக் கொண்டிருந்தது.

முன்னாள் மத்திய வேளாண்மை அமைச்சராக இருந்த டாக்டர் புன்சாப்ராவ் தேஷ்முக் பூதான இயக்கத்தைப் பற்றிக் கூறியதாவது, 'இவ் வியக்கம் மக்களிடையே தரும சிந்தனையை வளர்க்கிறது. ஆனால், பூதான இயக்கம் அதிக உற்பத்தியைப் பெறுவதில் மிகுதியான கவனத்தைச் செலுத்த வேண்டும். அதுவே, வேளாண்மையின் உண்மையான சிக்கலைத் தவிர்க்க உதவும். தாம் நிலவுடைமையாளராகி விட்டோம் என்ற [redacted] நிறைவைத் தருவதற்காக மட்டும் இவ்வியக்கம் செயல்படக்கூடாது. சில ஏக்கர் நிலத்தை உடைமையாகப் பெறுவதால் மன மகிழ்ச்சி ஏற்படக்கூடும். [redacted] மகிழ்வோடு உற்பத்தி பெருகுமாறு பார்த்துக்கொள்வதும் அவசியமாகும்[1].

தானமாகப் பெறப்பட்ட நிலத்தை நிலமற்றவர்களுக்கு அளிப்பதைவிடச் சிறிய நிலவுடைமைகளைப் பெரிதாக்குவதற்குப் பயன்படுத்துவது நல்லது. கணிச அளவில் சாகுபடி நிலங்கள் அமைந்திருந்தால்தான் உற்பத்தியைக் கூட்டமுடியும். விஞ்ஞானச்சாகுபடி

1. Indian Bureau of Parliamentary Studies, Op, cit, p. 62

முறையைக் கைக்கொள்வதும் எளிதாகும். சிறிய சாகுபடி நில அலகுகளில் எந்திரக் கலப்பைகள் முதலிய பெரிய வேளாண்மை எந்திரங்களைப் பயன்படுத்த முடிவதில்லை. பெரிய அளவு நிலவுடைமைகளில் நல்ல உரங்கள், விதைகள் ஆகியவற்றை உபயோகித்து உற்பத்தியை அதிகரிக்கலாம்; நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்கலாம். முன்னேற்றமான போக்குவரத்து வசதி, [illegible] பொருள்களின் சேமிப்பு வசதி, சிறப்பான பகிர்வு வசதி ஆகியவற்றைப் பெறலாம். இவற்றால், நன்மைகள் பல தோன்றும். சிக்கன அளவில் (அல்லது உத்தம அளவில்) சாகுபடி நிலங்கள் அமைந்து பல வகையிலும் நன்மையளிக்கும்.[1]

உத்தம அளவு என்பது நிலத்தின் தன்மை, நீர்ப்பாசன வசதி முதலிய காரணிகளுக்கேற்ப வேறுபடும். இவை நம் நாட்டின் பல வேறு மாநிலங்களின் வெவ்வேறு பகுதிகளிலும் மாறுபடுகின்றன. இனி வரும் காலத்திலாவது உற்பத்தியைப் பெருக்குவதற்குச் சாதகமான அளவில் நிலவுடைமைகளை அமைத்தல் அவசியமாகும்.

## 2. நிலமற்றவர்களைப் பரவலாக்குவது

விரைவான தொழில் முன்னேற்றத்தைப் பெற உதவும் சொத்தாக நிலமற்றவர்களைக் கருதலாம். 'ஜப்பானில் வேளாண்மையல்லாத பொருளாதாரம் விவசாயிகளின் வருமானத்தில் சுமார் 40 சதவீதத்தை அளித்தது. ஆரம்பக் காலத்தில் அங்கு வேளாண்மையில் ஈடுபட்டிருந்தவர்களின் எண்ணிக்கை 3,70,00,000 ஆகும். விரைவான தொழில் முன்னேற்றம் ஏற்பட்டதால் கிராமப் பொருளாதாரத்தில் அமைந்திருந்த வேலையின்மையும், மறைந்துள்ள வேலையின்மையும் நீக்கப்பட்டன. நாடு தொழில் மயமானமையால் உபரி வேளாண்மை உழைப்பாளர்கள் ஈர்க்கப்பட்டனர்'.[2]

அரசு குடிசைத் தொழில்களையும், பிற தொழில்களையும் தோற்றுவித்து வளர்க்கவேண்டும். அதன் மூலமே நிலத்தில் உள்ள உபரி மக்கள் தொகையை நன்கு பயன்படுத்த இயலும். நிலப் பங்கீட்டு முறை வெவ்வேறு இடங்களிலும் மாறுபடுகின்ற சூழ்நிலைகளுக்கு ஏற்ப அமைதல் அவசியம். பேராசிரியர் நீல் (Prof. Neale), 'இச் சிக்கலைத் தீர்ப்பதற்கான வழியோ அல்லது தீர்வோ அமைந்திருக்கவில்லை'[3] என்று குறிப்பிட்டார். வினோபாவும் இவ்

1. Ibid, p. 57
2. Wolf Lodejinski, Sp. cit, p. 80.
3. Walter C. Neale, Economic Change in Rural India, 1962, p. 287.

வுண்மைகளை ஏற்றுக்கொண்டுள்ளார். 'நிலவுடைமைகளைப் பெற்றிருந்தாலும் விவசாயிகள் முன்னேறக் குடிசைத் தொழில்கள் தேவை; கிடைக்கும் கச்சாப் பொருள்களைப் பயன்படுத்திச் சிறிய தொழில் பொருள்களைச் செய்வதன் மூலமே அவர்கள் ஓரளவாவது சேமிக்கமுடியும்'.[1]

### 3. விரைவான [illegible] மறுபகிர்வு

தானமாகப் பெறப்பட்ட சாகுபடி நிலத்தை விரைவாக மறுபகிர்வு செய்யவேண்டும். அவ்வாறு செய்யாவிட்டால் விவசாயி[illegible] மன நிறைவைப் பெறமாட்டார்கள். பூதானம் அளித்தவர்களுடைய நிலையை விளக்கத் தேவையில்லை. இந்த நிலை வேளாண்மை உற்பத்திக்கும்; வளர்ச்சிக்கும் தடையாக அமையும். கிடைக்கப் பெறும் வளங்களை முழுமையாகப் பயன்படுத்துவதன் வாயிலாகவே நாட்டின் மொத்த ஆக்கத்தை அதிகரிக்கலாம்.

### 4. போதுமான நிதி உதவியை உரிய காலத்தில் அளித்தல்

நிலத்தை அன்பளிப்பாகப் பெறுபவர்களுக்கு உரிய காலங்களில் போதுமான கடன் வசதிகளை அளித்தல்வேண்டும். உற்பத்தி பெருகக் கடன் வசதிகள் அவசியமாகின்றன. சாகுபடிக்குத் தேவையான கால்நடைகள், கலப்பைகள் முதலியவற்றையும்கூட பலர் உடைமையாகக் கொண்டிருப்பதில்லை. ஆகவே, அவற்றை வாங்குவதற்குக் கடன் தேவைப்படுகிறது. அவர்களின் வாழ்வைப் புனரமைக்கக் கடன் வசதிகள் தேவை. அவற்றின் மூலமே உற்பத்திக்கான சாதனங்களைப் பெருக்க இயலும்.

வினோபா தொடங்கிய இயக்கம் சிறப்பாக இயங்கக் கீழ்க் காணும் வழிமுறைகளும் பின்பற்றப்படலாம்:

1. பூதானக் குழு [illegible] வெவ்வேறு பிரிவுகளாக்கப்படவேண்டும். ஒரு பிரிவு நிலத்தைத் திரட்டுவதிலும், மற்றொன்று நில முன்னேற்றத்தைச் செய்வதிலும் ஈடுபடவேண்டும். ஆனால், இவற்றை நிறைவேற்ற நிதி வசதி தேவைப்படுகின்றது. எனவே, பூதானக் குழுவின் மூன்றுவது பிரிவு நிதி திரட்டுவதில் கவனம் செலுத்தவேண்டும். வளமற்ற நிலத்தில் உடனடிச் சாகுபடியை மேற்கொள்வது இயலாது; உற்பத்தியைப் பெருக்குவது முடியாது. இதனால், உழைப்பாளர்களின் வாழ்க்கைத் தரமும் உயராது. பூதான இயக்கத்தின் மூலம் நிலவுடைமை உரிமைகள் மாற்றி

1. Suresh Ram, sp Cit., p. 51.

அமைக்கப்படுகின்றன. அவ்வாறு உரிமைகளை மாற்றி அமைக்கும் போது நிலத்தைப் பெறுபவர்கள் நன்மையடையுமாறு பார்த்துக் கொள்ள வேண்டியது அவசியம்.

2. நிலத்தைப் பகிர்வு செய்யும்போது பூதானக் குழு சரியான கொள்கைகளைக் கவனமாகப் பின்பற்ற வேண்டும். நிலத்தைத் தானமாகப் பெறுபவர் நிலத்தை அன்பளிப்பாகத் தந்தவரின் உறவினராக இருக்கக்கூடும். சரியான விசாரணையின் மூலமே இக் குறைபாட்டை நீக்கமுடியும். நிலத்தை அளிப்பதற்கு முன்னர், கிராமவாசிகள் பலரோடும் கலந்து ஆலோசிப்பது நன்மை பயக்கும்.

3. பூதான இயக்கம் திட்டமிட்டு நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும். கலப்பையில்லாமல் எருதுகளைக்கொண்டு நிலத்தை உழ முடியாது. மேலும், குறிப்பிட்ட திசையிலும் எருதுகள் செல்லமாட்டா. எத் திசையில் வேண்டுமானாலும் அவை செல்லக்கூடும். இதைப்போன்றே திட்டமிடாத நடவடிக்கைகள் ஏரில்லாத எருதுகளுக்குச் சமமாகும். திட்டமிடுவதன் மூலமே முன்னேற்றத்தில் வெற்றி காணமுடியும்.

4. நிலத்தை மறுபங்கீடு செய்வதை விரைவாக்கவேண்டும். அவ்வாறு செய்யாவிட்டால், மக்கள் மன அதிருப்தியை அடைவார்கள், இது முன்னேற்றத்திற்குத் தடையாக அமையும். முதலில் நிலத்தைத் திரட்டி, பின்னர், அதைப் பகிர்வு செய்யும் முறை மாற்றப்படவேண்டும். இதனால், வீணான காலதாமதம் ஏற்படுகின்றது. தானமாகப் பெற்ற நிலத்தை உடனடியாக நிலமற்றவர்களிடம் அளிப்பது இன்றியமையாதது.

பல குறைபாடுகளைக் கொண்டிருந்தாலும் பூதான இயக்கம் ஓரளவு வெற்றி பெற்றுள்ளது. தொடக்கத்தில் இந்த அளவு வெற்றி கிடைக்கும் என்று எவரும் நம்பவில்லை. நில உச்சவரம்பு சட்டங்களால் பெறப்பட்ட உபரி நிலம் நிலமற்றவர்களிடையே பகிரப்படுகின்றது. இவ் வகையில் பூதான இயக்கமும் ஓரளவு உதவியிருக்கிறது. இதன்மூலம் நிலமற்ற விவசாயிகள் நன்மை அடைந்துள்ளார்கள். சட்டங்களின் வாயிலாக மறுபகிர்வு செய்யப்பட்ட நிலத்தைக் காட்டிலும், பூதான இயக்கத்தின்மூலம் மறுபகிர்வு செய்யப்பட்ட நிலத்தின் அளவு அதிகமானது என்பது குறிப்பிடத்தக்கது. போதுமான அளவில் நிலச் சீர்திருத்தங்கள் செய்யப்பட வேண்டுமென்ற கருத்தைத் திட்டக்குழு கொண்டிருக்கிறது. பண்டித ஜவஹர்லால் நேருவும் இந்த எண்ணத்தையே கொண்டிருந்தார்.

இந்திய அரசு தீவிரக் கருத்துகளைக் கொண்டுள்ளது. ஆனால், வேளாண்மைச் சீர்திருத்தங்களைச் செய்வதில் தீவிரப் போக்குக் காணப்படவில்லை. வேளாண்மைத்துறையில் அடிப்படை மாற்றங்கள் தோன்றவில்லை. பொதுவுடைமை அரசு அமைந்திருக்கும் கேரளத்திலும்கூட நிலச்சீர்திருத்தங்கள் சிறப்பாகச் செய்யப்படவில்லை. கிராமச் சமுதாயத்திற்கு நிலவுடைமைகளின் உரிமைகளை மாற்றியமைக்கும் சட்டங்கள் அங்கு பிறப்பிக்கப்படவில்லை. கூறுவதற்கு எளிதாக இருந்தாலும், இதைச் செயல்படுத்துவதில் பல சிக்கல்கள் உள்ளன. பொதுவுடைமை முறையில் அடிப்படைக் கொள்கை தனியார் சொத்துகளைச் சமுதாய உடைமையாக மாற்றுவதாக இருக்கின்றது. எனவே, நில உரிமைகளைக் கிராமச் சமுதாயங்களுக்கு மாற்றி அமைப்பதன் மூலம் பொதுவுடைமை பரவும் என்றும் கருதப்படுகின்றது[1]. இடதுசாரி சமதர்ம வாதிகள் தீவிரக்கொள்கைகளைப் பின்பற்றுபவர்கள். அரசு உண்மையிலேயே மக்களின் நலனில் அக்கறை கொண்டிருந்தால், சமதர்மம் மலர வேண்டுமென்றால், வருமானத்திலும் செல்வப் பங்கீட்டிலும் உள்ள ஏற்றத்தாழ்வுகள் குறைக்கப்படவேண்டுமென்றால் தீவிரக் கொள்கைகளைக் கைக்கொள்வதும் இன்றியமையாததாகும்.

பூதான இயக்கத்தைப் பெருமளவு விரிவுபடுத்த வேண்டுமென்பது அவசியமில்லை. மக்களிடையே கூட்டுணர்வு, அன்பு, பண்பு, அடக்கம், தியாகம், கடமை, கண்ணியம், கட்டுப்பாடு ஆகியவை தோன்றுமாறு செய்வதே அவசியமானது. அது பொருளாதார முன்னேற்றத்தைத் தொடர்ந்து நீடிக்கச் செய்யும். நாட்டில் பல அடிப்படை மாற்றங்கள் தோன்றும். அடிப்படை மட்டத்தில் சமுதாய விழிப்புணர்ச்சி அமைத்திருக்கும்.[2] உற்பத்தி, வருமானம் ஆகியவற்றைப் பெருக்கவேண்டுமென்ற எண்ணத்தை மக்கள் பெறுவார்கள்.

வேளாண்மைத் துறையில் பூதான இயக்கத்தால் சிறப்பான மாற்றங்களை ஏற்படுத்த முடியாது'. தற்காலத்திற்குப் பொருத்தமுடையது தீவிரச் சமதர்மமேயாகும். சர்வோதயத் தத்துவம் இதற்குமாறான இயல்புகளைக் கொண்டுள்ளது. நடைமுறைக்கு ஒவ்வாத நிலைகள் சர்வோதயத்தில் அமைந்துள்ளன. சர்வோதயத்தின் அடிப்படையில் அமைந்திருக்கும் பூதான இயக்கம் கருதத்தக்க அளவிற்கு நன்மைகளைத் தந்துள்ளது என்பதை எவரும் மறுக்க இயலாது.

1. J.P. Narain in Sarva Seva Sangh Monthly News Letter. August 1968, p. 4.

2. Gyan chand, Sp. Cit., p. 5.

## மாநில ரீதியில் பூதானமும், கிராமதானமும்

### (31 மார்ச் 1958 வரை)

| மாநிலம் | | பெறப்பட்ட நிலம் (ஏக்கர்களில்) | பகிர்வு செய்யப் பட்ட நிலம் (ஏக்கர்களில்) | மறுக்கப்பட்ட நிலம் (ஏக்கர்களில்) | பகிர்வு செய்ய வேண்டிய நிலம் (ஏக்கர்களில்) | கிராமதானக் கிராமங்களின் எண்ணிக்கை |
|---|---|---|---|---|---|---|
| (1) | | (2) | (3) | (4) | (5) | (6) |
| 1. அஸ்ஸாம் | ... | 23,105 | 509 | [illegible] | 22,588 | 1,463 |
| 2. ஆந்திரப்பிரதேசம் | ... | 2,41,952 | 1,03,309 | 8[illegible],385 | 52,258 | 3,588 |
| 3. ஒரிஸ்ஸா | ... | 1,89,139 | 1,13,345 | 19,846 | 55,948 | 3,588 |
| 4. உத்தரப்பிரதேசம் | ... | 4,35,574 | 2,01,642 | 1,73,564 | 60,368 | 6,364 |
| 5. கேரளம் | ... | 26,293 | 5,774 | 7,999 | 12,520 | 753 |
| 6. தமிழ்நாடு | ... | 80,433 | 21,519 | ... | 58,914 | 409 |
| 7. டெல்லி | ... | 300 | 180 | 120 | — | 3,519 |
| 8. பஞ்சாப் | ... | 14,739 | 3,601 | 3,380 | 7,758 | 74 |
| 9. குஜராத் | ... | 1,08,530 | 50,984 | 27,994 | 24,552 | 1,280 |
| 10. மஹாராஷ்டிரம் | ... | 1,50,802 | 1,07,111 | 38,346 | 5,354 | 751 |
| 11. மத்தியப்பிரதேசம் | ... | 4,05,402 | 1,56,506 | 1,74,531 | 74,365 | 2,681 |
| 12. மைசூர் | ... | 20,086 | 3,181 | [illegible] | 16,852 | 2,167 |
| 13. மேற்கு வங்காளம் | ... | 12,960 | 3,998 | 8,426 | 636 | 98 |
| 14. பீஹார் | ... | 21,21,462 | 3,31,842 | 10,67,006 | 7,22,614 | 527 |
| 15. ராஜஸ்தான் | ... | 4,32,868 | 84,781 | 1,22,488 | 2,25,599 | 13,198 |
| 16. ஹிமாசலப் பிரதேசம் | ... | 5,240 | 2,531 | ... | 2,709 | 1,211 |
| 17. ஜம்மு, காஷ்மீர் | ... | 211 | 5 | ... | 206 | ... |
| மொத்தம் | ... | 42,64,096 | 11,90,718 | 17,30,146 | 13,43,232 | 37,775 |

Source: Land Reforms Division, Planning Commission, New Delhi.

# 15. வேளாண்மை உழைப்பாளர்கள்
## (Agricultural Labourers)

பிறருடைய பண்ணைகளில் கூலிக்காகத் தங்கள் உழைப்பைத் தருபவர்களே வேளாண்மை உழைப்பாளர்கள் ஆவர். இவர்களில் சிலர் நிலம் உள்ளவர்களாகவும் இருக்கலாம். ஆனால், பெரும்பாலானவர்கள் நிலமற்றவர்களாகவே இருக்கின்றனர். வாழ்க்கையை நடத்துவதற்குப் போதுமான வருமானத்தைத் தராத சிறிய அளவு நிலங்களை உடைமையாகக் கொண்டவர்கள் வேளாண்மை உழைப்பாளர்களாக மாறுவது தவிர்க்க இயலாதது. வேளாண்மை உழைப்பாளர்களில் பெரும் வீதத்தினர் கூலியை நம்பியே வாழ்கின்றனர். இந்தியாவின் மொத்த வேளாண்மை உழைப்பாளர்களில் 50 சதவீதத்திற்கும் அதிகமானவர்கள் நிலவுடைமைகளைக் கொண்டிருக்கவில்லை. அவர்களில் சிலர் ஒப்பந்தக் கூலியாட்களாகவும் பணியாற்றுகின்றனர். தமிழ் நாட்டில் இவர்களைப் 'பணியாட்கள்' என்று வழங்குகின்றோம். ஒரு மாதமோ அல்லது அதற்கு அதிகமாகவோ இவர்கள் ஒப்பந்தத்தின் அடிப்படையில் நிலவுடைமையாளர்களிடம் பணிபுரிகின்றார்கள்.

பல வேளாண்மை உழைப்பாளர்கள் தினக்கூலி பெறுபவர்களேயாவர். இந்தியாவில் இவர்களுடைய பிரச்சினைகளைத் தீர்ப்பது அவசியமானதாகவும் இருக்கின்றது. வேளாண்மை உழைப்பாளர்களின் எண்ணிக்கை உயர்ந்துகொண்டே இருக்கும்போது அவர்களுடைய பொருளாதார நிலை தாழ்ந்துகொண்டே செல்கின்றது. திட்டங்களிலும்கூட, அவர்களுடைய முன்னேற்றத்திற்கான நடவடிக்கைகள் எடுக்கப்படவில்லை. சமுதாயத்தின் ஒதுக்கப்பட்ட பிரிவினராகவே அவர்கள் இருக்கின்றார்கள். கடந்த 25 ஆண்டுகளில் தொழில் உழைப்பாளர்களின் பாதுகாப்பிற்காகப் பல சட்டங்கள் இயற்றப்பட்டது குறிப்பிடத்தக்கதாகும். சமீப காலம்வரை வேளாண்மை உழைப்பாளர்களுக்குச்

சரியான பாதுகாப்பு அளிக்கப்படவில்லை. சுதந்திரமடைந்த பின்னர், கிராம உழைப்பாளர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கப்பட வேண்டியது அவசியமென்று உணரப்பட்டது. அதன் விளைவாக அரசு முயற்சிகளை மேற்கொண்டு சட்டங்களை இயற்றியது.

இந்தியாவில் வேளாண்மை, பொருளாதார நடவடிக்கை மட்டுமன்று; அது வாழ்க்கை வழியுமாகும். கிராமச் சமுதாயத்தில் பண்ணை முறையோடு குடும்ப வாழ்க்கை முறையும் தொடர்பு கொண்டுள்ளது. வேளாண்மைத் துறையில் முன்னேற்றமடைய கிராம மக்களின் வாழ்வில் முன்னேற்றம் ஏற்படவேண்டும். பொருளாதார, சமுதாய ரீதிகளில் ஆராயும்போது வேளாண்மை உழைப்பாளர்கள் மிகத் தாழ்வான வாழ்க்கைத்தரத்தைப் பெற்றிருப்பதை அறியலாம்.

அவர்களுடைய கூலி குறைந்த அளவிலேயே அமைந்துள்ளது கடினமான உழைப்பைத் தந்துதான். அக் குறைந்த கூலியையும் அவர்கள் பெற முடிகின்றது. ஆண்டு முழுவதும் தொடர்ச்சியாக அவர்களுக்கு வேலை வாய்ப்பு கிடைப்பதில்லை, மிகக் குறைந்த வருமானத்தைப் பெறும் அவர்களுடைய வாழ்க்கைத்தரம் தாழ்வாகவே அமைகின்றது.

நிலத்தின்மீது உச்சவரம்பைக் கொண்டு வருதன்மூலம் வேளாண்மை உழைப்பாளர்களுக்கு நிலமளிக்கலாம். இவ் வகையில் பூதான இயக்கம் சிறப்பான பணிகளை ஆற்றியுள்ளது. வேளாண்மையில் வேலையின்மையோடு 'புலனுகா வேலையின்மையும்' (Disguised Unempolyment) அமைந்திருக்கின்றது. தேவைக்கு அதிகமான உபரி மக்கள் தொகை வேளாண்மையைச் சார்ந்துள்ளது. இந் நிலையே வேளாண்மை வளர்ச்சிக்குத் தடையாக அமைகிறது. 1947ஆம் ஆண்டிற்கு முன்னர்,ஆங்கிலேயர்கள் தொழில் உழைப்பாளர்களின் பாதுகாப்பிற்கான சில சட்டங்களை நிறைவேற்றினர். விடுதலையடைந்த பின்னர்த்தான் வேளாண்மை உழைப்பாளர்களுக்குப் பாதுகாப்பு அளிப்பதற்கான சட்டங்கள் இயற்றப்பட்டன.

இந்திய வேளாண்மையில் சாகுபடியாளர்களின் எண்ணிக்கை அதிகரிப்பதைப்போலவே, வேளாண்மை உழைப்பாளர்களின் எண்ணிக்கையும் அதிகரித்து வருகின்றது. அரசு, சாகுபடியாளர்களின் நிலையை உயர்த்துவதற்கான நடவடிக்கைகள் பலவற்றை எடுத்துள்ளது. வேளாண்மை உழைப்பாளர்களின் நிலையை உயர்த்துவதற்கான வழிமுறைகள் குறைந்த அளவிற்கு மட்டுமே

கைக்கொள்ளப்பட்டுள்ளன. வளர்ச்சியுறாத நாடுகள் பலவற்றிலும் இவர்களின் நிலை இரங்கத்தக்கதாகவே இருக்கின்றது.

1640 ஆம் ஆண்டில் டாக்டர் பட்டாபி குறிப்பிட்டது மேலும் பொருத்த முள்ளதாக உள்ளது. வேளாண்மை உழைப்பாளர்களின் மகாநாட்டில் அவர் கூறியதாவது, ‘சாகுபடியாளர் நாள் முழுவதும் சேற்றிலும், சகதியிலும் அவதியுறுகின்றனர்; வயிற்றுப் பசியோடு பணியாற்றுகின்றனர். அவர்கள் ஓய்வு என்பது என்ன வென்பதை அறியாதவர்கள், காற்றிலும், மழையிலும் சூரிய ஒளியிலும், புயலிலும் அவர்கள் தம் கடமைகளை ஆற்றுகிறார்கள். தம்முடையன என்று சொல்லித் தங்குவதற்கான இடங்களைக்கூட அவர்கள் பெற்றிருப்பதில்லை. நமக்கான நெல்லை உற்பத்திசெய்யும் அவர்கள், பசியால் வாடுகின்றனர். பால் அளிக்கும் பசுவிற்குத் தீவனம் அளிப்பவர் அவராவர்; ஆனால், அவர்களுக்குக் கஞ்சியையும், தண்ணீரையும் தவிர வேறெதுவும் தெரியாது. கிணறுகளைத் தோண்டுபவராக அவர்கள் இருக்கின்றனர்; ஆனால், நீர் நிரம்பிய கிணறுகளைப் பயன்படுத்தும் உரிமையை அவர்கள் பெற்றிருப்பதில்லை. அவருடைய உழைப்பால் செல்வத்தைச் சேமித்தவர்கள் ஏராளமானவர்களாவர்; ஆனால், அவர்களுடைய நிலை பரிதாபத்திற்குரியது’ என்று குறிப்பிட்டார்.

1950 ஆம் ஆண்டில் வேளாண்மைச் சீர்திருத்தக் குழு குறிப்பிட்டதாவது, வேளாண்மைச் சீர்திருத்தத் திட்டங்களில் இது வரை வேளாண்மை உழைப்பாளர் சிக்கலுக்குத் தீர்வு காணப் படவில்லை; இது நாட்டின் வேளாண்மை முறையில் உள்ள கடுமையான காயத்தைக் கவனியாமல் விடுவதைப் போன்றது. எனினும், திட்டமிட்டுப் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறக் கருதிய பின்னர், வேளாண்மை உழைப்பாளர்களின் நிலையைத் திருத்துவதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன என்பது.

இந்தியாவில் 1971 ஆம் ஆண்டுக் கணக்கெடுப்பின்படி மக்கள் தொகை 547 மில்லியன் ஆகும். இதில் 80 சதவீதம் கிராம மக்கள் தொகையாகும். கிராம மக்கள் தொகையில் வேளாண்மை உழைப்பாளர்கள் 25.76 சதவீதமாக இருக்கின்றார்கள். அவருள், ஆண்கள் 17.05 சதவீதமும், பெண்கள் 8.71 சதவீதமும் ஆவர். சில உழைப்பாளர்கள் மிகச் சிறிய துண்டு நிலங்களை உடைமையாகக் கொண்டுள்ளார்கள். பல நூற்றாண்டுகளாக அவர்களுடைய நிலையில் முன்னேற்றமே ஏற்படவில்லை. நிலக்கிழார்களால் அவர்கள் சுரண்டப்படுகிறார்கள். சமீப காலம்வரை நிலவுடைமையாளர்கள் அவர்களை அடிமைகளைப்போல நடத்தி வந்தனர்

**வரையறையும், விளக்கமும்**

முதல் வேளாண்மை உழைப்பு விசாரணை, (1950-51) பயிர் உற்பத்தியில் கூலிக்காகப் பணியாற்றுபவர்களை வேளாண்மை உழைப்பாளர்கள் என்று வரையறுத்தது. இரண்டாவது வேளாண்மை உழைப்பு விசாரணை, (1956-57) விவசாயத் தொழில்களாகிய தோட்டப் பண்ணை, பால் பண்ணை, கால்நடைப் பராமரிப்பு, கோழிப்பண்ணை முதலியவற்றிலும் வேளாண்மை உழைப்பாளர்கள் தங்கள் உழைப்பைத் தருகிறார்கள் என்று குறிப்பிட்டது. சாகுபடிப் பணிகளைத் தவிர்த்து இவ் வகைப் பணிகளையும் அவர்கள் ஆற்றுகின்றனர்.

வேளாண்மை உழைப்பாளர் குடும்பம் எத்தகையது என்பதையும் முதல் விசாரணை கீழ்க்காணுமாறு விளக்கியது. 'ஒரு குடும்பத்தின் 50 சதவீதத்தினரோ, அல்லது அதற்கு மேற்பட்டவர்களோ கூலிக்காகத் தங்கள் உழைப்பை வேளாண்மைப் பணிகளுக்குத் தந்தால், அதை வேளாண்மை உழைப்பாளர் குடும்பம் எனலாம். அஃது, அவர்களுடைய முக்கியத் தொழிலாக இருக்க வேண்டும். முக்கியத்தொழில் என்பது அவர்களுடைய வருமானத்தில் 50 சதவீதத்திற்கும் அதிகமாக அளிக்கக்கூடியது. மொத்தம் வேலை செய்யயும் நாட்களில் 50 சதவீததிற்கும் அதிகமாக அவர்கள் அத் தொழிலில் ஈடுபட்டிருக்கவேண்டும்.''

இரண்டாவது விசாரணையில் வேளாண்மை உழைப்பாளர் குடும்பத்தை வரையறை செய்யும்போது வருமானம் அடிப்படையாக எடுத்துக் கொள்ளப்பட்டது. கூலிகளின் மூலமே வேளாண்மை உழைப்பாளர் குடும்பங்கள் வருமானத்தைப் பெறுகின்றன. இரு.விசாரணைகளின் மூலம் அறிய வருவது என்னவென்றால், வேளாண்மை உழைப்பாளர் குடும்பங்கள் அவற்றின் வருமானத்தில் பெரும் பகுதியை வேளாண்மைக் கூலிகளாகப் பெறுகின்றன என்பதேயாம்.

இந்திய மக்கள் தொகைக் கணக்கெடுப்பின்போது வேளாண்மை உழைப்பாளர் பற்றிய விளக்கம் பின்வருமாறு தரப்பட்டது; 'பணம் அல்லது உற்பத்தியில் ஒரு பங்கைக் கூலியாகப் பெற வேளாண்மை உழைப்பாளர் மற்றவர் நிலத்தில் உழைப்பைத் தருகின்றனர். அப்போது, அவர்கள் சாகுபடிப் பணிகளை இயக்குவதோ அல்லது மேற்பார்வை செய்வதோ இல்லை.' இவர் குத்தகையாளர் அல்லர்; நிலத்தின்மீது எந்த உரிமையும் இவருக்குக் கிடையாது. சாகுபடி முறைகளையும், நிலங்களையும் பணிகளையும்

தெரிந்தெடுப்பது இவருடைய வேலையன்று. எப்போது விதை விதைக்க வேண்டும்; நீர்பாய்ச்சவேண்டும்; நாற்றுநட வேண்டும்; களை எடுக்கவேண்டும்; அறுவடை செய்யவேண்டும் என்பதை யெல்லாம், இவர் தீர்மானிக்கத் தேவையில்லை. சாகுபடியில் உள்ள இடர்களை ஏற்பவர் இவரல்லர். உற்பத்தியின் ஒரு பகுதியை இவர் கூலியாகப் பெறுகிறார். இவர் கடந்த அல்லது நடப்புச் சாகுபடிக் காலத்தில் வேளாண்மை உழைப்பாளராக இருக்க வேண்டும்.[1]

இந்திய வேளாண்மை மூன்று பிரிவினர்களைக் கொண்டது. நிலவுடைமையாளர்கள், குத்தகையாளர்கள், வேளாண்மை உழைப்பாளர்கள். இவர்களிடையே அமைந்திருக்கும் பிரச்சினை களுக்குதீர்வு காணவே நிலச் சீர்திருத்தங்கள் செய்யப்படுகின்றன. சில நிலைகளில் வேளாண்மை உழைப்பாளர்கள் ஒருவரிடமுள்ள சாகுபடிப் பண்ணையோடு தொடர்புகொண்டிருப்பவர் இவர். அப் பண்ணை விற்கப்படும்போது புதிய பண்ணை உடைமையாளரின் கீழ் வேளாண்மை உழைப்பாளர்கள் பணியாற்றுவர். தமிழ்நாட்டின் பண்ணையாட்களையும் (Pannaiyals), மத்தியப்பிரதேசத்தின் ஷால்காரிகளையும் (Shalkaris), மஹாராஷ்டிரத்தின் கோலிகளையும் (Colis), பீஹாரின் கம்யாக்களையும் (Kamyas), ஒரிஸ்ஸாவின் சக்கார்களையும் (Chakars) இவ்வகை உழைப்பாளர்களுக்கு உதாரணமாகக் கொள்ளலாம். இவர்கள் யாவரும் நிலவுடைமை யாளர்களோடு 'இணைப்புக் கொண்ட உழைப்பாளர்கள்' (Attached Lalbourers) ஆவர். சாதாரணக் கூலி உழைப்பாளர்களுக்கும் இவர்களுக்கும் வேறுபாடு உண்டு. மற்றவர்கள் குறிப்பிட்ட வேளாண்மைப்பணிகளைச் செய்ய அன்றாடக் கூலியைப் பெறுபவர் களாவர். சாதாரணக் கூலி உழைப்பாளர்கள் எல்லா இடங் களுக்கும் வேலை தேடிச் செல்வர்.

1951 ஆம் ஆண்டில் இணைப்புக் கொண்ட உழைப்பாளர்களின்,' எண்ணிக்கை 10 சதவீதமாக இருந்தது. இது 1957 ஆம் ஆண்டில் 20 சதவீதமாக உயர்ந்துவிட்டது. அக்காலத்தில் 30 சதவீத உயர்வு ஏற்பட்டமைக்குப் பல பெருநிலக்கிழார்கள் சொந்தச் சாகுபடியை மேற்கொண்டதே முக்கியக் காரணமாகும். இவர்கள் நிரந்தரமாகக் கூலியாட்களை நியமித்துச் சாகுபடிப் பணிகளைச் செய்கின்றார்கள். பழைய காலங்களில் ஜமீன்தார்களாக இருந்தவர்களும் இவ்வழி யிலேயே சாகுபடியில் ஈடுபட்டிருந்தார்கள்.

1. Census of India, Paper No. 1, 1962, p. 439.

## வேளாண்மை உழைப்பாளர்களின் பிரிவுகள்

இந்தியாவில் கிராம மக்கள் தொகையின் பெரும் பகுதி வேளாண்மையை மட்டுமே சார்ந்திருக்கின்றது. நம் நாட்டின் மொத்த மக்கள் தொகையில் 80 சதவீதத்தினர் கிராமங்களில் வசிக்கின்றனர்; 70 சதவீதத்தினர் வேளாண்மையில் ஈடுபட்டுள்ளனர்.[1] நிலவுடைமையாளர், குத்தகையாளர், உழைப்பாளர் போன்றோர், குறிப்பிட்ட பணிகளை மட்டும் செய்வதில்லை. வெவ்வேறு பணிகளைச் செய்கிறார்கள். எனவே, தனித்தனியாக ஒவ்வொருவரையும் பற்றிச் சுருக்கமாக விளக்க இயலாது. தொழில் துறையில் முதலாளிகளுக்கும், தொழிலாளர்களுக்கும் இடையே இருக்கும் வேற்றுமைகளைப்போன்று வேளாண்மையில் இருப்பதில்லை.

தொழிலில் உழைப்பாளர்களைத் திறமை குறைந்தவர்கள், நடுத்தரத் திறமையுடையவர்கள், திறமை மிக்கவர்கள் என்று மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம். இந்திய வேளாண்மையில் இவ்விதப் பிரிவுகளுக்கு வழியில்லை. இந்தியாவின் நிலவுடைமைகள் சிறிய அளவில் இருக்கின்றன. இதனால், முன்னேற்றமான தொழில் நுணுக்க உற்பத்தி முறைகளைக் கைக்கொள்ள முடிவதில்லை. எனவே, திறமையான உழைப்பாளர்களுக்கான தேவையும் இருப்பதில்லை. பெரிய எந்திரங்களும், கருவிகளும் பயன் படுத்தப்படும் போதுதான் திறமைமிக்க உழைப்புத் தேவைப்படுகின்றது. நடுத்தரத் திறமை பெற்றவர்களைக் கொண்டும் சாகுபடிப் பணிகளைச் சிறப்பாக நிறைவேற்ற இயலும். பொதுவாகக் கூறுமிடத்து வேளாண்மை, திறமை குறைந்தவர்களால் நடத்தப்படுகின்ற தொழிலே ஆகும். எந்திரங்களை இயக்குவதற்கும்கூட அதிகத் திறமை தேவைப்படுவதில்லை.

'வேளாண்மை உழைப்பு விசாரணைக்குழு' (Agricultural Labour Enquiry Committee) வேளாண்மை, உழைப்பாளர்களைப் பின் வருமாறு பிரிவுபடுத்தியுள்ளது[2]; (i) வயல் உழைப்பாளர்கள் (Field Labourers). (ii) சாதாரண உழைப்பாளர்கள் (Ordinary Labourers), (iii) திறமையான உழைப்பாளர்கள் (Skille Labourers) என்போராவர்.

வயல் உழைப்பாளர்கள் உழுதல், விதை விதைத்தல், நாற்று நடுதல், களை பிடுங்குதல், அறுவடை செய்தல் முதலிய பணிகளைச் செய்கின்றனர். இவர்களில் பெரும்பாலானவர்கள் பருவகாலப்

1. India 1968, p. 221.
2. Report of the Congress Agrarian Reforms Committee, pp. 114-115.

பணிகளையே நிறைவேற்றுகின்றனர்கள்; சிலர் ஆண்டு முழுவதும் வேலை வாய்ப்பைப் பெற்றிருக்கின்றனர்கள்.

சாதாரண உழைப்பாளர்கள் வரப்புகளை அமைத்தல், கிணறுகளைத் தோண்டுதல், தூர் எடுத்தல் முதலிய சில்லறைப் பணிகளில் ஈடுபடுகின்றனர்கள்.

தச்சர்களும், கொல்லர்களும் திறமையான உழைப்பாளர்கள் ஆவர். சாகுபடியாளர்களிடம் இவர்கள் பணியாற்றுகின்றனர். வேளாண்மை உழைப்பாளர்களின் கூலி வீதத்தையே இவர்களும் பெறுகின்றனர்கள்.

வேளாண்மை உழைப்பாளர்கள் திறமையின் அடிப்படையில் பிரிக்கப்பட்டிருக்கின்றனர்கள் என்று கூற முடியாது. சாகுபடி நடவடிக்கைகளுக்கு ஏற்பவே பிரிவுகள் அமைந்துள்ளன. முக்கியமாக, இருவகைப்பட்ட உழைப்பாளர்கள் வேளாண்மையில் தேவைப்படுகிறார்கள். பருவகால பண்ணைப் பணிகளைச் செய்து முடிக்க அதிக எண்ணிக்கையில் உழைப்பாளர்கள் தேவை. ஆண்டு முழுவதும் நிலவுடைமையாளர்களுக்கு உற்பத்தி நடவடிக்கைகளில் உதவவும் நில உழைப்பாளர்களின் பணி அவசியம். சாதாரண வேளாண்மை உழைப்பாளர்கள் குறிப்பிட்ட காலத்திற்குச் சில பணிகளைச் செய்து கூலியைப் பெறுகிறார்கள். இவர்கள் வெவ்வேறு வகைப் பணிகளில் தங்கள் உழைப்பைத் தருகின்றனர்கள்; சந்தை வீதத்திற்கேற்ப கூலிகளைப் பெறுகிறார்கள்.[1]

வேளாண்மை [redacted] பருவகாலத் தொழில். தட்பவெப்ப நிலைகள் மாறிக்கொண்டே இருப்பதால், தொடர்ச்சியான வேலைவாய்ப்புகள் உழைப்பாளர்களுக்கு ஆண்டின் எல்லா மாதங்களிலும் கிடைப்பது கடினம். நிலவுடைமையாளர்களோடு இணைப்புக்கொண்ட உழைப்பாளர்கள் ஒப்பந்தங்களின் மூலம் தொடர்ச்சியான வேலை வாய்ப்பைப் பெறுகின்றனர்கள். பொதுவாக இவ் வொப்பந்தங்கள் வாய் மூலமோ, எழுத்து மூலமோ 3 மாதங்கள் முதல் ஓராண்டு வரை ஏற்படுகின்றன. ஊதிய வீதங்கள் கிடைக்கக்கூடிய பண வசதிகளுக்கு ஏற்பவும், அமைந்திருக்கக்கூடிய பழக்க வழக்கங்களுக்கு ஏற்பவும், உற்பத்தியாகக்கூடிய பொருள்களின் அளவிற்குத் தக்கவாறும் இருக்கின்றன.[2] ஊதியங்கள் நிர்ணயிக்கப்படுவதில் இவ்வாறு [redacted] காரணிகள் செல்வாக்குக் கொண்டுள்ளன.

1. Report [redacted] Intensive Survey of Agricultural Labour, Vol. I, 1955, p. 22.

2. Agricultural Labour [redacted] India, 'Report on the Second Agricultural Labour Enquiry, Vol. I, All-India, p. 107.

உழைப்பாளர்களுக்கான பணிகள், நிபந்தனைகள், ஊதியங்கள் ஆகிய யாவும் பழக்க வழக்கத்திற்கேற்ப வெவ்வேறு இடங்களிலும் மாறுபடுகின்றன. சாதாரண உழைப்பாளர்கள் நிலக்கிழார்களோடு தொடர்பு கொண்ட உழைப்பாளர்கள் ஆகியோர் மேலே குறிப்பிடப்பட்ட இயல்புகளைக் கொண்டிருப்பார்கள் என்று உறுதியாகக் கூற இயலாது. பண்ணையாட்களைத் தினக் கூலியாட்களைப் போன்று நடத்துகின்ற நிலவுடைமையாளர்களும் இருக்கின்றனர். 'சில சமயங்களில் தினக்கூலி உழைப்பாளர்கள் தொடர்ச்சியாக நீண்ட காலத்திற்கு வேலை வாய்ப்பைப் பெறுகிறார்கள். மற்றொரு புறத்தில் இணைப்பு உழைப்பாளர்கள் ஒப்பந்தப்படி குறிப்பிட்ட காலத்திற்குக் கூலியோடு வேலை வாய்ப்பைப் பெறுவதில்லை'.[1]

இரண்டாவது வேளாண்மை உழைப்பாளர் விசாரணைக்குழு வேளாண்மை உழைப்பாளர்கள் சாகுபடிப் பணிகளோடு வேறு வகை வேளாண்மையைச் சார்ந்த பணிகளிலும் ஈடுபடுகின்றனர் என்று குறிப்பிட்டது. வேளாண்மை உழைப்பாளர்க் குடும்பம் அதன் வருமானத்தின் பெரும் பங்கைக் கூலியாகப் பெறுகின்றது.[2] ஒரு குடும்பத்தின் தலைவர் வேளாண்மை உழைப்பாளராக இருந்தாலோ அல்லது அக் குடும்பத்தின் 50 சதவீதத்தினரோ, அதற்கு மேற்பட்டவர்களோ வேளாண்மை உழைப்பைத் தருவதை முக்கியத் தொழிலாகக் கொண்டிருந்தாலோ, அதை வேளாண்மை உழைப்பாளர்க் குடும்பம் எனலாம்.[3] முதல் வேளாண்மை உழைப்பாளர் விசாரணைக்குழு 'ஓராண்டு பணியாற்றுகின்ற மொத்த நாட்களில் 50 சத வீதத்திற்கும் அதிகமாகப் பிறர் நிலங்களில் கூலிக்காகப் பணியாற்றுபவரை வேளாண்மை உழைப்பாளர்' என்று வரையறை செய்தது.

1950—51-ல் 4.30 ஆக இருந்த வேளாண்மை உழைப்பாளர்க் குடும்பத்தின் சராசரி அளவு, 1956—57-ல் 4.40 ஆக உயர்ந்தது. ஒரு குடும்பத்தில் கூலி பெற்றவர்களின் சராசரி எண்ணிக்கை 2.03 ஆக இருந்தது. அதில், 1.13 ஆண்களும், 0.74 பெண்களும் 0.16 குழந்தைகளும் இருந்தார்கள். 1950 - 51 ஆம் ஆண்டிற்கான கூலி பெற்றவர்களின் சராசரி எண்ணிக்கை 2.0 ஆகும். அதில் 1.1 ஆண்களும், 0.8 பெண்களும், 0.1 குழந்தைகளும் இருந்தனர்.

1 V.K.R.V. Rao (Edited), Agricultural Labour in India, 'Studies in Economic Growth,' No. 3, 1962, p. 123.

2 Labour year Book, 1960 (1961), p. 316.

3 Agricultural wages in India, Vol. I, 1952, p.1; Rural Man Power and Occupational Structure, 1954, p. 449.

வேளாண்மை உழைப்பாளர் விசாரணைக் குழு 'இணைப்பு உழைப்பாளருக்கும்' (Attached lobourer) சாதாரண உழைப்பாளருக்கும்' (Casual labourer) உள்ள வேறுபாடுகளை விளக்கியது. இணைப்பு உழைப்பாளர் பண்ணையாளரிடமே தொடர்ந்து வேலை பார்த்து வருகிறார். பெரும்பாலும், அவர் பிற வேலைவாய்ப்புகளை நாடிச் செல்வதில்லை. 'சாதாரண உழைப்பாளர்' ஒரு வேலையை விட்டுவிட்டுத் தன் விருப்பம்போல் மற்றொரு வேலையில் ஈடுபடலாம். சந்தை நிலவரத்திற்கேற்ப கூலி வீதம் அமைகின்றது.[1] இவ் விருவகை உழைப்பாளர்களும் பணியாற்றும் காலத்தின் அடிப்படையில் வேறுபடுத்தப்படுகிறார்கள். உதாரணமாக அஸ்ஸாமில் 'இணைப்பு உழைப்பாளர்' மாத அடிப்படையிலோ, ஆண்டு அடிப்படையிலோ ஊதியத்தைப் பெறும்போது, சாதாரண உழைப்பாளர், தினக்கூலியைப் பெறுகின்றார்.[2] சாகுபடிக் காலங்களில் மட்டுமே குறுகிய காலத்திற்குத் தினக்கூலி உழைப்பாளர்கள் அமர்த்தப் படுகின்றனர். தமிழ் நாட்டில் இணைப்பு உழைப்பாளர்கள் ஆண்டு முழுவதுமோ அல்லது 3 முதல் 6 மாதங்கள் வரையிலான சாகுபடிக் காலங்களிலோ பணியாற்றுகின்றார்கள். சாதாரண உழைப்பாளர்கள் சாகுபடிச் சமயங்களில் தினக்கூலி முறையின் அடிப்படையில் உழைப்பைத் தருகின்றனர்.[3] பீஹாரில் இருவகைப்பட்ட வேளாண்மை உழைப்பாளர்களும் தினக் கூலியையே பெறுகின்றார்கள்.[4] இதைப் போன்றே ராயலசீமா பகுதியில் இணைப்பு உழைப்பாளர்கள் ஓராண்டுக்கு ஒப்பந்தம் செய்யப்பட்டாலும், அன்றாடக் கூலியையே பெறுகின்றனர்.[5]

## வேளாண்மைப் பண்ணையாட்கள் (Agricultural Serfs)

பண்ணையாட்களுக்கும், வேளாண்மை உழைப்பாளர்களுக்கும் இடையே அதிக வேறுபாடுகள் இல்லை. பண்ணையாள்முறை மிகவும் தாழ்த்தப்பட்ட மக்கள் வாழும் இடங்களில் இன்றும் உள்ளது. பின்தங்கிய வகுப்பினர் மிகுதியாக வசிக்கும் பகுதிகளில் பண்ணையாட்கள் இருக்கின்றார்கள். அவர்களுடைய நிலை, மிகவும் தாழ்வாக உள்ளமைக்குக் கிராமச் சமுதாய அமைப்பில் உள்ள குறைபாடுகளே காரணமாகும். இதனால், குஜராத்,

[1] Report of the Intensive Survey of Agricultural Labourer, Vol I, 1955, p. 22; Agricultural wages in India, p. 400

[2] Agricultural wages in India p. 55.

[3] Ibid, p. 11.

[4] Ibid, p. 68.

[5] Ibid, p. 120, 151, 165, 182.

மஹாஷ்ட்டிரம், கேரளம், தமிழ்நாடு, மலபார், மத்தியப்பிரதேசம், நாக்பூர் முதலிய இடங்களில், வேளாண்மை உழைப்பாளர்கள் அடிமைகளைப்போல இருக்கின்றனர்.

ஓர் அரசாங்க அறிக்கை வேளாண்மை உழைப்பாளரைப் பற்றிப் பின்வருமாறு விவரிக்கின்றது. 'சராசரி வேளாண்மை உழைப்பாளர் அடிக்கடி தம் சொந்தச் சுதந்திரத்தை அடைமானம் வைக்க வேண்டியுள்ளது. குறைந்த அளவில் கடன் பெறுகின்ற தருணத்தில் அவர் கடனளிப்பவரிடம் பணியாற்றுவதாக ஒப்புக் கொள்கின்றார். கடன் பணம் திருப்பித் தரப்படுவதில்லை; திருப்பிப் பெறுவதற்காகவும் கடன் அளிக்கப்படுவதில்லை. இதன் விளைவாகக் கடன் பெற்றவர் கடன் அளித்தவரிடம் ஆயுட்காலம் முழுவதும் அடிமையைப்போல வாழ்கிறார். அவர் செய்கின்ற சிறப்பான பணிகளுக்கு ஏற்ப, உயர்வான வருமானம் பெறுவது மில்லை. இடைக்கால அடிமையைப்போன்றே அவருடைய நிலை அமைந்துள்ளது.[1]

வேளாண்மைப் பண்ணையாட்கள் பல்வேறு இடங்களிலும் வெவ்வேறு பெயர்களில் அழைக்கப்படுகின்றனர். அவர்கள் குஜராத்தில் 'ஹாலி' (Hali), தென் பீஹாரில் 'கைமுட்டி' (Kaimuti), வட பீஹாரில் 'ஜநௌரி' (Janouri), ஒரிஸ்ஸாவில் 'கோத்தி' (Gothi), தமிழ்நாட்டில் 'பண்ணையாள்–அதிரம்' (Pannial-athiram), ஆந்திரத்தில் 'காசிக்குல்லு' (Gassigullu), ஹைதராபாத்தில் 'பாகியா' (Bhagia), மத்திய இந்திய மாநிலங்களில் 'ஹார்வா' (Harwah), கர்நாடகத்தில் 'ஃபீத்தன்' (Feethan), மத்தியப் பிரதேசத்தில் 'பார்சாலியா' (Barsalia), 'ஷால்காரிஸ்' (Shalkaris), ஒரிஸ்ஸாவில் 'சக்கார்' (Chakar), கிழக்குத் தமிழ்நாட்டில் 'படியாள்' (Padiyal), பம்பாயில் 'டுப்லாய் கோலிஸ்' (Dublai kolis) ராஜஸ்தானில் 'சகாரி' (Sagari) என்ற பெயர்களில் வழங்கப்படு கின்றனர். முதலாளிகளின் இல்லங்களிலும் இவர்கள் பணியாற்று கின்றனர்.

கடனைத் தீர்க்கும்வரை உழைப்பாளர்கள் அடிமைகளைப் போன்று வாழவேண்டிய தவிர்க்கமுடியாத நிலை அமைந்துள்ளது. உதாரணமாக அவர்கள் திருமணம் முதலிய சடங்குகளுக்காக நிலக்கிழார்களிடம் கடன் வாங்கக்கூடும். கடனைத் திருப்பித் தரும்வரை அவர்கள் தங்களுடைய சுதந்திர நிலையை இழந்து விடுகின்றார்கள். பணியாற்றும் காலத்தில் உணவும் உடையும் முதலாளிகளால் வழங்கப்படுகின்றன. ஆனால், அவற்றின் மதிப்பு

[1] Quoted by Dinker Desai, Agrarian Serfdomin Indian Soliologist, July 1947.

உழைப்பாளர்களின் உழைப்போடு ஒப்பிடும்போது மிகக் குறைவானதே.

தமிழ்நாட்டின் கிழக்குப் பகுதியில் வாழ்வோர் 'பறையர்கள் (Pariabs), படியாட்கள் (Padiyals) என்று அழைக்கப்படுகின்றனர். இவர்களும் வேளாண்மை உழைப்பாளர்களே ஆவர். படியாள் என்பவர் முன்னர்ப் பெற்ற கடனுக்காகப் பல தலைமுறைக்கு நிலவுடைமையாளரிடம் அடிமைபோன்று சேவை செய்யக்கூடியவர் ஆவர். மூதாதையரின் கடனைத் திருப்பித்தர இயலாத நிலைக்காகப் படியாட்கள் நிலக்கிழார்களிடம் அடிமைகளைப் போன்று பணி புரிகின்றனர். ஒருவர் தம் திருமணத்திற்காகவோ அல்லது தன்னுடைய மகன், மகள் திருமணத்திற்காகவோ கடன் பெறக்கூடும். அக் கடன் திரும்பத் தரப்படும்வரை அவர் கடன் தந்தவரிடம் பணியாற்றவேண்டும். பெரும்பாலும் இவ் வகைக் கடன்கள் திருப்பித் தரப்படுவதில்லை; திருப்பித்தரும் திறனையும் 'படியாட்கள்' பெற்றிருப்பதில்லை. சிலர் தங்களிடம் உள்ள குறைந்த அளவு நிலத்தையும் அடைமானமாக வைத்துக் கடன்பெறுவதும் உண்டு. கடனைத் தீர்க்க முடியாமல் போகும்போது அவர்கள் தங்களுடைய நிலச்சொத்தையும் இழக்கின்றனர்கள். தமிழ்நாட்டில் படியாட்களின் கூலி தானியமாகத் தரப்படுகிறது. பணமதிப்பில் குறிப்பிட்டால் இது மாதம் ஒன்றிற்கு மூன்று ரூபாய்க்குச் சமம்.

ஒரிஸ்ஸாவில் மூன்று வகைப்பட்ட உழைப்பாளர்கள் இருக்கின்றனர்.

1. 'சக்கார்' (Chakar) அல்லது 'பரமசியா' (Baramasiya) என்னும் உழைப்பாளர்களுக்கு ஆண்டின் 12 மாதங்களும் உணவும், இருக்க இடமும் அளிக்கப்பெறுகின்றன. அவர்கள் பெறும் ஆண்டுக் கூலி ரூ. 24 மட்டுமேயாகும். மூதாதையர் பெற்ற கடனுக்காகவும் அவர்கள் இவ்வித அடிமை நிலையைக் கொண்டுள்ளனர்.

2. 'நாகமூலியா' (Naga Muliya) என்பவர்கள் ஆண்டு முழுதும் பணியாளராக இருக்கின்றனர். உணவும் இருக்க இடமும் அளிக்கப்படுவதற்குப் பதிலாக இவர்களுக்கு 4 சேர்கள் நெல் தரப்படுகிறது. இதைத் தவிர வாரமில்லாத நிலமும் சாகுபடி செய்வதற்காக அளிக்கப்படுகின்றது.

3. 'தாந்த முலியா' (Danda muliya) என்ற உழைப்பாளர்கள் குறுகிய காலத்திற்குக் குறிப்பிட்ட ஊதியத்தில் பணியாற்று[redacted] றனர்.

பீஹாரில் 'காமியாஸ்' (Kamias) அல்லது 'கடன்பத்திரப் பணியாளர்கள்' (Bond-servants) இருக்கின்றனர்கள். இவர்கள் கடனளிக்கும் முதலாளிகளுக்காக எவ்விதத் தாழ்வான பணியையும் செய்யவேண்டியுள்ளது. இவ்விதத் தாழ்த்தப்பட்ட சாதியினர் நிலத்தையோ, பிற சொத்துகளையோ உடைமையாகக் கொண்டிருப்பதில்லை. எனவே, கடன் பெற அவர்கள் உழைப்பையே அடைமானமாக வைக்கின்றனர். அவர்களுடைய சந்ததியினரும் அவர்களைப் போன்றே அடிமை வாழ்வு வாழ வேண்டியிருக்கின்றது. கணவனும், மனைவியும் ஒருங்கிணைந்து உழைத்தாலும் அவர்களும் அவர்களின் குழந்தைகளும் உண்ணுவதற்குப் போதுமான உணவைக்கூடப் பெறமுடிவதில்லை.

தெற்குக் குஜராத்தில் 'ஹாலிஸ்' (Halis) என்னும் உழைப்பாளர்கள் கடனைத் திருப்பித் தர முடியாமையால், பல ஆண்டுகளாகக் கடன் அளித்தவர்களுக்காக உழைத்து வருகின்றனர்கள். அவர்களில் பலர் தங்களுடைய ஆயுட்காலத்திற்குள்ளாகக்கூடக் கடனை அடைக்க முடிவதில்லை. கடன்பட்ட உழைப்பாளர்களாகிய அவர்கள், எல்லா உரிமைகளையும் இழந்து, அடிமைகளைப்போல வாழ்கின்றனர்.[1] தபதி நதிப் பகுதியில் சுமார் ஓர் இலட்சம் பண்ணை உழைப்பாளர்கள் இருக்கின்றனர்கள். கொடுமையான நிலையினின்றும் மீள அவர்கள் ஆண்டுதோறும் முயலுகின்றனர். மீள்வதற்கான வழி சாவிலோ அல்லது கிராமத்தைவிட்டுத் தூர இடத்திற்கு ஓடுவதிலோ மட்டுமே உள்ளது.[2]

## கட்டாய உழைப்பு (Forced Labour)

கட்டாய முறையின் அடிப்படையில் உழைப்பைப் பெறுகின்ற நிலை இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலும் இருக்கின்றது. விருப்பமின்றியே பல உழைப்பாளர்கள் சிலரிடம் கட்டாயமாக உழைப்பைத் தர வேண்டிய நிலை அமைந்துள்ளது. வேளாண்மை உழைப்பாளர் விசாரணைக் குழு அவர்களைப் 'பெகார்' (Begar) என்று குறிப்பிடுகின்றது. நம் வேளாண்மைப் பொருளாதாரத்தில் உள்ள தனி இயல்பு இஃது என்று அது கூறுகின்றது. நீண்டகாலத்திற்கு 'இணைப்பு உழைப்பாளர்களைத்' தொடர்ந்து பணியாற்றுமாறு செய்ய நிலவுடைமையாளர்கள் கடன் அளிக்கின்றனர்கள். அது வட்டியில்லாத கடனாக இருக்கின்றது. அல்லது வாரமில்லாத நிலத்தையும் அவர்கள் தருகின்றனர்கள். உழைப்பாளர்கள் 'கடனைத் திருப்பித்தரும் திறனைக் கொண்டவர்களாக இருப்பதில்லை.

1 Agricultural Labour Enquiry Committee Report, Vol. I, p. 45.

2 Bombay Census Report, 1921, Pt. I, p. 20.

இதன் காரணமாக அவர்கள் கூலிபெருமலோ அல்லது சிறிதளவு கூலி மட்டும் பெற்ருே உழைப்பைக் கட்டாயமாகத் தரவேண்டியவர்களாகின்றனர்.[1]

பீஹார், வங்காளம் ஆகிய மாநிலங்களில் சட்ட விரோதமான வழிகளில் வேளாண்மை உழைப்பாளர்கள் சுரண்டப்படுகின்ருர்கள். திருமணங்களை நடத்துவதற்காகவும், சில வகை வாணிபங்களில் ஈடுபடுவதற்காகவும் உழைப்பாளர்கள் கடன் பெறுகின்றனர். இந்த நிலை அவர்களைப் பாதி-அடிமைகளாக்கி விடுகின்றது. குறைந்த வருமானத்தைப் பெறும் அவர்களால் கடனை மீட்க முடிவதில்லை. 'அப்வாப்ஸ்' (Abwabs) எனப்படும் இவர்கள் நிதியுதவி அளிக்கப்பட்டுச் சுரண்டப்படுகின்ருர்கள். இவர்களுடைய உழைப்பை நிலக்கிழார்கள் கசக்கிப் பிழிந்தெடுக்கின்றனர். லேவாதேவிக்காரர்களும் (Money - lenders) படிப்படியாகச் சாகுபடியாளரை நிலத்தை விட்டு வெளியேற்றி விடுகின்றனர். சிறிய நிலவுடைமையாளர்கள் குத்தகையாளர்களாகவும், குத்தகையாளர்கள் கூலி உழைப்பாளராகவும் மாற்றப்படுகின்றனர். இந்தியாவில் வேளாண்மை அடிமைத்தனம் இன்னும் நீக்கப்படவில்லை.

**கிராம உழைப்பிற்கான தேவை**

பருவகால மாற்றங்களுக்கேற்ப வேளாண்மையில் உழைப்பின் தேவை உள்ளது. அறுவடைக் காலங்களில் அதிக எண்ணிக்கையில் உழைப்பாளர்கள் தேவைப்படுகின்றனர். அதற்கு அடுத்தபடியாக நாற்று நடுதல், களை பிடுங்குதல் முதலிய காலங்களிலும் உழைப்பு அதிக அளவில் தேவைப்படுகிறது. சாகுபடி செய்யப்படும் பயிர்கள், சாகுபடி முறையின் தன்மை, நிலவுடைமையின் அளவு ஆகியவற்றிற்கேற்ப உழைப்பிற்கான தேவை மாறுபடுகின்றது. உதாரணமாக குஜராத் மாநிலத்தின் 'கானம்' (Kanam) பகுதியில் 25 பீகாஸ் நிலவுடைமையைக் கொண்டிருக்கும் ஒரு விவசாயி, பருத்தி, புகையிலை, பருப்பு வகைகள் முதலியவற்றைச் சாகுபடி செய்யும்போது கூலி உழைப்பாளர்கள் தேவைப்படுவதில்லை. எல்லாப் பணிகளையும் குடும்ப அங்கத்தினர்களே கவனித்துக்கொள்ளுகின்றனர். ஆனால், சூரத் பகுதியில் அதே அளவு நிலத்தை உடைமையாகக் கொண்டுள்ள ஒருவர் கூலி உழைப்பாளர்களை அமர்த்தி உற்பத்தி நடவடிக்கைகளைச் செய்ய வேண்டியுள்ளது.

[1] J.B. Shukla, Life and Labour in Gujarat Taluka, p. 118.

உடல் உழைப்பைத் தேவையாகக் கொண்டு உழுதல், நிலத்தைச் சமன் செய்தல், கிணறுகளைத் தோண்டுதல், வரம்புகளை அமைத்தல், சாகுபடி நிலத்திற்கு நீர் பாய்ச்சுதல் முதலிய உற்பத்திப்பணிகளில் ஆண்கள் ஈடுபடுகின்றார்கள். விதை விதைத்தல், நாற்று நடுதல், களை பிடுங்குதல் முதலியவற்றில் பெண் உழைப்பாளர்களைப் பயன்படுத்தலாம். ஏனெனில், அவர்களுக்கான கூலி குறைவானதேயாகும், பொதுவாகப் புன்செய் நிலங்களில் மழையின் மூலமும், நன்செய் நிலங்களில் கால்வாய்களின் மூலமும் சாகுபடிக்கான தண்ணீர் பெறப்படுகின்றது. இவ்வகை நிலங்களில் பெண் உழைப்பாளர்கள் அதிக எண்ணிக்கையில் தேவைப்படுகிறார்கள். 'தோட்ட நிலங்களுக்கு' (Garden Lands) கிணற்று நீர்ப்பாசனம் அமைந்திருக்கக் கூடும். இந்த நிலைகளில் எருதுகள் பூட்டிக் கபிலை ஏற்றமிட்டு நீர் பாய்ச்ச ஆண் உழைப்பாளர்களே தேவைப்படுகிறார்கள். பெண்களின் உழைப்பு அங்குத் தேவை குறைந்ததாகின்றது. களை எடுக்கவும், உரம் தூவவும், பயிர்களுக்குக் காவலாக இருக்கவும், வண்டிகள் ஓட்டவும் சிறுவர்களின் உழைப்பைப் பயன்படுத்துகின்றார்கள்.[1] குஜராத்தின் 'ஃபில் (Bhil) பகுதிகளில் இன்றும்கூட சாகுபடிப்பணிகளில் உறவினர்களும், நண்பர்களும் உதவுகின்றார்கள். இவர்கள் ஒவ்வொருவரும் மதியத்தில் ½ பவுண்டு வேகவைத்த சோளத்தையும், காலை மாலைகளில் இல்லத்தில் வேறு உணவையும் உட்கொள்ளுகின்றனர்.

பெரும்பாலும் விவசாயக் குடும்பங்களின் உறுப்பினர்களே வயல்வெளி வேலைகளுக்குத் தேவையான உழைப்பில் பெரும் பகுதியை அளிக்கின்றார்கள். எப்போதாவது மட்டுமே கூலி உழைப்பாளர்கள் அமர்த்தப்படுகின்றனர். ஓராண்டில் பயன்படுத்தப்படும் மொத்த உழைப்பில் கூலியாட்களின் உழைப்பு 10 முதல் 20 சதவீதமாக மட்டுமே உள்ளது. சில காலங்களில் கூலி உழைப்பாளர்கள் அதிக அளவில் தேவைப்படுவதும் உண்டு. வசதியற்ற ஏழை விவசாயிகள் உழைப்பாளர்களைக் கூலி கொடுத்து நியமிக்க முடிவதில்லை. இதனால், உற்பத்தியைப் பெருக்கும் வாய்ப்பு இழக்கப்படுகின்றது. பெரிய விவசாயிகள் வசதி மிக்கவர்களாக இருப்பதால் தேவையானபோது கூலி உழைப்பாளர்களின் உழைப்பைப் பெறுகின்றார்கள் உற்பத்தி உயர இது வழிவகுத்துத் தருகின்றது.

### உழைப்பின் அளிப்பு

கிராமங்களில் உள்ள சாதி முறைக்கும் வேளாண்மை நடவடிக்கைகளுக்கும் நெருங்கிய தொடர்பு அமைந்துள்ளது.

1 Agrarian Reforms Committee Report, pp. 114-115.

பல நிலைகளிலும் குறிப்பிட்ட சாதியினர் குறிப்பிட்ட தொழிலில் ஈடுபட்டிருப்பதை அறியலாம். இது கிராமப் பொருளாதாரத்தைப் பொறுத்தது. ஆனால், நகரங்களில் வெவ்வேறு வகைத் தொழில்கள் வளர்ந்து வளருகின்றன. இங்குச் சாதியின் அடிப்படையில் தொழில்கள் செய்யப்படுவதில்லை. வேளாண்மை உழைப்பின் அளிப்பில் உள்ள தன்மைகள் பின்வருமாறு அமைகின்றன.

1. சொந்தச் சாகுபடியாளர்களும், பெரிய குத்தகையாளர்களும் உயர் சாதிகளைச் சார்ந்தவர்களாக இருக்கின்றனர். பரம்பரைப் பரம்பரையாக அவர்கள் இதே தொழிலைச் செய்பவர்களாவர். பிராமணர்கள், ராஜபுதனர்கள் (Rajputs), தாக்கூர்கள் (Thakurs), கயாஸ்தாஸ், (Kayasthas), தாகாஸ் (Thagas), சயத்ஸ் (Syeds), பதன்ஸ் (Pathans), முதலியோர் இப் பிரிவைச் சார்ந்தவர்களாவர்.

2. பண்ணையாளர்கள் உயர்சாதியினராகவும், தாழ்ந்த சாதியினராகவும், இருக்கலாம். பெரும்பாலும் அவர்கள் வேலையளிப்பவரின் சாதியினராகவே இருப்பர். இவ்வகுப்பைச் சார்ந்தவர்களில் அதிக வீதத்தினர் வேளாண்மையை முக்கியத் தொழிலாகக் கருதுவர். வேளாண்மை இவர்களுடைய பரம்பரைத் தொழிலாக இருக்கவேண்டுமென்பது அவசியமில்லை. சீக்கியர்கள் (Sheikhs), பதன்ஸ் (Pathans), குன்பிஸ் (Kunbis), வைஷ்வாஸ் (Vaishvas), குஜார்ஸ் (Gujars), அஹிர்ஸ் (Ahirs), ஜாட்ஸ் (Jats), ஆகியோர் இவ் வகுப்பைச் சேர்ந்தவர்களாவர்.

3. வயல் உழைப்பாளர்கள் தாழ்ந்த சாதியினராக இருக்கின்றனர். வேளாண்மை அவர்களுக்கு உபதொழிலாகவே உள்ளது. ஜுலாஹாஸ் (Julahas), லோத்ஸ் (Lodhs), சமார்ஸ் (Chamars), கும்ஹார்ஸ் (Kumhars), டெலிஸ் (Telis), காட்டிக்ஸ் (Khatiks), கோரிஸ் (Koris) ஆகிய சாதியினர் வயல் உழைப்பாளர்களாக உள்ளனர்.

4. நிலமற்ற உழைப்பாளர்கள் சமுதாயத்தின் மிகத் தாழ்ந்த மட்டத்தில் உள்ள கீழ்ச் சாதிகளைச் சேர்ந்தவர்களாவார்கள். அவர்கள் மிக வறிய நிலையைக் கொண்டவர்கள். டோம்ஸ் (Doms), துசாத்ஸ் (Dusadhs), புயாஸ் (Bhuiyas), பஹரியர்கள் (Pahariyas), திமார்ஸ் (Dhimars), கட்வாரா (Ghatwara), கோல்ஸ் (Kols), கோரிஸ் (Koris) ஆகிய சாதியினர் இவ் வகுப்பைச் சார்ந்தவர்கள்.

கிராமங்களில் பூசல்கள் மிகுதியாக உள்ளமைக்குச் சாதி வேறுபாடுகள் முக்கியக் காரணமாகிறது. 'ஒன்று எங்கள் சாதியே; ஒன்று எங்கள் நீதியே; உழைக்கும் மக்கள் யாவரும் ஒருவர் பெற்ற மக்களே' என்ற எண்ணத்தைப் பொது மக்கள் அனைவரும் கொண்டிருக்கவேண்டும்.

## வேளாண்மை உழைப்பாளர்களின் தோற்றமும் முன்னேற்றமும்

பத்தொன்பதாம் நூற்றுண்டுக்கு முன்னர், இந்தியாவின் பாரம்பரிய வேளாண்மைச் சமுதாயத்தில் வேளாண்மை உழைப்பாளர்கள் முக்கிய இடத்தைப் பெற்றிருக்கவில்லை. வேளாண்மை உழைபாளர்களின் பிரிவு அப்பொழுது இருந்தமைக்கான சான்றுகள் இல்லை. 1842ஆம் ஆண்டில் இந்தியாவில் நிலமற்ற விவசாயிகள் இல்லை என்பதைச் சர் தாமஸ் மன்றோ குறிப்பிட்டுள்ளார்.[1] சர் ஜார்ஜ் கேம்பெல் (Sir George Campbell) என்பவரும் அப்பொழுது கூலியாட்கள் பண்ணைச் சாகுபடி நடவடிக்கைகளைச் செய்யவில்லை என்பதை விளக்கி இருக்கின்றார்.[2] பிற ஆய்வுகளும் பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதிவரை வேளாண்மை உழைப்பாளர்கள் இல்லை என்பதை உறுதிப்படுத்துகின்றன. சிறிது காலம் சென்று அவர்கள் மொத்தக் கிராமமக்கள் தொகையில் சுமார் 10 சதவீதம் என்ற அளவில் மட்டுமே இருந்தார்கள்.

1868 ஆம் ஆண்டில் பஞ்சாபில் எடுக்கப்பட்ட கணக்கின்படி 9,256,000 என்ற அளவில் இருந்த மொத்த வேளாண்மை மக்கள் தொகையில், வேளாண்மை உழைப்பாளர்களின் எண்ணிக்கை 231,500 மட்டுமேயாகும். இது வேளாண்மை மக்கள் தொகையில் 3 சதவீதமாகும்.[3] தமிழ் நாட்டில் செய்யப்பட்ட 1871ஆம் ஆண்டுக் கணக்கெடுப்பின்படி, அவ் வாண்டில் 13 சதவீத ஆண்கள் உழைப்பாளர்களாக இருந்தனர். அவர்களுள், நான்கில் மூன்று பகுதியினருக்கும் மேற்பட்டவர்கள் வேளாண்மையில் ஈடுபட்டிருந்தவர்களாவர்.[4] இவற்றின்மூலம் மிகப் பழைய காலங்களில் வேளாண்மையை முக்கியத் தொழிலாகக்கொண்ட கூலி உழைப்பாளர்கள் கணிசமான அளவில் இல்லை என்பதை அறியலாம். அப்போது இந்தியா பின்தங்கிய வறிய நாடாக இருந்திருக்க

1 R.C. Dutt, India To - day, 1947, p. 198.

2 George Campbell. Modern India, 1852, p. 65.

3 Census of Punjab, 1868, Table No. 4.

4 Census of Madras 1871, p. 117.

வில்லை.[1] அக் காலங்களில் மக்கள் இரங்கத்தக்க தாழ்வான நிலையைக் கொண்டிருக்கவில்லை. மக்கள் தொகை குறைவாக இருந்த அந்த நாட்களில் வேளாண்மையைச் சார்ந்தவர்களின் எண்ணிக்கையும் குறைவாக இருந்தது.

கிராமச் சமுதாயத்தில் உபரி வேளாண்மை உழைப்பாளர்கள் தோன்றிய நிலைமை, மோசமடைந்தமைக்கு ஆங்கிலேயரின் எதேச்சாதிகாரம் முக்கிய காரணமாயிற்று. அந்நியரின் ஆட்சிக் கொள்கைகளில் இருந்த குறைபாடுகளால் பல சீர்க்கேடுகள் விளைந்தன. ஆங்கிலேயர்கள் பல தொழில் பொருள்களை நம் நாட்டில் குறைந்த விலைக்கு விற்றனர். இதன் காரணமாக இந்தியாவில் கிராமங்களில் இருந்த சிறு தொழில்களும், குடிசைத் தொழில்களும் நசித்தன. இங்கிலாந்து இந்தியாவின்மீதிருந்த பிடியை மேலும் இறுக்கியது. அதன் பின்னர், கைத்தொழில் வினைஞர்கள் இங்கிலாந்தின் எந்திரமயமாக்கப்பட்ட பெரிய தொழில்களால் அவதியுற்றனர். இந்தியாவின் தொழில் முன்னேற்றம் பெரிதும் பாதிக்கப்பட்டது. வேளாண்மையைச் சார்ந்தே பலரும் வாழ வேண்டிய நிலை தோன்றியது.

சிறு தொழில்கள் பலவும் நலிவுற்றமையால் வேளாண்மை வேலைகளை நாடிப் பலரும் கிராமங்களுக்குச் சென்றனர். இங்கிலாந்தின் தொழில் பொருள்கள் இங்கு விற்கப்பட்டமையால், பாதிக்கப்பட்ட கொல்லர்கள், தச்சர்கள், கைவினைஞர்கள், கைத்தறியாளர்கள் முதலியோர் வேறு வழியின்றி வேளாண்மையிலேயே ஈடுபட்டனர். இந்த நிலைகளால் கிராமப் பொருளாதாரம் அதிக அளவிற்குப் பாதிக்கப்பட்டது. வேளாண்மை வளர்ச்சி குன்றியது; மக்களின் வாழ்க்கைத்தரம் வீழ்ச்சியுற்றது. 'ஆங்கிலேயரின் ஆட்சி இடைப்பட்டமையாலும், இங்கிலாந்து நாட்டு வணிகர்களின் பேராசையாலும் இந்தியாவின் பொருளாதாரப் புரட்சி திடீரென்று துண்டிக்கப்பட்டது. இதனால், நாடு இடைக்காலப் பொளாதாரத் தேக்கநிலையை நோக்கித் தள்ளப்பட்டது; நாட்டு மக்கள் நிரந்தரப் பசியால் வாடினர்.'[2]

மேற்குறிப்பிடப்பட்டவற்றின் அடிப்படையில் ஆராய்ந்தால், ஆங்கிலேய ஆட்சியால் வேளாண்மை உழைப்பாளர்கள் தோன்றினர் என்பதை எளிதில் உணரலாம். வேளாண்மை, தொழில் ஆகிய

1 Report of the Indian Industrial Commission, 1918 p. 6.

2 de Josue De Castro, Geography of Hunger, 1952, pp. 157-58.

இரண்டையும் சமமாக வளர்த்து வந்த இந்தியாவில் ஆங்கிலேயர்களால் மாற்றம் ஏற்பட்டது. ஆங்கிலேயத் தொழில் முதலாளித்துவத்தின் வேளாண்மைக் காலனியாக இந்தியா மாற்றப்பட்டது.[1]

### வேளாண்மை உழைப்பின் வலிமையும், வளர்ச்சியும்

கடந்த 80 ஆண்டுகளில் வேளாண்மை உழைப்பாளர்கள் அதிக அளவில் பெருகியுள்ளார்கள். 1881ஆம் ஆண்டுக் கணக்கெடுப்பின்படி வேளாண்மையில் இருந்த நிலமற்ற உழைப்பாளர்களின் மொத்த எண்ணிக்கை 7.5 மில்லியனாகும். இது 1891-ல் 18.7 மில்லியனாகவும், 1921-ல் 21.6 மில்லியனாகவும் உயர்ந்தது.

1961ஆம் ஆண்டில் எடுக்கப்பெற்ற கணக்கு, பயிர்ச் சாகுபடியில் ஈடுபட்டிருந்த வேளாண்மை வேலையாட்களின் எண்ணிக்கை 131 மில்லியன் என்று குறிப்பிட்டது. சாகுபடியாளர்கள் 99.5 மில்லியனாகவும், வேளாண்மை உழைப்பாளர்கள் 31.5 மில்லியனாகவும் இருந்தனர். 1951ஆம் ஆண்டில் சாகுபடியாளர்கள் 70 மில்லியனாகவும், வேளாண்மை உழைப்பளர்கள் 28 மில்லியனாகவும் இருந்தனர். இவை முறையே 43 சதவீத, 14 சதவீத உயர்வுகளாகும்.[2]

சாகுபடியாளர்களின் உயர்வு தமிழ்நாட்டில் 95%, ஆந்திராவில் 85%, மத்தியப் பிரதேசத்தில் 81%, மைசூரில் 80%, குஜராத், மஹாராஷ்டிர மாநிலங்களில் 60%, ஒரிஸ்ஸாவில் 53%, மேற்கு வங்காளத்தில் 39%, ராஜஸ்தானில் 36%, பீஹாரில் 27%, என்ற அளவுகளில் இருந்தது. 1951 முதல் 1961 வரை அதிக உயர்வு ஏற்பட்டமைக்குப் பெண் உழைப்பாளர்களின் பெருக்கமே காரணம். குறிப்பாக ஆந்திரம், மைசூர், தமிழ்நாடு, மத்தியப் பிரதேசம், ஒரிஸ்ஸா ஆகிய மாநிலங்களில் பெண் உழைப்பாளர்கள் அதிகரித்தனர்.

வேளாண்மை உழைப்பாளர்களின் அதிகரிப்புத் தமிழ்நாட்டில் 45%, உத்தரப் பிரதேசத்தில் 62%, ஆந்திராவில் 39%, அஸ்ஸாமில் 48%, மைசூரில் 31%, ஒரிஸ்ஸாவில் 29%, என்ற அளவிலும், வேளாண்மை உழைப்பாளர்களின் குறைவு மத்தியப்பிரதேசம், ராஜஸ்தான் ஆகிய மாநிலங்களில் சுமார் 35%, பஞ்சாபில் 23%, என்ற அளவிலும் இருந்தன.

1 Charan Singh, India's Poverty and its Solution, 1964, p. 207.

2 Census of India, Paper No. 1 of 1962, p. 43) and Table 9, p. 438.

19ஆம் நூற்றாண்டின் இறுதியில் வேளாண்மை உழைப்பாளர்கள் மொத்தக் கிராம மக்கள் தொகையில் சுமார் 10% என்ற அளவிலேயே இருந்தனர். அதற்கு அடுத்த 50 ஆண்டுகளில் அவர்களின் எண்ணிக்கை விரைவாக அதிகரித்தது. 1951ஆம் ஆண்டில் அவர்களுடைய எண்ணிக்கை மொத்தக் கிராம மக்கள் தொகையில் 30% ஆக இருந்தது.[1]

சாகுபடியாளர்கள் பொதுவாக அதிகரிக்கின்ற நிலையில், வேளாண்மை உழைப்பாளர்கள் சில மாநிலங்களில் குறைந்துள்ளார்கள். இரண்டாவது விசாரணை அறிக்கை (1956-57) அவ் வாண்டில் வேளாண்மை உழைப்பாளர்க் குடும்பங்கள் 1.63 கோடியாக இருந்தது என்று குறிப்பிட்டது. 1950-51-ல் இதன் அளவு 1.79 கோடியாகும். 1950–51ஆம் ஆண்டிற்கும் 1956–57 ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் வேளாண்மை உழைப்பாளர்க் குடும்பங்களின் எண்ணிக்கை 16 இலட்சம் என்ற அளவிற்குக் குறைந்தது. முதல் விசாரணை (1950-51), இரண்டாவது விசாரணை (1956-57) ஆகியவற்றில் 'வேளாண்மை உழைப்பாளர் குடும்பம்' என்பதுபற்றிய விளக்கம் வேறுபட்டமையே இக் குறைவிற்கான முக்கியக் காரணமாகும்.

1.63 கோடி குடும்பங்களில் 57.13% நிலமற்றனவாகும். 1950-51ல் இது 50.07 சதவீதமாக இருந்தது. நிலத்தை உடைமையாகக் கொண்ட குடும்பங்கள் 1956—57-ல் 42.87 சதவீதமகாகவும், 1950—51-ல் 49.93 சதவீதமாகவும் இருந்தன. இவ்வாறு கணக்கிடப்பட்ட வேளாண்மை உழைப்பாளர்க் குடும்பங்களில் சாதாரண உழைப்பாளர்கள் 1956-57-ல் 73.37 சதவீதமாகவும், 1950–51-ல் 90.3 சதவீதமாகவும் இருந்தனர்; இணைப்பு உழைப்பாளர்கள் 1956—57-ல் 26.63 சதவீதமாகவும், 1950–51-ல் 9.7 சதவீதமாகவும் இருந்தார்கள்.[2]

1956—57-ல் பலவகைப்பட்ட வேளாண்மை உழைப்பாளர்களின் எண்ணிக்கை 3.3 கோடிக்குச் சற்று அதிகமாக அமைந்திருந்தது. அதில் ஆண்கள் 1.85 கோடியாகவும், பெண்கள் 1.2 கோடியாகவும், குழந்தைகள் 25 இலட்சமாகவும் இருந்தனர். இப்புள்ளி விவரம் 1950–51–ல் 3.5 கோடியாகக் கணக்கிடப்பட்டது. அத் தொகையில் ஆண்கள் 1.89 கோடியாகவும்,

1 Charan Singh, India's Poverty and its Solution, 1964, p, 2?7

2 Agricultural Lablour in India Report on the Second Agricltural Labour Enquiry, Vol, I All India, 1956-57, p. 53, Statement 4.2.

பெண்கள் 1.44 கோடியாகவும், குழந்தைகள் 17 இலட்சமாகவும் இருந்தார்கள்.

பின்வரும் அட்டவணையின் மூலம் பல மாநிலங்களில் 1956–57, 1961ஆம் ஆண்டுகளில் இருந்த வேளாண்மை உழைப்பாளர்களின் எண்ணிக்கையை அறியலாம்.

**வேளாண்மை உழைப்பாளர்களின் எண்ணிக்கை (ஆயிரத்தில்)** [1]

| பகுதியும் மாநிலமும் | | 1956–57 | 1961 |
|---|---|---|---|
| **மத்தியப் பகுதி** | | | |
| உத்தரப்பிரதேசம் | ... | 3,834 | 3.261 |
| மத்தியப்பிரதேசம் | ... | 3,034 | 2,815 |
| **கிழக்குப் பகுதி** | | | |
| பீஹார் | ... | 4,787 | 4,418 |
| மேற்கு வங்காளம் | ... | 1,768 | 1,772 |
| ஒரிஸ்ஸா | ... | 2,066 | 1,304 |
| அஸ்ஸாம் | ... | 698 | 187 |
| **தென் பகுதி** | | | |
| ஆந்திரப் பிரதேசம் | ... | 4,778 | 5,337 |
| தமிழ்நாடு | ... | 3,807 | 2,828 |
| கேரளம் | ... | 1,073 | 978 |
| **மேற்குப் பகுதி** | | | |
| மஹாராஷ்டிரம்–குஜராத் | ... | 4,347 | 5,762 |
| மைசூர் | ... | 2,008 | 1,761 |
| **வடக்குப் பகுதி** | | | |
| ராஜஸ்தான் | ... | 310 | 394 |
| பஞ்சாப் | ... | 640 | 544 |
| அகில இந்தியா | ... | 33,157 | 31,482 |

இரண்டாவது விசாரணை அறிக்கைக்குப் பின்னர், 1961ஆம் ஆண்டில் வேளாண்மை உழைப்பாளர்களின் எண்ணிக்கை சிறிது

[1] Ibid.

குறைந்தது. 1956-57ஆம் ஆண்டோடு ஒப்பிடும்போது 1961ஆம் ஆண்டில் எண்ணிக்கை 9.5 சதவீதம் குறைவடைந்தது.

இந்தியாவில் உள்ள மொத்த உழைப்பாளர்த் தொகையில் வேளாண்மை உழைப்பாளர்கள் 72.28 சதவீதம் என்ற அளவிற்கு இருக்கின்றனர். வெவ்வேறு மாநிலங்களிலும் இச் சதவீதம் வேறுபடுகிறது. உதாரணமாகக் கேரளத்தில் 38.3%, மத்தியப் பிரதேசத்தில 79.3%, மஹாராஷ்டிரம்-குஜராத் மாநிலங்களில் 60.4%, பஞ்சாபில் 63.9%, மேற்கு வங்காளத்தில் 53.8% என்ற அளவுகளில் வேளாண்மை உழைப்பாளர்கள் உள்ளனர். திட்டமிட்டுப் பொருளாதார முன்னேற்றத்தை நாம் பெற்று வந்தாலும் 1951-61ஆம் ஆண்டுகளில் பெரிய மாற்றங்கள் ஏற்பட்டுவிடவில்லை. வேளாண்மை, சுரங்கத் தொழில் முதலிய அடிப்படைத் துறையிலேயே அதிகச் சதவீதத்தில் உழைப்பாளர்கள் ஈடுபட்டிருந்தனர். பின்வரும் புள்ளி விவரங்கள் அதை விளக்குகின்றன.

**வெவ்வேறு துறைகளிலும் ஈடுபட்டுள்ள உழைப்பாளர்களின் சதவீதம்[1]**

| ஆண்டு | | அடிப்படைத் துறை (வேளாண்மை, சுரங்கத் தொழில்) | தொழில் துறை | பணித்துறை (Tertiary Sector) |
|---|---|---|---|---|
| 1951 | % | 72.12 | 10.62 | 17.26 |
| | ஆண் | 69.08 | 11.59 | 19.33 |
| | பெண் | 79.57 | 8 26 | 12 17 |
| 1961 | % | 72.23 | 11.70 | 16 02 |
| | ஆண் | 67.93 | 12.68 | 19 34 |
| | பெண் | 81.58 | 9.59 | 8.83 |

மேலே குறிப்பிட்டுள்ளபடி, பெண் உழைப்பாளர்களில் 81 சதவீதத்தினர் பயிர்ச் சாகுபடியில் ஈடுபட்டுள்ளனர். மொத்த ஆண் உழைப்பாளர்களில் சுமார் 68 சதவீதத்தினர் மட்டுமே வேளாண்மையில் ஈடுபட்டிருக்கின்றனர். மொத்த உழைப்பாளர்களில் பாதிக்கு மேற்பட்டவர்கள் வேளாண்மைச் சாகுபடியைச் செய்கின்றார்கள். அஃதாவது, இந்தியாவின் இரண்டு உழைப்பாளர்களுள் ஒருவர் சாகுபடியாளராக இருக்கிறார். வேளாண்மை

[1] Census of India, Statement No. 18, Paper No. 1, 1961.

யாளர்களைப் பொறுத்தவரையில், 6 உழைப்பாளர்களுள் ஒருவர் வேளாண்மை உழைப்பாளராக உள்ளார். இந்த நிலை வெவ்வேறு மாநிலங்களுக்கிடையே அதிக வேறுபாட்டைக் கொண்டதாய் இருக்கின்றது.

அஸ்ஸாமிலும், ராஜஸ்தானிலும் ஒவ்வொரு 100 உழைப் பாளர்களிலும் 4 வேளாண்மை உழைப்பாளர்கள் இருக்கின்றார்கள். வேளாண்மை உழைப்பாளர்களின் எண்ணிக்கை, (100 உழைப் பாளர்களுக்கு) பீஹாரில் 23, ஆந்திரப்பிரதேசத்தில் 29, மஹா ராஷ்டிரம்-குஜராத் மாநிலங்களில் 21, தமிழ் நாட்டில் 18 கேரளம் ஒரிஸ்ஸா, மத்தியப்பிரதேசம் ஆகிய மாநிலங்கள் ஒவ்வொன்றிலும் 17, மைசூரில் 16, மேற்கு வங்காளத்தில் 15, உத்தரப் பிரதேசத்தில் 11, ஆகிய அளவுகளில் அமைந்துள்ளது.[1] 100 சாகுபடியாளர்களில் வேளாண்மை உழைப்பாளர்களின் எண்ணிக்கை கேரளத்திலும் (83) ஆந்திரப்பிரதேசத்திலும் (71) மிக அதிகமாகவும், ராஜஸ்தானிலும் (5), அஸ்ஸாமிலும் (6) மிகக் குறைவாகவும் இருக்கின்றது.

இந்தியாவின் மொத்த உழைப்பாளர்த் தொகையில் வேளாண்மை உழைப்பாளர்கள் சுமார் 70 சதவீதம் இருக் கின்றார்கள். இச் சதவீதம் கேரளத்தின் 38 3 என்ற அளவிலிருந்து மத்தியப்பிரதேசத்தின் 79.3 என்ற அளவுவரை வேறுபட்டிருக் கின்றது. மஹாராஷ்டிரம், குஜராத், பஞ்சாப், மேற்கு வங்காளம் ஆகிய மாநிலங்களில் இச் சதவீதங்கள் முறையே 60.4, 63.9, 53.8 ஆகும்.

வேளாண்மை உழைப்பாளர்கள் அதிக எண்ணிக்கையில் உள்ளனர். வேளாண்மைச் சீர்திருத்தங்களில் நிலமற்ற விவசாயி கள், சிறிய நிலவுடைமையாளார்கள், குத்தகையாளர்கள் ஆகியோருடைய நிலையை உயர்த்தவே முக்கியத்துவம் தரப்படு கிறது. கூலி உழைப்பாளர்களின் நிலையைத் திருத்தவும் அரசு நடவடிக்கைகளை எடுக்கவேண்டும்.

### வளர்ச்சிகான காரணங்கள்

வேளாண்மை உழைப்பாளர்கள் பெருகியதற்குப் பல காரணங்கள் கூறப்படுகின்றன. அதிகரிக்கின்ற மக்கள் தொகை வேளாண்மையைச் சார்ந்தே வாழவேண்டிய நிலை அமைந்

1. Census of India, Paper No. 1, 1952, Table 6, p. 436.

துள்ளது. கூலி உழைப்பாளர்களின் எண்ணிக்கை பெருகி வருகின்றமைக்கான காரணங்களைப் பின்வருமாறு குறிப்பிடலாம்.

1. வேளாண்மைத் துறையிலும், வேளாண்மையல்லாத பிற துறைகளிலும் மக்கள் பெருக்கம் விரைவாக இருக்கின்றது.

2. வாழ்க்கையை நடத்துவதற்குத் தேவையான வேளாண்மை அல்லாத பிற வேலை வாய்ப்புகள் அமைந்திருக்கவில்லை. பிற துறைகளில் வளர்ச்சி இன்மையால், பெரும்பாலான மக்கள் வேளாண்மையிலேயே ஈடுபடுகின்றனர். இச் சிக்கலைத் தவிர்க்கத் தொழில்களை வளர்க்கவேண்டும்.

3. சிறிய நிலவுடைமையாளர்களில் பலர் வாங்கிய கடனைத் திருப்பித் தர முடியாத காரணத்தால், நிலத்தை இழந்து வேளாண்மை உழைப்பாளர்களாக மாறுகின்றனர். எனவே, விவசாயிகளின் கடன் நிலையும் கூலி உழைப்பாளர்கள் அதிகரிப்பதற்கு ஒரு காரணமாகிறது.

4. கிராம வாழ்வோடு தொடர்புடைய பாரம்பரியப் பொருளாதார அடிப்படை மாறிவிட்டது. இதனால், கிராமங்களில் இருந்த வேளாண்மையைச் சார்ந்த தொழில்களும் மறைந்து விட்டன; வேளாண்மையல்லாத தொழில்களும் நசித்துவிட்டன. தொழில் வேலை வாய்ப்புகள் குறைந்தமைக்கு இது காரணமாயிற்று.

5. தொழில் நுணுக்க முன்னேற்றத்தால் பல சிறிய தொழில்கள் பாதிக்கப்பட்டன. எதிர்மயமாக்கப் பெற்ற பெரிய தொழில்களின் வளர்ச்சி சிறு தொழில்களை வளர்ச்சி குன்றச் செய்தது. நிலத்தை நம்பியே மக்கள் வாழவேண்டிய நிலை தோன்றி விட்டது.

6. கிராமத் துறையில் பணப்புழக்கம் மிகுந்தது. உழைப்பாளர்களுக்கான கூலி, பொருள்களாக அளிக்கப்படாமல் பணமாக அளிக்கப் பெற்றது. பணத்தின் மதிப்புப் பல காரணங்களால் குறைந்தது. வேளாண்மை உழைப்பாளர்கள் இதனால் பாதிக்கப்பட்டனர். எனினும், வேறு வாய்ப்பில்லாமையால் வேளாண்மையை அவர்கள் தொடர்ந்து செய்யவேண்டியுள்ளது.

7. தலத்திலில்லாத நிலக்கிழார் முறையின் வளர்ச்சி, கூலி உழைப்பாளர்களின் வளர்ச்சிக்கும் தூண்டுகோலாய் அமைந்தது. இம் முறை வளர்ந்தமைக்கு வேளாண்மைச் சீர்திருத்தச் சட்டங்களில் இருந்த குறைபாடுகளே முக்கியக் காரணமாகும்.

வேளாண்மையில் உபரி மக்களின் தொகை அமைந்திருக்கின்றது. வேளாண்மையைச் சார்ந்தவர்கள் குறைந்த வருமானத்தையே பெறுகின்றார்கள். பல குறைபாடுகளைக் கொண்ட வேளாண்மைத் துறையிலேயே விவசாயிகள் தொடர்ந்து உழைப்பதற்கான காரணங்களைப் பின்வருமாறு தரலாம்.

முதலாவதாக, வேளாண்மை அல்லாத பிற வேலைவாய்ப்புகளை விவசாயிகள் பெற்றிருக்கவில்லை; எளிதாக வேலைவாய்ப்புகளைத் தரக்கூடிய தொழில்துறை வளர்ந்திருக்கவில்லை.

இரண்டாவதாக, விவசாயிகள் மூலதன வசதியைக் கொண்டிருக்கவில்லை. அவர்கள் மிகக் குறைந்த வருமானத்தைப் பெறுபவர்களேயாவர். கிராமத்தை விட்டோ, வேளாண்மையை விட்டோ வெளியேறுவதற்கான வழிகளை விவசாயிகள் அறிந்திருக்கவில்லை. சிறு தொழில்களைத் தொடங்குவதற்கான நிதி வசதியையும் அவர்கள் பெற்றிருப்பதில்லை.

மூன்றாவதாக, கிராம வாழ்வோடும், பழக்க வழக்கங்களோடும் விவசாயிகள் ஒன்றி இருக்கின்றனர். கிராமத்தோடு உணர்ச்சிகரமான ஒரு தொடர்பை அவர்கள் கொண்டிருக்கிறார்கள். கிராமத்தினின்றும் நகரத்திற்குச் சென்று வாழ அவர்கள் விரும்புவதில்லை. அவ்வாறு செல்பவர்களிடம் பழைய கிராம வாழ்க்கை முறையின் இயல்புகள் அமைந்திருக்கமாட்டா. கிராமத்திலிருந்து வெளியேறுவதைப் பலர் இழுக்கு என்றும் எண்ணுகின்றனர். வெளியேறுபவர்கள் கிராமவாழ்வின் தொடர்பை இழந்துவிடுகின்றார்கள். குடும்பத்தினர், உறவினர், நண்பர்கள் ஆகியோரைப் பிரிந்து, பலரும் புதிய இடங்களுக்குச் செல்ல விரும்புவதில்லை. கிராமத்தில் பிறக்கின்ற ஒருவர், அங்கேயே வாழ்ந்து இறக்கவும் விரும்புகின்றார். கிராம வாழ்வை அவர் கௌரவமானதாகக் கருதுகின்றார். இவ்வாறு சில சமுதாயக் காரணிகளும் கிராம மக்கள் தொகை பெருக்கத்திற்குக் காரணமாகின்றன.

நான்காவதாக, தன்னிறைவு பெற்ற வாழ்வைத் தரக்கூடிய தொழிலாக வேளாண்மை இருப்பதாலும், பலர் கிராம வாழ்வையே விரும்புகின்றனர். தங்களுடைய குடும்பத்திற்குத் தேவையான அவசியப் பொருள்களையாவது வாங்கமுடியும் என்ற நம்பிக்கையை அவர்கள் கொண்டிருக்கின்றனர். எவ்விதப் புதிய சூழ்நிலைகளையும் அவர்கள் விரும்புவதில்லை. தன்னிச்சையான சுதந்திரக் கிராம வாழ்வைப் பெற்றிருக்கவே பலரும் எண்ணுகின்

றனர். நகரங்களின் பல்வேறு குழப்பங்கள் அவர்களுக்குப் புதிரானவைகளாகும்.

இறுதியாக, விவசாயிகள் தங்களுடைய பொருளாதார நிலையை மேம்படுத்திக்கொள்ள விரும்புகின்றனர். எனினும், அதிகச் செல்வத்தையோ, வருமானத்தையோ பெற அவர்கள் கருதுவதில்லை. அதற்கான வழி முறைகளையும் அவர்கள் அறிந்திருப்பதில்லை. அறியாமையும், எழுத்தறிவின்மையும் அவர்களுடைய முன்னேற்றத்திற்குத் தடையாக உள்ளன. புதுமையான உலகில் அதிக இலாபத்தைப் பெறுவதற்கான நெளிவு—சுழிவுகளை அவர்கள் அறிந்திருப்பதில்லை. மனத்திற்கு நிம்மதியை அளிக்கக் கூடியதாக கிராம வாழ்க்கை இருக்கின்றது. இவற்றின் காரணமாகவே பெரும்பாலான மக்கள் விவசாயத்தைச் செய்து கிராமத்தில் வாழவே விரும்புகின்றனர். வேளாண்மையில் உபரி உழைப்பாளர்கள் இருக்கின்றமைக்கு இவையாவும் காரணங்களாகின்றன.

இதுபற்றி டாக்டர் முகர்ஜி கூறுவதாவது, 'சிறிய நிலவுடைமையாளர்களின் நிலை தாழ்த்தப்படுவதால், வேளாண்மை உழைப்பாளர்களின் எண்ணிக்கை அதிகரிக்கின்றது. கிராமப் பொருளாதாரத்தின் பொதுவான உரிமைகள் இழக்கப்பட்டுள்ளன. சிறிய அளவில் நிலங்கள் பிரிக்கப்பட்டு வெவ்வேறு இடங்களில் சிதறுண்டு கிடக்கின்றன. கூட்டுத் தொழில்கள் அமைந்திருப்பதில்லை. வாரத்தைப் பெறுபவர்களின் தொகை பெருகியுள்ளது. நிலம் அடைமானமாக வைக்கப்பட்டுக் கடன் பெறப்படுவதால், சிறு விவசாயிகள் நிலவுடைமையை இழக்கின்றார்கள். கிராமங்களின் குடிசைத் தொழில்களும் சீர்குலைந்துள்ளன.'[1] இவற்றைத் தவிரச் சொத்துரிமைகளில் மாற்றங்கள் ஏற்படுகின்றன. குத்தகையாளர்களாக இருப்பவர்களும்கூட நிலமற்ற உழைப்பாளர்களாக மாறுகின்றனர். இந்த நிலை, மத்தியப் பிரதேசத்தின் 'கோண்ட்ஸ்' (Gonds), 'பில்ஸ்(Bhils), ஆகிய வகுப்பினருக்கும், உத்தரப் பிரதேசத்தின் 'கோர்வாஸ்களுக்கும்' (Korwas), சோட்டா நாக்பூரின் 'முண்டாஸ்களுக்கும்' (Mundas) ஏற்பட்டது.[2]

### வெளிநாடுகளில் வேளாண்மை உழைப்பாளர்களின் நிலை

இந்தியாவைப் போன்று வேறு பல நாடுகளிலும் வேளாண்மையில் அதிக மக்கள் தொகை அமைந்துள்ளது. பல உலக நாடுகளின் பொருளாதார வரலாறுகளினின்றும் இதை நன்கறியலாம்.

1 Mukerjee, R.K. Land Problems of India, 1933, p. 215.

2 Mukerjee, R.K., Economic Problems of Modern India. Vol. I., p. 42.

இன்றைய முன்னேறிய நாடுகள் என்று சொல்லப்படுவனவும் ஆரம்பநிலைகளில் இச் சிக்கலைக் கொண்டிருந்தன. ஆனால், அச்சிக்கலுக்குப் பலவேறு வழிகளிலும் தீர்வு காணப்பட்டது. நிலத்தின் உற்பத்தித் திறனைப் பெருக்க செறிவுச் சாகுபடி முறைகள் கைக்கொள்ளப்பட்டன. பெரிய தொழில்கள் ஏற்படுத்தப்பட்டமையால் வேலை வாய்ப்புகள் பெருகின. இவ்வாறு வேளாண்மையில் இருந்த உபரி உழைப்பாளர்கள் நீக்கப்பட்டனர். புதிய நிலம் சாகுபடிக்கு எடுத்துக்கொள்ளப்பட்டது. பெரிய பண்ணைகள் பிரிக்கப்பட்டு மறு பகிர்வு செய்யப்பட்டன. வேளாண்மையில் கூட்டுறவு முறையும் வளர்ந்தது. கிராமத் தொழில்கள் பலவும் ஒன்றோடொன்று இணைக்கப்பட்டு ஊக்குவிக்கப்பெற்றன.[1]

மேற்கண்டவை யாவும் ஐரோப்பிய நாடுகளின் அனுபவங்களாகும். இந்த அனுபவங்களின் அடிப்படையில் இந்தியப் பொருளாதாரக் கொள்கைகளை வகுத்தால் பல பிரச்சினைகளுக்கும் எளிதில் தீர்வு காணலாம். எனினும், இதற்கான வாய்ப்புகள் இங்குக் குறைவாக உள்ளன. பெரிய பண்ணைகளும், தரிசு நிலங்களும் குறைவாக இருப்பதால் நிலத்தை மறுபகிர்வு செய்வதற்கான வாய்ப்புக் குறைவாகவே இருக்கிறது. புதுமையான வாழ்வை ஏற்கக் கிராம மக்கள் மறுக்கின்றனர். மாறுபடாத சமுதாய—பண்பாட்டுக் காரணிகளே இதற்குக் காரணமாகும். கிராம வருமானங்களை உயர்த்த வேளாண்மை உற்பத்தித் திறனை அதிகரிக்க வேண்டும். வேளாண்மை வளர்ச்சியோடு தொழில் முன்னேற்றத்தைப் பெறுவதும் இன்றியமையாதது.

பின்வரும் அட்டவணை பல அயல் நாடுகளிலும் வெவ்வேறு ஆண்டுகளில் உழைப்பாளர்கள் எந்தெந்தத் தொழில்களில் ஈடுபட்டிருந்தனர் என்பதை உணர்த்தும்.

உழைப்பாளர் வெவ்வேறு தொழில்களிலும் ஈடுபட்டுள்ள நிலை

| நாடு | ஆண்டு | உழைப்பாளர்த் தொகையின் சதவீதம் | | |
|---|---|---|---|---|
| | | வேளாண்மை | தொழில் | பணிகள் |
| ஃபிரான்ஸ் | 1886 | 51 | 26 | 23 |
| | 1881 | 48 | 27 | 26 |
| | 1906 | 43 | 30 | 27 |
| | 1936 | 36 | 31 | 33 |

1 Vide Monographs published by the League of Nations Pertaining to the European conference on Rural Life (1939), and Colin Clarks Conditions of Economic Progress (1951).

| நாடு | ஆண்டு | உழைப்பாளர்த் தொகையின் சதவீதம் | | |
|---|---|---|---|---|
| | | வேளாண்மை | தொழிகள் | பணிகள் |
| ஜெர்மனி | 1882 | 43 | 37 | 20 |
| | 1907 | 35 | 40 | 25 |
| | 1925 | 31 | 42 | 27 |
| | 1939 | 26 | 42 | 32 |
| இத்தாலி | 1881 | 57 | 26 | 17 |
| | 1931 | 51 | 27 | 22 |
| | 1936 | 48 | 29 | 23 |
| அமெரிக்கா | 1870 | 53 | 22 | 25 |
| | 1890 | 43 | 26 | 31 |
| | 1910 | 32 | 31 | 37 |
| | 1930 | 23 | 33 | 45 |
| ஜப்பான் | 1920 | 56 | 21 | 24 |
| | 1954 | 45 | 22 | 33 |
| ஆஸ்திரேலியா | 1911 | 25 | 34 | 41 |
| | 1933 | 22 | 35 | 43 |
| | 1947 | 17 | 38 | 45 |
| ஸ்வீடன் | 1910 | 48 | 27 | 25 |
| | 1920 | 41 | 32 | 27 |
| | 1940 | 29 | 36 | 35 |
| | 1950 | 21 | 41 | 38 |

தற்பொழுது இந்தியாவில் அதிகச் சதவீத உழைப்பாளர்கள் வேளாண்மையில் ஈடுபட்டிருக்கின்றார்கள். இந்த நிலை உலகின் பல நாடுகளிலும் 'தொழில் புரட்சிக்கு' (Industrial Revolution) முன்பாக இருந்தது. உதாரணமாக, 1886 ஆம் ஆண்டில், வேளாண்மையிலும் அதைச் சார்ந்த நடவடிக்கைகளிலும் உழைப்பாளர்களில் 51 சதவீதத்தினர் ஈடுபட்டிருந்தனர்; 1882-ல் ஜெர்மனியில் 43 சதவீதத்தினரும், 1881-ல் இத்தாலியில் 57 சதவீதத்தினரும், 1870-ல் அமெரிக்காவில் 52 சதவீதத்தினரும், 1820-ல் ஜப்பானில் 55 சதவீதத்தினரும், 1911-ல் ஆஸ்திரேலியாவில் 25 சதவீதத்தினரும், 1910-ல் ஸ்வீடனில் 48 சதவீதத்தினரும் வேளாண்மையைச் சார்ந்திருந்தனர்.[1]

வேளாண்மையில் சாகுபடியோடு மீன் பிடித்தல், வேட்டையாடுதல், வனத்தொழில் முதலியனவும் அடங்குகின்றன

1 International Labour Review, 1956, pp. 508-09

தொழில் துறையில் சுரங்கத் தொழில், கட்டுமானத் தொழில், பெரிய அடிப்படைத் தொழில், நுகர் பொருள்களை உற்பத்தி செய்யும் தொழில் ஆகியவை அடங்கும். பணித்துறையில் வாணிபம், போக்குவரத்து, செய்தித் தொடர்பு, சேமிப்பு வசதி, நிர்வாகம் ஆகியவை அடங்கியுள்ளன. இவை பொது, தனியார் துறைகளில் இருக்கலாம்.

மக்கள் தொகை வேளாண்மையினின்றும் தொழில்துறைக்கும் பணித் துறைக்கும் நீண்ட காலத்தில் மாறுவதை அட்டவணை விளக்குகிறது. செல்வம் மிகுந்த நாடுகளில் பிற்காலத்தில் வேளாண்மை வருமானத்தை அதிகமாக அளிக்கக்கூடிய முக்கியத் தொழிலாக அமைந்திருக்கவில்லை. அந்த நாடுகளில் மக்களின் வாழ்க்கைத்தரம் உயர்ந்தமைக்குத் தொழில் முன்னேற்றம் பெரிதும் உதவியது. இவைபற்றிக் 'கோலே' (Coale), 'ஹூவர்' (Hoover) ஆகிய இருவரும் குறிப்பிடுவதாவது:

'தனியொருவனுக்கான உற்பத்தி அதிகரிக்கும்போது மொத்தத் தேசீய உற்பத்தியில் வேளாண்மை உற்பத்தியின் வீதம் குறைந்த அளவிலேயே அதிகரிக்கின்றது; தொழில் உற்பத்தியும் பிற வேளாண்மையல்லாத துறைகளின் உற்பத்தியும் அதிக அளவில் அதிகரிக்கின்றன. எக்பெர்ட் டி வ்ரீஸ் (Egbert De Vries) என்பவர் 34 நாடுகளில் இதுபற்றிய புள்ளி விவரங்களைச் சேகரித்தார். அதன்மூலம் 'உண்மைத் தலா வருமானத்தில் 10 சதவீத உயர்வு ஏற்படும்போது வேளாண்மையால் கிடைக்கக்கூடிய தேசிய வருமானம் 1.5 சதவீதம் குறையுமென்று அவர் உணர்த்தினர்.'[1]

மேற்கண்ட புள்ளி விவரங்கள் தொழில் முன்னேற்றம் ஏற்படும் போது உழைப்பாளர்கள் வேளாண்மையைச் சார்ந்திருக்கின்ற நிலை குறையும் என்பதை விளக்குகின்றன. விரைவான பொருளாதார முன்னேற்றம் ஏற்படும்போது அதிக சதவீத மக்கள் தொகை தொழில் துறையிலும் ஈடுபடுகின்றது. ஆனால், இவை யாவும் குறுகிய காலத்தில் ஏற்படாமல் நீண்ட காலத்திலேயே ஏற்படுகின்றன.

பல தொழில் முன்னேற்றமடைந்த நாடுகளில் நிலத்தின் மீதான மக்கள் தொகையின் அடர்த்தி இந்தியாவைக் காட்டிலும் குறைவாக உள்ளது. ஆயினும், அந்த நாடுகளின் வேளாண்மைத் துறையில் அதிக அளவில் உணவுப் பொருள்களும், கச்சாப்

1. Coale and Hoover, 'Population and Economic Development in Low Income Countries,' 1959, p. 121.

பொருள்களும் உற்பத்தி செய்யப்படுகின்றன. சில பின்தங்கிய வேளாண்மை நாடுகளுக்கு அவை விவசாயப் பொருள்களை ஏற்றுமதி செய்கின்ற நிலையிலும் இருக்கின்றன. சான்ருக, 1960 ஆம் ஆண்டில் அமெரிக்காவில் மொத்த மக்கள் தொகையில் வேளாண்மை மக்கள் தொகையின் அளவு 12 சதவீதமாகும்; இது 1941-ல் கனடாவில் 27 சதவீதமாகவும், 1941-ல் ஃபிரான்ஸில் 22 சதவீதமாகவும், 1941-ல் ஜெர்மனியில் 18 சவீதமாகவும், 1961-ல் ஆஸ்திரேலியாவில் 22 சதவீதமாகவும் 1961-ல் இந்தியாவில் 70 சதவீதமாகவும் இருந்தது.[1]

அமெரிக்காவில் சுமார் 12 சதவீத உழைப்பாளர்கள் மட்டுமே வேளாண்மையில் அமைந்துள்ளனர். இன்று அமெரிக்கா அதிக அளவில் உணவுத் தானியங்களை உற்பத்தி செய்யும் நாடுகளில் ஒன்ருகும். தங்களுடைய தேவைக்கு அதிகமாகவே அவர்கள் வேளாண்மைப் பொருள்களை உற்பத்தி செய்கின்ருர்கள். எஞ்சிய உபரி உற்பத்தி அயல்நாடுகளுக்கு ஏற்றுமதியாகின்றது. ஒவ்வொரு அமெரிக்க விவசாயியும் தன்னேடு வேறு 28 பேர்களுக்குத் தேவையான உணவை உற்பத்தி செய்கிருர். இந்தியாவில் 70 சதவீத உழைப்பாளர்கள் வேளாண்மைச் சாகுபடியைச் செய்தாலும் உணவில் தன்னிறைவைப் பெற முடியவில்லை. மிகையான உழைப்பாளர்த் தொகை வேளாண்மையில் ஈடுபட்டிருப்பதாலும், தொழில் வளர்ச்சியின்மையாலும் மக்களின் வாழ்க்கைத்தரம் உயர்வடையவில்லை. போதுமான அளவிற்குப் பண்டங்களையும், பணிகளையும். உற்பத்தி செய்ய முடியவில்லை.

மேம்பாடடைந்த நாடுகளில் விவசாயிகளின் எண்ணிக்கை படிப்படியாகக் குறைந்துள்ளது. வேளாண்மையில் தொழில் நுணுக்கப் புரட்சி ஏற்பட்டமையே இதற்குக் காரணம். சாகுபடி நடவடிக்கைகளில் எந்திரங்கள் பயன்படுத்தப்பட்டமையால், பண்ணைகளின் உற்பத்தி அளவு கூடியது. விவசாயிகள் சேமிக்கும் திறனைப் பெற்றிருந்தார்கள். மூலதனத் திரட்சி வீதம் உயர்வாக இருந்தது. முதலீட்டின் அளவு அதிகரித்தமையால், உற்பத்தி மேலும் பெருகியது. அமெரிக்காவில் பண்ணைப் பொருள்களில் 10 சதவீதம் மட்டுமே நுகரப்படுகிறது; மிகுதியுள்ள 90 சதவீதம் பொருள்கள் விற்பனைக்குத் தயாராக உள்ளன.[2]

[1] F.A.O., Year Book of Agricultural Statistics (Production), Vol. VI, Part I, 19:2, Table 4-A, p. 16 and Census of India 1961.

[2] E. F. Dumeier, R. B. H:flebower and T. Norman, 'Economics With Appiication to Agricalure,' 195), p. 2.

இந்தியாவில் உணவுத் தானியங்களில் 60 சதவீதத்தை உற்பத்தியாளர்களே நுகர்கின்றூர்கள்; விற்பனைக்கான உபரி 40 சதவீதம் என்ற அளவிற்கு மட்டுமே உள்ளது.[1]

அமெரிக்காவின் உற்பத்தி முறைகளை இந்தியாவில் செயல் படுத்த இயலாது. எனினும், பல நாடுகள் பெற்ற அனுபவத்தினின்றும் 'குறைந்த உழைப்பாளர்கள் எந்திரங்களைக் கொண்டு பணிகளைச் செய்யும்போதுதான் உற்பத்தியைப் பல மடங்கு பெருக்க முடியும்' என்ற உண்மையை உணர முடிகிறது. மேல் நாடுகளில் விவசாயிகள் அதிக மூலதனத்தைப் பெற்றிருக்கின்றூர்கள்; முன்னேற்றமான எந்திரங்களையும், கருவிகளையும் பயன்படுத்துகின்றூர்கள். அந்த நாடுகளில் தொழில் நுணுக்கத்தில் சிறப்பான புரட்சி தோன்றியுள்ளது. நில நிர்வாகத்திலும், சாகுபடி நிலைகளிலும் புதுமையான முறைகள் கைக்கொள்ளப்படுகின்றன. இவை எல்லாவற்றிலும் இந்தியாவில் குறைந்த முன்னேற்றமே ஏற்பட்டுள்ளது.

1880 ஆம் ஆண்டின் பஞ்சக் குழு (Famine Commission), இந்திய மக்கள் வறிய நிலையில் இருந்தமைக்கான காரணங்களைக் கண்டறிந்தது. பெரும்பாலான மக்களுக்கு வேளாண்மை முக்கிய தொழிலாக இருக்கின்ற நிலையே வறுமைக்கான அடிப்படைக் காரணம் என அது அறிவுறுத்தியது. உபரி உழைப்பாளர்களை வேளாண்மையினின்றும் வெளியேற்றுவதன்மூலமே, இப் பிரச்சினைக்குத் தீர்வு காணமுடியும். பல வகைத் தொழில்களை ஏற்படுத்தினுல்தான் இது சாத்தியமாகும். வேலை வாய்ப்புகளைப் பெருக்க, அரசு பல தீவிர நடவடிக்கைகளை எடுக்கவேண்டும். விவசாயிகள் வேளாண்மையோடு வேறு உப தொழில்களிலும் ஈடுபடுவது அவசியம். பெரிய தொழில்களோடு சிறு தொழில்களையும், குடிசைத் தொழில்களையும் வளர்ப்பது இன்றியமையாதது. இவற்றின் வாயிலாகவே மக்கள் எல்லோருடைய உண்மை வருமானத்தையும் உயர்த்த முடியும்.

இருபது ஆண்டுகள் திட்டங்களை நிறைவேற்றிய பின்னரும் வேளாண்மையைச் சார்ந்துள்ளவர்கள், மொத்த மக்கள் தொகையில் 70 சதவீதமாகவே இருக்கின்றனர். வேளாண்மை யல்லாத துறையில் வளர்ச்சி இன்மையால், பெருகிவரும் மக்களுக்கு வேலை வாய்ப்புகள் கிடைப்பதில்லை. இதன் காரணமாகவே இந்தியாவில் வேலையின்மையோடு 'மறைமுக வேலையின்மையும்' (Disguised

1 Report of the Foodgrains Emquiry Committee, 1957, pp. 103-104.

unemployment) தோன்றியுள்ளது. வேளாண்மை மயல்லாத துறையில் கணிசமான முன்னேற்றத்தைப் பெற வேண்டுமானால், வேளாண்மை உற்பத்தி அதிகரிக்க வேண்டியது அவசியம். விரைவான தொழில் முன்னேற்றத்தைப் பெற வேளாண்மை வளர்ச்சி இன்றியமையாதது. வேளாண்மையிலும், தொழில் துறையிலும் சரிசம வளர்ச்சி ஏற்படவேண்டும். இதன்மூலமே வேளாண்மை உழைப்பாளர்களின் நிலையை உயர்த்தமுடியும். எனவே, வேளாண்மை உற்பத்தியும், உற்பத்தித்திறனும் தொடர்ச்சியாக உயர்ந்தால்தான் வேளாண்மைத் துறை செழிக்கும். அதிக உற்பத்தியே எல்லா நன்மைகளையும் பெறுவதற்கு அடிப்படையாக அமைகின்றது.

19ஆம் நூற்றாண்டின் இறுதியிலும் 20ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் வேளாண்மைக் கூலி உழைப்பாளர்களின் எண்ணிக்கை பெருகியது. 1951ஆம் ஆண்டுக் கணக்கெடுப்பின்படி மொத்த கிராம மக்கள் தொகையில் கூலி உழைப்பாளர்கள் 30 சதவீதம் என்ற அளவிற்கு இருந்தனர். 1>61ஆம் ஆண்டில் எடுக்கப்பெற்ற கணக்கு வேளாண்மை உழைப்பாளர்கள் 14 சதவீதம் அதிகரித்தனர் என்று குறிப்பிட்டது. தற்பொழுது (1971ஆம் ஆண்டுக் கணக்குப்படி) வேளாண்மை உழைப்பாளர்கள் 25.76 சதவீதம் என்ற அளவில் இருக்கின்றனர்.

**வேளாண்மை உழைப்பு விசாரணைகள்** (Agricultural Labour Enquiries)

தீவிரமடைந்த வேளாண்மை உழைப்பாளர்ச் சிக்கலுக்குத் தீர்வுகாண 1950–51–ல் மத்திய உழைப்பு அமைச்சகம் முதல் வேளாண்மை உழைப்பு விசாரணையை நடத்தியது. வேளாண்மை உழைப்பாளர்களின் பொருளாதார நிலைகளைப்பற்றி அறியவே இவ் விசாரணை செய்யப்பட்டது. மாதிரிக்காக 800 கிராமங்கள் தெரிந்தெடுக்கப்பட்டு விசாரணை 12 மாதங்கள் தொடர்ந்து நீடித்தது. பின்னர், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் பரிந்துரைகளுக்கேற்ப, 1956–57ஆம் ஆண்டில் இரண்டாவது வேளாண்மை உழைப்பு விசாரணை செய்யப்பெற்றது. இதன் மூலம், 1950-51ஆம் ஆண்டிற்கும் 1956-57ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் வேளாண்மை உழைப்பாளர்களின் நிலை அறியப்பட்டது. இவ் விரண்டு விசாரணைகளை ஒப்பிட்டு நோக்கும்போது பல உண்மைகள் புலப்படுகின்றன.

இரண்டாவது விசாரணை 14 மாநிலங்களிலும், 4 யூனியன் பிரதேசங்களிலும் இருந்த 3,698 கிராமங்களில் மேற்கொள்ளப்

பட்டது. இந்த 3,698 கிராமங்களில் சுமார் 1,303 கிராமங்கள் 'சமுதாய வளர்ச்சித் திட்டம்' (Community Development Programme), 'தேசிய விரிவாக்கப் பணி' (National Extension Service) ஆகியன செயல்படுத்தப்பட்ட பகுதிகளில் இருந்தன. இவ் விசாரணை 12 மாதங்களுக்குச் செய்யப்பட்டது. ஆகஸ்ட் 1956-ல் தொடங்கிய விசாரணை செப்டம்பர் 1957-ல் முடிவு அடைந்தது. இது 1950-51ஆம் ஆண்டு விசாரணையைப் போன்றே இருந்தது. வேளாண்மை உழைப்பாளர்க் குடும்பங்களின் அளவு, வருமானம், செலவு, கடன் நிலை முதலியன விசாரிக்கப்பட்டன. இரு விசாரணைகளுக்கும் இடையே, முறைகளிலும் சில பதங்களின் விளக்கங்களிலும் சிறிது அடிப்படை வேறுபாடுகள் இருந்தன. எனினும், வேளாண்மை உழைப்பாளர்களின் சமுதாய, பொருளாதார நிலைகளைப்பற்றி அறிய இந்த இரு விசாரணைகளும் பேருதவி புரிந்தன.

இரண்டாவது விசாரணையின் (1956-57) கண்டுபிடிப்புகளோடு முதல் விசாரணையின் (1950-51) முடிவுகளை ஒப்பிடும்போது கீழ்க் காணும் நிலைகள் அறியப்படுகின்றன.

1. வேளாண்மைக் குடும்பங்களின் எண்ணிக்கையில் 8.9 சதவீதக் குறைவு ஏற்பட்டது.

2. நிலத்தை உடைமையாகக் கொண்ட வேளாண்மை உழைப்பாளர்க் குடும்பங்களின் எண்ணிக்கையில் 21.7 சதவீதக் குறைவு தோன்றியது.

3. நிலமற்ற வேளாண்மை உழைப்பாளர்க் குடும்பங்களின் எண்ணிக்கையில் 3.8 சதவீத உயர்வு ஏற்பட்டது.

4. 'இணைப்பு உழைப்பாளர்க் குடும்பங்களின்' ('Attached' Labour Households) எண்ணிக்கை 150 சதவீதம் அதிகரித்தது.

5. வேளாண்மைக் கூலி வீதங்களில் குறைவு ஏற்பட்டதோடு வேளாண்மை உழைப்பாளர்க் குடும்பங்களின் வருமானங்களிலும் குறைவு தோன்றியது.

6. வேளாண்மை உழைப்பாளரிடையே செலவு, கடன், வேலையின்மை ஆகியவை பெருகின.

1950-51ஆம் ஆண்டின் விசாரணை 11 000 குடும்பங்களில் செய்யப்பட்டு அதன் அறிக்கை 1954—55-ல் வெளியிடப்பெற்றது.

[1]1956—57ஆம் ஆண்டின் இரண்டாவது விசாரணை 28 560 மாதிரி வேளாண்மைக் குடும்பங்களில் செய்யப்பட்டது. இதன் அறிக்கை 1960-ல் வெளிவந்தது.

இவ் விரண்டு விசாரணைகளின் மூலம் (1) வேலை வாய்ப்பு, வேலையின்மை; (2) உழைப்பாளர்களின் ஊதிய வீதம்; (3) உழைப்பாளர்களின் வருமானம்; (4) உழைப்பாளர்களின் செலவு முறை, (5) உழைப்பாளர்களின் கடன் நிலை ஆகியவை அறியப்பெற்றன.

## 1. வேலைவாய்ப்பும், வேலையின்மையும்

இந்தியாவில் வேளாண்மை உழைப்பாளர்களின் வேலை நிலை பற்றிய முடிவுகளை இரண்டாவது விசாரணை (1956—57) பின் வருமாறு குறிப்பிட்டது.

1. 1950—51-ல் ஆண் உழைப்பாளர்கள் ஊதியத்திற்காக 200 நாட்களும், 1956—57-ல் 197 நாட்களும் பணியாற்றினர். அவர்கள் 1950—51-ல் 75 நாட்களும், 1956—57-ல் 40 நாட்களும் சொந்த வேலைகளில் ஈடுபட்டிருந்தனர்.

2. பெண் உழைப்பாளர்கள் கூலிக்காக 1950—51-ல் 134 நாட்களும், 1956—57-ல் 141 நாட்களும் உழைப்பைத் தந்தனர். அவர்கள் 1956—57-ல் 27 நாட்கள் சொந்தப் பணிகளில் ஈடுபட்டனர்.

3. 1950—51-ல் 165 நாட்களாக இருந்த குழந்தைகளின் உழைப்பு 1956—57-ல் 204 நாட்களாக உயர்ந்தது.

4. ஆண் உழைப்பாளர்கள் 1950—51-ல் 90 நாட்களுக்கும் 1956—57-ல் 128 நாட்களுக்கும் வேலையின்றி இருந்தனர்.

மாநில மட்டத்தில் ஆராய்ந்தால், கூலிக்காகப் பணியாற்றிய ஆண் உழைப்பாளர்கள் ஆந்திரம், அஸ்ஸாம், பீஹார், பம்பாய், மைசூர், பஞ்சாப், ராஜஸ்தான் ஆகிய இடங்களில் 1950—51ஆம் ஆண்டைக் காட்டிலும் 1956-57ஆம் ஆண்டில் அதிக நாட்கள் உழைப்பைத் தந்தார்கள்; பிற மாநிலங்களில் உழைப்பைத் தந்த நாட்கள் குறைவடைந்தன. உத்தரப்பிரதேசத்தைத் தவிர, மற்றெல்லா மாநிலங்களிலும் 1956—57-ல் (1950—51 ஆம் ஆண்டோடு ஒப்பிடும்போது) சொந்த வேலைக்கான வாய்ப்புக் குறைந்துவிட்டது.

கூலி உழைப்பாளர்களின் நிலை பல காரணிகளாலும் பாதிக்கப் படுகின்றது. நிலத்தின்மீதான அதிக மக்கள் நெருக்கம்,

குடும்ப உழைப்பாளர்களின் பணி, நிலவுடைமையாளர்களுக்குள்ளாகவே உதவிக் கொள்ளும் நிலை ஆகியவற்றால் அவர்களுடைய கூலி குறைவாக இருக்கின்றது. சாகுபடி நிலங்கள் உள்பிரிவு சிறிய அளவில் துண்டாடப்பட்டு வெவ்வேறு இடங்களில் சிதறிக்கிடக்கின்றமையாலும் அவர்கள் பாதிக்கப்படுகின்றார்கள்.

வேளாண்மை உழைப்பாளரிடையே வேலையின்மையோடு மறைமுக வேலையின்மையும் அமைந்துள்ளது. ஆண் கூலி உழைப்பாளர்கள் ஆண்டொன்றுக்குச் சுமார் 4 மாதங்கள் வேலையின்றி இருக்கின்றனர். பெண் உழைப்பாளர்களும், குழந்தைகளும் ஓராண்டில் இதைவிட அதிக மாதங்களுக்கு வேலையின்றி உள்ளனர். இணைப்பு வேளாண்மை உழைப்பாளர்கள் ஓராண்டுக்குச் சுமார் 280 நாட்கள் வேலை வாய்ப்பைப் பெறுகின்றனர்.

## 2. கூலி வீதம்

இரண்டாவது விசாரணை (1956-57) வேளாண்மை உழைப்பாளர்க் குடும்பங்கள் வருமானத்தின் பெரும் பகுதியைக் கூலியின் மூலம் பெறுவதாகக் குறிப்பிட்டது.

1. 1950—51-ல் வேளாண்மை உழைப்பாளர்க் குடும்பத்தின் சராசரி வருமானத்தில் 76 சதவீதம் கூலியாகப் பெறப்பட்டது. இது 1956—57-ல் 81 சதவீதமாக உயர்ந்தது. 1950-ல் 31 சதவீதக் கூலிகள் உற்பத்திப் பொருள்களாக அளிக்கப்பெற்றன. இது 1956-ல் 40 சதவீதமாக அதிகரித்தது. பணமாக அளிக்கப்பட்ட கூலிகள் முறையே 56 சதவீதமாகவும், 49 சதவீதமாகவும் இருந்தன. பணமாகவும், பொருளாகவும் தரப்பட்ட கூலி 1950-ல் 9.8 சதவீதமாகவும் 1956-ல் 10.8 சதவீதமாகவும் இருந்தன. கூலியைத் தவிர்த்த பிற வகை வருமானங்களை உழைப்பாளர்கள் மிகக் குறைந்த அளவிலேயே பெற்றனர்.

2. 1950-ல் ஆண் உழைப்பாளர்களின் தினக்கூலி 109 பைசாவாக இருந்தது. இது 1956-ல் 96 பைசாவாகக் குறைந்தது. பெண் உழைப்பாளர்களின் கூலி 68 பைசாவிலிருந்து 59 பைசாவாகவும், குழந்தைகளின் கூலி 70 பைசாவிலிருந்து 53 பைசாவாகவும் குறைந்தன.

3. வேளாண்மைக் கூலியாட்களுக்கு அளிக்கப்பட்ட மொத்தக் கூலி மதிப்பு 1950-ல் ரூ. 500 கோடியாகவும், 1956-ல் ரூ. 520 கோடியாகவும் இருந்தது.

இரு விசாரணைகளின் மூலம் வேளாண்மை உழைப்பாளர்களின் கூலி குறைந்து வருவது கண்டறியப்பட்டது. கூலி, பொருளாகவும் சில சமயங்களில் பொருளோடு பணம் சேர்த்தும் அளிக்கப் பெற்றது. கூலி வேலையையே வேளாண்மை உழைப்பாளர்கள் பெருமளவிற்கு நம்பி இருந்தார்கள். ஆண், பெண் உழைப்பாளர்களிடையே கூலி அளவுகளில் மிகுந்த வேறுபாடு இருந்தது. உழுதல், நாற்று நடுதல், அறுவடை செய்தல் முதலிய சாகுபடி நடவடிக்கைகளுக்கான கூலி வீதங்கள் குறைவாக இருந்தன. 1950 – வ் வேளாண்மைக் கூலிகள் வேளாண்மை யல்லாத துறைகளின் கூலிகளைவிடக் கூடுதலாக இருந்தன. 1956-ல் இதற்கு மாறான நிலை தோன்றியது.

வேளாண்மை உழைப்பாளர்களுக்கான தாழ்ந்தபட்சக்கூலிகள் வெவ்வேறு மாநிலங்களிலும் மாறுபட்ட அளவுகளில் 'குறைந்த கூலிகளின் சட்டத்தால்' (Minimum wages Act) நிர்ணயிக்கப் பெற்றன. அவை மிகக் குறைந்த அளவில் இருந்ததைப் பின்வரும் அட்டவணை உணர்த்தும்.

| மாநிலம் | | தாழ்ந்த மட்ட தினக்கூலி (ரூபாயில்) |
|---|---|---|
| ஆந்திரப் பிரதேசம் | ... | 1.46 முதல் 2.00 |
| குஜராத் | ... | 0 75 முதல் 1 00 |
| கேரளம் | ... | 1.50 முதல் 1.62 |
| மத்தியப்பிரதேசம் | ... | 0.90 முதல் 1.35 |
| தமிழ்நாடு | ... | 0.75 முதல் 1 25 |
| மஹாராஷ்டிரம் | ... | 0 62 முதல் 1.00 |
| ஒரிஸ்ஸா | ... | 9.75 முதல் 1.00 |
| பஞ்சாப் | ... | 1.00 முதல் 2 50 |
| ராஜஸ்தான் | ... | 0.75 முதல் 1.25 |
| உத்தரப்பிரதேசம் | ... | 1.00 முதல் 1.50 |
| மேற்கு வங்காளம் | ... | 1 50 முதல் 2.25 |
| டில்லி | ... | 1 50 முதல் 2.00 |
| மைசூர் | ... | 1 00 முதல் 1.75 |
| அஸ்ஸாம் | ... | 1.81 |

பொதுவாகக் கூறுமிடத்து, ஆண்களுக்கான கூலிகள் ரூ. 1.50 தல் ரூ 3.00 வரையும், பெண்களுக்கான கூலிகள் ரூ. 1முதல் ரூ.2

வரையும், குழந்தைகளுக்கான கூலிகள் ரூ. 0.50 முதல் ரூ. 1.50 வரையும் வேறுபட்ட அளவுகளில் அளிக்கப்பெற்றன. தொழில் உழைப்பாளர்களோடு ஒப்பிடும்போது, பண்ணை உழைப்பாளர்களின் கூலி மிகக் குறைவானதாகும். கிராமங்களில் தேவையைக் காட்டிலும் உழைப்பின் அளிப்பு மிகுதியாக உள்ளமையே இதற்கான முக்கியக் காரணமாகும்.

1950-51, 1956-57ஆம் ஆண்டுகளில் வேளாண்மைக் கூலி உழைப்பாளர்கள் வேளாண்மையல்லாத துறைகளின் உழைப்பாளர்கள் சராசரி தினக்கூலி வீதங்களை எந்த அளவில் கொண்டிருந்தார்கள் என்பதைப் பின்வரும் புள்ளி விவரங்கள் உணர்த்துகின்றன.

1. 195—657 ஆம் ஆண்டோடு ஒப்பிடும்போது, 1950—51ஆம் ஆண்டில் ஆண், பெண், குழந்தை உழைப்பாளர்களின் வேளாண்மை நடவடிக்கைகளுக்கான கூலிகள் உயர்வாக இருந்தன. இந்த ஆண்டுகளுக்கிடையே ஆண் உழைப்பாளர்களின் சராசரிக் கூலி 3.8 சதவீதம் குறைந்தது; பெண் உழைப்பாளர்களின் கூலி 12 சதவீதம் என்ற அளவிற்கு அதிகமாகக் குறைவடைந்தது.

2. இரு ஆண்டுகளிலும் வேளாண்மையல்லாத நடவடிக்கைகளுக்கான கூலியில் குறிப்பிடத்தக்க மாற்றம் ஏற்படவில்லை. 1950—51-ல் தினக்கூலி 103 பைசாவாகவும், 1956—57-ல் 107 பைசா வாகவும் இருந்தது. ஆனால், குழந்தை உழைப்பாளர்களுக்கான தினக்கூலி 61 பைசாவிலிருந்து 55 பைசாவாகக் குறைந்தது.

3. அறுவடை நடவடிக்கைகளுக்கான கூலி வீதங்கள் தாழ்வுற்றன. உதாரணமாக, 1950—51-ல் 126 பைசாவாக இருந்த ஆண் உழைப்பாளிகளின் தினக்கூலி, 1956—57-ல் 93 பைசாவாகக் குறைவடைந்தது. 1950—51 ஆம் ஆண்டில் 'உழுதல்', 'நாற்று நடுதல்' முதலிய நடவடிக்கைகளுக்கான கூலியைக் காட்டிலும் அறுவடை செய்வதற்கான கூலி உயர்வாக இருந்தது குறிப்பிடத்தக்கது. ஆனால், அறுவடைக் கூலி 1956—57-ல் மற்றெல்லாப் பணிகளையும்விட மிகவும் குறைந்துவிட்டது.

1956-ல் ஆண் வேளாண்மைக் கூலியாட்கள் தினக்கூலி 96 பைசா பெற்றனர்; பெண் உழைப்பாளர்கள் 59 பைசாவும் குழந்தை உழைப்பாளர்கள் 53 பைசாவும் பெற்றார்கள்.

வேளாண்மை உழைப்பாளர்கள் மிக வறிய நிலையில் அமைந்துள்ளார்கள். அவர்களுடைய கூலித் தொழில் உழைப்பாளர்களின் கூலியைவிட மிகக் குறைவாக உள்ளது. எடுத்துக்காட்டாக, வங்காளத்தின் தொழில் உழைப்பாளர் ரூ. 248 என்ற அளவிலும் வேளாண்மை உழைப்பாளர் ரூ 160 என்ற அளவிலும் வருமானத்தைப் பெறுகின்றனர். இப் புள்ளி விவரங்கள் பம்பாயில் ரூ. 364, ரூ. 88; பீஹாரில் ரூ. 332, ரூ. 119 என்ற நிலைகளில் இருக்கின்றன.

தொழில் உழைப்பாளர்களுக்கும், வேளாண்மை உழைப்பாளர்களுக்கும், இடையே கூலியில், வேறுபாடுகள் இருக்கின்றமைக்கான காரணங்களைப் பின்வருமாறு குறிப்பிடலாம்.

1. குழந்தைகளின் உழைப்புப் பயன்படுத்துவது தடுக்கப் பெறவில்லை. வேளாண்மையில் உழைப்பின் அளிப்பு அதிகமாக உள்ளமைக்கும், கூலி குறைவாக இருப்பதற்கும் இது காரணமாகிறது.

2. கிடைக்கக்கூடிய சாகுபடி நிலத்தின் அளவோடு ஒப்பிட்டு நோக்கும்போது வேளாண்மை மக்கள் தொகை மிகையாக இருக்கின்றது.

3. சாகுபடி நிலவுடைமைகள் சிறிய அளவில் இருப்பதால் புதுமையான உற்பத்தி முறைகளைப் பெரிய அளவில் பின்பற்ற முடியவில்லை.

4. கடன் பத்திரங்களை எழுதிக் கொடுக்கின்ற நிலையாலும், வேளாண்மை உழைப்பாளர்கள் குறைந்த கூலியைப் பெறுகின்றார்கள்.

5. வேளாண்மை உழைப்பாளர்கள் பலவேறு இடங்களில் பணியாற்ற வேண்டியுள்ளது. வேளாண்மை, பருவகாலத் தொழிலாக இருப்பதால், ஆண்டின் எல்லா மாதங்களிலும் அவர்களுக்கு வேலைவாய்ப்புக் கிடைப்பதில்லை. எனவே, அவர்கள் கூலி யுயர்வுக்காகப் 'பேரம் பேசும் திறனைக்' (Bargaining Capacity) குறைவாகவே பெற்றுள்ளனர்.

6. மேட்டுக் குடியினரிடத்தும் உயர்சாதியினர் என்று சொல்லப்படுபவரிடத்தும் நிலவுடைமைகள் அதிக அளவில் குவிந்துள்ளன. அவர்கள் சாமானிய நிலையில் உள்ள எளியவர்களைச்

சுரண்டி வாழ்கின்றனர். சமுதாய, பொருளாதாரச் சுரண்டல்களின் காரணமாகக் கூலி உழைப்பாளர்கள் தரக்குறைவான வாழ்வையே பெற்றிருக்கின்றனர்.

7. வேளாண்மை உழைப்பாளர்களிடையே சரியான அமைப்பு முறை இருப்பதில்லை. அவர்களைப் பயிற்சிபெற்ற உழைப்பாளர்கள் என்றும் கூற முடியாது. தொழில் உழைப்பாளர்ச் சங்கங்களை அவர்கள் அமைத்து உரிமைக்காகப் போராடுவதில்லை. உழைப்பிற்கேற்ற ஊதியத்தைப் பெறும் உரிமையைத் தாங்கள் பெற்றிருக்கின்றோம் என்ற உண்மை நிலையை அவர்கள் உணர்வதில்லை. சாகுபடிப் பணிகளை நிறைவேற்றும்போதும் சரியான வசதிகள் அவர்களுக்கு அளிக்கப்படுவதில்லை. குறைந்த கூலியைப் பெறும் அவர்களுடைய நிலை இரங்கத்தக்கதாக இருக்கிறது.

8. சிறிய நிலவுடைமையாளர்கள் கூலி உழைப்பாளர்களின் பணிகளை நாடுவதில்லை. குடும்ப அங்கத்தினரின் உதவியைக் கொண்டே அவர்கள் சாகுபடி நடவடிக்கைகளை மேற்கொள்ளுகின்றனர். தவிர்க்க முடியாத சில சூழ்நிலைகளில் மட்டுமே, சிறு விவசாயிகள் கூலி உழைப்பாளர்களை நியமிக்கின்றனர். கூலி உழைப்பாளர்களை நியமிப்பதற்குத் தேவையான நிதி வசதியை அவர்கள் பெற்றிருப்பதில்லை.

இக் காரணங்களாலேயே வேளாண்மை உழைப்பாளர்கள் தொழில் உழைப்பாளர்களைக் காட்டிலும் குறைந்த கூலியைப் பெறுகின்றனர்.

### 3. வருமான அளவு

இரண்டாவது விசாரணையின்படி, வேளாண்மை உழைப்பாளர்க் குடும்பங்களின் சராசரி ஆண்டு வருமானம் 1950-51-ல் ரூ 447.00 ஆகும். இது 1956—57-ல் ரூ 437.47 ஆகக் குறைந்தது. வருமானத்தில் ரூ. 7 மட்டுமே குறைவு ஏற்பட்டது. 1950—51-ல் ரூ. 104 ஆக இருந்த ஆண்டு தலா வருமானம் 1956—57-ல் ரூ. 99.7 ஆகக் குறைந்தது. மற்றெல்லா உழைப்பாளர்களையும்விட வேளாண்மை உழைப்பாளர்கள் மிகக் குறைவான வருமானத்தைப் பெற்றனர். அவர்களுடைய வாழ்க்கை வசதிகள் மிகத் தாழ்வான நிலையில் இருந்தன.

மாநில அளவில் ஆராயும்போது, அஸ்ஸாம், மத்தியப்பிரதேசம், தமிழ்நாடு, பம்பாய் ஆகிய இடங்களில் வேளாண்மை உழைப்பாளர் வருமானம் மொத்த குடும்ப வருமானத்தில் 81 முதல் 85

சதவீதமாக இருந்தது. இதன் அளவு பீஹார், மைசூர், ஆந்திரப் பிரதேசம், ராஜஸ்தான், பஞ்சாப் ஆகிய மாநிலங்களில் 71 முதல் 76 சதவீதமாகவும், உத்தரப்பிரதேசத்தில் 67 சதவீதமாவும் கேரளத்தில் 66 சதவீதமாகவும், ஒரிஸ்ஸாவில் 65 சதவீதமாகவும் அமைந்திருந்தது. மேற்கு வங்காளத்தில் மிகக் குறைந்த அளவாகிய 56 சதவீதமாக இருந்தது.

பின்வரும் அட்டவணை வேளாண்மை உழைப்பாளரின் வெவ்வேறு வகை வருமானங்களைக் குறிக்கின்றது. அவர்கள் கூலியாட்களாகப் பணி புரிகின்றனர். அவர்களுள் சிலர் சொந்தச் சாகுபடியில் ஈடுபடுவதும் உண்டு. வேளாண்மையல்லாத பணிகளிலும் சிலர் உழைப்பைத் தருகின்றார்கள்.

வெவ்வேறு வழிகளிலும் வேளாண்மை உழைப்பாளர்க் குடும்பங்கள் பெறுகின்ற சராசரி ஆண்டுவருமானம்

| எண் | வழி முறைகள் | 1950—51 (ரூபாயில்) | 1956—57 (ரூபாயில்) | | இவ்விரு காலங்களுக்கும் இடையேயான சதவீத மாற்றம் |
|---|---|---|---|---|---|
| 1. | வேளாண்மை உழைப்பு | 286 97 | 319.55 | ... | 11,4 |
| 2. | நிலச்சாகுபடி | 59.90 | 30 07 | ... | 49.8 |
| 3. | வேளாண்மை யல்லாத உழைப்பு | 53.19 | 34.94 | ... | 34.3 |
| 4. | மற்றவை | 46.94 | 52.91 | ... | 12.7 |
| | மொத்தம் | 447.00 | 437.47 | ... | 2.1 |

மேற்கண்ட அட்டவணையின் மூலம் மொத்த குடும்ப வருமானத்தில் கூலிக்காகப் பணியாற்றுவதால் கிடைக்கக்கூடிய வருமானமே அதிகமானது என்பதை அறியலாம். அகில இந்திய அடிப்படையில் 1956—57 ஆம் ஆண்டு மொத்த வருமானத்தில் கூலி வருமானம் 73 சதவீதமாகவும், 1950—51-ல் 64 சதவீதமாகவும் இருந்தது. 1950—51 ஆம் ஆண்டோடு ஒப்பிடும்போது 1956—57-ல் வேளாண்மையல்லாத உழைப்பின் வருமானம், நிலச் சாகுபடியில் ஈடுபட்டமையால் கிடைத்த வருமானம், 12 சதவீதத்திலிருந்து

8 சதவீதமாகக் குறைந்தபொழுது வேளாண்மையல்லாத உழைப்பின் வருமானம் 13 சதவீதத்திலிருந்து 7 சதவீதமாகக் குறைந்தது. பிற வழிகளின்மூலம் பெறப்பட்ட வருமானம் 12.7 சதவீதம் என்ற அளவிற்கு அதிகரித்தது. 1950—51-ல் மொத்த வருமானத்தில் 10.5 சதவீதமாக இருந்த இவ் வருமானம் 1956—57-ல் 12.10 சதவீதமாக உயர்ந்தது.

1950-ல் 104 ரூபாயாக இருந்த வேளாண்மை உழைப்பாளர்க் குடும்பங்களின் தலா வருமானம் 1956-ல் ரூ. 99.4 ஆகக் குறைந்து விட்டது. ஆனால், சராசரிக் குடும்ப அளவு 4.3 பேர்களிலிருந்து 4.4 பேர்களாக அதிகரித்தது.

வேளாண்மை உழைப்பாளர்கள் பல பிணிகளாலும், உணவுப் பற்றுக்குறையாலும் அவதியுறுகின்றனர். போதுமான உணவே கிடைக்காதபோது சத்துள்ள உணவைப் புசிப்பது எங்ஙனம் இயலும்? போதுமான குடியிருப்பு வசதிகளையும் அவர்கள் பெற்றிருப்பதில்லை. இதற்கான காரணங்களைக் கீழ்க்காணுமாறு குறிப்பிடலாம்.

1. வேளாண்மைத் தொழில் அதிக வேலைவாய்ப்பை அளிக்கக் கூடியதாக இல்லை. இதனால், உழைப்பாளர்கள் குறைந்த வருமானத்தையே பெற முடிகின்றது.

2. அவர்கள் சொந்தமாக வேலை செய்வதற்கோ அல்லது வேளாண்மையல்லாத துறைகளில் வேலைவாய்ப்புகளைப் பெறுவதற்கோ முடியாதவர்களாகின்றனர்.

3. வேளாண்மை உழைப்பாளர்கள் உழைப்பிற்கேற்ற ஊதியத்தைப் பெறுவதில்லை. அவர்கள் மிகக் குறைந்த கூலியை மட்டுமே பெறுகின்றனர்.

இந்த வறிய நிலை, உழைப்பாளர்க் குடும்பங்களில் பிரதிபலிக்கின்றது. வருமானத்தை அதிகரிப்பதன் மூலமே அவர்களுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்த இயலும்.

## 4. நுகர்வும் வாழ்க்கைத்தரமும்

இரண்டு விசாரணைகளிலும் வேளாண்மை உழைப்பாளர்களின் வருமானத்தில் உணவிற்கான செலவு உயர்ந்த சதவீதத்தில் அமைந்திருந்தது. 1950—51-ல் 85.3 சதவீதமாக இருந்த உணவின் மீதான செலவு 1956—57-ல் 77.3 சதவீதமாகக் குறைந்தது. இது

9.5 சதவீதக் குறைவாகும். துணிகள், காலணிகள் முதலிய வற்றை வாங்குவதற்கான செலவு சற்றேறக்குறைய ஒரே நிலையிலேயே இருந்தது. இவற்றிற்கான செலவு 6.3 சதவீதத்தி லிருந்து 6.1 சதவீதமாகக் குறைந்தது. மொத்தச் செலவில் பிறவற்றிற்கான செலவு 6.5 சதவீதத்திலிருந்து 8.7 சதவீதமாக உயர்ந்தது. 1956 — 57-ல் எரிபொருள்களுக்கான செலவு 7.9 சதவீதம் அதிகரித்தது. உணவிற்கான செலவு குறைவடைந்த மைக்கு இஃது ஒரு காரணமாகும். உணவிற்கான மொத்தச் செலவில் 1956—57-ல் தானியங்களுக்கான செலவு 68.2 சதவீத மாகும்; இது 1956—51-ல் 79.2 சதவீதமாக இருந்தது. மொத்தத்தில், உழைப்பாளர்க் குடும்பத்தின் சராசரி ஆண்டு வருமானம் ரூ. 437 ஆகவும், செலவு ரூ. 617 ஆகவும் அமைந்திருந்தன. எனவே, வருமானப் பற்றுக்குறை ரூ. 180 என்ற அளவில் அமைந்திருந்தது.

வேளாண்மை உழைப்பாளர் விசாரணைகளின் முடிவுகள் பராமரிப்பு மட்டத்திற்குத் தாழ்வாகவே அவர்கள் வசிக்கின்றனர் என்பதை உறுதிப்படுத்துகின்றன. கைக்குக் கிடைக்கின்ற வருமானம் வாய்க்குப் போதுமானதாக இருப்பதில்லை. மிக மட்டரக உணவையே அவர்கள் உட்கொள்ளுகின்றனர்; கேழ்வரகு, சோளம், பருப்புவகைகள் முதலியவற்றையே புசிக்கின்றனர். மிகக் குறைந்த அளவிற்கு மட்டுமே அவர்கள் காய்கறிகள், சர்க்கரை, மாமிசம், முட்டை, மீன் முதலியவற்றை உண்கின்றனர். கார்போஹைடிரேட், புரோட்டீன், வைட்டமின் ஆகியவை மிகுதி யாக உள்ள உணவுவகைகளை அவர்கள் சேர்த்துக்கொள்வதில்லை. உணவிற்காக அவர்கள் அதிகம் செலவிட வேண்டியிருப்பதால் தங்களுடைய குழந்தைகளின் கல்விக்காகச் செலவிட முடிவதில்லை. மருத்துவத்திற்கான செலவும் மிகக் குறைவானதே. காலணிகளை அணியாமல் நீண்ட தூரங்களுக்கும் அவர்கள் பயணம் செய் கின்றார்கள். அவர்களின் மிகத் தாழ்ந்த வாழ்க்கை நிலையை இது நன்கு உணர்த்தும். கள், சாராயம் முதலிய போதை தரும் பொருள்களை அருந்துகின்றனர். ஆரோக்கியம் பாதிக்கப்படு கின்றமைக்கு இஃதும் ஒரு காரணமாகும். அவர்களுடைய நிதி நிலைமை மோசமடைவதற்கும் இது காரணமாகின்றது. வறுமை, பிணி, அழுக்கு முதலியவற்றில் வேளாண்மை உழைப்பாளர்களின் குடும்பங்கள் உழலுகின்றன.

வேளாண்மை உழைப்பாளர்க் குடும்பத்தின் சராசரி ஆண்டு வருமானம் 1950—51-ல் 447 ரூபாயாகவும், 1956—57-ல் 437 ரூபா யாகவும் இருந்தது. 1950, 1956ஆம் ஆண்டுகளில் சராசரி

வருமானம் எந்தெந்த வழிகளில் பெறப்பட்டது என்பதையும், அவற்றின் சதவீதம் எவ்வளவு என்பதையும் கீழ்க்காணும் அட்டவணையால் அறியலாம்.

| வருமானம் பெற்ற முறை | 1950 | 1956 |
|---|---|---|
| நிலச்சாகுபடி ... | ரூ. 59.90 (13.49%) | ரூ. 30.07 ( 6.87%) |
| வேளாண்மை உழைப்பு ... | ரூ. 286.97 (64. 2%) | ரூ. 319.55 (73.04%) |
| வேளாண்மையல்லாத உழைப்பு... | ரூ. 53.19 (11. 9%) | ரூ. 34.95 ( 7.99%) |
| மற்றவை ... | ரூ. 46.94 (10. 5%) | ரூ. 52.91 (12.10%) |

1950-51-ல் வேளாண்மை உழைப்பாளர்க் குடும்பத்தின் சராசரி ஆண்டு வருமானம் ரூ.447 ஆகவும், செலவு ரூ.468 ஆகவும் இருந்தன. எனவே, பற்றுக்குறை நிதிநிலை ரூ.21 என்ற அளவில் இருந்தது. இரு விசாரணைகளின் மூலம் உணவின்மீதான செலவு அதிகமானது என்பதை அறியலாம். உணவிற்கான செலவு 85.3%, 77.3%; எரிபொருள்களுக்கான செலவு 1.1%, 7.9%; உடைகள், காலணிகளுக்கான செலவு 6.3%, 6.1%; பிற பணிகளுக்கான செலவு 7.3%, 8.7%; என்ற அளவுகளில் அமைந்திருந்தன. உணவிற்கான மொத்தச் செலவில் சுமார் 80%, தானியங்களுக்காகச் செலவிடப் பெற்றது; 5%, மட்டுமே நெய், சர்க்கரை, காய்கறிகள், மீன், இறைச்சி, முட்டை முதலிய சத்துள்ள உணவுப் பொருள்களை வாங்குவதற்குப் பயன்படுத்தப்பட்டது.

உழைப்பாளர்கள் உட்கொண்ட உணவின் அளவு மிகக் குறைவானது; சத்தற்றது. இலட்சக்கணக்கான மக்கள் ஆண்டு தோறும் போதிய உணவின்மையாலும், தவறான உணவு வகைகளை அருந்துகின்றமையாலும் இறக்கின்றனர். மதச் சடங்குகள், திருமணங்கள், திருவிழாக்கள் முதலியவை நடக்கின்ற காலங்களிலேயே அவர்கள் பசுமையான காய்கறிகளை உணவோடு சேர்த்துக் கொள்ளுகிறார்கள். கூலி உழைப்பாளர்கள் மதியம் சுமார் 12 மணிக்கும், சாகுபடி நடவடிக்கைகளைச் செய்து முடித்து வீடு திரும்பிய பின்னர் மாலைப் பொழுதிலும் இரு முறை உணவருந்துகின்றார்கள். கஞ்சியும், கூழையும் மட்டுமே அவர்கள் பெரும்பாலும் உட்கொண்டு வாழ்கின்றார்கள். குறைந்த வருமானத்தைப் பெறுகின்ற அவர்கள் குடித்துக் கும்மாளமிடுவதையும் பொழுது போக்காகக் கொண்டுள்ளனர். பட்டைச் சாராயம், தரக் குறைவான கள், அழுகிய பார்லியின் மூலம் தயாரிக்கப்பட்ட மது ஆகியவற்றை அவர்கள் அருந்துகின்றனர். வறுமையின் கொடிய பிடியி

விருந்து அவர்கள் தப்ப முடியாமைக்கு இஃதும் ஒரு காரண மாகின்றது. சம்பாதிக்கும் வருமானம் எல்லாவற்றையும் செலவிடவே அவர்கள் விரும்புகின்றார்கள். இதனால், அவர்களுடைய இல்லத்தில் உள்ள குழந்தைகளும், பெண்களும் இன்னல் அடைகின்றனர்.

## 5. வறுமையும், கடன் நிலையும்

வேளாண்மை உழைப்பாளர்களின் செலவு வருமானத்தைக் காட்டிலும் அதிகமாக இருப்பதால் கடன் பெறவேண்டிய நிலை தோன்றுகின்றது. 1956—57-ல் வேளாண்மை உழைப்பாளர்க் குடும்பங்களின் வீதம் 63.9 சதவீதமாகவும், 1950—51-ல் 44.5 சதவீதமாகவும் இருந்தது. அஸ்ஸாம், பஞ்சாப், பம்பாய், ராஜஸ்தான் ஆகியவற்றைத் தவிர்த்த பிற மாநிலங்களில் உழைப்பாளர்க் குடும்பங்களின் கடன் நிலை 1950—51 ஆம் ஆண்டைக் காட்டிலும் 1956—57-ல் அதிக அளவில் அமைந்திருந்தது. ஒரு சராசரி வேளாண்மை உழைப்பாளர்க் குடும்பம் 1956—57-ல் 88 ரூபாயும், 1950—51-ல் 47 ரூபாயும் கடனாகக் கொண்டிருந்தது. கடன்பட்ட குடும்பங்களை மட்டும் கணக்கில் எடுத்துக்கொண்டால், சராசரி ஒரு குடும்பத்திற்கான கடன் 1955—57-ல் 138 ரூபாயாகவும், 1950—51-ல் 105 ரூபாயாகவும் இருந்தது. பின்வரும் அட்டவணை இரு வேறு ஆண்டுகளிலும் வேளாண்மை உழைப்பாளர்க் குடும்பங்களின் கடன் நிலைகள் எவ்வாறு இருந்தன என்பதை உணர்த்தும்.

**வேளாண்மை உழைப்பாளர்க் குடும்பங்களின் கடன் நிலை**[1]

| எண் | | 1950-51 | 1956-57 |
|---|---|---|---|
| 1. | கடன் குடும்பங்களின் சதவீதம் | ரூ. 44.5 | ரூ. 63.9 |
| 2. | ஒரு குடும்பத்திற்கான சராசரிக் கடன் நிலை | ரூ. 47 | ரூ. 0.88 |
| 3. | கடன்பட்ட குடும்பங்களுக்கிடையே ஒரு குடும்பத்தின் சராசரிக் கடன் அளவு | ரூ. 105 | ரூ. 0.138 |

சாதாரண உழைப்பாளர்களைக் காட்டிலும் 'இணைப்பு' வேளாண்மை உழைப்பாளர்கள் அதிக அளவிற்குக் கடன்பட்டிருந்தனர். கடன்பட்ட இணைப்பு வேளாண்மை உழைப்பாளர்க் குடும்பங்களின் எண்ணிக்கையைவிட அதிகமாக இருந்தன.

[1] Compiled from the Second Enquiry Report, September 9. I, p. 221.

# 14. பூதான கிராமதான இயக்கங்கள்

## (Bhoodan and Gramdan Movements)

வேளாண்மைத் துறையைச் சார்ந்த நிலமற்ற விவசாயிகள் பலவித இன்னல்களைக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய இன்னல்களைத் தீர்க்க அரசு பல முயற்சிகளை மேற்கொண்டது. அரசின் முயற்சிகளைத் தவிர ஆச்சாரிய வினோபா பாவே முதலியவர்களும் நிலமற்ற விவசாயிகளின் வாழ்வைப் புனரமைக்க உதவியுள்ளார்கள். அவருடைய பூமிதான, கிராமதான இயக்கங்கள் பல நன்மைகளை அளித்துள்ளன.

இந்தியாவில் நிலச்சிக்கல் அமைந்திருக்கின்றது. மக்களிடையே நிலம் சரியாகப் பகிர்ந்தளிக்கப்பட்டிருக்கவில்லை. நிலச் சிக்கலுக்கு முக்கியக் காரணம் விரைவாகப் பெருகி வரும் மக்கள் தொகையேயாகும். நில அளவைக் கூட்ட முடியாது. பிற இயற்கை வசதிகளும் குறைந்த அளவில் மட்டுமே கிடைக்கின்றன. இந்தியாவின் 70 சதவீதச் சாகுபடியாளர்கள் சாகுபடி நிலத்தில் 16 சதவீதத்தை மட்டுமே கொண்டுள்ளனர் என்பதைத் தேசிய மாதிரிக் கணக்கெடுப்பு-எட்டாவது சுற்று (National Sample Survey-Eighth Round) உணர்த்துகிறது. ஆந்திரப் பிரதேசத்தின் தெலுங்கானா பகுதியில் சிலர் ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலத்திற்குச் சொந்தமானவர்களாக இருந்தனர். பலர் ஓர் ஏக்கர் நிலத்தைக்கூட உடைமையாகக் கொண்டிருக்கவில்லை. அப் பகுதிகளில் சோவியத் ரஷ்யா, சீனா முதலிய பொதுவுடைமை நாடுகளின் புரட்சிக் கருத்துகள் தோன்றின. அதன் விளைவாகப் பல கலவரங்கள் உருவெடுத்தன. அத் தீவிரப் புரட்சியினால் கொலைகள் பல செய்யப்பட்டன. நிலப்பறி இயக்கம் தோன்றியது. எங்கும் பயங்கர நிலை சூழலாயிற்று. அக் கொடுமைகளை நீக்க

களும் மாறுபட்டவைகளாக இருந்தன. இவ்வாறு சில குழுக்களை அமைப்பதால் மட்டும் வேளாண்மை உழைப்பாளர்களின் நிலையைத் திருத்திவிட முடியாது. திட்டங்களால் பிற பிரிவினர் நன்மையடைந்துள்ளனர் என்றாலும், கூலி உழைப்பாளர்களின் நிலையில் முன்னேற்றம் தோன்றியிருக்கவில்லை. பிறருடைய வாழ்க்கைத் தரத்தை ஓரளவு உயர்த்தியுள்ள அரசு, இவர்களுடைய நலனைப் பெருக்குவதிலும் கவனத்தைச் செலுத்த வேண்டும். வேளாண்மை உழைப்பாளர்களின் நிலை முன்பிருந்ததைக் காட்டிலும் தற்பொழுது தாழ்வடைந்துள்ளது. அரசு, இவர்களின் நிலையை உயர்த்துவதற்குக் குறைந்த அளவுக் கூலியை நிர்ணயம் செய்துள்ளது; கிராமப் பணிகளைப் பெருக்கியுள்ளது; கிராமங்களின் சிறு தொழில்களையும், குடிசைத் தொழில்களையும் வளர்க்கின்றது. சில மாநிலங்களில் வேளாண்மை உழைப்பாளர்களுக்கு நிலம் அளிக்கப்படுகின்றது. பூதான இயக்கம் இவ் வகையில் பெரிதும் உதவி யிருக்கின்றது.

1951 ஆம் ஆண்டு மக்கள் தொகைக் கணக்கெடுப்பின்படி நம் நாட்டில் சாகுபடி உழைப்பாளர்கள் 4.9 கோடி இருந்தார்கள். இது மொத்த வேளாண்மை மக்கள் தொகையில் சுமார் 20 சதவீதமாகும். இரண்டாவது வேளாண்மை உழைப்பு விசாரணை 1956—57-ல் செய்யப்பட்டபோது, இந்திய வேளாண்மை உழைப்பாளர்க் குடும்பங்கள் மொத்த கிராமக் குடும்பங்களில் 24.47 சதவீதமாக இருந்தது தெரியவந்தது. வேளாண்மை உழைப்பாளர்களில் கூலியாட்கள் 17.5 மில்லியன் என்ற அளவிற்கு இருந்தார்கள். பாதிக்கு மேலான வேளாண்மை உழைப்பாளர்கள் நிலமற்றவர்களே யாவர். மற்றவர்கள் மிகச் சிறிய அளவில் நிலவுடைமைகளைக் கொண்டிருந்தனர். சிறிய நிலவுடைமைகளைக் கொண்டிருந்த அவர்களும் கூலி வேலைகளில் ஈடுபட்டனர். 1956—57-ல் அவர்களுடைய வருமானத்தில் 73 சதவீதம் பிறருடைய பண்ணைகளில் உழைப்பைத் தந்து கூலியாகப் பெறப்பட்டது; 1950 — 51-ல் இது 64 சதவீதமாக இருந்தது. மொத்த வேளாண்மை உழைப்பாளர்களில் சுமார் 85 சதவீதத்தினர் சாதாரண உழைப்பாளர்களாகவும், 15 சதவீதத்தினர் இணைப்பு உழைப்பாளர்களாகவும் இருந்தனர்.

வேளாண்மை உழைப்பாளர்களின் ஆண்டுத் தலா வருமானம் 1956—57-ல் 99.4 ரூபாயாகவும், 1950—51-ல் 140 ரூபாயாகவும் இருந்தது. 1956—57ஆம் ஆண்டின் தேசிய சராசரித் தலா வருமானம் ரூ. 291.5 ஆகும். வேளாண்மை உழைபபாளர்க் குடும்பங்களின் சராசரி ஆண்டு வருமானம் 1956—57-ல் 437 ரூபாயாகவும், 1950—51-ல் 447 ரூபாயாகவும் இருந்தது. 1950—51-ல்

அவர்களுக்கு 218 நாட்களும், 1956-57-ல் 197 நாட்களும் வேலை வாய்ப்புகள் இருந்தன. வேளாண்மை உழைப்பாளர்களில் 15 சதவீதத்தினர் இணைப்பு உழைப்பாளர்களாவர். அவர்களில் சுமார் 16 சதவீதத்தினர் தினக்கூலியைப் பெறும் சாகுபடிப் பணிகளில் ஈடுபட்டிருக்கவில்லை.

தற்பொழுதுள்ள வேளாண்மை உழைப்பாளர்களில் நான்கில் ஒரு பங்கு முதல் மூன்றில் ஒரு பங்குவரை உபரி உழைப்பாளர்கள் அமைந்துள்ளனர் என்று கணக்கிடப்பட்டுள்ளது. விரைவான மக்கள் பெருக்கம் இந்த நிலையை மேலும் மோசமடையச் செய்திருக்கின்றது. இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் உழைப்பாளர்த் தொகையின் 62.5 சதவீதம் வேளாண்மையில் ஈடுபட்டிருந்தது. 1950ஆம் ஆண்டிற்குள்ளாக அது 70 சதவீதமாக உயர்ந்து விட்டது. இன்றுவரை அந்த நிலையே தொடர்ந்து நீடிக்கின்றது.

மேற்கண்ட விளக்கங்களால் வேளாண்மை உழைப்பாளர்களின் தாழ்வான நிலையை நன்குணரலாம்: அவர்களுடைய நிலையை உயர்த்துவதற்கான நடவடிக்கைகளை அரசு அவசியமாகவும், அவசரமாகவும் எடுக்கவேண்டும். உழைப்பவர்களின் நிலை தாழ்வடைய உண்மையான சமதர்ம அரசு என்றும் அனுமதிக்காது.

### வேளாண்மை உழைப்பாளர்களுக்கு உதவுவதற்கான நடவடிக்கைகள்

இந்திய மக்கள் தொகையிலேயே மிகத் தரங்குறைந்த நிலையில் வேளாண்மை உழைப்பாளர்கள் இருக்கின்றனர். எனவே, அவர்களுடைய பொருளாதார நிலையை உயர்த்துவது இன்றியமையாதது. அவர்கள் கணிசமான எண்ணிக்கையிலும் இருக்கின்றார்கள். 1961ஆம் ஆண்டுக் கணக்கெடுப்பின்படி இந்தியாவில் உழைப்பாளர்கள் 188 மில்லியன் என்ற அளவில் இருந்தனர். அவருள், 133 மில்லியன் பேர்கள் (சுமார் 70%) அடிப்படைத் துறையில் ஈடுபட்டிருந்தார்கள். வேளாண்மை உழைப்பாளர்களின் எண்ணிக்கை 31 மில்லியனாக இருந்தது. அதாவது வேளாண்மைத் துறையைச் சார்ந்திருப்பவர்களில் நான்கில் ஒரு பகுதியினர் வேளாண்மை உழைப்பாளர்களாக இருந்தனர். அவர்களுடைய நிலையை உயர்த்த வெவ்வேறு நடவடிக்கைளும் எடுக்கப்பெற்றன; எடுக்கப்பட்டு வருகின்றன. அவற்றை இரு பெரும் பிரிவுகளாகப் பகுக்கலாம். முதலாவதாக, அரசு பல நடவடிக்கைகள் எடுத்ததைப்பற்றியும், இரண்டாவதாக அரசல்லாத அமைப்புகள் உதவுகின்ற நிலையைப்பற்றியும் ஆராயலாம்.

1. அரசின் நடவடிக்கைகள்

நாடு விடுதலை பெற்ற உடனேயே இந்திய அரசு 1947-ல் அதனுடைய உழைப்புக் கொள்கைபற்றி அறிவித்தது. அக் கொள்கையின்படி அரசு வேளாண்மை உழைப்பாளர்களின் நிலையையும் வாழ்க்கைத் தரத்தையும் உயர்த்த உறுதியளித்தது. இதை நோக்கமாகக் கொண்டு இந்திய அரசு, இரு வேளாண்மை உழைப்பு விசாரணைக் குழுக்களை அமைத்தது. அரசு வேறு சில நடவடிக்கைகளையும் பின் வருமாறு எடுத்தது.

குறைந்த மட்ட ஊதியங்கள்

1948ஆம் ஆண்டின் 'குறைந்தபட்சக் கூலிகளின் சட்டம்' (Minimun wages Act) வேளாண்மை உழைப்பாளர்களுக்கும் பொருந்துவதாக மாற்றப்பட்டது. அச் சட்டத்தின்படி மாநில அரசுகள் வேளாண்மை உழைப்பாளர்களின் குறைந்தபட்சக் கூலியையும்' பஞ்சப்படியையும் நிர்ணயிக்கவேண்டும். சமீபத்தில் மத்திய உழைப்பு அமைச்சகம், மாநில அரசுகளை வேளாண்மை உழைப்பாளர்களின் தினக்கூலி ஒரு ரூபாய்க்குக் குறையாமல் இருக்குமாறு பார்த்துக்கொள்ளக் கூறியது. அநேகமாக எல்லா மாநில அரசுகளும் மாநிலங்களின் வெவ்வேறு பகுதிகளிலும் குறைந்த அளவுக் கூலிகளை நிர்ணயித்துள்ளன. ஆனல் நடைமுறையில் இது முழுமையாகச் செயல்படுத்தப்படவில்லை.

வேளாண்மை உழைப்பாளர்கள் குறைந்த அளவுக் கூலியைக் கூடப் பெற முடிவதில்லை. அதற்கான காரணங்கள் பலவாகும். உதாரணமாக, வேளாண்மை உழைப்பாளர்கள் நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் பரவலாக அமைந்துள்ளார்கள். அவர்கள் யாவரும் ஒருங்கிணைந்து தொழிலாளர்ச் சங்கத்தை அமைத்திருக்கவில்லை. அவர்களுக்கிடையே சரியான, வலிமையான, நிலையான இணைப்பு அமைப்பு இல்லை. எனவே, அவர்கள் கூலி உயர்வுக்காகப் பேரம் பேச முடிவதில்லை.

1948 ஆம் ஆண்டின் குறைந்தபட்சக் கூலிகளின் சட்டம், ஒவ்வொரு மாநில அரசும் மூன்று ஆண்டுகளுக்குள்ளாக வேளாண்மைத் துறையின் உழைப்பாளர்களுக்குக் குறைந்த அளவு கூலியை நிர்ணயிக்குமாறு கூறியது.

இரண்டாவது உலகப் போருக்குப் பின்னர் விலையுயர்வால் பல பெருநிலக்கிழார்கள் நன்மையடைந்தனர். ஆனல், வேளாண்மை உழைப்பாளர்களின் நிலையில் எவ்வித முன்னேற்றமும் ஏற்பட

வில்லை. ஆகவே, அரசு, உழைப்பாளர்களுக்குக் குறைந்தபட்சக் கூலியை நிர்ணயிப்பது அவசியமென்று கருதியது. கூலி மட்டம் செலவிற்கும், வாழ்க்கைத் தரத்திற்கும் ஏற்ப மாறுபடலாம் என்று கூறப்பட்டது.

முதல் திட்டக் காலத்தில் பஞ்சாப், ராஜஸ்தான், ஆஜ்மீர் கூர்க், டில்லி, ஹிமாசலப்பிரதேசம், கட்ச், திரிபுரா ஆகிய இடங்களில் குறைந்த அளவுக் கூலிகள் நிர்ணயிக்கப்பட்டன. இன்னும் ஏழு மாநிலங்களில் சில குறிப்பிட்ட பகுதிகளில் மட்டும் கூலிகள் நிர்ணயிக்கப்பட்டன. இரண்டாவது திட்டக் காலத்தில் எல்லா மாநிலங்களின் எல்லாப் பகுதிகளுக்கும் குறைந்தபட்சக் கூலியின் அளவு அரசால் நிர்ணயிக்கப்பட்டது.

இடர்ப்பாடுகள்: குறைந்தபட்சக் கூலிச் சட்டத்தைச் செயல் படுத்துவதில் பல தடைகள் அமைந்துள்ளன.

1. நீண்ட காலமாகவே இந்தியாவின் மக்கள் தொகை விரைவாகப் பெருகி வருகின்றது. அரசு மிகக் குறைந்த அளவில் கூலியை நிர்ணயித்தாலும் உழைப்பாளர்கள் அதை ஏற்றுக் கொள்ளவேண்டிய நிலை ஏற்படும். உழைப்பிற்கேற்ற ஊதியத்தை அரசு நிர்ணயிக்கும் என்று உறுதியாக நம்ப முடியாது. நிலத்தின் மீதான மக்கள் அடர்த்தி பெருகி வருகின்ற நிலையில் கூலி நிர்ணயம் செய்யும் முழு உரிமையையும் அரசிற்கு அளித்தல் தவறாகும்.

2. வேளாண்மையில் தொடர்ச்சியாக வேலை வாய்ப்புகள் இருப்பதில்லை. பருவ நிலைகள் மாறும்போது வேலை வாய்ப்புகளின் நிலையிலும் மாற்றம் தோன்றுகின்றது. உழைப்பாளர்கள் வேலையின்றி இருப்பதைவிடக் குறைந்த கூலியைப் பெற்று உழைப்பைத் தரவும் தயாராக உள்ளனர்.

3. உழைப்பாளர்கள் எழுத்தறிவில்லாதவர்கள்; அவர்கள் நாட்டில் எல்லா இடங்களிலும் பரவலாகப் பொருந்தியுள்ளன. கூட்டுப் பேரத்தின்மூலம் கூலியை உயர்த்த இயலும் என்பதை அவர்கள் அறிந்திருக்கவில்லை. அதை அறிந்திருந்தாலும் அவர்களுக்கிடையே அதற்கான சங்க அமைப்புகள் இல்லை. சங்கங்களைத் தொடங்கவேண்டும் என்ற ஊக்கத்தையும் அவர்கள் கொண்டிருக்கவில்லை. இந்தியாவின் 'பொதுவுடைமைக் கட்சி' தன்னுடைய செல்வாக்கினால் உழைப்பாளர்களின் கூலியை ஓரளவு உயர்த்தியுள்ளது.

4. பெரும்பாலான வேளாண்மை உழைப்பாளர்கள் பிற்பட்ட வகுப்பைச் சார்ந்தவர்களாவர். பொருளாதார, சமுதாய நிலைகளில் அவர்கள் பின்தங்கியுள்ளார்கள். அவர்கள் தங்களுடைய உரிமைகளைக் காத்துக்கொள்ள முடியாத நிலையில் இருக்கின்றனர். முயற்சிகளை மேற்கொண்டாலும் மற்றவர்கள் அவர்களுக்கு எதிராக உள்ளார்கள்.

5. கிராமப் புறங்களில் கூலி நிர்ணயம், பழக்க வழக்கங்களின் அடிப்படையில் அமைகின்றது. கிராம மக்களின் பழக்க வழக்கங்களை மாற்றுவது எளிதன்று. குறைந்தபட்சக் கூலி, சட்டங்களால் நிர்ணயிக்கப்பட்டாலும் பழக்க வழக்கங்களின் அடிப்படையிலேயே வேளாண்மை உழைப்பாளர்கள் கூலி பெறுகின்றனர். நிலவுடைமையாளர்களுக்கும் கூலி உழைப்பாளர்களுக்கும் இடையே நெருங்கிய தொடர்பு உள்ளது. அதன் காரணமாகவும் அவர்கள் கூலியுயர்வு வேண்டுவதில்லை.

6. நிலக்கிழார்கள் கடன் அளித்து உழைப்பாளர்களைத் தங்கள் அடிமைகளைப்போல ஆக்கி விடுகின்றார்கள். அவர்கள் சொல்லும் எல்லாவற்றிற்கும் இவர்கள் கட்டுப் படுகின்றார்கள். எனவே, கூலி உழைப்பாளர்கள் குறைந்த ஊதியத்தைப் பெற்றே வாழ்கின்றார்கள்.

7. நிலவுடைமையாளர்களின் நிலத்தில் உழைப்பாளர்கள்வீடு கட்டிக்கொள்ளுகின்றனர். கூலிக்காக மட்டும் உழைப்பாளர்கள் நிலவுடைமையாளர்களிடம் பணியாற்றுவதில்லை. இவ்வாறு சில உதவிகளைச் செய்து, நிலக்கிழார்கள் வேளாண்மை உழைப்பாளர்களின்மீதான தங்கள் பிடியை இறுக்குகின்றார்கள். அப்பிடியை விலக்க உழைப்பாளர்களால் முடிவதில்லை.

8. இந்தியா முதலிய வளர்ச்சி குன்றிய நாடுகளில் வேளாண்மை உழைப்பாளர்கள் பெயர்ச்சியற்றவர்களாக இருக்கின்றனர். இதனால், நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் மாறுபட்ட அளவுகளில் கூலிகள் திகழ்கின்றன. அவர்கள் குறைந்த அளவு கூலியைப் பெற்றுத் தங்கள் கிராமங்களிலேயே வசிக்கின்றனர். விரிந்து பரந்த நோக்கு அவர்களிடம் இருப்பதில்லை.

9. அரசின் நடவடிக்கைகளால் ஏற்படுகின்ற நன்மைகளை அவர்கள் பெறுவதில்லை. பழமை எண்ணங்களையும், எழுத்தறிவின்மையையும் கொண்டுள்ள அவர்களுடைய வாழ்வில்

முன்னேற்றம் ஏற்படுவதில்லை. வேளாண்மை நாடு முழுவதும் பரந்து அமைந்துள்ள ஒரு தொழில் சட்டங்களால் நிர்ணயிக்கப் படும் குறைந்த அளவுக் கூலி செயல்படுத்தப்படுகின்றதா என்பதைக் கண்டறிவது கடினம். அதற்கான அரசின் அமைப்பு முறைகள் இந்தியாவில் இல்லை. கட்டுப்பாடுகளை விதிப்பதற்கும், மேற்பார்வை செய்வதற்கும் அரசு அமைப்புகளை ஏற்படுத்துவது அவசியம்.

10. வேளாண்மை உழைப்பாளர்கள் பல கிராமங்களிலும் பரவலாக உள்ளார்கள். எல்லா உழைப்பாளர்களோடும் அரசு தொடர்பு கொள்வது இயலாது. ஆகவே, சிக்கலுக்குத் தீர்வு காண்பது கடினமாக இருக்கின்றது.

வேளாண்மை உழைப்பாளர்களின் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண விவசாயத்தை அதிக வருமானத்தைத் தரக்கூடிய தொழிலாக மாற்ற வேண்டும். உழைப்பாளரிடையே கூட்டு நடவடிக்கைகள் பெருகுவது அவசியம். முதலாளிகளுக்கும், உழைப்பாளர்களுக்கும் இடையே கூலிபற்றிப் பேரம் பேசும் நிலை அமைந்திருக்கவேண்டும். குறைந்தபட்சக் கூலியைக் கிராமப் புறங்களுக்கு விஸ்தரிப்புச் செய்வதால் மட்டும் உழைப்பாளர் களுக்கு நன்மையை அளித்துவிட முடியாது.

வேளாண்மை உழைப்பாளர்களுக்கு வேலையளிக்கும் சிறிய நிலவுடைமையாளர்கள் பல பிரச்சினைகளைக் கொண்டிருக்கிறார்கள். மிக அவசியமான, அவசரமான, தவிர்க்க முடியாத சாகுபடி நடவடிக்கைகளுக்கு மட்டுமே அவர்கள் வேளாண்மை உழைப் பாளர்களை நாடுகின்றார்கள். குறைந்த வருமானத்தைப் பெறும் அவர்கள் அதிகக் கூலியைக் கொடுக்க முடியாதவர்களாவர். மேலும், மாறுபடுகின்ற தட்பவெப்ப நிலைகளுக்கு ஏற்ப உறபத்தி நடவடிக்கைகளைக் கைக்கொள்ள வேண்டியுள்ளது. சிறு விவசாயிகள் குறைந்த அளவுக் கூலியைக்கூடக் கொடுக்க முடியாத நிலையில் இருக்கின்றார்கள். வருமானத்தை அளிப்பதில் வேளாண்மை உறுதியற்ற தன்மையக் கொண்டிருக்கிறது. ஆனால், பெரிய நிலவுடைமையாளர்கள் உயர்ந்த கூலியை அளிப்பதற்கான வசதியைப் பெற்றிருந்தாலும், குறைந்த கூலியையே கொடுக் கின்றனர்.

மாநில அரசுகள் குறைந்த பணியாளர்களை மட்டுமே கொண் டுள்ளன. குறைந்தபட்சக் கூலிகள் தரப்படுகின்றனவா என்பதை மேற்பார்வையிடுவது மாநில அரசுகளுக்குக் கடினமாக உள்ளது. எனவே, அரசு இயற்றுகின்ற சட்டங்கள் சிறப்பாக இருந்தாலும்,

அவை சரியாகச் செயல்படுத்தப்படுவதில்லை. இதைத் தவிர்க்க, அரசு அதிக எண்ணிக்கையில் பணியாளர்களை நியமித்துத் தீவிர மேற்பார்வையைச் செய்யவேண்டும். முதலாளிகள் கூலியளிப்பது பற்றிய கணக்கு விபரங்களை அரசிற்குக் காட்டுமாறு செய்வது அவசியம். எனினும், இதைச் செயல்படுத்துவது இயலாது. ஏனெனில், நிலவுடைமையாளர்களில் பலர் எதையும் அறியாதவர்களாக, புரியாதவர்களாக இருக்கின்றனர். அவர்களில் சிலர் மட்டுமே கல்வியறிவு பெற்றவர்கள் ஆவர். இவற்றின் காரணமாகக் குறைந்தபட்சக் கூலிகள் சட்டங்கள்மூலம் நிர்ணயிக்கப்பட்டிருந்தாலும், அவை சரியாகச் செயல்படுத்தப்படுவதில்லை.

## 2. கிராமப் பணிகள்

வேளாண்மை உழைப்பாளர்கள் வேலையின்மையாலும், மறைமுக வேலையின்மையாலும் பாதிக்கப்படுகின்றனர். கிராமப் புறங்களில் இவர்களுக்கு ஆண்டு முழுவதும் வேலைவாய்ப்பு அமைந்திருப்பதில்லை. இதைத் தவிர்க்க ஐந்தாண்டுத் திட்டங்களின் மூலம் வெவ்வேறு கிராமப் பணிகளுக்காக முதலீடு செய்யப்படுகின்றது. நிலப்பாதுகாப்பு, தரிசு நிலத்தை விளை நிலமாக மாற்றுவது, நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்குவது, இயக்கச் சக்தியின் உற்பத்தியை அதிகரிப்பது முதலிய பல கிராம முன்னேற்ற நடவடிக்கைகளை அரசு கைக்கொண்டுள்ளது. சமுதாய மேலமைப்புக்கான வசதிகளைப் பெருக்கவும் அரசு திட்டங்களை வகுக்கின்றது. வெள்ளத் தடுப்பு நடவடிக்கைகள் மேற்கொள்ளப் படுகின்றன; சாலைகள் அமைக்கப்பெறுகின்றன, கிராமப் பணித் திட்டங்களின் முக்கிய நோக்கம் வேலையின்மை, மறைமுக வேலையின்மை ஆகியவற்றால் பாதிக்கப்படுபவர்களுக்கு வேலை வாய்ப்புகளை ஏற்படுத்தித் தருவதாகும். திட்டங்களின்மூலம் எல்லாக் காலங்களிலும் வேலைவாய்ப்புகள் கிடைப்பதற்கான வழிமுறைகள் பின்பற்றப்பட வேண்டும்.

## 3. கிராமங்களைத் தொழில் மயமாக்குதல்

பொதுவாக, பெரிய அளவுத் தொழில் நிறுவனங்கள் நகரப் பகுதிகளிலேயே தொடங்கப்படுகின்றன. இவற்றை விரைவாக முன்னேற்றம் பெறச் செய்யமுடியாது. ஏனெனில், அதற்கு அதிக அளவு மூலதனமும், தொழில் நுட்பத்திறனும் தேவைப்படுகின்றன எனவே, இதற்குப் பதிலாகச் சிறு தொழில்களையும், குடிசைத் தொழில்களையும் கிராமப் பகுதிகளில் வளர்க்கலாம். இதன்மூலம் வேளாண்மை உழைப்பாளர்களுக்கான வேலை வாய்ப்புகள் பெருகும். தீவிரக் கிராமப்புறங்களின் மக்கள் தொகை நகர்ப்புறங்களுக்கு வெளியேறுவது இதனால் தடுக்கப்படுகிறது.

கிராமத் தொழில்களால் உழைப்பாளர்கள் பல பணிகளைச் செய்வதற்கும் பயிற்சி பெறுகின்றார்கள். திறமை குறைந்த உழைப்பாளர்கள் திறமை மிக்கவர்களாக மாறுகின்றனர். வேளாண்மையைச் சார்ந்துள்ள உழைப்பாளர்த் தொகையை 1979ஆம் ஆண்டிற்குள் 60 சதவீதமாகக் குறைக்கத் திட்டமிடப்பட்டுள்ளது. இவ்விடைக் காலத்தில் கிராமத் தொழில்களை வளர்ப்பதில் அரசு கவனத்தைச் செலுத்தலாம். பெரிய அடிப்படைத் தொழில்களைத் தொடங்குவதன் வாயிலாகவும் வேளாண்மையைச் சார்ந்துள்ள மக்கள் தொகை வீதத்தைக் குறைக்க முடியும். வேளாண்மை உழைப்பாளர்களின் எதிர்காலம் நாட்டைத் தொழில் மயமாக்குவதற்கு ஏற்ப அமையும்.

இதன் காரணமாகவே டாக்டர் வி. கே. ஆர். வி. ராவ் 'இந்தியாவில் வேளாண்மை உழைப்பு' (Agricultural Labour in India) என்னும் நூலுக்கான முகவுரையில் கீழ்க்காணுமாறு குறிப்பிடுகிறார்.

'வேளாண்மையைச் சீர்திருத்தி முன்னேற்றமடையச் செய்வதன் மூலம் வேளாண்மை உழைப்பாளர்களின் சிக்கலுக்குத் தீர்வு கண்டுவிட முடியாது. அச் சிக்கலுக்குத் தீர்வு காண நாட்டைத் தொழில்மயமாக்குவது இன்றியமையாதது. அதன் மூலம் வேளாண்மை உழைப்பாளர்களின் நிலை கணிசமான அளவிற்கு உயரும்.'

### 4. நிலப் பகிர்வு

நிலச் சீர்த்திருத்தங்களின் மூலம் நிலவுடைமைகளின்மீது உச்சவரம்பு விதிக்கப்படுகின்றது. அதனால், பெறப்படுகின்ற உபரி நிலம் நிலமற்ற உழைப்பாளரிடையே மறுபகிர்வு செய்யப்படுகிறது. வேளாண்மை உழைப்பாளர்களுள் சிலர் சிறிய அளவில் நிலவுடைமைகளைக் கொண்டிருக்கின்றார்கள். அவர்களுக்கும் உபரி நிலம் அளிக்கப்படுகின்றது. இதனால், சாகுபடி நிலங்களின் சராசரி அளவு கூடுகின்றது. உற்பத்தித் திறன் அதிகரிக்கின்றது. வருமான உயர்வு ஏற்படுவதால், சேமிக்கும்திறன் பெருகி உற்பத்திக்கான முதலீட்டின் அளவும் உயர்கிறது. சிறிய அளவில் வெவ்வேறு இடங்களில் சிதறிக் கிடக்கும் துண்டு நிலங்கள் ஒருங்கிணைக்கப்பெறுகின்றன. கடந்த 15 ஆண்டுகளில் சுமார் 8 மில்லியன் ஏக்கர்கள் நிலம் நிலமற்ற உழைப்பாளரிடையே பகிர்ந்தளிக்கப்பட்டுள்ளது. மூன்றாவது திட்டம் 30 மில்லியன் ஏக்கர்கள் துண்டு நிலத்தை ஒருங்கிணைக்கக் கருதியது. நிலம்

மறுபகிர்வால் மிகக் குறைவான வேளாண்மை உழைப்பாளர்கள் மட்டுமே பயனடைந்துள்ளார்கள்.

5. அரசல்லாத அமைப்புகள் எடுத்துள்ள நடவடிக்கைகள்

இதற்கு உதாரணமாக விநோபா தொடங்கிய பூதான, கிராம தான இயக்கங்களைக் குறிப்பிடலாம். அவற்றைப்பற்றிச் சுருக்கமாகப் பின்வருமாறு விளக்கலாம்.

1. பூதான இயக்கம்: இவ் வியக்கத்தைத் தொடங்கிய ஆச்சாரிய விநோபா பாவே, கால் நடையாகவே நாட்டின் பல இடங்களுக்கும் சென்று நிலவுடைமையாளர்களிடமிருந்து நிலத்தைத் தானமாகப் பெற்றார்; பாத யாத்திரையாக அவர் கிராமம் கிராமமாகச் சென்று நிலத்தைத் திரட்டினார். 'எல்லா நிலமும் கடவுளுக்குச் சொந்தம்!' என்று அவர் பல கூட்டங்களிலும் பேசி நிலவுடைமையாளர்களிடமிருந்து நிலத்தைப் பெற்றார். மக்களுடைய மனத்தில் அவர் இரக்க உணர்வைத் தோற்றுவித்தார். திரட்டப்பெற்ற நிலம், நிலமற்ற உழைப்பாளர்களுக்கு அளிக்கப்பட்டது.

முதலில் பூதான இயக்கம் 2,50 000 ஏக்கர்கள் நிலத்தைத் தானமாகப் பெறத் திட்டமிட்டது. தொடக்கத்தில் இவ் வியக்கத்திற்கு அதிக ஆதரவு இருந்தமையால், குறியளவு 50 மில்லியன் ஏக்கர்களாக உயர்த்தப்பட்டது. அதன் மூலம் நிலமற்ற உழைப்பாளர் ஒவ்வொருவருக்கும் குறைந்தது ஓர் ஏக்கர் நிலத்தையாவது அளிக்கலாம் என்று கருதப்பட்டது. கடந்த சில ஆண்டுகளில் இவ் வியக்கத்தின் செல்வாக்கு மிகவும் குறைந்து விட்டது. ஆகஸ்ட் 1960 வரை 44 இலட்சம் ஏக்கர்கள் மட்டுமே தானமாகப் பெறப்பட்டுள்ளன. இதில் குறைந்த வீத நிலமே மறு பங்கீடு செய்யப்பட்டுள்ளது. திரட்டப்பட்ட நிலத்தில் சுமார் ஐந்தில் ஒரு பகுதி மட்டுமே நிலமற்ற உழைப்பாளர்களுக்கு அளிக்கப்பட்டிருக்கின்றது. உண்மையான பூதான, சர்வோதயத் தொண்டர்களின் பணியால் இவ்வியக்கத்தை மேலும் வளர்க்கலாம்.

பூதான இயக்கத்தின் நோக்கம் நிலவுடைமையாளர்களை அவர்களாக நிலத்தை அன்பளிப்பாகத் தருமாறு செய்வதாகும். பெருநிலக்கிழார்களிடையே இது தருமச் சிந்தனையை வளர்க்கிறது. மகாத்மா காந்தியோடு தொடர்பைக் கொண்டிருந்த விநோபா, 1951-ல் இவ் வியக்கத்தைத் தொடங்கினார். முதலில் இது ஹைதிராபாத்தில் தெலுங்கானா பகுதியில் தொடங்கப்பட்டது.

அதற்கு முன்னர், அங்குச் சாகுபடியாளரிடையே இருந்த 'நிலப் பசியால்' பல குழப்பங்கள் நிலவின. காந்தீய முறையில் அமைதியாக இவ் வியக்கம் செயல்படுகின்றது. விநோபா கூறுவதாவது, 'சமதர்மச் சமுதாயத்தில் எல்லாரும் நிலத்தைப் பெற்றிருக்க வேண்டும். ஏழைகள் யாவரும் நிலத்தை உடைமையாகப் பெறும் உரிமையைக் கொண்டிருப்பதால், நிலவுடைமையாளர்களிடத்தில் நாங்கள் பங்கு கேட்கின்றோம்.' சமுதாயத்தில் உள்ள குறைபாடுகளைக் களையும் நோக்கத்தைப் பூதான இயக்கம் பெற்றுள்ளது. நாட்டு மக்கள் அனைவருக்கும் நல் வாழ்வை அளிக்கத் தருமச் சிந்தனை செல்வந்தர்களிடையே வளர வேண்டுமென அது கூறுகின்றது.

**வளர்ச்சி**

பூதான இயக்கம் ஆரம்ப காலத்தில் சிறப்பான வெற்றியைப் பெற்றது. திட்டமிட்டதற்கு அதிகமாகவே மார்ச் 1954ஆம் ஆண்டிற்குள்ளாக 25 லட்சம் ஏக்கர்கள் நிலம் தானமாகப் பெறப்பட்டது. அதன் பின்னர், அதன் வளர்ச்சி குன்றியது, செப்டம்பர் 1970-ல் வெளியிடப் பெற்ற புள்ளிவிவரங்களின்படி 41,76 லட்சம் ஏக்கர்கள் நிலம் தானமாகப் பெறப்பட்டுள்ளது; அதில் 11,75 லட்சம் ஏக்கர்கள் மட்டுமே நிலமற்ற விவசாயிகளிடையே பகிர்ந்தளிக்கப்பட்டிருக்கின்றன. சுமார் 18.55 இலட்சம் ஏக்கர்கள் நிலம் சாகுபடிக்குப் பயன்படுத்த முடியாதனவாக இருக்கின்றன.

இவ் வியக்கம், அதிக வெற்றியைக் கண்டுள்ள மாநிலம் பீஹார் ஆகும். அன்பளிப்பாகப் பெறப்பட்டுள்ள மொத்த நிலத்தில், சுமார் 50 சதவீதம் நிலம் அம் மாநிலத்தில் இருந்தே கிடைத்தது. அதைத் தொடர்ந்து உத்தரப்பிரதேசம், மத்தியப் பிரதேசம் ஆகிய மாநிலங்கள் பூதான இயக்க வளர்ச்சியின் முன்னணியில் நிற்கின்றன,

மேற்கு வங்காளத்தில் அளிக்கப்பட்ட நிலத்தில் மூன்றில் இரு பங்கு நிலம் சாகுபடிக்குப் பயன்படுத்த முடியாததாக உள்ளது. பீஹார், டில்லி, உத்தரப்பிரதேசம் ஆகிய இடங்களில் சுமார் 50 சதவீத நிலம் இத்தகையதாகும்.

அன்பளிப்பாகப் பெறப்பட்ட நிலத்தைப் பகிர்வு செய்யும் வேகம் அஸ்ஸாம், கேரளம் பஞ்சாப், ஹரியானா, மத்தியப் பிரதேசம், ராஜஸ்தான் ஆகிய மாநிலங்களில் குறைவாக இருக்கிறது'.

தானமாக வாங்கப்பெற்ற மொத்த நிலத்தில் சுமார் 18.55 லட்சம் ஏக்கர்கள் நிலம் உற்பத்திக்கு உபயோகப்படுத்த முடியாத நிலையைக்கொண்டுள்ளது.

பூதான இயக்க வளர்ச்சிக்காகப் பல மாநில் அரசுகள் சட்டங்களை நிறைவேற்றியுள்ளன. நிலத்தைத் தானமாகப் பெற்று நிலமற்ற விவசாயிகளிடையே பகிர்வு செய்ய இவை உதவுகின்றன. இவ் வியக்கம் சட்டப்பூர்வமாக அங்கிகரிக்கப்பட்டுள்ளது. நிலத்தை அன்பளிப்பாகப் பெறவும், அளிக்கவும் பூதானக் குழுக்கள் எல்லா மாநிலங்களிலும் அமைக்கப்பட்டுள்ளன.

சுதந்திரமடைந்து 25 ஆண்டுகளுக்குப் பின்னரும் (பூதான இயக்கம் தொடங்கி 21 ஆண்டுகளுக்குப் பிறகும்) சிறிய அளவு நிலத்தைக்கூட நிலமற்ற விவசாயிகள் யாவருக்கும் அளிக்க முடியவில்லை. பூதான இயக்கம் வெவ்வேறு மாநிலங்களிலும் எந்த அளவில் நிலத்தைப் பெற்று மறுபகிர்வு செய்துள்ளது என்பதைப் பின்வரும் அட்டவணைமூலம் அறியலாம்.

**பூதானம்: பல மாநிலங்களில் அன்பளிப்பும், பகிர்வும்**

| மாநிலம் | பெறப் பட்டுள்ள நிலம் (ஏக்கரில்) | பகிரப் பட்டுள்ள நிலம் (ஏக்கரில்) | சாகுபடிக்குப் பயன்படுத்த முடியாத நிலம் (ஏக்கரில்) | எஞ்சியுள்ள நிலம் (ஏக்கரில்) |
|---|---|---|---|---|
| அஸ்ஸாம் | 11,935.00 | 265.00 | — | 11,670.00 |
| ஆந்திரம் | 2,41,952.00 | 1,03,351.00 | 86,385.00 | 52,216.00 |
| ஒரிஸ்ஸா | 1,85,782.80 | 96,463.96 | — | 89,318.84 |
| உத்தரப்பிரதேசம், | 4,35,457.54 | 2,10,090.73 | 2,01,653.40 | 23,733.41 |
| கேரளம் | 26,393.00 | 5,774.00 | 7,999.00 | 12,520.00 |
| தமிழ்நாடு | 51,330.00 | 16,394.00 | — | 34,936.00 |
| டில்லி | 300.00 | 180.00 | 120.00 | — |
| பஞ்சாப், ஹரியானு | 14,739.00 | 3,601.00 | 3,380.00 | 7,758.00 |
| குஜராத் | 1,03,530.21 | 50,924.28 | — | 52,605.93 |
| மஹாராஷ்டிரம் | 1,05,094.24 | 70,950.27 | 3,315.81 | 30,828.17 |
| மத்தியப்பிரதேசம் | 4,05,786.13 | 1,73,062.89 | 56,476.96 | 1,76,246.28 |
| மைசூர் | 15,864.00 | 2,123.00 | — | 13,741.00 |
| மேற்கு வங்காளம் | 12,960.00 | 3,898.00 | 8,426.00 | 636 00 |
| பீஹார் | 21,27,452.00 | 3,52,443.00 | 13,64,637.00 | 4,11,372.00 |
| ராஜஸ்தான் | 4,32,868.00 | 84,781.00 | 1,22,489.00 | 2,25,598.00 |
| ஹிமாசலப்பிரதேசம் | 5,240.00 | 2,531.00 | — | 2,709.00 |
| ஜம்மு-காஷ்மீர் | 211.00 | 5.00 | — | 206.00 |

**குறைபாடுகள்**

பூதான இயக்கத்தின் குறைந்த அளவு வெற்றிக்கு அதில் உள்ள குறைபாடுகளே காரணமாகும். அவற்றில் முக்கியமானவற்றைக் கீழ்க்காணுமாறு குறிப்பிடலாம்.

1. தானமாக அளிக்கப்பட்ட நிலங்கள் தரக்குறைவானதாக இருக்கின்றன. உரிமையில்லாத நிலங்களும் தானமாகத் தரப்படுகின்றன. அன்பளிப்பாகப் பெறப்பட்ட மொத்த நிலத்தில் 30 முதல் 40 சதவீத நிலம் மட்டுமே சாகுபடி செய்வதற்கு ஏற்றதாக உள்ளது.

2. நிலத்தைப் பெறுபவர்களிடம் சாகுபடி செய்வதற்குத் தேவையான கருவிகள், கால் நடைகள், விதைகள், உரங்கள் முதலியவை இருப்பதில்லை. எனவே, பெறப்படுகின்ற நிலத்தை அவர்களால் சிறப்பாகப் பயன்படுத்த முடிவதில்லை. நிலத்தை அளித்தபின்னர் அவர்களுக்கு எவ்வித உதவியும் தரப்படுவதில்லை.

3. அன்பளிப்பாகப் பெற்ற நிலத்தைப் பகிர்வு செய்யும் வேகம் குறைவதாக இருக்கின்றது. செப்டம்பர் 1970 வரை திரட்டப்பட்ட 41.76 இலட்சம் ஏக்கர்களில் 11.5 இலட்சம் ஏக்கர்கள் மட்டுமே பகிரப்பட்டுள்ளது.

4. பூதான இயக்கம் வேளாண்மைச் சீர்திருத்தச் சட்டங்களைச் செயல்படுவதற்குத் தடையாக உள்ளது. நிலமற்றவர்கள், சிறு விவசாயிகள் ஆகியோரிடையே விரக்தி நிலையை அது தோற்றுவிக்கிறது. அஃது அரசின் நிலப்பகிர்வு முறையினின்றும் வேறுபட்டது. பூதான இபக்கத்தின்மூலம் விரைவாக நிலப்பகிர்வைச் செய்ய இயலாது.

5. தானமாக அளித்த பின்னரும், நிலத்தின்மீது வரிவிதிக்கப்பட்டு நிலவுடைமையாளரிடமிருந்து வசூலிக்கப்படுகிறது. சட்டரீதியாக நிலத்தைத் தானமாகப் பெற்று மறுபகிர்வு செய்ய நீண்டகாலம் தேவைப்படுகிறது. 1968-ல் பீஹாரில் பூதானக் குத்தகையாளருக்கு நிலத்தை மாற்றுவதற்கான 50,000 விண்ணப்பங்கள் எந்தவித நடவடிக்கையும் எடுக்கப்படாமல் இருந்தன. நிலம் மாற்றங்கள் எல்லாவற்றிற்கும் சட்டவடிவம் கொடுப்பது குறைந்த காலத்தில் முடியாது.

6. பூதான இயக்கத் தொண்டர்கள் நிலத்தைப் பெறுவதிலும் பகிர்வதிலும் அதிக ஆர்வம் கொண்டிருக்கவில்லை. முறையாக

எல்லா நடவடிக்கைகளையும் செய்து முடிப்பதற்கான பொறுமை அவர்களிடம் இருப்பதில்லை.

7. நிலமற்ற உழைப்பாளர்களுக்கு அளிக்கப்படும் சராசரி நிலவுடைமையின் அளவு மிகக் குறைவாக இருக்கின்றது. எனவே, நிரந்தர விவசாயிகளாக அவர்கள் நீடிப்பார்களா என்பது ஐயத்திற்குரிய ஒன்றேயாகும். இலாபகரமான சாகுபடியையும் அவர்களால் செய்ய முடியாது.

8. மத்திய அரசு இவ் வியக்கத்திற்கு ஒரு கோடி ரூபாய் நன்கொடையாகக் கொடுத்துள்ளது. அதில் 1968 வரை ரூ.35 இலட்சம் மட்டுமே செலவிடப்பட்டுள்ளது. இவ் வமைப்பின் அக்கறையின்மையை இது பிரதிபலிக்கின்றது.

9. அரசின் வருமானத் துறை அதிகாரிகளும், அலுவலர் களும் பூதான இயக்கத்தின் மேம்பாட்டிற்கான தங்களுடைய முழுமையான ஒத்துழைப்பை அளிப்பதில்லை.

இவ்விதக் குறைபாடுகளினுல் பூதான இயக்கம் பயனற்றது என்ற முடிவிற்கு வருவது தவருகும். அது தொடங்கப்பெற்றபோது இந்த அளவிற்கு வெற்றியைப் பெறும் என்று எவரும் எதிர்பார்க்க வில்லை. அரசிற்குச் சொந்தமான நிலங்களும் நிலமற்ற விவசாயி களுக்கு அளிக்கப்படுகின்றன. அவ்வகை நிலப்பங்கீடும் விரை வாகக் குறுகியகாலத்தில் செய்யப்படவில்லை என்பது குறிப்பிடத் தக்கது. நில உச்சவரம்புச் சட்டங்களைச் செயல்படுத்துவதற்கும் கால தாமதம் ஏற்படுகின்றது. மேலும், அவற்றின் மூலம் சிறப்பான நன்மைகளும் எதிர்பார்த்த அளவிற்குக் கிட்டவில்லை. அரசின் நடவடிக்கைகளோடு ஒப்பிடும்போது தனிப்பட்டவர்களின் பூதான இயக்கம் இந்த அளவிற்காவது வெற்றியைப் பெற்றிருப்பது மெச்சுதற்குரியதாகும். இதில் உள்ள குறைபாடுகளை நீக்கு வதற்கான உதவிகளை மத்திய அரசும், மாநில அரசுகளும் அளிக்க வேண்டும்.

பூதான இயக்கம் எவ்வாறு செயல்படுகின்றது என்பதை அறிய பம்பாய்ப் பல்கலைக் கழகத்தின் வேளாண்மைப் பொருளா தாரப் பிரிவு 6 கிராமங்களில் ஆய்வு ஒன்றை நடத்தியது. அந்த ஆய்வின் முடிவுகள் பின்வருமாறு காணப்பட்டன.

1. நிலத்தைத் தானமாக அளிக்க வாக்குறுதி தந்தவர்களில் சிலர் அதை நிறைவேற்றவில்லை.

2. சில நிலமற்ற உழைப்பாளர்கள் பூதான நிலத்தைப் பெற மறுத்துவிட்டனர். ஏனெனில், அவர்களிடம் சாகுபடிக்குத் தேவையான கருவிகளும், கால் நடைகளும், பிற சாதனங்களும் இருக்கவில்லை.

3. சாகுபடிக்குப் பயன்படுத்த முடியாத நிலங்களையும் சில நிலமற்ற உழைப்பாளர்கள் மறுத்துவிட்டார்கள்.

4. தானமாகப் பெறப்பட்ட நிலம் குறைந்த வேகத்திலேயே பகிர்வு செய்யப்பட்டது. எனவே, நிலம் நீண்ட காலத்திற்குச் சாகுபடி செய்யாமல் தரிசாக விடப்பட்டது.

பூதான இயக்கத்தின் மூலம் சாகுபடி நிலங்கள் உட்பிரிவு படுத்தப்படுகின்றன. மிகச் சிறிய அளவு நிலங்கள் வெவ்வேறு இடங்களினின்றும் தானமாகப் பெறப்படுகின்றன. தனியார் சொத்துரிமைக்கு இஃது ஊக்கமளிக்கிறது. ஏனெனில், பூதான இயக்கம் நிலமற்ற உழைப்பாளர் ஒவ்வொருவருக்கும் ஓர் ஏக்கர் நிலத்தையாவது அளிக்க வேண்டுமென்று கூறுகிறது. எனினும், இதைச் சமுதாய நன்மைகள் சிலவற்றை அளிக்கக்கூடியது என்று கருதலாம். நாட்டின் நிலச் சீர்திருத்தங்கள் ஓரளவு வெற்றியடைய இதுவும் உதவியுள்ளது.

2. கிராமதான இயக்கம்: இதைத் தொடங்கியவரும் விநோபாவே ஆவார். நிலத்தின்மீதான தனியார் சொத்துரிமையைக் குறைக்கவேண்டும் என்ற நோக்கத்தைக் கொண்டதாக இஃது இருக்கிறது. உத்தரப்பிரதேசத்தில் 'மங்ரோத்' (Mangrowth) என்னும் கிராமத்தில் 1957-ல் கிராமதான இயக்கம் தொடங்கியது. அக் கிராமத்தில் இருந்த 65 குடும்பங்களும் தங்களுடைய நிலத்தை விநோபாவிடம் தானமாக அளித்தன. அதற்குப் பின்னர், ஓராண்டிற்குள்ளாகச் சுமார் 4000 கிராமங்கள் தானமாக அளிக்கப் பெற்றன. சர்வோதயத் தொண்டர்களின் பற்றுக்குறையால் தற்பொழுது இவ் வியக்கத்தின் செல்வாக்குக் குறைந்துவிட்டது. நிலத்தைத் தானமாக அளிக்க வேண்டுமென்ற எண்ணம் கொண்டவர்களும் குறைந்து வருகின்றனர்.

பூதான இயக்கத்தைவிடக் கிராமதான இயக்கம் விரும்பத்தக்கது. ஏனெனில், இம் முறையில் நிலம் தனியார் உடைமையாக இருப்பதில்லை. கிராமத்தில் உள்ள அனைவரும் கூட்டாகச் சாகுபடி செய்கின்றனர். கிராமதானக் கிராமம், போதுமான கடன் வசதிகளைப் பெற முடிகிறது. அது பேரளவில் பொருள்களை

வாங்கவும் விற்கவும் இயலும். கிராமம் ஒரு குடும்பத்தைப்போல வாழ்கின்றது. கிராமம் முழுவதும் மக்களின் பொதுவுடைமையாக இருக்கின்றது. சாகுபடி நடவடிக்கைகளைப் பேரளவில் மேற்கொண்டு உற்பத்தியைப் பல மடங்கு பெருக்கலாம். வறுமையை விரட்ட இம் முறை வழிகோலும்.

கிராமதான இயக்கம் பூதான இயக்கத்தின் ஒரு முதிர்ச்சி நிலை அல்லது வளர்ச்சி நிலை எனலாம். ஆகஸ்ட் 1967 வரை கிராமதானமாகப் பெறப்பட்ட கிராமங்களின் எண்ணிக்கை 39,672 ஆகும்.[1] வேளாண்மையல்லாத துறையில் வேறு வகைப்பட்ட தானங்களைப் (உடல் உழைப்பு, அறிவு உழைப்பு, பணம் முதலியவை) பெறவும் விநோபா இயக்கங்களைத் தோற்றுவித்துள்ளார்.

## மதிப்பீடு

குறைபாடுகளைக் கொண்டுள்ளமையால் இவ் வியக்கங்கள் சிறப்பான வெற்றியைப் பெறவில்லை. இந்தியாவில் நிலமற்ற உழைப்பாளர்கள் கணக்கற்றவர்களாக இருக்கின்றனர். அப் பெரிய சிக்கலைத் தீர்க்க இச்சிறிய பூதான இயக்கத்தால் இயலாது. ஆனால், இதன் முக்கியத்துவத்தை வெற்றி தோல்விகளின் அடிப்படையில் ஆராய்வது தவறு. மாநில அரசுகளின் நிலச்சீர் திருத்தங்களால் இடை நிலையாளர்கள் நீக்கப்படுகின்றனர்கள். நிலவுடைமைகளின்மீது உச்சவரம்பு கொண்டுவரப்படுகின்றது. இந்த நடவடிக்கைகள் வேளாண்மை உழைப்பாளர்களைக் காட்டிலும் குத்தகையாளர்களுக்கே அதிக நன்மைகளை அளிக்கின்றன. நிலமற்ற உழைப்பாளர்களுக்கு நிலமளிக்க பூதான இயக்கத்தை வலுப்படுத்த வேண்டும். ஆகவே, இவ் வகையில் இவ் வியக்கம் முக்கியத்துவம் வாய்ந்ததாகத் திகழ்கின்றது.

பூதான இயக்கத்தில் நிலம் கட்டாய முறைகளால் பெறப்படுவதில்லை. சமுதாயத்தில் சமத்துவம், நல்லெண்ணம், கூட்டுறவு, முயற்சி ஆகியவை தோன்ற இஃது உதவும். இவ் வியக்கத்திற்கு எதிரானது 'நிலப்பறி இயக்கமாகும்' (Land-grab Movement). 1970 ஆம் ஆண்டிலிருந்து நிலப்பறி இயக்கம் நாட்டின் பல பகுதிகளிலும் விரைவாகப் பரவி வருகிறது. நிலப்பகிர்வு முறையில் உள்ள குறைபாடே இதற்கு முக்கியக் காரணமாகும். இக் குறைபாட்டை ஓரளவு குறைக்க பூதான இயக்கம் உதவுகின்றது. நக்சல் பாரிகளின் தீவிர நடவடிக்கைகளை நீக்க நிலச் சீர்த்திருத்தங்களில் உள்ள குறைபாடுகளைக் களையவேண்டும். நிலமற்றவர்களுக்கு

[1] India 1969, p. 255.

வேளாண்மையல்லாத துறைகளில் வேலைவாய்ப்புகளை ஏற்படுத்தித் தருவது நல்லது.

நிலச் சீர்திருத்தங்களைச் சிறப்பாகச் செய்வதற்கான நல்ல சூழ் நிலைகளையும் பூதான இயக்கம் ஏற்படுத்தித் தரும்; புதிய நிலக் கொள்கையை நிறைவேற்ற இது பொதுமக்களின் ஆதரவைத் தேடித்தரும்.

இவ் வியக்கம் உத்தம அளவில் சாகுபடி நிலங்கள் அமைய உதவவில்லை. கூட்டுறவுப் பண்ணைகளை அமைப்பதன் மூலம் [redacted] குறைபாட்டைத் தவிர்க்கலாம். நிலமற்ற உழைப்பாளர்களின் பிரச்சினைக்குத் தீர்வுகாண வேறு சில முறைகளையும் பின்பற்ற வேண்டும். வேளாண்மை உழைப்பாளர்கள் மற்றவர்களைப்போல உயர அரசு நடவடிக்கைகளை எடுப்பது இன்றியமையாதது.

பூதான நிலத்தைப் பகிர்வு செய்ய நீண்ட காலம் பிடிப்பதைப் போன்றே, கிராமதான நிலத்தைப் பங்கிடவும் அதிகக் கால தாமதம் ஏற்படுகின்றது. கிராமதானம் எவ்வாறு செயல்பட வேண்டுமென்ற நோக்கத்தைக் கொண்டுள்ளதோ அதற்கேற்ப செயல்படவில்லை, சான்றாகக் கிராமதான இயக்கம் அளித்த நிலத்தைக் கொண்டுள்ள கிராமங்களில் கூட்டுறவு முறையில் சாகு படி செய்யப்படுகிறது என்று கூற இயலாது. கிராமதானக் கிராமத்தில் ஒவ்வொரு குடும்பத்தின் அளவிற்கும் ஏற்ப உற்பத்தி பங்கிடப்பட வேண்டும். ஆனால், இக் கொள்கை முன்னர், பெரிய நிலவுடைமையாளராக இருந்தவர்களால் ஏற்றுக்கொள்ளப்படுவ தில்லை. அவர்கள் உற்பத்தியில் அதிகப் பங்கைக் கேட்கின்றார்கள். உற்பத்தியில் சுமார் 20 சதவீதம் மட்டுமே சரியான கொள்கையின் அடிப்படையில் பங்கிடப்படுகின்றது; எஞ்சிய 80 சதவீத உற்பத்தி பெரிய நிலவுடைமையாளர்களுக்கு அளிக்கப்படுகின்றது. கிராமதானக் கொள்கைப்படி நிலத்தைப் பிரிக்கக்கூடாது. ஆனால், நடைமுறையில் சாகுபடி நிலம் சிறிய அளவுகளில் பிரிக்கப் படுகிறது. பகிர்வுக்குப் பின்னர் நிலத்தை விற்கவோ, அடைமானம் வைத்துக் கடன் பெறவோ முடியாது. கூட்டுறவுச் சங்கங்களும் கடனளிக்க மறுக்கின்றன.

பூதான கிராமதான மாநிலங்களுக்கு மாநில அரசுகள் வெவ்வேறு சலுகைகளைத் தருகின்றன. அதற்காகத் தனிச் சட்டங் களும் நிறைவேற்றப்படுகின்றன. இவ் வியக்கங்கள் புதிய சில சிக்கல்களைத் தோற்றுவித்துள்ளன. எனினும் சமுதாயப் புரட்சி யைத் தோற்றுவிப்பதால் இவற்றை இன்னும் சில காலம்

அனுமதிக்கலாம். இதுபற்றிப் பேராசிரியர் டி. ஆர். காட்கில் கூறியதாவது, 'கிராமதான முறையைப் பரிசோதனை அடிப்படையில் செயல்படுத்துகின்ற இடங்களில் தனிச்சிறப்பான சட்டங்களும், நிர்வாக முறைகளும் தேவைப்படும். அதன் குறைபாடுகளைக் குறுகிய காலத்தில் கண்டறிய முடியாது. அரசும், கிராமதான இயக்கத்தினரும் முயற்சியின் விளைவுகளை நன்குணர வேண்டும். கணிசமான காலத்திற்குச் செயல்பட அனுமதித்தால்தான் அதன் நன்மை தீமைகளை அறிய முடியும்.'

### திட்டக்காலத்தில் வேளாண்மை உழைப்பு

சமுதாயத்தின் மிகத் தாழ்ந்த நிலையில் உள்ள வேளாண்மை உழைப்பாளர்கள் சுரண்டப்படுகின்றனர். 'வறுமைக்கோட்டிற்குக்' (Poverty line) கீழாகவே அவர்களுடைய வருமானம் இருக்கின்றது. பராமரிப்பு மட்டத்திற்குக் குறைவான வருமானத்தைப் பெறும் அவர்கள் முன்னேறுவதற்கான வாய்ப்பே இருப்பதில்லை; குறைந்த வருமானத்தைப் பெறுவதிலும் உறுதியற்ற நிலையைக் கொண்டிருக்கின்றனர்கள். இதுபற்றி முதல் திட்டம் குறிப்பிட்டதாவது, 'மக்கள் தொகை அடர்த்தியாக உள்ள இடங்களில் வேளாண்மை உழைப்பாளர்கள் மிகுதியாக இருக்கின்றனர்கள். இதனால் வேளாண்மையைத் தவிர்த்த பிற துறைகளின் முன்னேற்றம் தடைப்படுகின்றது. அவ்விடங்களில் 'சமுதாய வளர்ச்சித் திட்டம் முதலிய சிறப்புத் திட்டங்களை மேற்கொள்வதன்மூலம் வேளாண்மை உழைப்பாளர்களின் சிக்கலுக்குத் தீர்வு காணமுடியும். வேலையின்மை, மறைமுக வேலையின்மை ஆகியவற்றைக் குறைத்து விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற இதுவே சிறந்த வழியாகும். இதனால் வேளாண்மை உழைப்பாளர்கள் புணர்வாழ்வைப் பெறுவர்; அவர்களுடைய வருமானம் அதிகரிக்கும்.'[1]

முதல் திட்டம் பின்வருவனவற்றை நிறைவேற்றவேண்டுமென்று கூறியது.

1. செறிவு முன்னேற்றப் பகுதிகளிலும், தாழ்ந்த கூலி அளிக்கப்படுகின்ற இடங்களிலும் குறைந்தபட்சக் கூலி நிர்ணயம் செய்யப்படவேண்டும்.

2. வீட்டு வசதிக்கான இடத்தை வாங்குவதற்கான உரிமை நிலமற்ற உழைப்பாளர்களுக்கு வழங்கப்படவேண்டும்.

3. உழைப்பாளர்க் கூட்டுறவுச் சங்கங்களை அமைத்தல் அவசியம்.

[1] First Five-year Plan, p. 205.

4. புதிதாகச் சாகுபடிக்கு எடுத்துக்கொள்ளப்படும் நிலங்களை நிலமற்ற உழைப்பாளர்களுக்கு அளிக்கவேண்டும்.

முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் வேளாண்மை உழைப்பாளர்களுக்கான குறைந்தபட்சக்கூலி பஞ்சாப், ஒரிஸ்ஸா, ராஜஸ்தான், கூர்க், டில்லி, ஹிமாசலப்பிரதேசம், திரிபுரா, கட்ச் ஆகிய இடங்களில் நிர்ணயிக்கப்பெற்றது. பிற மாநிலங்களில் இரண்டாவது திட்டக்காலத்தில் கூலி நிர்ணயம் செய்யப்பட்டது.

முதல் திட்டத்தில் நிலமற்ற உழைப்பாளர்களின் மறுவாழ்விற்காக ரூ. 1.5 கோடி ஒதுக்கப்பட்டது; பின்தங்கிய வகுப்பினரின் நிலத்திற்காக ரூ 32 கோடி செலவிடப்பெற்றது.

இரண்டாவது திட்டக் காலத்தில் 1948ஆம் ஆண்டில் குறைந்த பட்சக் கூலிகளின் சட்டம் எல்லா மாநிலங்களுக்கும் விஸ்தரிக்கப்பட்டது. அத் திட்டத்தில் கிராம சிற்றளவுத் தொழில்களின் வளர்ச்சிக்காக ரூ. 200 கோடி முதலீடு செய்ய தீர்மானிக்கப்பட்டது. இது சமுதாயத்தில் தாழ்ந்த நிலையில் இருந்தவர்களின் நிலையை உயர்த்துவதற்கான நடவடிக்கையாகும். நிலமற்ற உழைப்பாளர்களின் வாழ்வைப் புனரமைக்க ரூ. 5 கோடியும், பின்தங்கிய வகுப்பினரின் நலனிற்காக ரூ. 90 கோடியும் செலவிடப்பட்டன. வேளாண்மை உழைப்பாளர்களுக்குப் பொருத்தமான வேலை வாய்ப்புகளை அளிக்காவிட்டால், விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவது தடைப்படும் என்பதை இரண்டாவது திட்டம் அறிந்திருந்தது. வேளாண்மை உற்பத்தியைக் கூட்டுவதற்கும், கால்நடைப் பராமரிப்பிற்கும் திட்டமிட்ட நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. வேலை வாய்ப்புகளைப் பெருக்க கிராமத் தொழில்களும், சிறிய தொழில்களும் விரிவாக வளர்க்கப்பட்டன. வேளாண்மை உழைப்பாளர்களின் திறன், அந்தஸ்து, ஊக்கம் ஆகியவற்றை உயர்த்த நிலம் மறுபகிர்வு செய்யப்பட்டது; கல்வி வசதிகள் விரிவாக்கப்பட்டன. அவர்களுடைய வாழ்க்கை நிலை திருந்த இவை உதவுமெனக் கருதப்பட்டது. முழு வேலைவாய்ப்பை அவர்களுக்கு அளிப்பதன் மூலமே சமூக நீதியைக் காக்கமுடியும்.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் ரூ. 5 கோடி செலவழிக்கப்பட்டமையால் 20,000 நிலமற்ற உழைப்பாளர்க் குடும்பங்கள் புனர் வாழ்வைப்பெற்றன. சுமார் ஓர் இலட்சம் ஏக்கர்கள் நிலம் அவர்களுக்கு அளிக்கப்பட்டது. இவர்களைக் காட்டிலும் அதிக நன்மையைப் பின்தங்கிய வகுப்பினரே

பெற்றனர். அவர்களுடைய முன்னேற்றத்திற்காக அரசு அதிகச் செலவுகளைச் செய்தது.

மூன்றாவது திட்டத்தில் இவர்களின் முன்னேற்றத்திற்காக நீர்ப்பாசன வசதிகள், நில வளப் பாதுகாப்பு, கிராமத் தொழில்கள் ஆகியவற்றைப் பெருக்க வழிமுறைகள் பின்பற்றப்பட்டன. நிலமற்ற உழைப்பாளர்களின் மறுவாழ்வுத் திட்டங்களுக்காக ரூ. 7 கோடி ஒதுக்கப்பட்டது. அதன்மூலம் 50 லட்சம் ஏக்கர்கள் நிலம் சுமார் 7 இலட்சம் குடும்பங்களுக்கு அளிக்கப்படும். கடந்த 15 ஆண்டுகளில் சுமார் 10 மில்லியன் ஏக்கர்கள் நிலம் நிலமற்ற வேளாண்மை உழைப்பாளர்களுக்கு அளிக்கப்பட்டுள்ளது. வீடு கட்டுவதற்கு இடமளிக்கும்பொருட்டுக் கிராமங்களில் நிலம் வாங்கும் திட்டமும் கைக்கொள்ளப்பட்டது. பூதான இயக்கத்தால் பெறப்பட்ட நிலம் பல மாநிலங்களின் நிலமற்ற உழைப்பாளர்களுக்கு அளிக்கப்பெற்றது.

**நான்காவது திட்டமும் வேளாண்மை உழைப்பும்**

எளிய நிலையில் உள்ள சாகுபடியாளர்கள், வேளாண்மை உழைப்பாளர்கள் ஆகியோருடைய பிரச்சினைகளைத் தீர்க்க இரு வகை நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. முதல்வகை நடவடிக்கைகள் நிலச்சீர்த்திருத்தங்கள் பற்றியவை. இரண்டாவதுவகை நடவடிக்கைகள் வேலை வாய்ப்புகளைப் பெருக்கும் நோக்கம் கொண்டவை.

நிலச்சீர்த்திருத்தங்கள்: நிலமற்ற வேளாண்மை உழைப்பாளர்களின் வாழ்க்கைத் தரத்திற்கும் நிலச் சீர்த்திருத்தங்களுக்கும் நெருங்கிய தொடர்புள்ளது. சாகுபடிக்கு ஏற்ற தரிசு நிலங்களை உடைமையாகக்கொண்ட மாநில அரசுகள் அவற்றை நிலமற்ற உழைப்பாளர்களுக்கு அளிக்கலாம்; அல்லது உச்சவரம்பின் மூலம் பெறப்பட்ட நிலத்தைத் தரலாம். முறையாக உபரி நிலங்களைப் பகிர்வு செய்வதில் மாநில அரசுகள் கவனத்தைச் செலுத்தவேண்டும். நிலத்தை அளிப்பதோடு கடன் வசதியையும் பிற வசதிகளையும் தருவது நிலமுன்னேற்றத்திற்கு உதவும். அமோக விளைச்சலைத்தரும் உற்பத்தி முறைகளையும், செறிவு முறைச் சாகுபடியையும், பலபோகச் சாகுபடியையும் கைக்கொண்டால் வேலை வாய்ப்புகள் பெருகும். இதன்மூலம் உழைப்பாளர்கள் நன்மையடைவர். குத்தகைச் சீர்த்திருத்தங்களாலும் கிராம மக்கள் வாழ்க்கை நலன் பெருகும்.

குத்தகையாளர்களின் குத்தகை உரிமைக்குப் பாதுகாப்பு அளிப்பதாலும் நிலமற்ற வேளாண்மை உழைப்பாளர்கள்

எண்ணிக்கையில் பெருகுவதைக் குறைக்கலாம். தற்பொழுது கிராமங்களில் உள்ள குறைந்த அளவு வசதிகளைப் பெறப் பலரும் போட்டியிடுகின்றனர். குத்தகையாளர்களுக்கான பாதுகாப்பு மறைமுகமாக இப்போட்டியைக் குறைக்க உதவும்.

வேலை வாய்ப்புகளைப் பெருக்கும் நடவடிக்கைகள்: வேளாண்மை உழைப்பாளர் சிக்கலைத் தவிர்ப்பதற்கான மற்றொரு தீர்வு பல வகைப்பட்ட வேலைவாய்ப்புகளைப் பெருக்குவதாகும். பகுதி நேர வேலைகளை ஏற்படுத்துவதும் இன்றியமையாதது. வேளாண்மை யோடு தொடர்புடைய வேலைவாய்ப்புகளைப் பெருக்குவதும் நல்லது. சமுதாய மேலமைப்புப் பணிகளிலும், கிராமத் தொழில் களிலும் வேளாண்மை உழைப்பாளர்களை ஈடுபடுத்தலாம். தொழி லோடு தொடர்புடைய வேலை வாய்ப்புத் திட்டங்களை நிறை வேற்றுவது அவசியம். சந்தையோடு தொடர்புடையதாக வேளாண்மைப் பொருளாதாரத்தை மாற்றவேண்டும். சிறுதொழில் களைச் சிறிய நகரங்களுக்கு அருகிலேயே அமைக்கலாம். அதன் மூலம் அவற்றின் பொருள்களுக்கான தேவையைப் பெருக்கலாம். இந்தியாவில் தெரிந்தெடுக்கப்பட்ட 40 மாவட்டங்களில் வேலை வாய்ப்புகளை அதிகரிப்பதற்கான திட்டங்கள் கைக்கொள்ளப் பட்டுள்ளன. கோழிப்பண்ணைகளையும், பால் பண்ணைகளையும் ஏற் படுத்திக் கிராம மக்களின் வருமானத்தை உயர்த்தலாம்.

வேளாண்மைப் பொருள்களைச் சேமித்து வைப்பதற்கான 'கிடங்கு வசதிகள்' (Warehousing facilities), அவற்றைச் சந்தைப் படுத்துவதற்கான விற்பனை வசதிகள் ஆகியவற்றைப் பெருக்கு வதாலும் வேலைவாய்ப்புகள் அதிகரிக்கும். கூட்டுறவுத் துறையின் மூலம் இவற்றை வளர்க்கலாம், சிறிய விவசாயிகளும், வேளாண்மை உழைப்பாளர்களும் இவற்றால் நன்மையடைவர். அமைப்பு நிறுவனங்களின் கடன்கள் இத் திட்டங்களுக்குக் கணிச மான அளவில் கிடைப்பதில்லை. எனவே, இத் திட்டங்கள் செயல் படுகின்ற பகுதிகளுக்கு நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தின் மூலம் ரூ. 10 கோடி குறுகிய காலக் கடனும், ரூ. 30 கோடி இடைக் கால, நீணட காலக் கடன்களும் வழங்கப்பெறும்.[1]

நான்காவது திட்ட அறிக்கை குறிப்பிட்டதாவது, 'நாட்டின் பல பகுதிகளிலும் முன்னேற்றத்தின் நன்மைகள் குறிப்பிடத்தக்க அளவில் வேளாண்மை உழைப்பாளர்களால் அடையப்பெறவில்லை. வேளாண்மை உழைப்பாளர்களின் பெரும் பகுதியினர் பொருளா

1 Fourth Five-Year Plan (Final) May, 1970, pp. 151 - 52, 180.

தாரச் சிக்கல்களோடு சமுதாயத் தாழ்வு நிலையையும் கொண்டிருக்கின்றார்கள். அவர்களுடைய நிலையை உயர்த்த வேளாண்மை அமைப்பில் அடிப்படை மாற்றங்களைச் செய்யவேண்டும். நிலம் மறுபகிர்வு முறையைக் கைக்கொண்டு கூட்டுறவுப் பண்ணைகளை அமைத்தல் அவசியம். தொழில் வளர்ச்சியையும், பொருளாதார முன்னேற்றத்தையும் பெறுவது அவர்களின் வேலை வாய்புகளைப் பெருக்கும். சிறு தொழில்களைச் சிறிய நகரங்களிலும், கிராமப்புறங்களிலும் பரவலாக அமைக்கவேண்டும். கிராமப் பணிகளின் திட்டம் பல பகுதிகளிலும் பிரச்சினைகளுக்குத் தீர்வுகாண உதவும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. ஹரிஜனங்கள், வேளாண்மை உழைப்பாளர்கள், சிறு விவசாயிகள் ஆகியோருக்கு வீடுகட்டுவதற்கான இடத்தை ஒதுக்கும் திட்டத்தை விரைவாக நிறைவேற்றவேண்டும்.

இத்திட்டம் தரிசு நிலங்களைச் சாகுபடி நிலங்களாக மாற்றுவதற்கு ரூ 45 கோடியும், தரிசு நிலங்களையும் உபரிநிலங்களையும், புதிதாகப்பெற்ற நிலவுடைமையாளர்களுக்கு உதவித் தொகை வழங்க ரூ. 10 கோடியும் ஒதுக்கப்பட்டது,

திட்டமிட்டு முன்னேற்றம் பெற்றுள்ள அனுபவத்தினின்றும் அரசு, வேளாண்மை உழைப்பாளர்களின் நிலையை உயர்த்துவதற்கான நடவடிக்கைகளை எடுத்துள்ளது என்பதை அறியலாம். நடவடிக்கைகள் பல எடுக்கப்பட்ட பின்னரும்கூட வறுமைவிரட்டப்படவில்லை. வேலையின்மைச் சிக்கலுக்குத் தீர்வு காண்பதன்மூலம் வேளாண்மை உழைப்பாளர்களின் பிரச்சினையை முடிவுக்குக் கொண்டுவரலாம். கிராமத் துறையில், குறைந்த பட்சக்கூலிகளின் சட்டம் இயற்றப்பட்ட பின்னரும், உழைப்பாளர்களின் கூலி மிகத் தாழ்வாகவே உள்ளது. கிராம முன்னேற்றத்தைப் பெற நாம் முயற்சிகளை எடுக்கவேண்டும். விவசாயிகளுக்கு அதிக உதவியையும், வேளாண்மை உழைப்பாளர்களுக்குப் போதுமான அளவில் கூலியையும் உறுதியளித்தல் அவசியம். செறிவு முறையில் முன்னேற்றத்தைக் கிராமப்புறங்களில் பெறுவதன் மூலமே புனரமைப்புத் திட்டங்கள் வெற்றியடையும். வேளாண்மை உழைப்பாளர்களின் பிரச்சினைக்குத் தீர்வு காண வேலைவாய்ப்புகளைப் பெருக்குவது இன்றியமையாதது.

### வேளாண்மை அடிமைத்துவம் (Agrarian Serfdom)

வேளாண்மைச் சீர்திருத்தக் குழு, பண ஊதியம் பெறாத நில உழைப்பாளர்கள் நில அடிமைகளைவிட மோசமாக உள்ளது

என்று குறிப்பிட்டது. பெரும்பாலான மாநிலங்களில் வேளாண்மை அடிமைத்துவ நிலை அமைந்துள்ளது. வேளாண்மை உழைப்பாளர்களைச் சுரண்டி வாழ்பவர்களாகப் பெருநிலக்கிழார்கள் இருக்கின்றார்கள். இந்திய அரசியல் அமைப்புச் சட்டம் அடிமை முறையைக் குற்றமானது என்று குறிப்பிட்டாலும், வேளாண்மை உழைப்பாளர்களில் சிலர் இன்றும் அடிமைகளைப் போலவே வாழ்கின்றனர். எளியவர்களின் கழுத்தில் வலியவர்களின் பிடி மேலும் இறுகுவதற்குள் அரசு உழைப்பாளர்களின் புனர்வாழ்விற்கான நடவடிக்கைகளை உடனடியாக எடுத்தாகவேண்டும். அவர்களுக்கு இழைக்கப்படும் அநீதிகளை நீக்குவது அவசியமானதாகவும், அவசரமானதாகவும் இருக்கின்றது.

**தீர்வுகளுக்கான பரிந்துரைகள்**

நிலமற்ற உழைப்பாளர்களின் நிலையை உயர்த்தும்பொருட்டுப் பின்வரும் வழி முறைகளைப் பின்பற்றலாம்: (i) வேலைக் காலத்தை ஒழுங்கு படுத்துவது; (ii) எளிதாகப் பணியாற்றுவதற்கான வசதிகளைத் தோற்றுவிப்பது; (iii) பெண், குழந்தை உழைப்பாளர்களுக்குப் பாதுகாப்பளிப்பது; (iv) கல்வியையும், பிற புனரமைப்பு வசதிகளையும் தருவது; (v) சமுதாயப் பாதுகாப்பு நன்மைகளை வழங்குவது; (vi) வேளாண்மைத் துறையை முன்னேற்றமடையச் செய்வது ஆகியனவாம்.

**1. வேலைக்காலத்தை ஒழுங்குபடுத்துவது**

உழைப்பாளர்கள் நாளொன்றிற்கு அதிக மணிநேர உழைப்பைத் தர வேண்டியுள்ளது. இதை ஒழுங்குபடுத்துவது அவசியம். பெண்களை 10 மணி நேரத்திற்கு அதிகமாகவும், ஆண்களை 12 மணி நேரத்திற்கு அதிகமாகவும் வேலை வாங்குவதைத் தடுக்க வேண்டும். வாரம் ஒன்றிற்கு 56 மணிநேர வேலைக்கு அதிகமாக இருக்கக்கூடாது. வேலை நேரம் 8 மணிக்கு அதிகமாக இருந்தால் அதிக ஊதியம் அளிக்கப்படவேண்டும்.

இரண்டாவதாக வேளாண்மை உழைப்பாளர்களின் வேலை நேரத்தையும் நிர்ணயிப்பது அவசியமானதாகும்.

மூன்றாவதாக, காலை மாலை வேலை நேரங்களுக்கிடையே குளிர்காலத்திலும் மழைக்காலத்திலும் ஒரு மணி நேர ஓய்வும், வேனிற் காலத்தில் இரண்டு மணிநேர ஓய்வும் அனுமதிக்கப்பட வேண்டும். வேலை நேரம் கோடைக்காலத்தில் 10 மணியாகவும், மழைக்காலத்தில் 11 மணியாகவும், குளிர்காலத்தில் 9 மணியாகவும் இருக்கலாம்.

நான்காவதாக, குறித்த நேரத்திற்கு அதிகமாக உழைப்பாளரிடம் வேலை வாங்கக்கூடாது.

இறுதியாக, மழைக்காலத்திலும், குளிர்காலத்திலும் இரவுநேர வேலையைப் பெண்களுக்கும், குழந்தைகளுக்கும் அளிப்பதை முற்றிலுமாகத் தடுக்கவேண்டும்.

## 2. எளிதாகப் பணியாற்றுவதற்கான சூழ்நிலைகளைத் தோற்றுவிப்பது

'நெற்றி வியர்வை நிலத்தில் விழுமாறு' பாடுபடுபவர்களே வேளாண்மை உழைப்பாளர்கள் ஆவர். சுகாதாரமற்ற சூழ்நிலைகளில் நீண்ட நேரத்திற்குக் குறைந்த ஊதியத்தில் அவர்கள் உழைப்பைத் தருகின்றனர். மழைக்காலத்தில் சேறு சகதிகளிலும், கோடைக் காலத்தில் கொடிய வெய்யிலிலும் பணியாற்றுகின்றனர்; குளிர்காலத்தில் அதிகாலைப் பொழுதிலிருந்து காரிருள் சூழும் இரவுப் பொழுதுவரை செயல்படுகின்றனர். இவற்றின் காரணமாக அவர்கள் தோல் வியாதிகளால் பாதிக்கப்படுகின்றார்கள். எனவே எளிதில் பணியாற்றுவதற்கான வசதிகளைத் தோற்றுவிக்கவேண்டும்.

முதலாவதாக, ஆண் உழைப்பாளர்கள் மட்டும் மழைக்காலத்தில் பணியாற்ற அனுமதிக்கவேண்டும். ஏனெனில், நோய்கள் எளிதில் பரவுகின்றன; உழைப்பைத் தருவதும் கடினமானதாக உள்ளது.

இரண்டாவதாக, பெண்களும் சிறுவர்களும் சுகாதாரமற்ற சூழ்நிலையில் கடினமான உழைப்பைத் தருவது தடுக்கப்படவேண்டும்.

மூன்றாவதாக, தாய்மைப் பேற்றை அடைந்து 5 மாதம் முடிந்த பெண்களை உடல் உழைப்பைத் தருமாறு தூண்டக்கூடாது.

இறுதியாக, அரசு உழைப்பு அலுவலரை நியமித்து வேலையின் இயல்பு, காலம், நிபந்தனை ஆகியவற்றைக் கணித்துத் தக்க நடவடிக்கை எடுக்குமாறு செய்ய வேண்டும்.

## 3. பெண், குழந்தை உழைப்பாளர்களுக்குப் பாதுகாப்பளிப்பது

தொழில் துறையிலும், பணித் துறையிலும் பெண்கள் தாய்மையடைவதற்குச் சிறிது காலம் முன்னும் பின்னும் விடுமுறை அளிக்கப்படுகிறது. அதை வேளாண்மைத் துறைக்கும் விரிவுபடுத்த வேண்டும். மேலைநாடுகளில் இம் முறை மிகச் சிறப்பாக இயங்கி

வருகின்றது. தாய்மையடையும் பெண்கள் விடுமுறைக் காலத்திலும் ஊதியம் அளிக்கப்படுகின்றார்கள். இதற்குப் பொதுப் பணம் பயன்படுத்தப்படுகிறது; காப்புறுதி நிறுவனங்களும் உதவுகின்றன. குழந்தை பிறப்பதற்கு முன்னர் இரண்டு மாதங்களும், அதற்குப் பின்னர் ஒரு மாதமும் ஊதியத்தோடு விடுமுறை அளிக்கலாம். மேலும், குழந்தையைப் பாலூட்டிச் சீராட்ட நாளொன்றுக்கு இரு முறை அரைமணி நேர அனுமதி அளிக்கப்பட வேண்டும். கூறுவதற்கு இவை எளிதாக இருந்தாலும், செயல்படுத்துவது மிகக் கடினமானதாகும். அதிக முன்னேற்றமடைந்த நாடுகளில் மட்டுமே இவ்வசதிகள் முழுமையாகத் தரப்படுகின்றன.

பள்ளிக்கூட நேரங்களில் குழந்தைகளின் உழைப்பைப் பெறுவது நிச்சயமாகத் தடுக்கப்படவேண்டும். பள்ளிகளில் அவர்கள் இருப்பதைக் கட்டாயமாக்கவேண்டும். கடுமையான உழைப்பிலும் குழந்தைகளை ஈடுபடுத்தக்கூடாது. வேலைக்கு அமர்த்தப்பட்டாலும் வாரம் ஒன்றிற்கு ஒரு நாள் அவர்களுக்கு விடுமுறை அளிக்கவேண்டும். பொதுவாகக் கூறும்போது, உற்பத்தி நடவடிக்கைகள் யாவுமே இயந்திரமயமக்கப்பட்டுள்ள இன்றைய நிலையில் குழந்தைகளை வேலைக்கு அமர்த்துவது தவறானதாகும்.

## 4. வாழ்க்கை வசதிகளைப் பெருக்குவது

உழைப்பாளர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தவும், உற்பத்தித்திறனை அதிகரிக்கவும் கல்வி வசதிகளைப் பெருக்க வேண்டும். கிராமத்தில் உள்ள ஒவ்வொருவரும் ஆதாரக் கல்வியை யாவது பெற்றிருப்பது அவசியம். தொழில் நுணுக்கப் பயிற்சி வசதிகளைப் பெருக்குவதும் நல்லது. பொழுதுபோக்கிற்கான வசதிகளை ஏற்படுத்தித் தருவதும் இன்றியமையாதது. மனமகிழ்வோடு வாழும் இனிய குடும்பத்தினர் உழைத்து வருமானத்தைப் பெருக்கும் ஊக்கத்தைக் கொண்டிருப்பர். கல்வி வளர்ச்சியால் கிராம மக்கள் புனர் வாழ்வைப் பெறுவர். தெளிவான அறிவையும், விரிந்து பரந்த கண்ணோட்டத்தையும் அவர்கள் பெறக் கல்வியே உதவும்.

## 5. சமுதாயப் பாதுகாப்பு நன்மைகளை வழங்குவது

வேளாண்மை உழைப்பாளர்கள் தேவை, நோய், அறியாமை, அழுக்கு, சோம்பல் ஆகிய ஐந்தாலும் வறுமையின் கடுமையான பிடியிலிருந்து தப்ப முடிவதில்லை. இவை யாவற்றையும் ஒழித்து உழைப்பாளர்களைக் காப்பது அரசின் கடமையாகும். பல முனைகளினின்றும் இவற்றை ஒரே சமயத்தில் தாக்கவேண்டும். குறைந்த

விலையில் நுகர்வுப் பொருள்களை அளித்தல், சமூக நலப் பணிகளை அதிகரித்தல் போன்றவற்றின் மூலம் பாதுகாப்போடு கிராம மக்களுக்கு நன்மைகளை வழங்கலாம்.

### 6. வேளாண்மைத் துறையை முன்னேற்றமடையச் செய்வது

இந்திய வேளாண்மையின் உற்பத்திக் குறைவு சாகுபடி நடவடிக்கைகளுக்கான குறைந்த கூலியோடு தொடர்பு கொண்டுள்ளது. வேளாண்மை உழைப்பாளர்கள் திறமை குறைந்தவர்களாக இருப்பதாலும் உற்பத்தி குறைவாக இருக்கிறது. முதல் சிக்கலுக்கான தீர்வு வேளாண்மையை முன்னேற்றமடையச் செய்வதில் உள்ளது. செறிவு முறையில் கிராம முன்னேற்றத் திட்டங்களைக் கைக்கொள்ளும்போது உழைப்பாளர்களின் உற்பத்தித்திறன் அதிகரித்து வருமானம் கூடுகின்றது. உற்பத்தியை உயர்த்த நில வளத்தைக் கூட்டவேண்டும்; புதுமையான சாகுபடித் திறமைகளைப் பயிற்சிகளின்மூலம் வளர்க்கவேண்டும். கிராமக் கடன் வசதிகளைப் பெருக்குவது அவசியமானது. முன்னேற்றமான பண்ணைமுறைகளைப் பின்பற்றுவது நன்மை பயக்கும். கிராமங்களில் சிறு தொழில்களை ஏற்படுத்துவதற்கான திட்டங்கள் தேவை. சாலைகள் அமைத்தல், பொது நன்மைப் பணிகள், சமூக மேலமைப்பு ஆகியவற்றில் அரசு தனிக்கவனம் செலுத்தவேண்டும். தொழில் நகரங்களின் மக்கள் நெருக்கத்தைக் குறைக்க தொழில்களைப் பரவலாகச் சிறிய நகரங்களிலும் கிராமங்களிலும் ஏற்படுத்த வேண்டும்.

கிராமங்களில் வேலை வாய்ப்புகளைப் பெருக்க தொழில்களை அமைத்தல் அவசியமாகின்றது. ஆனால், தொழில்களில் பணியாற்ற திறமையான உழைப்பாளர்கள் தேவைப்படுகின்றனர். வேளாண்மை உழைப்பாளர்களுக்குப் பயிற்சியளிப்பதன்மூலம் இக் குறையை நிவர்த்தி செய்யலாம். கிராம வேலையின்மையை நீக்கப் பெரிய தொழில்களையும், சிறிய தொழில்களையும் ஏற்படுத்தினால் மட்டும் போதாது. அவை நாடு முழுவதும் பரவலாக அமைக்கப்பட வேண்டியது அவசியமாகும்.

#### நிறைவுரை

வேளாண்மை உழைப்பாளர்களின் அடிமைத்துவத்தை நீக்க அரசு தீவிர நடவடிக்கைகளை எடுக்கவேண்டும். சமூக நீதியை நிலை நிறுத்தவும், விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெறவும் அரசின் உண்மையான சமதர்மப் பணிகள் தேவை. 1950ஆம் ஆண்டின் வேளாண்மைச் சீர்திருத்தக் குழுவும்

வேளாண்மை உழைப்பாளர்களின் நிலையை உயர்த்துவதன் அவசியத்தை உணர்த்தியது. அவர்களின் நிலையைத் திருத்துவதற்கான பரிந்துரைகளைப் பின்வருமாறு சுருங்க விளக்கலாம்.

1. முக்கியமாக இந்தியாவில் உள்ள வேளாண்மை அடிமை முறையை முடிவுக்குக் கொண்டுவரவேண்டும். அரசியலமைப்பு அடிமைத்துவத்திற்கு எதிராக இருப்பினும் நடைமுறையில் அது நாட்டின் பல இடங்களிலும் அமைந்துள்ளது. சமுதாயப் பிற்போக்கு நிலை, பழக்க வழக்கங்கள், பின் தங்கிய பொருளாதார நிலை ஆகியவற்றால் வேளாண்மை உழைப்பாளர்கள் பெரிதும் பாதிக்கப்படுகின்றார்கள். தீவிர முயற்சிகளின்மூலமே அடிமைத்துவத்தை ஒழிக்க இயலும்.

2. மிகக் குறைந்த அளவில் உள்ள வேளாண்மை உழைப்பாளரின் கூலியை உயர்த்துவது மிகவும் இன்றியமையாதது. குறைந்தபட்சக் கூலி நிர்ணயிக்கப்பட்டு, அது செயல்படுத்தப் படுகிறதா என்பதை அரசு கண்காணிக்க வேண்டும். இவ்வாறு செய்ய வேண்டியதன் அவசியத்தை அரசு அறிந்துள்ளது. 1948 ஆம் ஆண்டின் குறைந்தபட்சக் கூலிகளின் சட்ட அடிப்படையில் பெரும்பாலும் எல்லா மாநிலங்களிலும் வேளாண்மை உழைப்பாளர்களுக்குக் குறைந்த அளவுக் கூலி நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றது. எனினும், இது சரியாகச் செயல்படுத்தப்படாமையால் உழைப்பாளர்கள் சட்டத்தின் நன்மைகளைப் பெற முடியவில்லை.

3. தரிசு நிலங்களைச் சாகுபடி நிலங்களாக மாற்றி வேளாண்மை உழைப்பாளர்களிடம் அளிக்கவேண்டும். அவர்களைக் கூட்டுறவுப் பண்ணைகள் அமைக்குமாறு கட்டாயப்படுத்தலாம். ஆனால், இதன் மூலம் குறைந்த அளவு வேளாண்மை உழைப்பாளர்களுக்கு மட்டுமே உதவ முடியும். இதற்கான வழிமுறைகள் ஐந்தாண்டுத் திட்டங்களில் கைக்கொள்ளப்படுகின்றன. பிற வேளாண்மை உழைப்பாளர்களுக்குத் தொழில் துறையில் வேலை வாய்ப்புகளை அளிக்கலாம்.

4 நிலவுடைமையாளர்கள் நிலமற்ற உழைப்பாளர்களுக்கு நிலத்தைத் தானமாக அளிக்குமாறு செய்யவேண்டும். இவ்வகையில் பூதான இயக்கத்தின் வளர்ச்சிக்கு அரசு உதவி வருகின்றது.

5. நிலவுடைமையாளர்களின்மீது உச்சவரம்பு விதிக்கப்பட்டு வருகின்றது. உச்சவரம்பிற்கு அதிகமாக உள்ள உபரி நிலங்களைத் திரட்டி வேளாண்மை உழைப்பாளர்களுக்கு அளிக்க

வேண்டும். ஆயினும், மறுபகிர்வால் எல்லா வேளாண்மை உழைப்பாளர்களுக்கும் நிலம் அளிக்க முடியாது. நிலச்சீர் திருத்தங்களின்மூலம் குத்தகையாளர்களுக்கும் நிலம் அளிக்க வேண்டியுள்ளது. சட்ட ஏய்ப்புகளும் செய்யப்படுவதால் உச்ச வரம்பின்மூலம் குறைந்த அளவு நிலத்தை மட்டுமே திரட்ட முடியும். குறைந்த நிலத்தை எண்ணற்ற குத்தகையாளர்கள், வேளாண்மை உழைப்பாளர்கள் ஆகியோரிடையே பகிரும்போது 'நிலப்பசியைத்' தீர்க்க முடிவதில்லை.

6. நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்குவது, செறிவு முறைச் சாகுபடி, முன்னேற்றமான வேளாண்மை நடவடிக்கைகள் ஆகியவற்றால் கிராம வேலைவாய்ப்புகளை அதிகரித்து வேளாண்மை உழைப்பாளர்களுக்கு அளிக்கலாம். மேலும், இவற்றால் உற்பத்தி கூடுவதால் நிலவுடைமையாளர்கள் அதிகக் கூலியைத்தரும் திறனைப்பெறுவார்கள். வேளாண்மையின் மொத்த ஆக்கமும் இதனால் அதிகரிக்கின்றது.

7. நில முறையை மாற்றியமைத்துக் கூட்டுறவு இணைப்புப் பண்ணைகளை ஏற்படுத்தவேண்டும். இதன்மூலம் கிராமச் சமுதாயத்தில் சமத்துவத்தை நிலைநிறுத்தலாம்; வேளாண்மை உழைப்பாளர்கள் மற்றவர்களின் நிலைக்கு உயர்வதற்கான வாய்ப்புத் தோன்றும்.

8. வேளாண்மை சார்ந்த கிராமத்தொழில்களை அமைப்பது அவசியம். அவற்றின் உதவிகொண்டு கிராம நுகர்வுக்கான பொருள்களை உற்பத்தி செய்யலாம். இவ் வகையில் தொழில் எஸ்டேட்டுகளை ஏற்படுத்துவது நல்லது. வேலையில்லாத காலங்களில் வேளாண்மை உழைப்பாளர்கள் இத் தொழில்களில் ஈடுபட்டு வருமானத்தைப் பெருக்கிக்கொள்ளலாம். அவர்களில் ஒரு பகுதியினர் நிரந்தரமாகவே கிராமத் தொழில்களில் பணிபுரியலாம்.

9. கிராமப்புறங்களின் மனித உழைப்பை வீணடிக்காமல் முழுமையாகவும், சிறப்பாகவும், திறமையாகவும் பயன்படுத்த வேண்டும். சாலைகள் அமைத்தல், கிணறுகள் தோண்டுதல், கால்வாய்கள் வெட்டுதல், காடுகளை அழித்தல் முதலியவற்றில் உபரி வேளாண்மை உழைப்பாளர்களை ஈடுபடுமாறு செய்யலாம். அல்லது பகுதி நேர வேலைகளாகவும் இவற்றைச் செய்யலாம் இதற்கு 'உழைப்பாளர்க் கூட்டுறவுகளை' (Labour Co-operatives) அமைத்தல் நல்லது.

10. வேளாண்மை உழைப்பாளர்களை நாட்டின் பலபகுதிகளுக்கு இடையேயும் பெயர்ச்சியுடையவர்களாக்க வேண்டும். இதைச் செயல்படுத்த போக்குவரத்துச் செலவுகளைக் குறைப்பது நன்மைதரும். வேலை தேடித்தரும் நிறுவனங்களும் வேளாண்மை உழைப்பாளர்களுக்கு உதவலாம்.

11. வேளாண்மை உழைப்பாளர்களுக்கு இடையே கூட்டு அமைப்பு இருக்கவேண்டும் கூலியுயர்வுபற்றி அவர்கள் கூட்டு முறையில் பேரம் பேசவேண்டும். எளிதாகப் பணியாற்றுவதற்கான வசதிகளைப் பெருக்கவும், உயர்வான நலன்களைப் பெறவும் எல்லா வேளாண்மை உழைப்பாளர்களும் சங்கங்களை அமைத்தல் அவசியம். தொழில்துறை உழைப்பாளர்கள் கணிசமான அளவில் கூலியுயர்வைப் பெருவதற்குத் தொழிலளார்ச் சங்கங்களே முக்கியக் காரணமாகும்.

12. திட்டங்களின் நன்மைகளை வேளாண்மை உழைப்பாளர்கள் பெற அரசின் உதவி அவசியமாகிறது. வட்ட, மாவட்ட உயர்வட்ட நிலைகளில் அவர்களுக்கான பாதுகாப்பும், உதவியும் அரசரால் அளிக்கப்படவேண்டும். மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டம் வேளாண்மை உழைப்பாளர்களின் நலனிற்காக எல்லா மாநிலங்களிலும் 'வாரியங்கள்' (Boards) அமைக்க வேண்டுமென்று கூறியது. இதைத் தவிர, இச் சிக்கலுக்குத் தீர்வு காணத் திட்டக் குழு 'மத்திய ஆலோசனைக் குழுவை' (Central Advisory Committee) அமைக்கக் கருதியுள்ளது.

இந்தியாவில் வேளாண்மை உழைப்பாளர்களின் பிரச்சினை, உற்பத்தித் திறனேடு தொடர்பு கொண்டிருக்கின்றது. கிராமப் பொருளாதாரத்தில் உள்ள உபரி உழைப்பாளர்களை வெளியேற்றுவதன்மூலமே வேளாண்மை உற்பத்தித்திறனைப் பெருக்க இயலும். அதற்குப் பலவகைப்பட்ட வேலைவாய்ப்புகளைத் தோற்றுவிப்பது அவசியமாகின்றது. எல்லா உழைப்பாளர்களும் நியாயமான கூலி பெறுமாறு அரசு நடவடிக்கைகளை எடுக்க வேண்டும். வேளாண்மை உழைப்பாளர்களின் பொருளாதார நிலையை உயர்த்துவது அரசின் கடமையாகும்.

நிலச் சீர்த்திருத்தங்களில் அரசு வேளாண்மை உழைப்பாளர்களின் நிலைக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கவில்லை. மிகக் குறைந்த அளவில் மட்டுமே இவர்களுக்கு உபரி நிலம் வழங்கப்படுகின்றது. குத்தகையாளர்களும், சிறிய நிலவுடைமையாளர்களும் உச்ச நில வரம்புச் சட்டங்களால் பயனடைந்துள்ளனர்.

சில அடிப்படை மாற்றங்களை வேளாண்மையில் செய்வதன் மூலமே உழைப்பாளர்களுக்கு நல்வாழ்வு கிடைக்கும். மேலும், இவர்கள் யாவருக்கும் நிலமளிப்பதும் இயலாதது. தொழில்துறை, சமூக மேலமைப்புத்துறை ஆகியவற்றில் இவர்களுடைய உழைப்பைப் பயன்படுத்துவது நாட்டிற்கு நல்லது. இதன் வாயிலாக வேளாண்மை உழைப்பாளர்களின் நிலை உயர்வதோடு பொருளாதார வளர்ச்சி வீதத்தையும் அதிகரிக்க இயலும். விவசாயத் துறையின் எச்ச மக்கள் தொகை இதனால் குறையும். வேளாண்மை உற்பத்தி அதிகரிக்க இது வழி வகுக்கும்.

சமீப காலமாக வேளாண்மை உழைப்பாளர்கள் தம் உரிமைகளை உணர்ந்து வருகின்றார்கள். அரசியல் அறிவையும் அவர்கள் பெற்றிருக்கின்றார்கள். எனினும், அவர்களிடம் துணிந்து செயலாற்றும் தலைமை அமைந்திருக்கவில்லை. மிகக் குறைந்த வருமானத்தைப் பெறும் அவர்கள், கூலி உயர்வுக்காகப் பேரம் பேசமுடிவதில்லை. அவர்களுடைய வாழ்க்கைத் தரம் உயர்வு, அரசின் புதிய முறைத் தீவிர நடவடிக்கைகளுக்கு ஏற்பவே அமையும்.

# 16. வேளாண்மையை இயந்திரமயமாக்குதல்

## (Mechanisation of Agriculture)

நிலச் சீர்திருத்தங்களால் ஏற்படுகின்ற பல நன்மைகளுள், வேளாண்மையை இயந்திரமயமாக்குவதும் ஒன்ருகும். வேளாண்மையில் விரைவான உற்பத்தி பெருக இயந்திரங்களையும், கருவிகளையும் பயன்படுத்துவது நல்லது. வேளாண்மை வளர்ச்சி பொருளாதார முன்னேற்ற வீதத்தை உயர்த்தும். இந்திய வேளாண்மையில் முன்னேற்றமடையாத, எளிய, பழைமையான கருவிகள் மட்டுமே பயன்படுத்தப்படுகின்றன. சாகுபடியைத் திறமையாகவும், வெற்றியோடும் செய்ய இந்த முறை உதவுவதில்லை. இதற்கு மாருகப் பல முன்னேறிய மேலை நாடுகளிலும், சோவியத் ரஷ்யாவிலும் மிகச் சிறப்பான சாகுபடி முறைகள் பின்பற்றப்படுகின்றன. பெரிய இயந்திரங்களால் உற்பத்தி செய்யப்படுகிறது. இயந்திரமயமாக்கியதால் இந்த நாடுகளில் வேளாண்மை புரட்சியே தோன்றியுள்ளது. 18, 19ஆம் நூற்ருண்டுகளில் தொழில் புரட்சி உலகின் பல நாடுகளில் ஏற்பட்டது. அதைப் போன்று தற்பொழுது வெவ்வேறு நாடுகளிலும் வேளாண்மைப் புரட்சி ஏற்பட்டிருக்கின்றது.

வேளாண்மை பல நாடுகளிலும் புத்தாக்கம் பெற்று வருகிறது. இதனுல், சாகுபடியாளர்கள் நன்மையடைந்துள்ளனர். ஆக்கத்தின் அளவு அதிகரித்துள்ளதோடு உற்பத்திச் செலவும் குறைந்திருக்கிறது. இயந்திரமயமாக்கப்பட்டமையால், தரிசு நிலங்கள் சாகுபடி நிலங்களாக மாற்றப்பட்டுள்ளன.

எந்த அளவிற்கு இயந்திரங்களையும், கருவிகளையும் பயன்படுத்துவது என்பதில் கருத்து வேறுபாடுகள் காணப்படுகின்றன.

ஒரு சாரார் இந்திய வேளாண்மையை இயந்திரமயமாக்கவேண்டுமென்று வற்புறுத்துகின்றனர். மற்றொரு சாரார் இயந்திரமயமாக்குவது பல நடைமுறைச் சிக்கல்களைக் கொண்டிருப்பதை விளக்குகின்றனர். வேளாண்மையில் மனித உழைப்பிற்கும், கால்நடைச் சக்திக்கும் உதவ இயந்திரங்களைப் பயன்படுத்துவதையோ, மனித உழைப்பிற்கும் கால்நடைச் சக்திக்குப் பதிலாக வேறு மின்சாரம் முதலிய சக்தியால் இயங்கும் இயந்திரங்களைப் பயன்படுத்துவதையே இயந்திரமயமாக்குதல் எனலாம். நிலத்தை உழுது பயன்படுத்துவதிலிருந்து விளைபொருள்களை விற்பனை செய்யும்வரை இயந்திரங்களையும், கருவிகளையும் பயன்படுத்தலாம்.

இயந்திரங்களைக் கொண்டு எளிதில் சாகுபடி நில அளவைப் பெருக்கலாம். மேலை நாடுகளின் விவசாயிகள் வளமான வாழ்வைக் கொண்டுள்ளமைக்கு இயந்திரங்களைப் பயன்படுத்துவதே முக்கியக் காரணமாகும். இயந்திரமயமாக்குல் இன்றி விரைவான வேளாண்மை வளர்ச்சியைப் பெற இயலாது.

வாய்ப்புகள் இருக்கக்கூடிய வேளாண்மை உற்பத்திப் பணிகள் யாவற்றிலும் இயந்திரங்களைப் பயன்படுத்தவேண்டும். உழுதல், விதை விதைத்தல், அறுவடை செய்தல் முதலியவற்றிற்கு இயந்திரங்களைப் பயன்படுத்துவதே நன்மை பயக்கும். டிராக்டர்களை (இழு பொறிகளை) உழுவதற்குப் பயன்படுத்துவதோடு விளைபொருள்களைச் சந்தைக்குக் கொண்டு செல்லவும் பயன்படுத்தலாம். மரக் கலப்பைகள், எருதுகள், பழைய அறுப்பு அரிவாள்கள் ஆகியவை நீக்கப்படவேண்டும். தற்காலத்திற்கு ஒவ்வாத பழைய காலப் பாரம்பரிய உற்பத்தி முறைகளை விலக்குவது இன்றியமையாதது. இந்திய வேளாண்மையில் இவ்வகை மாற்றத்தைப் பெறுவது வேண்டற்பாலது.

இந்தியாவின் பொருளாதார, சமுதாய அமைப்புகள் வேளாண் [illegible] இயந்திரமயமாக்குவதற்குச் சாதகமாக இல்லை. எனவே, இயந்திரமயமாக்குவதற்கு முன்னர், பொருளாதார, சமுதாய அமைப்புகளில் முன்னேற்றமான மாற்றங்களைப் பெறவேண்டும்.

தொழில் நுணுக்கம் மிக்க கருவிகளைப் பயன்படுத்துவதன் மூலம் பாரம்பரிய வேளாண்மை உற்பத்தி முறையை முடிவுக்குக் கொண்டு வரலாம். இவ்வாறு செய்வது அவசியமானதென்பதைப் பலரும் ஏற்றுக்கொண்டுள்ளனர். இன்றும் இந்திய விவசாயிகளில் பெரும்பான்மையோர் சாதாரண உற்பத்திச் சாதனங்களையே உபயோகித்து வருகின்றனர். பல ஆண்டுகளுக்கு முன்னர், அவர்

களுடைய மூதாதையர் பயன்படுத்திய கருவிகளே தற்பொழுதும் உற்பத்தி நடவடிக்கைகளில் ஈடுபடுத்தப்படுகின்றன.

சிறிய அளவு நிலங்களைத் திரட்டிக் கூட்டுறவுகளை ஏற்படுத்துவதன் மூலம் மட்டும் உற்பத்தியைப் பெருக்கிவிட முடியாது. புதுமையான தொழில் நுணுக்க முன்னேற்றங்கள் பலவும் பண்ணைச் சாகுபடி முறையில் பயன்படுத்தப்பட வேண்டும். மூன்று வழிகளில் வேளாண்மைத் துறையை முழுமையாக இயந்திரமயமாக்கலாம்:

1. எல்லா வேளாண்மை உற்பத்தி நடவடிக்கைகளையும் இயந்திரமயமாக்குவது;

2. வேளாண்மை உற்பத்தியில் விஞ்ஞானத்தின் நன்மைகளைப் புகுத்தித் தொழில் சீரமைப்பைப் பெறுவது;

3. நீர்ப்பாசன வசதிகளைச் சிறப்பாக மேம்படுத்துவது.

இயந்திரமயமாக்குவதால், தனி ஒருவருக்கான உற்பத்தி உயரும். வேளாண்மைத் தொழில் சீரமைப்பாலும், நீர்ப்பாசன வசதிகளாலும் ஓர் ஏக்கருக்கான உற்பத்தித்திறன் அதிகரிக்கின்றது. இயந்திரமயமாக்குதலின் நன்மைகளை இரிச் டபிள்யூ. லும்மெர்மேன் (Erich W. Lummermann), பின் வருமாறு குறிப்பிடுகின்றார். 'அமெரிக்காவிலும், கனடாவிலும் விவசாயிகள் புதுமையான இயந்திரங்களைப் பயன்படுத்துகின்றார்கள். அதிக அளவு உற்பத்தியைப் பெறுகின்றமையால், அவர்கள் விற்க முடியாத அளவிற்குக்கூட உபரியைக் கொண்டுள்ளார்கள். அந்த நாடுகளில் சந்தைக்கு அதிக விளைபொருள்கள் கொண்டு செல்லப்படுவதால், விற்பனை செய்வது கடினமாகிறது. இயந்திரங்கள் பயன்படுத்தப்படாத இடங்களில் பஞ்சம் தாண்டவமாடுகிறது. பசியால் துடிக்கும் மக்கள் உணவுக்காக யாசிக்கின்றனர். இயந்திரங்களைப் பயன்படுத்தும் இடங்களில் உபரித் தானியங்கள் 'தேவைக்காக' ஏங்குகின்றன (பரந்த விரிவான சந்தை இல்லாத காரணத்தால்).'[1] இக் காரணங்களால் இந்திய வேளாண்மையை இயந்திரமயமாக்கலாமா என்பதை ஆராய்வது அவசியமாகின்றது.

இந்திய வேளாண்மையில் தொழில் நுணுக்க மாற்றங்கள் தேவை. சாகுபடி முறைகளில் முன்னேற்றமான மாற்றங்கள்

1 World [redacted] and Industries, p. 156.

அவசியம். நம் நாட்டில் மக்கள் தொகை விரைவாகப் பெருகி வருகின்றது. சாகுபடி நிலங்களின் அளவு ஒரு வரம்பிற்கு உட்பட்டதாகவே இருக்கின்றது. வேளாண்மை உற்பத்தியைக் கணிசமான அளவிற்கு உயர்த்துவது இதனால் இன்றியமையாததாகின்றது. சாகுபடியில் இல்லாத—ஆனால் சாகுபடிக்கு ஏற்ற தரிசு நிலங்களை உற்பத்தியில் ஈடுபடுத்தவேண்டும். நல்ல விதைகளையும், உரங்களையும் பயன்படுத்தி உற்பத்தியளவைக் கூட்டலாம். வேளாண்மை உற்பத்தி நடவடிக்கைகளில் மாற்றங்கள் ஏற்படும்போது பொருளாதாரத்தின் பிற துறைகளின் பொதுவான முன்னேற்றமும் காக்கப்படவேண்டும். இதன் மூலம் வேலை வாய்ப்புகள் பெருகும். வேளாண்மை உழைப்பாளர்கள் நன்மையடைவர். தற்பொழுது வேலையின்மையாலும் மறைமுக வேலையின்மையாலும் பாதிக்கப்பட்டுள்ளவர்களின் நிலை திருந்தும். வேளாண்மையை இயந்திரமயமாக்குவதால் வெளியேற்றப்படும் உழைப்பாளர்களுக்கும் வேலை வாய்ப்புகள் கிடைக்கும்.

வேளாண்மையை இயந்திரமயமாக்குவதால் மனித உழைப்பு, கால்நடை உழைப்பு ஆகியவற்றின் தேவை குறைகிறது. இதனால், அதிக முதலீட்டைச் செய்வதும் அவசியமாகிறது. வேளாண்மையை முழுமையாக இயந்திரமயமாக்கலாம்; அல்லது சில உற்பத்தி நடவடிக்கைகளையாவது இயந்திரமயமாக்குவது நல்லது. முன்னேற்றமான நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்குவதும் நன்மை தரும்.

வேளாண்மையில் இயந்திரங்களைப் பயன்படுத்தினால் உற்பத்தியைப் பெருக்குவதில் வியத்தகு முன்னேற்றத்தைக் காணலாம். இதன்மூலம், அமெரிக்கா, இங்கிலாந்து, ஜெர்மனி, சோவியத் ரஷ்யா முதலிய நாடுகள் பெரிதும் நன்மையடைந்துள்ளன. அமெரிக்காவின் மொத்த வேளாண்மை உற்பத்தியில் மூன்றில் ஒரு பங்கு இயந்திரமயமாக்கியதால் கிடைத்தது.[1] இந்தியாவில் வேளாண்மை உற்பத்தித் திறன் மிகவும் குறைவாக உள்ளது. பல மடங்கு உற்பத்தியை அதிகரித்தால்தான் உணவு பற்றுக்குறையைச் சமாளிக்க இயலும். விரைவாகப் பெருகும் மக்கள் தொகைக்குத்தேவையான உணவைப்பெற வேளாண்மையை இயந்திரமயமாக்குவதே சாலச் சிறந்தது.

இந்தியாவில் நிலம் போதா நிலையில் இருக்கிறது. வேளாண்மையில் உபரி உழைப்பாளர்களும் அமைந்துள்ளார்கள். ஆகவே,

1. 'Productivity', Vol. iv (1965) p. 449, 'Mechanisation can lead to Swift Changes' by B. K. S. Jain.

இயந்திரங்களைப் புகுத்துவதன் மூலம் பொருளாதாரத்தில் வேண்டத் தகாத விளைவுகள் பல தோன்றக்கூடும். அதிக மூலதனத்தைக் கொண்டுள்ள செல்வம் மிக்க நாடுகளிலும், உழைப்புப் பற்றுக் குறை அமைந்துள்ள வளர்ந்த நாடுகளிலும் வேளாண்மையை இயந்திரமயமாக்கினுல் தீய விளைவுகள் தோன்றமாட்டா.

மேலைநாடுகளில் பண்ணை உழைப்பாளர்களின் எண்ணிக்கை குறைவாக உள்ளது. அந்த நாடுகளில் வேளாண்மை விரைவாக இயந்திரமயமாக்கப்பட்டதற்கு இது முக்கியக் காரணமாகின்றது. விரைவான தொழில் முன்னேற்றத்தையும் அந்த நாடுகள் பெற்றன. இந்தியாவில் உழைப்பை எளிதாகவும், குறைந்த செலவிலும் பெற இயலும். தொழில் துறையும் சிறப்பான அளவிற்கு வளரவில்லை. இக் காரணிகள் வேளாண்மையை இயந்திரமயமாக்குவதற்கு ஏற்புடையவைகளாக இல்லை. முழுமையாக இல்லாவிடினும், ஓரளவிற்காவது இந்திய வேளாண்மையை இயந்திரமயமாக்குவது இன்றியமையாதது.

பண்ணை உற்பத்தித் திறன் இந்தியாவில் மிகக் குறைவாக உள்ளது. உணவுத் தானியங்களின் தேவைக்கும், அளிப்பிற்கும் நடுவே அதிக இடைவெளி அமைந்திருக்கின்றது. இந்த இடைவெளியைக் குறைக்க, தொழில் நுட்ப உற்பத்தி முறைகள் தேவைப்படுகின்றன. நாட்டின் வேகமான பொருளாதார முன்னேற்றத்திற்கும் இது அவசியமாகின்றது. மிகச் சமீப காலம்வரை நாம் உணவிற்காக அமெரிக்கா முதலிய நாடுகளைச் சார்ந்திருந்தோம். பிற்காலத்திலாவது உணவுப் பற்றுக்குறையைத் தீர்ப்பதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்படவேண்டும். உணவுச் சிக்கலைத் தவிர்க்க பல வகைப்பட்ட வழிமுறைகளைக் கைக்கொள்வது அவசியம்.

### இயந்திரமயமாக்குதல்—ஒரு விளக்கம்

வேளாண்மை உற்பத்தி நடவடிக்கைகளில் இயந்திரங்களைப் பயன்படுத்துவதால் மனிதச் சக்தி கால்நடைச் சக்தி ஆகியவற்றின் தேவை குறைகிறது. இயந்திரச் சக்தி செல்வாக்கைப் பெறுகிறது. இதனுல், பராமரிப்புப் பண்ணைமுறை நீக்கப்படுகிறது. பேரளவுச் சிக்கனங்களும் பெறப்படுகின்றன. இயந்திரமயமாக்க சிறிய அளவு பண்ணைகளைப் பெரிய அளவுப் பண்ணைகளாக மாற்றுவது அவசியமாகின்றது. தொடக்க நிலையில் நிலத்தை உழுவதற்கு மட்டுமே இயந்திரங்கள் பயன்படுத்தக்கூடிய. நீண்ட காலத்தில் படிப்படியாக எல்லா உற்பத்திப் பணிகளிலும் இயந்திரங்கள் ஈடுப்படுத்தப்

படுகின்றன. விளைபொருள்களைப் பக்குவப் படுத்துவது, சேமித்து வைப்பது, நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்குவது முதலியன அறிவியல் வளர்ச்சியின் அடிப்படையில் அமைகின்றன. நாளடைவில் பால் பண்ணை, கோழிப் பண்ணை ஆகியனவும் வளர்ச்சியடைகின்றன. விவசாயி, இயந்திரங்களைக்கொண்டு பணிகளைச் சிறப்பாகவும், எளிதாகவும் ஆற்ற முடிகிறது. இயந்திரக் கருவிகளை இயக்க மின்சக்தி அல்லது எண்ணெய்ச் சக்தி பயன் படுத்தப்படுகிறது.

இயந்திரமயமாக்குதல் கிராமப் பொருளாதாரத்தில் புரட்சிகர மான மாற்றத்தைத் தோற்றுவிக்கும். அதன்மூலம், 'அதிக வேளாண்மை உபரி கிடைக்கும். பலவகைப் பயிர்களும் உற்பத்தி செய்யப்படும்; வாணிபம் செழிக்கும்; வருமானம் உயரும்; கால் நடைப் பொருள்கள் அதிகமாக விற்பனையாகும். மாற்றுப் பொருளாதாரம் (Exchange economy) தோன்றும். நிலத்தைப் பயன்படுத்தும்முறை சிறப்பாக அமையும். தன்னிறைவுப் பொருளாதார முறை முடிவுக்குக் கொண்டு வரப்படும். பல வித மான பிரச்சினைகளும் தீர்க்கப்பெறும்.'[1]

டாக்டர் பட்டாசார்ஜி கூறுவதாவது, 'நிலத்தின்மீதான பணிகளை எருதுகள், குதிரைகள், பிற வகைக் கால்நடைகள் அல்லது மனிதச் சக்தி ஆகியவற்றைக் கொண்டு நிறைவேற்றுமல் இயந்திரச் சக்தியைப் பயன்படுத்தி நிறைவேற்றுவதையே இயந்திரமய மாக்குதல் எனலாம்.'[2] இவ் வரையறையில் மனித, கால்நடைச் சக்திகளுக்குப் பதில் இயந்திரச் சக்தி பயன்படுத்தப்படுகின்ற நிலைக்கு முக்கியத்துவம் தரப்பட்டுள்ளது. பரந்த அடிப்படையில் இவ் வரையறை அமையவில்லை. நிலத்தில் பயன்படுத்தப்படும் இயந்திரங்களைப்பற்றி மட்டுமே அவர் குறிப்பிடுகின்றார். உழுதல், அறுவடை செய்தல் முதலியவற்றிற்கான இயந்திரங்களைப்பற்றி மட்டுமே அவர் விளக்குகின்றார்.

இயந்திரமயமான வேளாண்மையைக் கைக்கொள்ள சிறிய பெரிய, நடுத்தர நீர்ப்பாசன வசதிகள் பெருக்கப்படவேண்டும். தொழில் சீரமைப்பைச் செய்வதும், நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்குவதும் வேளாண்மையை இயந்திரமயமாக்கும் நிலையோடு நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளன. இயந்திரமயமாக்குதல்

[1] Indian Society of Agricultural Economics, Readings in Land Utilization, p. 52.

[2] J. P. Bhattacharjee, Mechanisation of Agriculture in India, Indian Journal of Agricultural Economics, Vol. IV, No. 1, 1948, p. 121.

என்பது பரந்த அடிப்படையில் விளக்கப்படுகிறது. அறுவடைக் கருவிகள், கதிரடிக்கும் கருவிகள் முதலியன மட்டுமே இயந்திர மயமாக்குதலில் அடங்குவன என்று கருதுவது தவறு. பெரிய இயந்திரங்களும், சிறிய இயந்திரங்களும், நகரும் இயந்திரங்களும், நகராத இயந்திரங்களும் உள்ளன. அவற்றைத் தவிர நீர்ப்பாசனத் திற்கான கருவிகள், விளை பொருள்களை விற்பதற்குப் பயன்படுத்தப் படும்கார்கள், பொருள்களைப் பதப்படுத்தும் கருவிகள், பால்பண்டப் பொருள்களைத் தயாரிக்கும் கருவிகள், எண்ணெய் வித்துகளி லிருந்து எண்ணெய் பிழியும் கருவிகள், பஞ்சையும் விதைகளையும் பிரிக்கும் கருவிகள், நெல் குற்றும் கருவிகள், வானொலிப் பெட்டி, இஸ்திரிப் பெட்டி, சலவை இயந்திரம் முதலியனவும் இயந்திர மயமாக்குவதில் அடங்குவனவாகும்.[1]

இயந்திரங்கள் மனித உழைப்பிற்கும், கால்நடைச் சக்திக்கும் உதவுகின்றன. மனித உழைப்பின் கடின நிலை குறைக்கப்படுகிறது. இதனால், பண்ணைகளின் பொருளாதார அமைப்பு மாறுகிறது. உற்பத்திச் செலவில் குறைவு ஏற்படுகிறது. ஓர் உழைப் பாளருக்கான மூலதனத்தின் வீதம் உயர்வடைகிறது. ஓர் அலகிற்கான உற்பத்திச் செலவில் புரட்சிகரமான மாற்றம் தோன்று கிறது.

வேளாண்மையை முழுமையாக இயந்திரமயமாக்கும்போது மனித உழைப்பும், கால்நடை உழைப்பும் முற்றிலும் நீக்கப்படு கின்றன. மேல் நாடுகளில், — குறிப்பாக வடஅமெரிக்கக் கண்டத்தில் வேளாண்மை முழுமையாக இயந்திரமயமாக்கப் பட்டுள்ளது. அதற்கு அடிப்படைக் காரணம் உழைப்பாளர்ப் பற்றுக்குறையேயாகும். அங்கு மனித உழைப்பிற்கு அதிக ஊதியம் அளிக்கப்படுகிறது. ரஷ்ய வேளாண்மையிலும் முழுமையாக இயந்திரமயமாக்கப்பட்ட நிலை அமைந்திருக்கின்றது. அங்குப் பெரிய அளவில் கிடைக்கக்கூடிய வளங்கள் யாவும் சிறப்பாகப் பயன்படுத்தப்படுகின்றன. வேளாண்மை உற்பத்தியும் பல மடங்கு உயர்ந்துள்ளது.

'பாட்டாளிகளின் சர்வாதிகாரம்' (Dictatorship of the Proletariat) மலர்வதற்கு முன்னர், ரஷ்யாவில் சொந்தச் சாகுபடி முறையே அமைந்திருந்தது. இரண்டாவது உலகப் போர்க் காலத் தில் உழைப்பாளர்ப் பற்றுக்குறையால் வேளாண்மை நடவடிக்கை கள் சில இயந்திரங்களைக்கொண்டு செய்யப்பட்டன. உற்பத்தியை

[1] G D. Agarwal, "Economics of Mechanisation of Agriculture in India, Indian Journal of Agricultural Economics, Vol. IV, No. 1, 1948. p. 41.

அதிகரிக்க வேண்டுமென்ற நோக்கமும் அப்போது அமைந்திருந்தது. குறைந்த மக்கள் தொகை அடர்த்தி, உழைப்பாளர்ப் பற்றுக்குறை, உயர்ந்த ஊதிய மட்டம் ஆகியவற்ருல் ஆஸ்திரேலியா, பிரேசில், கனடா முதலிய நாடுகளில் வேளாண்மை இயந்திரமயமாக்கப்பட்டது.

ஆனல், சீன, இந்தியா, ஆசியாவின் பெரும் பகுதியும் ஆப்பிரிக்கா, தென் அமெரிக்கா ஆகிய இடங்களிலும் இயந்திரங்கள் வேளாண்மையில் குறைந்த அளவிற்கு மட்டுமே ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளன. இங்கெல்லாம் உழைப்பின் அளிப்பு, தேவைக்கு அதிகமாக உள்ளமையே இதற்குக் காரணமாகும். கால்நடைகளும் ஏராளமான அளவில் இருக்கின்றன. சாகுபடி நிலங்கள் உள்பிரிவுபடுத்தப்பட்டுச் சிறிய அளவில் வெவ்வேறு இடங்களில் சிதறிக் கிடக்கின்றன. இயக்கச் சக்தியும் போதுமான அளவிற்குக் கிடைப்பதில்லே. மக்கள் தொகையின் பெரும் பகுதி வறுமையில் வாடுகின்றது. ஃபிரான்ஸ், டென்மார்க் ஆகிய நாடுகளின் வேளாண்மைப் பண்ணைகளில் விதைகளை விதைப்பது முதல் அறுவடை செய்வதுவரை எல்லாப் பணிகளையும் செய்ய இயந்திரங்களே பயன்படுத்தப்படுகின்றன.[1]

இயந்திரங்களில் சில நகரும் தன்மை கொண்டவை; மற்றவை நகரா நிலை பெற்றவை. முதல் வகைப்பட்ட இயந்திரங்கள் பல நூற்ருண்டுகளாக உற்பத்தி நடவடிக்கைகளில் செல்வாக்கைக் கொண்டுள்ள கால்நடைச் சக்தியை நீக்குகின்றன. மற்றவை மனித உழைப்பின் கடின நிலையைத் தவிர்க்கின்றன. இவ்வாறு மனிதச் சக்தியையும், கால்நடைச் சக்தியையும் குறைத்து உற்பத்திப் பணிகளை எளிதாக்க இயந்திரங்கள் உதவுகின்றன.

### வேளாண்மையை இயந்திரமயமாக்குவற்கான முன் நிபந்தனைகள்

எல்லா நிலைகளிலும் வேளாண்மையில் எந்திரங்களைப் புகுத்துவது இயலாது. வளராத பொருளாதாரத்தைக் கொண்டுள்ள நாடுகளில் வேளாண்மையை இயந்திரமயமாக்குவதற்குச் சாதகமான சூழ்நிலைகள் அமைந்திருப்பதில்லை. இந்த நாடுகளில் உபரி உழைப்பாளர்கள் இருக்கின்றனர்; மக்கள் தொகையின் பெருக்க வீதம் உயர்வாக உள்ளது; நிலம் பற்ருக்குறை நிலையில் அமைந்திருக்கிறது. இவ்விதச் சூழ்நிலைகள் திகழ்வதால், கவனமான நிலையிலேயே வேளாண்மை இயந்திரமயமாக்கப்படவேண்டும்.

[1] L.F. Easterlrook, Farming and Mechanised Agriculture, 1945, p.55.

அவ்வாறு செய்யாவிட்டால் பொருளாதாரத்தில் வேண்டத்தகாத விளைவுகள் பல தோன்றிவிடும்.

பொதுவாக, பின்வரும் நிபந்தனைகளின் அடிப்படையிலேயே வேளாண்மையில் இயந்திரங்கள் பயன்படுத்தப்படவேண்டும்.[1]

1. மூலதனத்தோடு ஒப்பிடும்போது உழைப்புப் பற்றாக்குறை நிலையில் உள்ள ஒரு நாட்டின் வேளாண்மை இயந்திரமயமாக்கப் படலாம். உழைப்பின் அளிப்பு அதிகமாக இருந்தால் இயந்திர மயமாக்குவதன் மூலம் வேலையின்மைச் சிக்கல் தோன்றும். பொருளாதாரத்தில் வேறு பல பிரச்சினைகளும் எழக்கூடும்.

2. சில நாடுகளில் வேளாண்மையல்லாத துறையில் உழைப்பின் தேவை அதிகரித்துக்கொண்டே இருக்கும். அந்த நிலையில் வேளாண்மையில் உபரி உழைப்பாளர்கள் இருந்தாலுங் கூட அத் துறையை இயந்திரமயமாக்கலாம். அது பொருளாதார ரீதியில் இலாபகரமாக அமையும்.

3. வேளாண்மை இயந்திரங்களையும், கருவிகளையும் உற்பத்தி செய்யும் அளவிற்கு ஒரு நாடு தொழில் துறையை வளர்த்திருந்தால் வேளாண்மையை இயந்திரமயமாக்கலாம். அல்லது அந்த நாடு இயந்திரங்களை இறக்குமதி செய்வதற்குத் தேவையான அந்நியச் செலாவணியைப் போதுமான அளவிற்குப் பெற்றிருக்கவேண்டும். அந்த நாட்டில் அந்நியச் செலாவணிச் சிக்கல் அமைந்திருக்கக் கூடாது.

4. மனித உழைப்பைக் கொண்டு சாகுபடி செய்ய இயலாத நிலங்களில் இயந்திரங்களைப் பயன்படுத்தலாம். உற்பத்தியில் மனித உழைப்பு முக்கியத்துவம் கொண்டிருக்கும்போது அதிகக் கவனம் செலுத்தப்படுகிறது. சாகுபடி நடவடிக்கைகளில் மிகுந்த அக்கறை கொள்ளப்படுகிறது. இச் சாகுபடி முறையின்மூலம் ஓர் ஏக்கருக்கான உற்பத்தியை அதிகரிக்கலாம். இயந்திரச் சாகுபடிமுறை அதிகக் கவனத்துடன் செய்யப்படுவதில்லை.[2] ஜப்பான், டென்மார்க் ஆகிய நாடுகளில் பெரிய இயந்திரங்கள் உற்பத்தியில் பயன்படுத்தப்படுவதில்லை. நிலம் அதிக உற்பத்தியைப் பெறும் வகையில் மிகச் சிறப்பாகப் பயன்படுத்தப்படுகிறது. நடவு நடுதல் முதலியவற்றை இயந்திரங்கள் செய்வதைவிடக்

1 W. A Leuis, The Theory Of Economic Grouth. pp. 129-31.

2 Ibid., d. 130.

கைகளால் சிறப்பாகச் செய்ய முடியும். இதனால், ஓரங்குல நிலமும் வீணடிக்கப்படுவதில்லை.

5. நிலத்தின் இயல்பிற்கு ஏற்பவும் இயந்திரமயமாக்கும் நிலை அமையும். மலைப்பாங்கான இடங்களில் வேளாண்மையை இயந்திர மயமாக்குவது பொருளாதார ரீதியில் இலாபகரமாக அமையாது. 'தட்டையாக இல்லாத நிலங்களிலும், இணக்கமற்ற கடினமான நிலங்களிலும் இயந்திரங்களைப் பயன்படுத்துவது கடினம்.'[1]

6. நிலவுடைமைகள் பெரிய அளவில் அமைந்திருப்பது அவசியமானது. அவ்வாறு இல்லாவிட்டால் இயந்திரமயமாக்குவதன்மூலம் எல்லா நன்மைகளையும் பெற இயலாது. சிறிய அளவுச் சாகுபடி நிலங்களில் பெரிய இயந்திரங்களைப் பயன்படுத்துவது முடியாது.

7. போதுமான அளவில் மூலதனத்தின் அளிப்பும் அமைந்திருக்கவேண்டும். அப்பொழுதுதான் இயந்திரங்களை வாங்க முடியும். மூலதனப் பற்றுக்குறை அமைந்துள்ள ஒரு நாட்டில் கடன் வசதிகளை அளிக்கக்கூடிய நிதி நிறுவனங்கள் ஏற்படுத்தப் படவேண்டும். வேளாண்மைப் பணிகளை ஊக்குவிக்க அவை உதவுதல் அவசியம்.

8. பண்ணை இயந்திரங்களைப் பழுதுபார்ப்பதற்கான வசதிகளைப் பெருக்குவது இன்றியமையாதது. இவ் வசதிகள் இல்லாவிட்டால் மூலதனப் பொருள்களின் நன்மைகளை முழுமையாகப் பெற முடியாது. இயந்திரப் பாகங்களை எளிதாகக் கிடைக்குமாறு செய்ய வேண்டும். தொழில் நுணுக்க வல்லுநர்கள் இயந்திரங்களை இயக்கப் பயிற்சி அளித்தல் அவசியம். அவர்களுடைய எண்ணிக்கை போதுமான அளவில் அமைவது இன்றியமையாதது.

9. தொழில் நுணுக்க உற்பத்தி முறைகளில் சில அடிப்படை மாற்றங்கள் தேவை. அதைத் தொடர்ந்து பொருளாதாரத்தின் எல்லாத் துறைகளிலும் பொதுவான முன்னேற்றம் ஏற்பட வேண்டும். இயந்திரமயமாக்குவதன்மூலம் வேளாண்மையில் குறிப்பிடத்தக்க வளர்ச்சியைப் பெற இவை தேவைப்படுகின்றன.

10. இயக்கச் சக்தி போதுமான அளவில் கிடைக்கும் இடங்களில் மட்டுமே, வேளாண்மையை இயந்திரமயமாக்குவது

[1] Ibid.

எளிது. கிராமப் புறங்களுக்கு மின்சார வசதியை அளிப்பதன் மூலம் இந்த நன்மையைப் பெறலாம். குறைந்த விலையில் மின் சக்தியை விநியோகிப்பது பல நன்மைகளைத் தரும். போதுமான அளவில் மின்சாரத்தைக் குறைந்த விலையில் அளிக்காவிட்டால், வேளாண்மையை முழுமையாக இயந்திரமயமாக்க முடியாது. இயந்திரமயமாக்கும் நோக்கம் சிறப்பாக நிறைவேறாது.

**பண்ணை இயந்திரங்களின் வகைகள்**

புதிய பல இயந்திரங்களும், கருவிகளும் கண்டுபிடிக்கப்பட்டு வருகின்றன. எனவே, மனித உழைப்பால் மட்டுமே செய்யமுடியும் என்று கருதப்பட்ட உற்பத்திப் பணிகள் இன்று இயந்திரங்களால் செய்யப் பெறுகின்றன. இன்றைய இயந்திரக் கலப்பைகளைச் சிறிய அளவு நிலங்களிலும் பயன்படுத்த முடிகிறது. அவற்றின் திறனும் அதிகரித்து வருகின்றது. சாகுபடியில் பேரளவு உற்பத்திச் சிக்கனங்கள் பெறப்படுகின்றன. விவசாயிகள் சேமிக்கும் திறனைப் பெறுகிறார்கள். மனித உழைப்பை அதிகமாகப் பயன்படுத்தும் பண்ணைகளில் இவ்வகை நன்மைகளைப் பெற முடியாது. பெரு வாரியாக வேளாண்மையில் பயன்படுத்தப்படும் இயந்திரங்களைக் கீழ்க்காணுமாறு குறிப்பிடலாம்.

1. 'இழுபொறி' அல்லது 'இயந்திரக் கலப்பை' (Tractor) மரக்கலப்பைகளுக்குப் பதிலாக நிலத்தை உழுவதற்குப் பயன் படுத்தப்படுகிறது. கால்நடைகள் இன்றிச் சாகுபடியைச் செய்வது இதனால் சாத்தியமாகிறது. நிலத்தை ஆழமாகவும் அகலமாகவும் உழ இது உதவுகிறது.

2. 'இணைக்கப்பட்ட துளையிடும் கருவி' (Combined Drill) ஒரே சமயத்தில் இருவிதப் பணிகளை ஆற்றுகிறது. இது விதைகளை விதைப்பதோடு உரங்களை இடுவதும் குறிப்பிடத்தக்கதாகும். இதனால், உரம் வீணடிக்கப்படுவதில்லை. விதைகளும், உரமும் சிக்கனமாகப் பயன்படுத்தப்படுவதால் உற்பத்திச் செலவு குறை கிறது. உற்பத்தியின் அளவும் கூடுகின்றது.

3. 'இணைக்கப்பட்ட அறுவடைக் கருவி' (Combined Harvester) வளர்ந்த பயிர்களை அறுவடை செய்வதோடு கதிரடிக்கவும் பயன்படுகிறது. இணைப்புப் பணிகளாக இவை அமைகின்றன. இதனால். கதிர் அரிவாள்கள் (Sickles), நீண்ட கவைக் கம்புகள் (Pitchforks), மண்வெட்டிகள் (Scoopshovels), முதலிய பழைய காலக் கருவிகள் தேவைப்படுவதில்லை. தற்காலத் திற்குப் பொருந்தாத இவ்வகைக் கருவிகளுக்குப் பதிலாகப் பெரிய இணைப்பு அறுவடைக் கருவியை உபயோகிப்பது நல்லது.

4. 'உருளைக் கிழங்கு அறுவடைக் கருவி' (Potato Harvester), உருளைக்கிழங்குகளைத் தோண்டி, சேமித்து, வகைப்படுத்தி, நிறையிட்டு அளிக்கின்றது. விற்பனைக்குத் தயாரான நிலைக்குக் கொண்டுவர இக்கருவி உதவுகின்றது. கைகளினால் இப் பணிகளைச் செய்வதைத் தவிர்த்து இக்கருவியைப் பயன்படுத்தினால் நாளொன்றிற்கு 50 டாலர்களைச் சேமிக்கலாம்.

5. 'பரிசோதனை நடவு நடும் கருவி' (Experimental planter) நாற்றுகளைப் பிரித்து நடுவதோடு உரங்களையும் இடுகின்றது. இவை யாவும் ஒரே சமயத்தில் செய்யப்படுகின்றன. இதன் காரணமாக உரங்கள் சிக்கனமாகவும், வீணடிக்கப்படாமலும் பயன்படுத்தப்படுகின்றன,

6. 'பருத்திப் பொறுக்கி' (Cotton Picker), பருத்தியையும், பருத்தி விதைகளையும் பிரித்தெடுக்க உதவுகிறது.

7' 'கரும்பு அறுவடைக் கருவி' (Sugarcane harvester), கரும்பை ஒடித்து. நறுக்கி, நிறையிடப் பயன்படுகிறது. ஒரு மணி நேரத்தில் இக் கருவி 7 அல்லது 8 நிறைகளைக்கொண்ட கரும்பை அறுவடை செய்ய உதவுகின்றது. இதன்மூலம் $\frac{1}{2}$ முதல் $\frac{1}{3}$ வரையான, அறுவடையில் ஈடுபடுத்தப்படும் மனித உழைப்பு சிக்கனம் பிடிக்கப்படுகிறது.

8. நீர்ப்பாசன வசதிகளுக்காக எண்ணெய் என்ஜின்களும், மின்சாரப் பம்புகளும் பயன்படுத்தப்படுகின்றன.

மேலை நாடுகளில் முள் புதர்களை அழிக்கவும் இழுபொறிகளின் மூலம் பூச்சிக்கொல்லி மருந்துகளைத் தெளிக்கவும், காய்கறிகள் பழங்கள் ஆகியவற்றின் உற்பத்திக்காகவும் வடிகால் வசதிகளைப் பெறுவதற்காகவும் எண்ணற்ற இயந்திரங்கள் உபயோகிக்கப்படுகின்றன. விவசாயிகளின் குடும்பங்கள் எளிதில் உற்பத்திப் பணிகளை நிறைவேற்ற இவை பெரிதும் உதவுகின்றன. உற்பத்திப் பொருள்கள் வெவ்வேறு இடங்களுக்கு எளிதில் இயந்திரங்களின்மூலம் எடுத்துச் செல்லப்படுகின்றன. மனிதனுடைய கரங்கள் படாமலேயே எல்லா உற்பத்தி நடவடிக்கைகளையும் இயந்திரங்கள் நிறைவேற்றி விடுகின்றன. இதனால், உற்பத்திப் பணிகள் எளிதாக்கப்பட்டு, விரிவாக்கப்பட்டு, விரைவாக்கப்படுகின்றன. பால் பண்டப் பொருள்களையும் பண்ணைப் பொருள்களையும் இயந்திரங்களால், எளிய முறையில் நீண்ட காலத்திற்குச் சேமித்து வைக்க முடிகிறது.

இன்றைய புதுமை வேளாண்மையில் பல இயந்திரங்களும், கருவிகளும் பயன்படுத்தப்படுகின்றன. சாகுபடிக்காக நிலத்தைச் செம்மைப்படுத்துவது முதல் விளைபொருள்களை விற்பனை செய்வது வரை இயந்திரங்களின் பணி அமைந்துள்ளது. கிராமப் பகுதிகளுக்கு மின்சார வசதியை அளிப்பதன் மூலமே இந்த நன்மைகள் யாவற்றையும் பெற இயலும். பலவேறு இடங்களிலும் ஒரே மாதிரியான வேளாண்மைக் கருவிகளைப் பயன்படுத்துவது கடினம். ஆகவே, வெவ்வேறு வகைப்பட்ட கருவிகளை உற்பத்தி செய்வது அவசியம். தட்பவெப்ப நிலைகள் வெவ்வேறு இடங்களிலும் மாறுபடுகின்றன. வேளாண்மைப் பள்ளிகள், கல்லூரிகள் ஆகியவற்றை ஏற்படுத்திக் கிராமங்களில் தொழில் நுணுக்க அறிவைப் பரப்ப வேண்டும். எல்லா இயந்திரங்களையும் இயக்க மின்சாரம் தேவைப்படுகிறது. தற்பொழுதுள்ள நிலையில் மின்சாரம் இன்றி வேளாண்மை, தொழில் ஆகிய இரண்டிலும் விரைவான முன்னேற்றத்தைப் பெற முடியாது. இந்தியாவில் மின்சார உற்பத்தி போதுமான அளவிற்குச் செய்யப்படவில்லை. இன்னும் இந்தியக் கிராமங்கள் எல்லாவற்றிற்கும் மின்சார வசதி அளிக்கப்படவில்லை. மின்சார வெட்டுகள் தொழில்துறையின் உற்பத்தியைப் பாதிப்பதோடு வேளாண்மை வளர்ச்சியையும் தடைசெய்கின்றன.

**பண்ணைகளில் இயக்கச் சக்தியின் தேவை**

வேளாண்மையில் இயந்திரங்களைப் பயன்படுத்துவது நன்மை பயக்கும் என்று சொல்லப்படுகின்றது. டான்சன் (Danson) குறிப்பிடுவதாவது, ‘மனித உழைப்பிற்கான செலவை அதிகமாகவும் இயந்திரங்களுக்கான செலவைக் குறைவாகவும் கொண்ட நாடுகளில் இயந்திரங்களைப் பயன்படுத்துவதால் உற்பத்திச் செலவைக் குறைக்க இயலும். மனித உழைப்பு வேளாண்மை அல்லாத பிற துறைகளிலும் தேவைப்படுகின்றது. வேளாண்மை இயந்திரங்கள் மனித உழைப்பைச் சேமித்துப் பிற துறைகளுக்கு அளிக்கின்றன. இதனால், உழைப்பின் பயன் மிகுதியாகின்றது.’

நம் நாட்டில் இதற்கு மாறான நிலைகள் அமைந்துள்ளன, இங்கு வேளாண்மை இயந்திரங்களின் விலைகள் உயர்வாக உள்ளன அவற்றில் சில மட்டுமே நம் நாட்டிலேயே உற்பத்தி செய்யப்படுகின்றன. இயக்கச் சக்தியின் விலையும் உயர்வாக இருக்கின்றது‘ எண்ணெய், மின்சாரம் ஆகியவற்றிற்கான செலவு கூடுதலாகவே உள்ளது. மாறாக, உழைப்பிற்கான செலவு குறைவானதே. ஆனால், உழைப்பாளர்கள் திறமை குறைந்தவர்களாக

உள்ளனர். அவர்கள் இயந்திரங்களை இயக்கும் அளவிற்குத் திறமை பெற்றிருப்பதில்லை. பயிற்சி வசதிகளைப் பெருககுவதன்மூலம் இக் குறைபாட்டைத் தவிர்க்கலாம். அமெரிக்காவிலும், பிற மேலை நாடுகளிலும் உழைப்பைச் சேமிக்க வேண்டும் என்ற அவசிய நிலை அமைந்துள்ளது. நம் நாட்டில் மிகுதியான மக்கள் தொகை பொருந்தியிருப்பதால் உழைப்பைச் சேமிக்கும் கருவிகளைப் பயன் படுத்தத் தேவையில்லை.

இயந்திர உதவியால் உற்பத்தியைப் பெருக்க இயலும் என்பதை எவராலும் மறுக்க முடியாது. வேலைவாய்ப்புகளைப் பெருக்கவும் அஃது உதவும். மனித உழைப்போடும், கால்நடைச் சக்தியோடும் இயந்திரங்கள் போட்டியிடுவதில்லை. அவற்றிற்கு உதவ இயந்திர களைப் பயன்படுத்தவேண்டும். இருவகைப்பட்ட பணிகளுக்காக இயக்கச் சக்தி வேளாண்மையில் தேவைப்படுகின்றது.

1. முதலாவதாக, நிலத்தைப் பண்படுத்தி உழுவதற்கும், விதை விதைப்பதற்கும், அறுவடைசெய்வதற்கும் பயன்படுத்தப் படுகின்ற இயந்திரங்களை இயக்க இயக்கச் சக்தி தேவை.

2. இரண்டாவதாக, தண்ணீர் இறைக்கவும். கதிரடிக்கவும், கரும்பைப் பிழியவும் அமைக்கப்படும் நிலையான இயந்திரங்களை இயக்குவிக்கவும் இயக்கச் சக்தி தேவையாகிறது.

கிராமங்களில் இயக்கச் சக்தி வெவ்வேறு வழிகளில் பெறப்படு கிறது. மின்சாரம், எண்ணெய் முதலியன பெருமளவில் பயன் படுத்தப்படுகின்றன. கால்நடைகளின் உழைப்பும் இயக்கச் சக்தி [redacted] அமைகின்றது. இந்தியாவில் மின்சக்தி போதுமான அளவில் கிடைக்கவில்லை, எனவே, குறிப்பிட்ட நிலையான பணிகளில் மட்டுமே மின்சாரம் பயன்படுத்தப்படுகிறது. எண்ணெய் என்ஜின்களும், கால்நடைகளும் அதிக அளவில் உபயோகிக்கப் பெறுகின்றன. மொத்தமாக ஆராயும்போது நம் நாட்டின் வேளாண்மை நடவடிக்கைகளில் மனிதச் சக்தியும், கால்நடைச் சக்தியுமே பெருவாரியாகப் பயன்படுத்தப்படுகின்றன.

**வேளாண்மையை இயந்திரமயமாக்குவதால் ஏற்படும் நன்மைகள்**

வேளாண்மைப் பண்ணைகளில் இயந்திரங்களைப் பயன்படுத்து வதால் உற்பத்தித் திறன் அதிகரிக்கின்றது. உலகின் [redacted] பின்தங்கிய நாடுகளிலும் வேளாண்மையை இயந்திரமயமாக்குவது நன்மை தரும். இதன்மூலம் உற்பத்தியில் சிறப்பான உயர்வைப் பெறலாம். எனவே, வேளாண்மையில் இயந்திரங்களைப் பயன் படுத்தும் நிலை பல வளரும் நாடுகளில் அவசரத் தன்மை

கொண்டுள்ளது. வேளாண்மையை இயந்திரமயமாக்குவதால் விளையும் முக்கிய நன்மைகளைப் பின்வருமாறு தொகுத்துக் கூறலாம்.

## 1. உற்பத்தித்திறன் உயர்வு

இயந்திரங்களைப் பயன்படுத்துவதால் வேளாண்மையில் தனி ஒருவருக்கான உற்பத்தித் திறனும், ஓர் ஏக்கருக்கான உற்பத்தித் திறனும் அதிகரிக்கின்றன. கிடைப்பருமைகொண்ட வசதிகளும், உள்ளீடுகளும் (inputs) சிறப்பாகப் பயன்படுத்தப்படுகின்றன. ஓர் ஏக்கரில் கிடைக்கக்கூடிய தானியங்களின் உற்பத்தி அளவும் மிகுகின்றது. இயந்திரமயமாக்கியதன் மூலம் மக்காச்சோள உற்பத்தி 40 முதல் 50 சதவீதமும், நெல் உற்பத்தி 15 முதல் 20 சதவீதமும், கோதுமை, நிலக்கடலை ஆகியவற்றின் உற்பத்தி 30 முதல் 40 சதவீதமும் அதிகரித்தன.[1]

'அமெரிக்காவில் 1870ஆம் ஆண்டிற்கும் 1939ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் ஓர் ஏக்கருக்கான சராசரி தானிய உற்பத்தியில் சிறிதளவு முன்னேற்றமே ஏற்பட்டது. ஆனால், 1940 ஆம் ஆண்டிற்கும் 1949ஆம் ஆண்டிற்கும் இடையே தானிய உற்பத்தி சுமார் 10 சதவீதமும், 1950ஆம் ஆண்டிற்கும் 1963ஆம் ஆண்டிற்கும் இடையில் தானிய உற்பத்தி 40 சதவீதத்திற்கு அதிகமாகவும் உயர்ந்தது.'[2] பண்ணை உற்பத்தியின் அளவு மிக உயர்வானதாக இருந்தது. 'தற்போது அமெரிக்காவின் பண்ணை உற்பத்தி நூறுண்டுகளுக்கு முன்னர் இருந்ததைவிட, 5.5 மடங்கு அதிகமாகும். மக்கள் தொகைப் பெருக்க வீதத்தைக் காட்டிலும் வேளாண்மை உற்பத்தியின் பெருக்க வீதம் உயர்வாக உள்ளது. 1870ஆம் ஆண்டிற்கும் 1970ஆம் ஆண்டிற்கும் இடையே மக்கள் தொகை 4.7 மடங்கு மட்டுமே அதிகரித்தது.'[3] 1870 ஆம் ஆண்டில் 100 ஆக இருந்த மொத்த உற்பத்திக் குறியீட்டெண் 1963-ல் 225ஆக உயர்ந்தது; 1870-ல் 100 ஆக இருந்த பண்ணை உற்பத்திக் குறியீட்டெண் 1963-ல் 560 ஆக உயர்ந்தது குறிப்பிடத்தக்கது.

தனியொரு மனிதனுக்கான உற்பத்தித்திறனை அஃது அதிகரிப்பதோடு உழைப்பாளரின் திறைமையையும் வளர்க்கிறது.

1 Rural India, June 1957, p. 186.

2 G. T. Barton and D. D. Durost, Contribution of Productivity to Growth in U.S. Farm Output, Productivity, Vol. VI. Nos. 2 & 3, 1955, p. 252.

3 Ibid., p. 259.

இயந்திரங்களைப் பயன்படுத்தும்போது பண்ணை நடவடிக்கைகள் எளிதாகின்றன. இதனால், குறைந்த காலத்திற்கு மனிதனது உழைப்பைத் தந்தால் போதுமானது என்னும் நிலை ஏற்படுகிறது. அமெரிக்காவில் 100 புஷெல் கோதுமையை உற்பத்தி செய்ய ஆரம்ப காலத்தில் ஆண்டொன்றுக்கு 320 மணி நேரம் தேவைப்பட்டது; இயந்திரங்களைக்கொண்டு உற்பத்தி செய்யப்படும் இன்றைய நிலையில் ஆண்டொன்றுக்கு 40 மணி நேரமே தேவைப் படுகிறது. சோவியத் ரஷ்யாவிலும் கூட்டுப்பண்ணைகளில் உழைப் பின் உற்பத்தித்திறன் 77 சதவீதம் உயர்ந்துள்ளது.[1] வேளாண்மை முழுமையாக இயந்திரமயமாக்கப்பட்டமையே இதற்கு முக்கியக் காரணமாகும். பண்ணை உழைப்பாளர்களுக்குப் பதிலாக மூலதன உள்ளீடுகள் பயன்படுத்தப்பட்டமையால் உற்பத்தியில், பல மடங்கு உயர்வு ஏற்பட்டது. 'அமெரிக்காவில் 1950 முதல் 1963 வரை உழைப்பின் பயன் 4.2 சதவீதம் என்ற அளவிற்கு மிகவும் குறைந்தது. 1963ஆம் ஆண்டில் மொத்த உள்ளீடுகளில் மனித உழைப்பின் பங்கு 25 சதவீமாக இருந்தது; மூலதன உள்ளீடுகளின் பங்கு 60 சதவீதத்திற்கும் அதிகமாக உயர்ந்தது'[2] வேளாண்மை மக்கள் தொகை குறைவடைந்தமைக்கு இது காரணமாயிற்று. எஞ்சியிருந்த வேளாண்மை உழைப்பாளர்களின் உழைக்கும் திறனும் அதிகரித்தது. இதன் விளைவாக உற்பத்தித் திறன் மிகுந்து மொத்த வேளாண்மை உற்பத்தி உயர்வடைந்தது.

வேளாண்மையை இயந்திரமயமாக்குவதால் ஓர் அலகு பொருளை உற்பத்தி செய்வதற்கான உழைப்பாளர்களின் எண்ணிக்கை குறைகிறது. அமெரிக்காவில் 100 புஷெல் கோது மையை உற்பத்தி செய்ய 1830ஆம் ஆண்டு 320 மணி நேர மனித உழைப்புத் தேவைப்பட்டது; அது 1900-ல் 108 மணி நேரமாகக் குறைந்தது. 1940ஆம் ஆண்டில் புதிய வகைக் கருவிகள் உழைப் பின் தேவையை 47 மணி நேரத்துக்குக் குறைத்துவிட்டன'[3]

'முதல் உலகப் போருக்கு முன்னர், ஓர் ஏக்கரில் பயிரை வளர்த்து அறுவடை செய்வதற்குச் சுமார் 35 மணி நேர மனித உழைப்புத் தேவையாக இருந்தது; ஓர் ஏக்கரில் கோதுமை உற்பத்தி செய்ய 15.2 மணி நேரமும், ஓர் ஏக்கரில் 'ஓட்' தானி

[1] Braginskii and Dumnor, Labour Productivity in the U. S. S. R., and U.S.A. Ibid., p. 274.

[2] Ibid., p. 260.

[3] Bureau of Agricultural Economics (U. S. A. Dept. of Agriculture), The Farm Cost Situation, Sep. 1945, p. 28.

யத்தை உற்பத்தி செய்ய 15.7 மணி நேரமும் தேவைப்பட்டன. 1945-48 ஆம் ஆண்டுகளில் உழைப்பின் தேவைகள் முறையே 23.7, 6.1, 8.1 மணி நேரங்களாக இருந்தன. குறைந்த நேரத்தில் ஓர் ஏக்கரிலிருந்து அதிக உற்பத்தியைப் பிற்காலத்தில் பெற முடிந்தது. ஓர் அலகு பொருளை உற்பத்தி செய்வதற்கான உழைப்பின் தேவை பாதிக்குமேல் குறைந்து விட்டது. 1910-14 ஆண்டுகளில் 100 புஷெல் தானிய உற்பத்திக்கு 135 மணி நேரமும், கோதுமைக்கு 106 மணி நேரமும், 'ஓட்' தானியத்திற்கு 53 மணி நேரமும் தேவைப்பட்டன; 1945-48ஆம் ஆண்டுகளில் இவை முறையே 67, 34, 23 மணி நேரங்களாக அமைந்திருந்தன.'[1]

அமெரிக்க வேளாண்மைப் பண்ணையில் ஈடுபட்டுள்ள ஒருவரின் உற்பத்தித்திறன் ரஷ்யப் பண்ணையில் அமைந்துள்ள ஒருவரின் உற்பத்தித் திறனைவிட 4½ மடங்கு அதிகமானது.[2] சோவியத் ரஷ்யாவில் கூட்டுப் பண்ணைகளால், உழைப்பாளர்களின் உற்பத்தித்திறன் அதிகரித்துள்ளது. புரட்சிக் காலத்திற்கு முன்னர் ஆன உற்பத்தித்திறனோடு ஒப்பிடும்போது இதை நன்கு உணரலாம்; தற்பொழுது அங்கு உழைப்பாளர்களின் உற்பத்தித் திறன் மூன்று மடங்கு உயர்வடைந்திருக்கின்றது.[3]

இயந்திரமயமாக்கினால் உற்பத்தித் திறன் அதிகரிக்கும் என்பதை அமெரிக்கா, ரஷ்யா முதலிய நாடுகளின் உதாரணம் விளக்குகிறது. குறைந்த அளவில் கிடைக்கக்கூடிய வளங்களைச் சிறப்பாகப் பயன்பத்தி அதிக உற்பத்தியைப் பெற இயந்திரங்கள் உதவுகின்றன. அமெரிக்கப் பொருளாதார வளர்ச்சியின் தொடக்க நிலையில் பத்தில் ஒன்பது பேர் வேளாண்மையில் ஈடுபட்டிருந்தனர். இன்று ஆறில் ஒருவர் என்ற வீதத்திற்குக் குறைவாகவே வேளாண்மை மக்கள் தொகை அமைந்துள்ளது.[4]

## 2. வேளாண்மை உற்பத்தி அதிகரிப்பு

இயந்திரமயமாக்குவதால் மொத்த வேளாண்மை உற்பத்தியின் அளவு போற்றத்தக்க வகையில் உயர்கின்றது. முன்னமேயே

1 R. W. Hecht and G.T. Barton, 'Grains in Productivity of Farm Labour,' 1953, p. p. 9-11.

2 N. Jasny, 'The Socialized Agriculture of the U.S S R.-Plans and Performances,' 1949, p. 17.

3 N. Anisimov, 'Soviet Agriculture,' 1957, p. 28.

4 U.S.A. Dept of Agriculture, the Year Book of Agriculture Marketing), 1954, p. 9.

குறிப்பிட்டுள்ளபடி ஓர் ஏக்கருக்கான உற்பத்தியும், தனி ஒருவருக்கான உற்பத்தியும் அதிகரிக்கின்றன. பேரளவுப் பண்ணைகளின் உற்பத்திச் சின்னங்களும் பெறப்படுகின்றன. முன்னேற்றமான சாகுபடி நடவடிக்கைகள் தொழில் நுட்பம் மிக்க இயந்திரங்களைக் கொண்டு செய்யப்படுவதால் உற்பத்தி பலமடங்கு அதிகரிக்கிறது. சிறப்பான நிர்வாகமும் அமைகிறது. ரஷ்யா, ஜெர்மனி, அமெரிக்கா ஆகிய நாடுகளில் வேளாண்மை உற்பத்தி திடீரென உயர்ந்ததற்கு இயந்திரங்களைப் பயன்படுத்தியது மிக முக்கியக் காரணமாய் இருந்தது. குறிப்பாகக், கடந்த 30 ஆண்டுகளில் இந்த நாடுகளில் வேளாண்மையாக்கம் அதிகரித்தமைக்கு இயந்திரங்களே பெரிதும் உதவிவந்தன.

'அமெரிக்காவில் கடந்த 30 ஆண்டுகளில் வேளாண்மை உற்பத்தி அதிகரித்துள்ளமைக்குப் பல காரணிகள் அடிப்படையாக அமைந்துள்ளன. மொத்த உற்பத்தியின் உயர்வில் மூன்றில் ஒரு பங்கு இரசாயனப் பொருள்களாலும், மூன்றில் ஒரு பங்கு நல்ல வகை விதைகளாலும், மற்றொரு மூன்றில் ஒரு பங்கு முன்னேற்றமான வேளாண்மைக் கருவிகளாலும் பெறப்பட்டன.'[1]

இதே நன்மை சோவியத் ரஷ்யாவிலும் அடையப்பெற்றது. கூட்டுப் பண்ணைகளில் - இயந்திரங்களைப் பயன்படுத்தியமையால், வேளாண்மை உற்பத்தி ஆண்டொன்றுக்கு 4 சதவீதம் கூடியது. 1965 ஆம் ஆண்டில் சமதர்மப் போட்டி, மின்சாரமயமாக்கல், இயந்திரங்களின் பயன் ஆகியவற்றால் அந்த நாட்டின் வேளாண்மை உழைப்பாளர் உற்பத்தித்திறன் 100 சதவீதம் உயர்ந்தது.[2] 1950 ஆம் ஆண்டில் ஐந்து பேர் அடங்கிய ஆங்கிலேயர்க் குழு அமெரிக்காவிற்கு விஜயம் செய்தது. அமெரிக்கப் பண்ணைகளின் உற்பத்தித் திறனைப் பற்றிய அறிக்கையை அது சமர்ப்பித்தது. பண்ணைகளில் இயந்திரங்களைப் பயன்படுத்துவதன் மூலம் உழைப்பாளரின் உற்பத்தித் திறனைப் பெருக்க முடியும் என்ற கருத்தை அது வெளியிட்டது. அதனால் பண்ணை உற்பத்தி பெருகித் தேசிய நலன் காக்கப்படுவதோடு, நிலத்தைச் சார்ந்து வாழ்பவர்களின் பொருளாதார நலனும் மேம்பாடு அடையும்.

1 B. K. S. Jain, Op. cit, p. 449 (Based on the Report of the British Team to U. S. A.)

2 Roy D. Laird, Soviet Goals for 1965 and Problems of Agriculture, Productivity, Op. Cit. p. 282.

இயந்திரங்கள் பண்ணைப் பணிகளை விரைவாக்குகின்றன. டி. ஆர். பாம்ஃபோர்டு (D. R. Bomford) கூறுவதாவது, 'மூன்று குதிரைகளைக்கொண்டுள்ள ஓர் உழவர், மூன்று குதிரைச்சக்தியைக் கொண்டு உற்பத்தி நடவடிக்கைகளில் ஈடுபடுகின்றார். ஆனால், நடுத்தர இயந்திரக் கலப்பையைக் கொண்டிருந்தால், அவர் 20 முதல் 30 'குதிரைச் சக்தியைப்' (Horse power) பெற்று உற்பத்திப் பணிகளில் எளிதாக ஈடுபடலாம். இதன் காரணமாக உற்பத்தி உயர்வு வீதம் எட்டிற்கு ஒன்று என்ற அளவில் அமையும்.'[1]

அமெரிக்காவில் முன்னர் ஒரு ஜோடி குதிரைகளைக் கொண்டு ஓர் ஏக்கர் நிலத்தை உழுத விவசாயி தற்பொழுது இயந்திரக் கலப்பையைக் கொண்டு நாளொன்றுக்கு 12 ஏக்கர் நிலத்தை உழ முடிகின்றது. இவ்வாறு, வேளாண்மைச் சாகுபடிப் பணிகள் இயந்திரங்களால் விரைவாக்கப்பட்டுள்ளமையால் மனித உழைப்பின் தேவை குறைந்துள்ளது. அமெரிக்காவில் இப்போது வேளாண்மையில் ஈடுபட்டுள்ளவர்களின் எண்ணிக்கை குறைந்திருந்தாலும், உற்பத்தி பல மடங்கு கூடியிருக்கின்றது. அமெரிக்க வேளாண்மைப் பண்ணையின் சராசரி நில அளவு, 1890ஆம் ஆண்டில் 136 ஏக்கர்களாக இருந்தது; இது 1950 ஆம் ஆண்டில் 215 ஏக்கர்களாக அதிகரித்தது. அதே காலத்தில் ஒரு பண்ணைக்கான உழைப்பாளர்களின் எண்ணிக்கை இரண்டிலிருந்து 1.6 என்ற அளவிற்குத் தாழ்ந்தது. அப்போது, உழைப்பாளர்களின் எண்ணிக்கையில் 50 சதவீதக் குறைவு ஏற்பட்டது.

இதைக் காட்டிலும் சிறப்பான வேளாண்மை வளர்ச்சியை ரஷ்யர்கள் பெற்று வருகிறார்கள். சோவியத் ரஷ்யாவில் இயந்திர உற்பத்தி முறையால்—1913ஆம் ஆண்டின் உற்பத்தியைவிட 4 மடங்கு அதிக உற்பத்தி இப்பொழுது பெறப்படுகிறது. 1960 ஆம் ஆண்டிற்குள் தானிய உற்பத்தியில் 70 சதவீத உயர்வு ஏற்பட்டுள்ளது.

கனடா, அர்ஜென்டினா, நியூசிலாந்து, அமெரிக்கா ஆகிய நாடுகளின் விவசாயிகள், அதிக உபரி உற்பத்தியைப் பெற்று வருகின்றமைக்கு இயந்திரமயமான வேளாண்மையே காரணமாகும்.

### 3. உற்பத்திச் செலவில் குறைவு

மனித உழைப்பு, கால்நடை உழைப்பு ஆகியவற்றைக் கொண்டு உற்பத்தி செய்யப்படும்போது, ஓர் அலகிற்கான

1 Year Book of Agricultere (1943-47), S. E. Johnson in Science in Farming, p. 922.

உற்பத்திச் செலவு அதிகமாக இருக்கின்றது. இயந்திரங்களின் பயனால் உற்பத்திச் செலவைக் குறைப்பது எளிது. உற்பத்தி அதிகரிக்கும்போது உள்ளீடுகள் அதிகரிக்காமையே இதற்குக் காரணமாக அமைகின்றது. உழைப்பாளர்களின் எண்ணிக்கையும் குறைகின்றது. இயந்திரக் கலப்பைகளை உபயோகிக்கும் போது உற்பத்திச் செலவு மிகவும் குறைவடைகின்றது. வாங்கும் விலை தேய்மானச் செலவு, உழைப்பாளர் ஊதியம், பழுது பார்க்கும் செலவு ஆகியவற்றை உள்ளடக்கிய 40 குதிரைச் சக்திகளைக் கொண்ட இயந்திரக் கலப்பைகளைப் பயன்படுத்துவதற்கான ஆண்டுச் செலவு ரூ. 41,520 ஆகும். அதே அளவு குதிரைச் சக்தியைக்கொண்ட கால்நடைகளைப் பராமரிப்பதற்கான செலவு ஆண்டொன்றுக்கு ரூ. 65.200 ஆகும்.[1] எனவே, நிலச் சாகுபடியில் கால்நடைகளைப் பயன்படுத்துவதற்குப் பதிலாக இயந்திரக் கலப்பைகளைப் பயன்படுத்துவது உற்பத்தியை அதிகரிக்கவும், உற்பத்திச் செலவைக் குறைக்கவும் உதவுகிறது. எந்திரங்களை இயக்குவதற்குக் கடினமான உடல் உழைப்பும் தேவைப்படுவதில்லை. பேரளவு உற்பத்திச் சிக்கனங்களும் குறைவான செலவிற்குக் காரணமாகின்றன. செலவு குறைவதால் அதிக இலாபத்தை விவசாயிகள் பெறுகின்றனர். அந்த இலாபம் திரும்பவும் உற்பத்தியைப் பெருக்க முதலீடாக்கப்படுகிறது.

உற்பத்திச் செலவைக் குறைக்க பண்ணையளவை அதிகரிக்க வேண்டும் என்ற கருத்தைப் பலரும் ஏற்றுக்கொண்டுள்ளனர். செறிவு முறைச் சாகுபடியை மேற்கொள்வதும் அவசியம். இயந்திரங்களைப் பயன்படுத்தும்போது உற்பத்தியின் அளவு பெருகுவதால் செலவு குறைகிறது. இயந்திரச் செலவிற்கும் கால்நடைச் செலவிற்கும் உள்ள வேறுபாட்டைப் பின்வரும் அட்டவணை உணர்த்தும்.[2]

| இயந்திரப் பண்ணையில் 40 குதிரைச் சக்திகொண்ட ஓர் இயந்திரக் கலப்பைக்கான செலவு | எருதுகளைக் கொண்டு சாகுபடி செய்யப்படும் பணையில் 40 குதிரைச்சக்தி கொண்ட 40 ஜதை எருதுகளுக்கான செலவு |
|---|---|
| இயந்திரக்கலப்பை, கருவிகள் ஆகியவற்றை வாங்குவதற்கான செலவு ரூ. 25,000 | எருதுகளை வாங்குவதற்கான செலவு (ஓர் எருதின் விலை ரூ. 400 என்று கொள்ளப் படுகிறது) ரூ. 35,000 |

[1] Quoted by M. Jussawala, Mechamisation of Agriculture, Indian Journal of Agricultural Economics, Op. cit., p. 156.

[2] Quoted by Mrs. Mehroo Jussawala in 'Mechanisation of Agriculture,' Indian Journal of Agricultural Economics, Vol. IV, 1, 1948, p.156.

| இயந்திரப் பண்ணையில் 40 குதிரைச் சக்திகொண்ட ஓர் இயந்திரக் கலப்பைக்கான செலவு | | எருதுகளைக் கொண்டு சாகுபடி செய்யப்படும் பண்ணையில் 40 குதிரைச் சக்தி கொண்ட 40 ஜதை எருதுகளுக்கான செலவு | |
|---|---|---|---|
| ஓராண்டிற்கான தேய்மான, | | கால் நடைகளின் இழப்பு | 3 000 |
| நடப்புச் செலவுகள் (ஒரு மணி நேரத்திற்கு ரூ. 6 என்று கொண்டு 20,000 மணி நேரத்திற்கு) | ரூ. 12,000 | கால் நடைகளின் தீவனச் செலவு (ஒரு ஜதை எருதுகளுக்கு ஒரு மாதத்திற்கு ரூ. 40 என்று கொண்டால் 40 ஜதைகளுக்கு ஓர் ஆண்டிற்குச் செலவு) | ரூ. 19,200 |
| உழைப்பிற்கான செலவு: மாதம் ரூ. 90 பெறும் ஓர் ஓட்டுநர் (Driver) மாதம் ரூ. 60 பெறும் இரு இயந்திரப் பணியாளர்கள் | ரூ. 2,520 | உழைப்பிற்கான செலவு 8 மாதங்களுக்கு 40 உழைப்பாளர்கள் — ஒவ்வொருவருக்கும் ரூ. 25 மாத ஊதியம்– ஆண்டு முழுவதும் 10 உழைப்பாளர்களின் பணி | ரூ. 11,000 |
| ஓராண்டிற்கான பழுது பார்க்கும் செலவு | ரூ. 2,000 | | |
| மொத்தம் | 41,520 | மொத்தம் | 65,200 |

இதன்மூலம் கால்நடைகளுக்கான செலவைக் காட்டிலும் இயந்திரத்திற்கான செலவு குறைவு என்பதை அறியலாம்.

இயந்திரமயமாக்கப்பட்ட வேளாண்மையில் உற்பத்தியின் அளவிற்கும், உற்பத்திச் செலவிற்கும் இடையே தொடர்பை ஏற்படுத்த முடியும். உற்பத்தி அதிகரிக்கும்போது அதே வீதத்தில் உள்ளீடுகளின் வீதமும் உயர்வதில்லை. சாகுபடிப் பணிகளில் ஈடுபடுபவர்களின் எண்ணிக்கையும் குறைகிறது.

**4. வேளாண்மையல்லாத துறைகளுக்கு உழைப்பின் வெளியேற்றம்**

இயந்திரங்களைப் பயன்படுத்தும்போது வேளாண்மையில் உள்ள உபரி உழைப்பாளர்கள் வெளியேற்றப்படுகின்றனர். பிற துறைகளின் வளர்ச்சிக்கு இஃது உதவுகின்றது. பண்ணைகளில் குறைந்த எண்ணிக்கையிலேயே உழைப்பாளர்கள் பணிபுரி

இன்றனர். வேளாண்மைத் துறையின் உபரி மனித உழைப்பைப் பிற பொருளாதார நடவடிக்கைகளில் ஈடுபடுத்துவது நல்லது. ஆரம்பக் காலத்தில் அமெரிக்காவின் 30 சதவீத உழைக்கும் மக்கள் தொகை வேளாண்மையில் ஈடுபட்டிருந்தது; ஆனால், தற்பொழுது உழைக்கும் மக்கள் தொகையில் 8½ சதவீதம் மட்டுமே வேளாண்மையில் அமைந்திருக்கின்றது. வேளாண்மையல்லாத பிற பணிகளில் சுமார் 20 சதவீத உழைக்கும் மக்கள் தொகையை ஈடுபடச் செய்தமைக்கு இயந்திரமயமாக்கியதே காரணம். விரைவாக இயந்திரங்களை வேளாண்மையில் பயன்படுத்தியமையால், அமெரிக்காவில் இன்று 8½ சதவீத உழைக்கும் மக்கள் தொகை மட்டுமே சாகுபடியைச் செய்கின்றது.

## 5. தேசிய வருமான உயர்வு

வேளாண்மையை இயந்திரமயமாக்குவதால் உழைப்பாளர்களின் வாழ்க்கைத்தரம் உயர்கின்றது; நாட்டின் மொத்த தேசீய வருமானமும் அதிகரிக்கின்றது. பண்ணைகளின் உற்பத்தி கூடும் போது விவசாயிகளின் வருமானம் உயர்வடைகிறது. இஃது, அவர்களுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்துகின்றது. ஒரு நாட்டுப் பொருளாதாரத்தின் பல்வேறு துறைகளுக்கு இடையே வருமானப் பகிர்வில் அதிக ஏற்றத் தாழ்வுகள் அமைந்திருக்கக் கூடாது. தேசிய வருமானத்தை உயர்த்துவதும் இன்றியமையாதது. வேளாண்மையில் இயந்திரங்களைப் புகுத்தி அதிக உற்பத்தியைப் பெறலாம். அது, தேசிய வருமான உயர்வுக்கு வழிவகுக்கும். வேளாண்மையை முக்கியத் தொழிலாகக் கொண்ட பின்தங்கிய நாடுகளில் இவ்வாறு தேசிய வருமானத்தை உயர்த்த முயல வேண்டும். நாட்டின் விரைவான மூலதனத் திரட்சியும் இதனால் சாத்தியமாகிறது.

பல வகைப்பட்ட வளங்களை முழுமையாகப் பயன்படுத்தும் போதுதான், தேசிய வருமானம் பெருகத் தலைப்படுகிறது. இயற்கையின் கொடையாகிய நிலத்தைச் சிறப்பாகப் பயன்படுத்தி உற்பத்தியை அதிகரிக்க இயந்திரங்கள் தேவை.

## 6. வேளாண்மையில் தொழில் நுணுக்க முன்னேற்றம்

இயந்திரங்களைப் பயன்படுத்துவதால் சாகுபடி நடவடிக்கைகளில் தொழில் நுணுக்க முன்னேற்றம் ஏற்படுகிறது. மேலும் சிறப்பான தொழில் நுட்பம் வாய்ந்த உற்பத்தி முறைகளைக் கைக்கொள்ள வேண்டுமென்ற ஆர்வத்தையும் விவசாயிகள் பெறுகின்றனர். வளரும் நாடுகளின் வேளாண்மையில் பராமரிப்புப் பண்ணை

முறையே அமைந்துள்ளது. அதைத் தவிர்க்க தொழில் நுணுக்க முன்னேற்றம் தேவைப்படுகிறது. வேளாண்மையைச் சார்ந்த தொழில்கள் வளரவும் இஃது உதவும். இதனால், தரிசு நிலங்கள் விளை நிலங்களாக மாற்றப்படுகின்றன; நில அரிப்பும் தடுக்கப்படுகின்றது. வேளாண்மைத் தொழில் நுணுக்க முன்னேற்றம் உற்பத்தியைப் பல மடங்கு பெருக்க உதவுகின்றது.

தரிசு நிலங்களைச் சாகுபடி நிலங்களாக மாற்றுவது, நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்குவது ஆகியவற்றில் இயந்திரங்களைப் பயன்படுத்துவது நல்லது. இந்தியாவின் பல பகுதிகளிலும் பருவ மழையை நம்பியே சாகுபடி நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுகின்றன. இந்த நிலை தவிர்க்கப்படவேண்டும். இயந்திரக் கலப்பைகளைப் பயன்படுத்துவதன்மூலம் சாகுபடி நில அளவைப் பெருக்கலாம். கடினமான நிலங்களைக்கூட அவை இணக்கமானவைகளாக ஆக்குகின்றன; மேடு பள்ளங்களைச் சமன் செய்கின்றன; நீண்ட வேர்களைக் கொண்ட களைகளை நீக்குகின்றன. இயந்திரங்களைப் பயன்படுத்தி எரு இடப்படுகின்றது; வயல்களுக்கு வரப்புகள் அமைக்கப்பெறுகின்றன. இவ் வகை இயந்திரங்கள் காலத்தைச் சேமித்து உற்பத்திப் பணிகளை விரைவாக்குகின்றன.

## 7. பொருளாதரச் சிக்கனங்களைக்கொண்ட நிலவுடைமைகள்

வேளாண்மையை இயந்திரமயாக்குவதால் பொருளாதார ரீதியில் அதிக இலாபத்தைத் தரக்கூடிய வகையில் நிலவுடைமைகளின் அளவு அமைகிறது. இந்தியாவில் சராசரிச் சாகுபடி நிலத்தின் அளவு மிகக் குறைவாக இருக்கிறது. சிக்கன அளவில் அமையாத பண்ணைகளைச் சிக்கனப் பண்ணைகளாக மாற்ற வேண்டும். அப்போதுதான் பண்ணைகளின் மூலம் முழு நன்மைகளைப் பெற முடியும்; உற்பத்திச் செலவையும் குறைக்க இயலும். இயந்திரமயமாக்குவதன்மூலம் பண்ணைகளின் எண்ணிக்கை குறையும்; சராசரிச் சாகுபடி நில அளவு உயரும். அமெரிக்காவில் 1930-39-ல் 6.7 மில்லியன் என்ற எண்ணிக்கையில் பண்ணைகள் இருந்தன; இவை 1959-ல் 4.6 மில்லியனாகக் குறைந்து விட்டன. எனினும், பண்ணைகளின் சராசரி அளவில் கணிசமான முன்னேற்றம் ஏற்பட்டது.[1] இந்தியா முதலிய நாடுகளில் வேளாண்மையில் இயந்திரங்களைப் புகுத்துவதன்மூலம் கூட்டுறவுப் பண்ணை முறையை வளர்க்கலாம்.

1 B.C. Tandon, 'The American Economy,' p. 94.

8. ஓரலகு நிலத்திற்கான உற்பத்தி அதிகரிப்பு

எஸ். இ. ஜான்சன், அமெரிக்காவில் 1934ஆம் ஆண்டிற்கும் 1939ஆம் ஆண்டிற்கும் இடையே வேளாண்மை உற்பத்தி 28 சதவிதம் உயர்வடைந்தமைக்குச் சில காரணங்களைக் குறிப்பிடுகின்றார். 'உற்பத்தி உயர்வில் நான்கில் ஒரு பங்கு சாதகமான சீதோஷ்ண நிலையினால் கிடைத்தது; சாகுபடி நில அளவுப் பெருக்கத்தால் சுமார் 15 சதவித உயர்வு மட்டுமே கிட்டியது. எஞ்சிய சுமார் 60 சதவித உற்பத்தி உயர்விற்கு இயந்திரங்கள், கால் நடைகள் ஆகியவற்றைச் சிறப்பாகப் பயன்படுத்தியமையும், பயிர்களின் முன்னேற்றமும் காரணமாக அமைந்தன.'[1]

அமெரிக்காவில் முக்கியமான ஒவ்வொரு பயிரின் உற்பத்தியும் 1926-35ஆம் ஆண்டுகளைக்காட்டிலும் 1948ஆம் ஆண்டில் அதிகமாக இருந்தது; தானிய உற்பத்தி ஓர் ஏக்கருக்கு 42.8 புஷெல் என்ற அளவில் அமைந்திருந்தது. இவ் வாண்டுகளில் கோதுமை உற்பத்தியின் அளவும் படிப்படியாக அதிகரித்து வந்தது. அமெரிக்காவில் ஓர் ஏக்கருக்கான அரிசி உற்பத்தி 40 புஷெல் ஆகும். இவ்வாறு ஓரலகு நிலத்திற்கான உற்பத்தி உயர்ந்துள்ளமைக்கு இயந்திரமயமாக்கப்பட்ட வேளாண்மையே முக்கியக் காரணமாகும்.

9. விரிவான சந்தை

இயந்திரங்களையும், கருவிகளையும் பயன்படுத்தும்போது பராமரிப்புப் பண்ணை முறை மாற வாணிபப் பண்ணை முறை வளர்கிறது. உள்நாட்டுச் சந்தையோடு வெளிநாட்டுச் சந்தையும் விரிவடையும் பல வளர்ச்சியுறாத நாடுகளின் விவசாயிகள் பிழைப்புக்காகவே வேளாண்மைச் சாகுபடியில் ஈடுபடுகின்றனர். உற்பத்தியைப்பெருக்கி நல்வாழ்வைப் பெறவேண்டும் என்ற எண்ணத்தை அவர்கள் கொண்டிருப்பதில்லை. எனவே, சந்தைக்கான உற்பத்தி கைக்கொள்ளப்படுவதில்லை. விவசாயிகளின் வாழ்க்கை நிலையைத் திருத்தி உயர்த்த வாணிப நோக்கம் கொண்ட உற்பத்தி முறை அமையவேண்டும். அப்பொழுதுதான் வறுமை வட்டச் சூழலை நீக்கமுடியும், உணவுக்காகப் பலர் யாசிக்கும் நிலை தவிர்க்கப்படும்.

மனித சக்தியால் எல்லா வளங்களையும் முழுமையாகப் பயன்படுத்த இயலாது. நிலத்தை நன்கு பயன்படுத்தி அதிக உற்பத்தியைப்பெற மூலதனப் பொருள்களாகிய இயந்திரங்களை

[1] S.E. Johnson, Op Cit., p. 926.

உபயோகிப்பது அவசியம். இதனால், உணவுத் தானியங்களின் பற்றுக்குறை நிலையைத் தவிர்க்கலாம். அவற்றின் உற்பத்தியில் உபரியையும்கூடப் பெறலாம். இக் காரணங்களால் சந்தை விரிவடைவதோடு, இலாப நோக்கத்தோடும் சாகுபடி நடவடிக்கைகள் பின்பற்றப்படும். பண்ணை நடவடிக்கைகளில் அதிக மூலதனத்தை மேலும் மேலும் முதலீடாக்கும்போது உற்பத்தி அதிகரிப்பதோடு, உற்பத்தியைப் பெருக்க வேண்டுமென்ற ஊக்கமும் உயரும். இதனால், வேளாண்மைப் பொருள்களின் விற்பனைக்கான உபரி அதிகரிக்கும்.

ஒவ்வொரு சாகுபடியாளரும் உத்தம அளவில் நிலத்தையும், போதுமான அளவில் மூலதனத்தையும் பெற்றிருக்க வேண்டும். அப்பொழுதுதான் தொழில் நுணுக்க உற்பத்தி முறையின் எல்லா நன்மைகளையும் பெற இயலும். வேளாண்மையில் தொழில் நுணுக்க முன்னேற்றம் இருவித நிலைகளைத் தோற்றுவிக்கிறது.

1. குடும்பப் பாரம்பரியப் பண்ணைமுறைக்குப் பதிலாக இலாப நோக்கம் கொண்ட வாணிபப் பண்ணைமுறை படிப்படியாக வளர்கின்றது.

2. வேளாண்மைப் பொருள்களுக்குப் பன்னாட்டுச் சந்தைகளைப் பெறுவதற்கான முயற்சிகள் எடுக்கப்படுகின்றன.

உற்பத்தி உயர்ந்து உபரி அதிகரிக்கும்போது விரிவான சந்தை அமைவதால் வேளாண்மை செழிக்கின்றது. வாணிப எண்ணத்தோடு வேளாண்மை உற்பத்தி அமைகின்றது.

### 10. உழைப்புப் பற்றுக்குறைச் சிக்கலுக்குத் தீர்வு

மக்கள் தொகையைக் குறைவாகக் கொண்டுள்ள ஒரு நாட்டில் வேளாண்மையை இயந்திரமயமாக்குவது நன்மை பயக்கும். உழைப்புப் பற்றுக்குறை நிலையை இயந்திரங்களின்மூலம் தவிர்க்கலாம். ஆனால், அந்த நாட்டில் நிலமும், மூலதனமும் அதிக அளவில் கிடைக்கப்பெறவேண்டும். மனிதச் சக்தி, கால்நடைச் சக்தி ஆகியவற்றிற்குப் பதிலாக இயந்திரச் சக்தியைப் பயன்படுத்தலாம். இதன்மூலம் உற்பத்தியில் பல வகைச் சிக்கனங்களைப் பெற முடியும். இயந்திரங்களைப் பயன்படுத்தும்போது வேளாண்மை ஓர் இன்பகரமான தொழிலாக அமையும்; படித்தவர்களும் அத்தொழிலில் ஈடுபட முன்வருவார்கள். கடினமான தொழிலாகவும் அஃது இருக்காது.

இந்தியா முதலிய மக்கள் தொகை மிக்க வளர்ச்சியடைந்து வரும் நாடுகளில் உழைப்புப் பற்றுக்குறை அமைந்திருக்கவில்லை. உழைப்பின் அளிப்புத் தேவையைவிட அதிகமாக உள்ளது. எனினும் உழைப்புச் சிறப்பாகப் பயன்படுத்தப்படாமல் வீணடிக் கப்படுகிறது. இந்த நாடுகளில், வேளாண்மையை இயந்திரமய மாக்கும்போதுதான் பல சிக்கல்கள் உருவெடுக்கின்றன.

## 11. கால்நடைகளின் தேவைக் குறைவு

வேளாண்மையை இயந்திரமயமாக்கும்போது கால்நடைச் சக்தியின் தேவை குறைகிறது. இந்தியா முதலிய வளரா்த நாடுகளில் உழுவதற்கும், நீர் பாய்ச்சுவதற்கும், விளைபொருள் களைச் சந்தைப்படுத்துவதற்கும் கால்நடைகள் பயன்படுத்தப்படு கின்றன. கால்நடைகள் எல்லாக் காலங்களிலும் பயன்படுத்தப் படுவதில்லை. ஆனால், அவற்றைப் பராமரிப்பதற்கான செலவு வெவ்வேறு காலங்களிலும் ஒரே மாதிரியாகவே இருக்கின்றது. உழைப்பைப் பெற்றாலும், பெறாவிட்டாலும் கால்நடைகளுக்குத் தீவனம் அளிக்காமல் இருக்க இயலாது. இதனால், அவற்றைப் பராமரிக்கும் செலவு அதிகமாக அமைகிறது. இயந்திரங்களைப் பயன்படுத்தினால் குறைந்த காலத்திலேயே பணிகளைச் செவ்வனே நிறைவேற்ற முடியும். குறுகிய காலத்திற்கு மட்டுமே இயந்திரங்கள் பயன்படுத்தப்படாமல் இருக்கின்றன. மற்றொரு புறத்தில் கால் நடைகளின் உழைப்பைச் சிக்கனமாகப் பயன்படுத்த முடியாது. ஆண்டின் எல்லா மாதங்களிலும் கால்நடைச் சக்தியைப் பயன் படுத்துவது கடினமானது. இயந்திரங்களைப் புகுத்திக் கால்நடை களின் தேவையைக் குறைத்தால் உற்பத்திச் செலவைத் தாழ்த்த இயலும்.

## 12. கிராமப் பகுதிகளின் சமுதாய அமைப்பில் மாற்றம்

வேளாண்மையில் இயந்திரங்களைப் பயன்படுத்தும்போது கிராமப்புறங்களின் சமுதாய அமைப்பு முறையில் மாற்றம் தோன்று கிறது. கிராம மக்களின் குறுகிய நோக்கு மறைந்து விரிந்து பரந்த கண்ணோட்டத்தை அவர்கள் பெறுகின்றார்கள்; நல் வாழ்வைப் பெறுவதற்கான வழியை உணர்கின்றார்கள். பழைய எண்ணங் களும், பாரம்பரியக் கருத்துகளும், தவறான மத நோக்கங்களும் அவர்களை விட்டுப் பறந்தோடுகின்றன. உழைப்பின் பெருமையை அவர்கள் உணர்கின்றார்கள்; பிறருக்கு அதை உணர்த்தி உயர்வான ஊதியத்தையும் பெறுகின்றார்கள். மூட நம்பிக்கைகள் மறைகின்றன. இவற்றால் கிராம மக்களின் வாழ்வு வளமடைகிறது. அவர்களின் அறிவு வளர்கிறது. புதுமை வாழ்வு வாழ அவர்கள்

கற்றுக் கொள்ளுகிறார்கள்; முன்னேற்றங்களுக்கு ஏற்ப தங்களையும் மாற்றிக் கொள்ளுகிறார்கள். மாற்றங்களுக்கு ஈடு கொடுக்கவும் அவர்களால் முடிகிறது. இவற்றால், அவர்களின் அந்தஸ்து உயர்ந்து நல்ல வாழ்வையும் அவர்கள் அனுபவிக்கிறார்கள்.

இக் காரணிகள் கிராமச் சமுதாய அமைப்பையே மாற்றிவிடு கின்றன. சமூக வாழ்வில் முன்னேற்றமான மாற்றங்கள் தோன்று கின்றன. கிராம மக்கள் உலகின் பல பகுதிகளிலும் நடப்பனவற்றைப்பற்றி அறிந்துகொள்ளுகின்றார்கள். நகரங்களுக்கும், கிராமங்களுக்கும் இடையே அமைந்திருக்கும் பொருளாதார, சமுதாய ஏற்றத்தாழ்வுகள் பெருமளவிற்குக் குறைக்கப்படும். இந்தியா முதலிய நாடுகளில் இது வேண்டற்பாலது. இங்குக் கிராம மக்களின் வாழ்க்கைக்கும், நகர மக்களின் வாழ்க்கைக்குமிடையே மிகுந்த வித்தியாசம் அமைந்துள்ளது. இந்த நிலையைத் தவிர்ப்பது அவசியமானது. இதைத் தவிர்க்க ஏழைச் சாகுபடியாளர்களின் சமுதாய வாழ்வில் பெரிய மாற்றம் தேவை.

இந்திய வேளாண்மை, பண்பாட்டுக் காரணிகளின் அடிப் படையில் அமைந்திருக்கின்றது. பழக்கவழக்கங்களுக்கு ஏற்பப் பாரம்பரியமான சாகுபடிமுறை திகழ்கின்றது. பாரம்பரிய வேளாண்மையைப் புதுமையான இயந்திர வேளாண்மையாக மாற்றவேண்டும். இது, நாட்டின் வாழ்வையே ஒரு நல்ல அடிப் படையில் அமைத்துத் தரும். குறிப்பாகக் கிராம மக்களின் வாழ்வை இது மேம்பாடு அடையச் செய்யும்.

இயந்திரங்கள் விவசாயிகளைக் கடின உழைப்பினின்றும் விடுவிக்கின்றன. பண்ணை உற்பத்தி நடவடிக்கைகள் எளிதாக்கப் பெறுகின்றன. சாகுபடி நிலத்தின்மீதான மக்கள் நெருக்கம் குறை கின்றது. வேளாண்மையில் ஈடுபட்டுள்ள உழைப்பாளர் ஒருவரின் நிகர வருமானம் இயந்திரமயமாக்குதலால் திடீரென உயர்கின்றது. 'அமெரிக்காவில் 1940-ல் ரூ. 2,525ஆக இருந்த நிகர வருமானம் 1949-ல் ரூ. 6,930ஆக உயர்ந்தது; சோவியத் ரஷ்யாவில் விவசாயி களின் வருமானம் 1913ஆம் ஆண்டில் இருந்ததைக் காட்டிலும் 1940-ல் 3.5 மடங்கு அதிகரித்தது.'[1] வேளாண்மையில் அதிக இயந்திரங்கள் உபயோகிக்கப்பட்டமையே இதற்குக் காரணமாகும்.

வேளாண்மையில் இயந்திரமயமாக்கலைச் செய்வதால் பண்ணை வருமானம் அதிகரிப்பதோடு தனிப்பட்டவர்களின் வருமானமும்

1 N. Anisimov, 'Soviet Agriculture,' p. 10.

உயர்கிறது. 'இதன் விளைவாகத் தேசிய வருமானம் அதிகரித்து மக்களின் வாழ்க்கைத்தரம் உயர்வடைகிறது. நகரங்கள் தோன்றுகின்றன; நிதி வசதிகள் பெருகுகின்றன; வாணிபம் செழிக்கின்றது. சமுதாய அமைப்புகளில் முன்னேற்றம் ஏற்படுகின்றது. பொருளாதாரச் சமுதாய நிலைகளில் தொடர்புகள் தோன்றுகின்றன. அது மூலதன உபரியை ஏற்படுத்துகிறது. அதன் அடிப்படையிலேயே பெரும் புதுமைப் பொருளாதார முன்னேற்றம் அமைகிறது. பொதுநிதி வளர்கிறது. அதைக் கொண்டு கல்வி, ஆரோக்கியம் முதலியவை வளர்க்கப்படுகின்றன. நாட்டில் சட்ட ஒழுங்கு காக்கப்படுகின்றது. சுருங்கக் கூறின், இயந்திரங்களும் விஞ்ஞானமும் வேளாண்மையை மட்டும் திறமையடையச் செய்வதில்லை. பிற துறைகளிலும் அவை முன்னேற்றத்தை ஏற்படுத்துகின்றன. திறமையான வேளாண்மை அதிக அளவுப் பொருள்களை விற்பனை செய்வதற்கான உலகத்தையும் அவை ஏற்படுத்தித் தருகின்றன.'[1] பண்ணை உபரிகள் உயர்வதால் கிராம மக்கள் சேமிக்கும் திறனைப் பெறுகின்றனர்கள். இதனால் முதலீட்டின் அளவு கூடுகின்றது. இவ்வாறு மூலதனத் திரட்சியைப பெற இயந்திரங்கள் பெரிதும் உதவுகின்றன. ஆனால், அதிக மூலதனத்தைக் கொண்டுதான் இயந்திரங்களை வாங்க முடியும்.

இயந்திரமயமாக்குவதால் வேளாண்மை நிலங்கள் சிறப்பாகப் பயன்படுத்தப்படுகின்றன. ஏனெனில், 'இயந்திரக் கலப்பையை உபயோக்க்கும்போது கால்நடைச் சக்தியின் தேவை குறைகிறது. எனவே இயந்திரச் சக்தியைப் பயன்படுத்தும்போது வேளாண்மை உற்பத்தி உயர்கிறது வாணிபத்திற்காகப் பலவகைப் பயிர்களும் சாகுபடி செய்யப்படுகின்றன, தன்னிறைவு கிராமப் பொருளாதாரம் மாற்றுப் பொருளாதாரமாக மாறுகிறது. நிலத்தின் பயனைச் சாகுபடியாளர்கள் முழுமையாகப் பெறுகின்றனர்கள்.'[2]

கால்நடைகளின் தேவையைக் குறைக்கவும் இயந்திரங்கள் வகை செய்கின்றன. இதனால் கால்நடைகளுக்குத் தேவையான தீவனங்களைப் பயிரிடும் இடங்களில் உணவுத் தானியங்கள் உற்பத்தி செய்ய முடியும். எஞ்சியிருக்கும் கால்நடைகளைச் சிறப்பாகப் பராமரிப்பதற்கான வசதியையும விவசாயிகள் பெறுவர். ஊட்டமான தீவனப் பயிர்களைப் பிற தரிசு நிலங்களில் வளர்த்துக் கால்நடைகளைக் காக்கலாம். சாகுபடிக்கு ஏற்ற தரிசு நிலங்களை

[1] E. G. Nourse, 'The Place of Agriculture in Modern Industrial Society,' Journal of Political Economy, June-July 1951.

[2] Indian Society of Agricultural Economics, Readings in Land Utilization, p. 52.

இதற்குப் பயன்படுத்தலாம். மனிதன் கடினமான உழைப்பைத் தவிர்க்க இயந்திரங்களைக் கண்டு பிடித்தான். கால்நடைகளுக்கும் கடினமான உழைப்பைத் தராமல் தவிர்க்க இயந்திர உற்பத்தி முறையைக் கைக்கொள்ளலாம்.

இயந்திரக் கலப்பைகளைப் புகுத்தியமையால் வேளாண்மை உற்பத்தி எந்த அளவிற்கு உயர்ந்துள்ளது என்பதை அறிய இந்திய அரசு ஆய்வு ஒன்றை நடத்தியது. ஒரு பண்ணையில் பணியாற்றக்கூடிய 8 உழைப்பாளர்களில் உபரி நிலை அமைந்திருக்க வில்லை; 8 உழைப்பாளர்களின் பணிக்கு அதிகமான உழைப்பும் தேவைப்படுவதில்லை. இயந்திரக் கலப்பையால் தோன்றும் உபரி உழைப்பு உற்பத்தியைப் பெருக்கும் பிற பணிகளில் ஈடுபடுத்தப் படலாம். சரியான காலத்தில் சிறப்பான பணிகளை ஆற்ற மனித உழைப்புத் தேவைப்படுகிறது. தவிர, உபரி உழைப்பாளர்களை வீடுகள் கட்டுதல், சாலைகள் அமைத்தல், நீர்ப்பாசனத் திட்டங்கள் முதலியவற்றிலும் பயன்படுத்தலாம். தொழில் நுணுக்க உற்பத்தி முறைகளைப் பரப்புவதிலும் அவர்கள் ஈடுபடலாம்.

இயந்திரமயமாக்குவதன்மூலம் நிலக்கரி, இரும்பு, எஃகு ஆகியவற்றின் தேவை அதிகரிக்கும். போக்குவரத்து வசதிகளின் தேவையும் பெருகுகின்றது. இவற்றால் புதிய வேலை வாய்ப்புகள் ஏற்படுகின்றன. 'வேளாண்மை நலனை உயர்த்தத் தொழில் விரிவாக்கம் தேவைப்படுகின்றது. அதைப் போன்றே சமுதாய நலனைப் பெருக்க வேளாண்மையின் உற்பத்தித் திறனை அதிகரிப்பது அவசியமாகிறது.'[1]

அதே ஆய்வு இயந்திரக் கலப்பைகளைப் பயன்படுத்திய பண்ணை களில் உற்பத்தி கணிசமாக உயர்ந்ததையும் உணர்த்தியது. முக்கியப் பயிர்களாகிய கோதுமை, பருத்தி, பருப்பு ஆகியவற்றின் உற்பத்தி உயர்ந்ததை அஃது அறிவுறுத்தியது. இயந்திரப் பண்ணை களில் கோதுமையின் சராசரி உற்பத்தி 10 சதவீதம் அதிகரித்தது. ராஜஸ்தானின் சூரத்கார் பண்ணையில் 1958-59-ல் ஓர் ஏக்கருக்கான கோதுமை உற்பத்தி 2100 பவுண்டாகவும் (31-1 தரம்), 1200 பவுண் டாகவும் (C-591 தரம்) இருந்தது; இது 1956–57-ல் முறையே 1875 பவுண்டாகவும், 1012 பவுண்டாகவும் இருந்தது குறிப்பிடத்தக்கது. இதைப் போன்றே 1956–57-ல் ஓர் ஏக்கருக்கான நெல் உற்பத்தி 3098 பவுண்டாக இருந்தது; இது 1959-60-ல் 3200 பவுண்டாக

[1] H. G. Halcrow, 'Agricultural Policy of United States,' 1956, P. 176

உயர்ந்தது.[1] இவ்வாறு உற்பத்தி உயர்ந்தமைக்கு இயந்திரங்களைப் பயன்படுத்தியமை ஒரு முக்கியக் காரணமாக இருந்தது. நிலத்தைச் சிறப்பாக உழுவதற்கு அவை உதவுகின்றன. ஒரு குறிப்பிட்ட அளவு நிலத்தில் இயந்திரங்களைக்கொண்டு அதிக மதிப்புள்ள பொருள்களை உற்பத்தி செய்ய முடியும். கால்நடைச் சக்தியைப் பயன்படுத்திச் சாகுபடி செய்யப்படும் பண்ணைகளில் உற்பத்தியை இந்த அளவிற்கு உயர்த்த வாய்ப்பு இல்லை. ஒவ்வொரு உற்பத்தி நடவடிக்கைக்கும் இடையேயான கால நேரம் இயந்திரங்களால் மிகவும் குறைக்கப்படுகிறது.

இந்தியாவின் வேளாண்மையில் உபரி உழைப்பாளர்கள் இருப்பதைப் போலவே உபரிக் கால்நடைகளும் இருக்கின்றன. ஜப்பானில் ஒவ்வொரு 100 ஏக்கர்களுக்கும் 6 கால் நடைகளும், சீனாவில் 15 கால் நடைகளும், எகிப்தில் 25 கால் நடைகளும், இந்தியாவில் 54 கால் நடைகளும் இருக்கின்றன. இவ் வுபரிக் கால் நடைகளை விலக்கினால், அதிக அளவு நிலத்தை உணவுப் பொருள்கள், கச்சாப் பொருள்கள் ஆகியவற்றை உற்பத்தி செய்யப் பயன்படுத்தலாம். மேலும், குறைந்த எண்ணிகையில் கால் நடைகள் இருந்தால், அவற்றைச் சரியாகப் பராமரிக்கமுடியும். நல்ல நிலையில் கால்நடைகளை வைத்திருக்க இயலும். அவற்றிற்குப் போதுமான தீவனத்தையும் அளிக்கலாம். சாகுபடிப் பணியல்லாத வேறு பல நடவடிக்கைகளிலும் அவற்றை ஈடுபடுத்தலாம்.

உபரிக் கால் நடைகளைப் போக்குவரத்து வசதிக்காகவும் பயன் படுத்தலாம், எல்லாக் கிராமங்களிலும் சிறப்பான சாலைகள் அமைந்திருப்பதில்லை. மோட்டார் வாகனங்கள் செல்லக்கூடிய நிலையில் அவை இருப்பதில்லை. அவ்வகைச் சாலைகளில் மாட்டு வண்டிகளை உபயோகிக்கலாம். இவ் வசதியைச் சிக்கனமாகப் பெறவும் வகையுண்டு. 'இயந்திரங்களைக்கொண்டு படிப்படியாகக் கால்நடை உழைப்பைக் குறைப்பதால் பல நன்மைகள் விளைகின்றன. பால் பண்ணை நடவடிக்கைகள் மேற்கொள்ளப் படுகின்றன; கால் நடைகள் தரம் மிக்கனவாக மாறுகின்றன. இவை யாவும் அதிக முக்கியத்துவம் கொண்டனவாகும்.'[2] வேளாண்மையை இயந்திரமயமாக்குவதால் உபரிக் கால்நடைகள் பாதிக்கப்படுவதில்லை.

கிராம மக்களின் நோக்கில் அடிப்படை மாற்றத்தையும் இயந்திரமயமாக்கும் நிலை தோற்றுவிக்கிறது. பழையன கழிந்து புதியன

1 Making the Desert Bloom, Central Mechanised Farm Suratgarh.
2 D. A. Gadkary, 'Mechanical Cultivation in India,' 1957, p. 4

புதுவதற்கு இயந்திரங்கள் வழி கோலுகின்றன. இயந்திரங்கள் விரைவாகவும், பிழையின்றியும் பணியாற்றுகின்றன. மனிதன் இயந்திர உதவியோடு உற்பத்தியை வியத்தகு அளவிற்கு உயர்த்தலாம். ஒரு விவசாயி ஒரு ஜோடி எருதுகளைக்கொண்டு குறிப்பிட்ட அளவு நிலத்தை உழுவதற்கு 10 நாட்கள் ஆகின்றன என்று வைத்துக்கொண்டால், அதே பணியை ஓர் இயந்திரக் கலப்பையைக்கொண்டு ஒரே நாளிலேயே செய்து முடிக்க இயலும். நிலத்தை ஆழமாக உழுவதற்கும் அஃது உதவுகிறது. நிலத்தைப் பண்படுத்துதல் நிலத்தைத் தோண்டி மண் எடுத்தல், உழுதல் முதலியவற்றிற்கு இயந்திரங்களைப் பயன்படுத்துவது நல்லது. மனித உழைப்பால் இவற்றைச் செய்வது கடினம். இயந்திரங்கள் இவற்றை எளிதாகச் செய்து முடிக்கின்றன. அதிக பரப்பளவுள்ள நிலத்தை உழுது, அதிக அளவுப் பயிர்களை அறுவடை செய்து, பெருமளவு விளைபொருள்களை விற்பனை செய்ய இயந்திரங்களை உபயோகிக்கும்போது நேரத்தைச் சேமிக்க முடியும்.

இயந்திரமயமாக்குவதால் நுகர்வோரும் நன்மையடைகின்றனர். ஏனெனில் குறைந்த விலைக்கு அவர்கள் பொருள்களைப் பெற முடிகிறது. உற்பத்திச் செலவு குறைவாக உள்ளமையே இதற்குக் காரணமாகும். அமெரிக்காவில் 12 சதவீத மக்கள் மட்டுமே வேளாண்மையில் ஈடுபட்டுள்ளார்கள். எனினும், அவர்கள் தங்களுடைய தேவைக்கு அதிகமாக உற்பத்தியைச் செய்கிறார்கள். உலகின் பல நாடுகளுக்கும் உபரி உற்பத்தி ஏற்றுமதி செய்யப்படுகிறது. இந்தியாவில் சுமார் 70 சதவீத மக்கள் வேளாண்மையில் ஈடுபட்டிருந்தும் உணவு உற்பத்தியில் தன்னிறைவைப் பெற முடியவில்லை. நம் நாட்டில் உணவு உற்பத்தியைப் பெருக்க இயந்திரங்களைப் பயன்படுத்தவேண்டும்.

காடுகளை அழிக்கவும், புதிய நிலங்களைச் சாகுபடிக்குக் கொண்டு வரவும், வடிகால் வசதி அமைக்கவும் இயந்திரங்களைப் பயன்படுத்தலாம். மின்சாரத்தால் இயங்கும் குழாய்க் கிணறுகள், பம்பு செட்டுகள் முதலியவற்றின் பயனைப் பெறுவதும் அவசியம். எண்ணெய் என்ஜின்களையும், மின்சார மோட்டார்களையும் பயன்படுத்துவது நல்லது. கரும்பு, எண்ணெய் வித்துகள் ஆகியவற்றைப் பிழியவும் இயந்திரங்களை உபயோகிக்கலாம்.

இந்தியாவின் பொருளாதார நிபுணர்கள், அரசியல் வாதிகள் ஆகியோரிடையே வேளாண்மையை இயந்திரமயமாக்குதல் பற்றிய கருத்தில் வேறுபாடுகள் உள்ளன. இயந்திரமயமாக்கியமையால் உலகின் சில நாடுகளில் பல நன்மைகள் தோன்றின.

இந்தியாவின் பொருளாதார, சமுதாய நிலைகள் அந்த நாடுகளில் இருந்ததைப்போல அமைந்திருக்கவில்லை. எனவே, இங்கு இயந்திரங்களைப் பயன்படுத்துவது இயலாது என்பது ஒரு சாரார் கருத்து. நம் நாட்டின் வளங்களைச் சிறப்பாகவும், முழுமையாகவும் பயன்படுத்த இயந்திரங்கள் இன்றியமையாதவை என்று வேறொரு சாரார் கருதுகின்றனர்.

## இந்தியாவில் வேளாண்மையை இயந்திரமயமாக்குவதற்கான வாய்ப்பு

சர். எம். எல். டார்லிங், 1932-ல் இந்திய வேளாண்மைக் கருவிகளைப்பற்றிக் குறிப்பிட்டதாவது. 'பாதி திறந்த பேனுக் கத்தியைப் போலக் கலப்பை தோற்றமளிக்கிறது; அது மண்ணை இலேசாகக் கீறி விடுகிறது; கையரிவாள் மனிதனுக்காகச் செய்யப்பட்டது போலன்றிக் குழந்தைக்காகச் செய்யப்பட்டதுபோல் இருக்கிறது. முறமும், கோடரியும் பழைய முறையில், மறக்க முடியாத, விந்தையான வகையில் பணிகளை ஆற்றுகின்றன என்பது.'[1] அப்பொழுது இருந்த நிலைக்கும் தற்பொழுது இருக்கும் நிலைக்கும் அதிக வேறுபாடுகள் காணப்படவில்லை.

இந்திய அரசு இயந்திரமயமான உற்பத்தியைப் பரப்ப வேண்டும் என்பதற்கான பல முயற்சிகளை எடுத்து வருகிறது. எனினும், விவசாயிகள் பாரம்பரிய உற்பத்தி முறைகளிலேயே விருப்புக்கொண்டவர்களாக இருக்கின்றனர். எளிய, பழைய கருவிகளே அவர்களால் பயன்படுத்தப்படுகின்றன. சுலபமாக எடுத்துச் செல்லக்கூடியவைகளாகவும் அவை இருத்தல் வேண்டுமென அவர்கள் கருதுகின்றனர். எருதுகள் எளிதில் இழுக்கக் கூடியவைகளாகவும், சுலபத்தில் பழுதுபார்க்கக் கூடியவைகளாகவும் கருவிகள் அமைய வேண்டுமென்று அவர்கள் எண்ணுகின்றனர்.

[redacted] சூழ்நிலைகளிலும், பொதுவாக இந்தியாவில் திகழும் பொருளாதார நிலையிலும், பெருமளவிற்கு வேளாண்மையில் இயந்திரங்களைப் புகுத்த முடியாத நிலை அமைந்துள்ளது. அதற்கான வாய்ப்பு இந்தியாவில் குறைவாகவே இருக்கின்றது.

இந்திய வேளாண்மையில் குறைந்த அளவு மட்டுமே இயந்திரங்களைப் பயன்படுத்தலாம் என்பதற்குப் [illegible] முக்கியக் காரணங்கள் உள்ளன.

[1] M. L. Darling, 'The Punjab Peasant in Prosperity and Debt,' p. 157.

முதலாவதாக, அது வேளாண்மை உழைப்பாளர்களிடையே அதிக வேலையின்மையைத் தோற்றுவித்துவிடும்.

இரண்டாவதாக, இந்தியாவின் சராசரி சாகுபடி நிலவுடைமைகள் சிறிய அளவில் அமைந்திருப்பதால் இயந்திரங்களைப் புகுத்துவது கடினமாகின்றது.

மூன்ருவதாக, இந்தியத் தொழில்துறை வேளாண்மைக்குத் தேவையான இயந்திரங்களையும், கருவிகளையும் உற்பத்தி செய்யும் அளவிற்கு வளர்ந்திருக்கவில்லை. அந்நியச் செலாவணிப் பற்ருக் குறையால் அவற்றை இறக்குமதி செய்வதும் கடினம்.

நான்காவதாக, இயந்திரமயமான வேளாண்மைப் பண்ணைகளை அமைப்பதற்குத் தேவையான மூலதன வசதி அமைந்திருக்கவில்லை.

ஐந்தாவதாக, இயந்திரங்களைப் பழுது பார்ப்பதற்கான வசதிகள் போதுமான அளவில் இல்லை; இயந்திரப் பாகங்களைப் பெறுவதும் கடினமானதாக உள்ளது.

இறுதியாக, இந்திய விவசாயிகள் எழுத்தறிவு இல்லாதவர்களாகவும் ஏதும் அறியாதவர்களாகவும் இருக்கின்றனர். இயந்திரங்களைப் பயன்படுத்துவதையும் அவர்கள் விரும்புவதில்லை.

இவ்வித இடர்ப்பாடுகள் அமைந்திருந்தாலும் வேளாண்மையைப் படிப்படியாக இயந்திரமயமாக்க முயலவேண்டும். முதலில் பரிசோதனைமுறையில் இயந்திரங்களைப் பயன்படுத்தலாம். அவ்வாறு செய்யும்போது விவசாயிகள் நீண்ட காலத்திலாவது இயந்திர உற்பத்தி முறையைக் கைக்கொள்ள வேண்டுமென்ற எண்ணத்தைப் பெறுவார்கள். இவ்வாறு, முயற்சி மேற்கொள்ளப் பட்டால்தான் உணவுச் சிக்கலைத் தவிர்க்கமுடியும். தற்போது உள்ள சூழலில் இயந்திரமயமாக்கும் வாய்ப்புப் பின்வரும் நிலைகளில் அமைந்துள்ளது.

1. பெரிய கூட்டுப்பண்ணைகள், கூட்டுறவுப் பண்ணைகள்;

2. 25 ஏக்கர்களுக்கு அதிகமான பெரிய விவசாயிகளின் நிலவுடைமைகள்;

3. இயந்திரங்களைக் கொண்டு நீர்ப்பாசனத்தைப் பெறும் நிலம்;

4. வனங்களை அழித்து விளை நிலங்களாக மாற்றுவது;

5. மனிதக் கரங்களைக் கொண்டு செய்யமுடியாத இடங்களில் இயந்திரங்களின் துணைகொண்டு நிலத்தைப் பண்படுத்துவது நில முன்னேற்றத்தைச் செய்வது;

6. நிலப் பாதுகாப்பு; நீர்ப் பாதுகாப்பு; நில அரிப்புத் தடுப்பு;

7. தொழில் உற்பத்தி நிறுவனங்களோடு தொடர்புகொண்ட பண்ணைகள் அல்லது அரசின் பண்ணைகள்;

8. பயிர்ப் பாதுகாப்பிற்கான பலவித நடவடிக்கைகளை மேற்கொள்வது;

9. தானியங்களைப் பதனப் படுத்துதல், பிரித்தல், பிடுங்குதல், பிழிதல், குற்றுதல் முதலிய வேளாண்மைச் சாகுபடியின் உப பணிகளைச் செய்வது;

10. நீர்த்தேக்கமுள்ள நிலங்களிலிருந்து நீரை வடித்தல்;

11. கான்ஸ் (Kans), ஹரியாலி (Hariali), பெய்சன் (Baisun) முதலிய ஆழமாக வேரூன்றிய களைகளை நீக்குதல்;

12. மக்கள் தொகை குறைவாக உள்ள பகுதிகளில் செறிவு முறைச் சாகுபடியையும், பரந்த முறைச் சாகுபடியையும் பின்பற்றுதல்.

மேற்கண்ட நிலைகளில் மனித உழைப்பைப் பயன்படுத்தும் போது உற்பத்திச் செலவு அதிகமாக இருக்கின்றது. இவற்றிற்கு மனித உழைப்புப் போதுமானதாகவும் அமைந்திருப்பதில்லை. ஆழமான வேர்களைக்கொண்ட களைச்செடிகளைப் பிடுங்க இயந்திரக் கலப்பையால் இழுத்துச் செல்லப்படும் கருவிகள் தேவைப்படுகின்றன. மனிதக் கரங்களைக்கொண்டு அப் பணியைச் செய்ய முடியாது. நிலத்தைச் சமன் செய்யவும் பெரிய இயந்திரங்கள் தேவை. அணைகளைக் கட்டவும், நீர்த் தேக்கங்களை அமைக்கவும் இயந்திரங்களைப் பயன்படுத்துவது அவசியம். புதிய நிலங்களை எளிதாகச் சாகுபடிக்குக் கொண்டுவர இயந்திரங்கள் உதவுகின்றன. ஆழமாக உழுவதற்கும், மிகத் தாழ்வான கிணறுகளிலிருந்து தண்ணீர் இறைக்கவும் இயந்திரச் சக்தி தேவைப்படுகிறது.

பண்ணைகள் உள்ள பகுதிகளில் சாலைகள் அமைக்கவும், உற்பத்திப் பொருள்களைப் பிரிக்கவும்கூட மேலை நாடுகளில் இயந்திரங்கள் பயன்படுத்தப்படுகின்றன. களிமண் பூமியை உழுவதற்கு இயந்திரக் கலப்பைகளே ஏற்றவை. மாடுகள்

இழுக்கக்கூடிய கருவிகளைக் கொண்டு விரைவாக உற்பத்திப் பணிகளை நிறைவேற்ற இயலாது.

இந்தியாவில் வெவ்வேறு வகைப்பட்ட சிறிய இயந்திரக் கருவிகளைப் பயன்படுத்துவதற்கான வாய்ப்புகள் ஏராளமாக உள்ளன. அவற்றைக்கொண்டு விரைவாகக் குறுகிய காலத்தில் அறுவடை செய்யமுடியும். பல போகச் சாகுபடியும் சாத்திய மாகிறது. வெவ்வேறு வகைப் பயிர்களையும் உற்பத்தி செய்வதற் கான வாய்ப்புத் தோன்றுகிறது. பலவகைப்பட்ட வேளாண்மைப் பொருள்களின் உற்பத்தியும் கூடுகிறது. இதனால், விவசாயிகள் உயர்ந்த அளவில் உண்மை வருமானத்தைப் பெறுகிறார்கள்.

## இந்திய வேளாண்மையை இயந்திரமயமாக்குவதற்கு எதிரான வாதங்கள்

வேளாண்மையை இயந்திரமயமாக்குவதன்மூலம் பொருளாதார முன்னேற்றம் ஏற்பட்டாலும் சமுதாய நலன் பாதிக்கப்படும் என்பது சிலர் கருத்து. இன்றுள்ள இந்தியச் சூழ்நிலைகளில் இயந்திரங்களைப் பயன்படுத்துவது நல்லதன்று என்று அவர்கள் கூறுகின்றனர். இயந்திரமயமாக்குவதற்கான பல அடிப்படை களையே நாம் பெற்றிருக்கவில்லை. முழுமையாக இயந்திரமயமாக்க வேளாண்மையில் புரட்சி தேவை. இயந்திரமயமாக்குவதற்கு எதிராகத் திகழும் கருத்துகளைப் பின்வருமாறு விளக்கலாம்.

### 1. வேளாண்மைத் துறையில் வேலையின்மை

சாகுபடி நடவடிக்கைகளில் இயந்திரங்களைப் பயன்படுத்தும் போது, வேளாண்மை உழைப்பாளர்களில் சிலர் வெளியேற்றப் படுவர் என்பதில் ஐயமில்லை. இயந்திரங்களைக்கொண்டு உற்பத்திப் பணிகளை நிறைவேற்றக் குறைந்த எண்ணிக்கையில் உழைப் பாளர்கள் இருந்தால் போதுமானது. பல நாடுகளிலும் வேளாண்மைப் பண்ணைகள் இயந்திரமயமாக்கப்பட்டபோது, சராசரி 5 அல்லது 6 உழைப்பாளர்கள் வெளியேற்றப்பட்டனர். இந்திய வேளாண்மையில் வேலையின்மையோடு மறைமுக வேலை யின்மையும் அமைந்திருக்கிறது. வேளாண்மை உழைப்பாளர் களில் சுமார் 85 சதவீதத்தினர் கூலியாட்களாகவே அமைந் துள்ளனர். இயந்திரமயமாக்குவதால் 4 உழைப்பாளர்களுக்குப் பதில் ஓர் உழைப்பாளரே போதும் என்று கொண்டால், வேளாண் மையில் ஈடுபட்டிருக்கும் சுமார் 75 சதவீத உழைப்பாளர் களை வெளியேற்றவேண்டிவரும். அவர்களுக்கு வேலைவாய்ப்பை அளிப்பது [illegible] மாபெரும் பிரச்சினையாக உருவெடுக்கும். அரசின்

தீவிர நடவடிக்கையால் கூட இப் பிரச்சினைக்குத் தீர்வுக் காண முடியாது.

இந்தியாவில் அமித மனித உழைப்புக் கிராமங்களில் வீணடிக்கப்படுகிறது. வேளாண்மை உழைப்பாளர்கள் ஆண்டொன்றுக்குச் சுமார் 191 நாட்கள் மட்டுமே உழைக்கின்றனர்கள்; மற்ற நாட்களில் அவர்கள் எந்த வேலையுமின்றி வாளா இருக்கின்றனர். பண்ணைகளில் இயந்திரங்களை உபயோகிப்பதால் இந்த நிலை மேலும் மோசமடையும். வாழ்க்கையை நடத்துவதற்கான வேறு வசதிகளை வேளாண்மை உழைப்பாளர்களுக்கு ஏற்படுத்தித் தந்த பின்னர்த்தான் முழுமையான இயந்திரமயமாக்குதலைப்பற்றிச் சிந்திக்கவேண்டும்.

இயந்திரங்களைப் பயன்படுத்துவதால் வேலை இழப்பவர்களுக்கு வேலையளிப்பது சாத்தியமில்லை. மேலை நாடுகளில் உழைப்பாளர்ப் பற்றுக்குறையால்தான் இயந்திரங்கள் கண்டுபிடிக்கப்பட்டுப் பயன்படுத்தப்பட்டன என்பதை மறக்கக்கூடாது. இந்தியாவில் குறைந்த ஊதியத்திற்கே உழைப்பைத்தரப் பல உழைப்பாளர்கள் தயாராக உள்ளனர்.

குறிப்பிட்ட குறைந்த அளவில் வேளாண்மையை இயந்திரமயமாக்குவதன்மூலம் வேலையின்மையைத் தவிர்க்கலாம். சில தெரிந்தெடுக்கப்பட்ட இடங்களில் இயந்திரங்களைப் பயன்படுத்தலாம். தொழில் முன்னேற்றத்தைப் பெற்ற பின்னரே வேளாண்மையை இயந்திரமயமாக்க முயற்சிகள் மேற்கொள்ளப்படவேண்டும். வேளாண்மையல்லாத நடவடிக்கைகளில் உழைப்பாளர்களை ஈடுபடுத்துவது அவசியம். நாட்டைத் தொழில்மயமாக்கும்போது இதில் வெற்றிகாண வாய்ப்புகள் தோன்றுகின்றன.

பின்தங்கிய நாடுகளில் உழைப்பாளர்களும், கால்நடைகளும், திறமையாகப் பணிகளை ஆற்றுவதில்லை. 'உழைப்பைச் சேமிக்கும் (Labour - Saving) கருவிகள் இந்தியா முதலிய மக்கள் தொகை மிக்க நாடுகளுக்குத் தேவைப்படுவதில்லை. ஒரு நாட்டில் முழு வேலையுடைமையைப்' (Full Employment) பெறுவது கடினம். ஆனால், அதிக அளவில் அமைந்திருக்கும் வேலையின்மையைக் குறைப்பது சுலபம்.

ஒரு கணக்கெடுப்பின்படி, முழுமையாக இயந்திரமயமாக்கினால் இந்திய வேளாண்மையில் தற்பொழுதுள்ள சாகுபடி நிலத்தில் $3\frac{1}{4}$ முதல் 4 மில்லியன் உழைப்பாளர்களைக் கொண்டே

உற்பத்தி நடவடிக்கைகளை நிறைவேற்றிவிடலாம். இதனுல். [redacted] மில்லியன் விவசாயிகள் வேளாண்மையினின்றும் வெளியேற்றப் படுவர். உழைப்பாளர்ப் பற்ருக்குறையால் ரஷ்யா, அமெரிக்கா, கனடா, ஆஸ்திரேலியா முதலிய நாடுகளில் வேளாண்மை, இயந்திரமயமாக்கப்பட்டது. அந்த நாடுகளுக்குப் பொருந்தும் பல நிலைகள் நம் நாட்டிற்குப் பொருந்துவதில்லை. இயந்திரங்களை உபயோகிப்பதன் மூலம் உபரிக் கால்நடைகள் பெருகக்கூடும்; அவற்றைப் பயன்படுத்துவதும் இயலாததாகிவிடும்.

கவனமாக ஆராய்வதன் மூலம் இயந்திரங்களை உபயோகிப் பது அதிக வேலையின்மையைத் தோற்றுவிக்காது என்பதை உணரலாம். வேளாண்மையின் சில நிலைகளை மட்டும் இயந்திர மயமாக்குவதால், எவ்விதத் தீங்கும் விளையாது. படிப்படியாக இயந்திரங்களைப் புகுத்துவதன்மூலம் வேலையின்மைச் சிக்கலைத் தவிர்க்கலாம். இதனுல், வேளாண்மையைச் சார்ந்த தொழில் களும், நுகர் பொருள்களை உற்பத்திச் செய்யும் தொழில்களும் வளரும். இவற்ருல் வேலைவாய்ப்புகள் அதிகரிக்கும். உபரி உழைப்பாளர்களை நீர்ப்பாசனங்களைப் பெருக்கவும், வீடுகளைக் கட்டவும், சாலைகளை அமைக்கவும், இயந்திரங்களை இயக்கிப் பராமரிக்கவும் பயன்படுத்தலாம். இயந்திரப் பண்ணை முறையினுல் விவசாயிகளின் வாழ்க்கைத்தரம் உயர்கிறது; அவர்களுடைய வாங்கும் திறன் அதிகரிக்கிறது. இதன் காரணமாகத் தொழில் துறையால் உற்பத்தி செய்யப்படும் நுகர் பொருள்களின் தேவை கூடுகிறது. தொழில் முன்னேற்றமடைந்து வேலைவாய்ப்புகள் பெருகுகின்றன. இவ்வாறு வேளாண்மையை இயந்திரமய மாக்குவதால் வெளியேற்றப்படும் உழைப்பாளர்களுக்கு வேலை வாய்ப்பை அளிக்கலாம்.

தற்பொழுது வேளாண்மையில் அமைந்துள்ள மக்கள் தொகையையே அமித மக்கள் தொகை என்கிருேம். ஆகவே, அத் துறையின் உபரி உழைப்பாளர்களைப் பிற துறைகளுக்கு மாற்றியமைப்பது அவசியமாகிறது. நாட்டு மக்கள் அனைவருமே இயந்திரமயமாக்குவதால் நன்மையடைவர்.

நீண்ட காலத்தில் எவ்விதத்திலும் சிக்கல் ஏற்படாத வகையில் ஒரு நாட்டின் அரசு திறமையாக இயங்கவேண்டும். உபரி உழைப்பாளர்கள் வேளாண்மையல்லாத துறைகளுக்குச் செல் வதற்கான ஊக்கங்கள் அமைந்திருப்பது அவசியம். அரசு விவசாயிகளின் உபரி வருமானத்தைத் திரட்டி வேளாண்மை

வளர்ச்சிக்கும், தொழில் முன்னேற்றத்திற்கும் பயன்படுத்துவது இன்றியமையாதது. இதனால், வேலை வாய்ப்புகள் ஏராளமாக அதிகரிக்கும். எனவே, படிப்படியாக இயந்திரங்களைப் புகுத்துவதால் பல வகைச் சிக்கல்களுக்கும் நீண்ட காலத்தில் தீர்வைப் பெறலாம்.

இயந்திரமயமாக்குவதால், வேளாண்மையில் குறுகிய கால வேலையின்மை தோன்றக்கூடும். இயந்திரங்களைப் பயன்படுத்துவதால், வேலையின்மைச் சிக்கல் தோன்றும் என்ற நிலை மிகைபடுத்திக் கூறப்படுகின்றது. இந்தியப் பொருளாதாரம் வேலை வாய்ப்புகளைப் பெருக்கும் திறனைக் கொண்டதாகவே இருக்கின்றது. ஐந்தாண்டுத் திட்டங்களால் வேலை வாய்ப்புகள் பெருகியுள்ளமையை இதற்குச் சான்றாகக் கூறலாம். மேலும் வேளாண் [redacted] இயந்திரமயமாக்கினால் நிலக்கரி, இரும்பு, எஃகு, போக்குவரத்து, மின்சாரம் ஆகியவற்றிற்கான தேவையும் அதிகரிக்கும். இவ் வழியிலும் வேலை வாய்ப்புகள் பெருக வாய்ப்பு உண்டு.

கால்நடைகளின் எண்ணிக்கை இயந்திரங்களால் குறையும். அதன் காரணமாக அவற்றைப் பராமரிப்பதற்கான செலவும், சுமையும் குறையும். நிலத்திலிருந்து விளையக்கூடிய பயிர்களைப் பெறுவதில் மனிதர்களுக்கும், கால்நடைகளுக்கும் இடையே இந்தியாவில் போட்டி நிலவுகின்றது.

ஜப்பானின் வேளாண்மையில் அதிக அளவில் இயந்திரங்கள் பயன்படுத்தப்படுகின்றன. எனினும், அங்கு மேற்கு வங்காளத்தைக் காட்டிலும் 4 மடங்கு அதிக உழைப்பு–உள்ளீடு (Labour input) அமைந்துள்ளது.[1] வேளாண்மையை இயந்திரமயமாக்குவதன்மூலம் உற்பத்தித் திறனை இரு மடங்காவது அதிகரிக்க முடியும். அதிகரித்த உற்பத்தி உபரியைத் தொழில்துறை முன்னேற்றத்திற்கு நிதியாக்கம் செய்யலாம். சமுதாயத்திற்கு நன்மையளிக்கும் பணிகளை நிறைவேற்ற அரசு உபரி உழைப்பாளர்களைப் பயன்படுத்தவேண்டும். இயந்திர உற்பத்தி முறையினால் பெருகும் வருமானத்தை 'வளர்வீத வரி முறையின்' (Progressive Taxation) மூலம் திரட்டுவது அவசியம். ஜப்பான் நாட்டில் வேளாண்மையை இயந்திரமயமாக்கியபோது வேலையின்மைப் பிரச்சினை தோன்றவில்லை.

[1] Mr. Shinde's Statement Reported in 'Times of India', dated October 15, 1967.

## 2. விவசாயிகளின் சிறிய அளவு நிலவுடைமைகள்

இந்திய — வசாயிகளின் நிலவுடைமைகள் சிறிய அளவில் அமைந்துள்ளன. சராசரி நிலவுடைமை 5.4 ஏக்கர்கள் என்ற அளவில் மட்டுமே உள்ளது. சிறிய நிலவுடைமைகளில் இயந் திரங்களைப் பயன்படுத்தி நன்மைகளை அடைய முடியாது. உதாரணமாக, 100 ஏக்கர்கள் நிலத்தில்தான் இயந்திரக் கலப் பையை இலாபகரமாகப் பயன்படுத்த முடியும். ஒரு நாட்டில் பெரிய அளவு நிலவுடைமைகள் இல்லாவிட்டால் இயந்திரமய மாக்குவதில் வெற்றி காண இயலாது. சிறிய அளவு நிலங்களில் பேரளவுப் பண்ணைகளின் சிக்கனங்களைப் பெற முடியாது. தற்பொழுதுள்ள சூழ்நிலைகளில் இயந்திரங்களைப் பயன்படுத்துவது இந்தியாவில் இலாபகரமாக அமையாது.

இந்தியாவில் சாகுபடி நிலங்களின் அளவு சுமார் 3 முதல் 12 ஏக்கர்களாக இருக்கின்றது. இச் சிறிய அளவு நிலவுடைமைகளும் வெவ்வேறு இடங்களில் சிறு துண்டுகளாகச் சிதறிக் கிடக்கின்றன. அரை ஏக்கர் நிலத்தை உழுவதற்கு இயந்திரக் கலப்பையை உபயோகிக்க இயலாது. அமெரிக்காவில் சராசரி நிலவுடை மையின் அளவு சுமார் 145 ஏக்கர்களாகவும், கனடாவில் 234 ஏக்கர்களாகவும், சோவியத் ரஷ்யாவில் 1,600 ஏக்கர்களாகவும் உள்ளன. இந்த நாடுகளில் இயந்திரங்களைப் பயன்படுத்துவது தவிர்க்க முடியாதது.

சராசரி நிலவுடைமையின் அளவு இந்தியாவில் பல மாநிலங் களிலும் வேறுபடுகின்றது. சான்றாக இதன் அளவு பம்பாயில் 12.2 ஏக்கர்களாகவும், தமிழ்நாட்டில் 4.9 ஏக்கர்களாகவும், உத்தரப் பிரதேசத்தில் 2.5 ஏக்கர்களாகவும் இருக்கிறது. இந்த நிலங்களில் மரக் கலப்பைகளைக் கொண்டும் சரியாக உழ முடிவதில்லை. ஒரு ஜோடி மாடுகள் பூட்டிய கலப்பையைத் திருப்ப முடியாத வகையில் சிறிய அளவு நிலவுடைமைகள் உத்தரப் பிரதேசத்தில் உள்ளன. மக்கள் நெருக்கம் மிகுதியாக உள்ள ஜெர்மனியில் சராசரி சாகுபடி நில அளவு 21.5 ஏக்கர்களாக இருப்பது குறிப்பிடத்தக்கது. மேற்கு வங்காளம், ஒரிஸ்ஸா, பீஹார், ஆகிய மாநிலங்களில் விவசாய நிலத்தின் சராசரி அளவு 3 ஏக்கர்கள் ஆகும்.

நம் நாட்டில் 50 சதவீதத்திற்கும் அதிகமான நிலவுடைமைகள் 2.5 ஏக்கர்களுக்குக் குறைவான அளவில் அமைந்துள்ளன. 20 முதல் 60 குதிரைச் சக்தி கொண்ட இயந்திரக் கலப்பையை இலாபகரமாகப் பயன்படுத்த 175 முதல் 200 ஏக்கர்கள் அளவுள்ள

நிலம் தேவை. இந்த நிலையைப் பெறுவதன் மூலமே அமெரிக்கா, மற்றும் ஐரோப்பிய நாடுகள் ஆகியன பெற்றுள்ள வேளாண்மை இயந்திர உற்பத்தி முறையின் திறனை இந்தியா அடையமுடியும். 500 முதல் 600 ஏக்கர்களைக்கொண்ட சாகுபடி நிலத்திற்கு 3 முதல் 4 இயந்திரக் கலப்பைகளும், 1000 முதல் 1200 ஏக்கர்களுக்கு 5 முதல் 7 இயந்திரக் கலப்பைகளும் தேவைப்படுகின்றன. சாகுபடி நிலங்களின் அளவு குறைவாக இருக்கும்போது தேவையான இயந்திரக் கலப்பைகளின் எண்ணிக்கையும் குறைகிறது.[1]

சிறிய நிலவுடைமைகளின் சிக்கலைத் தவிர்க்க கீழ்க்காணும் வழிமுறைகளைப் பின்பற்றுவது நல்லது.

1. கூட்டுறவுப் பண்ணை முறையை வளர்ப்பது.

2. நிலத்தின்மீதான மக்கள் நெருக்கத்தைக் குறைக்க வேளாண்மையல்லாத நடவடிக்கைகளில் உபரி உழைப்பாளர்களை ஈர்ப்பது. இது, நாட்டின் சாகுபடி நில அளவை விரிவுபடுத்து வதற்கான வாய்ப்பை ஏற்படுத்தித் தரும்.

3. பொருத்தமான சட்டங்களை இயற்றி, இப்பொழுதுள்ள பெரிய நிலவுடைமைகளை உட்பிரிவுபடுத்தாமல் தடுத்தல்.

4. விவசாயிகள் நிலவுடைமைகளை விரிவுபடுத்துவதற்கான ஊக்கங்களை அளித்தல். சாகுபடி நிலங்கள் விரிவடையும் வகையில் சட்டங்கள் திருத்தப்படவேண்டும்.

5. புதிதாகச் சாகுபடிக்குக் கொண்டுவரப்பட்ட நிலத்தில் குறிப்பாகக் காடுகளை அழித்துப் பெறப்பட்ட நிலத்தில் இயந்திர மயமான உற்பத்தியை மேற்கொள்ளுதல்.

6, பெரிய நிலவுடைமையாளர்களை இயந்திர உற்பத்தி முறையை ஏற்குமாறு செய்தல், இந்தியாவில் உள்ள விவசாயி களில் சுமார் 4 சதவீதத்தினர் மட்டுமே 25 ஏக்கர்களுக்கு அதிக மான அளவில் சாகுபடி நிலங்களைக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள், நம் நாட்டின் மொத்தச் சாகுபடி நிலத்தில் சுமார் 33 சதவீதத்தை உடைமையாகப் பெற்றிருக்கின்றனர்.[2] அவர்களை இயந்திரமயமான சாகுபடி முறையைக் கைக்கொள்ளுமாறு செய்ய வேண்டும். ஆனால், பெரிய அளவு நிலவுடைமைகளின்மீது பல

[1] S.C. Jain, Agricultural Development in India, 1967, p. 248.

[2] B. K. S. Jain, Op. Cit., p. 450.

மா நிலங்களிலும் உச்ச வரம்பு விதிக்கப்படுகிறது. நில உச்ச வரம்பிற்குப் பயந்து நிலவுடைமைகள் பிரிக்கப்படுகின்றன. பெரிய நிலவுடைமைகளை அனுமதித்து, அதன் வாயிலாக உற்பத்தி பெருகுமாறு செய்தல் அவசியம். அதிகரிக்கின்ற உற்பத்தியை வரிகளின் மூலம் திரட்டித் தொழில் முன்னேற்றத்திற்குப் பயன் படுத்தலாம். நகர்ப் புறங்களில் முதலீட்டின் அளவு உயர இந்த நிலை உதவும்.

நிலங்கள் உட்பிரிவு படுத்தப்படுவதைத் தடுக்கவேண்டும். கூட்டுறவுப் பண்ணைகளைத் தோற்றுவிப்பதன்மூலம் சிறிய நிலவுடைமைகளின் சிக்கல் தவிர்க்கப்படுவதோடு இயந்திரங்களைப் பயன்படுத்துவதற்கான வாய்ப்புகளும் தோன்றுகின்றன. சாகுபடி நிலங்கள் உத்தம அளவில் அமைந்தால்தான் இயந்திர உற்பத்தி முறையைப் பின்பற்றலாம். தற்போது குறைந்த குதிரைச் சக்தி கொண்டு, பல பணிகளைச் செய்யும் இயந்திரக் கலப்பைகளைச் சிறிய அளவு நிலங்களிலும் பயன்படுத்த முடிகிறது.

3. மூலதனப் பற்றுக்குறை.

வேளாண்மையை இயந்திரமயமாக்க அதிக மூலதனத்தைச் செலவிடவேண்டியுள்ளது. விவசாயிகள் அந்த அளவிற்கு நிதி வசதியைப் பெற்றிருப்பதில்லை. சேமிக்கும் திறனைப் பெற்றில்லாத வறியவர்களாக அவர்கள் இருக்கின்றனர். முன்னேற்றமான உற்பத்தி முறைகளைப் பின்பற்றுவதற்கு இந்த நிலை தடையாக அமைகின்றது. வேளாண்மை இயந்திரங்கள் அதிக விலையுடையன வாக இருக்கின்றன. 'அதிகச் செலவு பிடிக்கும் மூலதனப் பொருள்கள் தேவைப்படுவதால், குடும்பப் பண்ணைகள் பேரளவில் இயந்திரங்களைப் புகுத்த முடிவதில்லை. சிறிய பண்ணையைக் கொண்டுள்ள விவசாயி, அதிக மூலதனத்தைத் திரட்டும் நிலையில் அமைந்திருப்பதில்லை. ஒரு சிறிய இயந்திரக் கலப்பையின் மதிப்புச் சாகுபடியாளரின் 5 முதல் 10 ஆண்டுக் கூலிக்குச் சமமாக இருக்கின்றது. அம் மதிப்பில் மூன்றில் ஒரு பங்கைக்கூட அவர் தம்முடைய விற்பனை உபரிமூலம் அளிக்க இயலாது.'[1]

இயந்திரமயமாக்குவதற்கான தொடக்க நிலைச் செலவு உயர் வாக உள்ளது. இந்திய வேளாண்மை குறைந்த வருமானம், வேலை யின்மை, மறைமுக வேலையின்மை, சிறிய அளவு நில வுடைமைகள் ஆகிய பிரச்சினைகளை உள்ளடக்கியதாக இருக் கின்றது. இவற்றால், இயந்திரங்களைப் பயன்படுத்துவது கடின

1 Economic Survey of Asia and Far East, 1950.

மாகிறது. பல வேளாண்மை இயந்திரங்கள் வெளிநாடுகளினின்றும் இறக்குமதி செய்யப்படுகின்றன. அவை பழுதாகும்போது தேவையான இயந்திரப் பாகங்களும் கிடைப்பதில்லை. சிறிய தவறுகளும் பெரிய அளவு பழுதுபார்க்கும் செலவைத் தோற்றுவிக்கின்றன. எல்லா இயந்திரங்களையும் உற்பத்தி செய்யும் அளவிற்கு நம் பொறியியல் தொழில் வளர்ந்திருக்கவில்லை. இரும்பு-எஃகுத் தொழில் வளர்ச்சியும் போதுமான அளவிற்கு ஏற்பட்டிருக்கவில்லை.

அயலகச் செலாவணிச் சிக்கல் இயந்திரங்களை இறக்குமதி செய்வதற்குத் தடையாக இருக்கின்றது. வேளாண்மை இயந்திரங்களை இயக்கப் பெட்ரோல், டீசல், மண்ணெண்ணெய் முதலியன தேவை. சில இடங்களில் குறைந்த அளவிற்கு மின்சக்தியும் பயன்படுத்தப்படுகின்றது. இவை யாவும் பற்றுக்குறை நிலையில் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது. உள்நாட்டில் இப் பொருள்களின் உற்பத்தி போதுமான அளவில் அமைந்திருக்கவில்லை. இயந்திரங்களைப் புகுத்துவதற்கு முன்னர், தேவைக்கேற்ப இவற்றை உற்பத்தி செய்வது இன்றியமையாதது. சிலவற்றை இறக்குமதி செய்ய அந்நியச் செலாவணி தேவைப்படுகின்றது.

நாட்டிற்கு நன்மையளிக்கும் வகையில் இறக்குமதி அமைய வேண்டும். வேளாண்மை இயந்திரங்களையும், கருவிகளையும், வாங்க அரசு கடன்களை அளிப்பது அவசியம். நீண்டகால நன்மைகளை இது அளிக்கும். அரசு அதிக மூலதனத்தை அளித்து நிதியளிக்கும் நிறுவனங்களைத் தோற்றுவிக்கலாம். இயந்திரங்களைக் கொண்டு உற்பத்திச் செலவைக் குறைக்க முடியும். கால்நடைகளைக் கொண்டு சாகுபடி செய்யும்போது உற்பத்திச் செலவு உயர்வாக அமையும். தொடக்கத்தில் இயந்திரங்களைப் புகுத்துவது கடினமானதாக இருக்கக்கூடும். பின்னர், விவசாயிகள் தாங்களே சேமித்து முதலீடு செய்யும் திறனைப் பெற்றவர்களாகி விடுகின்றனர். இதனால், உற்பத்தி அதிகரித்து உண்மை வருமானமும் கூடுகிறது.

'இவ்வகை முதலீட்டை அரசு செய்தால், இன்றுள்ள பல வேளாண்மைச் சிக்கல்களுக்குத் தீர்வு காண முடியும். இதன் காரணமாக வேளாண்மையில் செழிப்புநிலை தோன்றும். முழுமையான இயந்திரமயமாக்குதலில் முதலீடு செய்யும்போது சிக்கனத்தைப் பெற இயலும்; கால்நடைகளைப் பயன்படுத்தும் போது சிக்கனத்தைப் பெற இயலாது.'[1] வேளாண்மை

[1] S.C. Jain Op. Cit., p. 192.

இயந்திரங்களை உள்நாட்டிலேயே உற்பத்தி செய்வதற்கான நடவடிக்கைகளை எடுப்பது நல்லது. கூட்டுறவு முறையின் மூலம் நிதி வசதிகளைப் பெருக்கலாம்.

இந்தியாவில் ஐந்தாண்டுத் திட்டங்களால் இருப்பு-எஃகுத் தொழிலில் படிப்படியான முன்னேற்றம் ஏற்பட்டு வருகின்றது. இதனால், வேளாண்மை இயந்திரங்களை இங்கேயே உற்பத்தி செய்வதற்கான வாய்ப்புகள் பெருகி வருகின்றன என்று கருதலாம்.

வேளாண்மையை முழுமையாக இயந்திரமயமாக்க சரியான அமைப்பு முறை, பயிற்சி முறை ஆகியவை தேவை. இவ் வகையில் அரசு பல வழிகளிலும் உதவுகிறது. 1947 ஆம் ஆண்டில் 'மத்திய இயந்திரக் கலப்பை நிறுவனம்' (Central Tractor Organisation) தொடங்கப் பெற்றது. அதைத் தொடர்ந்து மாநில அரசுகளும் இவ்வகை நிறுவனங்களை அமைக்கத் தலைப்பட்டன. இயந்திரக் கலப்பைகளோடு பம்பு செட்டுகள், டீசல் என்ஜின்கள், தண்ணீர் இறைக்கும் கருவிகள் ஆகியனவும் பரப்பப்பட்டன. அவை பல விவசாயிகளாலும் அறியப்பெற்றன. அரசைத் தவிர, பல செல்வம் மிக்க பெருநிலக்கிழார்களும் இயந்திரகளை வாங்கத் தொடங்கினர்.

## 4. அந்நியச் செலாவணிச் சிக்கல்

வேளாண்மையை இயந்திரமயமாக்க இயந்திரங்களும், கருவிகளும் தேவை. இரு வழிகளில் இவற்றைப் பெறலாம்; ஒன்று, அவற்றைப் பிற நாடுகளினின்றும் இறக்குமதி செய்யலாம்; இரண்டாவதாகத் தேவையான இயந்திரங்களையும், கருவிகளையும் உள்நாட்டிலேயே உற்பத்தி செய்யலாம். இரண்டாவது முறை, தற்பொழுதுள்ள சூழ்நிலையில் இந்தியாவிற்குப் பொருத்த முடையதாக இல்லை. அவ்வாறு உள்நாட்டிலேயே உற்பத்தி மேற்கொள்ளப்பட்டாலும், சில இயந்திரப் பாகங்களுக்காகப் பிற நாடுகளை எதிர்நோக்க வேண்டிவரும். பொருளாதார முன்னேற்றத்தின் தொடக்க நிலையில் எல்லா இயந்திரப் பாகங்களையும் உள்நாட்டிலேயே உற்பத்தி செய்வது இயலாது. எனவே, அவற்றை இறக்குமதி செய்வதற்கு அந்நியச் செலாவணி தேவைப் படுகிறது.

இன்னும், சில காலத்திற்கு வேளாண்மை இயந்திரங்களை இறக்குமதி செய்வதை நாம் தவிர்க்க முடியாது. எனினும், தற்போதுள்ள சூழலில் வேளாண்மையை முழுமையாக இயந்திர

மயமாக்கினால் அந்நியச் செலாவணிப் பிரச்சினை மேலும் தீவிரமாகும். 'அயல்நாட்டுச் செலுத்து இருப்புநிலை' (Balance of Payments) பாதகமாக அமையும். அயல்நாட்டுச் செலாவணியைப் பொறுத்த அளவில் போதுமான இருப்பை நாம் கொண்டிருக்கவில்லை.

இது தீர்வு காண்பதற்குக் கடினமான சிக்கல் என்று பலராலும் சொல்லப்படுகிறது. ஆயினும், இச் சிக்கலை விலக்குவதற்கு அரசு வேளாண்மை வளர்ச்சிக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கவேண்டும். பெரிய தொழில்களின் முன்னேற்றத்திற்குப் பயன்படுத்துவதைவிட வேளாண்மை வளர்ச்சிக்கு அந்நியச் செலாவணியைச் செலவிடுவது நலம். வேளாண்மைக் கருவிகளையும், இயந்திரங்களையும் கொண்டு உற்பத்தித் திறனைப் பெருக்குவது எளிது. தொடக்கத்தில் வேளாண்மைப் பொருள்களை ஏற்றுமதி செய்து, இயந்திரங்களை இறக்குமதி செய்வதற்குத் தேவையான அயலகச் செலாவணியை ஈட்டலாம். ஏற்றுமதிகளின் பெரும்பங்கை இதற்காகவே செலவிட வேண்டும். ஆரம்ப காலத்தில் தோன்றும் இவ்வகைச் சிக்கலை வேளாண்மை வளர்ச்சியால் நீண்ட காலத்தில் தவிர்க்கலாம்.

இயந்திரங்களை இயக்குவிப்பதற்கான மூலப் பொருள்களையும் நாம் இறக்குமதி செய்கிறோம். எனினும், சமீப காலத்தில் இங்கு எண்ணெய்க் கிணறுகள் சில கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. கிராமப் புறங்களும் மின்சாரமயமாக்கப்பட்டு வருகின்றன. சிறப்பான பொறியியல் வளர்ச்சியைப் பெறுவதன் வாயிலாக உள்நாட்டிலேயே பல வேளாண்மை இயந்திரங்களைத் தயார் செய்ய முடியும். இயந்திரங்களை இயக்குவிக்கும் இயக்கச் சக்தியை நம்மால் பெருக்க இயலும். ஐந்தாண்டுத் திட்டங்கள் இதற்கு வகை செய்கின்றன. இவை அனைத்திற்கும் அரசே முதலீடு செய்ய வேண்டியுள்ளது. இதற்கு விவசாயிகளின் ஒத்துழைப்பும் தேவை.

கிராமங்களில் இயந்திரப் பாகங்கள் எளிதில் கிடைப்பதில்லை; பழுதுபார்க்கும் வசதிகளும் அமைந்திருப்பதில்லை. பல மூலப் பொருள்களையும், இயந்திரப் பாகங்களையும் அதிகச் செலவில் இறக்குமதி செய்ய வேண்டியுள்ளது.

### 5. கால்நடைச் சக்தியின் வெளியேற்றம்

இயந்திரமயமான சாகுபடி முறையைக் கைக்கொள்ளும்போது, கால்நடைகள் பயனற்றனவாகி விடுகின்றன. அவற்றைப் பரா

மரிப்பது பெரிய சுமையாக அமையும். இந்தியாவில் மரக்கறி உணவை உட்கொள்பவர்களின் வீதம் அதிகமாக உள்ளது. பிற நாடுகளோடு ஒப்பிடும்போது இங்கு மாமிச உணவைப் புசிப்பவர்களின் வீதம் குறைவாகவே இருக்கிறது. வேளாண்மையை முழுமையாக இயந்திரமயமாக்கும்போது கால்நடைகளை என்ன செய்வது என்பது கேள்விக்குறியாக அமைகிறது.

இயந்திரக் கலப்பையைக் கொண்டு அதிகப் பரப்பளவுள்ள நிலத்தை ஆழமாகக் குறைந்த நேரத்தில் உழ முடியும். அதன் மூலம் 6 ஜோடி உழவு மாடுகளின் உழைப்புத் தேவையற்றதாகி விடுகிறது. இந்தியாவில் நாம் சுமார் 66 மில்லியன் உழவுக் கால்நடைகளைக் கொண்டுள்ளோம். அவற்றால்தான், சாகுபடி நடவடிக்கைகள் பலவும் நிறைவேற்றப்படுகின்றன. நிலத்திற்கும் கால்நடைகளுக்கும் இடையேயான வீதம் பல நாடுகளிலும் வேறுபடுகிறது. உதாரணமாக, 'இந்தியாவில் 100 ஏக்கர்கள் நிலத்தில் 55 கால்நடைகளும், எகிப்தில் 25 கால்நடைகளும், சீனாவில் 15 கால்நடைகளும், ஜப்பானில் 6 கால்நடைகளும் உள்ளன.'[1]

இயந்திரமயமாக்கலைப் படிப்படியாகச் செய்வதன் வாயிலாக இப் பிரச்சினைக்குத் தீர்வு காண முடியும். கால் நடைகளைப் பராமரிப்பதற்கான தீவனங்களைப் பயிரிட விளைநிலங்கள் வீணடிக்கப்படுகின்றன. உணவுத் தானியங்களின் உற்பத்தி இதனால், பாதிக்கப்படுகிறது. ஆயினும், கால் நடைகளைத் திடீரெனக் குறைப்பது இயலாது. உபரிக் கால் நடைகளால் எவ்விதப் பயனும் ஏற்படாது.

அமெரிக்காவில் இயந்திரமயமாக்கப்பட்டதன் மூலம் கால்நடைத் தீவனங்கள் பயிரிடப்பட்ட 65 மில்லியன் ஏக்கர்கள் உணவு உற்பத்திக்காகப் பயன்படுத்தப்பட்டது. தீவனங்களை உற்பத்தி செய்வதற்குப் புதிய நிலங்கள் எடுத்துக் கொள்ளப்பட்டன. தீவனங்களின் அளிப்பும், தரமும் உயர்ந்தன.

படிப்படியாக நீண்ட காலத்தில் கால்நடைகளை அவற்றின் குறைப்பதால் உற்பத்தித் திறனைக் கூட்ட இயலும். இந்தியாவில் ஒரு பசுவின் சராசரி பால் உற்பத்தி 190 கிலோ கிராம்கள் ஆகும்; இதன் அளவு ஹாலந்தில் 3,780 கிலோ கிராம்களாகவும், ஜப்பானில் 3,640 கிலோ கிராம்களாகவும், பெல்ஜியத்தில் 3,560 கிலோ கிராம்களாகவும், டென்மார்க்கில் 3,340 கிலோ கிராம்களாகவும் இருக்கின்றன.

1 S. C. Jain, Op. cit., p. 193,

இயந்திரமயமாக்கப்பட்ட வேளாண்மைப் பண்ணையில் ஒரு குறிப்பிட்ட அளவு உபரிக் கால் நடைகளைக் கொண்டிருப்பது நன்மை பயக்கும். இயந்திரங்கள் பழுதுபடும்போதும், இயக்கச் சக்திகள் கிடைக்காதபோதும் அவற்றைப் பயன்படுத்தலாம். கதிரடித்தல், நில அரிப்பைத் தடுத்தல் முதலிய சில சிறிய பணிகளிலும் அவற்றை ஈடுபடுத்தலாம். எதற்கும் பயன்படுத்த முடியாத கால்நடைகளை ஓரிடத்தில் சேர்க்கலாம். அவற்றின் சாணங்களை எருவாகப் பயன்படுத்தலாம்.

உழைப்பைப் பயன்படுத்த இயலாத காலங்களிலும் கால் நடைகளைப் பராமரிக்க வேண்டியுள்ளது. உற்பத்திச் செலவு அதிகமாக உள்ளமைக்கு இஃது ஒரு காரணமாகும். செலவைக் குறைக்க இயந்திரங்களைப் பயன்படுத்துவது நலம்.

கால்நடைகளை நீக்குவது ஒரு வகையில் வேளாண்மைப் பொருளாதாரத்திற்கு நன்மையாக முடியும். உணவுப் பொருள் களை உற்பத்தி செய்யும் சாகுபடி நில அளவு பெருகுவதே அதன் முக்கிய நன்மையாகும். இந்த நிலையால் ஆறுகள், சாலைகள் ஆகிய வற்றின் ஓரங்களில் உள்ள நிலத்தையும் சாகுபடியின் கீழ்க் கொண்டு வரலாம். உணவுக்காக மனிதர்களும் கால்நடைகளும் போட்டியிடும் நிலை தவிர்க்கப்படும். இயந்திரமயமாக்குவதால் உபரியாக இருக்கும் கால்நடைகளைப் போக்குவரத்திற்காகப் பயன் படுத்தலாம். எருவை நிலத்திற்குக் கொண்டுவரவும், விளை பொருள்களைச் சந்தைக்குக் கொண்டு செல்லவும் அவை உபயோக மாகும். தானியங்களை அரவைக்கு எடுத்துச் செல்லவும், செக்கிழுக்கவும் சோப்புத் தயாரிக்கவும், கிராமச் சாலைகளைச் செப்பனிடவும் அவற்றின் உழைப்பைப் பயன்படுத்த முடியும்.

மேலை நாடுகளில் கால்நடைத் தீவனங்களை உற்பத்தி செய்ய புல் சமவெளிப்பிரதேசங்கள் பயன்படுத்தப்படுகின்றன. அதே முறையைப் பின்தங்கிய இந்தியா முதலிய நாடுகளும் கைக் கொள்ளலாம். காய்ந்த, பசுமையான கால்நடைத் தீவனங்கள் புதியனவாகக் கண்டு பிடிக்கப்படவேண்டும். புதிய வகைத் தீவனங்களால் கால்நடைகளின் பராமரிப்புச் செலவைக் குறைக்க முயலுவது அவசியம். வனப்பிரதேசங்களையும் தீவனங்களைப் பயிரிடப் பயன்படுத்தலாம். கால்நடைத் தீவனங்களைச் சேமித்து வைக்கும் வசதிகள் பெருக்கப்பட வேண்டும். இவ்வாறு கொள் கைகளைத் தீர்மானித்து நடவடிக்கைகளை மேற்கொண்டால் உபரிக் கால்நடைகளின் சிக்கலைத் தீர்க்கலாம்.

இந்தியாவில் கால் நடைகளின் எண்ணிக்கை அதிகமாக உள்ளமையே அவற்றின் தரக் குறைவுக்குக் காரணமாகும். நல்லினக் கால்நடைகளை உயர்ந்த தரத்தோடு பாதுகாக்க அவற்றின் எண்ணிக்கை குறைக்கப்படவேண்டும். அரசு இதற்காகத் தேவையான நடவடிக்கைகளை எடுப்பது அவசியம். இவ் வழிகளில் உபரிக் கால்நடைகளை நீக்கினால் வேளாண்மைத் துறையின் உற்பத்தித் திறன் பாதிக்கப்படமாட்டா.

## 6. விவசாயிகளிடையே அக்கறையின்மை

வேளாண்மைப் புரட்சியைப் பெற இயந்திரங்கள் தேவை அவற்றோடு இயந்திரங்களைப் பயன்படுத்தும் எண்ணம்கொண்ட விவசாயிகளும் தேவைப்படுகிறார்கள். வேளாண்மையை இயந்திர மயமாக்க விவசாயிகளின் ஒத்துழைப்பும் அவசியமாகிறது. தீவிர எண்ணம் கொண்டவர்களாக விவசாயிகள் இருக்கவேண்டும். இந்திய விவசாயிகள் இந்த நிலையைக் கொண்டவர்களாக இல்லை. அவர்களில் பெரும்பாலானவர்கள் எழுத்தறிவில்லாதவர்களாகவும், மூட நம்பிக்கைகள் உள்ளவர்களாகவும், தவறான நம்பிக்கை கொண்டவர்களாகவும், குறுகிய நோக்குக் கொண்டவர்களாகவும் இருக்கின்றனர் புதிய தொழில் நுட்பம் மிக்க உற்பத்தி முறைகளை அவர்கள் சந்தேகிக்கின்றனர்; பழைய வாழ்க்கை நடத்தவே விரும்புகின்றனர்; பாரம்பரியச் சாகுபடி முறையைக் கைக்கொள்ளு கின்றனர். மாற்றங்களை அவர்கள் விரும்புவதில்லை; எதிலும் அக்கறையில்லாமல் அவர்கள் அவதியுறுகின்றனர்.

விவசாயிகளைப் புரட்சி எண்ணம் கொண்டவர்களாக மாற்ற வேண்டும். பரந்து விரிந்து வளர்ந்த அறிவைப் பெற்றவர்களாக அவர்களை ஆக்க வேண்டியது அவசியம். வாழ்வில் அன்பு, பண்பு, அறம், கடமை, ஒழுக்கம், கண்ணியம், கட்டுப்பாடு ஆகியவற்றைப் பெற்றவர்களாக அவர்களை மாற்றுவது இன்றி யமையாதது. பழையனவற்றைக் களைந்து புதியனவற்றைக் கிராமப் பொருளாதாரத்தில் புகுத்த வேண்டும். இவற்றை எல்லாம் எதிர்ப்புகளுக்கு இடையே செய்ய வேண்டிவரும்.

புதிய உற்பத்தி முறைகளைக் கைக்கொண்டால் இடர்கள் தோன்றக்கூடும் என்று விவசாயிகள் அஞ்சுகின்றனர். அவற்றால் எதிர்பாராத வகையில் இழப்புகள் ஏற்படலாம் என்றும் அவர்கள் எண்ணுகின்றனர். இந்தியா ஒரு குடியரசு நாடு. எனவே, பெரும் பாலான மக்களின் கருத்துக்கு எதிராக அரசு எதையும் செய்ய இயலாது. கட்டாயப்படுத்தும் நிலை பெரிதும் தவிர்க்கப்படுகின்றது.

ஆனால், சிறப்பான புதிய கருத்துகளை மக்கள் உணருமாறு செய்யப்படுகிறது. கிராம மக்களிடையே நல்ல கருத்துகளை உணர்த்த நீண்ட காலம் தேவைப்படுகிறது. ஆகவே, நல்ல கருத்துகளின் சிறப்பான விளைவுகளைக் குறுகிய காலத்தில் பெற முடிவதில்லை. இந்தியத் திட்டங்கள் எதிர்பார்த்த அளவிற்கு வெற்றி பெறுமைக்கு மக்களின் பிற்போக்கான கொள்கை களே முக்கியமான காரணங்களாகும். சோவியத் ரஷ்யாவின் வேளாண்மை வளர்ச்சித் திட்ட முறை சிறப்பானது. எனினும், அதை நாம் அப்படியே நம் நாட்டில் பின்பற்ற முடியாது. இரு நாடுகளுக்குமிடையேயும் அரசியல் அமைப்பு முறைகள் வேறுபடு கின்றன. ரஷ்யாவில் 'பொதுவுடைமை' பின்பற்றப்படும்போது இந்தியாவில் 'சமதர்மம்' கைக்கொள்ளப்படுகிறது. பொது வுடைமை அரசு எதையும் கட்டாயப்படுத்திச் செய்ய இயலும். சமதர்மக் குடியரசில் 'மக்கள் வாக்கே மகேசனின் வாக்காக' இருக்கின்றது. மக்களுடைய விருப்பத்திற்கு எதிராக அரசு எதையும் செய்ய இயலாது.

மேற்குறிப்பிட்ட காரணங்களால் இந்திய வேளாண்மையை இயந்திரமயமாக்குவதில் எண்ணற்ற பிரச்சினைகள் தோன்று கின்றன. நாட்டின் கிராமப் புறங்களில் எவ்வாறு புரட்சியைத் தோற்றுவிப்பது என்பதே அடிப்படைச் சிக்கலாக இருக்கின்றது. சமீப காலமாகக் கிராம மக்களின் எண்ணங்களில், செயல்களில் முன்னேற்றமான மாற்றங்கள் தோன்றி வருகின்றன. சீரிய சிந்தனையைக் கொண்டவர்களாக அவர்கள் மாறி வருகிறார்கள். உழைப்பின் சிறப்பு உணரப்பட்டுவிட்டது. தற்போது கிராம மக்கள் தங்களைச் சாமானியர்களாகக் கருதுவதில்லை. ஆங்கிலேயர் ஆட்சியை நீக்கி விடுதலை பெற அவர்களும் உதவி இருக்கிறார்கள்.

அரசு வேளாண்மையில் இயந்திரங்களைப் புகுத்தும்போது கவனமான நடவடிக்கைகளை எடுக்கவேண்டும். தவறான கொள்கைகளை விரைவாக நிறைவேற்றுவதன்மூலம் எவ்வித நன்மையையும் அடைந்திட இயலாது. சீரான பொருளாதார வளர்ச்சிக்கு ஏற்ற கொள்கைகளைப் பின்பற்றுவது அவசியமானது. முன்னேற்றமான தொழில் நுணுக்க உற்பத்தி முறைகளைப் படிப்படி யாகத்தான் கைக்கொள்ளவேண்டும். தவறான பரிந்துரைகளால் தகராறுகளே நீடிக்கும். விவசாயிகள் யாவரும் ஒரே மாதிரியான எண்ணம் கொண்டவர்களாக இருப்பதில்லை. அவர்களுடைய வசதிகள், சூழ்நிலைகள், நோக்கங்கள், உள நிலைகள் ஆகிய பலவும் வேறுபடுகின்றன, இவற்றின் காரணமாகவே இயந்திரமய மாக்குவதைக் கவனத்தோடு செய்யவேண்டும் என்று சொல்லப்

படுகிறது. விவசாயிகளின் பொருளாதார, சமுதாய அடிப்படைகளுக்கு ஏற்ப அது பின்பற்றப்படவேண்டும்.

இச் சிக்கல்கள் பலவற்றிற்கும் கல்வியறிவின்மையே மூக்கியக் காரணமாகும். விவசாயிகளைத் திறமையானவர்களாக மாற்ற கல்வியறிவு பெரிதும் உதவும். எழுத்தறிவில்லாத கிராம மக்களுக்கு இயந்திரங்களின் அமைப்பைப் புரியவைத்து, இயக்குவதற்கான பயிற்சியையும் அளித்தல் இன்றியமையாதது. ஒரு சராசரி இந்திய விவசாயி, பண்ணை இயந்திரங்களையும் கருவிகளையும்பற்றி முழுமையாக அறிந்துகொள்ள முடியாதவனுக இருக்கிறுன். அவை எவ்வாறு இயங்குகின்றன என்பதை அறியும் அறிவாற்றலையும் அவர்கள் பெற்றிருப்பதில்லை. அவற்றை வாங்குவதற்குத் தேவையான நிதி வசதியையும் அவர்கள் கொண்டிருப்பதில்லை.

7. இயக்கச் சக்திகளின் பற்றுக்குறையும் இயந்திரங்களைப் பழுது பார்க்கப் போதியவசதிகள் இன்மையும்

வேளாண்மையை இயந்திரமயமாக்கும்போது இச் சிக்கல்களையும் கருத்தில் கொள்ளவேண்டும். தடையில்லாத இயக்கச் சக்தியின் அளிப்புக் குறைந்த விலையில் அமைவது அவசியம். பண்ணைகளில் இயந்திரங்களைப் பயன்படுத்த இது மிகவும் இன்றியமையாதது. நடைமுறையில் தோன்றக்கூடிய இவ் வகைச் சிக்கலைத் தீர்பபது முக்கியமானதாக இருக்கின்றது. டீசல் எண்ணெயின் விலை தற்பொழுது அதிகரித்துக்கொண்டே செல்கின்றது. இப்போதுள்ள பொதுவான விலைமட்டங்களின் அடிப்படையில் ஆராய்ந்தால், டீசல் என்ஜினைப் பயன்படுத்துவது இலாபகரமாக அமையாது என்பதை அறியலாம். இயக்கச் சக்தியின் விலை அதிகமாக இருந்தால், அரசு அதைப் பயன் படுத்தும் விவசாயிகளுக்கு 'உதவிக்கொடை' (Subsidy) அளிக்க வேண்டும்.

கிராமங்களிலேயே இயந்திரங்களைப் பழுதுபார்ப்பதற்கான வசதிகள் இருப்பதில்லை. பழுதுபார்க்க நீண்ட தூரங்களில் உள்ள நகரங்களுக்குச்செல்ல வேண்டியுள்ளது. இது விவசாயிகளுக்குப் பெரிய சுமையாக அமைகிறது. வேளாண்மை இயந்திரங்களும், கருவிகளும் எளியனவாக இருத்தல் வேண்டும். கிராமத்தில் உள்ள கொல்லர்களும, தச்சர்களும், கைவினைஞர்களும் பழுதுபார்ப்பதற்கு ஏற்ற வகையில் அமைதல் நல்லது. குறைந்த கட்டணங்களில் உரிய காலத்தில் இயந்திரங்களைப்பழுது பார்ப்பதற்கான வசதிகளை ஏற்படுத்துதல் அவசியமானதாகும்.

இயந்திரக் கலப்பைகளை எவ்வாறு இயக்குவது என்பதையும் விவசாயிகள் அறிந்திருப்பதில்லை. பல குறைகளையும் விலக்க கிராம மக்களுக்குக் கல்வி வசதிகளும், பயிற்சி வசதிகளும் அளிக்கப்படவேண்டும். வேளாண்மை இயந்திரங்கள் பற்றிய யாவற்றையும் அவர்கள் அறியுமாறு செய்தல் அவசியம்.

## [redacted] நிலத்தின் உற்பத்தித் திறன் குறைவு

வேளாண்மையை இயந்திரமயமாக்கினால் உபரி உழைப்பாளர்கள் பிற துறைகளுக்கு வெளியேற்றப்படுவர். இதனால், உழைப்பின் உற்பத்தித் திறன் உயரும். ஆயினும், இயந்திரங்களைப் பயன்படுத்தினால் நிலத்தின் உற்பத்தியும் உயரும் என்று உறுதியாகக்கூற இயலாது. இந்தியாவில் நிலம் பற்றுக்குறைக் காரணியாக இருக்கின்றது. எனவே, நிலத்தின் உற்பத்தித் திறனைப் பெருக்குவதே முக்கியமானது. தனி ஒருவருக்கான உற்பத்தியை அதிகரிப்பதைக் காட்டிலும் இஃது அவசியமானதாகவும், அவசரமானதாகவும் உள்ளது ஜப்பானில் வேளாண்மை முழுமையாக இயந்திரமயமாக்கப்படவில்லை. எனினும், அங்கு ஓர் ஏக்கருக்கான உற்பத்தி உயர்ந்திருக்கின்றது. செறிவு முறைச் சாகுபடி (Intensive cultivation) பின்பற்றப்படுகின்றமையே அதற்குக் காரணமாகும்.

நம் நாட்டில் குறைந்த உழைப்பாளர்களைக்கொண்டு அதிகப் பொருள்களை விளைவிக்க வேண்டுமென்பது அவசியமில்லை. தற்பொழுது உள்ள பிரச்சினை இருக்கக்கூடிய குறைந்த அளவு நிலத்தில் எவ்வாறு உற்பத்தியைப் பெருக்குவது என்பதேயாகும். இப் பிரச்சினைக்குத் தீர்வு காண எந்த அளவிற்கு இயந்திரங்களைப் பயன்படுத்த வேண்டுமென்பதை ஆய்ந்தறிய வேண்டியது அவசியம்.

இயந்திரமயமாக்குவதால் நிலத்தின் உற்பத்தித் திறன் அதிகரிக்காது என்று கருதுவது தவறு. சோவியத் ரஷ்யாவின் கூட்டுப் பண்ணைகளில் இயந்திரங்களால் உற்பத்தி பல மடங்கு மிகுந்தது. நம் நாட்டிலேயே ராஜஸ்தான் மாநிலத்தின் 'சூரத்கர்' (suratgarh) இயந்திர வேளாண்மைப் பண்ணையில் ஓர் ஏக்கருக்கான உற்பத்தி அதிகரிக்கும் என்பது தெளிவாக நிரூபிக்கப்பட்டுள்ளது.

இயந்திரங்களைப் சாகுபடிக்குப் பயன்படுத்தினால் [redacted] நாட்டின் மொத்த ஆக்கம் அதிகரிக்கும்; தேசிய வருமான உயர்வோடு தலா வருமான உயர்வும் ஏற்படும்.

இந்தியாவின் சிறிய நிலவுடைமைகளைப் பெரிய சிக்கலாகக் கருதத் தேவையில்லை. ஏனெனில், அரசின் எதிர்காலக் கொள்கை, கூட்டுறவு இணைப்புப் பண்ணைகளை அமைப்பதாக உள்ளது. மிகப் பெரிய அளவில் சாகுபடி நிலங்கள் அமையவேண்டுமென்பதும் அவசியமில்லை. 20 முதல் 50 ஏக்கர்கள் நிலத்தில் உபயோகிக்கத் தக்க வேளாண்மை இயந்திரங்கள் இப்பொழுது உற்பத்தி செய்யப் படுகின்றன. சிறிய பண்ணைகளைக்கூட இயந்திரமயமாக்குவதற்கு இன்று வசதிகள் உள்ளன.

இயந்திரமயமாக்குதலை நீண்ட கால, குறுகிய காலக் [redacted] ணோட்டங்களோடு ஆராய்வது அவசியம். நீண்ட காலக் கண் ணோட்டத்தில் வருங்கால இந்தியாவில் வேளாண்மைக்கு உரிய இடத்தையும், அதில் இயந்திரங்கள் ஆற்றவேண்டிய பணிகளையும் வரையறுக்கவேண்டும். குறுகிய காலக் கண்ணோட்டத்தில், தற்பொழுதுள்ள சூழ்நிலைகளில் இயந்திரமயமாக்குதல் எந்த அளவிற்குச் சாத்தியமானது என்பதை ஆய்வு செய்து அறிதல் அவசியமாகும்.

நம் நாட்டில் நில ஒருங்கிணைப்புத் திட்டங்களால் சாகுபடி நில அளவைப் பெரிதாக்க முயலுகின்றோம். எதிர்காலத்தில் பெரிய பண்ணைகள் தோன்ற வாய்ப்புகள் உள்ளன. இயந்திரமயமாக்குவதால் நாட்டின் செல்வம் பெருகும். இதனால், பல துணைத் தொழில்கள் தொடங்கப்பெறும்; வேலை வாய்ப்புகள் பெருகி மக்களுடைய உண்மை வருமானமும் அதிகரிக்கும்.

பெரிய சுமையாக அமைந்துள்ள கால்நடைகளைச் சிறிது சிறிதாகக் குறைக்க இயந்திரங்களை உறுதுணையாகக் கொள்ளலாம். கரைகத் தொழில்களையும், பொறியியல் தொழிலையும் மேம்பாடு அடையச் செய்வது பொருளாதாரத்தின் பல துறைகளில் வளர்ச்சியைக் கொடுக்கும்.

சில பணிகளில் இயந்திரங்களை உடனடியாகப் பயன் படுத்துவது அவசியமாகிறது. களைகளை நீக்கவும், மண்ணை மாற்றி யமைக்கவும் இயந்திரச் சக்தியை நாடுவது நல்லது. உழைப்பாளர்ப் பற்றுக்குறை உள்ள பகுதிகளிலும் உடனடியாக இயந்திரங்களைப் பயன்படுத்தலாம்.

சிறிய அளவில் உள்பிரிவுபடுத்தப்பட்டு வெவ்வேறு இடங் களிலும் சிதறிக்கிடக்கும் துண்டுச் சாகுபடி நிலங்களை இணைப்பதற் கான நடவடிக்கைகள் எல்லா மாநில அரசுகளாலும் பல வேறு

வழிகளில் எடுக்கப்படுகின்றன. மேலும் சிறிய அளவு நிலங்களிலும்கூட இன்று புதுமையான வேளாண்மை இயந்திரங்களைப் பயன்படுத்த முடிகின்றது.

வேலையின்மை தோன்றாத வகையில் இந்திய வேளாண்மையில் சில உற்பத்தி நடவடிக்கைகளை மட்டும் இயந்திரமயமாக்கலாம். இதனால் உற்பத்தி அதிகரிப்பதோடு உற்பத்திச் செலவும் குறையும். எடுத்துக்காட்டாக நீர்ப்பாசன வசதிகள் இல்லாத இடங்களில் நீர் இறைக்க என்ஜின்களை அமைப்பதால் வேலையின்மை ஏற்படாது.

[redacted] விவசாயிகள் கூட்டாகச் சேர்ந்து இயந்திரங்களை வாங்கலாம். அல்லது இயந்திர நிறுவனங்கள் குறைந்த வாடகைக்குச் சிறிய விவசாயிகளுக்கு இயந்திரங்களை அளிக்கலாம். இயந்திரப் பண்ணை முறையால் [redacted] வகைப்பட்ட பயிர்களும் சாகுபடி செய்யப்படுகின்றன. இந்தியாவில் உழைப்புச் செறிந்த உற்பத்தி முறைகள் நீடிக்கவேண்டும். மனித உழைப்பிற்கு உதவியாக இயந்திரங்கள் அமைதல் அவசியம். இயந்திரமயமாக்குவதால் வேண்டத்தகாத எவ்விதச் சிக்கலும் தோன்றக்கூடாது. அதன் உதவிகொண்டு பல பிரச்சினைகளைத் தீர்க்கவேண்டியது விரும்பத்தக்கதாகும்.

### திட்டங்களின்கீழ் வேளாண்மையை இயந்திரமயமாக்குதல்

இந்தியாவில் பெரிய இயந்திரக் கலப்பைகள், இணைப்பு அறுவடைக் கருவிகள் ஆகியவற்றைப் பயன்படுத்துவதற்கு அதிக முக்கியத்துவம் அளிக்கக்கூடாது. பிற பெரிய தொழில்களைப் போல வேளாண்மையை முழுமையாக இயந்திரமயமாக்கக் கருதுவது தவறு. நமது ஐந்தாண்டுத் திட்டங்கள் சமீப நிலையில் வேளாண்மையை முழுமையாக இயந்திரமயமாக்கும் எண்ணம் கொண்டிருக்கவில்லை திட்டக் குழுவின் பொதுக் கொள்கை வேளாண்மைத் திட்டங்களால் வெளிப்படுகிறது. குறுகிய காலத்தில் பெரிய வேளாண்மை இயந்திரங்களைப் பயன்படுத்தும் கருத்தைத் திட்டக்குழு பெற்றிருக்கவில்லை. வேளாண்மையில் குறுகிய காலத்திலேயே வளர்ச்சியைப் பெறுவதும் இயலாது.

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் வேளாண்மையை இயந்திரமயமாக்குவதற்கு முக்கியத்துவம் தரப்படவில்லை. இயந்திரமயமாக்குவதில் உள்ள [redacted] சிக்கல்களும் அப்பொழுது குறிப்பிடப்பட்டன. 'சிறிய அளவு நிலவுடைமைகள், வேளாண்மை நீங்கலாகப் பிற துறைகளில் வேலைவாய்ப்பின்மை, இயக்கச் சக்தியைத் தரும் எண்ணெய்களின் பற்றாக்குறை, இரும்பு, எஃகு

ஆகியவற்றின் போதாதநிலை முதலியவற்றால் கணிசமான அளவில் வேளாண்மையில் இயந்திரக் கலப்பைகளைப் பயன் படுத்த முடியவில்லை. இந்திய வேளாண்மை நீண்ட காலத்திற்குக் கால்நடைச் சக்தியைச் சார்ந்தே அமைய வேண்டிய நிலை உள்ளது. இயந்திரக் கலப்பைகள் உழைப்புச் செலவுகளைக் குறைத்து வேளாண்மை நடவடிக்கைகளை எளிதாக்குகின்றன; என்றாலும், உற்பத்தி உயரும் என்பதற்கான அத்தாட்சி காணப் படவில்லை. இயந்திரமயமாக்குதல் உற்பத்தி நடவடிக்கைகளை விரைவாக்குகின்றது.[1]

இதைப் போன்றே இரண்டாவது திட்டக் காலத்திலும் திட்ட மிடுவோர் வேளாண்மையை இயந்திரமயமாக்குவதில் அதிக அக்கறை கொண்டிருக்கவில்லை. இரண்டாவது திட்டத்தைத் தொழில் திட்டம் என்று வழங்குவதுண்டு. அப்போது நாட்டைத் தொழில் மயமாக்குவதற்கான தீவிர நடவடிக்கைகள் மேற் கொள்ளப்பட்டன. அத் திட்டத்தில் வேளாண்மைக்கு முதலிடம் அளிக்கப்படவில்லை. தொழில் முன்னேற்றத்திலேயே தனிக் கவனம் அமைந்திருந்தது.

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் மீண்டும் வேளாண் மைக்கு முதல் முக்கியத்துவம் அளிக்கப்பெற்றது. ஆனால், வேளாண்மையை இயந்திரமயமாக்க வேண்டுமென்ற எண்ணம் அப்போதும் இருந்திருக்கவில்லை. எனினும், முன்னேற்றமான சாகுபடிக் கருவிகளைப் பயன்படுத்தவேண்டுமென்ற கருத்து வலியுறுத்தப்பட்டது. வேளாண்மை வளர்ச்சியைப் பெற நீர்ப் பாசன வசதிகளைப் பெருக்கி இரசாயன உரங்களைப் பயன்படுத்து வதன் அவசிய நிலை உணர்த்தப்பட்டது. உர உற்பத்திப் பெருக்கத் திற்கான ·திட்டங்களும் வகுக்கப்பெற்றன. நீண்டகாலத்தில் நன்மைகளைப் பெற நுணுக்க மாற்றங்கள் தேவை. விஞ்ஞான வேளாண்மைச் சாகுபடி, முன்னேற்றமான கருவிகள் ஆகிய வற்றைப் பயன்படுத்துவதைப்பற்றி ஆராய்வது அவசியம்.

வேளாண்மை வளர்ச்சிக்காகப் பின்வரும் நிலைகளில் மூன்றாவது திட்டத்தில் தொழில் நுணுக்கம் புகுத்தப்பட்டது.[2]

1. *நீர்ப்பாசன வசதிகள்;*

[1] First Eive-Year Plan p. 262.

[2] Third Five - Year Plane, p. 305.

2. நிலப் பாதுகாப்புப் புன்செய் பண்ணை உற்பத்தி, புதிய சாகுபடிக்கு எடுத்துக்கொள்வது;

3. பசுமை உரங்கள் இரசாயன உரங்கள் ஆகியவற்றின் அளிப்பு;

4. பலதரப்பட்ட நல்ல விதைகளை உற்பத்தி செய்து பரப்புவது;

5. பயிர்ப் பாதுக்காப்பு;

6. நல்ல கலப்பைகளையும், முன்னேற்றமான வேளாண்மைக் கருவிகளையும் பயன்படுத்தி விஞ்ஞானச் சாகுப்படி முறையைக் கைக்கொள்வது.

ஆனால், இவை யாவற்றிலும் சிறப்பான வெற்றி கிட்டியது என்று கூற இயலாது. எனினும், வேளாண்மை வளர்ச்சிக்கு இவை உதவியுள்ளன. அரசின் நிறுவனங்கள் இயந்திரக் கலப்பைகள் முதலியவற்றை வாடகைக்கு அளித்தன. அரசாங்க உதவியோடும் இவ்வகை நிறுவனங்கள் ஏற்படுத்தப்பட்டன. எளிய வேளாண்மைக் கருவிகள் பரவியமைக்கு இது காரணமாக அமைந்தது.

1966-67ஆம் ஆண்டில் வேளாண்மை முறையைப் பற்றி மத்திய உணவு, வேளாண்மை அமைச்சகம் கீழ்க்காணுமாறு குறிப்பிட்டது; 'சுருங்கக்கூறின், புதிய முறையின்மூலம் பண்ணை இயந்திரங்கள், கருவிகள், உரங்கள், விதைகள், பூச்சிக்கொல்லி மருந்துகள் ஆகியன போதுமான அளவிற்கு அளிக்கப்படுகின்றன. விஞ்ஞானச் சாகுபடி முறையைச் செல்வாக்குப் பெறுமாறு செய்யவே இவை யாவும் தரப்படுகின்றன. அமோக விளைச்சலைத் தரக்கூடிய விதைகள் ஆராய்ச்சியின்மூலம் கண்டுபிடிக்கப்படுகின்றன, நாட்டின் வெவ்வேறு பகுதிகளுக்கும் ஏற்புடைய விதைகள் உற்பத்தி செய்யப்படுகின்றன.'

இவற்றின் அடிப்படையில் ஆய்வு செய்தால் திட்டங்களில் வேளாண்மையை இயந்திரமாக்குவதற்குக் கொள்கைகள் கடைபிடிக்கப்படவில்லை என்று தோன்றும். கவனமான முறையில் வளர்ச்சியைப் பெறவேண்டும் என்பதே அரசின் நோக்கமாக உள்ளது. உணவுத் தானியங்கள் உள்படப் பல வேளாண்மைப் பொருள்களின் உற்பத்தியைப் பெருக்கத் திட்டங்கள் நிறைவேற்றப் பட்டன.

திட்டங்கள் தொடங்கிய காலம்முதல் சோவியத் ரஷ்யாவில் வேளாண்மையை இயந்திரமயமாக்குவதற்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப்பட்டு வருகின்றது. அங்கு ஆரம்ப நிலையிலிருந்தே வேளாண்மைப்பொருள்களின் பற்றுக்குறை இருக்கவில்லை. ஆனால், இந்தியாவில் இன்று உணவுப் பற்றுக்குறை அமைந்துள்ளது. எனினும், வேளாண்மையை முழுமையாக இயந்திரமயமாக்குவதற்கான, நடவடிக்கைகள் எடுக்கப்படவில்லை. சோவியத் ரஷ்யாவின் மார்ஷல் ஸ்டாலின், இவ்வகைக் கொள்கைபற்றிப் பதினைந்தாவது காங்கிரஸ் கூட்டத்தில் விளக்கியதாவது, 'வெவ்வேறு இடங்களிலும் சிறிய அளவில் சிதறிக் கிடக்கும் விவசாயிகளின் பண்ணைகளை இணைத்துப் பொதுவாகச் சாகுபடி செய்வது அவசியமாகின்றது. புதிய, உயர்வான தொழில் நுணுக்கங்களின் அடிப்படையில் கூட்டுச் சாகுபடி செய்வது தேவையாகின்றது.

சிறிய விவசாயிகளின் பண்ணைகளைப் படிப்படியாகவும், நிச்சயமாகவும் ஒருங்கிணைப்பது முக்கியமானது. பெரிய பண்ணைகளைப் பொதுவாக அமைப்பது நல்லது என்பதை விவசாயிகள் உணரச் செய்யலாம். அவர்களைக் கட்டாயப்படுத்துவது நல்லதன்று. கூட்டுச் சாகுபடியைக் கைக்கொள்ளுவதன்மூலம் வேளாண்மை இயந்திரங்களைப பயன்படுத்தலாம்; செறிவு முறைச் சாகுபடியை விஞ்ஞான ரீதியில் பின்பற்றலாம். இவற்றையெல்லாம் நிறைவேற்றுவதைத் தவிர வேறு வழியே இல்லை.'[1]

சோவியத் ரஷ்யாவில் முதல் ஐந்தாண்டுத் திட்டம் முதல் தற்போதைய ஏழாண்டுத் திட்டம் வரை வேளாண்மையை முழுமையாக இயந்திரமயமாக்குவதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. இதற்கான 'இயந்திரக் கலப்பை நிலையங்களும்' (Machine Tractar Stations) அங்கு ஏற்படுத்தப் பெற்றன. தற்பொழுது அவை இயந்திரங்களைப் பழுதுபார்க்கும் நிலையங்களாக மாற்றி அமைக்கப்பட்டுள்ளன. வேளாண்மைப் பண்ணைகளுக்கான பள்ளிகள் உள்ளன. அவற்றில் இயந்திரங்களை இயக்குவதற்கான பயிற்சி தரப்படுகிறது. இவற்றால் ரஷ்யாவில் இயந்திரங்களுக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப்படுவதை அறியலாம்.

ரஷ்யாவைப் போல வேளாண்மையை முழுமையாக இயந்திரமயமாக்கும் எண்ணம் இந்தியாவில் இல்லை. ஆனால் அவ் வழியில் வேளாண்மையை வளர்த்தால் உற்பத்தியைப் பல மடங்கு

1 Quoted by B. C. Tandan, 'Economic Planning,' p. 406.

உயர்த்தலாம். மக்கள் தொகைப் பெருக்கம் விரைவாக உள்ளமையால் இம் முறையைத் தவிர்ப்பது நல்லதன்று. படிப்படியாக இயந்திரங்களைப் பயன்படுத்தத் தொடங்குவதன்மூலம் உணவுத் தானியங்களின் பற்றாக்குறையை நீக்கலாம்; பிற துறைகளின் முன்னேற்றத்தையும் பெறலாம். மக்கள் எல்லாருடைய வாழ்க்கைத் தரமும் உயர்வடையும்.

இந்தியாவில் முதல் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களில் வேளாண்மையில் இயந்திரங்களைப் பயன்படுத்துவதுபற்றிக் குறிப்பிடப்படவே இல்லை. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நல்ல இயந்திரங்களையும் கருவிகளையும் வேளாண்மையில் பயன்படுத்தலாம் என்று பரிந்துரைக்கப்பட்டது. திட்டம் தொடங்கியது முதல் நல்ல விதைகள், உரங்கள், உற்பத்தித் தொழில் நுட்பங்கள் ஆகியவற்றிற்கே முக்கியத்துவம் அளிக்கப்பட்டு வருகின்றது. அதிக ஆர்வத்தோடும், தீவிரத்தோடும் இந்திய வேளாண்மை இயந்திரமயமாக்கப்படவில்லை.

### இந்தியாவில் வேளாண்மையை இயந்திரமயமாக்குவதன் வளர்ச்சி

குறைந்த வேகத்திலேயே இந்திய வேளாண்மை இயந்திரமயமாக்கப்பட்டு வருகின்றது. டீசல் என்ஜின்கள், மின்சார மோட்டார்கள், இயந்திரக் கலப்பைகள் ஆகியவற்றின் பயனை விவசாயிகள் உணர்ந்துள்ளார்கள். ஆனால், அவற்றைப் பயன்படுத்தும் நிலையில் உள்ளவர்கள் சில செல்வ நிலக்கிழார்களேயாவர்.

அதிக மூலதனம் தேவைப்படுவதால் அவற்றைப் பெரிய விவசாயிகள் மட்டுமே பயன்படுத்த முடிகிறது. போதுமான நிதி வசதிகளைச் சிறு விவசாயிகள் கொண்டிருப்பதில்லை. மேலும், சிறிய அளவுச் சாகுபடி நிலங்களை மட்டுமே அவர்கள் பெற்றிருக்கின்றனர்.

1956ஆம் ஆண்டிற்கும் 1965ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் இயந்திரக் கலப்பைகளின் எண்ணிக்கை சுமார் [illegible] சதவீதம் அதிகரித்தது. இப்போது நம் நாட்டில் சுமார் 50,000 இயந்திரக் கலப்பைகள் இருக்கின்றன. 1970—71ஆம் ஆண்டிற்குள் இயந்திரக் கலப்பைகளின் ஆண்டுத் தேவை 40 000 ஆக அதிகரிக்கும் என்று எதிர்பார்க்கப்பட்டது. பின்வரும் அட்டவணை வேளாண்மை இயந்திரங்கள் எந்த அளவிற்குப் பயன்படுத்தப்படுகின்றன என்பதை உணர்த்தும்:[1]

[1] Indja 1968, p. 238.

| | | 1956 ஆம் ஆண்டுக் கணக்கெடுப்பு | 1961 ஆம் ஆண்டுக் கணக்கெடுப்பு |
|---|---|---|---|
| | | (ஆயிரத்தில்) | (ஆயிரத்தில்) |
| 1. கலப்பைகள் | | | |
| (i) மரக் கலப்பைகள் | — | 3,61,42 | 3,83,72 |
| (ii) இரும்புக் கலப்பைகள் | — | 13,76 | 22,98 |
| 2. இயந்திரக் கலப்பைகள் | — | 21 | 31 |
| 3. எண்ணெய் என்ஜின்கள் | — | 1,23 | 2,30 |
| 4. மின்சாரப் பம்புகள் | — | 47 | 1,60 |
| 5. கரும்பு பிழியும் இயந்திரங்கள் | — | | |
| (i) இயக்கச் சக்தியால் இயங்குவது | | 23 | 33 |
| (ii) மாடுகளால் இயங்குவது | | 5,45 | 5,90 |

## இயந்திரக்கலப்பை கணக்கெடுப்பு

ஒவ்வொரு ஐந்தாண்டுகளுக்கும் [redacted] இந்தியாவில் இயந்திரக் கலப்பைகளின் எண்ணிக்கைபற்றிய கணக்கெடுப்புச் செய்யப் படுகின்றது. பின்வரும் மூன்று அட்டவணைகள் 1961, 1966 ஆம் ஆண்டுகளில் செய்யப்பட்ட கணக்கெடுப்புகள், இயந்திரக் கலப்பைகளின் உள்நாட்டு உற்பத்தி, இயந்திரக் கலப்பைகளின் இறக்குமதி ஆகியவற்றை விளக்குகின்றன.[1]

| | | 1961 ஆம் ஆண்டுக் கணக்கெடுப்பு | 1966 ஆம் ஆண்டுக் கணக்கெடுப்பு |
|---|---|---|---|
| ஆந்திரப்பிரதேசம் | ... | 1,762 | 2,691 |
| அஸ்ஸாம் | ... | 489 | * |
| பீஹார் | — | 1,520 | 2,132 |
| குஜராத் | ... | 2,005 | 3,248 |
| ஜம்மு, காஷ்மீர் | ... | 132 | * |
| கேரளம் | ... | 276 | 418 |
| மத்தியப்பிரதேசம் | ... | 2,025 | 2,513 |
| தமிழ்நாடு | ... | 1,387 | 2,245 |
| மஹாராஷ்டிரம் | ... | 1,427 | 2,9 9 |
| மைசூர் | ... | 931 | 2,591 |
| ஒரிஸ்ஸா | ... | 194 | 673 |
| பஞ்சாப் (முன்னுள்) | ... | 7,866 | 15,766 |
| ராஜஸ்தான் | — | 3,196 | 4,195 |
| உத்தரப்பிரதேசம் | ... | 7,139 | 10,789 |
| மேற்கு வங்காளம் | ... | 330 | * |
| டில்லி | — | 258 | [redacted] |
| ஹிமாசலப்பிரதேசம் | ... | 4 | 28 |
| பிற யூனியன் பிரதேசங்கள் | ... | 25 | 67 |
| அகில இந்தியா | ... | 31,016 | 50,944 |

[1] 'The Economic Times,' Dated 16th February 1969, p.8.

* புள்ளி விவரங்கள் கிடைக்கவில்லை.

உள்நாட்டில் இயந்திரக்கலப்பை உற்பத்தி

| ஆண்டு | | எண்ணிக்கை |
|---|---|---|
| 1961-62 | | 880 |
| 1962-63 | ... | 1 414 |
| 1963-64 | ... | 1,983 |
| 1964-65 | ... | 4 323 |
| 1965-66 | ... | 5,714 |
| 1966-67 | ... | 8,816 |
| 1967-68 | ... | 11,394 |

இந்தியாவில் இயந்திரக்கலப்பைகளின் இறக்குமதி

| ஆண்டு | | எண்ணிக்கை |
|---|---|---|
| 1951–55 (ஆண்டுச் சராசரி | | 3,503 |
| 1956 | — | 4,468 |
| 1957 | — | 4,792 |
| 1958 | — | 3 733 |
| 1959 | — | 2,652 |
| 1960 | — | 3,843 |
| 1961 | — | 3,248 |
| 1962 | — | 3 033 |
| 1963 | — | 1.523 |
| 1964 | — | 2,999 |
| 1965 | — | 2.064 |
| 1966 | — | 2,884 |

ஜனவரி 1968-ல் மத்திய அரசு இயந்திரக் கலப்பைகள் முதலிய சில வேளாண்மைக் கருவிகளை உற்பத்தி செய்ய அனுமதி பெறத் தேவையில்லை என்று கூறிவிட்டது. வேளாண்மை இயந்திரங்களை உற்பத்தி செய்யும் தொழிலை ஊக்குவிப்பதற்காகவே இந்த நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டது. 'தொழில் முன்னேற்ற' ஒழுங்குபடுத்தும் சட்டத்தின்' (1951) (Industrial Development and Regulation Act) கீழ் இவ்வகை வேளாண்மைக் கருவிகளை உற்பத்தி செய்ய அரசின் அனுமதி தேவையில்லை. தற்பொழுதுள்ள நிறுவனங்களும் தங்கள் விருப்பம்போல் உற்பத்தித் திறனை

அதிகரித்துக் கொள்ளலாம்; முன் அனுமதி இன்றி வேறுவகை வேளாண்மைக் கருவிகளையும் உற்பத்தி செய்யலாம். தற்போதுள்ள உற்பத்தியாளர்கள் உற்பத்தியைப் பெருக்க இந்த நிலை தூண்டுதலாய் அமையும். பெரிய அளவிலோ அல்லது சிறிய அளவிலோ அவர்கள் இயந்திரக் கலப்பைகளை உற்பத்தி செய்யலாம். சந்தையின் தேவைக்கேற்ப தொழில் அமைப்பாளர்கள் உற்பத்தியைச் செய்ய இயலும்.

தனியார் துறையில் இயந்திரக் கலப்பைகளின் உற்பத்தியைப் பெருக்க வேண்டுமென்பதற்காக அரசு பல நோக்கங்களை அங்கீகரித்துள்ளது. ஒவ்வோர் ஆண்டும் 30 000 இயந்திரக் கலப்பைகளையாவது உற்பத்தி செய்ய வேண்டுமென்று திட்டமிடப்பட்டிருக்கின்றது. இந்தியாவில் 20 குதிரைச் சக்திக்கு அதிமான திறனைக்கொண்ட இயந்திரக் கலப்பைகளை உற்பத்தி செய்யவே அனுமதிக்கப்படுகிறது. இவற்றைச் சிக்கனமாகப் பயன்படுத்த முடியவில்லை; இயக்குவதும் கடினமாக இருக்கிறது. ஜப்பானில் 1 முதல் 7 குதிரைச் சக்தி கொண்ட இயந்திரக் கலப்பைகள் உற்பத்தி செய்யப்பட்டுப் பயன்படுத்தப்படுகின்றன. இவற்றை இயக்குவதற்கான செலவு குறைவாகவே உள்ளது. அவ்வாறுள்ள இயந்திரங்களை இந்திய வேளாண்மையில் புகுத்துவது இன்றியமையாதது. ஏனெனில், இங்குச் சாகுபடி நிலங்கள் சிறிய அளவில் உள்ளன. விவசாயிகளும் குறைந்த வருமானத்தையே பெறுகின்றார்கள். உற்பத்திச் செலவைக் குறைக்க அது பெரிதும் உதவும்.

1967—68ஆம் ஆண்டில் அரசு சோவித் ரஷ்யாவிலிருந்து 4.500 இயந்திரக் கலப்பைகளையும், செக்கோஸ்லோவாக்கியாவிலிருந்து 2,000 இயந்திரக் கலப்பைகளையும் இறக்குமதி செய்வதற்கான நடவடிக்கைகளை எடுத்தது. இறக்குமதி செய்யப்பெற்ற இயந்திரக் கலப்பைகள் குறைந்த குதிரைச் சக்தியைக் கொண்டவை.

நாடு முழுவதும் வேளாண்மை இயந்திரங்களை வாடகைக்குப் பெறுவதற்கான அமைப்புகள் ஏற்படுத்தப்பட்டு வருகின்றன. குறைந்த வாடகையில் இவ்வியந்திரங்களைச் சிறு விவசாயிகளும் பெறும் வாய்ப்புகள் ஏற்பட்டுள்ளன. 'வேளாண்மைத் தொழில் கழகங்கள்' (Agro Industries Corporations) விவசாயிகளின் நன்மைக்காகத் தவணை முறையில் வேளாண்மை இயந்திரங்களை விற்பனை செய்கின்றன. முதலில் விலையின் 15 சதவீதத்தைக் கொடுத்து வேளாண்மை இயந்திரதைப் பெற்றுக்கொள்ளலாம். மிகுதி உள்ள விலைக்கான பணத்தை ஆண்டுத் தவணையில்

அளிக்கலாம். மூலதன வசதியைக் குறைவாகக் கொண்ட விவசாயிகள் இதனால் பயனடைவர்.

1947ஆம் ஆண்டில், மத்திய இயந்திரக்கலப்பை நிறுவனம் (Central Tractor Organisation) அமைக்கப் பெற்றது. அதைத் தொடர்ந்து மாநில அரசுகளும் அதுபோன்ற நிறுவனங்களைத் தொடங்கின. ஜம்மு-காஷ்மீர், சூரத்கார், போபால் ஆகிய இடங்களில் பெரிய இயந்திரமயமாக்கப்பட்ட பண்ணைகள் உள்ளன. இவை யாவற்றிலும் உற்பத்திதிறன் பெரிதும் உயர்ந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

பிற நாடுகளோடு ஒப்பிடும்போது வேளாண்மையை இயந்திரமயமாக்குவதில் நம் நாடு பின்தங்கியே இருக்கின்றது. ஜப்பானில் 1947ஆம் ஆண்டில் சுமார் 7,000 இயந்திரக் கலப்பைகள் மட்டுமே பயன்படுத்தப்பட்டன. அவற்றின் எண்ணிக்கை 1961ஆம் ஆண்டில் 10,00,000 ஆக அதிகரித்தது. ஜப்பானில் ஆறு ஹெக்டேர்களுக்கு ஓர் இயந்திரக்கலப்பை உள்ளது; ஆனால் இந்தியாவில் 7,300 ஹெக்டேர்களுக்கு ஓர் இயந்திரக் கலப்பை மட்டுமே இருக்கிறது. பின்வரும் அட்டவணை 1962ஆம் ஆண்டில் 1000 ஏக்கர்கள் சாகுபடி நிலத்திற்குச் சில நாடுகளில் எவ்வளவு இயந்திரக் கலப்பைகள் பயன்படுத்தப்படுகின்றன, என்பதை உணர்த்தும்:[1]

| | | |
|---|---|---|
| ஜப்பான் | — | 104.33 |
| மேற்கு ஜெர்மனி | — | 33 |
| டென்மார்க் | — | 17.5 |
| ஃபிரான்ஸ் | — | 9.56 |
| இங்கிலாந்து | — | 9.37 |
| அமெரிக்கா | — | 4.59 |
| இந்தியா | — | 0.03* |

மேற்கண்ட அட்டவணையின் மூலம் சாகுபடி நிலத்திற்கும் இயந்திரக் கலப்பைகளுக்குமான விகிதம் மிகக் குறைவாக இருப்பதை அறியலாம். பிற உலக நாடுகளில் வேளாண்மை இயந்திரங்கள் அதிக அளவில் பயன்படுத்தப்படுகின்றன. இவ்வகையில் நாம் மிகத் தீவிர நடவடிக்கையை எடுக்கவேண்டிய நிலையில் உள்ளோம். இதற்கு முன்னேறிய நாடுகளின் அடிச்சுவடுகளைப் பின்பற்றுவது நல்லது.

1 F.A.D., Production Year Book, 1964.

* புள்ளி விவரம் 1961-ல் எடுக்கப் பெற்றது.

மத்தியப் பிரதேசம், உத்தரப்பிரதேசம் ஆகிய மாநிலங்களின் தரிசு நிலங்களை விளை நிலங்களாக மாற்ற விரும்பிய இந்திய அரசு 'மத்திய இயந்திரக் கலப்பை நிறுவனத்தை' அமைத்தது. 'உலக வங்கி' (World Bank) அளித்த கடன் மூலம் அரசு 240 இயந்திரக் கலப்பைகளை வாங்கியது. மாநில அரசுகள் காடுகளை அழிக்கவும், தரிசு நிலங்களைச் சாகுபடி நிலங்களாக மாற்றவும், சாகுபடியாளருக்கு இயந்திரக் கலப்பைகளை வாடகைக்கு அளிக்கவும் இவ்வகை நிறுவனங்களை ஏற்படுத்தின.

சுதந்திரமடைந்த பின்னர், பெருநிலக்கிழார்களில் பலர் வேளாண்மை இயந்திரகளைப் பயன்படுத்தத் தொடங்கினர். 1949–50-ல் 3300 இயந்திரக் கலப்பைகளுக்கு அதிகமாக இறக்குமதி செய்யப்பட்டது. அதன் பின்னர், அந்நியச் செலாவணிக் கட்டுப்பாடுகள் தீவிரமாக்கப்பட்டன. நிலவுடைமைகளின்மீது உச்சவரம்பு விதிக்கப்படலாம் என்ற ஐயப்பாடும் தோன்றியது. இவற்றின் காரணமாக இயந்திரக் கலப்பைகளை வாங்கும் ஆர்வம் குன்றியது. ஆனால், அப்போதே ஒரிஸ்ஸாவில் இருந்த இரு நிறுவனங்களும் இயந்திரக் கலப்பைகளின் உற்பத்தியைத் தொடங்கிவிட்டன.

ஆண்டுகள் செல்லச் செல்ல இந்திய வேளாண்மையை இயந்திரமயமாக்குவதற்கான வாய்ப்புகள் பெருகிவருகின்றன. விவசாயிகள் இயந்திரங்களைப் பயன்படுத்துவதில் விருப்புக் கொண்டவர்களாகவும் இருக்கின்றனர். அவர்கள் இயந்திரமயமாக்குவதில் உள்ள கவர்ச்சியை உணர்ந்து விட்டார்கள். 'கால்நடைப் பொருளாதாரம்' இயந்திரப் பொருளாதாரமாக மாறும்போது சாகுபடியாளர்கள் உற்பத்தியைப் பெருக்கவேண்டுமென்ற ஊக்கத்தைப் பெறுகிறார்கள். வேளாண்மைத் தொழில் சீரமைப்புப்பெறுகின்றது. கிராம மக்கள் தீவிர எண்ணம் கொண்டவர்களாக மாறுகின்றனர். 'அதிக வருமானத்தைப் பெறுபவர்கள் மேலும் வருமானத்தைப் பெருக்க வேண்டுமென்ற எண்ணத்தைக் கொண்டவர்களாக இருப்பர்; குறைந்த வருமானத்தைப் பெறுபவர்கள் எதிலும் வெறுப்புற்று அக்குறைந்த வருமானத்தைப் பெறுவதிலும்கூட விருப்புற்று இருக்கமாட்டார்கள்' இவ்வடிப்படையில் ஆராயும்போது இயந்திரங்களைப் பயன்படுத்தும்போது உற்பத்தி பலமடங்கு அதிகரிக்கும். உற்பத்தி அதிகரிக்கும்போது மேலும் அதை உயர்த்த வேண்டுமென்ற ஊக்கத்தை உற்பத்தியாளர் பெறுவர்.

கணிசமான அளவுக்கு வேளாண்மையை இயந்திரமயமாக்குவதற்காக வசதிகள் பெருகியுள்ளன. சில குறிப்பிட்ட இடங்களில்

இயந்திரக் கலப்பைகளைப் பயன்படுத்துதால் எண்ணற்ற நன்மைகளைப் பெறமுடியும். புல் பூண்டுகளும், செடிகொடிகளும், மரம் மட்டைகளும், முள் புதர்களும் அமைந்துள்ள இடங்களில் மனித உழைப்பைக் காட்டிலும், இயந்திரங்களால் அதிகப் பயனைத் தர இயலும். மலைப் பிரதேசங்களிலும், உழைப்புப் பற்றுக்குறை அமைந்துள்ள இடங்களிலும், இயந்திரங்களைப் பயன்படுத்தலாம். தரிசு நிலங்களைச் சாகுபடி நிலங்களாக எளிதில் மாற்ற இயந்திரங்களே ஏற்றவை என்பதை 'மத்திய இயந்திரக் கலப்பை நிறுவனம்' பரிசோதனை முறையில் நிருபித்துக் காட்டியுள்ளது.

ராஜஸ்தான், விந்தியப் பிரதேசம் ஆகியவற்றில் சாகுபடியை விரிவாக்கம் செய்வதற்கு உழைப்பாளர்ப் பற்றுக்குறை தடையாக இருக்கின்றது. அப் பகுதிகளில் இயந்திரச் சாகுபடி முறையைக் கைக்கொள்வதன்மூலம் நன்மையடையலாம். எல்லா மாநிலங்களிலும் நீர்ப்பாசன வசதி, வடிகால்வசதி, மேடு பள்ளங்களைச் சமன் செய்யவது. வரப்புகளை அமைப்பது முதலியவற்றிற்கு இயந்திரங்கள் தேவைப்படுகின்றன. இவை யாவற்றையும் குறைந்த செலவிலும் செய்ய முடியும்.

வேளாண்மையில் இயந்திரங்கள் பல்வேறு வழிகளில் உதவுகின்றன. மின்சாரத்தால் இயக்குவிக்கப்படும் குழாய்க் கிணறுகள், நீர் இறைப்பதற்கான பம்பு செட்டுகள் முதலியவற்றை இதற்கு உதாரணமாகக் குறிப்பிடலாம்.

1947 ஆம் ஆண்டு இந்திய அரசு அமைத்த 'மத்திய இயந்திரக் கலப்பை நிறுவனம்' அவ்வகை நிறுவனங்களுக்குள் ஆசியாவிலேயே பெரியதாக அமைந்திருந்தது. இயந்திரங்கள் பரவலாக வேளாண்மையில் பயன்படுத்தபட்டமைக்கு இதுவே தொடக்கமாக அமைந்தது. தற்பொழுது வேளாண்மைக் கருவிகளை வாங்குவதற்கு மாநில அரசுகள் கடனளித்து வருகின்றன. நீண்ட காலத்தில் திருப்பித்தரத்தக்கதாக இருக்கின்றது.

உத்தரப்பிரதேசம், மத்தியப்பிரதேசம், ராஜஸ்தான், தமிழ் நாடு, மைசூர், பம்பாய், கேரளம், பீஹார், மேற்கு வங்காளம் ஆகிய மாநில அரசுகள் அரசின் பண்ணைகளில் இயந்திரமயமான சாகுபடி முறையைப் பின்பற்றி வருகின்றன. இச் சாகுபடி நிலங்களில் இயந்திரக் கலபபைகள் உழுவதற்காகப் பயன்படுத்தப் படுகின்றன. அறுவடைக்குப் பின்னர், வேறு சில உற்பத்தி நடவடிக்கைகளும் இயந்திரங்களால் நிறைவேற்றப்படுகின்றன. மத்திய அரசு மாநில அரசுகளுக்கு நிதி உதவி அளிக்கிறது இந்த நிதி

இயந்திரக் கலப்பைகளை வாங்குவதற்குக் கடனாக விவசாயி களுக்குத் தரப்படுகின்றது.

மாநில அரசுகளும் இயந்திரக் கலப்பைகளை வாங்கிப் பல பணி களை நிறைவேற்றுவதற்காக உபயோகிக்கின்றன. வேளாண்மையை முழுமையாக இயந்திரமயமாக்கும் முறை 1930 முதல் 1935 வரை அமெரிக்காவிலும், இங்கிலாந்திலும் கைக்கொள்ளப்பட்டது. அது பல நன்மைகளை அந்த நாடுகளுக்குத் தந்தது. இயந்திரக் கலப்பை களின் திறமையான பணிகளால் உற்பத்தி பல மடங்கு உயர் வடைந்தது.

உழுதல் முதலிய கடினமான சாகுபடி நடவடிக்கைகளைச் செய் வதற்கு மட்டுமே இயந்திரக் கலப்பைகள் உபயோகிக்கப்படு கின்றன. விதைத்தல், நாற்று நடுதல், களை பிடுங்குதல் முதலிய சாதாரண நடவடிக்கைகள் மனித உழைப்பாலும், கால்நடை உழைப்பாலும் செய்யப்படுகின்றன. குறைந்த நேரத்திற்கு மட்டுமே இயந்திரங்கள் பயன்படுத்தப்படுவதால், அவை நீண்ட காலத் திற்குச் சிக்கனமாக அமைவதில்லை. அமெரிக்காவில் செய்யப்பட்ட ஒரு கணக்கெடுப்பின்படி ஆண்டொன்றுக்கு 120 நாட்களோ அல்லது ஆண்டொன்றுக்கு 1 000 மணி நேரமோ இயந்திரக் கலப் பைகளைப் பயன்படுத்தாவிட்டால், அவற்றிற்கான தேய்மானச் செலவையும் பிறநடப்புச் செலவுகளையும்கூட ஈடு செய்ய இயலாது. ஒரே பண்ணையில் மாடுகளையும், இயந்திரக் கலப்பைகளையும் வைத் திருந்தால் இரண்டின் பயனையும் முழுமையாகப் பெற முடியாது. இரண்டில் ஏதாவது ஒன்றைப் பயன்படுத்துவதன் மூலமே சாகுபடியைச் சிக்கனமாகச் செய்யமுடியும்.

நம் நாட்டின் பல பகுதிகளிலும் இரு போகச் சாகுபடி முறை பின்பற்றப்படுகின்றது. ஒரு குறிப்பிட்ட பகுதியில் வெவ்வேறு வகைப்பட்ட பயிர்களும் சாகுபடி செய்யப்படுகின்றன. எனவே, ஓர் ஆண்டில் பல நாட்களுக்கு வேளாண்மை இயந்திரங்களை இங்குச் சிறப்பாகப் பயன்படுத்த இயலும். ஆயினும், வேளாண் மையை நாம் முழுமையாக இயந்திரமயமாக்காமையால் இந்த நன்மையைப் பெற முடியவில்லை.

'டெராய்' (Terai) பகுதியின் காடுகளை அழிக்க 'மத்திய இயந்திரக் கலப்பை நிறுவனம்' பெரிதும் உதவியது. 'மத்திய இயந்திரமயமாக்கப்பட்ட பண்ணை' (Central Mechanised Farm), ஜம்முவில் 1952 ஆம் ஆண்டில் ஏற்படுத்தப்பட்டது. அது புதிய நிலங்களைச் சாகுபடியின் கீழ்க் கொண்டுவந்தது, மாநிலம்

முழுவதும் தரமான தானிய விதைகள் பரப்பப்பட்டன. அகதிகளால் நெல், பருப்பு வகைகள், சணல், மாட்டுத் தீவனப் பயிர்கள் ஆகியன அங்கு உற்பத்தி செய்யப்படுகின்றன.

போபாலின் சுல்தான்பூரில் இரண்டாவது இயந்திரமயமாக்கப்பட்ட பண்ணை தோற்றுவிக்கப்பட்டுள்ளது. அகதிகள் மறுவாழ்விற்காக அப்பண்ணை 1955ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டது. தரிசு நிலங்கள் விளைநிலங்களாக மாற்றப்பட்டன. அங்கு அதிக அளவில் நெல்லும், பருப்பு வகைகளும் உற்பத்தியாகின்றன.

1956 ஆம் ஆண்டில் சூரத்காரில் அமைக்கப்பட்ட மூன்றாவது பண்ணை மிகப் பெரியது. அஃது ஒரே இடத்தில் 12.141 ஹெக்டேர் நிலத்தைக் கொண்டதாக இருக்கின்றது. இந்திய அரசு ராஜஸ்தானின் அரசரிடமிருந்து 15 ஆண்டுக் கால குத்தகைக்கு அந்த நிலத்தைப் பெற்றது. அதற்கான நிலவரி, வாரம், தண்ணீர்த் தீர்வை ஆகிய யாவற்றையும் மத்திய அரசே செலுத்துகின்றது. நீர்ப்பாசன வசதியை அளித்தால் அங்குச் சுமார் 18,300 ஏக்கர்கள் நிலத்தைச் சாகுபடியின் கீழ்க்கொண்டு வரலாம். 4,800 ஏக்கர்கள் நிலம் சுண்ணாம்புச் சாரம் கொண்டதாக இருக்கின்றது. ஜிப்சம் உப்பை இடுவதன்மூலம் இந்த நிலத்தை உற்பத்திக்கு ஏற்றதாக மாற்றலாம். ஆனால், அதற்கு வற்றாத நீர்ப்பாசன வசதி தேவை. சுமார் 7,500 ஏக்கர்கள் நிலம் உப்புச் சாரம் பெற்றதாக உள்ளது.

ஒரு கணக்கெடுப்பின்படி வரையப்பட்ட திட்டம் பண்ணையின் இறுதிநிலை பின்வருமாறு அமையவேண்டுமென்று குறிப்பிட்டது. சாகுபடிக்காக 22,670 ஏக்கர்களும், பழத் தோட்டங்களுக்காக (எலுமிச்சை, திராட்சை முதலியவை) 2,000 ஏக்கர்களும் (அவை மக்களுக்குப் பல பழச் செடிகளை அளிக்க வேண்டும்), கால்நடைப் பராமரிப்புத் திட்டங்களுக்காக 1,500 ஏக்கர்களும் (சுமார் 150 ஹரியானா, முர்ரா எருதுகளும், 200 பிமனேரி கால்நடைகளும், 10,000 கோழிகளும் தர உயர்வுக்காகப் பயன்படுத்தப்பட வேண்டும்), சாலைகள், கட்டடங்கள், நீர்ப்பாசனக் கால்வாய்கள் ஆகியவற்றிற்காக 4,500 ஏக்கர்களும் ஒதுக்கப்படுவது அவசியமாகும். பண்ணைச் சாலைகளின் ஓரங்களில் மரங்களை வளர்க்கவும் திட்டம் வகுக்கப்பட்டது.

இயந்திரமயமான இப் பண்ணைகளில் 1963-64ஆம் ஆண்டில் பயிர்களின் உற்பத்தி 17,700 டன்களாக இருந்தது. கோழி வளர்ப்பு, கால்நடைப் பராமரிப்பு, தோட்டக் கலை ஆகியவற்றின்

முன்னேற்றத்திற்கான திட்டங்கள் பரிசோதனை முறையில் கைக் கொள்ளப்பட்டுள்ளன.

இவற்றைப் போன்றே ராஜஸ்தான் கால்வாய்ப் பகுதியில் ஜேட்சர் (Jetsan) என்னுமிடத்தில் 1964-65ஆம் ஆண்டில் பிறதொரு இயந்திரமயமாக்கப்பட்ட பண்ணை தோற்றுவிக்கப் பட்டது. நான்காவது, ஐந்தாவது ஐந்தாண்டுத் திட்டங்களில் தனியார் பண்ணைகளில் இயந்திரங்களைப் பயன்படுத்த ஊக்கம் அளிக்கப்படும்.

1951 ஆம் ஆண்டு முதலே இந்திய வேளாண்மையில் பயன் படுத்தப்படுகின்ற இயந்திரங்களின் எண்ணிக்கை அதிகரித்து வருகின்றது. அதைப் பின்வரும் புள்ளி விவரங்கள் உணர்த்தும்.

**இந்தியாவில் வேளாண்மை இயந்திரங்களின் எண்ணிக்கை (ஆயிரத்தில்)**

| இயந்திரங்கள் | | 1951 | 1956 | 1961 |
|---|---|---|---|---|
| வேளாண்மைப் பணிகளுக்காக மட்டும் பயன்படுத்தப்படும் இயந்திரக் கலப்பைகள் | — | [redacted] | 21 | 31 |
| எண்ணெய் எஞ்சின்கள் (நீர்ப்பாசன வசதிக்கான பம்பு செட்டுகளோடு) | — | 82 | 123 | 230 |
| மின்சார பம்பு செட்டுகள் (நீர்ப் பாசன வசதிகளுக்காக) | — | [redacted] | 47 | 160 |
| கரும்பு பிழியும் இயந்திரங்கள் (இயக்கச் சக்தியால் இயங்கு பவை) | — | 21 | 22 | 23 |

இன்று இந்தியாவில் 45 000 இயந்திரக் கலப்பைகளுக்கும் அதிகமாகப் பயன்படுத்தப்படுகின்றன. கூட்டுறவுப் பண்ணைகள், அரசுப் பண்ணைகள், பெரிய எஸ்டேட்டுகள் ஆகியவற்றிலேயே இயந்திரங்கள் பெருமளவில் உபயோகிக்கப்படுகின்றன. சிறிய சொந்தப் பண்ணைகளில் அவை அதிகமாகப் பயன்படுத்தப் படுவதில்லை. இயந்திரக் கலப்பைகளின் எண்ணிக்கையும் அவற்றில் குறைவாகவே உள்ளது. இங்கிலாந்தில் 45 ஹெக்டேர்கள் சாகுபடி நிலத்திற்கு ஓர் இயந்திரக் கலப்பை இருக்கிறது; அமெரிக்காவில் 94 ஹெக்டேர்களுக்கு ஒரு இயந்திரக் கலப்பையும், சோவியத் ரஷ்யாவில் 592 ஹெக்டேர்களுக்கு ஓர் இயந்திரக் கலப்பையும், நியூசிலாந்தில் 178 ஹெக்டேர்களுக்கு ஓர் இயந்திரக் கலப்பையும், 20.6 ஹெக்டேர்களுக்கு ஆஸ்திரேலியாவில் ஓர் இயந்திரக்

கலப்பையும், ஜப்பானில் 8,666 ஹெக்டேர்களுக்கு ஒன்றும், இந்தியாவில் 9,567 ஹெக்டேர்கள் சாகுபடி நிலத்திற்கு ஓர் இயந்திரக் கலப்பையும் உள்ளன.[1]

400 ஏக்கர்களுக்கு ஓர் இயந்திரக் கலப்பை என்ற அடிப்படையில் ஆராயும்போது, இந்தியாவின் தரிசு நிலங்களைச் சாகுபடி நிலங்களாக மாற்றுவதற்கு மட்டும் 2.4 இலட்சம் இயந்திரக் கலப்பைகள் தேவைப்படும் என்பதை அறியலாம். இதைத் தவிர நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்க எண்ணெய் என்ஜின்களும், பம்பு செட்டுகளும் அதிக எண்ணிக்கையில் தேவைப்படுகின்றன. தற்பொழுது சுமார் 350 தொழில் நிறுவனங்கள் வேளாண்மைக் கருவிகளை உற்பத்தி செய்வதில் ஈடுபட்டுள்ளன. வேளாண்மை இயந்திரங்களும், பாகங்களும் இவற்றால், உற்பத்தி செய்யப்படுகின்றன, சாகுபடியில் உற்பத்தி நுணுக்கங்கள்வரை இவை உதவுகின்றன.

பண்ணைகளில் இயந்திரங்களைப் புகுத்தும்போது நடைமுறைச் சிக்கல்கள் தோன்றுகின்றன. அவற்றில், சிலவற்றிற்குத் தீர்வு காண முடியும். விவசாயிகள் தனித்தனியாக வேளாண்மை இயந்திரங்களை வாங்க விரும்பினால் அரசு கடன்களை அளிக்க வேண்டும்.

இரண்டாவதாக, பல மாநிலங்களிலும் இணைப்புப் பண்ணைச் சங்கங்கள் இயந்திரங்களை வாடகைக்கு அளிக்கும் கூட்டுறவுச் சங்கங்களாகப் பயன்படுத்தலாம்.

மூன்றாவதாக, நாடு முழுவதும் பல இடங்களில் வேளாண்மை இயந்திரங்களைப் பழுது பார்ப்பதற்கான நிலையங்கள் அமைக்கப்படவேண்டும். பழுது பார்ப்பதற்கான கட்டணம் குறைவாக இருப்பது அவசியம். சோவியத் ரஷ்யாவில் இருப்பதைப் போல இவற்றை அமைக்கலாம். இதற்கான நடவடிக்கைகளை அரசு எடுப்பது நல்லது.

நான்காவதாக, குறைந்த விலையில் சிறிய இயந்திரங்களை இந்திய வேளாண்மைக்கு ஏற்ப உற்பத்தி செய்வது இன்றியமையாதது. இந்த நிலையால் வேளாண்மையில் வேலையின்மை தோன்றாது. இவ்வகை இயந்திரங்கள் உழைப்பாளர்களுக்கு உதவியாக அமையுமேயன்றி அவர்களை வேளாண்மையினின்றும்

[1] F. A. O., Year Book, 1963.

வெளியேற்ற மாட்டார். மேலும், விவசாயிகள் திறமையாகப் பணியாற்றவும் உதவுகின்றன.

இது சம்பந்தமாக 'உணவு வேளாண்மை அமைப்பு' (Food and Agriculture Orgainsation) குறிப்பிட்டதாவது, 'வேளாண்மையை இயந்திரமயமாக்குவதை அவசரப்பட்டு விரைவாகச் செய்யக் கூடாது; பேரளவிலும் மேற் கொள்வது தவறு. இயந்திர மயமாக்குபவர்களின் திறனுக்கேற்ப படிப்படியாக இயந்திரங்களைப் புகுத்தும்போதுதான் வெற்றியைப் பெறமுடியும் என்பது.'

தனியான ஆய்வுகளைச் செய்வது எவ்வழிகளில் இயந்திரங்களைப் பயன்படுத்தலாம் என்பதை அறியவேண்டும். கீழ்க்காணும் முறைகளில் இயந்திரங்களைப் பயன்படுத்துவது நன்மை பயக்கும்.

'1. பிற முறைகளைக் காட்டிலும் இயந்திரங்களைப் பயன் படுத்தினால் உணவு உற்பத்தி பல மடங்கு பெருகும் என்ற நிலை இருந்தால் இயந்திரமயமாக்கலாம். சாகுபடியாளர்களுக்கு இயந்திரமயமாக்குவதற்கான திறனும், விருப்பமும் அமைந்திருக்க வேண்டும். அரசின் உதவித் தொகையைக் கணிசமாகப் பெருமலேயே இயந்திரங்களையும், கருவிகளையும் வாங்கும் திறனை அவர்கள் பெற்றிருத்தல் நலம்.

2. கிராமத்திற்குப் பொதுவாக இருக்கக்கூடிய நிலங்களிலும் புறம்போக்கு நிலங்களிலும் இயந்திரங்களின் பயனைப் பெறலாம்

3. புதிதாக நில முன்னேற்றத்தைச் செய்யும்போது நிலத்தைப் பண்படுத்தி ஆழமாக உழுவதற்கு இயந்திரங்களைப் பயன்படுத்துவது எளிதாக அமையும். அயல் நாட்டுச் செலாவணிப் பற்றுக்குறை அமைந்திருந்தாலும் இவ்வகை இயந்திரங்களை உபயோகிப்பதின் மூலம் சிறப்பான நன்மைகளைப் பெறலாம்.'

தற்பொழுது இந்திய வேளாண்மையில் அதிக அளவு முதலீடு செய்யப்படவில்லை. தற்பொழுதுள்ள சூழ்நிலையில் வேளாண்மையை முழுமையாக இயந்திரமயமாக்க முடியாது என்று எண்ணவும் தோன்கிறது. பெரிய பண்ணைகளை அமைப்பதிலும் எதிர்பார்த்த அளவிற்கு வெற்றி கிட்டவில்லை. கட்டாயப் படுத்துவதன் மூலமே சராசரி சாகுபடி நில அளவைப் பெருக்க முடியும். அரசு பின்வரும் வழிகளில் படிப்படியாக வேளாண்[redacted] இயந்திரமயமாக்க வேண்டும்.

1 Report [redacted] Indias Food Crisis and Steps [redacted] Meet at, p.155.

1. அரசின் பண்ணைகளில் முழுமையான வகையில் இயந்திரங்களைப் பயன்படுத்துவது அவசியம். மனித உழைப்பு இயந்திரங்களை இயக்கமட்டுமே பயன்படுத்துதல்வேண்டும்.

2. புதிதாகச் சாகுபடிக்கு எடுத்துக் கொள்ளப்படும் நிலங்களில் இயந்திரங்களைப் புகுத்துவது நன்மை தரும். இயந்திரங்களைப் பயன்படுத்தாமல் தரிசு நிலங்களை விளை நிலங்களாக மாற்றுவது கடினம்.

3. கூட்டுறவு இணைப்புப் பண்ணைச் சங்கங்கள் அமைக்கப் பட்டுள்ள இடங்களில் இயந்திரங்களின் பயனைப் பெறுவது தேவையானது. 'கூட்டுறவுப் பண்ணைகளில் சுலபமாக இயந்திரச் சக்தியைப் பெற வழிகள் உள்ளன.

4. பழைய கூட்டுறவுப் பண்ணைகளிலும், இயந்திரமயமாக்கு வதற்கு ஏற்ற அளவில் உள்ள நிலங்களிலும் இயந்திர உற்பத்தி முறையைக் கைக்கொள்ளலாம்.

5. பெரிய விவசாயிகளை இயந்திரங்களைப் பயன்படுத்துமாறு தூண்டுதல் வேண்டும். 'சிறப்பான கருவிகளை அதிகமாகப் பயன் படுத்தும்போது ஓர் ஏக்கருக்கான உற்பத்தித் திறனும், தனி ஒருவருக்கான உற்பத்தித் திறனும் உயர்கின்றன. இதனால் விவசாயிகளின் வாழ்க்கைத் தரமும் அதிகரிக்கும்.[1]

**நிறைவுரை**

இந்தியாவில் வேளாண்மையை இயந்திரமயமாக்கும் நிலை குறைந்த வேகத்திலேயே பொருந்தியுள்ளது என்பது முன்னரேயே ஆராயப்பட்டது. அதை விரைந்த வேகம் கொள்ளுமாறு செய்வது அவசியம். வேளாண்மையில் இயந்திரங்களைப் புகுத்துவதில் வெற்றி காணப் பின்வரும் வழிமுறைகள் பரிந்துரைக்கப்பட்டுள்ளன.

1. தற்போதுள்ள விவசாயிகளின் நிலவுடைமைகளின் அளவை அதிகரிக்க கூட்டுறவு இணைப்புப் பண்ணைகளைத் தொடங்க வேண்டும். அதற்கான முயற்சிகளை அரசு எடுத்துக் கூட்டுறவுப் பண்ணைகளை ஊக்குவிப்பது இன்றியமையாதது. இவ்வகையில் அரசு நீண்ட காலமாகவே தீவிர நடவடிக்கைகளை எடுத்து வருகின்றது. இயந்திரமயமான சாகு

[1] F. A. O. Rome, 'Progress and Economic Problems in Farm Mechanisation,' 1952. p. 5.

படியை மேற்கொள்ளத் தயாராக இருக்கும் விவசாயிகளுக்கு ஓரளவாவது உச்சவரம்பினின்றும் விலக்களிக்கலாம். அவர்களுக்குச் சில வகைப்பட்ட சலுகைகளை அரசு அளித்தல் நன்மை தரும்.

2. சரியான நிறுவனங்களின் மூலம் அரசு இவ்வகைப் பணிகளுக்குக் கடன் வசதிகளை அளிக்கவேண்டும். கூட்டுறவுப் பண்ணைச் சங்கங்களையே இதற்கு ஏற்றவைகளாகக் கொள்ளலாம். பெரிய விவசாயிகள் நகர்ப்புறங்களில் வீடு கட்டுதல் முதலியவற்றில் முதலீடு செய்வதைத் தவிர்த்தல் நல்லது. அதிக வருமானத்தைப் பெறுகின்ற பெருநிலக்கிழார்கள் இயந்திரக் கலப்பைகளையும் பிற வேளாண்மைக் கருவிகளையும் வாங்குமாறு செய்ய வேண்டும்.

3. உள்நாட்டின் இயந்திரக் கலப்பை உற்பத்தித் தொழிலை ஊக்குவித்தல் வேண்டற்பாலது. 10 முதல் 20 குதிரைச் சக்தியைக் கொண்ட இயந்திரக் கலப்பைகளை உற்பத்தி செய்வது நன்மை பயக்கும். ஒரு வளரும் நாடு தொடக்க நிலையில் அந்நியச் செலாவணியைப் பயன்படுத்தி வேளாண்மை இயந்திரங்களை இறக்குமதி செய்யலாம். அந் நிலையில் பெரும்பாலும் வேளாண்மைப் பொருள்களே ஏற்றுமதி செய்யப்படுகின்றன. நீண்ட காலத்தில் இயந்திரங்களை உற்பத்தி செய்யும் பொறியியல் தொழிலை வளர்க்க வேண்டும். எளிய, விலை குறைவான வேளாண்மைக் கருவிகளை உற்பத்தி செய்வது நலம். நம் கிராமப் புறங்களுக்கு அவையே ஏற்றவை. இந்தியச் சூழ்நிலைகளுக்கு அவையே பொருந்துவன. விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற இயந்திர உற்பத்தி முறை தேவைப்படுகிறது. அரசு உதவித் தொகைகளை அளித்து வேளாண்மை இயந்திரங்களின் உற்பத்திச் செலவைக் குறைக்கவேண்டும். அவை குறைந்த விலையில் விற்கப்பட்டால் தான் அவற்றைப் பலரும் வாங்க முன் வருவார்கள்.

4. எவ்வளவு விரைவாக முடியுமோ அவ்வளவு விரைவாகக் கிராமங்களை மின்சாரமயமாக்க வேண்டும். குறைந்த செலவில் விவசாயிகள் மின்சார இயக்கச் சக்தியைப் பெறுமாறு செய்வது நல்லது. சமீப காலமாக டீசல் எண்ணெயின் விலை அதிகரித்து வருகிறது. அவ் விலையில் சிறிது தள்ளுபடியைச் செய்யலாம். ஏனெனில், நம் நாட்டின் பல பகுதிகளில் மின்சார வசதி இருக்கவில்லை. அப் பகுதிகளில் பம்புசெட்டுகளை இயக்கவும், இயந்திரக் கலப்பைகளுக்கும் டீசல் எண்ணெய் மிகுதியாகத் தேவைப்படுகிறது. மின் வசதி அளிக்கப்பட்டுவரும் கிராமங்-

களில் டீசல் எண்ணெய்க்குப் பதிலாக மின்சாரம் பயன்படுத்தப் பட்டு வருகின்றது.

5. வேளாண்மைப் பொருள்களின் ஓர் அலகிற்கான உற்பத்திச் செலவைக் குறைக்க, வாங்கப்படும் எல்லா இயந்திரங்களும் முழுமையாகப் பயன்படுத்தப்படுகின்றனவா என்பதைக் கவனமாக அறிய வேண்டும். சொந்தமாகவே இயந்திரங்களை வாங்குகின்ற நிலவுடைமையாளர்கள் அவற்றைத் தேவையில்லாதபோது மற்றவர்களுக்கு வாடகைக்கு விடலாம். இவ் வழியில் முதலீட்டை அதிக அளவில் தேவையாகக் கொண்ட வேளாண்மை இயந்திரங்களை முழுமையாகவும், இலாபகரமாகவும் பயன்படுத்த முடியும். இயந்திரங்களைப் பயன்படுத்தாமல் வைத்திருக்கும் போது எந்தவிதமான நன்மையையும் அடையமுடியாது.

6. நாட்டின் ஒவ்வொரு தாலுக்காவிலும் 'பண்ணைப் பயிற்சி மையங்களை' (Farm Trainning Centres) ஏற்படுத்த வேண்டும். இவற்றைத் திறம்பட நடத்த வேளாண்மைப் பட்டதாரிகளைத் திரட்டிப் பயன்படுத்தலாம். இயந்திரங்களைப் பழுது பார்ப்பதற் கான வசதிகளும் பெருக்கப்படவேண்டும். இயந்திரப் பாகங்களை எளிதாகக் கிடைக்குமாறு செய்வது இன்றியமையாதது.

7. வேளாண்மை இயந்திரங்களைக் குறைந்த கட்டணத்தில் வாடகைக்கு அளிக்கும் தனியார் நிறுவனங்களை அனுமதிக்கலாம். மத்திய உணவு, வேளாண்மை அமைச்சர் திரு. ஜகஜீவன்ராம் தொழில் நிறுவனங்கள் பலவும் இவ் வகை நடவடிக்கைகளில் ஈடு படவேண்டுமென்று சமீபத்தில் குறிப்பிட்டார். இந்த நிலை குறைந்த வருமானத்தைப் பெறும் சிறு விவசாயிகளுக்கு நன்மை தரும். குறைந்த செலவில் சாகுபடி நடவடிக்கைகளைச் செய்ய இந்த முறை பெரிதும் உதவும்.

8. இந்திய வேளாண்மையை இயந்திரமயமாக்குவதால் ஏற்படக் கூடிய விளைவுகளைப்பற்றித் தொடர்ந்து ஆராய்ச்சி செய்வது அவசியமாகும். இயந்திரங்களைப் பயன்படுத்துவதற் கான வாய்ப்புகள் எவ்வாறு உள்ளன என்பதை ஆய்வதும் இன்றி யமையாதது. வேளாண்மைப் பொறியாளர்கள் நம் நாட்டில் குறைவாகவே உள்ளனர். ஆகவே, அவர்களுடைய எண்ணிக் கையைப் பெருக்குவதும் அவசியமாகின்றது.

9. ஃபிரான்ஸ், இங்கிலாந்து ஆகிய நாடுகளில் இருப்பதைப் போன்ற 'வேளாண்மைக் கருவிகளின் தேசிய நிறுவனம்'

(National Institute of Agricultural Implements) இந்தியாவிலும் அமைக்கப்படவேண்டும்.

10. மத்திய அரசு, மாநில அரசுகள் ஆகியவற்றின் நிறுவனங்களுக்கிடையே சுமுக உறவு நிலவுதல் அவசியமாகின்றது. குழப்பமற்ற நிலை அவற்றிடையே திகழவேண்டும். காலதாமதம் ஏற்படுவதைத் தடுத்தல் இன்றியமையாதது. வேளாண்மையோடு பிறவற்றிலும் மத்திய-மாநில அரசுகளின் நல்லுறவு நன்மை தரும்.

11. மேம்பாடான உற்பத்தி முறைகளை நாடு முழுவதும் பரப்புவதற்கு விளம்பரங்கள் தேவை. அவற்றின் நன்மைகளை விவசாயிகளே உணருமாறு செய்தல் வேண்டும். திரைப்படம், வானொலி முதலியவற்றால் விவசாயிகளுக்கு அவற்றை அறிவுறுத்தலாம். கிராம மக்களை எழுதப்படிக்கத் தெரிந்தவர்களாக மாற்றுவது நன்மை பயக்கும். அவர்களுடைய அறிவு வளர்ச்சியைப் பொறுத்தே வேளாண்மை வளர்ச்சி அமையும்.

12. வேளாண்மை இயந்திரங்களை விற்பனை செய்பவர்களும் முக்கிய நிலையைக் கொண்டிருக்கிறார்கள். உற்பத்தியாளர்கள் தேவைக்கேற்ப இந்தியக் கருவிகளை உற்பத்தி செய்து அளிக்க வேண்டும். ஆனால், தேவை மாற்றத்தைக் கணிப்பது கடினமானதே. தொழில் அமைப்பாளர்கள் நம்முடைய சாகுபடி நிலங்களுக்குப் பொருத்தமான இயந்திரங்களை உற்பத்தி செய்வதற்கு முயலவேண்டும். இவ்வகையில், ஆராய்ச்சிகளை மேற்கொள்வது நல்லது. விற்பனையாளர்கள் இயந்திரங்களை விற்ற பின்னர், தொடர்ந்து பழுதுபார்க்கும் பணிகளையும் அளித்து வருவது அவசியம். போதுமான எண்ணிக்கையில் உற்பத்தியாளர்களும், பழுதுபார்ப்பவர்களும் இருத்தல் வேண்டும். தேவையான காலங்களில் இயந்திரப் பாகங்கள் கிடைக்கப்படவேண்டும். விற்பனையாளர்களின் பணி முக்கியமானது. ஏனெனில், இயந்திரகளைப் பழுதுபார்த்துத் தொடர்ந்து அவை உற்பத்தி நடவடிக்கைகளில் ஈடுபடுமாறு செய்பவர்கள் அவர்களேயாவர்.

மேலை நாடுகளில் இயந்திரமயமாக்கப்பட்ட வேளாண்மைச் செறிவுமுறைச் சாகுபடியோடு தொடர்பு கொண்டிருக்கின்றது. பல தானியங்களை உற்பத்தி செய்யக்கூடிய பண்ணைகள் பெரிய இயந்திரங்களைப் பயன்படுத்துகின்றன. பல காரணங்களால் அந்த நாடுகளில் இயந்திரங்கள் புகுத்தப்பட்டன. கனடா, ஆஸ்திரேலியா, அர்ஜென்டினா, (மேற்கு) அமெரிக்கா ஆகிய நாடுகளில் ஏராளமான நிலம் எளிதில் [illegible] மனித உழைப்பைக்



கொண்டு அந்த நாடுகளில் சிக்கனமாகச் சாகுபடியைச் செய்ய இயலாது.[1] உழைப்புப் பற்றுக்குறையும் இருந்தமையால் உற்பத்தி நடவடிக்கைகள் இயந்திரங்களால் செய்யப்பெற்றன. அந்த நாடுகளின் சில பகுதிகளில் மழைபொழிவும் போதுமானதாக இல்லை. எனவே, நீர்ப்பாசன வசதிகளைப் பெறவும் இயந்திரச் சாதனங்கள் தேவைப்பட்டன. இன்று அங்கெல்லாம் மனிதக் கரங்களே படாமல் எல்லாச் சாகுபடி நடவடிக்கைகளும் செய்யப் படுகின்றன.

இந்தியாவில் இன்றும் சாகுபடிக்கு ஏற்ற நிலங்கள் வீணே கிடக்கின்றன. தவிர, வசதி குறைந்த சிறு விவசாயிகளும். குத்தகையாளர்களும் பல போகச் சாகுபடி முறையைக் கைக் கொள்ள முடிவதில்லை. அவர்களின் வசதிக் குறைவுக்குத் தாழ்ந்த உற்பத்தியே காரணம். முன்னேற்றமான தொழில் நுணுக்கம் வாய்ந்த கருவிகளைப் பயன்படுத்தினால் உற்பத்திச் செலவைக் குறைத்து ஆக்கத்தின் அளவை அதிகரிக்கலாம். நல் வாழ்வையும் அவர்கள் பெறலாம்.

சாலைகள் அமைத்தல், நீர்ப்பாசனக் கால்வாய்கள் வெட்டுதல், வடிகால்களை ஏற்படுத்துதல், தரிசு நிலங்களைச் சாகுபடி நிலங் களாக மாற்றுதல் முதலியவற்றிலும் இயந்திரங்களின் பயனை இலாபகரமாகப் பெறலாம். இயந்திரக் கலப்பையின் பாகங்கள் சிலவற்றை மாற்றி இப் பணிகளில் பலவற்றைச் செய்து விடலாம். தரிசு நிலங்களைப் பண்படுத்தி முன்னேற்றத்தைப் பெற பெரிய இயந்திரக் கலப்பைகள் தேவைப்படுகின்றன. சாகுபடியில் அமைந் திருக்கும் நிலங்களுக்கு எளிய, சிறிய இயந்திரக் கலப்பைகளே போதுமானது. இது குறித்து லாமர்டைன், வாரினர் ஆகிய இருவரும் கூறுவதாவது, 'முன்னேற்றத்தின் முதல் படியில் பெரிய அளவு வேளாண்மை இயந்திரங்கள் தேவைப்படுகின்றன; இரண்டாவது படியை அடையும்போது சிறிய மனிதர்களுக்குச் சிறிய இயந்திரங்களைக் கண்டுபிடிப்பது அவசியமாகின்றது என்பதாகும்.'[2]

நில முன்னேற்றப் பணிகளுக்கும், பேரளவுப் பண்ணைகளை உழுவதற்கும் இயந்திரக் கலப்பை மிகவும் பொருத்தமானது. நீர் இறைக்கவும், குழாய்களைப் பூமியில் இறக்கித் துளையிடவும் நிலையான எண்ணெய் என்ஜின் போதுமானதாக இருக்கின்றது.

[1] Encyclopaedia of Social Sciences, Vol. I, p. 1556.

[2] Lamartine and Wariner, 'Food and Farming in Post-War Europe,' p. 75.

'உற்பத்தி நடவடிக்கைகளில் முன்னேற்றம் ஏற்படுத்தப்படா விட்டால் வேளாண்மை திறமைக் குறைவானதாகவே இருக்கும். தானிய உற்பத்தியில் தோல்வியும், பஞ்சமும் தீர்க்கப்படாத பல சிக்கல்களை உருவாக்குகின்றன. இயந்திரமயமாக்குவதன் மூலம் தொழில் துறையோடு இணைக்கப்படும்போது வேளாண்மை திறனடைகின்றது. தனி ஒருவருக்கான உற்பத்தித்திறன் வியத்தகு அளவிற்கு உயர்கின்றது.[1]

இந்தியாவில் வாய்ப்புள்ள பகுதிகளில் முதலில் இயந்திரங்களைப் பயன்படுத்தி, அவற்றின் விளைவுகளை அறியவேண்டும். அனுபவ அடிப்படையில் அதைப் பிற இடங்களுக்கும் விரிவுபடுத்த வேண்டும். விவசாயிகளுக்குக் குறைந்த வட்டியில் கடன் அளித்துத் தனியாகவோ, கூட்டாகவோ இயந்திரங்களை வாங்குவதற்கு ஊக்கம் தருவது அவசியம். வேலையின்மையைத் தோற்றுவிக்காத வகையில் இயந்திரங்களைப் பயன்படுத்தலாம். எல்லா இடங்களையும் இயந்திரமயமாக்குவது இயலாது. வாய்ப்புகளும், வசதிகளும் உள்ள இடங்களில் வேளாண்மையை இயந்திரமயமாக்குவதற்கான நடவடிக்கைளை எடுக்கலாம்.

1. E.W. Zimmermann, 'World Resources and World Industries,' 1956, p. 166.

# 17. இந்திய தேசியப் பொருளாதாரத்தில் வேளாண்மையும் அதன் சிக்கல்களும்

## (Agriculture in the Indian National) Economy and its Problems)

### வேளாண்மையின் முக்கியத்துவம்

இந்தியாவில் வேளாண்மை முக்கியத் தொழிலாக இருக்கின்றது. அது மக்களுக்கு அவசியமான உணவுப் பொருள்களை அளிப்பதோடு தொழில் துறைக்குத் தேவையான கச்சாப் பொருள்களையும் அளிக்கின்றது. உலகில் மூன்றில் இரு பங்கினர் நேரடியாகவோ, மறைமுகமாகவோ தங்களுடைய வாழ்க்கையை நடத்துவதற்காக வேளாண்மையைச் சார்ந்துள்ளனர். கால் நடைப் பராமரிப்பும் வேளாண்மைத் துறையைச் சேர்ந்ததாக இருக்கின்றது. இந்தியப் பொருளாதாரத்தில் வேளாண்மை முதுகெலும்பைப் போன்றது. கடந்த இருபது ஆண்டுகளுக்கு மேலாக நாட்டைத் தொழில் மயமாக்க நடவடிக்கைகள் எடுக்கப் பட்டன. எனினும், இன்று வேளாண்மையே முக்கிய நிலையைக் கொண்டிருக்கின்றது. நம் நாட்டில் வேளாண்மையை நம்பிச் சுமார் 70 சதவீத மக்கள் வாழ்கின்றனர்.

வேளாண்மை ஒரு தொழிலாக இருப்பதோடு வாழ்க்கை முறையாகவும் அமைந்துள்ளது. மொத்த இந்திய மக்கள் தொகையில் சுமார் 80 சதவீதத்தினர் கிராமப் புறங்களில் வசிப்பதிலிருந்தே வேளாண்மையின் முக்கியத்துவத்தை உணரலாம். கிராமங்களில் நிலவுடைமைகளைக் கொண்டிருக்கும் நகர மக்கள் சிலரும் வேளாண்மைமூலம் வருமானத்தைப் பெறுகின்றனர்.

பொருளாதார முன்னேற்றத்தைப் பெற தொழில் துறையை வளர்க்க வேண்டும். வேளாண்மை முன்னேற்றமின்றி தொழில் துறையை வளர்க்க இயலாது. இந்திய வேளாண்மை குறைந்த வளர்ச்சி வீதத்தைக் கொண்டிருப்பதால்தான் விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற முடியவில்லை; தொழில் துறையும் வளர்ச்சி குன்றிய நிலையில் இருக்கின்றது. வேளாண்மை, தொழில் ஆகிய இரண்டிலும் சரிசம வளர்ச்சி ஏற்பட வேண்டும்.

வளரும் பொருளாதாரங்களில் வேளாண்மை உற்பத்தியைப் பெருக்குவது மிக முக்கியமானதாக உள்ளது. இப் பொருளாதாரங்களில் வேளாண்மை உற்பத்தியைப் பெருக்காமல் பொருளாதார முன்னேற்றத்தைப் பெற முடியாது. அதிக மக்கள் தொகையைக் கொண்ட நாடுகளில் வேளாண்மைப் பொருள்களுக்கான தேவை மிகுதியாக இருக்கின்றது. மக்களின் வருமானம் அதிகரிக்கும் போது உணவுப் பொருட்களுக்கான தேவை நெகிழ்வுடையதாக மாறுகின்றது. பொருளாதார முன்னேற்ற நிலைகளில் கச்சாப் பொருள்களும் அதிகமாகத் தேவைப்படுகின்றன. முன்னேறும் நாடுகளில் ஏற்றுமதியின் அளவு குறைவானது. எனவே, குறைந்த அந்நியச் செலாவணி வசதியையே அவை கொண்டுள்ளன. இதன் காரணமாக அவை குறைவான அளவிலேயே மூலதனப் பொருள்களை இறக்குமதி செய்ய முடிகின்றது; தொழில் நுட்ப உற்பத்தி முறைகளும் விரைவாகப் பரவுவதில்லை. சில பற்றுக்குறை கச்சாப் பொருள்களையும் போதுமான அளவிற்கு இறக்குமதி செய்ய முடிவதில்லை.

குறைந்த அளவில் பெறப்படுகின்ற அந்நியச் செலாவணி வேளாண்மைப் பொருள்களை இறக்குமதி செய்வதில் வீணடிக்கப் படுகிறது. ஏற்றுமதி உபரியைப் பெருக்க அந்நியச் செலாவணி பயன்படுத்தப்பட வேண்டுமே தவிர நுகர்வுக்காகப் பயன் படுத்தப்படக்கூடாது. இவற்றின் காரணமாக வேளாண்மை உற்பத்தியைப் பெருக்குவது இன்றியமையாதது என்று அறிவுறுத் தப்படுகின்றது. உறுதித் தன்மையோடு பொருளாதார முன் னேற்றத்தைப் பெற இதுவே சிறந்த வழியாகும்.

இந்தியத் தேசிய வருமானத்தில் சுமார் 50 சதவீதம் வேளாண் மையின் மூலம் பெறப்படுகின்றது. ஏற்றுமதிப் பொருள்களில் 50 சதவீதம் வேளாண்மைப் பொருள்களேயாகும். முன்னேற் றத்தின் தொடக்க நிலைகளில் வேளாண்மை உற்பத்தியைப் பெருக்கவேண்டும். அதன் பின்னர், வேளாண்மையைச் சார்ந்த தொழில்களின் உற்பத்தியை அதிகரிப்பது எளிதாகும்.

வேளாண்மை உற்பத்தியைப் பெருக்க கிராமப் பகுதிகளில் 'பொருளாதார, சமுதாய மேலமைப்புகளை' (Economic and Social Over-heads) வளர்க்க வேண்டும். உற்பத்தியை அதிகரிக்க விஞ்ஞான, தொழில் நுட்பக் கண்டு பிடிப்புகள், புதிய ரக விதைகள், உரங்கள், பயிர்ப் பாதுகாப்பு, நீர்ப்பாசன வசதிகள் ஆகியனவும் உதவுகின்றன.

## தொழில் அமைப்பு

பல நூற்றுண்டுகளாக இந்தியாவில் கிராமப் பொருளாதாரமே அதிகச் செல்வாக்கைக் கொண்டிருக்கின்றது. வேளாண்மை, கால்நடைப் பராமரிப்பு, வாணிபம், குடிசைத் தொழில்கள் ஆகியவை கிராமப் பொருளாதாரத்தின் தூண்களைப் போன்றவையாகும். இந்த நான்கு துறைகளின் முன்னேற்றத்தையும் கூட்டாகப் பெறவேண்டும். இவ்வகைத் தொழில்களில் ஈடுபட்டிருப்பவர்களுக்கிடையே போட்டி நிலவக் கூடாது; சுரண்டல்கள் அமைந்திருக்கக் கூடாது. இந்திய வேளாண்மையில் ஈடுபட்டுள்ளவர்கள் மொத்த மக்கள் தொகையில் மூன்றில் இரு பங்கினராவர். வேளாண்மையில் ஈடுபட்டிருந்த மக்கள் தொகையின் சதவீதம் பல ஆண்டுகளிலும் பின்வருமாறு அமைந்திருந்தது: அவை, 1872—65%; 1891—61.06%; 1901—66.50%; 1911—72.2%; 1921—72.98%; 1931—6,%; 1941—75%; 1951—70% ஆகும்.[1]

இந்தியாவில் 1691-ல் சுமார் 70 சதவீத மக்கள் தொகை வேளாண்மையைச் சார்ந்திருந்தது, ஜப்பானில் 50 சதவீத மக்களும், இங்கிலாந்தில் 5 சதவீதத்தினரும், மேற்கு ஜெர்மனியில் 22 சதவீதத்தினரும், ஃபிரான்சில் 27 சதவீதத்தினரும், நெதர்லாந்தில் 19 சதவீதத்தினரும், சோவியத் ரஷ்யாவில் 42 சதவீதத்தினரும், அமெரிக்காவில் 12 சதவீதத்தினரும், ஆஸ்திரேலியாவில் 15 சதவீதத்தினரும், கனடாவில் 19 சதவீதத்தினரும், அர்ஜென்டினாவில் 25 சதவீதத்தினரும் வேளாண்மையில் ஈடுபட்டுள்ளார்கள்.[2]

## அமித கிராம மக்கள் தொகை

இன்றும் இந்தியா வேளாண்மை நாடாகவே இருந்து வருகின்றது. சுமார் 82 சதவீத மக்கள் கிராமங்களிலும் 18 சதவீத

[1] Census Repo t of India Vol I. pt. I, 1901, p. 4 9; Ibid fo: 1921 p. 284; Ibid fo: 1931, p. 313; Ibid for 1951, p. 9; Second Fi e-Year Plan, 1956, p. 322.

[2] D:mographic Year Book, 19.1.

மக்கள் நகரங்களிலும் வசித்து வருகின்றனர். இச் சதவீதகங்கள் 1951-ல் முறையே 82.7, 17.3 ஆகவும், 1941-ல் 86.1, 13.9 ஆகவும், 1931-ல் 88.0, 12 ஆகவும், 1921-ல் 88.8, 11.2 ஆகவும் இருந்தன. 1961 ஆம் ஆண்டின் மொத்த மக்கள் தொகையாகிய 439.2 மில்லியனில் 360.7 மில்லியன் கிராமப்புறங்களிலும், 78.9 மில்லியன் நகர்ப்புறங்களிலும் வசித்து வந்தனர். 1951 ஆம் ஆண்டின் மொத்த மக்கள் தொகை 361.1 மில்லியன். அதில் 295.0 மில்லியன் கிராமங்களிலும், 61.9 மில்லியன் நகரங்களிலும் வசித்தனர்.

வெவ்வேறு மாநிலங்களிலும் கிராமப்புறங்களில் வசித்த மக்கள் தொகையின் சதவீதத்தைப் பின்வரும் அட்டவணை உணர்த்தும்.

| மாநிலம் | | 1961 | 1951 |
|---|---|---|---|
| ஆந்திரம் | ... | 72.6 | 72.6 |
| அஸ்ஸாம் | ... | 92.3 | 95.3 |
| பீஹார் | ... | 91.6 | 93.2 |
| குஜராத் | .... | 74.2 | 72.8 |
| ஜம்மு-காஷ்மீர் | — | 83.3 | — |
| கேரளம் | ... | 84.9 | 86.5 |
| மத்தியப்பிரதேசம் | ... | 85.7 | 88.0 |
| தமிழ் நாடு | ... | 73.3 | 75.6 |
| மஹாராஷ்டிரம் | ... | 71.8 | 71.2 |
| மைசூர் | ... | 77.7 | 77.0 |
| ஒரிஸ்ஸா | ... | 93.7 | 95.9 |
| பஞ்சாப் | ... | 79.9 | 81.0 |
| ராஜஸ்தான் | ... | 83.7 | 81.5 |
| உத்தரப்பிரதேசம் | ... | 87.1 | 86.4 |
| மேற்கு வங்காளம் | ... | 75.5 | 76.1 |
| யூனியன் பிரதேசங்கள் | ... | 65.8 | 72.5[1] |
| அகில இந்தியா | ... | 82.0[2] | 82.7[3] |

நாட்டில் உள்ள மக்கள் அனைவரும் ஆக்கப் பணிகளில் ஈடுபட்டிருப்பதில்லை. 1931-ல் இந்தியாவின் மொத்த மக்கள் தொகை

1 Excludes Goa, Daman, Diu, NEFA and Pondichery.

2 Excludes Goa, Diu and Daman.

3 Excludes Jammu and Kashmir, Goa, Diu, Daman, NEFA and Pondichery.

275.15 மில்லியன்; அதில் 122.49 மில்லியன் (43.30%) மட்டுமே உழைப்பவர்களாக இருந்தனர். 1951-ல் மொத்த மக்கள் தொகையாகிய 361.1 மில்லியனில் 142.32 மில்லியன் (39.10%) மட்டுமே உழைப்பவர்களாக இருந்தனர். 1961ஆம் ஆண்டுக் கணக்கெடுப்பின்படி 439.2 மில்லியன் மக்கள் தொகையில் உழைப்பாளர்களின் எண்ணிக்கை 188.41 மில்லியனாக (42.98%) இருந்தது. உழைப்பாளர்களின் தொகை மொத்த மக்கள் தொகையில் குறைவாகவே உள்ளது. அது 1901-ல் 46.61 சதவீதமாகவும், 1911-ல் 48.07 சதவீதமாகவும், 1921-ல் 46.92 சதவீதமாகவும் அமைந்திருந்தது.[1]

1961ஆம் ஆண்டுக் கணக்கெடுப்பின் அடிப்படையில் மொத்த வேளாண்மை உழைப்பாளர்கள் (சாகுபடியாளர்கள் உள்பட) 131மில்லியன் (83.7 மில்லியன் ஆண்கள், 47.3 மில்லியன் பெண்கள்) என்ற எண்ணிக்கையில் பயிர் உற்பத்தியில் ஈடுபட்டிருந்தார்கள். அதில் 99.5 மில்லியன் சாகுபடியாளராகவும் (66.4 மில்லியன் ஆண்கள், 33.1 மில்லியன் பெண்கள்), 31.4 மில்லியன் வேளாண்மை உழைப்பாளராகவும் (17.3 மில்லியன் ஆண்கள், 14.1 மில்லியன் பெண்கள்) இருந்தனர். 1951-ல் சாகுபடியாளர்கள் 69.8 மில்லியனாகவும், வேளாண்மை உழைப்பாளர்கள் 27.5 மில்லியனாகவும் இருந்தார்கள். 1951 முதல் 1961 வரையான காலத்தில் சாகுபடியாளர்கள் 43 சதவீதமும், வேளாண்மை உழைப்பாளர்கள் 14 சதவீதமும் எண்ணிக்கையில் அதிகரித்தனர்.[2]

## இந்திய தேசியப் பொருளாதாரத்தில் வேளாண்மையின் நிலை

சீனர்கள் 40 நூற்றாண்டுகளாகவும், இந்தியர்களும் எகிப்தியர்களும் 50 நூற்றாண்டுகளாகவும், மெசபொடோமியர்கள் 70 நூற்றாண்டுகளாகவும் விவசாயிகளாக இருந்து வருகின்றனர் என்பது மெய்யான கூற்றேயாகும். வளர்ந்துவரும் நாடுகளில் வேளாண்மை 32 முதல் 50 சதவீதத் தேசிய வருமானத்தையும், 50 முதல் 85 சதவீத வேலை வாய்ப்பையும், 50 முதல் 95 சதவீத ஏற்றுமதிப் பொருள்களையும் அளிக்கின்றது. வேளாண்மை ஒரு தொழில்மட்டுமன்று; அது பல நூற்றாண்டுகளாக இந்திய மக்களின் வாழ்க்கை முறையாகவும் இருக்கின்றது. மக்கள் வேளாண்மையோடு ஒன்றிவிட்டமையால், அவர்கள் பாரம்பரியப் பழக்க வழக்கங்களையே கொண்டிருக்கின்றனர். அவர்களுடைய எண்ணம், நோக்கம், பண்பாடு ஆகியவை வேளாண்மை அமைப்பு முறைக்கு ஏற்பவே இருக்கின்றன.

1. Eastern Economist Annual, 1965, p. 1323
2. Ibid

,வேளாண்மை விஞ்ஞானத்திற்கும், கலைகளுக்கும் மேம்பட்டது; முன்னேற்றத்திற்கும், நாகரிகத்திற்கும் வழிகோலுவது, அது இலாபத்தைச் சுரண்டக்கூடிய வாணிபமன்று. வேளாண்மைத் தொழில்களுக்கெல்லாம் தாய் போன்றது; மனித வாழ்வை நிலை நிறுத்துவது.'[1] இந்தியாவிற்கு இக்கூற்று மிகவும் பொருத்தமுடையதாக இருக்கிறது. நம் நாட்டில் வேளாண்மையில் ஈடுபடுத்தப்பட்டுள்ள நிலத்தின் அளவும் அதிகமானதேயாகும். மக்களுக்குத் தேவையான உணவும், உடையும் வேளாண்மைத் துறையின் மூலமாகவே பெறப்படுகின்றன.

பின்வரும் காரணங்களாலும் இந்தியாவில் வேளாண்மை முக்கியத்துவம் பெற்றதாக இருக்கின்றது.

1. இந்தியப் பொருளாதாரத்தின் மிக முக்கியத் [redacted] வேளாண்மை. தேசிய வருமானத்திப் சுமார் 50 சதவீதம் அதன் மூலமே பெறப்படுகின்றது. 1948-49-ல் இந்தியாவின் மொத்த தேசிய வருமானம் [redacted] 86 5 பில்லியன்; அதில் வேளாண்மையின் வாயிலாக ரூ. 42.5 பில்லியன் (49.1%) பெறப்பட்டது. 1955—56-ல் இப் புள்ளிவிவரங்கள் முறையே ரூ. 99 8 பில்லியன், ரூ. 45.2 பில்லியன் (45.3%) என்ற அளவில் இருந்தன. 1964-65-ல் தேசிய வருமானம் ரூ. 201 பில்லியன் என்ற நிலையில் இருந்தது; அதில் ரூ. 100 பில்லியன் வேளாண்மையின் மூலம் அடையப் பெற்றது. இதுவே, இந்தியப் பொருளாதாரத்தில் வேளாண்மை முக்கிய நிலையைக்கொண்டிருப்பதை நன்கு உணர்த்துகிறது. வேளாண்மையல்லாத துறையின் வளர்ச்சி வேளாண்மையைச் சார்ந்துள்ளது. இந்தியாவின் நான்கில் மூன்று பங்கு மக்கள் தங்களுடைய வாழ்விற்கு வேளாண்மையை நம்பி இருக்கின்றனர்கள். பிற துறைகளோடு ஒப்பிடும்போது வேளாண்மைத் துறையில் ஈடுபட்டிருப்பவர்களின் தலா வருமானம் குறைவானதேயாகும்.

2. இந்தியாவின் முக்கியத் தொழில்களாகிய பருத்தி, கம்பளி, சணல், சர்க்கரை புகையிலை, எண்ணெய், தோல் ஆகியவற்றிற்குத் தேவையான கச்சாப் பொருள்களை வேளாண்மையே அளிக்கின்றது. இரயில்வேக்களும், பிற போக்குவரத்துத் துறைகளும் வேளாண்மைப் பொருள்களின் வாணிபத்தால் அதிக வருமானத்தைப் பெறுகின்றன. இவ்வகைப் போக்குவரத்து வசதிகளின் மூலம் கிராமங்களிலிருந்து நகரங்களுக்கு வேளாண்மைப் பொருள்கள் கொண்டு செல்லப்படுகின்றன.

[1] The Ag icultu al Administ ration Committee Report, 1958 p. I

தி—14

3. ஏற்றுமதியின் பெரும் வீதத்தை வேளாண்மையே தரு கின்றது. 1961-62-ல் வேளாண்மைப் பொருள்களின் மூலம் கிடைத்த ஏற்றுமதி வருமானம் ரூ. 281.35 கோடி; இது 1965-66-ல் ரூ. 305 கோடியாக வளர்ந்தது. தேயிலை, புகையிலை, முந்திரிப் பருப்பு, காஃபி, கச்சாச் சணல், கச்சாப் பருத்தி, மிளகு, ஏலம், எண்ணெய் வித்துகள், காய்கறிகள், பழங்கள், பிண்ணாக்கு, அரக்கு, பசை முதலிய வேளாண்மைப் பொருள்கள் அதிக அந்நியச் செலாவணியை ஈட்டித் தருகின்றன.

4. 1961 ஆம் ஆண்டுக் கணக்கெடுப்பின்படி 439 மில்லியன் மக்களுக்கும், 336 மில்லியன் கால்நடைகளுக்கும் வேளாண்மை உணவளித்தது. இந்தியாவின் மொத்த நிலப்பரப்பு 30 கோடி ஹெக்டேர்கள் ஆகும். 1965-66-ல் பயிர்ச் சாகுபடியில் ஈடுபடுத் தப்பட்டிருந்த நிலப்பரப்பு 16 கோடி ஹெக்டேர்களாக இருந்தது. அதில் 12 கோடி ஹெக்டேர்கள் நிலத்தில் உணவுத் தானியங்களும், எஞ்சிய நிலத்தில் பருத்தி, சணல், காபி, தேயிலை, ரப்பர், கரும்பு, எண்ணெய் வித்துகள் முதலியனவும் உற்பத்தி செய்யப்பட்டன. 1963—64-ல் நம் நாட்டில் உற்பத்தி செய்யப்பட்ட வேளாண்மைப் பொருள்களின் மொத்த மதிப்பு ரூ. 6,680 கோடி; அதன் மதிப்பு 1948—49-ல் ரூ. 4,160 கோடியாக இருந்தது.

**இந்திய வேளாண்மையின் உண்மை நிலைகள்**

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிவரை இந்திய வேளாண்மை பிழைப்பிற்காகவே செய்யப்பட்டது. கிராமவாசிகள் தன்னிறைவிற்காகவே உணவுத் தானியங்களை உற்பத்தி செய்தார்கள். போக்குவரத்து வசதிகள் போதுமான அளவுக்கு வளர்ந்திருக்கவில்லை. வேளாண்மைப் பொருள்களின் வாணிபமும் மேம்பாடு அடையவில்லை. ஆங்கிலேய ஆட்சியாளர்கள் கட்டுப் பாடற்ற வாணிபக் கொள்கையைப் பின்பற்றினார்கள். இதனால், வேளாண்மை பன்னாட்டு வாணிபத்திலும் பங்கேற்றது. உணவுத் தானியங்கள் உற்பத்தி செய்யப்பட்ட நிலங்களில் வாணிபப்பயிர் களாகிய கரும்பு, புகையிலை, எண்ணெய் வித்துகள் முதலியன உற்பத்தி செய்யப்பட்டன. புதிய பயிர்களும், புதிய ரகங் களும் இந்திய வேளாண்மையில் புகுத்தப்பட்டன, கருதத்தக்க அளவுக்கு வேளாண்மையில் தொழில் நுணுக்க முன்னேற்றம் ஏற்படலாயிற்று. எனினும், இவற்றைச் சிறப்பான முன்னேற்ற மாற்றங்கள் என்று கூற இயலாது. ஓர் ஏக்கருக்கான உற்பத்தியின் அளவு தேக்க நிலையில் தாழ்வாகவே இருந்தது.

இரண்டாவது உலகப்போர், பாகிஸ்தான் பிரிவினை ஆகியவற்றின் காரணமாகப் பல சிக்கல்கள் இந்தியப் பொருளாதாரத்தில் தோன்றின. பர்மாவிலிருந்து அரிசி இறக்குமதி செய்வது தடுக்கப்பட்டது. பருத்தி, சணல், கோதுமை ஆகியவற்றை அதிக அளவில் உற்பத்தி செய்யத்தக்க வளமான பிரதேசங்களைப் பாகிஸ்தான் பெற்றது. பாகிஸ்தான் பிரிந்தமையால் வட்டார வேலைப் பகுப்புமுறை பாதிக்கப்பட்டது. இவற்றால், இந்தியப் பொருளாதார முன்னேற்ற நிலைகளில் பல பிரச்சினைகள் ஏற்பட்டன. தற்பொழுது அரிசி, கோதுமை, பருத்தி, சணல், ஆகியவற்றின் உற்பத்தியைப் பெருக்குவதற்கான தீவிர நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுவருகின்றன. படிப் படியாகப் பிரதேச வேலைப்பகுப்புமுறையும் திறமையுள்ளதாக வருகிறது. 1949—50ஆம் ஆண்டை அடிப்படையாகக் கொண்டு நோக்கும்போது, வேளாண்மை உற்பத்திக் குறியீட்டெண் 1933—34 முதல் 1938-39 வரை 103 ஆக இருந்தது. இஃது இரண்டாவது உலகப்போர் தொடங்குவதற்கு முன்னராகும். வேளாண்மை உற்பத்திக் குறியீட்டெண் 1945—46 முதல் 1950—51 வரை 97 என்ற அளவுக்குக் குறைந்து விட்டது. இது திட்டம் தொடங்கப்படுவதற்கு முன்னரிருந்த காலமாகும். திட்டமிட்டுப் பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்கு முன்னர் இந்திய வேளாண்மையின் உற்பத்தித் திறன் குறைவாகவே இருந்தது.

திட்டங்கள் தொடங்கப்பட்ட பின்னர், நிலக்கிழார்கள், லேவாதேவிக்காரர்கள் முதலியோர் விவசாயிகளைச் சுரண்டுவது தடுக்கப்பட்டது. வேளாண்மை விரிவாக்கப் பணிகளை மேற்கொள்வதற்கான அமைப்புகள் ஏற்படுத்தப்பட்டன. வேளாண்மையின் வளர்ச்சிக்கு அதிக முதலீடு செய்யப்பட்டது. இவற்றால் வேளாண்மையில் கணிசமான முன்னேற்றம் தோன்றலாயிற்று. வேளாண்மை உற்பத்திக் குறியீட்டெண் இரண்டாவது திட்டக் காலத்தில் 127 ஆக உயர்ந்த நிலை இதை உணர்த்தும். உற்பத்தி உயர்வுக்குப் புதிதாகச் சாகுபடிக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட நிலங்களும் காரணமாக இருந்தன. பலபோகச் சாகுபடி முறையும் கைக்கொள்ளப்பட்டது. வெவ்வேறு பகுதிகளிலும் சாகுபடி நடவடிக்கைகள் விரிவாக்கம் பெற்றன.

தற்பொழுது இந்திய வேளாண்மை தேக்க நிலையில் இல்லை என்பதை இவ்வுண்மைகள் உணர்த்துகின்றன. குறிப்பிடத்தக்க அளவில் வேளாண்மை உற்பத்தி அதிகரித்துள்ளது. எனினும் வேளாண்மை வளர்ச்சி வீதம் குறைந்த அளவிலேயே இருக்கிறது.

தெளிவான, உறுதியான, நிலையான, தொடர்ச்சியான வளர்ச்சி வேளாண்மையில் ஏற்படவில்லை. வேளாண்மையில் விரைவான வளர்ச்சியைப் பெறுவதற்கான முழுமையான மாற்றம் கிராமப் பொருளாதாரத்தில் தோன்றி இருக்கவில்லை.

திட்டக் காலத்திலும்கூட, நாம் இந்திய வேளாண்மையில் சீரான வளர்ச்சியைக் காண முடியவில்லை. 'வேளாண்மை முன்னேற்றம் நாட்டின் வெவ்வேறு பகுதிகளுக்கிடையே வேறுபட்டிருக்கின்றது. வேளாண்மையில் வளர்ச்சியும், தேக்கமும் இணைந்து இருக்கக்கூடிய நிலையை உணர முடிகின்றது. ஒரு காலத்தில் ஒரு குறிப்பிட்ட பகுதியில் உள்ள விவசாயிகள் அதிக வருமானத்தைப் பெறும்போது வேறொரு பகுதியின் விவசாயிகள் குறைந்த வருமானத்தைப் பெறுகின்றனர்கள். இடத்திற்கு இடம், காலத்திற்குக் காலம் வேளாண்மை வளர்ச்சி வேறுபடுகின்றது.'[1]

வேறுபாடுகள் வெவ்வேறு பகுதிகளுக்கு இடையே இருப்பது போலவே, விவசாயிகளுக்கிடையேயும் ஏற்றத்தாழ்வுகள் இருக்கின்றன. அதிக வருமானத்தைப் பெற்று, எல்லா வசதிகளையும் கொண்ட விவசாயிகள் ஓர் ஏக்கருக்கான உற்பத்தியை எளிதில் பெருக்கி விடுகின்றனர்கள். ஆனால், சராசரி விவசாயிகளால் உற்பத்தியைக் கணிசமான அளவுக்குக்கூடக் கூட்டமுடியவில்லை. ஏழை விவசாயிகளைக் காட்டிலும் பல மடங்கு அதிக உற்பத்தியைச் செல்வ நிலையில் உள்ள விவசாயிகள் பெறுகின்றனர்கள். உதாரணமாக ஓர் ஏக்கருக்கான சராசரி அரிசி உற்பத்தி பல மாநிலங்களுக்கிடையே 400 முதல் 1,200 பவுண்டுகள் என்ற அளவில் வேறுபட்டிருக்கின்றது. மிக அதிக அளவு உற்பத்தி 3,000 முதல் 9 000 பவுண்டுகளாக உள்ளது. கோதுமை உற்பத்தியில் இதற்கான புள்ளி விவரங்கள் 300 முதல் 1 000 பவுண்டுகளாகவும், 2,500 முதல் 6,000 பவுண்டுகளாகவும் இருக்கின்றன.

இந்திய வேளாண்மையில் சராசரியாளர்களுக்கும், உயர் நிலையில் இருப்பவர்களுக்குமிடையே மிகுந்த வேறுபாடு உள்ளது. முன்னேற்றமடைந்த தொழில் நாடுகளில் இவர்களுக்கிடையே அதிக வேறுபாடு இருப்பதில்லை. மேற்கண்டவற்றின் மூலம் இந்திய வேளாண்மை பின்தங்கிய நிலையில் இருப்பதை உணரலாம். எனினும், முன்னேற்றத்தைப் பெறுவதற்கான திறனைக் கொண்டதாகவே அஃது இருக்கின்றது. இந்திய வரலாற்றி

[1] S. R. Sen, 'The Strategy for Agricultural Development,' 1962, p. 9.

னின்றும் புள்ளி விவரங்களினின்றும் வேளாண்மை தொன்று தொட்டு நாட்டு மக்களில் பெரும் பகுதியினருக்கு வாழ்வளிக்கும் தொழிலாகத் திகழ்கின்றது என்பதை அறியலாம். இந்தியப் பொருளாதாரம் வேளாண்மையோடு கட்டுண்டு பிணைந்து கிடக்கின்றது.

விரைந்து பெருகும் மக்கள் தொகையால், பரவும் பசிப்பிணிக்கான மருந்து, வேளாண்மை உற்பத்தியில் அடங்கியுள்ளமையை அரசு உணர்ந்துள்ளது. பெரிய, நடுத்தர, சிறிய தொழில்களுக்குத் தேவையான மூலப் பொருள்களையும் வேளாண்மை அளிக்கின்றது. தொழில் வளர்ச்சிக்குத் துணையாக அமைவது வேளாண்மையேயாகும். இயந்திரங்களையும். கருவிகளையும் இறக்குமதி செய்து நாட்டைத் தொழில்மயமாக்குவதற்குத் தேவையான அந்நியச் செலாவணியை அதிகமாக ஈட்டித் தருவதும் வேளாண்மையேயாகும்.

வேளாண்மைத் துறையில் அரசிற்கு அதிக வருமானம் கிடைக்கின்றது. அது வேளாண்மை வாணிபத்திலும், குடிசைத் தொழில்களிலும் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களுக்கு வேலை வாய்ப்பை ஏற்படுத்தித் தருகின்றது.

தன்னிறைவு பெற்றுத் தானே தொடர்ந்து உறுதியாக வளர்கின்ற பொருளாதாரத்தைப் பெற வேளாண்மை முன்னேற்றம் இன்றியமையாதது. அதன் மூலம் சமுதாய, அரசியல் விழிப்புணர்ச்சியும் தோன்றுகிறது. எல்லா தன்மைகளுக்கும் காரணமாக இருக்கின்ற விவசாயிகள் நிலையை உயர்த்துவது அரசின் முக்கியக் கடமைகளில் ஒன்றாகும்.

பிற நாடுகளோடு ஒப்பிடும்போது இந்திய வேளாண்மையின் உற்பத்தித்திறன் குறைவாக உள்ளதை உணரலாம். பழைய கருவிகளும், உற்பத்தி முறைகளும் இதற்குக் காரணமாகின்றன. இதனால் வேளாண்மையில் ஈடுபட்டுள்ள மக்கள் பலரின் வாழ்க்கைத் தரமும் தாழ்வாகவே அமைகின்றது.

ஆங்கிலேயருடைய ஆட்சிக் காலத்தில் அமைக்கப்பட்ட 'நிதிக் குழு' (Fiscal commission), 'இந்திய வேளாண்மை ஒரு தொழிலாக மட்டும் இருக்கவில்லை. அது பல நூற்றாண்டுகளாக இலட்சக் கணக்கான மக்களின் கண்ணோட்டத்தையும், சிந்தனைகளையும் உருவாக்கிய வாழ்க்கை முறை' என்று கூறியது. இக் கூற்றில் உண்மை இருப்பதை இன்னும் நாம் உணர்கிறோம்.

இந்திய வேளாண்மையில் நிலம், உழைப்பு, மூலதனம் ஆகிய உற்பத்திக் காரணிகள் விவசாயிகளாகிய தொழில் முயல்வோரால்

சிறப்பாகப் பயன்படுத்தப்படுவதில்லை. துண்டாடப்பட்டுப் பல இடங்களிலும் சிதறுண்டு கிடக்கும். சிறிய அளவு நிலங்களில் அவர்களால் உற்பத்தியைப் பெருக்க முடிவதில்லை. அதற்குத் தேவையான நிதி வசதியையும் அவர்கள் கொண்டிருப்பதில்லை. எழுதப்படிக்கத் தெரியாதவர்களாகிய விவசாயிகளை லேவாதேவிக்காரர்கள் சுரண்டி வாழ்கின்றனர். அவர்கள் கடன் சுமையால் தளர்ந்து விடுகின்றனர். பிற்போக்கான மன நிலையையும், மூட நம்பிக்கைகளையும் அவர்கள் பெற்றிருக்கின்றார்கள். வாணிபப் போட்டியினின்றும் தங்களைக் காத்துக்கொள்ளும் திறனை அவர்கள் பெற்றிருப்பதில்லை.

இந்தியாவின் பல தொழிற்சாலைகளிலும் உள்ள இயந்திரங்களின் சக்கரங்கள் சுழல வேண்டுமானால் வேளாண்மை உற்பத்தி அதிகரிக்கவேண்டும். தக்காணப் பிரதேசத்தில் பருத்தி உற்பத்தி செய்யப்படாவிட்டால் நூற்பு, நெசவுத் தொழில்கள் நசித்துவிடும். கைத்தறி நெசவு, எண்ணெய் பிழிதல் முதலிய தொழில்களும், கச்சாப் பொருள்களுக்கு வேளாண்மையைச் சார்ந்துள்ளன. உள்நாட்டு வாணிபம் வேளாண்மையால் விரைவுபடுத்தப்படுகின்றது. இந்தியாவின் பெரும்பாலான பொருளாதாரத் துறைகள் முன்னேற்றத்தைப் பெற வேளாண்மையையே சார்ந்துள்ளன. எனவே, நாட்டு முன்னேற்றம் விவசாயிகளின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதிலேயே அடங்கி இருக்கின்றது.

### 1. தேசிய வருமானத்தில் வேளாண்மையின் பங்கு

'தேசிய வருமானக் குழு' (National Income Committee), 'மத்திய புள்ளிவிவர அமைப்பு' (Central Statistical Organisation ஆகியவற்றின் கணக்கெடுப்புகள் வேளாண்மையும், வேளாண்மையைச் சார்ந்த தொழில்களும் (காடுகள், கால்நடைகள்) தேசிய வருமானத்தில் சுமார் 50 சதவீதத்தை அளிக்கின்ற நிலையைத் தெளிவாக உணர்த்துகின்றன. இதைக் கீழ்க்காணும் அட்டவணை மூலம் அறியலாம்.

**தேசிய வருமானத்தில் வேளாண்மையின் பங்கு**[1]

(நடப்பு விலைகளில்

| ஆண்டு | தேசிய வருமானம் (கோடி ரூபாயில்) | வேளாண்மை வருமானம் (கோடி ரூபாயில்) | தேசிய வருமானத்தில் வேளாண்மை வருமானத்தின் சதவீதம் |
|---|---|---|---|
| 1948—49 | 8 650 | 4,250 | 49.1 |
| 1950—51 | 9,530 | 4,890 | 51.3 |

[1] Central Statistical Organisation, National Income Division.

| ஆண்டு | தேசிய வருமானம் (கோடி ரூபாயில்) | வேளாண்மை வருமானம் (கோடி ரூபாயில்) | தேசிய வருமானத்தில் வேளாண்மை வருமானத்தின் சதவீதம் |
|---|---|---|---|
| 1960—61 | 14,140 | 6 890 | 48.8 |
| 1963—64 | 17 200 | 8,170 | 47.5 |
| 1964—65 | 20.0:0 | 10,270 | 51.3 |

மேற்காணும் அட்டவணை இரு முக்கிய நிலைகளை உணர்த்துகிறது; முதலாவதாக, வேளாண்மையும் அதைச் சார்ந்த தொழில்களும் தேசிய வருமானத்தில் பெரும் பங்கைத் தருகின்றன இரண்டாவதாக தேசிய வருமானத்தில் வேளாண்மையின் பங்கு படிப்படியாகக் குறைந்து வருகின்றது. 1964—65-ல் தட்பவெப்ப நிலைகள் சாதகமாக இருந்தமையால் தேசிய வருமானத்தில் வேளாண்மையின் பங்கு 51.3 சதவீதமாக உயர்ந்தது.

தேசிய வருமானக் கணக்கெடுப்புகள் வேளாண்மையால் கிடைக்கக்கூடிய தேசிய வருமானத்தின் அளவு குறைந்து வருவதை உணர்த்துகின்றன. சான்றாக, முதல் உலகப் போர்க் காலத்தில் (1914—18) இந்திய தேசிய வருமானத்தில் சுமார் 65 சதவீதம் வேளாண்மையின் மூலம் பெறப்பட்டது. 1925—29-ல் அதன் அளவு 57 சதவீதமாகவும், 1931-ல் 53 சதவீதமாகவும் குறைந்தது. தற்பொழுது சுமார் 47 சதவீதத் தேசிய வருமானம் வேளாண்மையால் கிடைக்கப் பெறுகின்றது.

முன்னேற்றமடைந்த பொருளாதாரங்களில் வேளாண்மை மூலம் பெறப்படுகின்ற தேசிய வருமானம் குறைவானதேயாகும். எடுத்துக்காட்டாக, அஃது இங்கிலாந்தில் 4 சதவீதமாகவும், அமெரிக்காவில் 5 சதவீதமாகவும் கனடாவில், 7 சதவீதமாகவும், ஆஸ்திரேலியாவில் 13 சதவீதமாகவும் இருக்கின்றது. இந்தியா முன்னேற்றமடைந்த பொருளாதாரத்தைப் பெற்றில்லாமையால் தான், அதிக அளவுத் தேசிய வருமானத்தை வேளாண்மையினின்றும் பெறுகின்றது. வளர்ச்சியடைந்த நாடுகளில் இதற்கு எதிர்மாறான நிலை இருக்கின்றது.

1968—69 ஆம் ஆண்டின் தேசிய வருமானம் ரூ. 17,043 கோடி; அதில் வேளாண்மையின் மூலம் கிடைக்கப் பெற்ற வருமானம் ரூ 7,639 கோடி அல்லது தேசிய வருமானத்தில் சுமார் 45 சதவீதம் வேளாண்மையால் பெறப்பட்டது. பொருளாதார முன்னேற்றம் ஏற்படும்போது தேசிய வருமானத்தில் வேளாண்மையின் பங்கு படிப்படியாகக் குறையும்.

## 2. வேளாண்மையில் ஒரு வாழ்க்கை முறை

பொருளாதார நடவடிக்கைகளில் வேளாண்மை நடவடிக்கைகளே முக்கிய நிலையைக் கொண்டுள்ளன. இந்தியாவில் உள்ள ஒவ்வொரு 10 பேர்களிலும் 7 பேர்கள் வேளாண்மையைச் சார்ந்துள்ளார்கள். 1901 முதல் 1961 வரை சுமார் 70 சதவீத மக்கள் வேளாண்மையை முக்கியத் தொழிலாகக் கொண்டிருந்தார்கள். இங்கிலாந்து, அமெரிக்கா, மேற்கு ஜெர்மனி, கனடா, நியூசிலாந்து ஆகிய நாடுகளில் 20 சதவீதத்திற்கும் குறைவான மக்கள் தொகையே வேளாண்மையில் ஈடுபட்டிருக்கின்றது. சில நாடுகளில் மொத்த மக்கள் தொகையில் சுமார் 5 சதவீதத்தினர் மட்டுமே வேளாண்மையைச் சார்ந்துள்ளார்கள். வேளாண்மையில் ஈடுபட்டுள்ள மக்கள் தொகை ஃபிரான்சில் 25 சதவீதமாகவும், நியூசிலாந்தில் 20 சதவீதமாகவும் கனடாவில் 15 சதவீதமாகவும், மேற்கு ஜெர்மனியில் 15 சதவீதமாகவும் அமெரிக்காவில் 10 சதவீதமாகவும் இருக்கின்றது. பல ஐரோப்பிய நாடுகளிலும் வேளாண்மை, குறைந்த மக்கள் தொகைக்கு ஏற்றவாறு குறைந்த அளவிலேயே உள்ளது.

## 3. வேளாண்மையும் வேலை வாய்ப்பும்

இந்தியாவில் அதிக அளவு உழைப்பாளர்கள் வேளாண்மையிலேயே ஈடுபட்டிருக்கின்றனர். பின் தங்கிய நாடுகளில் இந்த நிலையே அமைந்துள்ளது. உதாரணமாக எகிப்தில் 65 சதவீத உழைப்பாளர்களும், மலேயாவில் 64 சதவீதத்தினரும், பிரேசில் நாட்டில் 58 சதவீதத்தினரும் வேளாண்மையில் தங்கள் உழைப்பைத் தருகின்றார்கள். மாறாக முன்னேற்றமடைந்த இங்கிலாந்தில் 5 சதவீத உழைப்பாளர்களும், அமெரிக்காவில் சுமார் 12 சதவீதத்தினரும், ஆஸ்திரேலியாவில் சுமார் 16 சதவீதத்தினரும் வேளாண்மையில் ஈடுபட்டுள்ளனர்.

கடந்த 60 ஆண்டுகளின் புள்ளி விவரங்களின்படி வேளாண்மையில் ஈடுபட்டுள்ள உழைப்பாளர்களின் எண்ணிக்கை அதிகரித்துள்ளது. உதாரணமாக, இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சுமார் 62.5 சதவீத உழைப்பாளர்கள் வேளாண்மையில் ஈடுபட்டிருந்தார்கள். இது 1921-ல் 68.5 சதவீதமாகவும், 1961-ல் 70.5 சதவீமாகவும் உயர்ந்தது பிற துறைகளில் வேலை வாய்ப்புகள் அதிகரிக்கின்ற மக்கள் தொகை வேளாண்மையையே சார்ந்து அமைகின்றது. இதன் காரணமாக வேளாண்மையில் 'மறைமுக வேலையின்மை' தோன்றுகின்றது. இதைத் தவிர்க்க விரைவான தொழில் முன்னேற்றத்தைப் பெறுவது இன்றியமையாதது.

வளர்ந்த நாடுகளில் வேளாண்மையல்லாத துறைகளின் மேம்பாடான நிலையால் குறைந்த வீத மக்களே வேளாண்மையில் ஈடுபட்டுள்ளார்கள்.

திட்டங்களின் மூலம் போதுமான வேலை வாய்ப்புகளைப் பெருக்காமையால், பெருகிவரும் மக்கள் தொகை வேளாண்மையைச் சார்ந்தே வாழ வேண்டியுள்ளது. சாகுபடி நிலத்தின் மீதான மக்கள் தொகை அதிகரித்து வருகின்றது.

4. **வேளாண்மையும் தொழில் முன்னேற்றமும்**

பல முன்னணித் தொழில்களுக்குத் தேவையான கச்சாப் பொருள்களை வேளாண்மை அளிக்கின்றது. பருத்தி, சணல், சர்க்கரை, வனஸ்பதி ஆகிய தொழில்களுக்குத் தேவையான மூலப் பொருள்கள் வேளாண்மையினின்றும் நேரடியாகப் பெறப்படுகின்றன. பல தொழில்கள் வேளாண்மையை மறைமுகமாகச் சார்ந்துள்ளன. வெவ்வேறு சிறு தொழில்களும் குடிசைத்தொழில்களும் மூலப் பொருள்களுக்காக வேளாண்மையை நம்பியுள்ளன.

ஆனால், சமீப காலத்தில் தோன்றிய சில தொழில்கள் மூலப் பொருள்களை வேளாண்மையில் இருந்து பெறவில்லை. ஐந்தாண்டுத் திட்டங்களின் மூலம் இரும்பு-எஃகுத் தொழில், இரசாயனத் தொழில், பொறியியல் தொழில், விமானம் கட்டும் தொழில், இயந்திரங்களையும் கருவிகளையும் உற்பத்தி செய்யும் தொழில் முதலியவை ஏற்படுத்தப்பட்டன. இத் தொழில்கள் மூலப் பொருள்களுக்காக வேளாண்மையைச் சார்ந்துள்ள தொழில்களைக் காட்டிலும் முக்கியத்துவம் வாய்ந்தனவாக இருக்கின்றன. ஆயினும் நாட்டின் விரைவான முன்னேற்றத்திற்கும், நாட்டைத் தொழில்மயமாக்குவதற்கும் வேளாண்மையே அடிப்படையாக அமைய வேண்டும்.

வேளாண்மை வளர்ச்சியின்றித் தொழில் முன்னேற்றத்தைப் பெறுவது கடினம். வாணிபப் பயிர்களாகிய தேயிலை, காஃபி, ரப்பர் முதலியன வேளாண்மைத் துறையில் உற்பத்தி செய்யப்படுவனவேயாகும். கைத்தறி, கதர்த்துணி உற்பத்தியும் வேளாண்மையைச் சார்ந்தே அமைகின்றது. இரும்பு எஃகுத் தொழில், இரசாயனத் தொழில் ஆகியன வேளாண்மைக்குத் தேவையான கருவிகளையும், உரங்களையும் உற்பத்தி செய்கின்றன. இதனால், வேளாண்மை வளர்ச்சி விரைவுபடுத்தப்படுகின்றது. வேளாண்மை உள்ளீடுகளும் அதிகரிக்கின்றன. வேளாண்மையும், தொழில் துறையும் ஒன்றோடொன்று நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளன.

திட்டங்களால் பல பெரிய தொழில்கள் ஏற்படுத்தப்பட்டாலும் வேளாண்மை இன்றும் தலையாய தொழிலாகவே இருக்கின்றது.

5. பன்னாட்டு வாணிபத்தில் வேளாண்மையின் பங்கு

இந்தியாவின் வெளிநாட்டு வாணிபத்தில் பெரும் பங்கு வகிப்பது வேளாண்மையே. வேளாண்மைப் பொருள்களாகிய தேயிலை, எண்ணெய் வித்துகள், புகையிலை, வாசனைத் திரவியங்கள் முதலியன அதிக அளவில் ஏற்றுமதியாகின்றன. ஏற்றுமதியில் சுமார் 50 சதவீதம் வேளாண்மைப் பொருள்களாக இருக்கின்றன. இதைத்தவிர சணல், துணிப்பொருள்கள் ஏற்றுமதியில் 20 சதவீதம் என்ற அளவுக்கு உள்ளன. எனவே, இந்தியாவின் ஏற்றுமதியில் சுமார் 70 சதவீதம் வேளாண்மையின் மூலமே பெறப்படுகின்றது. சமீப ஆண்டுகளில் ஏற்றுமதிப் பொருள்களின் அளவு அதிகரித்துள்ளது; அவற்றின் மதிப்பும் உயர்ந்துள்ளது. இந்த நிலை பொருளாதார முன்னேற்றத்தை எளிதாக்கும். ஏற்றுமதி பெருகும் போது தேவையான அளவுக்கு இயந்திரங்களையும், கருவிகளையும், கச்சாப் பொருள்களையும் இறக்குமதி செய்யலாம்.

எதிர்பார்த்த அளவுக்கு வேளாண்மை உற்பத்தி உயராமையால் திட்டங்கள் தோல்வியடைகின்றன. உணவுத் தானியங்களின் பற்றுக்குறையால் விலையுயர்வு ஏற்பட்டது. அதைத் தொடர்ந்து கூலிகள் உயர்ந்து உற்பத்திச் செலவுகளும் கூடின. உணவுப் பற்றுக்குறையைச் சமாளிப்பதற்கு அரசு உணவுத் தானியங்களை இறக்குமதி செய்தது. இதன் காரணமாக மதிப்பு மிக்க அந்நியச் செலாவணி, மூலதனப் பொருள்களை இறக்குமதி செய்யப் பயன்படுத்தப்படாமல் வீணடிக்கப்பட்டது. வேளாண்மை நாடாகிய இந்தியாவில் பல திட்டங்கள் செயல்படுத்தப்பட்ட பின்னரும் உணவில் தன்னிறைவைப் பெற முடியாதது விந்தைக்குரிய ஒன்றேயாகும்.

மதிப்பு மிக்க அந்நியச் செலாவணியின் பெரும் பகுதியை வேளாண்மை ஈட்டித்தருகின்றது. எனினும், அந்நியச் செலாவணியின் ஒரு பகுதி உணவுப்பொருள்களின் இறக்குமதிக்குச் செலவிடப் படுவது குறிப்பிடத்தக்கது. நாட்டை விரிவாகத் தொழில் மயமாக்கித் தொழிற் பொருள்களின் ஏற்றுமதியைப் பெருக்குவது இன்றியமையாதது. அதன் மூலம் எல்லாத் துறைகளிலும் சிறப்பான வளர்ச்சியைப் பெறலாம்.

1067—68-ல் இந்தியாவின் மொத்த ஏற்றுமதி மதிப்பு ரூ. 1,199 கோடி; இதில் வேளாண்மைப் பொருள்களை ஏற்றுமதி

செய்வதன் மூலம் ரூ. 625 கோடி பெறப்பட்டது. 1968—69-ல் மொத்த ஏற்றுமதி மதிப்பு ரூ. 1,340 கோடி ஆகும்; இதில் வேளாண்மைப் பொருள்களின் மதிப்பு ரூ.665 கோடியாக இருந்தது. நான்காவது, ஐந்தாண்டுத் திட்டத்தின் இறுதியில், அதாவது 1973—74-ல், மொத்த ஏற்றுமதியின் மதிப்பு ரூ. 1,900 கோடியாகவும், அதில் வேளாண்மைப் பொருள்களின் மதிப்பு ரூ. 872 கோடியாகவும் இருக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது. 1967—98-ல் மொத்த ஏற்றுமதியில் வேளாண்மைப் பொருள்களின் அளவு 52.1 சதவீதமாகவும், 1968—69-ல் 48.8 சதவீதமாகவும் இருந்தது. இது 1973—74-ல் 45.9 சதவீதமாக இருக்கும் என்று குறயளவு நிர்ணயிக்கப்பட்டுள்ளது. வேளாண்மை வளர்ச்சி குன்றினால் இந்தியப் பொருளாதாரம் சீர்குலையும்.

### 6. வேளாண்மையும், பணித்துறையும்

வாணிபம், போக்குவரத்து முதலிய துறைகளின் வளர்ச்சிக்கு வேளாண்மை உதவுகின்றது. உள்நாட்டு வாணிபம் வேளாண்மையால் ஊக்குவிக்கப்படுகின்றது. இதனால், இரயில்வேக்களும், சாலைப் போக்குவரத்தும் பயனடைகின்றன. விவசாயிகளின் வருமானம் உயரும்போது அவர்களுடைய வாங்கும் திறனும் அதிகரிக்கின்றது. பல நுகர் பொருள்களை அவர்கள் வாங்குவார்கள். இதன் காரணமாகத் தொழில் முன்னேற்றம் பெறப்படும். வேளாண்மை அரசின் வருமானத்தை நேரடியாகவும், மறைமுகமாகவும் பெருக்குகின்றது. வேளாண்மை வளர்ச்சியை விரைந்த பொருளாதார முன்னேற்றத்தினின்றும் அறிந்து கொள்ளலாம்.

சிறப்பான வேளாண்மை வளர்ச்சி உள்நாட்டில் தொழில் பொருள்களின் தேவையைப் பெருக்குகின்றது. அரசின் நிதி வசதிகளும் வேளாண்மையைச் சார்ந்து அமைகின்றன. 'இந்தியாவின் வரவு-செலவுத் திட்டம் பருவகாலச் சூதாட்டமாக இருப்பதை' சர் கை ஃப்ளீட்வுட் வில்சன் (Sir Guy Fleetwood Wilson) குறிப்பிடுகின்றார். வேளாண்மையில் அமைந்துள்ள உபரி உழைப்பாளர்களின் எண்ணிக்கையைக் குறைப்பதன்மூலமே கிராமப்புறங்களில் தலா வருமானத்தை அதிகரிக்கலாம். உள்நாட்டு வாணிபத்தில் வேளாண்மைப் பொருள்களே பெரும்பாலும் இருக்கின்றன. வேளாண்மை உற்பத்தி குறையும்போது வாணிபம் பாதிக்கப்படுகின்றது. மாநில அரசுகள் அவற்றின் வருமானத்தில் ஒரு கணிசமான பகுதியை வேளாண்மைமூலம் பெறுகின்றன.

## வளர்ச்சியடையாத பொருளாதாரமும், வேளாண்மையும்

இந்தியாவில் வேளாண்மை நடவடிக்கைகள் அதிக முக்கியத்துவம் வாய்ந்தனவாக இருக்கின்றன. ஆனால், வேளாண்மைத் துறையில் தலா வருமானம் மிகக் குறைவாக உள்ளது. தொழில் துறையைச் சார்ந்திருப்பவர்களின் தலா வருமானம் அதிகமாக இருக்கின்றது. இந்தியப் பொருளாதாரத்தில் வேளாண்மை முக்கியத்துவம் வாய்ந்திருப்பதால் தான் தலா வருமானம் தாழ்வாக இருக்கிறது. கணிசமான அளவுக்குத் தலா வருமானத்தை உயர்த்த எல்லாத் துறைகளின் வளர்ச்சியையும் ஒருங்கே பெறவேண்டும். இந்தியாவின் பொதுவான பொருளாதாரம் பின்தங்கிய நிலைக்கு வேளாண்மையின் ஆதிக்கம் ஒரு காரணமாகிறது. எனினும், வேளாண்மை வளர்ச்சியின்றிப் பொருளாதார முன்னேற்றத்தைப் பெற முடியாது.

## பொருளாதார முன்னேற்றத்தில் வேளாண்மை வளர்ச்சியின் அவசியம்

பேராசிரியர் ராக்னர் நர்க்ஸ் (Prof. Ragnar Nurkse) புதிதாகத் தொடங்கப்படுகின்ற தொழில்களில் வேளாண்மையில் பொருந்தியிருக்கக்கூடிய உபரி உழைப்பாளர்களைப் பயன்படுத்த வேண்டுமென்று கூறுகிறார். உபரி உழைப்பாளர்களைக் கொண்டு புதிய தொழில்களைத் தோற்றுவிக்கவேண்டும் என்பது அவருடைய கருத்து. இதனால் வேளாண்மை உற்பத்தித்திறன் அதிகரிக்கும்.

நர்க்ஸ் கோட்பாட்டில் உள்ள குறைபாடுகள் பின்வருமாறு குறிப்பிடப்படுகின்றன.

முதலாவதாக, வேளாண்மையில் உள்ள உழைப்பாளர்களைத் தொழில் துறைக்கு மாற்றுவதன் மூலம் நாட்டைத் தொழில்மயமாக்கிவிட முடியாது. நாட்டைத் தொழில் மயமாக்குவதற்குத் தேவையான இயல்புகள் இந்திய வேளாண்மைப் பொருளாதாரத்தில் பொருந்தியிருக்கவில்லை. விரிந்து பரந்த எண்ணங்களைக் கொண்டவர்களாகக் கிராம மக்கள் இருப்பதில்லை. அவர்கள் முன்னேற்றத்தைப் பெறுவதற்கான மனப்பக்குவத்தைப் பெற முதலில் வேளாண்மை வளர்ச்சியே தேவை. விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற கிராமச் சமுதாய அமைப்பில் சில அடிப்படை மாற்றங்கள் அவசியமாகின்றன.

இரண்டாவதாக, அதிகரிக்கும் நகர மக்களுக்குத் தேவையான உணவுப் பொருள்களை அளிப்பதற்கு வேளாண்மை விற்பனை

உபரியை உயர்த்த வேண்டும். தொழில்களுக்குத் தேவைப்படும் கச்சாப் பொருள்களின் உற்பத்தியைப் பெருக்க வேளாண்மை வளர்ச்சி அவசியமாகிறது.

மூன்றாவதாக, தொழில் துறையின் வளர்ச்சி விரைவாக இருந்தாலும்கூடப் பெருகிவரும் இலட்சோப இலட்சம் மக்களுக்கு முழுமையான வேலை வாய்ப்புகளை ஏற்படுத்தித் தருவது எளிதன்று. தொழில்களின் வேலையளிக்கும் திறன் குறைந்த வரம்பிற்குட்பட்டதாகும். ஆகவே, கிராமப் புறங்களிலேயே வேலைவாய்ப்புகளைப் பெருக்க வேண்டும். வேளாண்மையைச் சார்ந்த சிறு தொழில்களையும், குடிசைத் தொழில்களையும் ஏற்படுத்த வேண்டியது அவசியம். இவற்றின் வாயிலாக வேளாண்மை வளர்ச்சி ஏற்றம் பெறும். ஆனால், மேம்பாட்டுச் சாகுபடி முறையில் முன்னேற்றமான தொழில் நுட்பங்களும், நல்ல விதைகளும், உரங்களும் பயன் படுத்தப்படும்போது உபரி உழைப்பாளர்கள் வேளாண்மையினின்றும் வெளியேற்றப்படுவர் என்பது குறிப்பிடத்தக்கது.

மேற் குறிப்பிடப்பட்டவைகளின்றும் சில உண்மைகள் புலப்படுகின்றன. எந்த ஒரு நாட்டிலும் விரைந்த பொருளாதார முன்னேற்றத்தைப் பெறத் தொழில் வளர்ச்சி அவசியமானது; தொழில் வளர்ச்சிக்கு முன்னர் வேளாண்மை முன்னேற்றம் ஏற்பட வேண்டும். அல்லது தொழில் வளர்ச்சி வீதத்திற்கு ஏற்ப வேளாண்மை வளர்ச்சி வீதம் பொருந்தியிருக்க வேண்டும். அஃதாவது வேளாண்மை, தொழில் துறைகளுக்கிடையே சரிசம வளர்ச்சி இருத்தல் நல்லது.

இரண்டாவது, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டங்கள் நமக்குச் சில படிப்பினைகளை உணர்த்தின. இரண்டாவது திட்டத்தில் தொழில் துறை முன்னேற்றத்திற்கு முதல் முக்கியத்துவம் அளிக்கப்பட்டு வேளாண்மையில் குறைந்த முதலீடு செய்யப்பட்டமையால் தோல்வியே ஏற்பட்டது. மூன்றாவது திட்டம் தோல்வியடைந்தமைக்கும் குறைந்த வேளாண்மை உற்பத்தியே முக்கியக் காரணமாகும். திட்டங்கள் வெற்றி பெறச் சிறந்த வேளாண்மை அடிப்படை தேவை என்பதை அரசு அறிந்தது. அதன் விளைவாக, நான்காவது திட்டத்தில் வேளாண்மை வளர்ச்சிக்கு அதிக முக்கியத்துவம் தரப்பட்டுள்ளது. திட்டங்களின் வெற்றி வேளாண்மை உற்பத்தியுயர்வைச் சார்ந்திருக்கின்றது.

பொருளாதார முன்னேற்றத்தின் தொடக்க நிலையில் வேளாண்மை வளர்ச்சியிலேயே கவனத்தைச் செலுத்த வேண்டும்.

முதலாவதாக, வேளாண்மையில் மூலதன-உற்பத்தி வீதம் (Capital-Output Ratio) உயர்வாக இருப்பதில்லை. எனவே, குறைந்த அளவு மூலதனத்தைக் கொண்டே எளிதில் உற்பத்தியைப் பல மடங்கு பெருக்கலாம். தொடக்க நிலையில் மக்கள் வருமான உயர்வைப் பெற இது உதவும். இதன் காரணமாக வேளாண்மையில் அதிக முதலீட்டைச் செய்வது நன்மை பயக்கும்.

இரண்டாவதாக, ஒரு நாட்டில் சேமிப்பு, முதலீட்டு வீதங்களை உயர்த்த வேண்டுமானால் வேளாண்மைத் துறையின் சேமிப்பு, முதலீட்டு வீதங்களை உயர்த்துவது அவசியம்.

மூன்றாவதாக, தொழில் முன்னேற்றத்திற்கு அதிக அந்நியச் செலாவணி தேவைப்படுகின்றது. ஆனால், அந்நியச் செலாவணி இன்றி வேளாண்மை வளர்ச்சியைப் பெற இயலும். இந்தியாவில் அந்நியச் செலாவணி பற்றாக்குறை நிலையில் இருக்கின்றது. எனவே, வேளாண்மை வளர்ச்சியிலேயே நாம் கவனத்தைச் செலுத்த வேண்டும்.

தேசிய வருமானத்தில் சுமார் 45 சதவீதத்திற்கு மேலாக வேளாண்மையினின்றும் பெறப் படுகின்றது. வேளாண்மையில் விரைவான வளர்ச்சியின்றி கிராமப் பொருளாதாரத்தின் வருமானத்தை உயர்த்த முடியாது. இதன்மூலம் தலா வருமானத்திலும் முன்னேற்றத்தைக் காணலாம்.

**இந்திய வேளாண்மையில் தற்போதைய நிலை**

நம் நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தில் வேளாண்மை முக்கியப் பங்கைக் கொண்டிருக்கின்றது. இதைத் திட்டமிடுபவர்கள் நன்கு உணர்ந்திருக்கின்றனர். இதனால்தான், திட்டங்களில் வேளாண்மை வளர்ச்சிக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப்படுகின்றது. 'முன்னணியில் இருக்கும் இன்றைய தொழில் நாடுகள் யாவும் ஆரம்ப நிலையில் வேளாண்மைப் பொருளாதாரத்தையே கைக்கொண்டிருந்தன; வேளாண்மை வளர்ச்சியின் அடிப்படையில் தான் அவை தொழில் முன்னேற்றத்தைப்பெற்றன.'[1] இந்தியாவில் கணிசமான அளவிற்குக்கூட வேளாண்மை வளர்ச்சியில் வெற்றி காண முடியவில்லை. ஆனால், பிற துறைகளின் முன்னேற்றம் குறிப்பிடத்தக்க அளவில இருக்கின்றது. வேளாண்மையின் வளர்ச்சி குன்றிய நிலை மற்ற துறைகளின் முன்னேற்றத்தைத்

[1] P. T. Bauer and B.S. Yamey, 'The Economics Of Underdeveloped Countries,' 1957, p. 235.

தடைசெய்கின்றது. இருபது ஆண்டுகளுக்கு மேலாகத் திட்டங்களில் வேளாண்மைக்கு அதிக முக்கியத்துவம் அளித்த பின்னரும் உணவு உற்பத்தியில் நம்மால் தன்னிறைவைப் பெறமுடியவில்லை. உணவுப் பொருள்கள் அயல்நாடுகளினின்றும் இறக்குமதி செய்யப்கின்றன.

இந்தியாவின் மொத்த நிலப்பரப்பு 812½ மில்லியன் ஏக்கர்கள் ஆகும். இந்த நிலப்பரப்பில் பாதிக்குக் குறைவான நிலமே வேளாண்மைச் சாகுபடியில் ஈடுபடுத்தப்பட்டிருக்கின்றது.

முதல் திட்டத்தை வரைவதற்கு முன்னர், திட்டக்குழு பயிர்ச் சாகுப்படி நிலைகளைப் பற்றிய ஆய்வு ஒன்றைச் செய்தது. அதன் மூலம் பின்வரும் உண்மை நிலைகள் உணரப்பட்டன.

1. 1940 முதல் 1950 வரை உணவுத் தானியங்கள் உற்பத்தி செய்யப்பட்ட சாகுபடி நில அளவு சிறிது கூடியது; ஆனால், பருத்தி உற்பத்தியில் அமைந்திருந்த நிலத்தின் அளவு குறைந்தது.

2. இரண்டு உலகப் போர்க் காலங்களிலும் பருத்திச் சாகுபடியின்கீழ் இருந்த நில அளவு குறைந்தது. போர் முடிவடைந்த பின்னர், இதற்கு எதிரான நிலை தோன்றியது.

3. எண்ணெய் வித்துகள் (குறிப்பாக நிலக்கடலை) உற்பத்தி செய்யப்பட்ட நிலத்தின் அளவு, சுமார் 4 மில்லியன் ஏக்கர்கள் என்ற அளவுக்கு அதிகரித்தது.

4. நாடு பிரிவினையடைந்த பின்னர் சணல் உற்பத்தியில் ஈடுப்படுத்தபட்டிருந்த நில அளவு ஒரு மில்லியன் ஏக்கர்கள் என்ற அளவுக்கு உயர்ந்தது. அரசு சணலின் தேவைக்கும், அளிப்புக்கும் நடுவில் இருந்த இடைவெளியைக் குறைக்க நடவடிக்கைகளை எடுத்ததே இதற்குக் காரணமாகும்.

5. கரும்பு உற்பத்திக்குப் பயன்படுத்தப்பட்ட நிலத்தின் அளவு சுமார் ஒரு மில்லியன் ஏக்கர்கள் என்ற அளவுக்கு அதிகரிக்கப்பட்டது.

பல இடங்களில் புதிய நிலங்கள் சாகுபடியின் கீழ்க் கொண்டு வரப்பட்டதோடு இருபோகச் சாகுபடி முறையும் பின்பற்றப்பட்டது. 1940 முதல் 1950 வரையிலான அக்காலத்தில் விலையளவுகள் உற்பத்திக்கு ஊக்கமளிப்பதாக இல்லை. பெரும்பாலான விவசாயி

கள் மிகச்சிறிய அளவு நிலங்களில் சாகுபடி செய்தார்கள். விலை மாற்றங்கள், சாகுபடியாளர்களின் நிதி வசதி, தட்பவெப்ப மாற்றங்கள் ஆகியவற்றிற்கேற்ப உணவுப் பொருள்களோ அல்லது வாணிபப் பொருள்களோ உற்பத்தி செய்யப்பட்டன.

## வேளாண்மை உற்பத்தித் திறனும், உற்பத்தித் திறன் வேறுபாடுகளும்

வேளாண்மை உற்பத்தித் திறனை இரு வேறு நிலைகளில் ஆய்வு செய்யலாம். அவை ஓர் ஏக்கருக்கான உற்பத்தித் திறனையும் (அதாவது நில உற்பத்தித் திறன்), ஓர் உழைப்பாளருக்கான உற்பத்தித் திறனையும (அதாவது உழைப்பின் உற்பத்தித் திறன்) கண்டறிவதாகும். இந்தியாவில் நிலத்தின் உற்பத்தித் திறனும் உழைப்பின் உற்பத்தித் திறனும் மிகத் தாழ்வாகவே இருக்கின்றன. வேளாண்மை உற்பத்தித் திறன் குறைவாக இருக்கின்ற நிலையே விரைவான பொருளாதார முன்னேற்றத்திற்குத் தடையாக அமைகின்றது.

வேளாண்மை உற்பத்தித் திறனைப் பற்றி விளக்கமாக ஆராய்வதற்கு முன்னர், நம் நாட்டில் உற்பத்தியாகின்ற முக்கியப் பயிர்களைப்பற்றி அறிவது நல்லது. 1950-51, 1960-61, 1968-69 ஆகிய ஆண்டுகளில் அப் பயிர்கள் உற்பத்தி செய்யப்பட்ட நிலத்தின் அளவும், அவற்றின் உற்பத்தி அளவும் பின்வரும் அட்டவணையில் கொடுக்கப்பட்டுள்ளன ■

வேளாண்மை உற்பத்தித்திறன் மதிப்பின் அடிப்படையில் கருதப்படுவதில்லை. உற்பத்தியின் அளவு மட்டுமே கணக்கில் எடுத்துக் கொள்ளப்படுகின்றது. இந்தியாவில் உற்பத்திக் காரணிகள் தரக்குறைவாகப் பயன்படுத்தப்படுகின்றன. அவை போதுமான அளவில் திறமையாகப் பயன்படுத்தப்படுவதில்லை. மூலதனத்தின் உற்பத்தித் திறன் குறைவாக இருக்கின்றமைக்கு வளமிழந்த நிலம் ஒரு காரணமாகிறது. விவசாயிகள் திறமை குறைந்தவர்களாகவும், பழைமை வாதிகளாகவும் உள்ளனர். உழைப்பின் உற்பத்தித் திறன் குறைவாக உள்ளமைக்குச் செழுமை குறைந்த நிலமும் குறைந்த உள்ளீடும் காரணங்களாகின்றன. நம நாட்டில் ஒரு வேளாண்மை உழைப்பாளர் ஆண்டு உற்பத்தி மதிப்பு $ 105 ஆகும். இஃது இங்கிலாந்தில் $ 2,057, அமெரிக்காவில் $ 2,408, ஜப்பானில் $ 2,265 என்ற அளவுகளில் இருக்கின்றது. இதைப்போன்றே, பிற நாடுகளோடு ஒப்பிடும்போது

■ அட்டவணை 226ஆம் பக்கத்தில் காண்க.

## வேளாண்மைப் பொருள்களின் சாகுபடி [redacted] அளவும், உற்பத்தி அளவும்[1]

[redacted] பக்கம் 224-க்குரியது

| | 1950-51 | | 1955-56 | | 1960-61 | | 1968-69 | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | பரப்பளவு (ஹெக்டேர்) | [redacted] ற்பத்தி (டன்கள்) | பரப்பளவு (ஹெக்டேர்) | உற்பத்தி (டன்கள்) | பரப்பளவு (ஹெக்டேர்) | உற்பத்தி (டன்கள்) | பரப்பளவு (ஹெக்டேர்) | உற்பத்தி (டன்கள்) |
| **உணவுத் தானியங்கள்** | | | | | | | | |
| 1. அரிசி | 30,510 | 23,542 | 31,521 | 27,557 | 34,128 | 34,574 | 36,937 | 39,761 |
| 2. கோதுமை | 9,758 | 6,391 | 12,367 | 8,760 | 12,927 | 10,997 | 15,958 | 18,651 |
| 3. சோளம் | 15,513 | 5,870 | 17,362 | 6,726 | 18,412 | 9,814 | 18,731 | 9,804 |
| 4. கம்பு | 9,259 | 2,835 | 11,338 | 3,428 | 11,469 | 3,283 | 12,052 | 3,802 |
| 5. மக்காச்சோளம் | 3,262 | 2,046 | 3,096 | 2,602 | 4,407 | 4,080 | 5,716 | 5,701 |
| 6. கேழ்வரகு | 2,203 | 1,544 | 2,307 | 1,846 | 2,515 | 1,838 | 2,238 | 1,648 |
| 7. பார்லி | 3,181 | 2,251 | 3,418 | 2,816 | 3,205 | 2,819 | 2,758 | 2,424 |
| 8. சிறிய தானியங்கள் | 5,415 | 2,278 | 5,335 | 2,070 | 4,955 | 1,969 | 4,746 | 1,804 |
| மொத்த தானியங்கள் | 79,113 | 46,757 | 87,344 | 55,805 | 92,018 | 69,314 | 99,166 | 83,595 |
| **பருப்பு வகைகள்** | | | | | | | | |
| 9. பயறு | 8,295 | 3,726 | 9,779 | 5,418 | 9,276 | 6,250 | 7,105 | 4,309 |
| 10. பிற பருப்புகள் | 11,872 | 4,433 | 13,437 | 5,627 | 14,287 | 6,454 | 14,159 | 6,109 |
| மொத்த பருப்பு வகைகள் | 20,167 | 8,159 | 23,216 | 11,045 | 23,563 | 12,704 | 21,264 | 10,418 |
| மொத்த உணவுத் தானியங்கள் (தானியங்களும், பருப்புகளும்) | 99,280 | 54,916 | 110,560 | 66,850 | 115,581 | 82,018 | 120,430 | 94'013 |

1 Reserve Bank of India, Report [redacted] Currency and Finance for the year 1969-70, pp. S—14—S—15.

முன் பக்கத் தொடர்ச்சி

| | 1950.51 | | 1955.56 | | 1960.61 | | 1968.69 | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | பரப்பளவு *(ஹெக்டேர்) | உற்பத்தி (டன்கள்) | பரப்பளவு (ஹெக்டேர்) | உற்பத்தி (டன்கள்) | பரப்பளவு (ஹெக்டேர்) | உற்பத்தி (டன்கள்) | பரப்பளவு (ஹெக்டேர்) | உற்பத்தி (டன்கள்) |
| வாணிபப் பயிர்கள் | | | | | | | | |
| 11. கரும்பு | 1.707 | 5,705 | 1,847 | 6,075 | 2,415 | 11,141 | 2,461 | 117,572 |
| 12. எண்ணெய் வித்துகள் | 16,609 | 6,171 | 20,171 | 7,125 | 21,380 | 8,847 | 22,270 | 8,821 |
| (i) நிலக்கடலை | 4,494 | 3,481 | 5,113 | 3,862 | 6,463 | 4,812 | 7,091 | 4,476 |
| (ii) கடுகு | 2,071 | 762 | 2,556 | 860 | 2,883 | 1,347 | 2,992 | 1,575 |
| (iii) எள் | 2,204 | 445 | 2,293 | 467 | 2,169 | 318 | 2,410 | 415 |
| (iv) ஆளி விதை | 1,403 | 367 | 1,529 | 420 | 1,789 | 398 | 1,708 | 352 |
| (v) ஆமணக்கு விதை | 555 | 103 | 574 | 125 | 466 | 107 | 384 | 111 |
| 13. பருத்தி | 5,882 | 2,875 | 8,086 | 3,919 | 7,610 | 5,293 | 7,685 | 5,270 |
| 14. சணல் | 571 | 3,309 | 704 | 4,232 | 629 | 4,134 | 529 | 3,052 |
| 15. மெஸ்தா | ... | ... | 231 | 1,162 | 274 | 1,129 | 277 | 907 |
| 16. தேயிலை | 317 | 279 | 321 | 308 | 331 | 321 | 351 | 402 |
| 17. காஃபி | 93 | 19 | 103 | 35 | 120 | 68 | ... | 78 |
| 18. ரப்பர் | 69 | 16 | 84 | 24 | 130 | 26 | 188 | 32 |
| 19. புகையிலை | 357 | 261 | 410 | 303 | 401 | 307 | 412 | 347 |

* ஒரு ஹெக்டேர் = 2.47 ஏக்கர்கள்

இந்தியாவில் ஓர் ஏக்கருக்கான உற்பத்தியும் மிகக் குறைவாக உள்ளது. ஒரு ஹெக்டேருக்கான உற்பத்தி பிற நாடுகளில் இந்தியாவில் இருப்பதைப் போன்று $1\frac{1}{2}$ முதல் $4\frac{1}{2}$ மடங்கு அதிகமாக இருக்கின்றது.

1950 முதல் பயிர்களின் உற்பத்தியில் இந்தியா ஓரளவு முன்னேற்றத்தைக் கண்டு வருகின்றது. உதாரணமாக, வேளாண்மை உற்பத்திக் குறியீட்டெண் (அடிப்படை: 1949—50=100) படிப்படியாக அதிகரித்தது. 1967—68 ஆம் ஆண்டில் கோதுமை உற்பத்திக் குறியீட்டெண் 160.6 ஆகவும், அரிசிக்கான குறியீட்டெண் 125.8 ஆகவும், எண்ணெய் வித்துகளுக்கான குறியீட்டெண் 104 ஆகவும், கரும்பிற்கான குறியீட்டெண் 120.2 ஆகவும், புகையிலைக்கான குறியீட்டெண் 113.9 ஆகவும், பருத்திக்கான குறியீட்டெண் 130 3 ஆகவும், எல்லாப் பொருள்களுக்குமான குறியீட்டெண் 126 6 ஆகவும் உயர்ந்தன. ஆயினும், பிற நாடுகளோடு ஒப்பிடுகையில் இவற்றின் உற்பத்தி மிகக் குறைவானது என்பதை நன்கு அறியலாம்.

பின்வரும் அட்டவணையில் இந்தியாவிலும், அயல் நாடுகளிலும் 1960 ஆம் ஆண்டின் சில முக்கியப் பயிர்களின் [illegible] ஹெக்டேருக்கான உற்பத்தி கொடுக்கப்பட்டுள்ளது.[1]

| பொருள் | நாடு | 1960—61 | 199.68 (குவின்டால்களில்) |
|---|---|---|---|
| கோதுமை | இந்தியா | 8.5 | ... 11.1 |
| | அமெரிக்கா | 17.6 | |
| | கனடா | 14.2 | |
| | ரஷ்யா | 11.0 | |
| | ஃபிரான்ஸ் | 10.6 | |
| | நெதர்லாந்து | 25 3 | |
| | இத்தாலி | 14.9 | |
| | ஆஸ்திரேலியா | 13.1 | |
| அரிசி | இந்தியா | 10.1 | ... 10.31 |
| | ஜப்பான் | 48.6 | |

1 Food and Agriculture Organisation.

| பொருள் | நாடு | 1960—61 | 199.68 (குவின்டால்களில்) |
| --- | --- | --- | --- |
| | பர்மா | 16.2 | |
| | அரேபியா | 50.1 | |
| | ஆஸ்திரேலியா | 61.1 | |
| நிலக்கடலை | இந்தியா | 7.1 | ... 7.7 |
| | இந்தோனேசியா | 11.7 | |
| | அமெரிக்கா | 14.2 | |
| | அர்ஜென்டினா | 14.0 | |
| பருத்தி | இந்தியா | 1.2 | — 1.2 |
| | அமெரிக்கா | 6.1 | |
| | அரேபியா | 5.1 | |
| | சூடான் | 2.7 | |
| கரும்பு | இந்தியா | 444.4 | ... 475.6 |
| | ஹவாய் | 1963.1 | |
| | மெக்ஸிகோ | 563.5 | |
| | ஆஸ்திரேலியா | 674.9 | |
| புகையிலை | இந்தியா | 7.3 | ... 8.6 |
| | ஜப்பான் | 20.5 | |
| | அமெரிக்கா | 19.1 | |
| | கனடா | 17.7 | |
| | இத்தாலி | 15.0 | |
| | ரஷ்யா | 12.8 | |

உலக நாடுகளிலேயே மிகக் குறைந்த அளவில் நிலத்தின் உற்பத்தித் திறனைக் கொண்டது இந்தியாவே ஆகும். இந்தியா அதிகமாக உற்பத்தி செய்யும் பயிர்களிலும் இந்த நிலை பொருந்தியுள்ளது. திட்டங்கள் நிறைவேற்றப்பட்ட பின்னரும்கூட வெவ்

வேறு ஆண்டுகளிலும் உற்பத்தி குறைந்து இருப்பதைப் பின் வரும் அட்டவணை விளக்குகின்றது.

சில நாடுகளில் முக்கியப் பயிர்களின் உற்பத்தி அளவு (1962—63)

| பொருள் | நாடு | | ஒரு ஹெக்டேருக்கான உற்பத்தி (கிலோ கிராம்களில்) |
|---|---|---|---|
| அரிசி | இந்தியா | — | 13,800 |
| | ஜப்பான் | — | 52 600 |
| | ஸ்பெயின் | — | 62,200 |
| | உலகம் | — | 19,900 |
| கோதுமை | இந்தியா | — | 8,900 |
| | ஃபிரான்ஸ் | — | 30,700 |
| | நெதர்லாந்து | — | 45,500 |
| | உலகம் | — | 12,600 |
| பருத்தி | இந்தியா | — | 1,200 |
| | எகிப்து | — | 6 600 |
| | இஸ்ரேல் | — | 9,700 |
| | உலகம் | — | 3,300 |
| நிலக்கடலை | இந்தியா | — | 6,900 |
| | அமெரிக்கா | — | 14 400 |
| | இஸ்ரேல் | — | 35,200 |
| | உலகம் | — | 8,800 |

[redacted] நாடுகளில் பலவகைப் பயிர்களிலும் ஒரு ஹெக்டேருக் [redacted] உற்பத்தி மிகக் குறைவாக இருப்பது இந்தியாவில் மாத்திரமே ஆகும். நிலம் சத்திழந்துள்ளமை இதற்கு முக்கியக் காரணம். நிலத்தின் செழுமைத்தன்மை உரங்களின்மூலம் காக்கப் படவில்லை.

சில குறிப்பிட்ட நாடுகளின் உற்பத்தித்திறன்
(1966–67)[1]

| பொருள் | | நாடு | | ஒரு ஹெக்டேருக்கான உற்பத்தி (கிலோ கிராம்களில்) |
|---|---|---|---|---|
| அரிசி | — | இந்தியா | — | 1,290 |
| | | ஜப்பான் | — | 5.090 |
| | | அமெரிக்கா | — | 4,850 |
| கோதுமை | — | இந்தியா | — | 890 |
| | | இங்கிலாந்து | — | 3,840 |
| | | பிரான்ஸ் | — | 2,830 |
| மக்காச் சோளம் | — | இந்தியா | | 960 |
| | | அமெரிக்கா | — | 4 540 |
| | | பிரான்ஸ் | — | 4,000 |
| பருத்தி | — | இந்தியா | — | 110 |
| | | ரஷ்யா | — | 830 |
| | | மெக்ஸிகோ | — | 790 |
| நிலக்கடலை | — | இந்தியா | — | 600 |
| | | ஜப்பான் | — | 2,140 |
| | | அமெரிக்கா | — | 1,900 |

பிற நாடுகளோடு ஒப்பிடும்போது இந்தியாவில் உற்பத்தி குறைவாக உள்ளதை உணரலாம். அதோடுகூடப் பண்டைக் காலங்களோடு ஒப்பிடும்போதும் தற்போதுள்ள உற்பத்தியளவு குறைவானது என்று சொல்லப்படுகின்றது. இது குறித்து உணவு, வேளாண்மை அமைப்பு (Food and Agriculture Organisation) ஆய்வு ஒன்றைச் செய்தது. அதன் மூலம் ஓர் ஏக்கருக்குத் தற்போதுள்ள அரிசி உற்பத்தியைக் காட்டிலும் மொகலாய மன்னர்களின் ஆட்சிக் காலத்தில் 50 சதவீதம் அதிகமாகப் பெறப்பட்டதை அறிகின்றோம், பல காலம்வரை இந்தியா எவ்வித வளர்ச்சியையும் பெற்றில்லாத தேக்க நிலைப் பொருளாதாரத்தைக்

[1] Indian Agriculture In Brief, 1968, pp. 235–39.

நாடுகளுக்கிடையே சில பயிர்களின் உற்பத்தியளவு பற்றிய ஒப்பீடு: 1965[1]

(ஓர் அலகு நிலத்தின் உற்பத்தியளவுகள்)

(இது * குறியிட்ட இடத்திற்குரியது - பக்கம் 232)

| நாடு | அரிசி | கோதுமை | மக்காச் சோளம் | பார்லி | பருத்தி | புகையிலை |
|---|---|---|---|---|---|---|
| இந்தியா | 13.1 | 9.1 | 9.9 | 9.4 | 1.1 | 8.7 |
| இஸ்ரேல் | — | 20.9 | 39.0 | 12.9 | 12.3 | 5.4 |
| ஜப்பான் | 49.5 | 27.0 | 25.0 | 29.2 | 1.0 | 22.4 |
| அரேபியா | 41.8 | 27.7 | 30.3 | 24.6 | 6.5 | — |
| அமெரிக்கா | 47.7 | 17.9 | 46.3 | 23.1 | 5.9 | 21.3 |
| இத்தாலி | 40.2 | 22.8 | 32.3 | 15.3 | 3.1 | 13.3 |
| ஃபிரான்ஸ் | 32.9 | 32.7 | 39.8* | 30.4 | — | 23.0 |
| மேற்கு ஜெர்மனி | — | 30.8 | 35.9 | 28.2 | — | 23.5 |
| ஆஸ்திரேலியா | 61.4 | 10.0 | 14.3 | 10.2 | — | 12.2 |
| நியூஸிலாந்து | — | 33.6 | 60.0 | 30.1 | — | 19.0 |

[1] F. A. D., Production year Book, 1966.

கொண்டிருந்தது. தமிழ்நாட்டில் 18 ஆம் நூற்றுண்டின் இறுதியிலும், 19 ஆம் நூற்றுண்டின் தொடக்கத்திலும் ஓர் ஏக்கருக்கான அரிசி உற்பத்தி இப்போதுள்ள அளவைவிட 30 முதல் 50 சதவீதம் அதிகமாக இருந்ததாகச் சில கணக்கெடுப்புகள் குறிப்பிடுகின்றன.

இரண்டாவது உலகப் போருக்குப் பின்னரும் வேளாண்மை உற்பத்தித் திறன் குறையத் தலைப்பட்டது. 1946-47 ஆம் ஆண்டிற்கும் 1949-50 ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் ஓர் ஏக்கருக்கான தானியங்கள் உற்பத்தி 619 பவுண்டுகளிலிருந்து 565 பவுண்டுகளாகக் குறைந்தது என்பதை முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் மதிப்பீடு உணர்த்தியது. இவ்வுற்பத்தி அளவுகள் 1939 ஆம் ஆண்டிற்கு முன்னரான உற்பத்தி அளவுகளை விடக் குறைவானவை. உணவு உற்பத்திப் பெருக்க விசாரணைக் குழுவின்' (Grow More Food Enquiry Committee) ஆய்வும் இதையே அறிவுறுத்தியது. •

இந்தியாவில் உள்ள மொத்த நிலப்பரப்பில் சாகுபடி நிலத்தின் வீதம் அதிகமாக இருக்கின்றது. எனினும் மொத்த வேளாண்மை உற்பத்தி குறைவாகவே உள்ளது. ஓர் ஏக்கருக்கான அரிசி உற்பத்தி நம் நாட்டில் 1,200 பவுண்டுகளாக மட்டுமே இருக்கிறது. இது மலேயாவில் 2,000, அமெரிக்காவில் 3,200, எகிப்தில் 3,333, ஜப்பானில் 3,533, ஸ்பெயினில் 5,200, என்ற அளவுகளில் அமைந்துள்ளது. ஓர் ஏக்கரின் கோதுமை உற்பத்தி இந்தியாவில் 700, அமெரிக்காவில் 1,300, ஜப்பானில் 1,900, ஃபிரான்சில் 2,100, மேற்கு ஜெர்மனியில் 2800, இங்கிலாந்தில் 2800, பவுண்டுகளாகவும், ஓர் ஏக்கருக்கான கரும்பு உற்பத்தி க்யூபாவில் 32,000, ஹவாயில் 1,78,000 பவுண்டுகளாகவும், ஓர் ஏக்கருக்கான பருத்தி உற்பத்தி இந்தியாவில் 90, பாகிஸ்தானில் 190, அமெரிக்காவில் 390, எகிப்தில் 490, ரஷ்யாவில் 630 பவுண்டுகளாகவும் இருக்கின்றன. நம் நாட்டில் உற்பத்தித் திறனைப் பெருக்குவதற்கான வாய்ப்புகள் ஏராளமாக உள்ளன. அவற்றுள் நில வளத்தை உரங்களின் மூலம் காப்பது சிறந்த முறையாகும்.

### வேளாண்மையில் உழைப்பாளரின் உற்பத்தித் திறன்

இந்திய வேளாண்மையில் உழைப்பாளரின் உற்பத்தித் திறனும் தாழ்வாக இருக்கின்றது. இதை நன்கு உணர்த்தும் புள்ளி விவரங்களும் கிடைக்கப் பெறுகின்றன.[1] 1950-51 ஆம் ஆண்டில்

[1] Report of The Committee on Distribution Of Income and Levels of Living.

• 231 ஆம் பக்கத்தில் உள்ள அட்டவணையைக் காண்க.

வேளாண்மை உழைப்பாளர்களின் சராசரி வருமானம் ரூ. 300, கொல்லர்கள், தச்சர்கள், சக்கிலியர்கள் முதலிய வேளாண்மையல்லாத உழைப்பாளர்களின் வருமானம் ரூ. 600 முதல் ரூ. 765 என்ற அளவுகளில் இருந்தன. சுரங்கத் தொழிலில் ஈடுபட்டிருந்த உழைப்பாளர்களின் ஆண்டு வருமானம் ரூ. 970 ஆக இருந்தது. உழைப்பாளரின் உற்பத்தி அதிகமாகவும், ஊதியம் குறைவாகவும் இருக்க வாய்ப்பு உண்டு. எனவே, உழைப்பாளர்களுடைய வருமானத்தின் அடிப்படையில் உற்பத்தித் திறனைக் கணக்கிடுவது தவறு என்று சொல்லப்படுகிறது.

'தேசிய வருமானக் குழு' (National Income Committee), 1950-51 ஆம் ஆண்டில் வெவ்வேறு தொழில்களிலும் ஓர் உழைப்பாளருக்கான உற்பத்தித் திறனைக் கணக்கிட்டது. அக்கணக்கெடுப்பின்படி, வேளாண்மையில் ஈடுபட்டுள்ள உழைப்பாளரின் உற்பத்தித் திறன் 500 ரூபாய்க்குச் சமமாகவும், சுரங்கத் தொழில் முதலிய பெரிய தொழில்களில் ரூ. 1,700 ஆகவும், சிறிய தொழில்களில் ரூ. 800 ஆகவும், வாணிபம், போக்குவரத்து, செய்தித் தொடர்பு ஆகியவற்றில் அமைந்துள்ள உழைப்பாளரின் உற்பத்தித் திறன் 1,500 ரூபாய்க்குச் சமமாகவும் இருந்தன. வேளாண்மை உழைப்பாளரின் உற்பத்தித் திறன் குறைவாகவும், பிற துறைகளில் உழைப்பாளரின் உற்பத்தித் திறன் உயர்வாகவும் இருப்பதை இதன் மூலம் அறியலாம்.

டாக்டர் பல்ஜித் சிங், இந்தியாவில் உள்ள வேளாண்மை உழைப்பாளரின் உற்பத்தித் திறனைப் பிற நாடுகளோடு ஒப்பிடுகின்றார். இந்தியாவில் ஓர் ஆண்டிற்கான உழைப்பாளரின் சராசரி உற்பத்தித் திறன் வேளாண்மையில் $ 105 ஆகும்; இது மேற்கு ஜெர்மனியில் $ 3,495 ஆக உள்ளது. இந்திய வேளாண்மை உழைப்பாளரின் உற்பத்தித் திறனைவிட, இது 33 மடங்கு அதிகமானது.

**வேளாண்மையில் ஓர் ஆண்டிற்கான சராசரி உழைப்பாளரின் உற்பத்தித் திறன்** [1]

(அமெரிக்க டாலர்களில்)

| நாடு | | சராசரி உற்பத்தித்திறன் |
|---|---|---|
| இந்தியா | ... | 105 |
| நார்வே | ... | 973 |
| இங்கிலாந்து | ... | 2,057 |

[1] Dr. Baljit Singh, 'Next Step in Village India' p. 42.

| நாடு | | சராசரி உற்பத்தித்திறன் (டாலர்களில்) |
|---|---|---|
| கனடா | ... | 2,126 |
| ஜப்பான் | ... | 2,265 |
| அமெரிக்கா | ... | 2,408 |
| நியூசிலாந்து | .... | 3,481 |
| மேற்கு ஜெர்மனி | ... | 3,495 |

அதிக உழைப்பாளர்கள் வேளாண்மையில் ஈடுபட்டிருப்பதாலும் உற்பத்தித் திறன் குறைவாக உள்ளது. இதன் காரணமாகப் பொருளாதார ரீதியில் சிக்கனங்கள் கிடைக்கப் பெறுவதில்லை. வேளாண்மையில் அமைந்திருக்கும் 'மறைமுக வேலையின்மை' பல சிக்கல்களைத் தோற்றுவிக்கின்றது.

மொத்த வேளாண்மை உற்பத்தி, வேளாண்மை உழைப்பாளர்களின் எண்ணிக்கை ஆகியவற்றைத் தொடர்புபடுத்தியும் உற்பத்தித் திறன் அறியப்படுகின்றது.

நிலத்தில் முன்னேற்றத்தைச் செய்ய முடியாத அளவிற்கு விவசாயிகள் வறுமையில் வாழ்கின்றனர்.

'அகில இந்தியக் கிராமக் கடன் கணக்கெடுப்பு அறிக்கை (All India Rural Credit Survey Report) 'இந்தியா கிராமப் பொருளாதாரத்தை முக்கியமானதாகக் கொண்டுள்ளது; கிராமப் பொருளாதாரத்தில் சாகுபடியாளர்கள் முக்கியத்துவம் பெற்றவர்களாகின்றனர்' என்று குறிப்பிட்டது. 'நம் நாட்டில் தலா ஒருவருக்கான நிலப்பரப்பு 1.84 ஏக்கர்களாகவும், தலா ஒருவருக்கான சாகுபடி நிலப்பரப்பு 0.75 ஏக்கராகவும் உள்ளன. பிற நாடுகளோடு ஒப்பிடும்போது இதைத் தாழ்வான நிலை என்று கருத இயலாது. ஜப்பானில் தனி ஒருவருக்கான சாகுபடி நிலம் 0.17 ஏக்கராகவும் இங்கிலாந்தில் 0.42 ஏக்கராகவும் மேற்கு ஜெர்மனியில் 0.48 ஏக்கராகவும் மட்டுமே உள்ளது. தலா ஒருவருக்கான நில அளவு அமெரிக்காவில் 2.68 ஏக்கர்களாகவும் சோவியத் ரஷ்யாவில் 2.59 ஏக்கர்களாகவும், இருக்கின்றது.

இந்தியாவில் நிலப் பங்கீட்டு முறை சிறப்பாக இல்லை. உதாரணமாக, சாகுபடியாளர்களில் பெரிய சாகுபடியாளர்கள் சுமார் 30 சதவீதம் என்ற அளவுக்கு இருக்கின்றனர். அவர்கள்

மொத்தச் சாகுபடி நிலத்தில் சுமார் 58 சதவீதத்தை உடைமையாகக் கொண்டுள்ளார்கள். நடுத்தரச் சாகுபடியாளர்கள் (40%) 30 சதவீதத்திற்குக் குறைவான நிலத்தையும், சிறிய சாகுபடியாளர்கள் (30%) சுமார் 10 சதவீத சாகுபடி நிலத்தையும் பயிரிடுகின்றார்கள். பெரிய விவசாயிகள் சராசரி 30 ஏக்கர்களையும், நடுத்தர விவசாயிகள் சுமார் 6 ஏக்கர்களையும், சிறிய விவசாயிகள் சராசரி 3 ஏக்கர்களையும் உடைமையாகப் பெற்றிருக்கின்றனர்.

இந்திய வேளாண்மையில் சிறப்பான சாகுபடி முறைகள் பின்பற்றப்படுவதில்லை. விஞ்ஞான முறையில் உரங்கள் இடுவதை விவசாயிகள் அறிந்திருப்பதில்லை. நிலத்தை உள்பிரிவுபடுத்துவது வேளாண்மையில் உள்ள தொற்று நோயைப்போல இருக்கின்றது. மக்கள் தொகை பெருகும்போது உணவு உற்பத்தியைப் பெருக்குவது அவசியமாகிறது. வளரும் பொருளாதாரத்தில் தேசிய வருமானத்தை உயர்த்தவும் வேளாண்மை உதவும். குறிப்பிட்ட அளவிற்கு வேளாண்மை உற்பத்தியைப் பெருக்கினால் தான் 'தன்னைச் சார்ந்து தானே தொடர்ந்து உறுதியாக வளர்கின்ற' பொருளாதாரத்தைப் பெற முடியும்.

1900, 1945ஆம் ஆண்டுகளுக்கிடையே வேளாண்மை உற்பத்தி, சுமார் 12.6 சதவீதம் மட்டுமே அதிகரித்தது. திட்டக் காலத்தில் உற்பத்தியின் வளர்ச்சி வீதம் கணிசமாகக் கூடியுள்ளது. நம் நாட்டின் வளர்ச்சி வீதம் 3 சதவீதமாக மட்டுமே இருக்கின்றது. விரைவான முன்னேற்றத்தையும், தன்னிறைவு பெற்ற பொருளாதாரத்தையும் அடைவதற்கு வளர்ச்சி வீதம் ஆண்டொன்றுக்கு 5 சதவீதம் என்ற அளவிற்காவது இருக்கவேண்டும்.

இரண்டாவது உலகப் போர்க் காலத்திலிருந்து இந்தியாவில் உணவுத் தானியங்களின் உற்பத்தி 15 சதவீதம் அதிகரித்துள்ளது. அனைத்து வேளாண்மைப் பொருள்களின் உற்பத்தி 12.5 சதவீதம் கூடியுள்ளது. இதே காலத்தில் ஐரோப்பாவில் வேளாண்மை உற்பத்தி சிறப்பான அளவிற்கு உயர்ந்தது. மேற்கு ஜெர்மனியில் 17 சதவீதமும், கிரீஸ் நாட்டில் 43 சதவீதமும் உற்பத்தி உயர்வு பெறப்பட்டது.

இந்தியாவில் வேளாண்மை உழைப்பாளர்களின் சராசரி உற்பத்தி குறைவானது; இறுதிநிலை உற்பத்தி அதைவிடக் குறைவாக இருக்கின்றது. பிற வேலை வாய்ப்புகள் இல்லாமையால் அதிகரிக்கின்ற மக்கள் தொகையின் பெரும்பகுதி வேளாண்மையைச் சார்ந்து அமைகின்றது. கிராம மக்களில் பெரும்பாலானவர்கள் வறுமையில் வாடுகின்றார்கள். அறியாமையில் உழலு

கின்றனர்கள். மூட நம்பிக்கைகளாலும், மத நம்பிக்கையாலும் அவர்களுடைய உழைக்கும் திறன் பாதிக்கப்படுகின்றது. குறைந்த வேளாண்மை உற்பத்திக்கு இவையும் காரணங்களாகின்றன.

இந்திய வேளாண்மை உழைப்பாளர்களின் இறுதி நிலை உற்பத்தி 'பூஜ்யம்' என்ற நிலையிலும், எதிர் வீதத்திலும் இருப்பதாகச் சில பொருளியலாளர்கள் கூறுகின்றனர். ஆனால், இதற்கான புள்ளி விவரங்கள் கிடைக்கப்பெறவில்லை. எனினும், இந்திய வேளாண்மையில் உபரி உழைப்பாளர்கள் இருக்கின்றனர்; அவர்களை மூலதனத் திரட்சியைப் பெறுவதற்குப் பயன்படுத்தலாம் என்பதைப் பலரும் ஏற்றுக்கொண்டுள்ளார்கள். உபரி உழைப்பாளர்களை நீக்குவதால் வேளாண்மை உற்பத்தி பாதிக்கப்படாது. இதனால், அவர்களுடைய உற்பத்தி 'பூஜ்யம்' என்ற நிலையில் இருப்பதை அறியலாம். உபரி உழைப்பாளர்களை வெளியேற்றுவதன்மூலம் உற்பத்தியை அதிகரிக்கும் வாய்ப்பு உண்டு. இஃது உபரி உழைப்பாளர்களின் உற்பத்தி எதிர் வீதத்தில் இருப்பதை அறிவுறுத்தும். பேராசிரியர், நர்க்ஸ் இவ்வகை மறைமுக வேலையின்மையை மூலதனத் திரட்சியைப் பெறுவதற்குப் பயன்படுத்தலாம் என்று விளக்குகின்றார். அவருடைய விளக்கம் இந்தியா முதலிய வளரும் நாடுகளில் வேளாண்மை உழைப்பாளர்களின் இறுதிநிலை உற்பத்தி 'பூஜ்யம்' என்ற நிலையிலும், எதிர் வீதத்திலும் இருப்பதை உணர்த்துகின்றது.

### சுதந்திரமடைவதற்கு முன்னர் உற்பத்தி நிலைகள்

கிடைக்கக்கூடிய வேளாண்மைப் புள்ளி விவரங்கள் (தவறுடையதாகவும், முற்றுப் பெறாததாகவும் இருக்கக்கூடும்) 1901 முதல் 1947 வரையான காலத்தில் மக்கள் தொகைப் பெருக்கத்தோடு ஒப்பிடும்போது வேளாண்மை உற்பத்தி குறைவடைந்ததை விளக்குகின்றன. பின்வரும் அட்டவணை இதை உணர்த்தும்.

**இந்திய வேளாண்மையில் உற்பத்தி நிலைகள்** [1]

| காலம் | உற்பத்திக் குறியீடு (மக்கள் பெருக்கம்) | சராசரி ஆண்டு உற்பத்தியின் குறியீடு | | | |
|---|---|---|---|---|---|
| | | சாகுபடி நிலப் பரப்பின் குறியீடு | உணவுப் பயிர்கள் | உணவல்லாத பிற பயிர்கள் | எல்லாப் பயிர்களும் |
| 1900-01 முதல் 1904-05 | 100 | 100 | 100 | 100 | 100 |
| 1940-41 முதல் 1944-45 | 138 | 118 | 101 | 153 | 113 |

[1] 'J. P. Bhattacharjee (Edited), Studies in Indian Agricultura Economics,' p. 24.

இந்தியா விடுதலையடைவதற்கு முன்னர் மக்கள் தொகை 38 சதவீதம் அதிகரித்தபோது சாகுபடி நிலத்தின் அளவு 18 சதவீதம் மட்டுமே கூடியது. உணவுப் பொருள்களின் உற்பத்திக் குறியீட்டெண் 100 என்ற அளவிலிருந்து 101 ஆகச் சிறிது மட்டுமே அதிகரித்தது. உணவல்லாத வாணிபப் பயிர்களின் உற்பத்தி 53 சதவீதம் உயர்ந்தது குறிப்பிடத்தக்கது. எல்லா வேளாண்மைப் பொருள்களின் உற்பத்தியில் 13 சதவீத உயர்வு ஏற்பட்டது. எனவே, மக்கள் தொகைப் பெருக்க வீதத்திற்கும் வேளாண்மை உற்பத்திப் பெருக்க வீதத்திற்கும் நடுவே மிகுந்த இடைவெளி தோன்றியது.

'இந்திய ளேளாண்மை ஆராய்ச்சிக் குழுவைச்' (Indian Council of Agricultural Research-ICAR) சேர்ந்த டாக்டர் பான்ஸ் (Dr. Panse), இந்தியாவில் முக்கியப் பயிர்களின் உற்பத்தி 1910—11 முதல் 1945—46 வரை எவ்வாறு இருந்தது என்பது பற்றிய ஆய்வைச்செய்தார். அவர் அக் காலத்தில் உணவுத் தானியங்கள், வாணிபப் பயிர்கள் ஆகியவற்றின் உற்பத்தியில் சிறிது முன்னேற்றம் ஏற்பட்டதைக் குறிப்பிட்டார். வேளாண்மையின் தரமும், நிலத்தின் செழுமைத் தன்மையும் குறைவடைந்ததாகக் கூறபபட்டதை அவர் ஏற்கவில்லை.[1]

வேளாண்மை உற்பத்தி குறைவாக இருந்தமைக்கு விவசாயிகளிடையே இருந்த அக்கறையின்மை முக்கியக் காரணமாக அமைந்தது. உழைத்து உற்பத்தியைப் பெருக்கும் ஆர்வத்தை அவர்கள் கொண்டிருக்கவில்லை. தொழில் நுணுக்கம் வாய்ந்த புதிய சாகுபடிக் கருவிகளைப் பயன்படுத்தவில்லை. முன்னேற்றமான சாகுபடி முறைகளை விவசாயிகள் பின்பற்றுமைக்கு நிதிப் பற்றுக்குறை ஒரு காரணமாயிற்று.

### சுதந்திரமடைந்த பின்னர் உற்பத்தி நிலைகள்

1900 முதல் 1945 வரை வேளாண்மை உற்பத்தித் திறன் குறைவடைந்தது குறிப்பிடப்பட்டது. அந்த நிலை இரண்டாவது உலகப் போருக்குப் பின்னரும் நீடித்தது. முதல் ஐந்தாண்டுத்திட்ட மதிப்பீட்டின்படி 1939ஆம் ஆண்டிற்கு முன்னர், ஓர் ஏக்கருக்கான தானியங்களின் சாரசரி உற்பத்தி 619 பவுண்டுகளாக இருந்தது. அது 1946—67 முதல் 1949—50 வரையிலான காலத்தில் 565 பவுண்டுகளாகக் குறைந்தது.[2] டாக்டர் ரங்நேகர் (Dr. Rangnekar) ஆய்வின்படி, இரண்டாவது உலகப் போருக்கு

1 "Agricultural Situation in India, June' 1952.

2 First Five-Year Plan, p. 155.

முன்னர் ஒரு ஹெக்டேருக்கான உற்பத்தி 0.95 மெட்ரிக் டன்னுக வும், 1951-ல் 0.86 மெட்ரிக் டன்னுகவும் இருந்தது.[1] இவற்றைத் தவிர, 'உணவு உற்பத்திப் பெருக்க விசாரணைக் குழுவும்' (Grow More Food Enquiry Committee), 'இந்திய வேளாண்மை ஆராய்ச்சிக்குழுவும்' (ICAR) இதே விதமான கருத்துகளையே கொண்டிருந்தன.

பொதுவாகக் கூறுமிடத்து, சுதந்திரமடைவதற்கு முன்னர், வேளாண்மை உற்பத்தியும், உணவுத் தானியங்களின் உற்பத்தியும் குறைந்துகொண்டே வந்தன. 1949—50ஆம் ஆண்டு வரையில் இந்த நிலை நீடித்தது எனலாம்.

இந்திய வேளாண்மையின் உற்பத்தித் திறன், முதல் திட்டக் காலத்திலிருந்து அதிகரித்து வருகின்றது. திட்டங்களின் வெற்றி வேளாண்மையைச் சார்ந்தே அமைகின்றது. வேளாண்மை உற்பத்தி குறியளவை எட்டாத காரணத்தால்தான் எதிர்பார்க்கும் அளவிற்கு நம்மால் வளர்ச்சி வீதத்தைப் பெற முடியவில்லை. வேளாண்மை வளர்ச்சி வீதத்திற்கும் பொருளாதார வளர்ச்சி வீதத்திற்கும் நெருங்கிய தொடர்பு உள்ளது.

பின்வரும் அட்டவணையில் 1950—51 முதல் 1967—68 வரை உணவுத்தானியங்கள், வாணிபப் பயிர்கள் ஆகியவற்றின் உற்பத்தி அளவுகள் குறிக்கப்பட்டுள்ளன. 1960—61 வரை உற்பத்தி உயர்ந்து செல்கின்ற நிலையை அது உணர்த்தும். 1965—66-ல் நாட்டின் பல பகுதிகளிலும் பருவமழை தவறியது. எனவே, அவ்வாண்டில் மொத்த உணவுத் தானியங்களின் உற்பத்தி அதற்கு முந்திய ஆண்டின் உற்பத்தியைக் காட்டிலும் 17 மில்லியன் டன்கள் குறைந்தது; இரண்டாவது திட்டத்தின் இறுதி ஆண்டோடு ஒப்பிடும்போது 10 மில்லியன் டன்கள் குறைவடைந்தது. தானியங்களின் உற்பத்தி 1964—65ஆம் ஆண்டின் உற்பத்தியைவிட 14.4 மில்லியன் டன்கள் குறைவடைந்தது. வாணிபப் பயிர்களைப் பொறுத்தவரையில் சணல், தேயிலை, பருத்தி, புகையிலை ஆகியவற்றின் உற்பத்தியில் முறையே 5, 2.7, 17.3, 1.39. சதவீதக் குறைவு தோன்றியது. கரும்பு உற்பத்தி 4.1 சதவீதமும், எண்ணெய் வித்துகளின் உற்பத்தி 5.9 சதவீதமும் குறைவடைந்தன. பிற பயிர்களின் உற்பத்தியிலும் குறைவு ஏற்பட்டது. பாதகத் தட்ப வெப்ப நிலைகள் எந்த அளவிற்கு வேளாண்மை உற்பத்தியைப் பாதிக்கின்றன என்பதை இப் புள்ளி விவரங்கள் உணர்த்துகின்றன.

[1] Rangnekar, 'Poverty and Capital Development in India,' pp. [illegible] and 2[illegible]8–99.

**1950-51 முதல் 1967-68 வரை வேளாண்மை உற்பத்தி**

| எண் | பொருள் | அலகு | 1950-51 | 1955-56 | 1960-61 | 1964-65 | 1965-66 | 1966-67 | 1967-68 |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 |
| 1. | அரிசி | மி. டன்கள் | 20 6 | 27.6 | 34.6 | 39.0 | 30.7 | 30.4 | 37.5 |
| 2. | கோதுமை | ,, | 6.5 | 8.8 | 11.0 | 12.2 | 10.4 | 11.5 | 15.5 |
| 3. | சோளம் | ,, | 5.5 | 6.7 | 9.8 | 9.7 | 7.5 | 8.9 | 10.0 |
| 4. | கம்பு | ,, | 2.6 | 3.4 | 3.3 | 4.5 | 3.7 | 4.5 | 5.5 |
| 5. | மக்காச்சோளம் | ,, | 1.7 | 2.6 | 4.1 | 4.7 | 4.8 | 5.0 | 7.0 |
| 6. | மொத்த தானியங்கள் | ,, | 42.4 | 55.8 | 69.3 | 76.6 | 62.2 | 66.1 | 83.0 |
| 7. | பருப்பு வகைகள் | ,, | 8.4 | 11.0 | 12.7 | 12.4 | 9.8 | 8.9 | 12.0 |
| 8. | மொத்த உணவுத் தானியங்கள் | ,, | 50.8 | 66.8 | 82.0 | 89.0 | 72.0 | 75.0 | 95.0 |
| 9. | பருத்தி | மி. பேல்கள்[1] | 2.9 | 3.9 | 5.3 | 5.7 | 4.8 | 4.9 | 6.0 |
| 10. | சணல் | ,, | 3.5 | 4.5 | 4.1 | 6.0 | 4.5 | 5.4 | 6.4 |
| 11. | கரும்பு | மி. டன்கள் | 5.7 | 6.1 | 11.1 | 12.2 | 11.8 | 9.5 | 9.9 |
| 12. | எண்ணெய் வித்துகள் | ,, | 5.2 | 5.7 | 7.0 | 8.5 | 6.3 | 9.5 | 9.0 |
| 13. | தேயிலை | '000 டன்கள் | 275 | 285 | 321 | 372 | 365 | 375 | 394 |
| 14. | புகையிலை | ,, | 261 | 303 | 307 | 346 | 298 | 350 | 375 |

[1] One bale — 180 kg.

கீழ்க்காணும் அட்டவணை 1949—50 முதல் 1968—69 வரை பலவேறு பயிர்களின் உற்பத்தி வளர்ச்சி விதத்தை உணர்த்தும்.

**அகில இந்திய வேளாண்மை உற்பத்திக் கூட்டு வளர்ச்சி வீதம் 1949—50 முதல் 1968—69 வரை[1]**

(ஓராண்டிற்கான சதவீதம்)

| தொடர் எண் | பயிர் | உற்பத்தி | நிலப்பரப்பு | உற்பத்தித் திறன் |
|---|---|---|---|---|
| | 1 | 2 | 3 | 4 |
| 1. | அரிசி ... | 3.02 | 1.22 | 1.78 |
| 2. | கோதுமை ... | 4.20 | 2.26 | 1.90 |
| 3. | சோளம் ... | 2.30 | 0 86 | 1.42 |
| 4. | கம்பு ... | 2.36 | 1.14 | 1.21 |
| 5. | மக்காச்சோளம் ... | 3.88 | 2.79 | 1.05 |
| 6. | தானியங்கள் ... | 3.00 | 1.17 | 1.82 |
| 7. | பருப்பு வகைகள் ... | 1.16 | 1.26 | 0.10 |
| 8. | அனைத்து உணவுத் தானியங்கள் ... | 2.79 | 1.19 | 1.65 |
| 9. | எண்ணெய் வித்துகள் | 2.86 | 2.31 | 0.53 |
| 10. | பருத்தி ... | 3.93 | 1.51 | 1.98 |
| 11. | சணல் ... | 2.29 | 2.03 | 0.27 |
| 12. | தேயிலை ... | 1.97 | 0.69 | 1.27 |
| 13. | கரும்பு ... | 3.97 | 2.74 | 1.20 |
| 14. | உணவல்லாத தானியங்கள் ... | 3.18 | 2.19 | 0.97 |
| 15. | அனைத்துப் பயிர்கள் | 2.92 | 1.37 | 1.53 |

மொத்த வேளாண்மை உற்பத்தி ஆண்டொன்றுக்கு 2.92 சதவீதமும், உணவுத் தானியங்களின் உற்பத்தி 2.79 சதவீதமும், உணவல்லாத தானியங்களின் உற்பத்தி 3.18 சதவீதமும் உயர்வடைந்ததை அட்டவணை உணர்த்துகிறது. மொத்தப் பயிர் உற்பத்தி உயர்வில் பாதிக்கு மேல் (1.53 சதவீதம்) உற்பத்தித் திறன் உயர்வால் பெறப்பட்டது. ஒரு ஹெக்டேருக்கான உற்பத்தி உயர்வடைந்ததை இதற்கு உதாரணமாகக் குறிப்பிடலாம். எஞ்சிய உற்பத்திப் பெருக்கத்திற்குச் சாகுபடி நிலப்பரப்புக் கூடியது காரணமாகின்றது. ஆண்டொன்றுக்கு 1.37 சதவீதம்

[1] Fourth Five-Year Plan (Final), May 1970, p.117.

என்ற அளவில் புதிய நிலம் சாகுபடிக்கு எடுத்துக்கொள்ளப் பட்டது. உணவுத் தானியங்களின் உற்பத்தித் திறன் வளர்ச்சி ஆண்டொன்றுக்கு 1.65 சதவீதமாக இருந்தபோது, உணவல்லாத பயிர்களின் உற்பத்தித்திறன் ஆண்டொன்றுக்கு 0.97 சதவீதமாக மட்டுமே இருந்தது.

உணவுத் தானியங்களின் உற்பத்தி பெருகியதற்குச் சாகுபடி நிலப்பரப்புக் கூடியதே முக்கியக் காரணமாகும். புதிதாகச் சாகுபடிக்கு எடுத்துக்கொள்ளப்படும் நிலத்தின் அளவு படிப்படியாகக் குறைந்து வருகிறது. உணவுத் தானியங்களைப்போலன்றி, வாணிபப் பயிர்களின் உற்பத்தி வளர்ச்சி வீதம் சிறப்பாக அமையவில்லை.

வெவ்வேறு உணவுத்தானியங்களின் உற்பத்தி உயர்வு வீதங்கள் வேறுபட்டிருந்தன. பிற தானிய வகைகளைவிட அரிசி, கோதுமை, சோளம் ஆகியவற்றின் உற்பத்திப் பெருக்க வீதம் உயர்வாக இருந்தது. மற்றொரு புறத்தில் உடலுக்கு அதிக ஊட்டம் அளிக்கக்கூடிய பருப்பு வகைகளின் உற்பத்தி உயர்வு வீதம் தானியங்களின் உயர்வு வீதத்தில் பாதியாக மட்டுமே அமைந்திருந்தது. சராசரி ஓர் ஏக்கருக்கான பருப்பு வகைகளின் உற்பத்தி குறைந்துள்ளது.

உற்பத்தி வீதத்தின் அடிப்படையில் ஆராயாமல் உற்பத்தி அளவின் அடிப்படையில் ஆராய்ந்தால், உணவுத்தானியங்களை விட வாணிபப் பயிர்களின் உற்பத்தி அதிகமாக உயர்ந்துள்ளமையை அறியலாம். உற்பத்தியின் வளர்ச்சி வீதம் பருத்திக்கு 3.93 சதவீதமாகவும், கரும்புக்கு 3.97 சதவீதமாகவும், நிலக்கடலைக்கு 3.51 சதவீதமாகவும் உள்ளது. சணல், எண்ணெய் வித்துகள் (நிலக்கடலை தவிர), கடுகு, புகையிலை ஆகியவற்றின் உற்பத்தி சிறப்பாக உயரவில்லை. புதிதாகச் சாகுபடிக்கு எடுத்துக் கொள்ளப்பட்ட நிலத்தின் மூலமாக வாணிபப் பயிர்களின் உற்பத்தி கூடியது.

**முதல் திட்டம்**

முதல் ஐந்தாண்டுத் திட்டம் உணவுத் தானியங்கள், தொழில் துறைக்கான கச்சாப் பொருள்கள் ஆகியவற்றின் உற்பத்தியைப் பெருக்குவதற்கு முக்கியத்துவம் அளித்தது அத் திட்டம்.

1. தன்னிறைவைக் கொண்ட பொருளாதாரத்தைப் பெறுவது;

2. தொழில் துறையின் தேவைகளைப் பூர்த்தி செய்வது;

3. மக்களுடைய உணவின் தலா நுகர்வை அதிகரிப்பது ஆகியவற்றை முக்கிய நோக்கங்களாகக் கொண்டிருந்தது.

முதல் திட்டத்தின் உற்பத்திக் குறியிலக்குகள் பின்வருமாறு நிர்ணயிக்கப் பெற்றன.

| பொருள் | அலகு | அடிப்படை ஆண்டில் உற்பத்தி[1] | அதிக உற்பத்தியின் குறியிலக்கு | 1955.56-ல் அடைய வேண்டிய குறியிலக்கு | 1559.56 இன் உற்பத்தி |
|---|---|---|---|---|---|
| உணவுத்தானியங்கள் | மி. டன்கள் | 54.0 | 7.6 | 61.6 | 65.80 |
| முக்கிய எண்ணெய் வித்துகள் | | 5.1 | 0.4 | 5.5 | 5.64 |
| கரும்பு | ,, | 5.6 | 0.7 | 6.3 | 5.98 |
| பருத்தி | மி. பேல்கள் | 2.9 | 1.3 | 4.2 | 4 00 |
| சணல் | ,, | 3.3 | 2.1 | 5.4 | 4.20 |

உணவுத் தானியங்களின் உற்பத்தியைப் பெருக்க குறியிலக்கு நிர்ணயிக்கப்பட்டது. அரிசி உற்பத்தியை 4 மில்லியன் டன்களும், கோதுமையை 2 மில்லியன் டன்களும், பயறு, பருப்பு வகைகள் ஆகியவற்றை 1 மில்லியன் டன்களும், பிற தானியங்களின் உற்பத்தியை ½ மில்லியன் டன்களும் அதிகரிக்கத் திட்டமிடப்பெற்றது. உணவுத் தானியங்களின் உற்பத்தி சிறப்பான அளவிற்கு உயர்ந்தது. இவற்றின் உற்பத்திக் குறியிலக்கு 61.6 மில்லியன் டன்களாகத் தீர்மானிக்கப்பட்டாலும் 1955—56-ல் உண்மை உற்பத்தி 65.80 மில்லியன் டன்களாக உயர்ந்தது. கோதுமை, பயறு, பருப்பு வகைகள் ஆகியவற்றின் உற்பத்தியும் குறியிலக்கைவிட அதிகமாக இருந்தது. 1955—56-ல் அரிசி உற்பத்தியின் அளவு 27.12 மில்லியன் டன்கள்; இஃது அடிப்படை ஆண்டின் உற்பத்தியைவிட 4 மில்லியன் டன்கள் அதிகமானதாகும். எண்ணெய் வித்துகளைத் தவிரப் பிற வாணிபப் பயிர்களின் உற்பத்திக் குறியிலக்குகள் எட்டப்படவில்லை. உதாரணமாகப் பருத்தி, சணல், கரும்பு ஆகியவற்றின் உற்பத்தி எதிர்பார்த்த அளவிற்கு அமைந்திருக்கவில்லை.

1 [redacted] Year For Foodgrains [redacted] 1949—50 and for others 1950—51.

முதல் திட்டத்தில் வேளாண்மை உற்பத்தி கூடியதற்குச் சிறிய நீர்ப்பாசனத் திட்டங்கள், உரங்களைப் பயன்படுத்திய நிலை, நில முன்னேற்றம், புதிய நிலங்களைச் சாகுபடிக்கு எடுத்துக் கொண்டமை ஆகியன அடிப்படைக் காரணங்களாக அமைந்தன. உணவுத் தானியங்கள், பருப்பு வகைகள், பருத்தி, கரும்பு முதலியவற்றின் ஓர் ஏக்கருக்கான உற்பத்தி அதிகரித்தது. உற்பத்தி உயர்வுக்குப் பல சாதகச் சூழ்நிலைகள் உறுதுணையாக இருந்தன.

## இரண்டாவது திட்டம்

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் தொழில் முன்னேற்றத்திற்கு முக்கியத்துவம் அளித்தது. அதே சமயத்தில் வேளாண்மை உற்பத்தியைப் பெருக்குவதும் அவசியமென அது அறிந்திருந்தது. முதல் திட்டத்தில் தொடங்கப் பெற்ற முயற்சிகள் இரண்டாவது திட்டத்திலும் தொடர்ந்து நீடிக்கப்பட்டன. உணவுத் தானியங்கள் கச்சாப் பொருள்கள் ஆகியவற்றில் தன்னிறைவைப் பெறும் நோக்கமும் அமைந்திருந்தது. திட்டத்தை வரைந்தவர்கள் புதிய நிலங்களைச் சாகுபடிக்கு எடுத்துக்கொள்வதால் மட்டும் உற்பத்தி உயர்ந்துவிடாது என்று குறிப்பிட்டனர். இலாபகரமான வேளாண்மையைச் சிறப்பாகவும், திறமையாகவும், செறிவாகவும் செய்யவேண்டியதன் அவசியத்தை அவர்கள் உணர்த்தினர்கள். எல்லா வேளாண்மைப் பொருள்களின் உற்பத்தியையும் பெருக்கத் திட்டமிடப்பட்டது. அந்நியச் செலாவணியை ஈட்டித் தரக்கூடிய தேயிலை, அரக்கு, முந்திரி, கறுப்புமிளகு, தேங்காய் முதலியவற்றின் உற்பத்தியைப் பெருக்கவும் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. அதனால், விவசாயிகளின் வருமானம் உயருமெனக் குறிப்பிடப் பட்டது.

திட்டக் குழு நாட்டின் உணவுத் தேவையை 70.5 மில்லியன் டன்களாகக் கணக்கிட்டது. ஆனால், தலா ஒருவருக்கு ஒரு நாளுக்கான உணவின் நுகர்வை 18.3 அவுன்சுகளாக உயர்த்தினல் உணவுப் பொருள்களின் 75 மில்லியன் டன்கள் என்ற அளவுக்கு இருக்கும் என்று கூறப்பட்டது. இரண்டாவது திட்டம் முதலில் உணவுப் பொருள்களின் உற்பத்திக் குறியிலக்கை 10 மில்லியன் டன்கள் அதிகமாகப் பெறும் வகையில் நிர்ணயித்தது. பின்னர், உணவின் தேவை பெருகும் என்று கருதப்பட்டமையால், 1960-61 ஆம் ஆண்டிற்கான குறியிலக்கு 80.5 மில்லியன் டன்களாகக் குறிப்பிடப்பட்டது. இதன் மூலம் 15.5 மில்லியன் டன்கள் அதிக உற்பத்தி பெறக் கருதப்பட்டது.

வாணிபப் பயிர்களில்—பருத்தி உற்பத்தியை 4.2 மில்லியன் பேல்களிலிருந்து 6.5 மில்லியன் பேல்களாகவும், சணல் உற்பத்தியை 4 மில்லியன் டன்களிலிருந்து 5.5 மில்லியன் டன்களாகவும், கரும்பு உற்பத்தியை 5.5 டன்களிலிருந்து 7.6 மில்லியன் டன்களாகவும் உயர்த்த குறியளவுகள் நிர்ணயிக்கப்பட்டன. அனைத்து வேளாண்மைப் பொருள்களின் உற்பத்தியை அடிப்படை ஆண்டைக்காட்டிலும் 22.5 சதவீதம் உயர்த்தக் கருதப்பட்டது. ஆனால், முதலில் குறியிலக்கு உற்பத்தியை 9 சதவீதம் மட்டுமே அதிகரிக்கும் வகையில் தீர்மானிக்கப்பட்டது.

1951—52 ஆம் ஆண்டிலிருந்து இந்திய வேளாண்மையில் கணிசமான முன்னேற்றம் இருந்து வருகின்றது. சில ஆண்டுகளில் உற்பத்தி குறைவடைந்தமைக்குப் பாதகப் பருவச் சூழ்நிலைகளே காரணமாகும். முதல் திட்டக் காலத்தில் வேளாண்மை உற்பத்திக் குறியீட்டெண் 16.8 புள்ளிகளும், இரண்டாவது திட்டக் காலத்தில் 22.9 புள்ளிகளும் கூடியது (அடிப்படை ஆண்டு 1949—50=100).

**வேளாண்மை உற்பத்தி, சாகுபடி நிலப்பரப்பு, வேளாண்மை உற்பத்தித் திறன் ஆகியவற்றின் குறியீட்டெண்** [1]

(அடிப்படை: வேளாண்மை ஆண்டு 1949-50=100

| ஆண்டு | உணவுத் தானியங்கள் | | | உணவல்லாத தானியங்கள் | | | எல்லாப் பொருள்களும் | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | உற்பத்தி | நிலப்பரப்பு | உற்பத்தித் திறன் | உற்பத்தி | நிலப்பரப்பு | உற்பத்தித் திறன் | உற்பத்தி | நிலப்பரப்பு | உற்பத்தித் திறன் |
| 1 | 2 | 3 | [illegible] | [illegible] | 6 | 7 | 8 | [illegible] | 10 |
| 1950-51 | 90.5 | 97.9 | 92.4 | 105.9 | 110.8 | 95.6 | 95.6 | 99.9 | 95.7 |
| 1955-56 | 115.3 | 111.9 | 103.0 | 119.9 | 130.7 | 91.7 | 116.8 | 115.0 | 101.6 |
| 1960-61 | 135.6 | 114.6 | 118.3 | 147.9 | 139.2 | 106.3 | 139.7 | 118.5 | 117.9 |
| 1961-62 | 137.5 | 116.7 | 117.2 | 149.2 | 146.0 | 102.2 | 141.4 | 121.4 | 116.5 |
| 1962-63 | 134.4 | 117.5 | 111.0 | 151.0 | 148.8 | 101.5 | 137.2 | 122.5 | 112.0 |
| 1963-64 | 134.9 | 117.6 | 115.6 | 156.2 | 150.9 | 103.5 | 146.6 | 122.9 | 116.0 |
| 1964-65 | 149.2 | 118.8 | 125.5 | 174.9 | 152.7 | 114.5 | 157.6 | 142.2 | 126.9 |
| 1965-66 | 121.4 | 112.9 | 107.5 | 252.4 | 150.6 | 112.5 | ... | ... | ... |

## மூன்றாவது திட்டம்

கரும்பைத் தவிர, பிற வேளாண்மைப் பொருள்களின் குறியளவுகள், இரண்டாவது திட்டக் காலத்தில் எட்டப்படவில்லை.

[1] Agricultural Situation in India, Vol. XX, No. 8, November 1965 668.

இதன் காரணமாக மூன்ருவது திட்டத்தில் உயர்ந்த அளவில் குறியளவுகள் நிர்ணயிக்கப்பட்டன. உணவுத் தானியங்களை ஆண்டொன்றுக்கு 100 மில்லியன் டன்களாகவும், எண்ணெய் வித்துகளை 9.8 மில்லியன் டன்களாகவும், கரும்பை 10 மில்லியன் டன்களாகவும் கச்சாப் பருத்தியை 7 மில்லியன் பேல்களாகவும், கச்சாச் சணலை 6.2 மில்லியன் பேல்களாகவும் உயர்த்த திட்டமிடப்பட்டது. மூன்ருவது திட்டத்தில் வேளாண்மை உற்பத்தியை அதிகரிக்க முயற்சிகள் எடுக்கப்பட்டதோடு நிலத்தின் உற்பத்தித் திறனைக் கூட்டவும் வழிமுறைகள் பின்பற்றப்பட்டன. அவற்றிற்கான குறியளவுகள் கீழ்க்காணுமாறு அமைந்திருந்தன.

**இரண்டாவது, மூன்ருவது திட்டங்களில் சராசரி உற்பத்தியும், ஓர் ஏக்கருக்கான உற்பத்தியும்**

| பயிர் | சராசரி ஆண்டு உற்பத்தி (மில்லியன் டன்களில்) | | ஓர் ஏக்கருக்கான சராசரி உற்பத்தி பவுண்டுகளில் | | இரண்டாவது திட்டத்தைக் காட்டிலும் மூன்ருவது திட்டத்தில் உற்பத்தியின் சதவீத உயர்வு | |
|---|---|---|---|---|---|---|
| | 1956-57 முதல் 1960-61 வரை | 1960-61 முதல் 1965-66 வரை | 1956-57 முதல் 1960-61 வரை | 1960-61 முதல் 1965-66 வரை | ஆண்டு சராசரி உற்பத்தி | ஓர் ஏக்கருக்கான சராசரி உற்பத்தி |
| உணவுத் தானியங்கள் | 70.9 | 86.8 | 575 | 670 | 22.4 | 16.5 |
| (i) அரிசி | 29.3 | 39.4 | 807 | 1029 | 344 | 27.5 |
| (ii) கோதுமை | 9.3 | 12.1 | 662 | 795 | 301 | 20.1 |
| எண்ணெய் வித்துகள் | 6.5 | 8.6 | 451 | 500 | 32.3 | 10.9 |
| கரும்பு | 7.3 | 9.3 | 3206 | 3788 | 27.4 | 18.2 |
| பருத்தி (மி. பேல்கள்) | 4.6 | 6.1 | 95 | 108 | 32.6 | 13.7 |
| சணல் (மி. பேல்கள்) | 4.4 | 5.1 | 1035 | 1200 | 15.9 | 15.9 |

போதுமான நீர்ப்பாசன வசதிகளைக்கொண்ட இடங்களில் வெவ்வேறு பயிர்களின் உற்பத்தியையும் பெருக்குவது மூன்ருவது திட்டத்தில் முக்கிய முயற்சியாக இருந்தது. பிற இடங்களில் நில வளப்பாதுகாப்பான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. புன்செய்ப் பயிர்களின் உற்பத்தியும் கூடியது. பருத்தி, சணல், எண்ணெய் வித்துகள் முதலிய வாணிபப் பொருள்களின் உற்பத்தி அதிகரித்தது. வாணிபப் பயிர்களின் உற்பத்தியைப் பெருக்குவதற்கான திட்டங்களுக்காக ரூ. 26 கோடி செலவிடப்

பட்டது. நீர்ப்பாசன வசதிகள் பெருகின; விதைப்பண்ணைகள் தோன்றின; பயிர்ப் பாதுகாப்பு நடவடிக்கைகள் மேற்கொள்ளப் பட்டன.

வேளாண்மை உற்பத்தி அளவையும் உற்பத்தித் திறனையும் உயர்த்த மிக அதிக அளவு முதலீடு செய்யப்பட்டது. ஆயினும், வேளாண்மை வளர்ச்சி திருப்திகரமாக அமையவில்லை. கடந்த காலத்திலும்கூட மூன்று அல்லது நான்கு ஆண்டுகளுக்கு வேளாண்மை உற்பத்தி அளவும், உற்பத்தித் திறனும் கூடி வந்திருக்கின்றன. ஆனால், அவ் வளர்ச்சி தொடர்ந்து நீடிக்க வில்லை. முன்னர் இருந்ததைக் காட்டிலும் தற்பொழுது உற்பத்தித் திறன் குறைந்துள்ளது.[1]

மூன்றாவது திட்டத்தின் முதல் மூன்று ஆண்டுகளிலும் (1961—62 முதல் 1963—64 வரை) 1960—1961 ஆம் ஆண்டோடு ஒப்பிடும்போது வேளாண்மை உற்பத்தியில் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் ஏற்படவில்லை. 1960—61-ல் வேளாண்மை உற்பத்திக் குறியீட்டெண் 141.4 ஆக இருந்தது; அது 1962—63-ல் 137.2 ஆகக் குறைந்து 1963—64-ல் 140 5 ஆக மீண்டும் அதிகரித்தது. இம் மூன்றாண்டுகளுக்குமான சராசரி உற்பத்தியளவு 1960—61 ஆம் ஆண்டின் உற்பத்தியளவிற்குச் சமமாகவே இருந்தது.

பாதகமான பருவச் சூழ்நிலைகள் 1961—62, 1962—63-ஆம் ஆண்டுகளில் வேளாண்மை உற்பத்தியளவைக் குறைத்தன. 1961—62-ல் செப்டம்பர், அக்டோபர் மாதங்களின் அதிக மழைப் பொழிவால் பருத்தி, கம்பு ஆகியவற்றின் உற்பத்தி குறைந்தது. அதன் பின்னர், டிசம்பர், ஜனவரி மாதங்களில் ஏற்பட்ட கடும் குளிர்க்காற்றினால் பயறு, பருப்பு வகைகள் ஆகியவற்றின் உற்பத்தி குறைந்தது. 1960—61-ல் 80.97 மில்லியன் டன்களாக இருந்த மொத்த உணவுத் தானியங்களின் உற்பத்தி 1961—62-ல் 79.74 மில்லியன் டன்களாகக் குறைவுற்றது.

1962—63-ல் மழைப் பொழிவும், தட்ப வெப்ப நிலைகளும் பயிர் உற்பத்திக்குச் சாதகமாக இருக்கவில்லை, தொடர்ந்து நீடித்த வறட்சி நிலை, போதுமான மழை இன்மை ஆகியவற்றால் அரிசி, கோதுமை முதலியவற்றின் உற்பத்தி பாதிக்கப் பட்டது. அதன் விளைவாக 1962—63-ல் உணவுத் தானியங்களின் உற்பத்தி 78.75 மில்லியன் டன்களாகக் குறைந்தது. அரிசி,

[1] S. R. Sen, The Strategy for Agricultural Development, 1962, p.9.

கோதுமை ஆகியவற்றின் உற்பத்தி குறைந்தபோது, சோளம், கம்பு முதலியவற்றின் உற்பத்தி கணிசமாக உயர்ந்தது.

1963—64-ல் நாட்டின் சில பகுதிகளில் (மேற்கு ராஜஸ்தான், பஞ்சாபின் கிழக்குப் பகுதி, குஜராத், மஹாராஷ்டிரத்தின் சில பகுதிகள், மைசூரின் கடலோரப் பகுதிகள்) வானம் பொய்த்தது; பருவ மழை தவறியது. குளிர் கால மழை பற்றுக்குறையாலும், ஜனவரி 1964-ஜூன் கடும் குளிராலும் வட இந்தியாவின் பெரும் பகுதியில் உற்பத்தி குறைந்தது. குறிப்பாக பீஹார், மத்தியப் பிரதேசம், மஹாராஷ்டிரம் ஆகிய மாநிலங்களின் வேளாண்மை உற்பத்தி வீழ்ச்சியடைந்தது. இவற்றால், அவ்வாண்டின் உணவுத் தானியங்கள் உற்பத்தி 76.85 மில்லியன் டன்களாகச் சுருங்கியது.

மொத்த வேளாண்மை உற்பத்திக் குறியீட்டெண் 1964—65-ல் 157.6 ஆகவும், உணவுத் தானியங்களின் குறியீட்டெண் 149.1 ஆகவும், உணவல்லாத தானியங்களின் குறியீட்டெண் 174.9 ஆகவும் இருந்தன. 1963—64-ல் இவற்றிற்கான குறியீட்டெண்கள் முறையே 142.6, 149.1, 156.2 ஆக இருந்தன. 1964—65-ல் வேளாண்மை உற்பத்திக் குறியீட்டெண் உயர்வடைந்ததை இஃது உணர்த்துகின்றது. எனினும், பாதகமான தட்பவெப்ப நிலைகளால் உணவுத் தானியங்களின் உற்பத்தி 89 மில்லியன் டன்களாகவே இருந்தது. 1965—66-ல் நாட்டின் பல பகுதிகளிலும் (குறிப்பாக மத்தியப் பிரதேசம், மஹாராஷ்டிரம், ராஜஸ்தான், பீஹார், ஒரிஸ்ஸா, ஆந்திரப்பிரதேசம்) பஞ்சநிலை தாண்டவமாடியது. வறட்சி நிலையால் உணவுத் தானியங்கள் 72.3 மில்லியன் டன்களாகக் குறைந்தன.

கடந்த பதினைந்து ஆண்டுக் காலத்தில் வேளாண்மை உற்பத்தியின் வளர்ச்சி வீதம் சிறப்பாக இல்லாமையால், நாம் உணவுப் பொருள்களைப் பிற நாடுகளினின்றும் இறக்குமதி செய்து வருகின்றோம். முதல் திட்டக் காலத்தில் 11.6 மில்லியன் டன்களும் இரண்டாவது திட்டக் காலத்தில் 18 மில்லியன் டன்களும் உணவுத் தானியங்கள் இறக்குமதி செய்யப்பட்டன. இந்தியாவிலிருந்து பாகிஸ்தான் பிரிக்கப்படாதபோது, நாம் ஆண்டொன்றுக்குச் சுமார் ஒரு மில்லியன் டன்கள் மட்டுமே உணவுத் தானியங்களை இறக்குமதி செய்தோம். 1945—46 முதல் 1950—51 வரையிலான காலத்தில் ஆண்டொன்றுக்குச் சராசரியாக 2.65 மில்லியன் டன்கள் இறக்குமதி செய்யப்பட்டன. இதன் அளவு இரண்டாவது திட்டக் காலத்தில் 2.42 மில்லியன் டன்களாகவும், மூன்றாவது திட்டக் காலத்தில் 5 மில்லியன் டன்களாகவும்

இருந்தது. குறைவான வேளாண்மை உற்பத்தி வளர்ச்சி வீதத்தை இப் புள்ளி விவரங்கள் உணர்த்துகின்றன. உற்பத்தி உயர்ந்தால் இந்த அளவிற்கு நாம் இறக்குமதி செய்யத் தேவையில்லை. உள் நாட்டில் உற்பத்தி போதாத நிலையில் இருப்பதால்தான் உணவுப் பொருள்களை இறக்குமதி செய்ய வேண்டியுள்ளது. இதனால், பொருளாதாரத்தில் பலகடினமான பிரச்சினைகள் தோன்றுகின்றன.

மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களிலும் வேளாண்மை உற்பத்தி, சாகுபடி நிலப்பரப்பு, உற்பத்தித் திறன் ஆகியவற்றின் வளர்ச்சி வீதம் எவ்வாறு இருந்தது என்பதைப் பின்வரும் அட்டவணையால் அறியலாம்.

**திட்டங்களின் கீழ்க் கூட்டு வளர்ச்சி வீதம்: அனைத்துப் பயிர்கள்[1]**

| வரிசை எண் | திட்டக்காலம் | உற்பத்தி | நிலப் பரப்பு | (சதவீதம்) உற்பத்தித் திறன் |
|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) |
| 1. | முதல் திட்டம் (1951—52 முதல் 1955—56 வரை) | 4.1 | 2.6 | 1.4 |
| 2. | இரடாவது திட்டம் (1956—57 முதல் 1960—61 வரை) | 3.1 | 1.3 | 1.8 |
| 3. | மூன்றுவது திட்டம் 1961—62 முதல் 1964—65 வரை) | 3.3 | 0.6 | 2.7 |

அமோக விளைச்சலைத் தரக்கூடிய திட்டத்தைப் புகுத்துவதற்கு முன்னமேயே இந்திய வேளாண்மையின் உற்பத்தித் திறன் அதிகரிக்கத் தொடங்கியதை இவ் வட்டவணை விளக்குகின்றது. குறியளவு எட்டாவிட்டாலும்கூட, ஒவ்வொரு திட்டத்திலும் குறிப்பிடத்தக்க வகையில் வளர்ச்சி வீதம் இருந்தது. புதிதாகச் சாகுபடிக்கு எடுத்துக்கொள்ளப்படும் நிலத்தின் வீதம் முதல் திட்டக் காலத்தில் 2.6 சதவீதமாகவும், இரண்டாவது திட்டத்தில் 1.3 சதவீதமாகவும், மூன்றுவது திட்டத்தில் 0.6 சதவீதமாகவும் படிப்படியாகக் குறைந்துவிட்டது.

1 Fourth Five-year Plan (Final), May 1970, p. 118.

ஐந்தாண்டுத் திட்டங்களாலும், செறிவு முறைச் சாகுபடியாலும் உற்பத்தி உயர்ந்ததைக் கீழ்க்காணும் அட்டவணை உணர்த்தும்.

**வேளாண்மை உற்பத்திக் குறியீடு [1]**

| ஆண்டு | உணவுத் தானியங்களின் உற்பத்திக் குறியீடு | உணவல்லாத தானியங்களின் உற்பத்திக் குறியீடு | எல்லாப் பொருள்களின் உற்பத்திக் குறியீடு |
|---|---|---|---|
| 1949—50 | 100.0 | 100.0 | 100.0 |
| 1950—51 | 92.4 | 95.4 | 95.7 |
| 1955—56 | 103.0 | 90.8 | 101.6 |
| 1960—61 | 118.3 | 106.0 | 117.9 |
| 1963—64 | 115.0 | 102.6 | 115.0 |

1949—50 ஆம் ஆண்டிற்கும் 1963—64 ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் உணவுத் தானியங்களின் உற்பத்தி 15 சதவீதம் அதிகரித்தது; ஆனால், உணவல்லாத பிற தானியங்களின் உற்பத்தி, சுமார் 3 சதவீதம் மட்டுமே கூடியது. மொத்த வேளாண்மைப் பொருள்களின் உற்பத்திக் குறியீட்டெண் 15 சதவீதம் உயர்வடைந்தது.

பின்வரும் அட்டவணையில் சில குறிப்பிட்ட பயிர்களின் ஓர் ஏக்கருக்கான உற்பத்திக் குறியீட்டெண் கொடுக்கப்பட்டுள்ளது. வேளாண்மை உற்பத்தியில் ஏற்பட்ட மாற்றங்களை அதன் மூலம் அறியலாம்.

**[illegible] பயிர்களின் ஓர் ஏக்கருக்கான உற்பத்திக் குறியீட்டெண் [2]**

(அடிப்படை: ஜூன் 1950=100)

| பயிர் | 1950-51 | 1955-56 | 1960-61 | 1963-64 |
|---|---|---|---|---|
| அரிசி | 87 | 111 | 124 | 126 |
| கோதுமை | 101 | 104 | 122 | 105 |
| பருப்பு வகைகள் | 100 | 101 | 110 | 85 |

1 Basic Statistics Relating to the Indian Economy (Planning commission)

2 India, Pocket Book of Information, 1965, 3. pp 39-40.

| பயிர் | 1950-51 | 1955-56 | 1960-61 | 1963—64 |
|---|---|---|---|---|
| எண்ணெய் வித்துகள் | 93 | 91 | 96 | 93 |
| பருத்தி | 93 | 94 | 131 | 128 |
| சணல் | 88 | 91 | 94 | 99 |
| கரும்பு | 98 | 96 | 110 | 110 |

பல பயிர்களின் உற்பத்தி அதிகரித்திருப்பதை இந்த அட்டவணை அறிவுறுத்துகிறது. ஆனால், வெவ்வேறு பயிர்களின் உற்பத்தி வளர்ச்சி வீதமும் சீராக அமைந்திருக்கவில்லை. எனினும், வளர்ச்சி வீதம் உற்பத்தியைப் பெருக்குவதற்கான ஊக்கத்தை அளிப்பதாக இருக்கின்றது.

இரண்டாவது, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டங்களின் காலத்தில்தான் வேளாண்மை உற்பத்தி கணிசமான அளவிற்கு உயர்ந்தது. இரண்டாவது திட்டத்தைக் காட்டிலும் மூன்றாவது திட்டத்தில் உணவுத் தானியங்களின் உற்பத்தி 16.5 சதவீதமும், எண்ணெய் வித்துகளின் உற்பத்தி 10.9 சதவீதமும், பருத்தி உற்பத்தி 13.7 சதவீதமும், சணல் உற்பத்தி 15.9 சதவீதமும் கூடின.

திட்டக் காலத்தில் வேளாண்மை வளர்ச்சிக்காக அதிக முதலீடு செய்யப்பட்டிருக்கின்றது. அம் முதலீட்டிற்குத் தக்க வகையில் வேளாண்மை உற்பத்தி உயரவில்லை. இந்தியாவில் வேளாண்மை உழைப்பாளரின் உற்பத்தித் திறனும் குறைந்து உள்ளது. வேளாண்மையில் ஈடுபட்டுள்ள ஒருவரின் உற்பத்தி மதிப்பு, வாணிபத்தில் ஈடுபட்டுள்ள ஒருவரின் உற்பத்தி மதிப்பில் மூன்றில் ஒரு பங்காக மட்டுமே இருக்கிறது. தொழில் துறையைச் சார்ந்த தொழிலாளர் ஒருவரின் உற்பத்தி மதிப்பு, வேளாண்மை உழைப்பாளரின் உற்பத்தி மதிப்பைவிட நான்கு மடங்கு அதிகமானது. நம் நாட்டின் தொழில்கள் அனைத்திலும் வேளாண்மையில் ஈடுபட்டுள்ள உழைப்பாளரின் உற்பத்தித் திறனே மிகக் குறைந்து உள்ளது.

1951-முதல் உணவுத் தானியங்களின் உற்பத்தி திருப்திகரமான வகையில் அதிகரித்து வருகின்றது. ஆனால், முதல் திட்டக் காலத்தின் இறுதியில் உற்பத்தியில் சிறிது குறைவு ஏற்பட்டது. அரிசி உற்பத்தியில் மிகச் சிறப்பான முன்னேற்றம் தோன்றியுள்ளது. அதைத் தொடர்ந்து கோதுமை, கம்பு, சோளம், பார்லி ஆகியவற்றின் உற்பத்தியும் சிறப்பான உயர் அளவை எட்டியிருக்

கின்றது. உணவுத் தானியங்களின் உற்பத்தி பெருகியதற்குப் பின் வருவனவற்றைக் காரணங்களாகக் கொள்ளலாம்.

1. சாதகமான தட்ப வெப்ப நிலை;

2. 1950—51-ல் தொடங்கப்பெற்ற ஒருங்கிணைப்பு உற்பத்தித் திட்டத்தின் வெற்றி;

3. ஜப்பானிய அரிசிச் சாகுபடி முறையைப் பின்பற்றியமை;

4. நீர்ப்பாசன வசதிகளின் பெருக்கம்;

5. குறைந்த விலையில் சாகுபடியாளருக்கு உரங்கள் அளிக்கப் பட்டமை.

**சமீப ஆண்டுகளில் உணவுத் தானியங்களின் மொத்த உற்பத்தி**
(மில்லியன் டன்களில்)

| | |
|---|---|
| 1950—51 | 54.9 |
| 1955—56 | 66.9 |
| 1960—64 | 82.0 |
| 1964—65 | 89 0 |
| 1965—66 | 72.0 |
| 1966—67 | 74 2 |
| 1967—68 | 95.1 |
| 1968—69 | 94 0 |
| 1969—70 | 99.5[1] |
| 1970—71 | 105.0[2] |

முதல் திட்டத்தின் இறுதி இரண்டு ஆண்டுகளில் உணவுத் தானியங்களின் உற்பத்தி குறைந்ததற்கு (i) நாட்டின் சில பகுதி களில் இருந்த வறட்சி நிலை; (ii) தரமான விதைகள், உரங்கள் ஆகியவற்றின் பற்றுக்குறை நிலை; (iii) வேளாண்மை வளர்ச்சியில் மாநில அரசுகள் அக்கறை காட்டாத நிலை ஆகியன காரணமாக அமைந்தன.

**மாநிலங்களுக்கிடையே வளர்ச்சி விதத்தில் வேறுபாடுகள்**

வேளாண்மை உற்பத்தியின் வளர்ச்சி எல்லா மாநிலங்களிலும் ஒரே மாதிரியாக இருந்திருக்கவில்லை. சில மாநிலங்களில் சிறப்பான வளர்ச்சி பெறப்பட்டபோது, மற்றவற்றில் வளர்ச்சி

[1] Final estimates.
[2] Provisional

குறைந்த வேகத்தில் இருந்தது. மாநிலங்களின் பொறுப்பில் வேளாண்மைத் துறை விடப்பட்டிருக்கின்றது. எனினும், மத்திய அரசு வேளாண்மைத் திட்டங்களுக்காக அதிக மூலதனத்தை ஒதுக்குகின்றது. பின்தங்கிய பகுதிகளின் முன்னேற்றத்திலும் மத்திய அரசு கவனத்தைச் செலுத்த வேண்டியுள்ளது. பின்வரும் அட்டவணையில் 1952-53 முதல் 1964-65 வரையிலான மாநிலங்களின் வேளாண்மை உற்பத்தி கூட்டு வளர்ச்சி வீதங்கள் தரப்பட்டுள்ளன.

**1952—53 முதல் 1964—65 வரை மாநிலங்களின் வேளாண்மை உற்பத்தி, உற்பத்தித் திறன், கூட்டு வளர்ச்சி வீதங்கள்**

(ஓராண்டிற்கான சதவீதம்)

| மாநிலம் | உற்பத்தி | நிலப்பரப்பு | உற்பத்தி திறன் |
|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 |
| 1. பஞ்சாப் | 4.56 | 1.90 | 2.61 |
| 2. குஜராத் | 4.55 | 0.45 | 4.09 |
| 3. தமிழ்நாடு | 4.17 | 1.10 | 3.04 |
| 4. மைசூர் | 3.54 | 0.81 | 2.71 |
| 5. பீஹார் | 2.97 | 0.71 | 2.25 |
| 6. மஹாராஷ்டிரம் | 2.93 | 0.44 | 2.45 |
| 7. ராஜஸ்தான் | 2.74 | 2.85 | 0.11 |
| 8. ஆந்திரப்பிரதேசம் | 2.71 | 0 26 | 2.45 |
| 9. மத்தியப்பிரதேசம் | 2.49 | 1.28 | 1.21 |
| 10. ஒரிஸ்ஸா | 2.48 | 0 81 | 1.66 |
| 11. கேரளம் | 2.27 | 1.30 | 0.96 |
| 12. மேற்கு வங்காளம் | 1.94 | 0.59 | 1.34 |
| 31. உத்தரப்பிரதேசம் | 1.66 | 0.72 | 0.94 |
| 14. அஸ்ஸாம் | 1.17 | 1.25 | 0.08 |
| 15. அகில இந்தியா | 3.01 | 1.21 | 1.77 |

உற்பத்தி உயர்வு எல்லா மாநிலங்களிலும் ஒரே மாதிரியாக இல்லை என்பதை அட்டவணை உணர்த்துகிறது. தேசிய சராசரியைவிட பஞ்சாப், குஜராத், தமிழ்நாடு ஆகிய மூன்று மாநிலங்களிலும் வேளாண்மை உற்பத்தி உயர்ந்திருக்கின்றது. வேளாண்மையை மிக முக்கியத் தொழிலாகக் கொண்டிருக்கும் உத்தரப் பிரதேசத்தில் உற்பத்தித் திறன் தாழ்வாக உள்ளது. உற்பத்தி குறைந்த வேகத்திலேயே அதிகரித்து வருகின்றது.

சிறப்பான முன்னேற்றத்தைக் கொண்டிக்கின்ற முதல் மூன்று மாநிலங்களிலும் நீர்ப் பாசன வசதிகள் நன்ருகப் பயன்படுத்தப் படுகின்றன; குழாய்க் கிணறுகள் ஏராளமாக அமைக்கப் பட்டுள்ளன. புதிய சாகுபடி முறைகளைப் பின்பற்றும் ஆர்வம் விவசாயிகளிடம் இருக்கின்றது. மேலே கொடுக்கப்பட்டுள்ள புள்ளிவிவரங்கள் 'பசுமைப் புரட்சிக்கு' முன்னர் எடுக்கப்பட்டவை என்பது குறிப்பிடத்தக்கது. சமீப காலத்தில் பல மாநிலங்களிலும் வேளாண்மை உற்பத்தி சிறப்பான அளவிற்கு உயர்ந்துள்ளது.

இந்தியாவில் நிலத்தின் உற்பத்தித் திறனும், வேளாண்மை உழைப்பாளரின் உற்பத்தித் திறனும் தாழ்வாக இருக்கின்றன. திரு. ஜே ஜி. ஆனந்த் 1956—57 முதல் 1957—58 வரை பல மாநிலங் களிலும் ஓர் ஏக்கருக்கான உற்பத்தியையும், ஓர் உழைப்பாளருக் கான உற்பத்தியையும் பற்றிக் கணக்கெடுப்பைச் செய்தார். அதன் புள்ளிவிவரங்கள் பின்வரும் அட்டவணையில் தரப்பட்டுள்ளன.

**இந்திய மாநிலங்களில் ஓர் ஏக்கருக்கான வேளாண்மை உற்பத்தி, ஓர் உழைப்பாளருக்கான உற்பத்தி ஆகியவற்றின் குறியீட்டெண்கள்**

சராசரி: 1956—57 முதல் 1958—59 வரை

அகில இந்திய சராசரி அடிப்படைக் குறியீடு: 100

| மாநிலம் | ஓர் ஏக்கருக்கான உற்பத்தி | ஓர் உழைப்பாளருக் கான உற்பத்தி |
|---|---|---|
| ஆந்திரப்பிரதேசம் | 118.85 | 103.68 |
| அஸ்ஸாம் | 174.04 | 111.49 |
| பீஹார் | 119.53 | 62.83 |
| குஜராத் | 64 58 | 105.90 |
| ஜம்மு-காஷ்மீர் | 116 07 | 66.10 |
| கேரளம் | 126.17 | 110.06 |
| மத்தியப்பிரதேசம் | 80.55 | 94.35 |
| தமிழ்நாடு | 176 21 | 111.14 |
| மஹாராஷ்டிரம் | 65.08 | 88.94 |
| மைசூர் | 64.91 | 88.71 |
| ஒரிஸ்ஸா | 132.72 | 132.72 |
| பஞ்சாப் | 131.71 | 215 99 |
| ராஜஸ்தான் | 51.65 | 88.24 |
| உத்தரப்பிரதேசம் | 128.25 | 101.11 |
| மேற்கு வங்காளம் | 168 75 | 144.15 |

1 Agricultural Situation in India, Annual Number (1964). [redacted] 410—11

எல்லா மாநிலங்களைக்காட்டிலும் தமிழ்நாட்டிலேயே ஓர் ஏக்கருக்கான உற்பத்திக் குறியீட்டெண் 176.21 என்ற அளவில் உயர்வாக உள்ளது. அதற்கு அடுத்தபடியாக அஸ்ஸாமில் (174.04), மேற்கு வங்காளத்தில் (168.75), உற்பத்தி உயர்வாக இருக்கின்றது. உழைப்பாளரின் உற்பத்தித் திறன் ஓர் ஏக்கருக்கான வேளாண்மை உழைப்பாளர்களின் குறியீட்டெண் அடிப்படையில் கணக்கிடப்படுகிறது. எனவே, உழைப்பாளர் உற்பத்தித் திறன் நிலத்தின்மீதான மக்கள் நெருக்கத்திற்கு ஏற்ப மாறுபடும். ஓர் ஏக்கருக்கான உற்பத்தியில் பஞ்சாப், ஐந்தாவது இடத்தை வகிக்கின்றது. ஆயினும், சாகுபடி நிலத்தில் மக்கள் தொகை நெருக்கம் குறைவாக உள்ளமையால், ஓர் உழைப்பாளருக்கான உற்பத்தி 215.99 என்ற அளவில் அதிகமாக இருக்கிறது. தமிழ்நாட்டில் நிலத்தின்மீதான மக்கள் நெருக்கம் மிகுதியாதலால் ஓர் ஏக்கருக்கான உற்பத்தியில் உயர்வான நிலை இருந்தாலும்கூட ஓர் உழைப்பாளருக்கான உற்பத்தி குறைவாக உள்ளது. பீஹாரில் ஓர் ஏக்கருக்கான உற்பத்திக் குறியீட்டெண் 119.5 ஆகும். ஆனால், அங்கு மக்கள் நெருக்கம் மிகுதியாக உள்ளமையால், ஓர் உழைப்பாளருக்கான உற்பத்தி 62.8 என்ற அளவில் மிகக் குறைவாக இருக்கின்றது.

## குறைவான உற்பத்திச் சிக்கல்

பிற நாடுகளைக் காட்டிலும் இந்தியாவில் நிலக்கடலை, தேயிலை ஆகியன அதிகமாக உற்பத்தி செய்யப்படுகின்றன. அரக்கு உற்பத்தியில் நாம் முற்றுரிமை நிலையைக்கொண்டுள்ளோம். உலக நாடுகளுக்குள் இந்தியா அரிசி, சணல், சர்க்கரை, எள், பருத்தி, ஆமணக்கு ஆகியவற்றின் உற்பத்தியில் இரண்டாவது இடத்தையும், கம்பு உற்பத்தியில் மூன்றாவது இடத்தையும் வகிக்கின்றது. மற்ற நாடுகளோடு ஒப்பிடும்போது இந்தியாவில் வேளாண்மைப் பொருள்களின் மொத்த உற்பத்தியளவு கணிசமாக உள்ளது. ஆனால், அவற்றின் ஓர் ஏக்கருக்கான உற்பத்தி மிகத் தாழ்வாக இருக்கிறது, பல சாகுபடியாளர்களும் ஓர் ஏக்கருக்கான உற்பத்தியைப் பெருக்குவதற்கான நடவடிக்கைகளை எடுக்க வேண்டும். சுமார் 40 ஆண்டுகளுக்கு முன்னர், டாக்டர் கிளவ்ஸ்டன் (Dr. Clouston) குறிப்பிட்டதாவது, 'இந்திய மக்கள் தாழ்வான நிலையில் இருக்கின்றார்கள்; இங்கு வளர்ச்சி குன்றிய தொழில்கள் உள்ளன; அவற்றுள் வேளாண்மையும் ஒன்றாகும்', என்பது. இக் கூற்று இன்றும் இந்தியப் பொருளாதாரத்திற்குப் பொருந்துகிறது. மற்ற நாடுகளோடு ஒப்பிடும்போது, நம் நாட்டில் பல பயிர்களிலும் ஓர் ஏக்கருக்கான உற்பத்தி மிக்க குறைவாக

இருப்பதை அறியலாம். இயற்கை ஒத்துழைக்காதபோது உற்பத்தி மேலும் குறைந்து விடுகிறது.

சில நாடுகளில் முக்கியப் பயிர்களின் உற்பத்தி
(ஒரு ஹெக்டேருக்கு—குவிண்டால்களில்)

| | |
|---|---|
| கோதுமை: | இந்தியா 8.5; அமெரிக்கா 17.6; கனடா 14.2 அர்ஜென்டினா 11.0; சோவியத் ரஷ்யா 10.6 ஃபிரான்ஸ் 26.6; இத்தாலி 18.5; ஆஸ்திரேலியா 13.4; ஆசியா 8.7; உலகம் 12.2. |
| அரிசி: | இந்தியா 15.4; ஜப்பான் 52.4; பர்மா 16.2; இத்தாலி 51.2; தாய்லாந்து 13.7; அரேபியா 58.4; பாகிஸ்தான் 17.2; ஆஸ்திரேலியா 61.1; ஆசியா 17.3; உலகம் 22.0. |
| கரும்பு: | இந்தியா 444.4; க்யூபா 410.9; ஹவாய் 1963.1; மெக்ஸிகோ 563.5; பிரேசில் 420.1; ஆஸ்திரேலியா 674.9. |
| புகையிலை: | இந்தியா 8.8; ஜப்பான் 21.6: பிரேசில் 8 0; அமெரிக்கா 23.3; பாகிஸ்தான் 11.5; கனடா 17.7; இத்தாலி 15.0; சோவியத் ரஷ்யா 12.8; ஜப்பான் 21.6; உலகம் 11 3. |
| பருத்தி: | இந்தியா 1 3; அமெரிக்கா 5.8; அரேபியா 6.1; சூடான் 2.7; பாகிஸ்தான் 3.2; உகாண்டா 1.1; ஆசியா 1.7; உலகம் 3.4. |
| நிலக்கடலை: | இந்தியா 7.8; இந்தோனேசியா 11.7; அமெரிக்கா 16.1; அர்ஜென்டினா 14.0; ஜப்பான் 23.6; அரேபியா 202; ஆஸ்திரேலியா 12.2; உலகம் 9.0. |
| சோளம்: | இந்தியா 10.0; அமெரிக்கா 42 6; கனடா 35 8; அர்ஜென்டினா 17.7; சோவியத் ரஷ்யா 16.7 நெதர்லாந்து 38.1; இத்தாலி 32.9; ஆஸ்திரேலியா 21.1; ஜப்பான் 26.0; உலகம் 2.00. |
| உருளைக்கிழங்கு: | இந்தியா 75; அமெரிக்கா 20.7; சோவியத் ரஷ்யா 92; கனடா 160; ஃபிரான்ஸ் 169; ஜப்பான் 174; ஆசியா 961; உலகம் 112.6. |

பார்லி: இந்தியா 8; அரேபியா 26.3; அமெரிக்கா 18.9 ஃபிரான்ஸ் 29; மேற்கு ஜெர்மனி 31.1; பெல்ஜியம் 35 8; நெதர்லாந்து 38.4; நியூசிலாந்து 30.3; உலகம் 14.4

பரந்த நோக்கில் ஆராயும்போது ஒரு ஹெக்டேருக்கான பல பயிர்களின் உற்பத்தியும் பிற நாடுகளின் உற்பத்தியில் ½ முதல் ¼ பங்காக மட்டுமே இருக்கின்றது என்பதை அறியலாம். 'ஒரு ஹெக்டேருக்கான கோதுமை உற்பத்தியின் உலக சராசரி, இந்திய உற்பத்தியைவிட 50 சதவீதம் அதிகமாகும்; அரிசி உற்பத்தி 60 சதவீதமும், கம்பு உற்பத்தி 80 சதவீதமும், உருளைக் கிழங்கு உற்பத்தி 60 சதவீதமும், சோள உற்பத்தி 140 சதவீதமும் பருத்தி உற்பத்தி 250 சதவீதமும் அதிகமாகவும் இருக்கின்றன.'

குறைவான வேளாண்மை உற்பத்தி விரைவான பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவவில்லை. ஓர் ஏக்கருக்கான கோதுமை உற்பத்தியை ஃபிரான்ஸ், இங்கிலாந்து, டென்மார்க் ஆகிய நாடுகளின் அளவுக்கு உயர்த்தினால் நாட்டின் செல்வத்தை முறையே [illegible] 5.569 மில்லியன், £ 1,000 மில்லியன், £ 1.500 மில்லியன் என்ற அளவுகளுக்கு அதிகரிக்கலாம் என்று சர் மேக்டோகல் (Sir Macdougall) கூறுகின்றார்.

ஐரோப்பிய நாடுகளில் ஒரு ஹெக்டேருக்கான (ஒரு ஹெக்டேர் = 2.5 ஏக்கர்கள்) உற்பத்தி இரண்டாவது உலகப் போர்க் காலத்திலிருந்து அதிகரித்து வருகின்றது. 1950 முதல் 1959 வரையிலான காலத்தில் கிரீஸில் கோதுமை உற்பத்தி 43 சதவீதமும், ஃபிரான்ஸில் 25 சதவீதமும், ஆஸ்திரியாவில் 22 சதவீதமும் ஸ்பெயின், யுகோஸ்லாவியா ஆகியவற்றில் 22 சதவீதமும் மேற்கு ஜெர்மனி, இத்தாலி, நார்வே, இங்கிலாந்து ஆகிய நாடுகளில் 14 முதல் 17 சதவீதமும் அதிகரித்தது. இதைப் போன்று மற்ற பயிர்களின் உற்பத்தியும் உயர்ந்தது. உதாரணமாக, ஃபிரான்சில் பார்லி உற்பத்தி 49 சதவீதமும், கிரீஸில் 37 சதவீதமும் உயர்வடைந்தது. சோள உற்பத்தி ஃபிரான்சில் 100 சதவீதமும், இத்தாலி, யுகோஸ்லாவியா ஆகியவற்றில் 59 சதவீதமும், ஆஸ்திரியாவில் 43 சதவீதமும் பெருகியது.

இரண்டாவது உலகப்போருக்குப் பின்னர், ஐரோப்பாவில் வேளாண்மை உற்பத்தி விரைவாக அதிகரிக்கின்றபோது, இந்தியாவில உற்பத்திப் பெருக்கம் மிகக் குறைந்த வேகத்திலேயே உயர்கின்றது. நம் நாட்டில் உணவு உற்பத்தி சுமார் 15 சதவீதமும்,

எல்லா வேளாண்மைப் பொருள்களின் உற்பத்தி 12.5 சதவீதமும் உயர்ந்துள்ளன. ஐந்தாண்டுத் திட்டங்களில் வேளாண்மை வளர்ச்சிக்காக அதிக முதலீடு செய்யப்பட்டாலும் இதுவரை முழுமையான நன்மைகள் விளையவில்லை. வேளாண்மை முதலீடுகள் மிக நீண்ட காலத்திலேயே பயனளிக்கக்கூடியனவாகும்.

### குறைவான உற்பத்தியின் விளைவுகள்

1942 ஆம் ஆண்டு முதல் இந்தியாவில் உணவுச் சிக்கல் இருந்து வருகின்றது. குறைந்த அளவுப் பயிர்களின் உற்பத்தியே இதற்கு அடிப்படைக் காரணமாகும். இலட்சக் கணக்கான மக்கள் உணவுப் பற்றுக்குறையால் வாடுகின்றார்கள். உணவின்றி இறப்பவர்களும் சிலராவர். சத்துக் குறைந்த உணவு வகைகளைப் புசிப்பவர்கள் பலராவர். உணவுத் தேவைக்கும், அளிப்புக்கும் நடுவே மிகுந்த இடைவெளி உள்ளது. சுமார் 30 சதவீத மக்கள் சாதாரண காலங்களிலும்கூடப் போதுமான உணவைப் பெற முடிவதில்லை. உணவுத் தானியங்களின் பற்றுக்குறை குறைந்த அளவில் 3 முதல் 4 மில்லியன் டன்களாகவும், உயர்ந்த அளவில் 11 முதல் 14 மில்லியன் டன்களாகவும் இருப்பதாக வெவ்வேறு அனுமானங்கள் கூறுகின்றன. பொதுவாக, உணவுப் பற்றுக்குறை 7 முதல் 8 மில்லியன் டன்களாக இருக்கின்றது என்ற கூற்றுப் பலராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது.[1]

இரண்டாவதாக, வாணிபப் பயிர்களின் உற்பத்தி குறைவாக இருக்கின்றது. எனவே, பெரும்பாலான விவசாயிகள் குறைவான வாங்கும் திறனையே கொண்டுள்ளார்கள். இதன் காரணமாகச் சில தீய விளைவுகள் தோன்றுகின்றன.

1. தொழில் பொருள்களுக்கான உள் நாட்டுச் சந்தை சுருங்குகின்றது;

2. தொழில் சீர்குலைவு உழைப்பாளர்கள், நடுத்தர வகுப்பினர் ஆகியோரிடையே வேலையின்மையைத் தோற்றுவித்து விடுகின்றது.

3. வாரம், வட்டி, வரிகள் ஆகியன அதிகரிப்பதால், கிராமப் பொருளாதாரம் பாதிக்கப்படுகின்றது. லேவாதேவிக்காரர்கள் விவசாயிகளைத் தங்களுடைய பிடிக்குள் வைத்திருக்கின்றனர். விவசாயிகள் நிலத்தை விற்கக்கூடிய நிலைக்குக் கொண்டுவரப்படு

[1] The A. I. C. C. Economic Review, Vol. XVII. No. 14-15, February 10, 1966, p. 37.

கின்றனர். செல்வமும், வருமானமும் சுரண்டுபவர்களைச் சென்று சேர்கின்றது. நிலத்தின் உற்பத்தித் திறன் குறைவதற்கு இஃது ஒரு காரணமாகின்றது.

மூன்றாவதாக, இந்தியாவில் ஓர் உழைப்பாளருக்கான ஓராண்டு வேளாண்மை உற்பத்தி மிகக் குறைவாக உள்ளது. நம் நாட்டின் வேளாண்மை உழைப்பாளர் உற்பத்தியைக் காட்டிலும் நியூசிலாந்து. மேற்கு ஜெர்மனி ஆகியவற்றில் உற்பத்தி 34 மடங்கு அதிகமாகவும், இங்கிலாந்தில் 24 மடங்கும், அமெரிக்காவில் 24 மடங்கும், ஜப்பானில் 22 மடங்கும் உயர்வாக இருக்கின்றது.

நான்காவதாக, வேளாண்மை உற்பத்தியில் தேக்க நிலை நீடிப்பதால் வேளாண்மைப் பொருள்களின் விலைகள் உயர்கின்றன. உணவுப் பங்கீட்டு முறையில் குறைபாடுகள் தோன்றுகின்றன.

வேளாண்மையில் தேவைக்கு அதிகமான உழைப்பாளர்கள் ஈடுபட்டிருப்பதாலும் ஓர் உழைப்பாளருக்கான உற்பத்தி மிகவும் தாழ்வடைகிறது.

உலகின் சில நாடுகளில் மக்கள் தொகையில் ஐந்தில் ஒரு பங்கினரே உணவு உற்பத்தியில் ஈடுபட்டுத் தனி ஒவ்வொருவருக்கும் தேவையான சுமார் 8,000 கலோரிகள் உணவை அளிக்கின்றார்கள். அஃதாவது ஒரு குடும்பம் ஐந்து குடும்பங்களுக்குப் போதுமான உணவை உற்பதி செய்கின்றது. இந்தியாவில் ஒரு குடும்பம் அதற்குத் தேவையான உணவைக்கூட உற்பத்தி செய்வதில்லை. அது பிறிதொரு குடும்பத்தின் உதவியை நாடுகிறது. அமெரிக்காவில் 1860-ல் ஒரு பண்ணை உழைப்பாளர் நால்வருக்குப் போதுமான பண்ணைப் பொருள்களை மட்டுமே உற்பத்தி செய்தார். 1900-ல் அவர் [redacted] பேர்களுக்கு உணவளித்தார். 1961-ல் அவரால் உள் நாட்டில் 22 பேர்களுக்கும், வெளிநாடுகளில் உள்ள 4 பேர்களுக்கும் உணவுப் பொருள்களை அளிக்க முடிந்தது.

இதையே வேறொரு வகையிலும் குறிப்பிடலாம். அமெரிக்காவில் 1960-ல் சுமார் 6 மில்லியன் பேர்கள் வேளாண்மையில் ஈடுபட்டிருந்தனர். அவர்கள் சுமார் 31 மில்லியன் பேர்களுக்கான உணவை உற்பத்தி செய்து அளித்தனர். இன்று பண்ணை உழைப்பாளர்களின் எண்ணிக்கை 7 மில்லியனாக இருக்கிறது. அவர்களால் 188 மில்லியன் அமெரிக்கர்களுக்குத் தேவையான உணவையும், உடைக்கான கச்சாப் பொருள்களையும் அளிக்க இயலுகிறது.

உலகிலேயே அதிக அளவுக்குப் பண்ணைப் பொருள்கள் ஏற்றுமதி செய்யும் நாடாக அமெரிக்கா உள்ளது.

அமெரிக்காவில் குடியேற்ற காலத்தில் பத்தில் ஒன்பது பேர்கள் வேளாண்மையைச் சார்ந்திருந்தார்கள். தற்பொழுது பத்தில் ஒருவருக்கும் குறைவான வீதத்திலேயே மக்கள் வேளாண்மையில் ஈடுபட்டுள்ளார்கள். 10 சதவீதத்திற்கும் குறைவான மக்களே இன்று அமெரிக்காவில் வேளாண்மை உற்பத்தியைச் செய்கின்றார்கள். இந்த வீதம் சோவியத் ரஷ்யாவில் 45 சதவீதமாகவும், இந்தியாவில் 70 சதவீதமாகவும், ஃபிரான்சில் 25 சதவீதமாகவும் இருக்கின்றது.

இயந்திரமயமாக்கல், விஞ்ஞானச் சாகுபடி, நல்ல உரங்கள் விதைகள் ஆகியவற்றைப் பயன்படுத்துதல் முதலியவற்றால் அமெரிக்காவில் தனியொருவருக்கான உற்பத்தி 100 ஆண்டுகளுக்கு முன்னர் இருந்ததைவிட 8 மடங்கு அதிரித்துள்ளது.[1] மந்திர மாயத்தாலோ, இந்திர ஜாலத்தாலோ அமெரிக்கா, ரஷ்யா முதலிய நாடுகளில் வேளாண்மை உற்பத்தி பெருகி இருக்கவில்லை. விஞ்ஞானமும், தொழில் நுட்பமும் வேளாண்மையில் புகுத்தப்பட்டமையே அதற்குக் காரணமாகும். இந்த நாடுகளில் விவசாயிகளிடையே கல்வியறிவு பரவியது. பரிசோதனைச் சாலைகளில் பண்ணை முன்னேற்றத்திற்கான ஆராய்ச்சிகள் செய்யப்பட்டன. உரிய இரசாயன, பசுமை உரங்கள் இடப்பட்டு நிலவளம் காக்கப்பட்டது. புதிய வகைப் பயிர்களும், கால்நடைகளும் புகுத்தப்பட்டன. கால்நடைகள், கோழிகள் ஆகியவற்றிற்கான புதிய தீவனங்கள் உற்பத்தி செய்யப்பட்டன. பயிர்களின் வளர்ச்சியைப் பாதிக்கும் களைகளை எடுக்கும் முறையில் முன்னேற்றம் ஏற்பட்டது. பயிர் நோய்கள் தடுக்கப்பட்டன; பூச்சிக்கொல்லி மருந்துகள் பயன்படுத்தப்பட்டன. நீர்ப்பாசன வசதிகள், வடிகால் வசதிகள் முதலியவற்றிற்கும் முக்கியத்துவம் தரப்பட்டது.

ஜப்பானில் சிறிய நிலவுடைமைகளில் விஞ்ஞானத்தையும், தொழில் நுட்பத்தையும் புகுத்தி உயர்வான வேளாண்மை உற்பத்தியைப் பெறுகின்றார்கள். சோவியத் ரஷ்யாவில் பேரளவு உற்பத்தி முறை கைக்கொள்ளப்பட்டுள்ளது. இரசாயன உரங்கள் அதிக அளவுக்குப் பயன்படுத்தப்படுகின்றன. இவற்றின் மூலமாக நிலத்தின் உற்பத்தித் திறன், உழைப்பாளரின் உற்பத்தித் திறன்,

1 Freeman, O. L. 'The American Farm Revolution in 'American Review, January 1964, pp. 82-84.'

கால்நடை உற்பத்தித் திறன் ஆகியவை அதிகரித்துள்ளன. சில ஆண்டுகளுக்குள்ளாகவே மெக்ஸிகோவில் வேளாண்மை உற்பத்தி மூன்று மடங்கும், வடமேற்கு ஐரோப்பாவில் நான்கு மடங்கும் பெருகியதற்குக்காரணம் இயந்திரமயமாக்குதல், இரசாயனமய மாக்குதல், நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்குதல் ஆகியவை பெரிதும் உதவிவந்தன.[1] இவற்றுள் எந்த ஒன்றிலுமே இந்தியாவில் சிறப்பான முன்னேற்றம் ஏற்படவில்லை. இங்கு வேளாண்மை முதலீட்டின் அளவு குறைவாக இருக்கின்றது. முதலீட்டிற்குத் தேவையான உள்ளீட்டுப் பொருள்களின் அளிப்பைத் தடையின்றிப் பெருக்குவது இன்றியமையாதது. இதனால், உற்பத்தியைப் பல மடங்கு பெருக்க வழிபிறக்கும்.

நான்காவதாக, வேளாண்மையில் ஈடுபட்டுள்ளவர்களின் தலா வருமானம் மிகக் குறைவாக உள்ளது. பிற தொழில்களிலும், வாணிபத்திலும் தலா வருமானம் உயர்வாக இருப்பது குறிப்பிடத் தக்கது.

இந்தியாவின் பல பகுதிகளுக்கிடையே தட்பவெப்ப நிலை வேறு படுகின்றது. அதற்கேற்பவும் வேளாண்மை உற்பத்தியின் அளவு பல இடங்களிலும் மாறுபடுகின்றது. பொருளாதார முன்னேற்றத் தின் முதல் சில நிலைகளில் வேளாண்மை உற்பத்தி குறைவாக இருப்பது இயல்பு. ஆனால், இந்தியாவில் இதன் அளவு மிகமிகத் தாழ்வாக இருக்கின்றது.

### உற்பத்தித் திறன் குறைவு

நம் நாட்டில் வேளாண்மை நடவடிக்கைகள் மூலம் நில வளம் சிறப்பாகப் பயன்படுத்தப்படவில்லை. நிலத்தின் சராசரி உற்பத்தி யளவு குறைந்து வருகின்றது. ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னர் ஓர் ஏக்கருக்குப் பெற்ற உற்பத்தியில் சுமார் 90 சதவீதத்தையே இன்று நாம் பெறுகின்றோம். இதன் வாயிலாக 10 சதவீத உற்பத்தித் திறன் இழக்கப்பட்டுள்ளதை அறியலாம். கடந்த இருபது ஆண்டுகளில் உற்பத்தித் திறன் மிகவும் குறைந்துள்ளது. நிலம் செழுமைத்தன்மையை இழந்து வருகின்றது. உற்பத்தியைப் பெருக்கத் தீவிர நடவடிக்கைகள் எடுக்கப்படும்போது நிலம் வளமிழக்கின்றது. ஆக்கத்தை அதிகரிக்கத் திட்டமிடும்போது நிலம் உற்பத்தித் திறனை இழக்காமல் இருப்பதற்கான நடவடிக்கை களையும் எடுக்கவேண்டும்.

[1] M. Syrtsov, 'Component Elements of Crop Yields,' in the Soviet Land, January 1964, pp. 82—84.

சாகுபடி முறை, தடபவெப்பநிலை, நில அமைப்பு ஆகிய வற்றிற்கேற்பவும் சாகுபடி நிலம் வளமிழக்கிறது என்று டாக்டர் டி.எஸ். சௌஹான் (Dr. D.S. Chauhan) கூறுகின்றார். வளமிழந்த சாகுபடி நிலம் வேளாண்மை உற்பத்தியில் ஈடுபடுத்த இயலாத தரிசு நிலமாகின்றது. நில அரிப்பு, நிலச்சரிவு, நிலத்தின் உப்புத் தன்மை ஆகியவற்றாலும் உற்பத்தி பாதிக்கப்படுகின்றது. காலத் திற்குக் காலம் வெவ்வேறு இடங்களிலும் நிலத்தின் வளநிலை வேறு படுவதுண்டு. நில வளப் பாதுகாப்புக்கான நடவடிக்கைகளை எடுப்பது மிகவும் அவசியமானது.

உத்தரப் பிரதேசத்தின் சில பகுதிகளில் ஓர் ஏக்கரில் ஓராண்டுக்கான உற்பத்தி இழப்பு 15 டன்களாக இருக்கின்றது. 1885-ல் இந்தியாவின் மொத்த நிலப்பரப்பில் சாகுபடி நிலம் 52.8 சதவீதமாக இருந்தது. இதன் அளவு தற்பொழுது 47.2 சதவீத மாகக் குறைந்துள்ளது. இடையிடையே சாகுபடிக்காகப் புதிய நிலங்கள் எடுத்துக்கொள்ளப்பட்டன என்பது குறிப்பிடத்தக்கது. ஓர் ஆய்வின்படி பம்பாய் மாநிலத்தின் 21 சதவீதச் சாகுபடி நிலம் சுமார் 60 ஆண்டுகளில் சாகுபடிக்குத் தகுதியற்றதாக மாறி விட்டதை அறிகிறோம்.

இந்தியாவில் 117.17 மில்லியன் ஏக்கர்கள் தரிசு நிலமும், 25.41 மில்லியன் ஏக்கர்கள் சாகுபடிக்கு ஏற்ற-ஆனால் சாகுபடி செய்யப் படாத நிலமும் இருக்கின்றன. இராஜஸ்தானில்தான் 27.3 மில்லியன் ஏக்கர்கள் என்ற அளவுக்கு அதிகத் தரிசு நிலம் இருக்கிறது. அதற்கு அடுத்தபடியாக மத்தியப்பிரதேசத்தில் 20.9 மில்லியன் ஏக்கர்கள் இருக்கின்றன. சாகுபடிக்குச் சற்றும் தகுதியில்லாத நிலப்பரப்பும் இந்தியாவில் மிகுதியாக உள்ளது. இவ்வகை நிலம் உத்தரப்பிரதேசத்தில் 3.5 மில்லியன் ஏக்கர்கள் என்ற அளவுக்கு இருக்கின்றது. உப்புத்தன்மை கொண்ட நிலம் உத்தரப்பிரதேசத்தில் 2 மில்லியன் ஏக்கர்களும், பஞ்சாபில் 3 மில்லியன் ஏக்கர்களும் உள்ளன. நாடு முழுவதும் இந்த நிலத்தின் அளவு 12 மில்லியன் ஏக்கர்களாக இருக்கிறது.

### குறைவான வேளாண்மை உற்பத்திக்கான காரணங்கள்

நம் நாட்டில் ஓர் ஏக்கருக்கான உற்பத்தியும், தனி ஒருவருக் கான உற்பத்தியும் மிகக் குறைவாக இருக்கின்றன என்பது விளக்கப்பட்டது. திட்டக் காலத்தில் இவற்றில் ஓரளவு முன்னேற்றம் ஏற்பட்டது. ஆனால் வேளாண்மைச் சாகுபடி முறை களில் சிறப்பான மாற்றங்கள் தோன்றியிருக்கவில்லை. எனவே,

வேளாண்மை வளர்ச்சி குன்றிய நிலையில் இருக்கின்றமைக்கான காரணங்களை ஆராய்வது அவசியமாகிறது. இக் காரணங்களைப் பற்றிய ஆய்வு வேளாண்மை உற்பத்தியை உயர்த்த உதவும்.

## (1) வேளாண்மையில் அதிக மக்கள் தொகை

இந்திய வேளாண்மையின் தலையாய சிக்கல் அதிக மக்கள் தொகை அதில் ஈடுபட்டுள்ளமையேயாகும். 1901 ஆம் ஆண்டு முதலே நம் நாட்டில் வேளாண்மையைச் சார்ந்து வாழ்பவர்கள் மொத்த மக்கள் தொகையில் சுமார் 70 சதவீதம் என்ற அளவில் இருக்கின்றனர். இச் சதவீதத்தில் நீண்ட காலமாக மாற்றம் இல்லாவிட்டாலும்கூட 1901-ல் 163 மில்லியனாக இருந்த வேளாண்மை மக்கள் தொகை 1961-ல் 307 மில்லியனாக உயர்ந்தது. அதிகரித்த மக்கள் தொகையைத் தொழில் துறையால் ஈர்க்க முடியவில்லை. காலப்போக்கில் சிறு தொழில்களும்; குடிசைத் தொழில்களும் நசித்துவிட்டன. நிலத்தில் மக்களின் நெருக்கம் மிகுந்துவிட்டமையால் சாகுபடி நிலங்கள் உள்பிரிவுப்படுத்தப்பட்டன. தனியொருவருக்கான நில அளவு சுருங்கியது. வேளாண்மையில் 'மறைமுக வேலையின்மை' தோன்றியது, உழைப்பாளரின் இறுதிநிலை உற்பத்தி 'பூஜ்யம்' என்ற நிலையை அடைந்தது. அஃது எதிர் வீதத்திலும் மாறத் தொடங்கியது, 1901-ல் ஒரு சாகுபடியாளருக்கான சராசரி நில அளவு 103 செண்டுகளாக இருந்தது; அது 1961-ல் 74 செண்டுகளாகக் குறைந்தது. நிலத்தின் மீதான மிகுந்த மக்கள் செறிவைக் குறைத்தாலொழிய வேளாண்மை வளர்ச்சித் திட்டங்களில் வெற்றி பெற முடியாது.

இந்திய வேளாண்மையில், சுமார் 25 சதவீத உபரி மக்கள் தொகை அமைந்திருப்பதாகக் கணக்கிடப்பட்டுள்ளது. இதன் காரணமாக வேளாண்மை வருமானம் குறைகின்றது. விவசாயிகளுடைய சேமித்து முதலீடு செய்யும் திறனும் தாழ்வுறுகின்றது. நிலத்தின் அளிப்பு முற்றிலும் நெகிழ்வற்றது; மாறாக மக்கள் பெருக்கம் அதிக நெகிழ்வைக் கொண்டுள்ளது.

நமது வேளாண்மைத் துறையின்மீது முன்னர் இருந்ததைவிடத் தற்பொழுது அதிக வரிகள் விதிக்கப்படுகின்றன. அதிக மக்கள் தொகை வேளாண்மையைச் சார்ந்திருப்பதே இதற்குக் காரணமாகும். 1891-ல் தலா ஒருவருக்கான சாகுபடி நில அளவு, சராசரி 1.09 ஏக்கராகும். அது 1931-ல் 1.04 ஏக்கராகவும், 1961-ல் 0.74 ஏக்கராகவும் குறைந்துவிட்டது.

மூலதனத் திரட்சியை உயர்ந்த அளவில் பெற வேளாண்மை மக்கள் தொகையைக் குறைக்கவேண்டும். போதுமான உரங்களை இட்டு அமோக விளைச்சலைத் தரும் பயிர்களைச் சாகுபடி செய்வது அவசியம். 'அதிக எண்ணிக்கையில் உள்ள சமையல்காரர்களால் நல்ல விருந்தைப் படைக்க முடியாது' என்னும் கூற்று, இந்திய வேளாண்மைக்குப் பொருந்தக்கூடியதாகும். குறைவான உழைப்பாளர்கள் இயந்திர உற்பத்தி முறையைக் கைக்கொண்டால்தான் வேளாண்மை உற்பத்தியைப் பெருக்க இயலும்.

ஒரே நிலவுடைமையாளர் வெவ்வேறு இடங்களில் சிறிய துண்டு நிலங்களைக் கொண்டிருக்கின்றனர். நம்முடைய சொத்துப் பேறு உரிமைச் சட்டங்களில் உள்ள குறைபாடுகளும், நிலங்கள் உள்பிரிவு படுத்தப்படுவதற்குக் காரணமாகின்றன. பொருளாதார ரீதியில் இலாபத்தைத் தராத நிலவுடைமைகளே அதிக எண்ணிக்கையில் உள்ளன. உற்பத்தியைப் பெருக்க வேண்டுமென்ற ஊக்கமும் இதனால் இழக்கப்படுகிறது.

இந்தியாவின் மொத்த நிலப்பரப்பு 328 மில்லியன் ஹெக்டேர்கள். அவற்றில் 120 மில்லியன் ஹெக்டேர்கள் சாகுபடி நிலமாகவும், 46 மில்லியன் ஹெக்டேர்கள் சாகுபடிக்கு ஏற்ற—ஆனால் சாகுபடி செய்யப்படாத நிலமாகவும், 28 மில்லியன் ஹெக்டேர்கள் தரிசு நிலமாகவும், 73 மில்லியன் ஹெக்டேர்கள் காடுகளாகவும் இருக்கின்றன. எஞ்சிய நிலம் வேளாண்மையல்லாத பணிகளுக்குப் பயன்படுத்தப்படுகின்றது. எவ்விதப் பயனையும் தராத நிலப்பரப்புகளும் உள்ளன.

(2) ஊக்கமிழக்கச் செய்யும் கிராமச் சூழ்நிலை

இந்திய விவசாயிகள் எழுத்தறிவில்லாதவர்களாகவும், ஏதும் அறியாதவர்களாகவும், புரியாதவர்களாகவும், மூட நம்பிக்கைகளைக் கொண்டவர்களாவும், பழைமைவாதிகளாகவும், பழக்க வழக்கங்களுக்கேற்ப நடப்பவர்களாகவும், சாதிக் கட்டுப்பாடுகளைக் கொண்டவர்களாகவும், கூட்டுக் குடும்ப வாழ்க்கை நடத்துபவர்களாகவும் இருக்கின்றனர். மத நம்பிக்கை கொண்ட அவர்களுக்கு விதியில் அதிக நம்பிக்கை உண்டு. தங்களுடைய மூதாதையர்களின் சாகுபடி முறைகளை மாற்றியமைக்க அவர்கள் விரும்புவதில்லை; முன்னேற்றமான வாழ்வைப் பெற வேண்டும் என்ற எண்ணத்தைக் கொண்டிருப்பதில்லை. மக்களுடைய மனத்தில் தளர்ச்சியும், தேக்க நிலையும், குறுகிய நோக்கும் இருக்கும்போது எங்ஙனம் வேளாண்மை வளர்ச்சியைப் பெற இயலும்?

நம் நாட்டில் வேளாண்மை வாணிப நோக்கில் செய்யப்படாமல் தன்னிறைவுக்காகக் கைக்கொள்ப்படுகின்றது. தொழில் துறையில் நடவடிக்கைகள் முறையாகத் திட்டமிடப்பட்டுச் செயல் படுத்தப்படுவதுபோல, வேளாண்மையில் செய்யப்படுவதில்லை. வேளாண்மையில் திறமை மிக்க தொழில் முயல்வோர் அதிகமாக இருப்பதில்லை. இந்தியக் கிராம மக்களிடையே பகையுணர்ச்சி, வெறுப்பு, போட்டி மனப்பான்மை, வகுப்பு வாதம் ஆகியவை அமைந்துள்ளன. வேளாண்மை உற்பத்தியை இச் சமுதாயக் காரணிகள் பெரிதும் பாதிக்கின்றன.

### (3) போதுமான கடன், விற்பனை வசதிகள் இல்லாமை

வேளாண்மைக் கடனுக்கான வட்டி உயர்வாக உள்ளது. விளைபொருள்களை விற்பதற்கான செலவு மிகுதியாக இருக்கின்றது. விவசாயிகள் அதிகமான வட்டிக்கு லேவாதேவிக்காரர்களிடம் இருந்து கடன் பெறுகின்றார்கள். கடனைத் தீர்க்க முடியாத சிறிய நிலவுடைமையாளர்கள் நிலத்தை விற்று வேளாண்மை உழைப் பாளர்களாக மாறுகின்றனர். அரசு விவசாயிகளுக்குக் கடன் அளிக்கிறது. கூட்டுறவுத்துறை நிறுவனங்களின் மூலமும் விவசாயிகள் கடனைப் பெறுகின்றார்கள். ஆனால், இவற்றின் வாயிலாக மிகக் குறைவான அளவில் மட்டுமே கடன் தேவைகள் பூர்த்தி செய்யப்படுகின்றன. இதைப்போன்றே விவசாயிகள், பொருட்களைச் சேமித்து வைப்பதற்கான கிடங்குகள், விற்பனை வசதிகள் ஆகியவற்றைக் கொண்டிருப்பதில்லை. மொத்த வியாபாரி களாலும், கமிஷன் தரகர்களாலும் அவர்கள் ஏமாற்றப்படு கின்றனர்.

இந்திய விவசாயிகள் மிகவும் வறிய நிலையில் இருக்கின்றார்கள். அவர்களுடைய வாழ்க்கை கடனிலேயே கழிகின்றது. போதுமான நிதி வசதியைப் பெற்றில்லாத அவர்களால் முன்னேற்றமான சாகுபடி முறைகளைக் கைக்கொள்ள முடிவதில்லை. சாகுபடி, போக்குவரத்து, விற்பனை, மதச் சடங்குகள் முதலிய பலவற்றிற் காகவும் அவர்கள் அதிக வட்டியில் கடன் பெறுகின்றனர். அகில இந்தியக் கடன் ஆய்வுக்குழுவின் அறிக்கை, (1950-51) மொத்த வேளாண்மைக் கடனில் சுமார் 90 சதவீதத்தை லேவாதேவிக் காரர்கள் அளித்தனர் என்று குறிப்பிட்டது. 6.4 சதவீதம் மட்டுமே நிறுவனக் கடனாகப் பெறப்படுகின்றது. 'வறுமை, கடன், அதிக வட்டி வீதம் ஆகியவை சுழலும் வட்டமாக அமைந்து சிறிய விவசாயிகளை இறுக்குகின்றன.'[1]

[1] U. N. O., Credit Problems of Small Farmers in Asia and the Far—East, p. 17.

விவசாயிகளை அழுத்தும் கடன் சுமை, அவர்களை உற்பத்தியைப் பெருக்குவதற்கான கருவிகளைப் பயன்படுத்தவோ, நிலச் சீர்திருத்தப் பணிகளை மேற்கொள்ளவோ முடியாத நிலையை ஏற்படுத்துகின்றன. கடன் தொல்லை தாளாத சிறு விவசாயிகள் அறுவடை முடிந்தவுடனேயே தங்களுடைய விளைபொருள்களைக் குறைந்த விலையில் விற்கின்றனர். இதனால், அவர்களுடைய கடின உழைப்புக்குத் தக்க சன்மானம் கிடைப்பதில்லை.

## 4. சிறிய அளவில் சாகுபடி நிலங்கள்

இந்தியாவில் சராசரிச் சாகுபடி நில அளவு 5 ஏக்கர்களுக்குக் குறைவானது. சிறிய நிலவுடைமைகள் உள்பிரிவுபடுத்தப்பட்டுச் சிதறுண்டு கிடக்கின்றன. கலப்பையைத் திருப்ப முடியாத வகையில்கூட நிலவுடைமைகள் சிறிய அளவில் உள்ளன. முன்னேற்றமான கருவிகள், விதைகள், உரங்கள் ஆகியவற்றைப் பயன்படுத்துவதும், விஞ்ஞானச் 'சாகுபடி முறையைப் பின்பற்றுவதும் இயலாத நிலையைக் கொண்டுள்ளன. சிறிய துண்டு நிலங்களில் சாகுபடி செய்யும்போது மனித உழைப்பு, கால்நடை உழைப்பு ஆகியன. வீணடிக்கப்படுகின்றன. கால தாமதம் ஏற்படுகின்றது. நீர்ப்பாசன வசதிகளைச் சரியாகப் பயன்படுத்த முடிவதில்லை. வேலியிடுவது கடினமாகின்றது. வேலியிடாதபோது பயிர்கள் சேதமடைகின்றன. நிலவுடைமையாளரிடையே வரப்புத் தகராறுகள் தோன்றுகின்றன. ஒரு குடும்பத்தில் உள்ள ஆண் மக்களும், பெண்மக்களும் நிலச் சொத்தில் உரிமை பெற்றவராகின்றனர். அவர்களிடையே பாகப் பிரிவினை செய்யப்படும்போது சாகுபடி நில அளவு சுருங்குகின்றது.

நம் நாட்டின் சாகுபடி நிலங்களில் சுமார் 62.96 சதவீதம் 5 ஏக்கர்களுக்குக் குறைவானவையே ஆகும். ஆனால், இவையும் சிறிய துண்டு நிலங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. இந் நிலை புதுமையான சாகுபடி முறைக்குத் தடையாக அமைகின்றது. துண்டாடப்பட்டுச் சிதறுண்ட நில அமைப்பால் விவசாயிகளின் உழைப்பு, நேரம், சக்தி, பணம் ஆகியன வீணாகின்றன. விவசாயிகளிடம் போதுமான அளவில் நிலமின்மையால் உற்பத்தித்திறன் குறைகிறது.

ஒரு ஜோடி கால்நடைகளைக்கொண்டு சுமார் 13 ஏக்கர்கள் நிலத்தை உழ முடியும் என்று கணக்கிடப்பட்டுள்ளது. ஆனால், இந்திய விவசாயிகள் ஒவ்வொருவரும் ஒரு ஜோடி கால்நடைகளையாவது உடைமையாகப் பெற்றிருக்கின்றனர். அவர்களுடைய

சராசரி சாகுபடி நில அளவு 5 ஏக்கர்களுக்குக் குறைவானதே யாகும். எனவே, மேலும் 8 ஏக்கர்கள் நிலத்தை உழத்தக்க ஜோடி கால்நடைகள் அவ்வாறு பயன்படுத்தப்படுவதில்லை, இது போன்றே பிற சாகுபடிச் சாதனங்களும் கருவிகளும் முழுமையாக உபயோகிக்கப்பெறுவதில்லை.

## 5. நிலவுடைமை உரிமை முறையில் உள்ள குறைபாடுகள்

விவசாயிகளிடையே போதிய ஊக்கமின்மை வேளாண்மை உற்பத்திக் குறைவுக்கு முக்கியக் காரணமாகிறது. ஜமின்தாரி முறையிலும், நிலப்பிரபுத்துவ முறையிலும் சாகுபடியாளர் நிலவுடைமையாளராக இருப்பதில்லை. நிலவுடைமையாளர் சாகுபடியாளரை நிலத்தினின்றும் வெளியேற்ற முடிகின்றது. ஜமின்தாரி முறை தற்பொழுது ஒழிக்கப்பட்டுவிட்டது. குத்தகைச் சீர்திருத்தச் சட்டங்கள் பல மாநிலங்களிலும் நிறைவேற்றப்பட்டுள்ளன. எனினும், குத்தகையாளர்களுடைய நிலையில் முன்னேற்றம் ஏற்படவில்லை. இந்தியாவில் சாகுபடியாளர்களில் பலர் நிலவுடைமையாளராக இருப்பதில்லை. குத்தகையாளர்கள் அதிக வாரத்தைத் தர வேண்டியுள்ளது. அவர்கள் போதுமான பாதுகாப்பைப் பெற்றிருக்கவில்லை. நிலக்கிழார் தம்முடைய விருப்பப்படி நிலத்தைப் பறித்துக் கொண்டு விடுகின்றார். பாதுகாப்பைப் பெற்றில்லாத சாகுபடியாளர்கள் உற்பத்தியைப் பெருக்கும் ஊக்கத்தை இழக்கின்றார்கள்.

சொந்தச் சாகுபடியாளர்களே அதிக ஆர்வத்தோடு உற்பத்தியில் ஈடுபடுகின்றார்கள். ஆனால், திறமையாகச் சாகுபடி செய்ய பெரிய நிலவுடைமைகள் தேவைப்படுகின்றன. சொந்தச் சாகுபடியாளர்களின் எண்ணிக்கையைப் பெருக்கும் நோக்குடன் நிலச் சீர்திருத்தங்கள் செய்யப்படுகின்றன. இன்று நிலக்கிழார் குத்தகை முறையின் மூலம் சாகுபடியாளர்களைச் சுரண்டுவதற்கு ஜமின்தாரி, ஜாகிர்தாரி முறைகளே உதாரணமாக அமைந்தன. அவை தற்பொழுது ஒழிக்கப்பட்டு விட்டாலும், வேளாண்மைத் துறையில் முதலாளித்துவ முறையின் இயல்புகள் நீடிக்கின்றன.

பல மாநிலங்களிலும் குத்தகைச் சீர்திருத்தச் சட்டங்கள் நிறைவேற்றப்பட்டிருந்தாலும், அவை சிறப்பாகச் செயல்படுத்தப் படவில்லை. நல்ல உரங்கள், விதைகள், கருவிகள் ஆகியவற்றைப் பயன்படுத்தும் நிலையில் குத்தகைச் சாகுபடியாளர்கள் இருப்பதில்லை. நிலம் வளமிழக்கிறது; உற்பத்தி குறைகிறது; மூலதனத் திரட்சி பாதிக்கப்படுகிறது.

நிலச் சீர்திருத்தங்களுக்கும் அரசின் வரி வருவாய்த் துறைக்கும் நெருங்கிய தொடர்பு உள்ளது. சீர்திருத்தச் சட்டங்களைச் செயல்படுத்த நீண்ட காலம் பிடிக்கிறது. சாகுபடியாளர்களுக்கு நிலத்தின் மீதான தங்களுடைய உரிமை பற்றிய ஐயப்பாடு எழுகின்றது. இதன் காரணமாக அவர்கள் அதிக முதலீடு செய்யத் தயங்குகின்றனர். 'தலத்திலில்லா நிலக்கிழார் முறையே' (Absentee-Landlordism) இன்றும் நீடித்து வருகிறது. குத்தகையாளர் உற்பத்தியைப் பெருக்கினாலும் அதிக வாரத்தை நிலவுடைமையாளர்களுக்கு அளிக்க வேண்டியுள்ளது.

இந்திய நிலவுடைமை முறை, பாடுபடுபவர்களுக்குச் சாதகமாக அதிக அளவு நிலத்தை உடைமையாகக் கொண்டவர்கள் சாகுபடியில் நேரடியாக ஈடுபடுவதில்லை. சாகுபடியாளர்கள் கூலிக்காகவோ, குத்தகைக்காகவோ உழைக்கின்றனர்.

சுதந்திரமடைந்த பின்னர், அரசு தன்னுடைய தீவிர நிலக் கொள்கையை அறிவித்தது. ஆனால் இக் கொள்கை இன்று வரை முழுமையாகவும், சிறப்பாகவும் செயல்படுத்தப்படவில்லை. சட்டங்களைச் சரிவரச் செயல்படுத்துவதற்குத் தடையாகச் 'சிவப்பு நாடா முறை' அமைந்துள்ளது. நம் நாட்டில் நிறைவேற்றப்படும் நிலச் சீர்த்திருத்தங்களில் குறைப்பாடுகள் இல்லை. அவற்றைச் செயல்படுத்துவதிலேயே பல இடையூறுகளும் அடங்கியுள்ளன.

6. பழைமையான சாகுபடி முறைகள்

இந்திய விவசாயிகள் பாரம்பரியமான சாகுபடி முறைகளைப் பின்பற்றுகின்றனர். பழைய காலங்களின் மரக் கலப்பைகளே இன்றும் பயன்படுத்தப்படுகின்றன. இதற்கு அவர்களுடைய வறிய நிலை முக்கியக் காரணமாகும். மேலைநாடுகளிலும், ஜப்பானிலும் பின்பற்றப்படுகின்ற உற்பத்தி முறைகளை இந்திய விவசாயிகள் செயல்படுத்த வேண்டும். எனினும், திட்டக் காலத்தில் சாகுபடி முறைகளில் சில மாற்றங்கள் ஏற்பட்டன. விவசாயிகள் இரும்புக் கலப்பைகளையும் பம்பு செட்டுகளையும், விதை விதைக்கும் கருவிகளையும், இயந்திரக் கலப்பைகளையும் பயன்படுத்தத் தொடங்கியுள்ளார்கள்.

உற்பத்தியைப் பெருக்க போதுமான உரங்களைப் பயன்படுத்துவதும் அவசியம். ஏனெனில், தொடர்ச்சியாகச் சாகுபடி செய்யப்படும்போது நிலம் வளமிழக்கிறது. உரங்களை இட்டு நிலத்திற்கு வளம் கூட்டலாம். இந்தியாவில் பசுமை உரங்களும், இரசாயன உரங்களும் போதுமான அளவில் இடப்படுவதில்லை.

வேளாண்மை உற்பத்தி உயர்வுக்கு நல்ல விதைகளை உபயோகிக்க வேண்டும் என்று கூறத் தேவையில்லை. நல்ல விதைகளைப் பயன்படுத்தினால் 10 முதல் 20 சதவீத உற்பத்தி உயர்வைப் பெறலாம். இந்திய விவசாயிகள் தரம் குறைந்த விதைகளை விதைக்கின்றார்கள். நல்ல விதைகளை வாங்குவதற்கான நிதிவசதி அவர்களிடம் இருப்பதில்லை. பல விவசாயிகள் விதைக்காகத் தானியங்களைச் சேமித்து வைக்கின்றனர். ஆனால், சரியான கிடங்கு வசதிகள் இன்மையால் விதைக்கான தானியங்களின் தரம் பாதிக்கப்படுகிறது.

முன்னேற்றமான விதைகளைப் பரப்புவதற்கு மாநில வேளாண்மைத்துறைகளும், விதைப்பண்ணைகளும் முயற்சிகளை மேற்கொள்ளுகின்றன. சமீபத்தில் 'தேசிய விதைகள் கழகம்' (National Seeds Corporation) தோற்றுவிக்கப்பட்டுளளது. அரசின் நோக்கம் நல்ல விதைகளை அதிகமாக உற்பத்தி செய்து நாடு முழுவதும் பரப்புவதேயாகும். நோய்களால் பாதிக்கப்படாத, அமோக விளைச்சலைத் தரும் விதை வகைகளுக்கு முக்கியத்துவம் தரப்படுகின்றது.

உற்பத்தி உயர விவசாயிகளை நல்ல விதைகள், உரங்கள் கருவிகள் ஆகியவற்றைப் பயன்படுத்துமாறு ஊக்குவிக்க வேண்டும். பூச்சிக்கொல்லி மருந்துகளின் பயனை அவர்கள் அறியுமாறு செய்தல் நன்மை பயக்கும். வேதகாலத்திலிருந்து பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாக நிலம் வேளாண்மை உற்பத்தியில் ஈடுபடுத்தப்படுகின்றது. இந்தியாவில் பழக்க வழக்கங்களின் அடிப்படையிலேயே சாகுபடி முறை அமைந்திருக்கிறது. உரங்களைப் பயன்படுத்தும் பழக்கம் பெரும்பாலான விவசாயிகளிடம் இருப்பதில்லை. பயிர் பாதுகாப்பு நடவடிக்கைகளையும் அவர்கள் மேற்கொள்வதில்லை.

தரக்குறைவான விதைகள் குறைந்த உற்பத்தியைத் தருகின்றன. விதைக்க வேண்டிய காலத்தில் விவசாயிகள் வியாபாரிகளிடமிருந்தும் கடைகளிலிருந்தும் விதைகளை வாங்குகின்றனர். தரக்குறைவான விதைகள் உயர் விலையில் விற்கப்படுகின்றன. டாக்டர் பர்ன்ஸ் (Dr. Burns), 'நல்ல விதைகளின் மூலம் சராசரி நெல் உற்பத்தியை 5 சதவீதமும், உரங்களின் மூலம் 28 சதவீதமும், பூச்சிக்கொல்லி மருந்துகளைப் பயன்படுத்துவதன் மூலம் 5 சதவீதமும் அதிகரிக்கலாம்' என்று குறிப்பிடுகின்றார்.[1]

[1] Technological Possibilities of Agricultural Development in India, pp. vi-vii.

புதுமையான தொழில் நுணுக்கத்தைப் பரப்புதல், அதிக விளைச்சலைத் தரும் திட்டத்தைக் கைக்கொள்ளுதல் முதலியவற்றின்மூலம் உற்பத்தியைப் பல மடங்கு பெருக்கலாம். இது பரிசோதனை முறைப் பண்ணைகளினின்றும் தெரியவருகிறது.

ஆழ உழுவதும், எளிதில் அகல உழுவதும் மரக்கலப்பைகளால் இயலாது. மரக்கலப்பைகள் நிலத்தை மேல்மட்டத்தை ஆழமின்றிக் கோடிட்டுக் கீறிவிடுகின்றன. வளர்ச்சியடைந்த நாடுகளின் சாகுபடி முறைக்கும் இந்தியச் சாகுபடி முறைக்கும் அதிக வேறுபாடுகள் உள்ளன. ஜப்பானில் பாஸ்பேட் உரங்களும், நைட்ரஜன் உரங்களும் மிகுதியாகப் பயன்படுத்தப்படுகின்றன. இந்திய வேளாண்மையில் முன்னேற்றமான மாற்றம் ஏற்பட ஜப்பானியச் சாகுபடி முறையும் பின்பற்றப்படுகிறது. அரசு விவசாயிகளுக்குக் குறைந்த விலையில் உரங்களை விற்கின்றது. ஆனால், அவற்றைச் சில கள்ளச் சந்தைக்காரர்கள் வாங்கித் திரும்பவும் உயர்ந்த விலையில் விற்கின்றார்கள்.

வேளாண்மை ஆக்கத்தை அதிகரிக்க உள்ளீடுகளின் அளிப்புத் தடங்கலின்றிப் போதுமான அளவில் இருக்கவேண்டும். பலவசதிகளும் ஒருங்கே பெறப்படும்போதுதான் உற்பத்தி நடவடிக்கைகளைச் சிறப்பாகச் செய்ய முடியும்.

வசதி குறைந்த சாகுபடியாளர்கள் சாகுபடி நிலங்களைத் தரிசாக விட்டு விடுகின்றனர். இருபோகச் சாகுபடி முறைகள் பல இடங்களில் பின்பற்றப்படுவதில்லை. நிலம் சரியாகப் பயன்படுத்தப்படாமையும் உற்பத்திக் குறைவுக்குக் காரணமாகும்.

சராசரி இந்திய விவசாயி இயந்திரக்கலப்பை, தொழில் நுட்பம் வாய்ந்த கருவிகள் ஆகியவற்றை வாங்குவதற்கான வசதியைப் பெற்றிருப்பதில்லை. இவ்வகையில் 'நில அடமான, முன்னேற்ற வங்கிகள்' (Land Mortgage and Development Banks) விவசாயிகளுக்கு உதவுகின்றன. ஆனால், அவை போதுமான அளவுக்கு உதவ முடிவதில்லை. இந்திய விவசாயிகளில் 7 சதவீதத்திற்கும் குறைவானவர்களே புதுமையான சாகுபடி முறைகளைப் பின்பற்றுகின்றார்கள்.

வேளாண்மைக் கருவிகள், இயந்திரங்கள் ஆகியவற்றின் விலைகள் உயர்வாக இருப்பதால் சிறிய விவசாயிகளும், நடுத்தர

விவசாயிகளும் அவற்றை வாங்க முடிவதில்லை. ஒரே மாதிரியான கருவிகள் வெவ்வேறான விலைகளிலும் விற்கப்படுகின்றன. சாகுபடியாளர்கள் அவற்றைப் பயன்படுத்துவதற்கான வசதியையும், விருப்பத்தையும், ஊக்கத்தையும் கொண்டிருப்பதில்லை.

## 7. போதுமான நீர்ப்பாசன வசதிகள் இல்லாமை

நீர்ப்பாசன வசதிகள் இல்லாவிடில் நல்ல விதைகள், உரங்கள், கருவிகள் ஆகியவற்றின் நன்மைகளைப் பெற இயலாது. மழையை நம்பியே இந்தியாவின் பல பகுதிகளிலும் சாகுபடி செய்யப்படுகிறது. செயற்கை நீர்ப்பாசன வசதிகள் சில விவசாயிகளுக்கு மட்டுமே கிடைக்கின்றன. நாடு சுதந்திரமடைவதற்கு முன்னரும், பிரிவினை செய்யப்படுவதற்கு முன்னரும், 24 சதவீத நிலத்திற்கு நீர்ப்பாசன வசதி இருந்தது. அதற்குப் பின்னர், இந்த அளவு 19 சதவீதமாகக் குறைந்துவிட்டது. திட்டக் காலத்தில் பெரிய, சிறிய, நடுத்தர நீர்ப்பாசனத் திட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. அதன் காரணமாகத் தற்பொழுது 22 சதவீதச் சாகுபடி நிலத்திற்கு நீர்ப்பாசன வசதிகள் கிடைக்கின்றன. மேலும், நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்க அரசு அதிக முதலீட்டைச் செய்துவருகின்றது.

'இந்திய வேளாண்மை, பருவ காலங்களில் சூதாட்டமாக இருக்கின்றது.' உரிய காலங்களில் மழைப்பொழிவு ஏற்படாவிட்டால் உற்பத்தி பாதிக்கப்படுகிறது. ஆண்டுதோறும் நாட்டின் சில பகுதிகளில் மழை போதுமான அளவில் பொழிவதில்லை; அல்லது அதிக மழையால் வெள்ளப் பெருக்கு ஏற்படுகின்றது. நீர்ப்பாசன வசதிக் குறைவால் பல இடங்களில் இருபோகச் சாகுபடியே சாத்தியமாகிறது. எனவே, இயல்பாக ஓர் ஏக்கருக்கான உற்பத்தியும், ஓர் உழைப்பாளருக்கான உற்பத்தியும் தாழ்வாக அமைகின்றன. போதுமான பாசன வசதிகள் இருந்தால் பயிர் சுழற்சி முறையையும், இருபோகச் சாகுபடி முறையையும் விவசாயிகள் எளிதில் கைக்கொள்ளமுடியும்.

கிடைக்கக்கூடிய நீர்ப்பாசன வசதிகளும் சிறப்பாகப் பயன்படுத்தப்படுவதில்லை. ஐந்தில் ஒரு பகுதிச் சாகுபடி நிலம் மட்டுமே முழுமையான நீர்ப்பாசன வசதிகளைக் கொண்டிருந்தது. எஞ்சிய நிலப்பரப்பில் மழையை நம்பியே பயிரிடப்படுகின்றது. 1968—69-ல் 9.2 மில்லியன் ஹெக்டேர்களுக்கு நீர்ப்பாசன வசதி இருந்தது. ஆயினும் 7.7 மில்லியன் ஹெக்டேர்கள் மட்டுமே நீர்ப்பாசன

வசதியின் பயனைப் பெற்றன. அதிக முதலீடு செய்யப்படும் நீர்ப் பாசனத் திட்டங்கள் முழுமையாகப் பயன்படுத்தப்படவேண்டும்.

போதிய நீர்ப்பாசன வசதிகள் இல்லாமையால்தான் விவசாயிகள் மழையை நம்பிப் பயிர் செய்ய வேண்டியுள்ளது. தொடர்ச்சியாகவும் உறுதியாகவும், உரிய காலத்திலும் பாசன வசதிகள் கிடைப்பதில்லை. நீர்ப்பாசன வசதிகள் பொருந்தியுள்ள இடங்களிலும் சில விவசாயிகள் பருவ மழையை எதிர்பார்த்தே பயிர்ச் சாகுபடி செய்கின்றனர்.

இயற்கைக் காரணிகளின் மாற்றங்களுக்கு ஏற்ப வேளாண்மை உற்பத்தியும் மாறுகின்றது. நாட்டில் பஞ்சமும், வறட்சியும் தோன்றுவதற்கு வெள்ளம், புயல் காற்று, மழையின்மை ஆகியவையே காரணமாகின்றன. தட்ப வெப்ப நிலைகளின் மாற்றங்களுக்கு ஏற்ப, சாகுபடி நடவடிக்கைகளை மாற்றியமைப்பது எளிதன்று. திட்டமிட்டுக் குறிப்பிட்ட உற்பத்தியை வேளாண்மையில் பெறுவது கடினம். பருவ மழை சாதகமாக இல்லாவிடில் எவ் வகையில் சிறப்பான உற்பத்தி நடவடிக்கைகளை மேற்கொண்டாலும் ஆக்கத்தை அதிகரிக்க முடியாது. மழையின்மையோ, குறைந்த மழையோ, மிகுந்த மழையோ சாகுபடிக்கு ஊறு விளைவிக்கின்றன.

வேளாண்மை உற்பத்திக் குறைவுக்கான முக்கியக் காரணங்கள் மேற்கண்டவாறு விளக்கப்படுகின்றன. அதற்கான பிற காரணங்களைப் பின்வருமாறு குறிப்பிடலாம்.

8 வேளாண்மை நாடுகளில் தானியங்களின் உற்பத்தி, தொழில் நாடுகளைவிடக் குறைவாக இருக்கின்றது. வளராத நாடுகளில் அதிக மக்கள் நெருக்கமே இதற்கு முக்கியக் காரணமாகும். தானியங்களின் உற்பத்திப் பெருக்கத்திற்காக இந்தியாவில் அதிக அளவு நிலம் பயன்படுத்தப்படுகிறது. ஆனால் அந்த நிலத்தில் அதிக முதலீடு செய்யப்படாமையால், உற்பத்தி குறைவாகவே இருக்கின்றது. பயிர்ச் சுழற்சி முறை இல்லாமையால் நிலம் வளமிழக்கின்றது.

9. காடுகள் அழிக்கப்படுவதால் மழைப் பொழிவு பாதிக்கப்படுகிறது. இதனால் சாகுபடி நிலங்கள் வளத்தை இழக்கின்றன. காடுகளின் அழிப்பு நிலத்தின் ஈரத்தன்மையை இழக்கச் செய்கிறது. அந்த நிலை நிலத்தின் உற்பத்தித் திறனை இழக்கச் செய்வதாகப் புவியியல் விஞ்ஞானிகள் கருதுகின்றனர்.

10. நிலச் சீர்திருத்தங்களைச் செய்வதன்மூலம் சிறிய நிலவுடைமைகளை வசதியற்ற விவசாயிகள் பெறுகின்றனர். முன்னேற்றமான சாகுபடி முறைகளை அவர்களால் பின்பற்ற முடிவதில்லை. நில உச்ச வரம்பின்மூலம் பெறப்பட்ட உபரி நிலம், நிலமற்றவர்களுக்கும் அளிக்கப்படுகிறது. வேளாண்மைச் சீர்திருத்தங்களால் சிறப்பாகச் சாகுபடி செய்பவர்களிடமிருந்து, நிலமானது பறிக்கப்பட்டுச் சிறப்பாகச் சாகுபடி செய்ய முடியாதவர்களிடம் அளிக்கப்படுகிறது. நில உச்ச வரம்பினின்றும் மீளப் பல பெரிய நிலவுடைமையாளர்கள் நிலத்தை விற்றுவிடுகின்றனர்கள். பயிர்த் தொழிலில் பழக்கமில்லாதவர்களும் அந்த நிலத்தை வாங்குகின்றனர்கள். உற்பத்தியைப் பெருக்கும் திறமையை அவர்கள் கொண்டிருப்பதில்லை. வாங்கப்பட்ட நிலம் குத்தகைக்கு விடப்படுவதும் உண்டு. வேளாண்மை உழைப்பாளர்களுக்கும் நிலம் வழங்கப்படுகின்றது. ஆனால், அவர்கள் சிறப்பான சாகுபடி முறைகளை அறிந்திருப்பதில்லை. நிலத்தின்மீதான சாகுபடியாளரின் உரிமைகள் காக்கப்படுவதில்லை.

11. தன்னிறைவுக்கான பண்ணை முறை இந்திய வேளாண்மையில் இன்றும் இருக்கின்றது. பெரும்பாலான விவசாயிகள் மிகக் குறைந்த வருமானத்தைப் பெறுகின்றனர்கள். அவர்களிடம் சேமிக்கும் திறன் இருப்பதில்லை. மிகக் குறைந்த அளவு முதலீட்டையே அவர்கள் செய்கின்றனர்கள். குறைவான வேளாண்மை உற்பத்திக்கும், வருமானத்திற்கும் இவையே காரணமாகின்றன. குறைந்த வருமானத்தைத் தரக்கூடியதாகவே வேளாண்மை இருக்கின்றது. நம் நாட்டில் வறுமை வட்டம் நீண்ட காலமாகவே இருந்து வருகின்றமைக்குக் குறைவான வேளாண்மை உற்பத்தி, குறைவான விற்பனை உபரியையே தருகிறது. விவசாயிகளின் வாங்கும் திறனும் தாழ்வாகவே இருக்கிறது. வெவ்வேறு காரணிகளும் ஒருங்கிணைந்து வறுமை வட்டத்தைத் தோற்றுவிக்கின்றன.

இந்திய வேளாண்மையில் நிலம் சரியாகப் பயன்படுத்தப்படுவதில்லை; அதிக முதலீடு செய்யப்படுவதில்லை. வேளாண்மைத் தொழில் அமைப்பும், நிர்வாகமும் குறைபாடுகளைக் கொண்டிருப்பதால் உற்பத்தி குறைவாக இருக்கின்றது.

12. சில சமுதாயக் காரணிகளும் வேளாண்மை உற்பத்தி உயர்வுக்குத் தடையாக உள்ளன. கிராம மக்களிடையே கசப்புணர்ச்சி, பகையுணர்வு, எழுத்தறிவின்மை, போட்டி மனப்பான்மை, மனக்குறை, பொறாமை, பூசல், காழ்ப்பு முதலியவை

அமைந்திருக்கின்றன.[1] அவர்களிடையே சாதி வெறி தலைவிரித்தாடுகிறது. கிராமச் சமுதாயத்தில் ஒற்றுமை நிலவுவதில்லை. எழுதப் படிக்கத் தெரியாத கிராம மக்களிடையே கூட்டுறவு மனப்பான்மை வளர்வதில்லை. மூட நம்பிக்கைகளைக்கொண்ட பழைமை வாதிகளான கிராம மக்கள் புதுமையான மாற்றங்களை விரும்புவதில்லை. விதியில் அதிக நம்பிக்கைகொண்ட அவர்கள் தேவைக்கு அதிகமான வருமானத்தைப் பெறுவதைப் பாவமாகக் கருதுகின்றனர். மூதாதையர்கள் பின்பற்றிய உற்பத்தி முறைகளிலேயே அவர்கள் நம்பிக்கை கொண்டுள்ளனர். வேளாண்மையில் உள்ள தேக்க நிலையும், பின்னிறக்க நிலையும் மாற்றப்பட்டால்தான் உற்பத்தியில் உயர்வைக் காண முடியும்.

13. சாலைகள், இரயில்வேக்கள், கால்வாய்கள், பாலங்கள் ஆகியவை அமைக்கப்படும்போது வடிகால் வசதி பாதிக்கப்படுகிறது. மழைநீரின் சீரான ஓட்டம் தடைப்படுகின்றது. வெள்ளங்கள் ஏற்படவும் அவை காரணமாகின்றன. இதனால், பயிர்கள் சேதமடைகின்றன. உரிய காலங்களில் சாகுபடி நடவடிக்கைகளைச் செய்வதும் இயலாததாகின்றது.

14. சாகுபடி நிலப் பற்றாக்குறையால் இறுதிநிலை நிலங்களும் கூட சாகுபடிக்காக எடுத்துக்கொள்ளப்படுகின்றன. மக்கள் தொகையின் விரைவான பெருக்கம் இதற்கு முக்கியக் காரணமாகின்றது. இறுதி நிலை நிலங்கள் தரக்குறைவானவையே ஆகும். அவை குறைந்த உற்பத்தியையே தருகின்றன. இந்தியாவில் சராசரி உற்பத்தி குறைவடைந்துள்ளமைக்கு இதையும் ஒரு காரணமாகக் கூறலாம்.

15. காடுகள் அழிக்கப்படுவதால், எரிபொருள்களின் பற்றாக்குறை ஏற்படுகின்றது. எனவே, கால்நடைகளின் கழிவுப் பொருள்களை எரிப்பதற்காகப் பயன்படுத்துகின்ற நிலை தோன்றுகிறது. குறைந்த அளவு எரு மட்டுமே சாகுபடி நிலத்தைச் சென்று சேருகின்றது. இதைத் தவிர தரம் மிக்க கால்நடைகள் பெருக்கப்படுவதால், பிற வகைக் கால்நடைகளின் எண்ணிக்கை குறைகிறது. கால்நடை எருவின் அளவு குறைவதற்கு இதையும் ஒரு காரணமாகக் கூறலாம். இந்தியா அதிக எண்ணிக்கையில் கால்நடைகளைக் கொண்டுள்ள நாடு. எனினும் கிடைக்கக்கூடிய கால்நடை எரு, உற்பத்தி உயர்வுக்காகச் சிறப்பாகப் பயன்படுத்தப்படுவதில்லை. 'ஆண்டுதோறும் கிடைக்கக்கூடிய கால்நடை எருவின் அளவு 1,200 மில்லியன் டன்கள் (ஈர எடை) ஆகும்; அதில்

[1] Baljit Singh, 'Next Step in Village India,' 1962.

400 மில்லியன் டன்கள் எரிபொருளாகவும், 215 மில்லியன் டன்கள் எருவாகவும் பயன்படுத்தப்படுகின்றன. எஞ்சிய எரு வீணடிக்கப்படுகின்றது.[1]

16. நிலங்கள் தொடர்ச்சியாகச் சாகுபடியில் ஈடுபடுத்தப் படுகின்றன. அவை எப்பொழுதும் தரிசாக விடப்படுவதில்லை. சில காலம் நிலத்தைத் தரிசாக விடும்போது நிலம் செழுமைத் தன்மையைப் பெறுகின்றது. பயிர்ச் சுழற்சி முறையாலும் நில வளத்தைக் காக்கலாம். விரைவாகப் பெருகிவரும் மக்களுக்கான உணவுப் பொருள்களையும், கச்சாப் பொருள்களையும் உற்பத்தி செய்வதில் நிலமானது தொடர்ச்சியாகப் பயன்படுத்தப்படுகிறது.

17. நில அரிப்பினாலும் சாகுபடி நில அளவு குறைகின்றது. நில அரிப்பால் பயிர்ச் சாகுபடி முறையில் மாற்றங்கள் செய்யப் படுகின்றன. புதிய பயிர்கள் சாகுபடி செய்யப்படுவதால் மொத்த வேளாண்மை உற்பத்தியின் அளவு குறைகின்றது. அரிப்பு ஏற்பட்ட நிலத்தில் முதலில் பயிரிட்ட சாகுபடி செய்ய முடியாது. அந்த நிலத்தில் சாதாரணப் பயிர்கள் மட்டுமே உற்பத்தி செய்யப் படுகின்றன.

18. இந்தியாவில் கட்டுமானப் பணிகள் விரைவாகச் செய்யப் படுகின்றன. கட்டடங்கள் கட்ட முழுமையாகச் சிமெண்ட்டையும், இரும்பையும் பயன்படுத்த முடியாதாகையால் செங்கற்கள் பயன்படுத்தப்படுகின்றன. செங்கற்களின் உற்பத்திக்குத் தேவையான மண் சாகுபடி நிலத்தினின்றும் எடுக்கப்படுவதுண்டு. இவ்வாறு, சாகுபடி நிலம் செங்கற்களின் உற்பத்திக்காக வீணடிக்கப்படுகிறது. புற நகர்ப் பகுதிகளின் சாகுபடி நிலங்களில் செங்கற் சூளைகள் அமைக்கப் பட்டிருப்பதினின்றும் இதை நன்குணரலாம்.

19. தொழில் துறையில் இருப்பதைப்போன்று, வேளாண்மையில் சிறப்பான தலைமை அமைந்திருக்கவில்லை. தொழில் திறமை மிக்கவர்கள் வேளாண்மையில் ஈடுபட்டிருப்பதில்லை. திறமை மிக்க துடிப்பான இளைஞர்களுக்குக் கிராம வாழ்க்கை பிடிப்பதில்லை. கிராம வாழ்க்கை முறை கவர்ச்சிகரமாக இல்லாமையே இதற்குக் காரணமாகும். படித்தவர்கள் பலரும் நகர்ப்புறங்களில் வசிக்கவே விரும்புகின்றனர். பெருநிலக்கிழார்களும் நகர வாழ்க்கையை அனுபவிப்பதிலேயே ஆர்வம் கொண்டுள்ளனர். வேளாண்மை உற்பத்தியைப் பெருக்க வசதி மிக்கவர்களும், படித்தவர்களும்,

[1] Planning Committee, Natural Resources of India, 1963, p. 15.

இளைஞர்களும் கிராமங்களில் தங்களுடைய பணிகளை ஆற்ற வேண்டும்.

20. வேளாண்மை உற்பத்தியைப் பெருக்குவதற்கான ஆராய்ச்சிகள் சிறப்பான வெற்றியைப் பெற்றிருக்கவில்லை. கடந்த 20 ஆண்டுகளில் வேளாண்மை ஆராய்ச்சிக்காக அரசு அதிகம் செலவிட்டுள்ளது. ஆராய்ச்சியின் சில கண்டுபிடிப்புகள் பயன் படுத்தத்தக்கவைகளாக இல்லை. ஆராய்ச்சியின் பயன்களில் பல விவசாயிகளைச் சென்று சேர்வதில்லை. அவற்றின், விளைவுகள் பரிசோதனை நிலையிலேயே பயன்படுத்தப்படுகின்றன. மேலும், வேளாண்மை வளர்ச்சிக்கு அரசு அதிக மூலதனத்தை ஒதுக்க வேண்டும்.

21. விளைபொருள்களைச் சேமித்து வைப்பதற்கான வசதியை விவசாயிகள் பெற்றில்லாமையால் அறுவடை முடிந்தவுடனேயே சந்தையில் விற்பனை செய்கிறார்கள். இதனால், வேளாண்மைப் பொருள்களின் விலைகள் குறைகின்றன. கிராமங்களில் போக்குவரத்து, செய்தித் தொடர்பு வசதிகள் சிறப்பாக அமைந்திருப்பதில்லை. விற்பனை வசதியைக் கொண்டில்லாத விவசாயிகள் தங்களுடைய விளைபொருள்களுக்கு நியாயமான விலைகளைப் பெறுவதில்லை. இதன் காரணமாகச் சாகுபடியாளர்கள் உற்பத்தியைப் பெருக்கி விற்பனை உபரியை அதிகரிக்கவேண்டுமென்ற ஆர்வத்தை இழக்கின்றார்கள். கிடங்கு வசதிகளைப் பெருக்குவதன் மூலம் விவசாயிகளுடைய வருமானத்தை உயர்த்தலாம்.

22. இந்திய விவசாயிகள் கால்நடைகளை அதிகமாகப் பயன் படுத்துகின்றார்கள். அவற்றின் எண்ணிக்கை மிகையாக இருப்பினும் ஆக்கத்திறன் குறைவாக உள்ளது. எலும்பும், தோலும் [illegible] கால்நடைகளைக் கொண்டு சாகுபடிப் பணிகளைச் சிறப்பாக நிறைவேற்ற முடிவதில்லை. அவற்றிற்கான பராமரிப்புச் செலவும் மிகுதியாக இருக்கின்றது. மேலும் கால்நடைகளின் முழுமையான உழைப்பைச் சிறு நிலவுடைமையாளர்கள் பெற இயலாது. கால்நடைப் பராமரிப்பு விவசாயிகளுக்குச் சுமையாக அமைகின்றது.

23. விவசாயக் குடும்பத்தினர் அதிகரிக்கும் வருமானத்தை வீணான நுகர்வில் செலவிடுகின்றார்கள். பெருநிலக்கிழார்கள் கிராம லேவாதேவிக்காரர்களாக இருக்கின்றனர்; ஆபரணங்களை வாங்குவதில் முதலீடு செய்கின்றனர். அவர்கள் வாணிபத்திலும் ஈடுபடுவதுண்டு. அதிகரிக்கின்ற வருமானம் வேளாண்மை

வளர்ச்சிக்காக முதலீடு செய்யப்படுவதில்லை. குறைவான முதலீட்டின்மூலம் தாழ்வான உற்பத்தியையே பெற முடிகின்றது.

24. விவசாயிகளுக்கும் நுகர்வோருக்கும் இடையில் உள்ள தரகர்கள் வேளாண்மைப் பொருள்களின் வாணிபத்தில் ஈடுபட்டுக் கொள்ளை இலாபத்தை அடைகின்றனர். 'உற்பத்தியாளர் விலைக்கும்' (Producers' price) 'நுகர்வோர் விலைக்கும்' (Consumer's price) நடுவே மிகுந்த இடைவெளி உள்ளது. அதை ஏற்படுத்துபவர்கள் வியாபாரிகளே ஆவர். விவசாயிகள் குறைந்த விலையில் விற்கும்போது நுகர்வோர் உயர்ந்த விலையில் வாங்குகின்றனர். எவ்விதப் பணியையும் ஆற்றாத தரகர்கள் அதிக இலாபத்தைத் தங்களுடைய சுரண்டல் வாணிபத்தின்மூலம் பெறுவதை அரசு அனுமதிக்கக்கூடாது.

25. வேளாண்மையில் உற்பத்தியை அதிகரிக்க அதிக மூலதனம் பயன் படுத்தப்படுவதில்லை. மாறாக உயர்ந்த வருமானத்தைப் பெறுபவர்கள் தொழில், வாணிபம், கடன் அளித்தல், நகைகள் வாங்குதல் முதலியவற்றிலேயே முதலீட்டைச் செய்கின்றனர், வேளாண்மைப் பொருள்களுக்கான விலையும் குறைவாக இருக்கின்றது. விவசாயிகளுக்கு ஊக்கமளிக்கக்கூடிய வகையில் விலை மட்டம் அமைய அரசு ஆவன செய்யவேண்டும். நுகர்வோர் அளிக்கக்கூடிய விலையின் பெரும்பகுதி விவசாயிகளைச் சென்றடையுமாறு செய்வது அவசியம்.

இந்திய வேளாண்மைப் பயிர்களை உணவுப்பயிர்கள், வாணிபப் பயிர்கள் என இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம். அரிசி, கோதுமை, தினைகள், பருப்புகள், சோளம், பார்லி முதலியவை உணவு வகைகளாகும். தேயிலை, காஃபி, ரப்பர், எண்ணெய் வித்துகள், பருத்தி, சணல், கரும்பு, புகையிலை முதலிய வாணிபப் பயிர்களும் உற்பத்தியாகின்றன. உணவுப் பயிர்களைத் தானியங்கள், பருப்புகள் என்ற இரு வகைகளில் பிரிக்க இயலும். மொத்த உணவுப் பொருள்களின் உற்பத்தியில் தானியங்கள் 80 சதவீதமாகவும், பருப்புகள் 20 சதவீதமாகவும் இருக்கின்றன. மொத்த வேளாண்மை உற்பத்தியில் உணவுப்பொருள்கள் 75 சதவீதம் என்ற அளவில் உள்ளன. எனவே, இந்திய வேளாண்மைத் துறையில் உணவு உற்பத்தியே முக்கியத்துவம் வாய்ந்ததாகத் திகழ்கின்றது. விவசாயிகளின் வருமானம் குறைவாக உள்ளமைக்கு வாணிபப் பயிர்களின் உற்பத்தியில் கவனத்தைச் செலுத்தாமையும் [redacted] காரணமாகிறது.

பின்வரும் அட்டவணை வாணிபப் பயிர்களை உற்பத்தி செய்வது இலாபகரமாக அமையுமென்பதை உணர்த்தும்.

1950—51, 1960—61 ஆம் ஆண்டுகளுக்கிடையே சாகுபடி நில அளவுகளின் குறியீட்டெண்களில் மாற்றம்

| ஆண்டு | உணவுப் பயிர்கள் | உணவல்லாத பயிர்கள் | எல்லாப் பயிர்களும் |
|---|---|---|---|
| 1950—51 | 100 | 100 | 100 |
| 1960—61 | 117 | 125 | 120 |

1960—61-ல் உணவல்லா பயிர்களின் சாகுபடிக்காக அதிக நிலம் பயன்படுத்தப்பட்டதை அட்டவணையினின்றும் அறியலாம். இந்தியாவில் உணவுப்பொருள்களுக்குப் பதிலாக உணவல்லாத பயிர்களைச் சாகுபடி செய்வதன்மூலம் அதிக இலாபம் பெற முடிகின்ற நிலையே இதற்குக் காரணமாகும். ஆனால், பயிர்ச் சாகுபடியில் மாற்றங்களைக் கொண்டு வருவது எளிதன்று. திரு. எஸ். என். சின்ஹா குறிப்பிடுவதாவது, 'வேளாண்மைச் சமுதாயத்தில் மக்கள் படிக்காதவர்களாகவும், பழக்கவழக்கங் களால் கட்டுப்படுத்தப்படுபவர்களாகவும் இருப்பதால் புதிய அல்லது மாற்றுப்பயிர்கள் சாகுபடி செய்யப்படுவதில்லை என்பது.' மேலும் விவசாயிகளில் பலர் வாணிப நோக்கில் உற்பத்தி நடவடிக்கைகளைக் கைக்கொள்வதில்லை.

ஆயினும், டாக்டர் என். ஏ. மஜூம்தார் முதலியவர்களின் ஆய்வு, இந்திய விவசாயிகள் இலாப நோக்கத்தைக் கொண்டுள்ளமையை அறிவுறுத்துகின்றது. விலைகளின் மாற்றங்களுக் கேற்ப இந்தியாவில் பயிர்கள் சாகுபடி செய்யப்பட்டதை டாக்டர் மஜூம்தார் சுட்டிக் காட்டுகின்றார். விலையுயர்வால் கரும்பு உற்பத்தி அதிக அளவு நிலத்தில் செய்யப்பட்டது. நெல் உற்பத்தியில் ஈடுபட்டிருந்த நிலங்கள் சணல் உற்பத்தியில் ஈடு படுத்தப்பட்டமைக்கும் விலையுயர்வே காரணமாகும். நிலக் கடலையின் விலை அதிகரித்தபோது சௌராஷ்டிர விவசாயிகள் தானிய வகைகளை உற்பத்தி செய்வதற்குப் பதிலாக நிலக்கடலைச் சாகுபடியில் கவனத்தைச் செலுத்தினர்.

பயிர்ச்சாகுபடியில் இலாப நோக்கம் மட்டுமன்றிப் பிறகாரணங் களுக்காகவும் மாற்றம் செய்யப்படுகிறது. நிலத்தின் தன்மை, தட்ப வெப்பநிலை, சாகுபடி நில அளவு, நிலவுடைமை உரிமை, விதைகள், உரங்கள், தண்ணீர் முதலிய உள்ளீடுகள் கிடைக்கின்ற

நிலை ஆகியவைகளுக்கேற்பவும் மாற்றுப் பயிர்கள் சாகுபடி செய்யப்படுகின்றன. 1964—65 ஆண்டின் 'வேளாண்மை விலைகள் குழு' (Agricultural Prices Commission), அரசு விலைகளை நிர்ணயித்து உணவுப் பொருள்கள், வாணிபப் பயிர்கள் ஆகிய வற்றின் உற்பத்தியைப் போதுமான அளவில் பெற வகை செய்ய வேண்டுமென்று குறிப்பிட்டது. அரசு உணவு உற்பத்தி குறை யாமல் வாணிபப் பயிர்களின் ஆக்கம் அதிகரிக்க வேண்டுமென்று கருதுகின்றது. வாணிபப் பயிர்களுக்குப் பதிலாக உணவுப் பொருள்களை உற்பத்தி செய்வதையும் அரசு விரும்பவில்லை.

சிலர் அதிக வாணிபப் பயிர்களை உற்பத்தி செய்து ஏற்றுமதி யைப் பெருக்கலாம் என்று கூறுகின்றனர். தேவையான உணவுத் தானியங்களை அயல் நாடுகளினின்றும் இறக்குமதி செய்துகொள்ள லாம் என்பது அவர்கள் கருத்தாகும். உணவு உற்பத்தியைவிட, வாணிபப் பயிர்களின் உற்பத்தி அதிக இலாபம் அளிக்கத்தக்கது. இதன்மூலம் விவசாயிகள் வளமான வாழ்வைப் பெறுவார்கள்.

கால்நடைப் பராமரிப்பில் கவனத்தைச் செலுத்துவது நன்மை பயக்கும் என்பது மற்றொரு சாராரின் கூற்றாகும். இவ் வாதமானது புதிதான ஒன்றன்று. பல காலத்திற்கு முன்னரே, 'பஞ்ச விசாரணைக் குழுவின்' (Famine Enquiry Commission) அறிக்கையில் திரு அவ்ஃசல் ஹுசெயின் இதுபற்றிக் குறிப்பிட்டுள்ளார். அவர் லாமரைன் ஏட்ஸ் (Lamarine Yates), வாரினெர் (Warriner) முதலியவர்களின் கருத்துகளைப் பின்வருமாறு கூறுகின்றார்.

'தானிய உற்பத்தி மட்டும் ஓர் ஏக்கர் நிலத்திலிருந்து அதிக வருமானத்தைத் தந்துவிடாது. மக்கள் நெருக்கம் மிகுதியாக உள்ள பகுதிகளில் பொருத்தமான பண்ணைச் சாகுபடி முறைகள் பின்பற்றப்படவேண்டும். தானியங்களின் உற்பத்தியோடு கால் நடைப் பொருள்களின் உற்பத்தியிலும் விவசாயிகள் ஊக்கம் காட்டுதல் அவசியம். தானியங்களை உற்பத்தி செய்வதால் மட்டும் அவர்கள் வளமான வாழ்வைப் பெற்றுவிட முடியாது'.

'உணவுத் தானியங்கள் விசாரணைக் குழுவின்' (Foodgrains Enquiry Committee) தலைவராகிய ஸ்ரீ அசோக்மேத்தா இவற்றிற்கு எதிரான கருத்தைக் கொண்டிருந்தார். அக் குழுவின் அறிக்கை கூறுவதாவது, 'சிலர் உணவுத் தானியங்களுக்குப் பதில் அதிக அந்நியச் செலாவணியை அளிக்கவல்ல வாணிபப் பயிர்களைச் சாகுபடி செய்ய வேண்டுமென்று குறிப்பிடுகின்றனர். ஆனால், தற்பொழுது இந்தியப் பொருளாதாரம் உள்ள நிலையில் உணவுத்

தானியங்களின் உற்பத்தியைக் குறைய விடக்கூடாது. மேலும், ஒரு நாடு உணவுக்காகப் பிற நாடுகளை நம்பி இருத்தல் நல்லதன்று. உலக நாடுகளுக்கு இடையேயான வாணிபம் நிலையானதன்று. அஃது எல்லாக் காலத்திலும் நீடித்து இருக்கும் என்று கூற இயலாது. உலக வாணிபத்தில் அதிக ஏற்றத் தாழ்வுகள் இருப்பதினின்றும் இதை அறியலாம். எனவே, உணவுத் தானியங்களோடு வாணிபப் பயிர்களின் உற்பத்தியைக் கூட்டுவதற்கும் முக்கியத்துவம் அளிக்கவேண்டும்.'

அதிக விளைச்சலைத் தரக்கூடிய சில பயிர்கள் வளர்வதற்கு நீண்ட காலம் பிடிக்கின்றது. சில வகைத் தரமான விதைகளும் இதே நிலையையே கொண்டுள்ளன. இதனால், இருபோக, முப்போகச் சாகுபடிகளைச் சாகுபடியாளர்கள் கைக்கொள்ள முடிவதில்லை. தரக்குறைவான தானியங்களைக் குறைந்த விலையில் மட்டுமே விற்க முடிகின்றது.

வேளாண்மை உற்பத்தியைப் பெருக்குவதற்கு டாக்டர் கே. என் ராஜ் கூறும் ஆலோசனையாவது, 'நிலத்திலிருந்து அதிக உற்பத்தியைப்பெற உழைப்பு, தண்ணீர், உரம் முதலிய உள்ளீடுகள் அதிகமாகப் பயன்படுத்துவதுமட்டும் போதாது. அவ்வுள்ளீடுகளின் உண்மையான நன்மைகளைப் பெறுவதற்கான ஊக்கத்தை வேளாண்மை உற்பத்தியாளர்கள் அடைவது இன்றியமையாதது.'[1] விலைகளின் மட்டங்கள் வேளாண்மைத் துறைக்கு அதிக இலாபமளிக்கக் கூடியனவாக இருக்கவேண்டும். விலை ஊக்கங்களின்மூலம் உற்பத்தியைப் பெருக்கலாம்.

அமைப்பு முறையில் உள்ள குறைபாடுகளால் இந்திய வேளாண்மைப் பண்ணைகளில் ஓர் ஏக்கருக்கான உற்பத்தி குறைவாக உள்ளது. அதிக அளவில் கிடைக்கக்கூடிய உழைப்பும், பிற வளங்களும் மூலதனத் திரட்சியைப் பெறுவதற்குச் சரியாகப் பயன்படுத்தப்படவில்லை. சொத்துப்பேறு உரிமைச் சட்டங்களும் நிலத்தின் மீதான உரிமைகளும் வேளாண்மை வளர்ச்சிக்குச் சாதகமாக இல்லை. நம் நாட்டில் ஜமீன்தாரி முறை ஒழிக்கப்பட்டுவிட்டாலும் ஜமீன்தார்கள் இன்றும் உள்ளனர். நிலப்பிரபுக்களாகிய இவர்கள் உயர் வீத வட்டிக்கு விவசாயிகளுக்குக் கடனளிக்கின்றனர். இக் கடன் நிலையாலும் சாகுபடியாளரின் முதலீடு செய்யும் திறன் குறைகிறது. அதன் விளைவு குறைவான உற்பத்தியாகும்.

1 K.N. Raj, 'Indian Economic Growth, Performance and Prospects' 1965, p.11.

பல திட்டங்களை நிறைவேற்றிய பின்னரும் இந்திய விவசாயிகளில் பலர் புதிய உற்பத்தி நுணுக்கங்களை அறிந்திருக்கவில்லை. கிராம மக்களில் பெரும்பாலானவர்கள் தங்களுடைய கிராமங்களில் நடப்பதைப் பற்றிமட்டுமே அறிந்துள்ளார்கள். அவர்கள் கிராம வாழ்வோடு முற்றிலும் ஒன்றி விடுவதைக் காண முடிகிறது. நிலவுடைமைகள் உள்பிரிவுபடுத்தப்பட்டுப் பல இடங்களிலும் சிதறுண்டு கிடக்கின்றன. அவற்றில், உற்பத்தியைச் செய்வது இலாபகரமாக அமைவதில்லை. சாகுபடித் திறன் குறைவதற்கு வசதிகள் இன்மையே முக்கியக் காரணமாகிறது.

மக்களிடையே விழிப்புணர்ச்சி, முன்னேற வேண்டுமென்ற ஊக்கம், விஞ்ஞானச் சாகுபடி முறையைக் கைக்கொள்வதற்கான ஆர்வம் ஆகியன அமைந்திருந்தால்தான் 'சொந்தச் சாகுபடி முறையின்' (உரிமைக் குடியானவமுறை) மூலம் எல்லா நன்மைகளையும்பெற இயலும். 'பல வறியவர்களிடையே சில செல்வந்தர்கள் இருக்கக்கூடாது. பலருடைய வறிய நிலையின் காரணமாகவே நிலத்தையும் பிற வசதிகளையும் சிறப்பாகப் பயன்படுத்த முடியவில்லை. உற்பத்திக் காரணியாகிய உழைப்பின் தரம் குறைவாக உள்ளமைக்கு வறுமை நிலை அடிப்படைக் காரணமாகிறது. அவ் வறுமை நிலை பலரிடையே மேலும் தொடர்ந்து நீடிக்க அனுமதிக்கக் கூடாது.'[1]

இயற்கைக் காரணிகள் வேளாண்மையை உறுதியற்ற தொழிலாக்கி விடுகின்றன. கிராம மக்களில் பலர் தங்களுடைய வருமானத்திற்கு வேளாண்மையை மட்டுமே முழுமையாக நம்பியுள்ளனர்; பருவமழையை நம்பிச் சாகுபடி செய்கின்றனர்; வானம் பொய்க்கும் போது நம்பிக்கை இழக்கின்றனர். இச் சூழ்நிலைகளால் அவர்களுக்குக் கடனில் பிறந்து, கடனில் வாழ்ந்து, கடனில் இறப்பதைத் தவிர வேறு வழியில்லாமற் போய்விடுகின்றது.

'இந்தியாவின் சில சிறப்பான பகுதிகளில் உள்ள உயர்ரகப் பண்ணைகள், சீனாவின் சில சிறப்பான பகுதிகளிலுள்ள உயர்ரகப் பண்ணைகளுக்குத் தாழ்வாக இருக்கவில்லை.'[2] கிருஷ்ணப்பா குழுவின் அறிக்கை மேலும் கூறுவதாவது, 'இந்தியா, சீனா ஆகிய நாடுகளின் ஏழை விவசாயிகளுக்கிடையே அதிக வேறுபாடுகள் காணப்படுகின்றன. சராசரி உற்பத்தி இந்திய வேளாண்மைத் துறையில் குறைவாக இருப்பதே இதற்குக் காரணமாகிறது.

1 T.N. Carver, 'Rural Economics,' 1927.

2 Dr. J.A. Voelcker, 'Report on Improvement of Indian Agriculture,' p. 10.

எனவே, நம்மை எதிர்நோக்கியுள்ள சிக்கலுக்கான தீர்வு, பெரிய விவசாயிகளின் நிலையை உயர்த்துவதில் அடங்கியில்லாமல் சராசரி விவசாயிகளின் கரங்களை வலுப்படுத்துவதிலேயே அடங்கியுள்ளது.[21] அரசு உதவுவதற்கு முன்வரும்போது விவசாயிகள் அதை நன்கு பயன்படுத்திக் கொள்ளவேண்டும். திட்டங்களின் வெற்றி மக்களின் ஒத்துழைப்பிலேயே இருக்கிறது.

**தீர்வுகள்**

குறைந்த வேளாண்மை உற்பத்திக்கான காரணங்களைக் கொண்டே அவற்றைத் தவிர்ப்பதற்கான வழி முறைகளையும் அறியலாம். இந்திய வேளாண்மை வளர்ச்சிக்குத் தொழில் நுணுக்க நிர்வாக, அமைப்பு முறை மாற்றங்கள் தேவைப்படுகின்றன. நாம் நமக்குச் சாத்தியமான எல்லா முறைகளையும் பின்பற்றி வேளாண்மை உற்பத்தித் திறனை அதிகரிக்கவேண்டும். பருவ மழையை நம்பிச் சாகுபடி செய்யும் நிலையை மாற்றுதல் அவசியம். பெரிய, சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களை விரிவாக்கிப் பாசன வசதிகளைப் பெருக்கவேண்டும். வெள்ளத் தடுப்பு நடவடிக்கைகளை மேற்கொள்வதன்மூலம் வேளாண்மை உற்பத்தியின் அளவை உயர்ந்த அளவில் காக்கலாம். விவசாயிகளுக்குப் பூச்சிக்கொல்லி மருந்துகளைக் குறைந்த விலையிலோ அல்லது இனமாகவோ அரசு அளிக்க முன்வரவேண்டும்.

வேளாண்மை உற்பத்தி முறைகளில் முன்னேற்றம் தேவை. உரங்களும், எருக்களும் போதுமான அளவில் நாடு முழுவதும் கிடைக்கவேண்டும். நிலம் தரிசாக விடப்படும் நிலையைக் குறைப்பது அவசியம். விஞ்ஞான ரீதியில் பயிர்ச் சுழற்சிமுறை பின்பற்றப்படவேண்டும். பயிர்ச் சாகுபடித் திட்டங்கள் கவனமாக நிறைவேற்றப்படுதல் இன்றியமையாதது. நல்ல தரமான விதைகளைப் போதுமான அளவில் கிராமங்களிலேயே கிடைக்குமாறு செய்யவேண்டும். நில அரிப்பைத் தடுப்பதன்மூலம் உற்பத்தி பாதிக்கப்படாமல் பார்த்துக்கொள்ளலாம். சதுப்பு நிலங்களைச் சாகுபடி நிலங்களாக மாற்றலாம்.

பெருமளவில் வேளாண்மைக் கருவிகளையும், பிற உற்பத்திச் சாதனங்களையும் தயாரித்துக் குறைவான விலையில் சாகுபடியாளர்களுக்கு அளிக்கவேண்டும். ஆராய்ச்சிப் பணிகளை மேலும் தீவிரமாக்கி அவற்றின் நன்மைகள் விவசாயிகளைச் சென்றடையுமாறு செய்வது அவசியம். வேளாண்மை விரிவாக்கப் பணியாளர்களும்

[21] Report of The Krishnappa Delegation to China, 1958, p. 93

விவசாயிகளும் ஆராய்ச்சி நிலையங்களோடு தொடர்பைக் கொண்டிருக்கவேண்டும்.

வேளாண்மை உற்பத்தியைப் பாதிக்கக்கூடிய பொருளாதாரக் காரணிகளின்மீது தனிக் கவனத்தைச் செலுத்துவது நல்லது. அக் காரணிகளைச் சாதகமானவைகளாக மாற்றி வேளாண்மையை இலாபகரமான தொழிலாக்கவேண்டும். பண்ணை அமைப்பும், நிர்வாகமும் திருந்தவேண்டும். உபரி உழைப்பாளர்களை வேளாண்மையினின்றும் வெளியேற்றிப் பிற துறைகளில் ஈர்ப்பது நன்மை தரும். வேளாண்மையைப் பாதிக்கும் வறுமை வட்டம் அறவே நீக்கப்படுதல் வேண்டும்.

நியாயமான வட்டி வீதத்தில் விவசாயிகளுக்குக் கடனளித்து அவர்களை லேவாதேவிக்காரர்களின் கொடிய பிடியினின்றும் மீட்கலாம். பல வேளாண்மை நடவடிக்கைகளுக்கும் இடையே இணைப்பை ஏற்படுத்த வேண்டும். வேளாண்மை விளை பொருள்களின் விற்பனை வசதியைப் பெருக்குவதன் மூலம் விவசாயிகளின் வருமானத்தை உயர்த்தலாம். அதற்கு ஒழுங்குபடுத்தப்பட்ட சந்தைகள் தேவைப்படுகின்றன.

வேளாண்மைப் பொருள்களுக்குக் குறைந்த பட்ச விலையை அரசு உறுதியளிக்கவேண்டும். உற்பத்தித் திறனை அதிகரிக்க சில அடிப்படை அமைப்பு முறைச் சீர்த்திருத்தங்கள் தேவையாகின்றன. உள்பிரிவுப்படுத்தப்பட்டுச் சிதறிக் கிடக்கின்ற துண்டு நிலங்களை இணைப்பதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும். இவ் வகையில் கூட்டுறவுப் பண்ணைகளை அமைத்தல் நல்லது. அரசு நிலவுடைமையாளர்களைக் கட்டாயப்படுத்துவதன் மூலமே சிறிய நிலங்களை இணைப்பதில் வெற்றி காணலாம்.

ஏர்பிடிக்கும் உழவர்களின் நிலையை உயர்த்த கல்வி வசதிகளைப் பெருக்க வேண்டும். பொதுக் கல்வியையும், தொழில் நுட்பப் பயிற்சியையும் அவர்களுக்கு அளித்தல் அவசியமாகும். கிராம மக்களை நோய்களினின்றும் காப்பதற்குப் பொது ஆரோக்கிய, மருத்துவ வசதிகளைக் கிராமங்களுக்கும் விஸ்தரிக்கவேண்டும். தெளிந்த அறிவையும், பரந்த நோக்கையும் விவசாயிகள் பெறுமாறு செய்வது நலம் பயக்கும். துணிவையே துணையாகக் கொள்பவர்களாகவும், தீவிரமான புதிய கருத்துகளைக் கொண்டவர்களாகவும், மூட நம்பிக்கைகளைப் போக்கியவர்களாகவும், மத நம்பிக்கைகளை நீக்கியவர்காளாகவும் அவர்களை மாற்றவேண்டும்.

வேளாண்மையோடு தொடர்புடைய அரசின் நிர்வாக அமைப்புகள் சீர் திருத்தப்பட்டு இலஞ்ச ஊழல்கள் ஒழிக்கப்பட வேண்டும். எல்லா நிலைகளிலும் முழுமையான நடவடிக்கைகளை எடுத்தால் நிலம், உழைப்பு, மூலதனம், தொழிலமைப்பு ஆகியன நன்கு பயன்படுத்தப்பட்டு உற்பத்தி பல மடங்கு உயரும்.

வேளாண்மை உற்பத்தி குறைவாக உள்ளமைக்கான காரணங்களைக் கருத்திற்கொண்டு, அதற்குத் தக்க நடவடிக்கைகளை எடுக்கவேண்டும். சுமார் 60 சதவீத மக்கள் மட்டும் வேளாண்மையில் ஈடுபடத்தக்க வகையில் வேலைவாய்ப்புகளைப் பிறதுறைகளில் பெருக்குதல் அவசியம். கூட்டுறவு முறையில் கடன், விற்பனை வசதிகளை அதிகரிக்கலாம்.

அரசு நிலச்சீர்திருத்தங்களால் வேளாண்மைச் சிக்கல்களைத் தீர்க்க முனைந்துள்ளது. நிலவுடைமை உரிமைகளில் மாற்றங்கள் செய்யப்படுகின்றன. அநேகமாக எல்லா மாநிலங்களிலும் குத்தகைச் சீர்திருத்தச் சட்டங்கள் நிறைவேற்றப்பட்டுள்ளன.

இருபோக, முப்போகச் சாகுபடிகளுக்கான வசதிகளைப் பெருக்குவதன் மூலம் உற்பத்தியை அதிகரிப்பதில் சாதனைகளைப் புரியலாம். பற்றுக்குறைக் காரணியாகிய நிலத்தில் அதிக அளவில் கிடைக்கும் உழைப்பைத் திறம்படப் பயன்படுத்தினால் உற்பத்தி கூடும்.

அரசு எப்பொழுதும் வேளாண்மையை உயர்வீத இயக்க நிலையிலேயே வைத்திருக்கவேண்டும். உற்பத்தி குறையாதவாறு பார்த்துக்கொள்வது மிக முக்கியமானதாகும்.

**வேளாண்மை நிலைகளை மாற்றியமைப்பது**

பொருளாதார முன்னேற்றத்திற்கான திட்டங்களை வரையும் போது முதல் முக்கியத்துவம் வேளாண்மைக்கே அளிக்கப்பட வேண்டும். பல துறைகளின் சரிசம வளர்ச்சியின்மூலமே பொருளாதார முன்னேற்றத்தைப் பெற இயலும். பொருளாதாரத்தின் ஒரு முக்கியத் துறை எளுரும் திறனைக் கொண்டதாக இருக்கக்கூடும். ஆனால், அத் துறையின் வளர்ச்சி அதைச் சார்ந்த பிற துறைகளின் வளர்ச்சிக்கு ஏற்பவே அமையும்.[1] வேளாண்மைக்கும், தொழில் துறைக்கும் இடையே உள்ள தொடர்பைக் குறிப்பிடுவது இங்குச் சாலப் பொருத்தமுடையதாகும். அடிப்

[1] A.G.B. Fisher, 'Economic Progress and Social Security, p. 178.'

படைத்துறையின் வளர்ச்சிக்கு ஏற்பவே பிற துறைகளின் வளர்ச்சியும் அமைகின்றது. வேளாண்மை வளர்ச்சியடையும் போது வேளாண்மை உற்பத்தியின் அளவு அதிகரிக்கின்றது. அவ் வுற்பத்தி வேளாண்மைத் துறையில் மட்டும் நுகரப்படாமல் தொழில் துறைக்கும் அளிக்கப்படுகின்றது. வேளாண்மை உற்பத்தி உபரி படிப்படியாக உயர்ந்த வீதத்தில் விரைவாகக் கூட வேண்டும்'[1]

'டாக்டர் பி. டட்டா (Dr. B. Datta) குறிப்பிடுவதாவது, வேளாண்மையின் விரைந்த வளர்ச்சியின் மூலமே நாட்டைத், தொழில் மயமாக்க முடியும்; அந்த நிலேயே உணவில் தன்னிறைவைப் பெறவும் உதவுகின்றது. மூலதனத் திரட்சிக்குத் தேவையான உபரியை ஏற்படுத்துகின்றது; பிற பொருள்களின் தேவைப் பெருக்கத்திற்கும் வழி வகுக்குகின்றது என்பது.'[2]

தொழில் துறையின் ஆக்க அளவைக் கூட்ட வேளாண்மை உற்பத்தியை அதிகரிக்கவேண்டும். விவசாயிகளின் வருமானம் பெருகும்போது அவர்கள் அதிக நுகர்வில் ஈடுபடுவார்கள். அதிக உணவுப் பொருள்களையும் அவர்கள் நுகரக் கூடும். எனவே, வேளாண்மை உற்பத்தியை மிக அதிக அளவுக்கு உயர்த்துவது நல்லது. விவசாயிகள் அதிக வருமானத்தைப் பெறும்போது, தொழில்களின்மூலம் உற்பத்தியாகின்ற நுகர் பொருள்களையும் வாங்குவர். இதனால், தொழில்துறை செழிக்கும். வேளாண்மை விற்பனை உபரியைப் பெருக்குவதால் இவ்வகை நன்மைகளைப் பெற முடியும்.

'கிரேட் பிரிட்டனில் தொழிற் புரட்சி ஏற்படுவதற்கு முன்னர், வேளாண்மைப் புரட்சி ஏற்பட்டது. அதன் விளைவாக உணவு உற்பத்தி அதிகரித்தது; வேளாண்மை உழைப்பாளர்களின் உற்பத்தித் திறன் கூடியது; உபரி உழைப்பாளர்கள் வேளாண்மையினின்றும் வெளியேறினர்; தொழில் முன்னேற்றத்திற்குத் தேவையான உணவு, கச்சாப்பொருள்கள், உழைப்பு ஆகிய யாவும் இதனால் பெறப்பட்டன.'[3] மேலும் நாட்டைத் தொழில்மயமாக்க அயல்நாடுகளினின்றும் உணவு இறக்குமதி செய்யப்பட்டது. தொழில் முன்னேற்றத்திற்கு வேளாண்மை வளர்ச்சி இன்றியமையாதது என்பதை இதிலிருந்து அறியலாம். வேளாண்மை விரைந்த

1 Kaldor, 'Characteristics of Economic Development,' p. 1.

2 B Datta, 'Economics of Industrialisation.'

3 N. Kaldor, Op Cit., p.9.

வளர்ச்சியைப் பெற இலாப நோக்கோடு விவசாயிகள் சந்தைக்கான உற்பத்தியை மேற்கொள்ள வேண்டும். திறமையோடு உயர்வான சாகுபடி முறைகளைப் பின்பற்றுவதன்மூலம் ஓர் ஏக்கருக்கான உற்பத்தியும், தனி ஓர் உழைப்பாளருக்கான உற்பத்தியும் அதிகரிக்கின்றன.

இந்தியாவில் வேளாண்மை உற்பத்திச் செலவுகள் உயர்வாக உள்ளன. ஆனால், அவற்றிற்கேற்ப உற்பத்தியையும், வருமானத்தையும் விவசாயிகள் பெறுவதில்லை. செலவைக் குறைத்து உற்பத்தியைக் கூட்டுவதற்கான வசதிகளை அரசு ஏற்படுத்தித் தர வேண்டும். இதன் மூலமே சாகுபடியாளர்களின் வாழ்க்கைத் தரம் உயரும்.

'உணவு, வேளாண்மை அமைப்பு' (Food and Agriculture Organisation), அதன் வெளியீடு ஒன்றில் வேளாண்மை உற்பத்தித் திறனை அதிகரிப்பதற்குப் பின்வரும் அடிப்படை வசதிகளை ஏற்படுத்த வேண்டுமென்று குறிப்பிடுகின்றது.

1. கணிசமான இலாபத்தைத் தரக்கூடிய வகையில் வேளாண்மைப் பொருள்களின் விலை மட்டங்கள் அமைந்திருத்தல்;

2. போதுமான விற்பனை வசதிகள்;

3. திருப்திகரமான நிலவுடைமை உரிமைமுறை;

4. முன்னேற்றமான சாகுபடி முறைகளை விவசாயிகள் கைக்கொள்வதற்குக் குறைந்த வட்டியில் கடன் அளித்தல்;

5. நியாயமான விலைகளில் உற்பத்திக்குத் தேவையான உரங்கள், நல்ல விதைகள், பூச்சிக்கொல்லி மருந்துகள் ஆகியவற்றைத் தருதல்;

6. முன்னேற்றப் பண்ணை முறைகளைப்பற்றிய அறிவைப் பரப்புவதற்குக் கல்வி, ஆராய்ச்சி, விரிவாக்கப்பணிகள் முதலியவற்றை விரிவுபடுத்துதல்;

7. பெரிய நீர்ப்பாசனத்திட்டங்கள், கரம்பு (வறட்சி) நிலங்களை விளை நிலங்களாக மாற்றுதல் முதலியவற்றைத் தனியார் செய்ய முடியாதாகையால் அவற்றை அரசு மேற்கொள்ளுதல்;

8. நிலத்தின் பயனை விரிவாக்குவது; நிலத்தைச் செறிவு முறையில் பயன்படுத்துவது; முன்னமேயே சாகுபடியில் உள்ள

நிலத்தில், சிறப்பான விஞ்ஞானச் சாகுபடி முறைகளைப் பின்பற்றுவது.

வேளாண்மைப் பொருள்களின் உற்பத்தியைப் பெருக்குவதற்கான வாய்ப்புகளைப்பற்றி டாக்டர் பர்ன்ஸ் ஆய்வு ஒன்றைச் செய்தார். அதன்படி, 'அங்கக உரங்களைப்' (Organic Manures) பயன்படுத்தினால் ஓர் ஏக்கருக்கான உற்பத்தியை 30 சதவீதமும், நல்ல விதைகளைப் பயன்படுத்தினால் 5 முதல் 10 சதவீதமும், பயிர் நோய்த் தடுப்பு, பூச்சிக் கொல்லி மருந்துகளைப் பயன்படுத்துவது ஆகியவற்றின் மூலம் 20 சதவீதமும் உயர்த்தலாம் என்பது தெரிய வருகிறது. சில முக்கியப் பயிர்களின் உற்பத்தியைப் பின்வரும் சதவீத அளவுகளுக்கு உயர்த்தலாம் என்று டாக்டர் பர்ன்ஸ் கணக்கிட்டுக் கூறியுள்ளார்.[1]

| | | | |
|---|---|---|---|
| கோதுமை | .. 100% | சோளம் | ... 35% |
| அரிசி | ... 50% | பயறு | ... 75% |
| கம்பு | ... 25% | கரும்பு | ... 100—250% |

நாட்டின் பல இடங்களிலும் பரிசோதனை முறைப் பண்ணைகள் அமைக்கப்பட்டுள்ளன. அங்கெல்லாம் நிலம் சிறப்பாகப் பயன்படுத்தப்பட்டு ஓர் ஏக்கர் நிலத்திற்கான உற்பத்தி பல மடங்கு உயர்ந்திருக்கிறது. பயிர்ச் சுழற்சி, நிலத்தைத் தரிசாக விடுவதில் சில முன்னேற்றங்கள், வரப்புகளில் சாகுபடி செய்தல், களை எடுத்தல், நீர்ப்பாசன வசதியைப் பெருக்குதல், இரு போகச் சாகுபடியைக் கைக்கொள்ளுதல் முதலியவை உற்பத்தி உயர்வுக்கு உதவியுள்ளன.

வேளாண்மையும் ஒரு தொழிலே ஆகும். அதைச் சிறப்பாக நடத்த மூலதனமும், தொழில் அமைப்புத் திறனும் தேவை. இவை கிடைக்கக்கூடிய இடங்களில் நிலத்தின் உற்பத்தித் திறன் அதிகமாக உள்ளது. பின்வரும் அட்டவணையில் பல மாநிலங்களிலும் வெவ்வேறு ஆண்டுகளில் ஓர் ஏக்கருக்கான சராசரி உற்பத்தியும், சராசரி உற்பத்தியில் அதிக உற்பத்தியின் வீதமும் அரிசி, கோதுமை ஆகிய இரண்டுக்கும் தரப்பட்டுள்ளன.[2]

[1] W. Burns 'Technological Possibilities of Agricultural Development in India,' 1944 pp. 52-68.

[2] V.T. Krishnamachari, 'Planning in India,' 1951, pp. 191-198.

(ஓர் ஏக்கருக்கு–பவுண்டுகளில்

| மாநிலம் | ஆண்டு | ஓர் ஏக்கருக் கான அதிக உற்பத்தி | ஓர் ஏக்கருக் கான சராசரி உற்பத்தி | சராசரி உற்பத்தியில் அதிக உற்பத்தியின் வீதம் |
|---|---|---|---|---|
| | | அரிசி | | |
| ஆந்திரம் | 1956–57 | 6075 | 1006 | 6.0 |
| அஸ்ஸாம் | 1953–54 | 5533 | 870 | 6.4 |
| பீஹார் | 1955-56 | 5739 | 613 | 9.4 |
| பம்பாய் | 1956-57 | 8399 | 812 | 10 3 |
| கேரளம் | 1955-56 | 7021 | 1025 | 6.8 |
| மத்தியப்பிரதேசம் | 1956-57 | 6010 | 758 | 7.9 |
| தமிழ்நாடு | 1956-57 | 6167 | 1255 | 4.9 |
| மைசூர் | 1655-56 | 8228 | 1187 | 6.9 |
| ஒரிஸ்ஸா | 1954-55 | 5924 | 513 | 11.5 |
| | | கோதுமை | | |
| ஆந்திரம் | 1951–52 | 2412 | 284 | 8 5 |
| பீஹார் | 1955-56 | 5356 | 554 | 9 8 |
| பம்பாய் | 1956-57 | 4985 | 377 | 13 2 |
| மத்தியப்பிரதேசம் | 1954-55 | 4408 | 556 | 7 9 |
| ஒரிஸ்ஸா | 1954-55 | 4944 | 517 | 9 6 |
| பஞ்சாப் | 1956-57 | 3733 | 921 | 4.1 |
| ராஜஸ்தான் | 1952-53 | 6374 | 962 | 6.6 |
| உத்தரப்பிரதேசம் | 1956–57 | 4116 | 699 | 5.9 |
| மேற்கு வங்காளம் | 1955-56 | 4730 | 609 | 7.8 |
| டெல்லி | 1952–53 | 5134 | 1022 | 5.0 |
| ஹிமாசலப்பிரதேசம் | 1952-53 | 4429 | 297 | 14.9 |
| மணிபுரி | 1955-56 | 3446 | 1181 | 3.2 |
| திரிபுரா | 1954–55 | 3342 | 815 | 4.1 |

'போட்டி அடிப்படையில் உற்பத்தி செய்யப்படும்போது சில பயிர்களின் ஓர் ஏக்கருக்கான உற்பத்தி சராசரி உற்பத்தியைவிட 6 முதல் 7 மடங்கு அதிகமாக இருக்கின்றது. அதிக விளைச்சலைப் பெறுபவர்களுக்குப் பரிசுகள் வழங்கப்படும்போது உற்பத்தியைப் பெருக்குவதற்கான ஊக்கம் ஏற்படுகின்றது. இந்தியாவில் சராசரி உற்பத்தியை அதிகரிப்பதற்கான வாய்ப்புகள் ஏராளமாக இருக்கின்றன. சரியான அமைப்பு முறை மாற்றங்களை வேளாண்மையில்

செய்வதன்மூலம் குறுகிய காலத்திலேயே உற்பத்தியை 100 முதல் 200 சதவீத அளவுக்கு உயர்த்தலாம்.[1]

பல மாநிலங்களுக்கிடையே உற்பத்தி அளவுகளில் அதிக வேறுபாடுகள் உள்ளன. இந்த நிலை அரிசி, கோதுமை ஆகிய இரண்டிலும் திகழ்கின்றது. பண்ணை உற்பத்தித் திறனைப் பெருக்கி நில வளத்தை நன்கு பயன்படுத்தும்போது ஓர் ஏக்கருக்கான உற்பத்தி உயரும். எல்லா ஆக்கக் காரணிகளையும் சிறப்பாகவும், முழுமையாகவும் பயன்படுத்துவது இன்றியமையாதது.

வேளாண்மை உற்பத்திச் சிக்கல் நிலம், தண்ணீர், பயிர், உழைப்பு ஆகியவற்றிடையே இணைப்பை ஏற்படுத்தும் சிக்கலாக இருக்கிறது.[2] மண்ணின் உற்பத்தித் திறனை இயன்ற அளவுக்கு உயர்த்தி, அந்த நிலையைத் தொடர்ந்து நீடிக்குமாறு செய்வதே முக்கியமானதாகும். கிராமச் சமுதாயம் புதுமையான தொழில் நுட்பங்களை ஏற்கவேண்டும். இதற்குக் கிராம மக்களின் பண்பாடு, பழக்கவழக்கங்கள், கலாச்சாரம் ஆகியவற்றில் மாற்றம் தேவைப் படுகிறது.

இயந்திரங்கள், இராசாயன உரங்கள், நீர்ப்பாசன வசதி முதலியவற்றைச் சிறப்பாகப் பயன்படுத்தினால் உற்பத்தியை எளிதில் இரு மடங்காக்கலாம். ஆனால், அதற்குத் தட்ப வெப்ப நிலையும் சாதகமாக இருக்கவேண்டும். சிறப்பான நிர்வாகமும் உற்பத்தி உயர்வுக்கு உறுதுணையாக அமையும். இயந்திரச் சக்தி பயன்படுத்தப்படுகின்ற நிலையையே இயந்திரமயமாக்குதல் என்று குறிப்பிடுகின்றோம். விதை விதைப்பதிலிருந்து அறுவடை செய்யும்வரை வெவ்வேறு இயந்திரங்களும் சாகுபடியில் ஈடு படுத்தப்படுகின்றன. நிலத்தைச் சமன் செய்யும் பெரிய இயந்திரங் கள், இயந்திரக் கலப்பைகள், விதை விதைக்கும் கருவிகள், அறுவடைக் கருவிகள், உரங்களைத் தூவும் கருவிகள் முதலிய பலவும் பயன்படுத்தப்படுகின்றன. உற்பத்தி நடவடிக்கைகளில் வெற்றி பெற இரசாயன உரங்களை இடுவது அவசியம்.

வேளாண்மைத் தொழிலைச் சீரமைக்க உற்பத்தியின் பல நிலை களிலும் விஞ்ஞானம் புகுத்தப்படவேண்டும். விதைகளைத் தெரிந் தெடுப்பதிலும், பயிர் நோய்களைத் தடுப்பதிலும், பூச்சிக் கொல்லி

[1] Gyan Chand, Socialist Transformation of Indian Economy, 1965, p. 154.

[2] Government of India, Report on India's Food Crisis and How to Meet it, 1959, p. 140.

மருந்துகளைப் பயன்படுத்துவதிலும், நில அரிப்பைத் தவிர்ப்பதிலும் அறிவியல் ரீதியான வழிமுறைகளைப் பின்பற்றுவது நன்மை தரும். உரங்களின் பயனைப் பெற நீர்ப்பாசன வசதிகள் தேவை. நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்குவதன் மூலம் ஒருபோகச் சாகுபடிக்குப் பதிலாக இருபோக, முப்போகச் சாகுபடிகளைச் செய்யலாம்.

ஒரே வகையான சாகுபடி முறையை நாடு முழுவதும் பின்பற்றுவது நல்லது. எனினும், அஃது அதிக நன்மை பயக்காது; பொருளாதார ரீதியில் இலாபகரமாகவும் அமையாது. அது குறிப்பிட்ட பகுதியில் ஒரு வகை உற்பத்தியைப் பெருக்க உதவும். ஆனால், அதே முறை வேறொரு பகுதியில் இலாபகரமாக அமையாமல் இருக்கக்கூடும்.

இது போன்றே நல்ல விதைகள், உரங்கள் முதலியவற்றின் மூலம் மட்டும் உற்பத்தியைப் பெருக்க இயலாது. பல சாகுபடி வசதிகளையும் இணைப்பாகப் பெருக்குதல் தேவையாகின்றது. அதிக விளைச்சலைத் தரக்கூடிய முறைகளை மிகச் சிறிய அளவு துண்டு நிலங்களில் பின்பற்றுவதன் மூலம் நன்மைகளைப் பெற முடியாது. எல்லா வசதிகளையும் இணைப்பாகப் பெருக்கும்போது உற்பத்தியை மூன்று முதல் ஆறு மடங்கு அதிகரிக்க இயலும்.

போதா நிலையில் வேளாண்மை உற்பத்தி அமைந்திருப்பதே அடிப்படைப் பிரச்சினையாகும். எனவே, பல வகைப் பண்ணைச் சாகுபடி முறைகளையும் பின்பற்றி உற்பத்தியைப் பெருக்குவது அவசரத் தன்மை கொண்டதாக இருக்கின்றது. நம் முடைய நோக்கம் எல்லாப் பயிர்களின் உற்பத்தியையும் அதிகரிப்பதாக இருக்கவேண்டும். அரசு அளிக்கக்கூடிய ஊக்கங்கள் பண்ணைகள் விவசாயிகளின் நிலைகள் பயிர்கள் ஆகியவற்றிற்கேற்ப அமைதல் வேண்டும். ஓர் ஏக்கருக்கான உற்பத்தியைப் பெருக்குவது, சாகுபடி நில அளவை அளவை அதிகரிப்பது, இரு போகச் சாகுபாடி முறையைப் பரப்புவது ஆகியவற்றிற்கான நடவடிக்கைகள் திட்டங்களின் மூலம் எடுக்கப்பட்டு வருகின்றன. உற்பத்தியை அதிகரிப்பதற்கான ஊக்கங்கள் பின்வரும் வழிகளில் அளிக்கப்படலாம்.

அதிக அளவு உற்பத்தியைப் பெருக்க நீர்ப்பாசன வசதிகளோடு உரங்கள்; கருவிகள், விதைகள் ஆகியன சலுகை விலைகளில் அளிக்கப்படவேண்டும்.

உயர்வான தர உற்பத்திக்காக தர வேறுபாடுகளுக்கேற்ப விலைகள் அமையுமாறு பார்த்துக் கொள்ளவேண்டும். உயர் ரகப்

பயிர்களை உற்பத்தி செய்ய நல்ல விதைகளைப் பயன்படுத்த வேண்டும்.

சிறிய விவசாயிகள் உணவுத் தானியங்களை உற்பத்தி செய்யும் போது உதவித் தொகைகள் வழங்கப்படவேண்டும்.

சந்தைக்காக வாணிபப் பயிர்களை உற்பத்தி செய்யும் பெரிய விவசாயிகளுக்கு ஊக்கமளிக்கும் வகையில் விலைகள் அமையுமாறு பார்த்துக்கொள்ளவேண்டும்.

சந்தையில் போட்டியிடும் வாணிபப் பயிர்களின் உற்பத்திச் செலவைக் குறைத்து இலாபத்தை அதிகரிக்கவேண்டும். அதன் மூலம் விவசாயிகளுக்கு அதிக வருமானம் கிடைக்கும்; நலமான வாழ்வையும் அவர்கள் பெறுவர்.

கிராம அளவில் உற்பத்தியைப் பெருக்குவதற்கான குறியிலக்குகள் நிர்ணயிக்கப்படவேண்டும். கிராம மக்கள் ஆக்கத்தை அதிகரிப்பதில் கவனம் செலுத்தவேண்டும். நிலவுகின்ற சூழ்நிலைகளுக்கேற்ப சாத்தியமான குறியிலக்குகள் நிர்ணயிக்கப்பெற்று அதற்கேற்ப நடவடிக்கைகள் எடுக்கப்படவேண்டும்.

விவசாயிகளைக் கட்டாய முறைகளால் உற்பத்தியைப் பெருக்குமாறு செய்ய இயலாது. உற்பத்தி உயர்வின் நன்மைகளை அவர்கள் உணரச் செய்யவேண்டும். சாகுபடியாளர்களுக்கு முன்னேற்றத்தில் நம்பிக்கை ஏற்படவேண்டும். இவ் வடிப்படையிலேயே எந்தத் திட்டமும் வெற்றி பெறும். தனிப்பட்ட விவசாயிகளின் குறைபாடுகளை நிவர்த்தி செய்வது அவசியம்.

வேளாண்மையை விவசாயிகள் விரும்பித் தங்கள் தொழிலாக ஏற்றுக்கொண்டிருக்கின்றார்கள் என்று கூற முடியாது. தங்களுடைய வாழ்வைப் பிற வழிகளில் நடத்த இயலாது என்பதே இதற்குக் காரணமாகும். இந்திய வேளாண்மை, பற்றுக்குறைப் பொருளாதாரமாக இருக்கின்றது. பெரும்பாலான விவசாயிகள் இலாப நோக்கில் தங்கள் உழைப்பைத் தரவில்லை. வேளாண்மையே அவர்களுடைய வாழ்வாக உள்ளது. தங்களுடைய பிழைப்புக்காக அவர்கள் அத் தொழிலில் ஈடுபட்டிருக்கின்றார்கள்.

நிலத்தின் மீதான அதிக மக்கள் தொகை உற்பத்தித் திறனைக் குறைக்கின்றது. விவசாயக் குடும்பம் அதிக அங்கத்தினர்களைக் கொண்டது. விவசாயிகள் இவ்வகைச் சுமையையும் ஏற்கின்றார்கள். அவர்கள் தங்களுக்குத் தேவையான உணவைக்

கூடப் பெற முடியாத நிலையில் இருக்கின்றனர்.[1] பொருளாதார வளர்ச்சியின் முதல் சில நிலைகளில் இவ்வகை சிக்கல்கள் தோன்றுவது இயல்பேயாகும்.

ஒரு சாதாரண சாகுபடியாளர் மிகச் சிறிய நிலவுடைமையைக் கொண்டிருக்கின்றார்; குறைந்த வசதிகளையே பெற்றிருகின்றார். தன்னுடைய குறைந்த தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கான குறைந்த வசதிகளையே அவர் கொண்டிருக்கிறார்,[2] விஞ்ஞானத்தின் உதவி அவருக்குத் தேவைப்படுகின்றது. கல்விப் பயிற்சி, அமைப்பு முறை மாற்றங்கள் முதலியவை அவருடைய நிலையை உயர்த்த உதவுகின்றன.

உத்தமமாக நில வளத்தைப் பயன்படுத்தப் பொருளாதார, சமுதாய, தொழில் நுட்ப, நிர்வாகக் காரணிகள் தடையாக உள்ளன. இயற்கைக் காரணிகள் சாதகமாக இல்லாவிட்டாலும் உற்பத்தியை அதிகரிக்க இயலாது. தொழில் துறை நிறுவனங்களைப் போன்றே அமைப்பு முறை வேளாண்மையில் இல்லை. 'சாகுபடியாளர்களின் நன்மைக்காக வேளாண்மையை வாணிப நோக்கம் கொண்ட தொழிலாக மாற்றவேண்டும். விவசாயிகள் வாழ்வுக்காக மட்டும் வேளாண்மையில் ஈடுபட்டிருக்கும் நிலை மாற வேண்டும். இதுவே, வேளாண்மையின் அடிப்படைச் சிக்கலாகும்.'[3]

இந்தியாவில் சிறப்பான அளவுக்குத் தொழில் நுணுக்க வளர்ச்சி ஏற்பட்டுள்ளது. எனினும், அது சரியாக வேளாண்மையில் புகுத்தப்படவில்லை. நிலச் சீர்திருத்தங்களை விரைவில் செய்வதன் மூலமே தொழில் நுணுக்க வளர்ச்சியின் நன்மைகளைப் பெற முடியும். தீவிர நிலச் சீர்திருத்தங்களால் மட்டுமே அமைப்பு முறை மாற்றங்களைச் செய்யலாம். அதன் மூலமே சிறப்பான சாகுபடியைச் செய்வதற்கான அடிப்படை கிடைக்கப்பெறும்.

கடன் நிலை, விலைகளின் அதிக ஏற்றத்தாழ்வுகள், வாணிபத் தரகர்களின் சுரண்டல் ஆகியவை சாகுபடியாளரைப் பெரிதும் பாதிக்கின்றன. முன்னேற்றமான உற்பத்தி முறைகள் பின்பற்றப்படாமைக்கு இஃது ஒரு காரணமாகிறது. உற்பத்தி குறையும் போது சாகுபடியாளர்கள் பாதிக்கப்படுகின்றனர்; உற்பத்தி

1 Report of the Royal Commission on Agriculture, p. 443.

2 Ibid, p. 14.

3 Famine Commisson Report, 1945, pp. 374-375.

அதிகரிக்கும்போது அவர்கள் அதிக நன்மையைப் பெறுவதில்லை. உற்பத்தி உயர்வால் மற்றவர்களே பயனடைகின்றார்கள்.

சாகுபடி இடர்களைக் குறைக்க அரசு ஆவன செய்யவேண்டும். வேளாண்மை உற்பத்தியின் உறுதியற்ற நிலையைத் தவிர்க்க வேண்டியது அவசியம். வேளாண்மைப் பொருள்களின் வாணிபத்தில் ஈடுபட்டுள்ள இடை நிலையாளர்களை நீக்கவேண்டும். கூட்டுறவு நிறுவனங்களின்மூலம் பண்ணை முறையைச் சரியான பொருளாதார அடிப்படையில் வைக்கவேண்டும். வேளாண்மை வளர்ச்சிப் பாதையில் வழி மறைக்கும் தடைகளுக்குத் தீர்வு காண்பதன்மூலம் பொருளாதார முன்னேற்றத்தை விரைவு படுத்தலாம்.

வேளாண்மை தொழில்துறை நிறுவனங்களினின்று வேறுபட்டதாக இருக்கின்றது. விவசாயிகள் பயிரிடுவதோடு கால்நடைப் பராமரிப்பையும் செய்கின்றார்கள். வேளாண்மையில் குறைந்து செல் விளைவு விதி விரைந்து செயல்படுகிறது. பெரும்பாலான வேளாண்மைப் பொருள்கள் எளிதில் அழியக்கூடிய தன்மை கொண்டவை. திட்டங்களின் மூலம் அதிக முதலீடு செய்யப்பட்ட பின்னரும் வேளாண்மையில் தேக்க நிலையே நீடிக்கின்றது.

'இந்திய வேளாண்மை, பருவ மழையின் ஒரு சூதாட்டமாக உள்ளது; அதனால், விவசாயிகள் பஞ்சத்தாலும், பட்டினியாலும் பாதிக்கப்படுகின்றார்கள்' என்று 1909-ல் இந்திய அரசின் நிதி உறுப்பினராக இருந்த சர் கை ஃபிளீட்வுட் வில்சன் (Sir Guy FleetWood Wilson) குறிப்பிட்டார். அக் கூற்று இன்றைய நிலைக்கும் பொருத்தமுடையதாக இருப்பது கருதத்தக்கது. டாக்டர் கிளவ்ஸ்டன் (Dr. Clouston) நம் நாட்டு வேளாண்மை 'ஊக்கமழிந்த தொழில்' (Depressed Industry) என்று கூறுகின்றார். இந்திய ரிசர்வ் வங்கியின் அறிக்கைப்படி நம் வேளாண்மை 'பற்றுக்குறைப் பொருளாதாரமாக' (Deficit Economy) இருக்கிறது.

**அதிக உணவு உற்பத்திப் பெருக்கமுறை (Grow-more-food Campaign)**

உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கான திட்டம் நீண்ட காலமாக நிறைவேற்றப்படுகின்றது எனினும், சுதந்திரமடைந்தவுடன் உணவு உற்பத்தியும், தொழில் கச்சாப் பொருள்களின் உற்பத்தியும் குறைந்தன. எதிர் பார்த்த அளவுக்கு உணவுத்

தானியங்களின் உற்பத்தி பெருகாமைக்குப் பின் வருபவை காரணங்களாக அமைந்தன.

1. முதலில் புதிய நிலங்களில் உற்பத்தியைப் பெருக்குவதிலேயே அதிகக் கவனம் செலுத்தப்பட்டது. சாகுபடியில் இருந்த நிலங்களின் உற்பத்தியைக் கூட்டத் தீவிர நடவடிக்கைகள் எடுக்கப்படவில்லை. புதிய நிலங்களில் உற்பத்தியை அதிகரிக்க நீண்ட காலம் தேவைப்படுகின்றது. சில காலம் கழித்து உணவு உற்பத்திப் பெருக்கக் கொள்கையில் மாற்றங்கள் செய்யப்பட்டன. அதன் மூலம் குறுகிய காலத்தில் பயனளிக்கும் திட்டங்கள் கைக்கொள்ளப்பட்டன. உணவுத் தானியங்களின் உற்பத்தியை அதிகரிக்கச் சாகுபடியாளர்களுக்கு நீர்ப்பாசன வசதி, விதைகள், உரங்கள் ஆகியன அளிக்கப்பட்டன. இத் திட்டங்கள் பாசன வசதியில்லாத பல இடங்களிலும் தொடங்கப் பெற்றமையால் வெற்றி பெறவில்லை. எனவே, பின்னர்ப் பாசன வசதியுள்ள இடங்களிலேயே இவை செயல்படுத்தப்பட்டன. தற்பொழுது உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கான நடவடிக்கைகள் வெற்றிபெற்று வருகின்றன.

2. உணவு உற்பத்தியைப் பெருக்கும் திட்டத்தில் அமைந்துள்ள அலுவலர்கள் திறமை குறைந்தவர்களாகவும், நேர்மையற்றவர்களாகவும் இருக்கின்றனர். தங்களுடைய பணிகளை அவர்கள் செவ்வனே செய்வதில்லை. திட்டத்தின் நன்மைகள் விவசாயிகளைச் சென்று சேருவதில்லை. அரசின் அலுவலர்கள் எவ்விதப் பணிகளையும் சிறப்பாக நிறைவேற்றுமல் பொய்க் கணக்குகளை எழுதுகின்றனர். உரங்களும், விதைகளும் சிறப்பான வகையில் விநியோகிப்படுவதில்லை. இவை கள்ளச் சந்தையில் விற்கப்படுகின்றன. அலுவலர்களால் கையூட்டுகள் வாங்கப்படுகின்றன. ஆகவே, இக் குறைபாடுகளை நீக்கத் திட்டம் சரியாக வரையப்பட்டுத் திறமையாகவும், நேர்மையாகவும் நிறைவேற்றப்பட வேண்டும்.

3. எதிர் பார்த்த அளவில் உணவு உற்பத்தியைப் பெருக்கும் திட்டத்திற்குச் சாகுபடியாளர்கள் ஒத்துழைப்புக் கிடைக்கவில்லை.

### உணவுத் தானியங்கள் விசாரணைக் குழுவின் அறிக்கை (Foodgrains Enquiry Committee Report)

திரு அசோக்மேத்தா தலைமையில் அமைக்கப்பெற்ற உணவுத் தானியங்களின் விசாரணைக்குழு, நவம்பர் 1957–ல் அதன் அறிக்கையில் 1953—54–ல் 68.87 மில்லியன் டன்களாக இருந்த உணவுத் தானியங்களின் மொத்த உற்பத்தி 1945—55–ல் 67.11

மில்லியன் டன்களாகவும், 1955—56-ல் 65.29 மில்லியன் டன்களாகவும் குறைந்ததைக் குறிப்பிட்டது. 1956—57-ல் உற்பத்தி 68.69 மில்லியன் டன்களாகக் கூடியது.

உணவு பற்றுக்குறைக்கும், உணவுத் தானியங்களின் விலையுயர்வுக்கும் கீழ்க்காணும் காரணிகள் காரணங்களாக அமைந்தன.

1. சாகுபடியாளர்கள் உற்பத்தியின் பெரும் பகுதியைத் தாங்களே வைத்துக்கொண்டனர். இதனால், 'விற்பனைக்கான உபரியின்' அளவு குறைந்தது. உணவுப் பொருள்களின் விலையுயர்வுக்கு உற்பத்திக் குறைவு மட்டும் காரணமாக அமையவில்லை. ஆனால், விலையுயர்வின் தொடக்கம் குறைவடைந்த உற்பத்தியிலேயே இருந்தது. 1955—56-ல் தானியங்களின் உற்பத்தி சுமார் 3 மில்லியன் டன்கள் குறைந்தது. கோதுமை, அரிசி ஆகியவற்றின் தேவைப் பெருக்கத்தால் விலையுயர்ந்தது. அதன் பின்னர் உற்பத்தி பெருகத் தொடங்கிய பின்னரும் விலையுயர்வு அமைந்திருந்தது.

2. இரண்டாவது திட்டத்தின் முதலீடு அதிகரித்தது; வங்கிக் கடன் அளவு கூடியது. இவற்றாலும் விலையுயர்வு தோன்றியது.

3. பல மாநிலங்களிலும் உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கான ஊக்கம் பொருந்தியிருக்கவில்லை. விவசாயிகள் அதற்கான ஆர்வத்தைப் பெற்றிருக்கவில்லை. உணவுப் பற்றுக்குறை நிலை உற்பத்தியைப் பெருக்குவதற்கான ஊக்கத்தை இழக்கச் செய்துவிட்டது.

### தேவைக்கும் அளிப்புக்கும் உள்ள தொடர்பு

உணவுத் தானியங்கள் விசாரணைக் குழு, ஆண்டுதோறும் இந்திய மக்கள் தொகை $1\frac{1}{2}$ முதல் 2 சதவீதம் அதிகரிக்கிறது என்ற அடிப்படையில் உணவுத் தானியங்களின் தேவை 10 சதவீதம் உயரும் என்று குறிப்பிட்டது. இவ்வாறு, தேவை உயர்வதற்கு மக்கள் பெருக்கமும் 4.7 சதவீத வருமான உயர்வும் காரணமென்று அது கூறியது. இரண்டாவது திட்டக் காலத்தில் உணவுத் தானியங்களின் தேவை $14\frac{1}{2}$ முதல் 15 சதவீதமாக, அதாவது 1955—56-ல் 69 மில்லியன் டன்களாக இருந்த தேவை, 1960—61-ல் 79 மில்லியன் டன்களாக உயருமெனக் கருதப்பட்டது. ஆனால், உற்பத்தி 1960—61-ல் $77\frac{1}{2}$ மில்லியன் டன்கள் என்ற அளவில் மட்டுமே இருக்குமெனக் கூறப்பட்டது. ஆகவே, சில

ஆண்டுகளுக்கு 2 அல்லது 3 மில்லியன் டன்கள் உணவுத் தானியங்களை ஒவ்வோர் ஆண்டும் இறக்குமதி செய்ய வேண்டி யிருக்கும் என்று குழு கருத்துத் தெரிவித்தது.

**விலை நிலை பேராக்கக் கொள்கை**

இக்குழு உணவுத் தானியங்களின் விலையை நிலைப்படுத்து வதற்கான பரிந்துரைகளைச் செய்தது. விலை நிலைப் பேராக்கத்திற் காகப் பின்வரும் அமைப்புகளை ஏற்படுத்த வேண்டுமென அஃது அறிவுறுத்தியது.

1. அதிக அதிகாரங்களைக் கொண்ட 'விலை நிலை பேராக்க வாரியம்' (Price Stabilisation Board) அமைக்கப்படவேண்டும். அது குறிப்பிடும் வழிமுறைகளுக்கு ஏற்ப விலைக் கொள்கையைச் செயல் படுத்துவது அவசியம்.

2. விலைக் கொள்கையைச் செயல்படுத்த உணவுத் தானியங்கள் நிலை பேராக்க அமைப்பு' (Foodgrains Stabilisation Organisation) ஏற்படுத்தப்படவேண்டும். இவ் வமைப்பு உணவு, வேளாண்மை அமைச்சகமாகவோ அல்லது சட்டபூர்வமான ஒரு கழகமாகவோ இருக்கலாம். அஃது உணவுத் தானியக் கையிருப்பு நடவடிக்கைகளில் ஈடுபட வேண்டும். அதாவது, இவ்வமைப்பு உணவுத் தானியங்களின் விலை குறையும்போது அவற்றை வாங்கவும்' விலை அதிகரிக்கும்போது விற்கவும் வேண்டும்.

3. 'மத்திய உணவு ஆலோசனைக் குழு (Central Food Atvisory Council), உணவு அமைச்சகத்திற்கும், விலை நிலைபேராக்க வாரியத்திற்கும் உதவ வேண்டும்.

4. விலை நிலைகளைப் பற்றிய புள்ளிவிவரங்களைச் சேகரிக்க தனியான ஒரு பிரிவு தொடங்கப்படவேண்டும். புள்ளிவிவரங் களைக் கவனமாகவும், நம்பத்தகுந்ததாகவும் சேகரித்தல் இன்றி யமையாதது.

இந்த அமைப்புகள் யாவும் விலைகளின் நிலைகளைக் கவனமாக ஆராய்ந்து தகுந்த நடவடிக்கைகளை எடுக்கவேண்டும். பல பொருள்களின் விலை மட்டங்களுக்கிடையே அதிக ஏற்றத் தாழ்வு கள் இருக்கக்கூடாது. பொதுவாக விலை மட்டம் திடீரென அதிகரிக்கவோ அல்லது குறையவோ கூடாது.

தற்பொழுதுள்ள பொருளாதாரச் சூழ்நிலைகளில் எந்த உலக நாடும் கட்டுப்பாடற்ற வாணிபத்தை அனுமதிக்க முடியாது.

இந்திய வேளாண்மை வாணிபத்தில் நிதி நிர்வாகச் சிக்கல்கள் அமைந்துள்ளன. அரசு, பொதுச் சந்தையிலிருந்து வாங்கி விற்பனை செய்து தேவை, அளிப்பு நிலைகளைக் கட்டுப்படுத்த வேண்டும். மொத்த விற்பனை வாணிபத்தின் ஒரு பகுதியை அரசே மேற்கொள்ளலாம். பிற வணிகர்களின் மீது அரசின் மேற்பார்வையும், கட்டுப்பாடும் அமைந்திருத்தல் அவசியமாகும். வாணிபத்தில் ஈடுபட அரசு சிலருக்கு மட்டும் அனுமதி வழங்கலாம். கோதுமை, அரிசி முதலியவற்றை அரசு எப்போதுமே இருப்பு வைத்துக்கொள்ளவேண்டும். பிறவகைப்பட்ட உணவு வகைகளை மக்கள் உட்கொள்ள பிரசாரங்களைச் செய்வது நல்லது. வெவ்வேறு உணவுப் பொருள்களின் உற்பத்தியைப் பெருக்குவதும் இன்றியமையாதது.

## ஃபோர்டு நிறுவனக் குழுவின் பரிந்துரைகள் (Ford Foundation Team's Recommendations)

ஃபோர்டு நிறுவனக் குழுவின் வல்லுநர்கள் இந்தியாவில் ஜனவரி முதல் ஏப்ரல் 1959 வரை சில வாரங்கள் தங்கி இருந்தனர். அவர்கள், நம் நாட்டின் உணவுச் சிக்கலைத் தீர்க்க நல்ல ஆலோசனைகளைக் குறிப்பிட்டார்கள். அக் குழுவினரின் ஆய்வுபடி, 1951-ல் 360 மில்லியனாக இருந்த இந்திய மக்கள் தொகை 1966-ல் (மூன்றாவது திட்ட இறுதியில்) 480 மில்லியனாக உயரும். இந்தியர்கள் சராசரியாக நாளொன்றுக்கு 15 அவுன்ஸ் தானியங்களையும், 3 அவுன்ஸ் பருப்புகளையும் மட்டுமே உட்கொள்ளுகின்றனர். இவை 1.800 கலோரிகள் மட்டுமே சத்துக் கொண்டவையாகும். இக் கணக்கின்படி உணவுப் பொருள்களின் தேவை 88 மில்லியன் டன்களாக அதிகரிக்கும், விதைகள், கால்நடைத் தீவனம், கையிருப்பு ஆகியன போக மொத்தத் தேவை 110 மில்லியன் டன்களாகும். மூன்றாவது திட்ட இறுதியில் உணவுத் தானியங்களின் உற்பத்தி 82 மில்லியன் டன்களாக மட்டுமே இருக்கும். பற்றாக்குறை அளவு 28 மில்லியன் டன்களாக அமையும் என்று அக் குழு குறிப்பிட்டது. பற்றாக்குறை நிலையைத் தவிர்க்க விரைவாக உணவு உற்பத்தியைப் பெருக்கும் திட்டத்தைக் கைக்கொள்ள வேண்டுமெனவும் அது கூறியது.

### நடைமுறைக்கு உகந்த ஆலோசனைகள்

ஃபோர்டு நிறுவனக் குழு, நடைமுறைக்குப் பொருத்தமான பல அரிய ஆலோசனைகளைத் தந்தது. அதன் ஆலோசனைகளைப் பின்வருமாறு தொகுத்துக் கூறலாம்.

1. இந்தியா ஒரு பெரிய நாடாக இருப்பதால் தட்ப வெப்ப நிலைகளும், பிற நிலைகளும் வெவ்வேறு இடங்களுக்கு இடையே வேறுபடுகின்றன. ஒரே வகையான திட்டம் எல்லா இடங்களுக்கும் பொருந்தாது. ஒவ்வோர் இடத்திலும் உள்ள சூழ்நிலைகளுக்கேற்பத் திட்டம் தீட்டப்பட்டு நிறைவேற்றப்பட வேண்டும்.

2. உடனடியாக உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கான திட்டங்களுக்கு முக்கியத்துவம் அளிக்கப்படவேண்டும். உற்பத்தி அளவு மிகச் சிறப்பான நிலையை எட்டுவது அவசியம்.

3. தனிப்பட்ட இந்திய விவசாயிகளின் குறைவான சராசரி உற்பத்தியை உயர்த்துவது முக்கிய நிலையைக் கொண்டிருக்கின்றது; இது தலையாய அவசரத் தன்மையைப் பெற்றிருக்கின்றது.

4 இந்தியாவில் பல இலட்சக் கணக்கான சிறிய விவசாயிகளால் சாகுபடி செய்யப்படுகிறது. விவசாயிகளின் வாழ்க்கை நிலை உயர்ந்தால்தான் அவர்கள் முன்னேற்றமான சாகுபடி முறைகளைக் கைக்கொள்வார்கள். அதற்கு அவர்களுடைய வருமானத்தை உயர்த்துவது அவசியமாகின்றது. மேலும், அவர்களுடைய நிலவுடைமைகளின்மீதான உரிமைகள் காக்கப்பட வேண்டும். வருமானத்தில் உறுதியற்ற நிலை நிகழக்கூடாது. கடன் விற்பனை வசதிகளும் அதிகரிக்கப்படவேண்டும்.

5. எல்லா நிலைகளிலும் சிறப்பான தலைமை அமைந்திருக்க வேண்டும். திட்டமிடுபவர்கள், நிர்வாகிகள், கல்வியாளர்கள், விஞ்ஞானிகள், கிராமச் சமுதாயத் தலைவர்கள், சாகுபடியாளர்கள், ஆகியோரின் கூட்டு முயற்சியில்தான் விரைவான வேளாண்மை வளர்ச்சியின் வெற்றி அடங்கியுள்ளது.

**மத்திய நிலையில் வேளாண்மை வளர்ச்சிக்கான அமைப்பின் அவசியம்**

வேளாண்மை வளர்ச்சித் திட்டங்களைச் சிறப்பாகவும், வெற்றியோடும் நிறைவேற்ற மத்திய நிலையில் ஓரமைப்பு ஏற்படுத்தப்பட வேண்டும். அஃது அதிக அதிகாரங்களைக் கொண்டதாக அமைவது அவசியம். அவ் [redacted] அமைப்புக் கிடைக்கக்கூடிய நிதி வசதியை முக்கியத்துவத்திற்கு ஏற்ப ஒதுக்கவேண்டும். நீர்ப்பாசனம், வடிகால், நில நிர்வாகம் ஆகிய திட்டங்களுக்கிடையே இணைப்புநிலை இருக்கவேண்டும். அதனுடைய கொள்கையின் முடிவுகள் உணவு உற்பத்திப் பெருக்கத்திற்கு முக்கியத்துவம் அளிப்பதாக இருத்தல் இன்றியமையாதது.

இந்திய அரசியல் அமைப்பு வேளாண்மையை மாநில அரசுகளின் உரிமையாக்கியுள்ளது. மத்திய அரசு மாநில அரசுகளின் மீது ஆதிக்கத்தைச் செலுத்துவதற்கான அதிகாரங்களும் அமைந்திருக்கவில்லை. அரசியல் அமைப்புச் சட்டத்தைத் திருத்தினால்தான் மத்திய நிலையில் அதிக அதிகாரங்கள் கொண்ட அமைப்பை ஏற்படுத்த இயலும்.

உணவுத் தானியங்களின் உற்பத்தியைப் பெருக்குவதற்கான வசதிகள் நம்மிடம் உள்ளன. ஆனால், இந்திய மக்கள் தங்களுடைய கடமையை உணர்ந்து உண்மையான உழைப்பைத் தருவதில்லை. பணிகளை ஆற்றும்போது உழைப்பாளர்கள் தங்களையே அர்ப்பணித்துக் கொள்ளவேண்டும்.

1966-ல் உணவுத் தானியங்களின் உற்பத்தி 110 மில்லியன் டன்கள் என்ற அளவை எட்டினாலும், விரைவான மக்கள் பெருக்கத்தின் காரணமாகப் போதுமான உணவைப் பெற முடியாது. உணவு உற்பத்தித் திட்டங்களில் வெற்றியடைந்தாலும் அதிகரிக்கின்ற உற்பத்தி விரைவாகப் பெருகும் மக்களுக்குப் போதுமானதாக இருக்காது. இப்போது, இருக்கும் நிலையைவிட மோசமான நிலையையும் நாம்அடையக்கூடும். இந்தியாவில் மக்கள் தொகை விரைவாகப் பெருகி வருகின்ற நிலையே பல பிரச்சினைகளுக்கும் அடிப்படைக் காரணமாக அமைகின்றது.

**இறுக்கத் திட்டம் (Package Programme)**

இன்றைய புதிய கொள்கை வேளாண்மையில் தொழில்நுட்பத்தைப் புகுத்துவதாக இருக்கிறது. விஞ்ஞான வளர்ச்சியின் பயன் வேளாண்மையிலும் தெரிகிறது. சில தெரிந்தெடுக்கப்பட்ட இடங்களில் உற்பத்தியை விரைவாகப் பெருக்கத் தீவிர நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன. முதன் முதலாக இந்த நோக்கத்துடன் ஏழு இடங்களில் 'முன்னோடித் திட்டங்கள்' (Pilot Projects) கைக்கொள்ளப் பெற்றன. 'செறிந்த வேளாண்மை மாவட்டத் திட்டத்தின்' (Intensive Agricultural District Programme-IADP) கீழ் இவை தொடங்கப்பட்டன. இஃது, இறுக்கத் திட்டம் எனவும் அழைக்கப்பட்டது. ஃபோர்டு நிறுவனமும், இந்திய அரசும் இணைந்து கூட்டு முயற்சியில் இத் திட்டத்தைச் செயல்படுத்தின. தெரிந்தெடுக்கப்பட்ட பகுதிகளில் மிகக் குறுகிய காலத்தில் உணவுத் தானியங்களின் உற்பத்தியை 50 முதல் 60 சதவீதம் உயர்த்துவது திட்டத்தின் நோக்கமாக இருந்தது. மூன்றாவது திட்ட இறுதிக்குள் சுமார் 300 வட்டங்களில் செறிந்த வேளாண்மை மாவட்டத் திட்டம் செயல்படுத்தப்படும் என்று

எதிர்பார்க்கப்பட்டது. திட்டக்குழு இத் திட்டத்தை மேலும் விஸ்தரிக்கக் கருதியது. சாகுபடி நிலத்தில் நான்கில் [redacted] பகுதி முதல் ஐந்தில் ஒரு பகுதி வரையிலான நிலப்பரப்பை உள்ளடக்கும் 1,500 வளர்ச்சி வட்டங்களை (Development Blocks) ஏற்படுத்த வேண்டுமென அது கூறியது.

இம் முறையின் மூலம் ஒவ்வொரு திட்டத்திலும் முழு முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. தேவையான உள்ளீடுகள் வழங்கப்படுகின்றன. விவசாயிகள் வழி காட்டப்படுகின்றனர். கிடைக்கக்கூடிய வசதிகள் சிறப்பாகப் பயன்படுத்தப்படுகின்றன. நீர்ப்பாசனம், நிலப்பாதுகாப்பு, பயிர்ப் பாதுகாப்பு, தொழில் நுட்ப உற்பத்தி முறை ஆகியவற்றின் நன்மைகளை விவாசாயிகள் பெறுகின்றனர். இறுக்கத் திட்டம் வெவ்வேறு மாவட்டங்களிலும் எந்த அளவுக்கு வெற்றி பெற்றுள்ளது என்பதை ஆய்வு செய்வது அவசியம். அரசு இத் திட்டத்தின்மூலம் அளிக்கின்ற வசதிகள் எவ்வாறு பயனளித்துள்ளன என்பதை உணர அஃது உதவும். நிலத்தைப் பயன்படுத்தும்முறை, உரங்களைப் பயன்படுத்தும் நிலை, பூச்சிக் கொல்லி மருந்துகளைப் பயன்படுத்தும் அளவு ஆகியவற்றைப் பற்றிய புள்ளி விவரங்கள் சேகரிக்கப்படவேண்டும். உணவு, வாணிபப் பயிர்களின் உற்பத்தி அளவு, கடன், விற்பனை வசதிகள் முதலியனபற்றிய கணக்கெடுப்புகளைச் செய்வதும் அவசியம்.

இறுக்கத் திட்டம் திருப்தியளிக்கத்தக்க வகையில் வெற்றி கண்டுள்ளது. முன்னோடித் திட்டங்கள் நிறைவேற்றப்படும் பகுதிகளின் விவசாயிகள் நல்ல விதைகள், உரங்கள் ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டியதன் அவசியத்தை உணர்ந்துள்ளார்கள். அவர்கள், நிலவளத்தைக் காப்பதற்கான நடவடிக்கைகளிலும் ஈடுபடுகின்றனர். வேளாண்மை உற்பத்தியை அதிகரிக்கக் கிடைக்கக்கூடிய வசதிகள் யாவற்றையும் இணைத்துப் பயன்படுத்துவதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்படவேண்டும். முன்னோடித் திட்டங்கள் செயல்படுத்தப்பட்ட இடங்களில் நைட்ரஜன் உரங்கள் பயன்படுத்தப்பட்டு, விஞ்ஞானச் சாகுபடி நடவடிக்கைகள் பின்பற்றப்பட்டன. ஆயினும், ஓர் ஏக்கருக்கான உற்பத்தியும, உணவுத் தானியங்களின் மொத்த உற்பத்தியும் எதிர்பார்த்த அளவுக்கு உயரவில்லை. திட்டங்களின் சாதனைகள் காகிதங்களில் மட்டுமே காட்டப்பெற்றன. இறுக்கத் திட்டம் பொது மக்களை ஓரளவுக்குக் கவர்ந்தது என்று கூறலாம். இத் திட்டத்திற்காக அதிகப் பணமும் வசதிகளும் ஒதுக்கப்படுகின்றன. இருப்பினும் அதன் நன்மைகள் சாகுபடியாளர்களைச் சென்றடைவதில்லை.

இவ் வகைப் 'புதுக் கொள்கை' சில படிப்பினைகளை உணர்த்தியுள்ளது. நிலச் சீர்திருத்தங்களை விரைவாக நிறைவேற்ற வேண்டியதன் அவசியத்தை நாம் உணர்ந்துள்ளோம். நீர்ப்பாசன வசதிகள் பெருக்கப்பட்டு வருகின்றன. விரைந்த பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்கான சிறந்த வேளாண்மை அடிப்படை அமைக்கப்பட்டு வருகின்றது. நில வளத்தைக் காப்பதற்கான பேரளவுத் திட்டங்கள் கைக்கொள்ளப்பட்டுள்ளன.

**'சென்' குழுவின் கண்டுபிடிப்புகள் (Sen Committees Findings)**

1961-62 முதல் 1964-65 வரை இறுக்கத் திட்டம் எவ்வாறு செயல்பட்டது என்பதை ஆய்வு செய்ய டாக்டர் எஸ். ஆர். சென் தலைமையில் குழு ஒன்று அமைக்கப்பட்டது. அதன் மூலம் இந்திய விவசாயிகள் மிகவும் பிற்போக்கான எண்ணமுடையவர்கள் அல்லர் என்பது அறியப்பட்டது. வறிய நிலையிலும், எழுத்தறிவற்ற நிலையிலும் கூட பாரம்பரிய உற்பத்தி முறைகளுக்குள்ளாகவே தங்களைக் கட்டுப்படுத்திக் கொள்ளவேண்டும் என்று அவர்கள் விரும்பவில்லை. விவசாயிகள் திறமையானவர்களாகவும் இருக்கின்றார்கள். கணிசமான எண்ணிக்கையில் விவசாயிகள் புதுமையான சாகுபடி முறைகளைப் பின்பற்றுகின்றார்கள். இந்த நிலை இந்திய வேளாண்மை வளர்ச்சியின் திருப்பு நிலை எனலாம். வேளாண்மை உற்பத்தியைப் பெருக்குவதற்கான உள்ளீடுகளை விவசாயிகள் அதிக அளவில் வேண்டுகின்றார்கள். ஆனால், அவற்றின் அளிப்புத் தேவைக்கேற்ப அமையவில்லை.

**நிர்வாக முறையில் உள்ள குறைபாடு**

மெதுவான வேளாண்மை வளர்ச்சிக்கு நிர்வாக முறையில் குறைபாடும் ஒரு காரணமாகும். வேளாண்மையில் அடிப்படை மாற்றங்களை ஏற்படுத்துவதும், வளர்ச்சி வேகத்தை விரைவு படுத்துவதும் இறுக்கத் திட்டத்தின் முக்கிய நோக்கங்கள் ஆகின்றன. நிறைவேற்றப்படும் சட்டங்கள் சரிவரச் செயல்படுத்தப்படுவதில்லை. சாகுபடியாளர்கள் போதுமான பாதுகாப்பைப் பெறுவதில்லை. இத் திட்டத்தில் குழப்ப நிலையும், புரியாத நிலையும் அமைந்துள்ளன.

**பாதுகாப்புக் கொள்கைகளிலும், முறைகளிலும் உள்ள குறைபாடுகள்**

சென் குழு, அரசின் கடன், விற்பனை, விலை, தொழில், இறக்குமதி, நிலம், முதலீடு பற்றிய அடிப்படைக் கொள்கைகள் திட்டத்திற்கு நன்மையளிப்பதாக இல்லை என்று குறிப்பிட்டது.

திட்டத்தில் உள்ள முக்கியக் குறைபாடு குறுகிய காலத்தில் மட்டும் நன்மையளிக்கக்கூடிய முதலீடுகளைச் செய்வதாகும். நல்ல உரங்கள், விதைகள், பயிர்களை அழிக்கக்கூடிய பூச்சிகளை ஒழிக்கும் மருந்துகள் அளிக்கப்படுகின்றன. உற்பத்தி வசதிகளைப் பெருக்குவதற்கான இடைக்கால முதலீடுகளில் முற்றிலுமாகக் கவனம் செலுத்தப்படுவதில்லை. நீண்ட காலத்தில் நிரந்தரமாகப் பயனளிக்கக்கூடிய முதலீடுகளைச் செய்வது நல்லது. அது சாத்தியமற்ற நிலையில் இடைக்கால நன்மைகளை அளிக்கும் முதலீடுகளையாவது செய்யவேண்டும். வேளாண்மை உற்பத்தித் திறன் தொடர்ந்து நீடிக்க அஃது உதவும்.

### தாமத நிலச் சீர்திருத்தம்

முன்னோடித் திட்டங்களில் உற்பத்தி உயர நிலச் சீர்திருத்த முறையும் உதவவில்லை. விவசாயிகள் பாதுகாப்பான நிலையைக் கொண்டிருக்கவில்லை. நிலவுடைமையாளர்களுக்கும், குத்தகையாளர்களுக்கும் நிலவுடைமைகளின் மீதான உரிமைகள் வரையறுக்கப்படவேண்டும். இலாபகரமாகச் சாகுபடி செய்வதற்கு ஏற்ற அளவில் நிலவுடைமை அமைந்திருத்தல் அவசியம். நிலக் கொள்கையில் இருக்கும் உறுதியற்ற தன்மை நீக்கப்பட்டுக் குத்தகையாளரின் உரிமைகள் காக்கப்படவேண்டும். அவர்களுக்கு உற்பத்திக்கான கடன்கள் வழங்கப்படவேண்டும். நிலச் சொந்தக்காரரும் முன்னேற்றப் பணிகளில் முதலீடு செய்வதற்கான ஊக்கத்தைப் பெறுமாறு செய்வது அவசியமாகிறது.

பயிற்சி பெற்ற வேளாண்மை வல்லுநர்களைக் கிராமப் புறங்களுக்கு அனுப்புவது நன்மை பயக்கும். இராசயன உரங்கள், அதிக விளைச்சலைத் தரும் விதைகள், புதுமையான பூச்சிக் கொல்லி மருந்துகள் ஆகியவற்றைப் போதுமான அளவில் நியாய விலையில் தங்குத் தடையின்றி அளிக்கவேண்டும் 'உற்பத்தி வசதிகள் குறைவாக உள்ளமையால், அவற்றை முக்கியப் பகுதிகளில் மட்டுமே முதலில் பயன்படுத்தவேண்டும்; எஞ்சிய வசதிகளையே பிற பகுதிகளில் பயன்படுத்தலாம்' என்ற கருத்தை சென் குழு குறிப்பிட்டது. இல்லாவிடில் இந்திய வேளாண்மையைப் புதுமைப் படுத்த மிக நீண்டகாலம் தேவைப்படும்.

நம்முடைய பொருளாதாரத்தில் வேளாண்மைத் திட்டங்கள் தோல்வியுறவில்லை; மாறாக இந்தியத் தொழில் துறை வேளாண்மைக்குத் தேவையான உள்ளீடுகளை அளிக்கத் தவறிவிட்டது. என்ற எண்ணத்தையும் இக்குழு கொண்டிருந்தது. தனிப்பட்ட சில பகுதிகளில் மட்டுமே வேளாண்மை திருத்தியமைக்கப்படு

கிறது. வேளாண்மை வளர்ச்சிக்கு ஏற்பத்தொழில் முன்னேற்றமும் அமைந்திருக்க வேண்டும். அப்போதுதான் வேளாண்மை உற்பத்திக்கான உள்ளீடுகளைத் தொழில் துறையால் போதுமான அளவுக்கு அளிக்க இயலும். வேளாண்மைப் பொருள்களைப் பதனப்படுத்தவும் தொழில் துறை உதவும். இந்திய வேளாண்மை வளர்ச்சிக்கான திட்டங்கள் வெற்றியடைய இவ் வகைக் குழுக்களின் பரிந்துரைகளுக்கேற்ப நடவடிக்கைகளை எடுப்பது இன்றியமையாதது.

தற்பொழுதும் 'இறுக்கத் திட்டம்' நம் நாட்டில் செயல் படுத்தப்பட்டு வருகிறது. 1966 ஆம் ஆண்டின் இறுதி வரை 'செறிந்த வேளாண்மை மாவட்டத் திட்டம்' 15 மாவட்டங்களின் 24.400 கிராமங்களில் செயல்படுத்தப்பட்டது. இதன் மூலம் 279 வளர்ச்சி வட்டங்கள் ஏற்படுத்தப்பட்டிருந்தன. இதனால், சுமார் 15 இலட்சம் சாகுபடிக் குடும்பங்கள் நன்மையடைந்தன. 1966-67-ல் இதன் வாயிலாக 29.71 இலட்சம் ஹெக்டேர்கள் சாகுபடி நிலம் பயனடைந்தது.

**உணவுக் கொள்கை**

இந்திய அரசின் உணவுக் கொள்கை கீழ்க்காணும் நோக்கங்களைக் கொண்டதாக இருக்கின்றது.

1. உணவுத் தானியங்களின் உற்பத்தியில் தன்னிறைவைப் பெறுவது;

2. பற்றுக்குறை நிலவுகின்ற காலங்களில் உணவுத் தானியங்களின் விலைகளையும், பகிர்வையும் கட்டுப்படுத்தி நுகர்வோரின் தொல்லைகளைத் தவிர்ப்பது; உணவுத் தானியங்களைப் போதுமான அளவில் கிடைக்குமாறு செய்வது; கூடுமான வரையில் நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் ஒரே மாதிரியான கொள்கையைப் பின்பற்ற முயற்சிப்பது;

3. சாகுபடியாளர்கள் தங்களுடைய உற்பத்திக்கு நியாய விலையைப் பெறுமாறு செய்வது.

**உணவுத் தானியங்களின் விலையுயர்வுக்கான காரணங்கள்**

[illegible] அமைப்பில் உணவுத் தானியங்கள் முக்கிய நிலையைக் கொண்டிருக்கின்றன என்பதை முதல் ஐந்தாண்டுத் திட்டம் உணர்ந்திருந்தது. எனவே, பொதுவான விலை நிலைபேராக்கத்தைப் பெற உணவுத் தானியங்களின் விலையை நிலைப்படுத்த

வேண்டும். அவ்விலையில் ஏழை எளியவர்களும் வாங்கத்தக்க நிலையைக் கொண்டிருத்தல் அவசியம். உணவுத் தானியங்களின் அளிப்புச் சிறிதளவு குறைந்தாலும் அது விலையை அதிக அளவுக்கு உயர்த்திவிடுகின்றது. விலை உயரும்போது வாழ்க்கைச் செலவுகளும் அதிகரித்து விடுகின்றன. இதனால், உற்பத்திச் செலவுகள் கூடுகின்றன. அரசின் கொள்கை விலையுயர்வுகளை ஏற்படுத்தினால் முதலீட்டுத் திட்டங்கள் பாதிக்கப்படுகின்றன. இச் சூழ்நிலைகள் சாகுபடியாளருக்கு எவ்வித நன்மையும் அளிப்பதில்லை. இவை யாவற்றையும் கருத்தில் கொண்டு அரசு, திட்டக் காலத்தில் உணவுக் கொள்கையை வகுக்கவேண்டும்.

திட்டக்குழு அரசின் விலைக் கொள்கை சிறப்பாக அமையவில்லை என்பதைச் சுட்டிக் காட்டியது. அரசின் தவறான கொள்கைகளால் உணவுத் தானியங்களின் விலைகள் உயர்வாக உள்ளன. இதனால், நுகர்வோரின் நலன் பாதிக்கப்படுவதோடு தொழில் பொருள்களின் உற்பத்திச் செலவுகளும் அதிகரிக்கின்றன. விலைகளின் உயர்வுக்குச் சாதகமான சில கருத்துகளும் பின் வருமாறு தரப்படுகின்றன.

1. உணவுத் தானியங்களின் விலைகளைக் குறைத்தால் சாகுபடியாளர்கள் விலை உயர்வாகவே இருக்கக்கூடிய கரும்பு, பருத்தி, சணல் முதலிய வாணிபப் பயிர்களை உற்பத்தி செய்வதில் ஈடுபடுவர்;

2. இந்தியாவில் மட்டுமன்றி எல்லா உலக நாடுகளிலும் உணவுப் பொருள்களின் விலைகள் உயர்வாகவே இருக்கின்றன. நம் நாட்டில் உணவுத் தானியங்களின் அளிப்புக் குறைவாக இருப்பதால் விலைகளைக் குறைக்க இயலாது.

இவ் வாதங்களைச் சரியானவை என்று ஏற்றுக் கொள்ள முடியாது. கரும்பு, பருத்தி, சணல் ஆகியவற்றின் விலைகள் உயர்வாக உள்ளமைக்கு அரசே காரணமாகும். இவ் வகை வாணிபப் பயிர்களின் விலைகளை அரசே நிர்ணயிக்கிறது. உணவுத் தானியங்களுக்கும், வாணிபப் பயிர்களுக்கும் இடையே உள்ள விலைகளில் சமன்பாடு அமைந்திருக்கவேண்டும். இவற்றிற்கிடையே அதிக விலை வேறுபாடுகள் இருக்கக்கூடாது. வேளாண்மைப் பொருள்களின் விலைகள் உயரும்போது உற்பத்தி குறையவும்கூடும். ஏனெனில் இந்திய விவசாயிகளில் பலர் குறிப்பிட்ட குறைந்த வருமானத்தைப் பெற்றால் போதும் என்று எண்ணுகின்றார்கள். வாணிபப் பயிர்கள், உணவுத் தானியங்கள் குறிப்பிட்ட குறைந்த வருமானத்தைப் பெற்றால் போதும் என்று

எண்ணுகின்றனர். வாணிபப் பயிர்கள் உணவுத் தானியங்கள் ஆகியவற்றின் விலைகள் குறைவாக இருந்தால் உற்பத்தி உயரும் என்ற கருத்தும் நிலவி வருகிறது. அரசு, வாணிபப் பயிர்களின் விலைகளை உயர்வாக நிர்ணயித்துள்ளமை பல பிரச்சினைகளையும் தோற்றுவித்துள்ளது. கரும்பு, பருத்தி, சணல் ஆகியவற்றின் விலைகளைக் குறைத்தால் இரு நன்மைகளைப் பெறலாம்.

முதலாவதாக, தொழில் துறையின் உற்பத்திச் செலவுகளைக் குறைக்கலாம்;

இரண்டாவதாக, அந்த நிலை உணவுத் தானியங்களின் விலைகள் குறையவும் வழி வகுக்கும்.

பயிர்வில் உள்ள குறைபாடுகளாலும், உற்பத்திக் குறைவாலும் இந்தியாவில் உணவுத் தானியங்களின் விலைகள் உயர்ந்து செல்கின்றன. உலக நாடுகள் பலவற்றிலும விலைகள் உயர்வாக இருப்பதால், இங்கும் விலைகள் உயர்வாக இருக்கின்றன என்று கூற முடியாது. விலைபுயர்வுச் சிக்கலைத் தீர்க்க உற்பத்தியை உயர்த்த வேண்டும்; அல்லது இறக்குமதியைப் பெருக்கவேண்டும். இறக்குமதியை அதிக அளவில் செய்வது இயலாது. அதற்கான செலவு அதிகமானதாகும். எனவே, இந்தியாவில் உணவு உற்பத்தியை அதிகரிப்பதற்கான நடவடிக்கைகளை எடுப்பதே சிறந்த வழியாகும்.

ஓர் ஏக்கருக்கான உற்பத்தியின் அளவை அதிகரித்து உணவுத் தானியங்கள், வேளாண்மைக் கச்சாப பொருள்கள் ஆகிய இரண்டின் உற்பத்தியையும் கூட்ட வேண்டும். ஒரு பயிரின் உற்பத்தியினின்றும் மற்றொரு பயிரின் உற்பத்திக்கு நிலத்தை மாற்றியமைக்கத் தேவையில்லை. ஓர் ஏக்கருக்கான உற்பத்தியின் அளவை உயர்த்த தரமான விதைகள், உரங்கள், நீர்ப்பாசன வசதிகள் ஆகியவை பயன்படுத்தப்பட வேண்டும்.

### விலை உதவிக் கொள்கை (Price Support Policy)

இரண்டாவது உலகப் போர் முடிவடைந்த பின்னர் 1954 ஆம் ஆண்டுதான் அரசு முதல் முறையாக விலை உதவிக் கொள்கையைக் கைக்கொண்டது. 'சாகுபடியாளர் தம்முடைய உற்பத்திப் பொருளுக்கு நியாய விலையைப் பெற வேண்டும்' என்பது அரசின் கொள்கையாக இருந்தது. கடந்த காலத்தில் உணவுத் தானியங்களின் விலைகள் உயர்வாகவே இருந்தன. அப்போது அரசு விலைகளைக் கட்டுப்படுத்துவதற்கான முயற்சிகளையே மேற்கொண்டிருந்தது. ஆனால் ஜூலை 1954-ல் அறுவடை முடிந்த

பின்னர் பஞ்சாப்பில் ஒரு மாண்டு கோதுமையின் விலை 10 ரூபாய்க்கும் குறைந்தது; உத்தரப்பிரதேச மண்டிகளில் விலை 10 ரூபாயாக இருந்தது. விலைகள் குறைவதற்குப் பின்வருவன காரணங்களாக அமைந்தன.

1. கோதுமை உற்பத்தியாகும் இடங்களில் கோதுமை உற்பத்தி முன்பிருந்ததைக் காட்டிலும் அதிகமாகப் பெருகியது;

2. மக்களுடைய வாங்கும் திறன் குறைவாக இருந்ததால் கோதுமையின் தேவை அதிகரிக்கவில்லை.

3. போதுமான போக்குவரத்து வசதிகள் இல்லாமையால், தேவை அதிகமாக இருந்த இடங்களுக்குக் கோதுமையைக் கொண்டு செல்ல முடியவில்லை. மண்டிகளில் விலைகள் குறைந்தமைக்கு இதுவும் காரணமாயிற்று.

4. [redacted] அயல்நாடுகளிலும் கோதுமையின் விலை குறைந்தது. இதற்கு அடிப்படையாக அமைந்தது உற்பத்தி உயர்வேயாகும். பல நாடுகளிலும் விலை குறைந்த நிலை இந்தியாவிலும் விலை குறைய ஓரளவுக்குக் காரணமாக இருந்தது.

பஞ்சாப் அரசு விவசாயிகளின் துயர்துடைக்க ஒரு மாண்டு 10 ரூபாய் என்ற விலையில் கோதுமையை ஒரு குறிப்பிட்ட அளவு வாங்கியது. இதுபோன்ற நடவடிக்கையை மேற்கொள்ளலாம் என்ற எண்ணத்தை உத்தரப்பிரதேச அரசும் கொண்டிருந்தது. ஆயினும், விலை படிப்படியாக உயரத் தொடங்கியதால் அந்த நடவடிக்கைக்கு அவசியமில்லாமற் போய் விட்டது. ஏப்ரல் 1955-ல் கோதுமைக்கும், ஜூன் 1955-ல் பயறு வகைகளுக்கும், ஆகஸ்ட் 1955-ல் அரிசிக்கும் அரசு குறைந்தபட்ச விலைகளை நிர்ணயித்தது. உற்பத்தியின் [redacted] பகுதியை அரசே நியாயமான விலையில் வாங்கிக் கொண்டது. இதன் காரணமாக அளிப்பில் தற்காலிகக் குறைவு ஏற்பட்டது; விலைகள் உயரத் தொடங்கின.

**[redacted] உதவிக் கொள்கையின் தீமைகள்**

தொழில்களுக்கான கச்சாப் பொருள்கள், உணவுத் தானியங்கள் ஆகியவற்றின் விலைகள் ஒரு குறிப்பிட்ட நிலைக்குக் குறையாமல் பார்த்துக் கொள்வது அவசியமாகும். அரசின் விலைக் கொள்கை உழைப்பாளர்கள் அல்லது நுகர்வோர் நலனைக் காப்பதாக இருக்கவேண்டும். ஆனால், அரசின் [redacted] உதவிக் கொள்கையில் பின்வரும் தீமைகளும் அடங்கியுள்ளன.

1. தொடர்ச்சியாக விலைகள் குறைந்து கொண்டே சென்றால், அரசு அதிக இழப்புகளை ஏற்கவேண்டி இருக்கும்.

2. வாங்கிய வேளாண்மைப் பொருள்களை விற்பனை செய்ய இயலாத நிலைக்கும் அரசு ஆளாகலாம்; நீண்ட காலத்திற்கு அப் பொருள்களை இருப்பாக வைத்திருப்பது கடினமாகின்றது.

3. சில குறிப்பிட்ட பொருள்களின் விலைகளை அரசு உயர்வாக நிர்ணயிக்கும்போது, பொதுவான விலை மட்டங்களும் அதிகரிக்கக்கூடும்.

வேளாண்மைப் பொருள்களின் விலைகள் குறையும்போது பிறதொழில் பொருள்களின் விலைகளும் குறையும். உணவுத் தானியங்களின் விலைகள் குறையும்போது சமுதாயத்தில் உள்ள எல்லாரும் நன்மையடைகின்றார்கள். நீண்ட காலத்தில் விவசாயிகளின் வாங்கும் திறன் அதிகரிக்கின்றது. விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெற இவ்விதச் சூழ்நிலையே தேவைப் படுகின்றது.

நீண்ட காலமாகவே இந்திய அரசு, கோதுமை, அரிசி ஆகியவற்றை இறக்குமதி செய்து வருகின்றது. உள் நாட்டிலும் அவற்றைக் கொள்முதல் செய்கின்றது. உணவுத் தானியக் கையிருப்பு முறையை அரசு பின்பற்றுகிறது. பற்றுக்குறை மாநிலங்களில் பகிர்வு செய்ய உணவுத் தானியங்கள் அளிக்கப் படுகின்றன. நியாய விலைக் கடைகளின் மூலம் உணவுபங்கிடப் படுகிறது. உணவுத் தானியங்களின் விலைகளும் பகிர்வும் கட்டுப் படுத்தப்பட்டாலும் விலைகள் உயர்மட்டத்தை நோக்கியே செல்கின்றன.

### அதிக விலையுயர்வின் தீங்குகள்

உணவுப் பொருள்களின் விலைகள் உயர்ந்தமையால் நுகர்வோருடைய நலன் பாதிக்கப்பட்டது. தொழில் துறையின் உற்பத்திச் செலவுகள் கூடின. திட்டங்களை நிறைவேற்றுவதற்கான செலவும் அதிகரித்தது. உழைப்பாளர்களின் கூலியை உயர்த்துவது அவசியமாயிற்று. அரசாங்க ஊழியர்களின் ஊதியமும் உயர்த்தப்பட்டது. விலையுயர்வால் ஏற்பட்ட பிற தீய விளைவுகளைப் பின்வருமாறு குறிப்பிடலாம்.

1. அரசு விவசாயிகள் உயர்விலையைப் பெறுவதற்கான பாதுகாப்பை வழங்கியது. எனினும், அவர்களால் சந்தைக்கு அதிக அளவு பொருள்களைக் கொண்டு செல்ல முடியவில்லை.

அதிக உற்பத்தியைச் செய்பவர்களும் விலையுயர்வால் குறைந்த அளவுப் பொருள்களையே சந்தைக்குக் கொண்டு செல்கின்றனர். குறைவான அளவு உண்வுப் பொருள்களை விற்பதன் மூலமே அவர்கள் போதுமான வருமானத்தைப் பெற்று விடுகின்றனர் இதைத் தவிர கோதுமை, அரிசி, பிற உணவுப் பொருள்கள் ஆகிய பலவும் வணிகர்களால் பதுக்கப்படுகின்றன. சந்தையில் பற்றுக்குறை தோன்ற இதுவும் ஒரு காரணமாகின்றது.

2. உணவுத் தானியங்களின் வாணிபத்தில் அரசும் ஈடுபட்டிருக்கிறது; கோதுமை, அரிசி முதலியவற்றின் மொத்த விலைகளைக் கட்டுப்படுத்துகிறது. நாடு பல பகுதிகளாகப் பிரிக்கப் பட்டு உணவுத் தானியங்களை வெவ்வேறு இடங்களுக்கும் எடுத்துச் செல்கின்ற நிலைகளில் கட்டுப்பாடுகள் விதிக்கப்படு கின்றன. பற்றுக்குறை நிலை நிலவுகிறது என்ற எண்ணம் விற்பனை யாளர்கள் விலையை உயர்த்தத் தூண்டுகிறது.

3. மத்திய அரசுக்கும், மாநில அரசுகளுக்கும் இடையே உணவுக் கொள்கைகளில் வேறுபாடுகள் உள்ளன. அக் கொள்கைகளை நிறைவேற்றுவதற்கு நீண்ட காலம் பிடிக்கின்றது. கொள்கைகள் திறமையோடு நிறைவேற்றப்படாமையால் விலை களைக் குறைக்க முடிவதில்லை. மத்திய அரசின் கொள்கைகள் வெற்றியடைய மாநில அரசுகள் உதவுவதோடு ஒத்துழைப்பையும் தர வேண்டும்.

4. அரசு விலைகளின் மீது குறைந்த ஆதிக்கத்தையே செலுத்த முடிகின்றது. அரசின் பணக் கொள்கையும், பற்றுக்குறை நிதியாக்கமும் விலைகளை நிலைப்படுத்தத் தடையாக இருக்கின்றன.

## விலைக் கொள்கைக் குழு (Price Policy Committee)

'தேசிய முன்னேற்றக் கவுன்சில்' (National Develpoment Council), ஏப்ரல் 1960-ல் விலைக் கொள்கைக் குழுவை அரசுக்கு விலை நிலைபேராக்கம்பற்றி ஆலோசனை அளிக்கும் பொருட்டு அமைத்தது. இந்தியாவில் உள்ள சிக்கல்களில் உணவுப் பற்றுக் குறையே தலையாயது. பற்றுக்குறை நிதியாக்கம், விரைவான மக்கள் பெருக்கம் ஆகியவற்றால் விலைகள் உயர்ந்துள்ளன. விலைகளின் உயர்வைத் தடுக்க வேளாண்மை உற்பத்தியையும், தொழில் துறை உற்பத்தியையும் அதிகரிக்க வேண்டுமென்பது யாவரும் அறிந்ததே. இதனால், 'விலைக் கொள்கைக் குழு' பயனுள்ள பணிகளை ஆற்ற முடியவில்லை.

இக் குழு மூன்றாவது திட்டக் காலத்தில் உணவுப் பொருள்களோடு பிற அவசிய பண்டங்களின் விலைகளையும் நிலைப்படுத்த வேண்டுமென்று கூறியது. அஃது இவ்வித வழி முறைகளைப் பின்பற்ற வேண்டுமென்று வரையறுத்துக் கூறவில்லை; பற்றாக் குறைப் பகுதிகளிலும், உபரிப் பகுதிகளிலும் விலைகளை நிலைப்படுத்த எம் முறைகளைப் பின்பற்றலாம் என்று குறிப்பிடவில்லை.

**வேளாண்மை விலைக் குழு (Agricultural Price Commission)**

ஜனவரி 1965-ல் இந்திய அரசு வேளாண்மை விலைக்குழுவை அமைத்தது. நெல், அரிசி, கோதுமை, கம்பு, சோளம், பயறு, பருப்புகள், கரும்பு, எண்ணெய் வித்துகள், பருத்தி, சணல் முதலிய உணவுத் தானியங்கள், வாணிபப் பயிர்கள் பற்றிய விலைக் கொள்கையை அரசுக்குப் பரிந்துரைக்கவே இக் குழு அமைக்கப்பட்டது. உற்பத்தியாளர்கள், நுகர்வோர் ஆகிய இரு பிரிவினரின் நலனையும் காக்கக்கூடிய வகையில் விலைக் கொள்கை அமைய வேண்டும். இக் குழுவால் பரிந்துரைக்கப்படும் விலைக் கொள்கை முக்கியமாக மூன்று நிலைகளின் அடிப்படையில் அமைந்திருக்க வேண்டும்.

1. உற்பத்தியாளர் ஆக்கத்தின் அளவைக் கூட்ட தொழில் நுட்பம் வாய்ந்த உற்பத்தி முறைகளைப் பின்பற்றும் ஊக்கத்தைத் தூண்டிவிட வேண்டும்.

2. நிலத்தையும், பிற உற்பத்தி வசதிகளையும் சீரமைத்துச் சிறப்பாகப் பயன்படுத்தும் நிலையை ஏற்படுத்தவேண்டும்;

3. உணவுத் தானியங்கள், வாணிபப் பயிர்கள் ஆகியவற்றின் விலைகள் பொருளாதாரத்தின் பிற துறைகள், மக்களின் வாழ்க்கைச் செலவு, கூலி மட்டம், தொழில் பொருள்களின் உற்பத்திச் செலவு, திட்டச் செலவு முதலியவற்றை எந்த அளவுக்குப் பாதிக்கக்கூடும் என்பதை ஆய்வு செய்வது அவசியமாகும்.

அரசு சிறப்பான விலைக் கொள்கையைச் செயல்படுத்துவதற்கு [illegible] குழுவின் பரிந்துரைகள் உதவ வேண்டும். மாறுகின்ற விலைகளுக்கும், சூழ்நிலைகளுக்கும் ஏற்ப அரசு மேற் கொள்ள வேண்டிய நடவடிக்கைகளை இக் குழு கூறப்பிடுதல் இன்றியமையாததாகும்.

வேளாண்மை விலைக் குழு சரியான காலத்தில் தோற்றுவிக்கப்பட்டது. அது தோற்றம் பெற்றபொழுது சாகுபடிச் செலவுகளுக்கும், விலைகளுக்கும் எவ் விதத் தொடர்பும்

இருக்கவில்லை. சில வேளாண்மைப் பொருள்களின் விலைகள் அவற்றின் உற்பத்திச் செலவுகளுக்குச் சமமாக இருந்தன. இதனால், சாகுபடியாளர்களில் பலர் உற்பத்தியைப் பெருக்கு வதற்கான ஊக்கத்தை இழந்தார்கள். சில பொருள்கள் உற்பத்திச் செலவைக் காட்டிலும் மிக உயர்ந்த விலையில் விற்றன. இதன் காரணமாக விவசாயிகள் இவ்வகைப் பொருள்களைச் சாகுபடி செய்வதில் அதிக விருப்புக் கொண்டனர்.

வேளாண்மைத் துறையில் ஏற்றத் தாழ்வான வளர்ச்சி இருக்கக்கூடாது. உற்பத்தியாளருக்குக் கணிசமான இலாபத்தைத் தரக்கூடியதாக விலை மட்டம் அமையவேண்டும். அப்பொழுதான் விவசாயிகள் ஊக்கத்தோடு உற்பத்திப் பணிகளில் ஈடுபடு வார்கள். அதன் மூலம் வேளாண்மை வருமானம் கூடிப் பிற துறைகளின் முன்னேற்றமும் காக்கப்படும்.

வேளாண்மை விலைக் குழுவின் பணி மிகவும் கடினமானது. சாகுபடியாளர்கள், நுகர்வோர் ஆகிய இரு பிரிவினரின் ஊக்கமும் பாதிக்கப்படாத வகையில் விலையை நிர்ணயிப்பது எளிதன்று. தொழில் பொருள்களின் உற்பத்திச் செலவு வேளாண்மைப் பொருள்களின் விலைகளைச் சார்ந்தும் அமைகிறது. வெவ்வேறு பயிர்களின் உற்பத்திச் செலவுகள், வேளாண்மை விலைகள் தொழில் உற்பத்திச் செலவைப் பாதிக்கும் நிலை ஆகியவற்றைப் பற்றிய சரியான புள்ளி விவரங்கள் கிடைப்பதில்லை. இதனால், குழு செவ்வனே பணியாற்ற முடியவில்லை. இவ்வகைச் சிக்கல்கள் இருந்தாலும், நல்ல சில பணிகளையும் அஃது ஆற்றியுள்ளது.

### குறைந்தபட்ச பாதுகாப்பு விலைகள்

முந்தைய ஆண்டுகளைப் போலவே 1971—72 ஆம் ஆண்டுக்குக் கொள்முதல் விலைகளை நெல், அரிசி, கம்பு, சோளம் ஆகியவற்றுக்கு நிர்ணயிக்க வேண்டுமென்று வேளாண்மை விலைக்குழு குறிப்பிட்டது. இவ்வாறு இந்திய அரசு கொள்முதல் விலைகளை நிர்ணயிப்பதன் மூலம் சாகுபடியாளர்களுக்குக் குறைந்தபட்ச விலைகளை உறுதியளிக்கலாம். அவ் விலைகள் உற்பத்தியைப் பெருக்குவதற்கான முயற்சிகளில் அவர்களை ஈடுபடுத்தும்.

அறுவடை முடிந்தவுடன் சந்தைகளில் வேளாண்மைப் பொருள்களின் அளிப்புத் தேவையைக் காட்டிலும் அதிகமாக இருக்கின்றது. இஃது அப்போது இருந்திருக்கக்கூடிய தற்காலிக நிலையே ஆகும். அந்த நிலையால் விவசாயிகளின் வருமானம் குறைகின்றது.

மத்திய அரசு நிர்ணயிக்கும் கொள்முதல் விலைகள் சந்தை விலைகளினின்றும் வேறுபட்டவைகளாக இருக்கின்றன. ஆனால், மாநில அரசுகள் கொள்முதல் விலைகளிலேயே சாகுபடியாளர்கள் அல்லது வணிகர்களிடமிருந்து உணவுத் தானியங்களைக் கட்டாயமாக வாங்கவேண்டும். மாநில அரசுகளின் கட்டாயக் கொள்முதல் விலைகள் மத்திய அரசு அறிவிக்கும் கொள்முதல் விலைகளைக் காட்டிலும் உயர்வாக உள்ளன. மத்திய அரசின் ஒப்புதலோடு மாநில அரசுகள் அவசியமான காலங்களில் கட்டாயக் கொள்முதல் செய்கின்றன. மத்திய அரசு நிர்ணயிக்கும் விலைகளில் கொள்முதல் செய்ய மாநில அரசுகள் எப்பொழுதும் தயாராக இருத்தல்வேண்டும். எந்த அளவுக்கு அவை கொள் முதல் செய்யக்கூடும். ஆதலால், கொள்முதல் விலைகளை வேளாண்மை விலைக்குழு பரிந்துரைக்கிறது. ஆனால், அப் பரிந் துரையை இந்திய அரசு ஏற்றுக்கொள்ள வேண்டுமென்பது அவசியமில்லை. அரசு வேறொரு விலையையும் நிர்ணயிக்க முடியும்.

### உணவுத் தானியங்களில் அரசின் வாணிபம்

அரசு உணவுத் தானியங்களின் வாணிபத்தில் ஈடுபட்டால் கீழ்க்காணும் நன்மைகள் கிடைக்கக்கூடும்.

1. உற்பத்தியாளருக்கும், நுகர்வோருக்கும் நன்மையளிக்கத் தக்கவகையில் விலை மட்டங்களை நிர்ணயிக்கலாம்.

2. விற்பனைச் செலவு குறைகிறது; நடுவர்கள் பெறும் கொள்ளை இலாபம் தடுக்கப்படுகிறது; உற்பத்தியாளர் விலைக்கும், நுகர்வோர் விலைக்கும் நடுவே உள்ள இடைவெளி குறைக்கப்படு கின்றது.

3. இடைநிலையாளர்கள் பொருள்களைப் பதுக்குகின்ற நிலை தவிர்க்கப்படுகிறது.

உணவுத் தானியங்களின் வாணிபத்தில் அரசு ஈடுபடுவதால் பின்வரும் தீமைகளும் விளையக்கூடும்.

1. அரசு வாணிபத்தில் ஈடுபட அதிக மூலதனம் தேவைப் படும்; வாணிபத்தில் ஈடுபடுத்தப்படும் மூலதனம் சிக்கனமாகப் பயன்படுத்தப்படமாட்டாது.

2. வணிகர்கள் பலரும் வேலையிழக்க நேரிடும்; தற்பொழு துள்ள நாட்டின் பொருளாதார நிலைக்கு இஃது ஏற்றதன்று;

3. தனிப்பட்ட வணிகர்கள் பலருடைய கவனத்தையும், திறமையையும் தனியொரு கழகம் கொண்டிருக்க முடியாது. வணிகர்கள் தாம் பாதிக்கப்படாத வகையில் பொருள்களைச் சேமித்து வைக்கின்றார்கள். அரசின் கழகம் விற்கக்கூடிய பொருள்கள் தரம் குறைந்தனவாகவே இருக்கும். சில காலங்களில் உண்ண முடியாத அளவுக்குத் தரம் குறைந்த உணவுத் தானியங்களைக்கூட அஃது அளிக்கக்கூடும். அரசு வாணிபத்தில் ஈடுபடும் போது பொது மக்கள் பல இன்னல்களை ஏற்க வேண்டி வரும்.

இந்திய உணவுக் கழகம் (Food Corporation of India)

இக் கழகம் ஜனவரி முதல் நாள் 1965-ல் தொடங்கப்பட்டது. உற்பத்தியாளர்களுக்குப் பாதுகாப்பளிக்கும் பொறுப்பு இதனிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது. சாகுபடியாளர்களுடைய வருமானத்தில் சீரான நிலையை ஏற்படுத்துவது அவசியம். உற்பத்தியைப் பெருக்குவதற்கான ஊக்கத்தையும் அவர்களுக்கு அளிக்கவேண்டும். இதோடுகூட, இந்திய உணவுக் கழகம் சந்தைப் பொருளாதாரத்தை ஒழுங்குபடுத்தவேண்டும். மேலும் நுகர்வோருக்குப் போதுமான அளவில் நியாய விலையில் உணவுத் தானியங்களை அளிக்கவேண்டும். இதற்காகக் கழகம் வாங்குதல், கிடங்குகளில் சேமித்து வைத்தல், பகிர்தல், உற்பத்தியை ஊக்குவித்தல், விற்றல் முதலிய பணிகளைச் செய்கின்றது.

முதன் முதலில் தென்னிந்திய மாநிலங்களாகிய கேரளம், மைசூர், ஆந்திரப்பிரதேசம் ஆகியவற்றிலும், யூனியன் பிரதேசமாகிய பாண்டிச்சேரியிலும் கழகத்தின் நடவடிக்கைகள் அதிகமாக மேற்கொள்ளப்பட்டன. காலப் போக்கில் பிற பகுதிகளுக்கும் இதன் பணிகள் விஸ்தரிக்கப்பட்டன. தற்பொழுது கழகம் ஒரிஸ்ஸா, குஜராத், ராஜஸ்தான், பஞ்சாப், டெல்லி ஆகிய இடங்களிலும் இயங்கி வருகின்றது.

இம் மாநிலங்கள் சிலவற்றில் இந்திய உணவுக் கழகம் அரசின் பதிலாளியாக உணவுத் தானியங்களை வாங்கிச் சேமித்து, விற்பனை செய்யும். அவசியமான காலங்களில் மட்டுமே உணவுத் தானியங்கள் வாங்கிப் பகிர்வு செய்யப்படுகின்றன. கொள்முதல் திட்டத்தில் இஃது ஒரு பதிலாளியைப்போன்று பணியாற்றுகிறது. இதன் உதவியோடு உணவுத் தானியங்களும், உரங்களும் மாநிலங்களுக்கு இடையே பரிமாறிக் கொள்ளப்படுகின்றன.

இந்திய உணவுக் கழகத்தின் நடவடிக்கைகள் தற்பொழுது பல இடங்களிலும் பரவி வருகின்றன. இது பொருள்களை வாங்கி

விற்கும் அளவும் கூடியுள்ளது. ஏப்ரல் 1969 முதல் மத்திய உணவுத் துறையின் பணிகளும் கழகத்திடம் ஒப்படைக்கப் பட்டன. உணவுத் தானியங்களில் அரசு வாணிபத்தை இதன் மூலமே செய்கிறது. இதன்மூலம் வாணிபத்தில் ஈடுபடுத்தப்பட்ட தொகை 1965-66-ல் ரூ. 290 கோடியாக மட்டுமே இருந்தது; அது 1969—70-ல் ரூ. 1500 கோடியாக உயர்ந்துவிட்டது.

இந்திய உணவுக் கழகம் இதுவரை வெற்றிகரமான பணிகளை ஆற்றியுள்ளது என்று கூற இயலாது. அதனால், உணவுத் தானியங்களைத் தேவையான காலங்களில் அளிப்பதோ, சந்தை விலைகளின்மீது ஆதிக்கத்தைச் செலுத்துவதோ முடியாததாக இருக்கின்றது. நம் நாட்டில் உணவுத் தானியங்கள் கட்டாயக் கொள்முதல் செய்யப்பட்டாலும், உணவுப் பங்கீட்டுமுறை பின்பற்றப் பட்டாலும் இந்திய உணவுக் கழகம் சிறப்பான பணிகளை ஆற்ற முடியும். ஆனால், இந்த நிலைகள் தோன்றுவதற்கான சூழ்நிலைகள் இன்று இந்தியாவில் ஏற்பட்டிருக்கவில்லை.

### கட்டுப்பாடுகள் (Controls)

உணவுப் பொருள்களின்மீதான அரசின் கட்டுப்பாடு குறித்து இரு வேறு கருத்துகள் நிலவுகின்றன. கட்டுப்பாட்டுக்குச் சாதகமான கருத்துகளைப் பின் வருமாறு குறிப்பிடலாம்.

1. பற்றுக்குறைப் பகுதிகளில் உணவுத் தானியங்களை அளிப்பது அரசின் கடமை. வறிய மக்களின் துயர் துடைக்க அரசு கட்டுப்பாடுகளைக் கொண்டிருப்பது அவசியம். கட்டுப்பாடுகள் இல்லாவிடில் விலை அதிகரித்து எளிய, வறிய மக்கள் பெரிதும் பாதிக்கப்படுவார்கள். வாழ்வுக்கு மிகவும் இன்றியமையாத உணவுப் பொருள்கள் நியாயமான விலையில் விற்குமாறு அரசு பார்த்துக்கொள்ளவேண்டும்.

2. திட்டங்களை வெற்றிகரமாக நிறைவேற்றவும் அரசு கட்டுப் பாடுகளை விதிக்க வேண்டியுள்ளது. கட்டுப்பாடின்றித் திட்டங்களைச் செவ்வனே நிறைவேற்ற முடியாது.

அரசின் கட்டுப்பாடுகளுக்கு எதிரான வாதங்களும் அமைந்துள்ளன. கட்டுப்பாடுகள் இல்லாவிடில் பற்றுக்குறை நிலைகள் தோன்றமாட்டா என்று வாதிடப்படுகின்றது. பொருள்கள் பதுக்கப்படுவதற்குக் கட்டுப்பாடுகளே காரணமாகும். சந்தைகளில் எளிதாகப் பொருள்கள் கிடைக்கக் கட்டுப்பாடுகளை நீக்க வேண்டும். அதன் மூலம் பற்றுக்குறை நிலைகளைத் தவிர்க்கலாம்.

உணவுப்பொருள்களின் தேவை, அளவு, உற்பத்தி ஆகியனபற்றிய சரியான புள்ளி விவரங்கள் கிடைக்கப்பெறவில்லை. எனவே, எந்த அளவுக்குப் பற்றுக்குறை நிலவுகின்றது என்பதைச் சரிவர அறிய முடிவதில்லை. உணவுக் கட்டுப்பாடுகளுக்குப் பொறுப்பு வகிப்பவர்கள் பற்றுக்குறை நிலையை மிகைபடுத்திக் கூறுகின்றார்கள் என்று சொல்லப்படுகிறது. தங்களுடைய வேலையை ஸ்திரப் படுத்திக்கொள்ள இவ்வாறு செய்கிறார்கள் என்ற கருத்தும் தோன்றியுள்ளது.

வெளி நாட்டு வாணிபத்தின்மீது கட்டுப்பாடுகளைக் கொண்டிருப்பது தவிர்க்க இயலாதது. முதலீடுகளையும் ஓரளவு கட்டுப் படுத்துவது நன்மை பயக்கும். திட்டங்களைச் சிறப்பாக நிறை வேற்ற உணவுப் பொருள்களின்மீது கட்டுப்பாடுகளை விதிக்க வேண்டுமென்பது அவசியமில்லை. கட்டுப்பாடுகளைக் கொண்டிருந்தால்தான் திட்டங்களை வெற்றியோடு நிறைவேற்ற இயலுமென்பது தவறான வாதமாகும்.

எனினும் தீவிரமான, முழுமையான, சிறப்பான, திறமையான கட்டுப்பாடுகளின் மூலம் பல நன்மைகளைப் பெறலாம். ஆனால். இந்தியாவில் கட்டுப்பாடுகளால் தீமைகளே விளைகின்றன. வணிகர்களும், நுகர்வோரும் பாதிக்கப்படுகின்றனர். பதுக்கல் காரர்கள் கள்ளச் சந்தையில் கொள்ளை விலையில் பொருள்களை விற்று அதிக இலாபம் பெறுகின்றனர். திறமைக் குறைவான கட்டுப் பாடுகள் இருப்பதைக் காட்டிலும் கட்டுப்பாடுகள் விதிக்கப் படாமல் இருப்பதே நல்லது. பொருளாதாரம் இயல்பான நிலையில் இயங்க உணவுப் பொருள்களின்மீது தொடர்ச்சியாகக் கட்டுப் பாடுகளைக் கொண்டிருக்கக்கூடாது.

இந்தியாவின் வட எல்லைப் பகுதிகளில் அக்டோபர் 1962–ல் சீனா தாக்குதல்களை நடத்தியது. அப்பொழுது பற்றுக்குறை யாலும், கறுப்புச் சந்தை வியாபாரிகளாலும் சில பொருள்களின் விலை உயரும் என்று அரசு கருதியது. ஆகவே, பொருள்களின் இருப்பின்மீது கட்டுப்பாடுகளைச் செலுத்துவதற்கான அதிகாரங்களை அரசு சட்டங்களால் பெற்றது. பொருள்களின் பகிர்வுமுறை ஒழுங்குபடுத்தப்பட்டது. உணவுத் தானியங்களின் மொத்த வியாபாரிகளுக்கு வாணிபத்தில் ஈடுபட அரசு அனுமதி வழங்கியது. அரிசி, மாவுமில்கள் அரசின் அனுமதியோடு இயங்கின. நியாய விலைக் கடைகள் அதிக எண்ணிக்கையில் திறக்கப் பெற்றன. நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்கள் ஏற்படுத்தப் பட்டன. கட்டுப்பாடுகளை மீறுபவர்களுக்குத் தண்டனைகள்

வழங்குவதற்குக் குற்ற இலாகா செயல்பட்டது. மத்திய நிதி அமைச்சகம் 'விலை நிலைபேராக்கக் குழுவையும்' (Committee of Price Stabilisation) ஏற்படுத்தியது.

உணவுப் பொருள்களைத் தவிரக் காகிதம், நிலக்கரி, சிமெண்ட், எஃகு, கம்பளிப் பொருள்கள் ஆகியவற்றின் மீதும் அரசு கட்டுப்பாடுகளை விதித்தது. கட்டுப்பாடுகளால் பலவிதச் சிக்கல்கள் உருவானதை அரசு உணர்ந்தது. எனவே, வெவ்வேறு பொருள்களின் மீதான கட்டுப்பாடுகளும் படிப்படியாகத் தளர்த்தப்பட்டன. சிமெண்ட், எஃகு ஆகியவற்றின்மீதான கட்டுப்பாடுகள் நீக்கப்பட்டமையால் உற்பத்தியாளர்களும், நுகர்வோரும் பெரிதும் நன்மையடைந்தார்கள். கட்டுப்பாடுகள் முற்றிலுமாக நீக்கப்படாமைக்கு 1965ஆம் ஆண்டின் பாகிஸ்தானியர்களுடைய ஊடுருவல் ஒரு முக்கியக் காரணமாக இருந்தது; ஜூன் 1966-ல் ரூபாய் மதிப்புக் குறைப்புச் செய்யப்பட்டதும் மற்றொரு காரணமாகும்.

1965ஆம் ஆண்டில் நிலைமை சீர் குலைந்ததால் உணவுப் பொருள்களின் மீதான கட்டுப்பாடுகள் மேலும் தீவிரப்படுத்தப்பட்டன. உணவுத் தானியங்கள், வாணிபப் பயிர்கள் ஆகியவற்றிற்கான விலைக் கொள்கையைப் பரிந்துரைக்க அரசு 'வேளாண்மை விலைகள் குழுவை' நியமித்தது. உணவுத் தானியங்களின் விலைகள் நிர்ணயிக்கப்பட்டன. மாநிலங்களுக்கிடையே உணவுத் தானியங்கள் எடுத்துச் செல்லப்படுவது தடுக்கப்பட்டது. முக்கியப் பண்டங்களின் பகிர்வு சீர்ப்படுத்தப்பெற்றது. 10 இலட்சத்துக்கும் அதிகமான மக்கள் தொகையைக் கொண்ட நகரங்களில் பங்கீட்டு முறை கொண்டு வரப்பட்டது. இதற்கு உதாரணமாகச் சென்னை, கல்கத்தா, பம்பாய், டெல்லி, கான்பூர், கோயம்பத்தூர் முதலிய பெரிய நகரங்களில் பங்கீட்டு முறை செயல்படுத்தப்பட்டது என்பதைக் குறிப்பிட்டுக்கூறலாம். அதன் பின்னர், ஓர் இலட்சத்துக்கும் அதிக மக்கள் தொகையைக்கொண்ட நகரங்களிலும் இம்முறையை விஸ்தரிக்க வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது.

ஜூன் 1966-ல் ரூபாய் மதிப்புக் குறைப்புச் செய்யப்பட்ட பின்னர், விலைகள் மேலும் உயரும் என்று எதிர்பார்க்கப்பட்டமையால் கட்டுப்பாடுகள் திரும்பவும் தீவிரமாக்கப்பட்டன. அரசு அவசியப் பொருள்களாகிய உணவுத் தானியங்கள், உணவில் சேர்க்கப்படும் எண்ணெய், சர்க்கரை, மண்ணெண்ணெய், துணி, உரங்கள் ஆகியவற்றின் விலைகளை நிலைப்படுத்த விரும்பியது. இவை நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்கள் மூலமும், நியாய விலைக் கடைகள் மூலமும் பகிர்ந்தளிக்கப்பட்டன. மொத்தமாக உற்பத்தி

யாளர்களிடமிருந்து இவை பொருள்களைப் பெற்று நியாய விலையில் நுகர்வோருக்கு அளித்தன.

## எதிர்காலத் தோற்றம்

இந்திய அரசு வேளாண்மை வளர்ச்சிக்காக அதிக முதலீட்டைச் செய்து வருகின்றது. இன்னும், பத்தாண்டுகள் கழித்து வேளாண்மை எந்த அளவுக்கு வளர்ச்சியைப் பெற்றிருக்கும் என்று எண்ணிப் பார்ப்பது நல்லது. அதன் மூலம் திட்டங்கள் நீண்ட காலத்தில் அளிக்கக்கூடிய நன்மைகளை அறியலாம், பத்தாண்டுகள் சென்ற பின்னர், வேளாண்மைப் பொருள்களின் தேவை, அளிப்பு ஆகியவை எந்த அளவில் இருக்குமென்பதைத் திட்டக்குழு கணக்கிடப்பட்டுள்ளது, சில வகைப்பட்ட பொருள்களின் நுகர்வுபற்றி ஆய்வையும் அது செய்திருக்கின்றது.

மக்களின் மொத்த நுகர்வில் சுமார் 60 சதவீதம் வேளாண்மைப் பொருள்களாகவும், கச்சாப் பொருள்களை வேளாண்மையினின்றும் பெற்று உற்பத்தி செய்கின்ற தொழில் பொருள்களாகவும் இருக்கின்றன. இவ் விருவகைப் பொருள்களுமே மொத்தப் பொருள்களின் நுகர்வில் 85 சதவீதமாக உள்ளன. ‘தேசிய மாதிரிக் கணக்கெடுப்பின்’ (National Sample Survey) புள்ளி விவரம் உணவுப் பொருள்களுக்கான தேவை நெகிழ்ச்சி 0.8 என்ற அளவில் இருப்பதாகக் குறிப்பிடுகின்றது. மக்கள் பெருக்கம் தலா நுகர்வின் உயர்வு ஆகியவற்றின் காரணமாகப் பண்ணைப் பொருள்களுக்கான தேவை ஆண்டுதோறும் 4.7 சதவீதம் அதிகரிக்கும்.

நான்காவது திட்டக் காலத்தில் வேளாண்மை உற்பத்தி தேவையைக் காட்டிலும் அதிகரிக்க வேண்டும். அப்பொழுது தான் உணவுத் தானியங்களின் இறக்குமதியைத் தவிர்க்க இயலும். எனவே, இக் காலத்தில் மொத்த வேளாண்மை உற்பத்தி ஆண்டுதோறும் 5 சதவீதம் என்ற அளவுக்கு உயர்தல் அவசியம். அஃதாவது, இதுவரை நாம் பெற்ற வேளாண்மை வளர்ச்சி வீதத்தைக் காட்டிலும் அடுத்த பத்தாண்டுகளில் பெற வேண்டிய வளர்ச்சி வீதம் உயர்வாக அமையவேண்டும். வேளாண்மை வளர்ச்சிக்கான கொள்கையை அதற்கேற்ப அமைத்தல் தேவையானது.

இந்தியத் திட்டங்கள் சிறப்பாக வரையப்பட்டாலும்கூட அவை வெற்றி பெருமைக்குச் செயல்படுத்துவதில் உள்ள குறைபாடுகளே அடிப்படைக் காரணமாகும். வேளாண்மையில் சில

அடிப்படை அமைப்புமுறை மாற்றங்களைச் செய்ய நிலச் சீர்திருத்தங்கள் தேவை. அதன் மூலம் கிராம மக்கள் பலருக்கும் நல் வாழ்வை அளிக்கலாம்.

கீழ்க்காணும் அட்டவணையில் 1980—81-ல் சாகுபடி நிலப்பரப்பு, சில முக்கியப் பயிர்களின் உற்பத்தி ஆகியன எந்த அளவில் இருக்குமென்று மதிப்பிடப்பட்டுள்ளது. 1168—69 - ன் புள்ளி விவரங்களோடு இவை ஒப்பிடப்பட்டுள்ளன.

**1968—69, 1980—18ஆம் ஆண்டுகளில் தெரிந்தெடுக்கப் பட்ட சில பயிர்களின் உற்பத்தியும், சாகுபடி நிலப்பரப்பும்[1]**

| | 1968-69 | | | 1980-81 | | |
|---|---|---|---|---|---|---|
| பயிர் | பரப்பு மில்லியன் ஹெக்டேர்களில் | ஒரு ஹெக்டேருக்கான உற்பத்தி (கிலோ கிராம்களில்) | உற்பத்தி மில்லியன் டன்களில் | பரப்பு (மில்லியன் ஹெக்டேர்களில்) | ஒரு ஹெக்டேருக்கான உற்பத்தி (கிலோ கிராம்களில்) | உற்பத்தி (மில்லியன் டன்களில்) |
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) |
| உணவுத் தானியங்கள் | 99.2 | 843 | 83.6 | 107.0 | 1389 | 148.6 |
| பருப்புகள் | 21.3 | 488 | 10.4 | 25.0 | 744 | 18.6 |
| எண்ணெய் வித்துகள் | 14.6 | 473 | 6.9 | 20.0 | 760 | 15.2 |
| கரும்பு | 2.46 | 4878 | 12.0 | 3.2 | 6875 | 22.0 |
| பருத்தி | 7.7 | 124 | 0.95 | 11.5 | 172 | 1.98 |

உணவுத் தானியங்களின் உற்பத்தியை 83.6 மில்லியன் டன்களிலிருந்து 148.6 மில்லியன் டன்களாக உயர்த்த வேண்டும். அது போன்றே பிற பயிர்களின் உற்பத்தியும் பெருக்கப்படவேண்டும். 1980—81-ல் பெறவேண்டிய உற்பத்திக் குறியிலக்குகள் உயர்வாக நிர்ணயிக்கப்பட்டுள்ளன. அக் குறியிலக்குகளை எவ்வாறு எட்டுவது என்பதே பிரச்சினையாக இருக்கின்றது. வேளாண்மைத் திட்டங்களில் வெற்றி பெற எல்லாப் பயிர்களிலும் ஓர் ஏக்கருக்கான உற்பத்தியைக் கூட்டவேண்டும். பயிர்ச் சாகுபடி முறைகளிலும் மாற்றங்கள் தேவை. பருப்பு வகைகள், எண்ணெய் வித்துகள், பருத்தி ஆகியவற்றின் உற்பத்தியைக் கூட்டுவது அவசியமாகின்றது.

[1] Fourth Five-Year Plan (Final), May 1970, p. 136.

1966–67-ல் 156.6 மில்லியன் ஹெக்டேர்களாக இருந்த சாகுபடி நிலப்பரப்பை 188 மில்லியன் ஹெக்டேர்களாக உயர்த்தத் திட்டமிடப்பட்டுள்ளது. அதாவது ஆண்டொன்றுக்கு 1.3 சத வீதம் என்ற அளவில் சாகுபடி நிலம் கூடவேண்டும். முதல் மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களிலும் இதே வீதத்தில் சாகுபடி நிலப்பரப்பைக் கூட்டுவதற்குக் கருதப்பட்டது. ஆனால், புதிய நிலங்களைச் சாகுபடிக்குக் கொண்டு வருவதற்கான வாய்ப்புகள் குறைவாகவே உள்ளன. மொத்த வேளாண்மை உற்பத்தியைக் கூட்டச் சாகுபடி நிலத்தை அதிகரிக்க வேண்டுமென்பது அவசியமில்லை. மாறாக ஆண்டொன்றுக்குப் பலமுறை சாகுபடி செய்யுமாறு விவசாயிகளைத் தூண்டலாம். பயிர்ச் சுழற்சி முறையின்மூலம் நிலவளம் காக்கப்படுவதோடு மொத்த உற்பத்தியின் அளவும் அதிகரிக்கும். புதிய நிலங்களைச் சாகுபடிக்கு எடுத்துக்கொண்டு பலபோகச் சாகுபடி முறையும் பின்பற்றப்பட்டால் மேலான நன்மைகளை எளிதில் பெறலாம்.

செறிவு முறையில் சாகுபடியைச் செய்வதன்மூலம் ஓர் ஏக்கருக்கான உற்பத்தியைப் பல மடங்கு பெருக்கலாம். ஆனால், அதற்கு அதிக நீர்ப்பாசன வசதிகள் தேவைப்படுகின்றன. சுழற்சி முறையில் சாகுபடி செய்வதற்கு ஏற்ப பயிர்கள் தேர்ந்தெடுக்கப்படவேண்டும். 1966–67-ல் நீர்ப்பாசன வசதிகளைப் பெற்றிருந்த சாகுபடி நில அளவு 32.8 மில்லியன் ஹெக்டேர்களாகும். இதை 1980–81 ஆம் ஆண்டுக்குள்ளாக 58 மில்லியன் ஹெக்டேர்களாக உயர்த்த நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன. சிறப்பான நீர்ப்பாசன வசதிகளைக் கொண்டில்லாத பகுதிகளில் பலபோகச் சாகுபடியையும், செறிவுமுறை உற்பத்தியையும் கைக்கொள்ள இயலாது. எனவே, நீர்ப்பாசன வசதிகளைப் பெற்றிருக்கின்ற இடங்களில்தான் உற்பத்தியைப் பெருக்குவதற்கான வாய்ப்புகள் அதிகமாக உள்ளன.

உற்பத்தி உயர நோய்களால் பாதிக்கப்படாத பயிர் வகைகள் கண்டுபிடிக்கப்படவேண்டும். பூமியின் வறட்சி நிலை எப்போதுமே தவிர்க்கப்படவேண்டும். பஞ்சம் தோன்றாமல் இருக்க இவ் விதமான பல நடவடிக்கைகளை எடுப்பது இன்றியமையாதது. புன்செய்ப் பயிர்களின் உற்பத்தியைக் கூட்ட தொழில் நுட்பம் வாய்ந்த சாகுபடி முறைகள் பின்பற்றப்படவேண்டும்.

சமீப காலமாக நாம் பசுமைப் புரட்சியால் வேளாண்மை உற்பத்தி பெருகி வருவதைக் காண்கிறோம். திட்டக்குழு உணவுத் தானியங்களின் உற்பத்தியைக் கணிசமான அளவுக்குக் கூட்ட

முடியும் என்று உறுதியாக நம்புகின்றது. ஆயினும், எண்ணெய் வித்துகள், பருப்பு வகைகள், பருத்தி அகியவற்றின் உற்பத்தியைக் கூட்டுவதில் சில சிக்கல்கள் அடங்கியுள்ளன. இவை சாகுபடி செய்யப்படுகின்ற நிலப்பரப்புக் குறைந்த அளவிலேயே உள்ளது. மேலும், உணவுத்தானியங்களின் உற்பத்தியைப் பெருக்கு வதற்கான நடவடிக்கைகளே அதிகமாக எடுக்கப்படுகின்றன. உணவுத் தானியங்களில்தான் ஆராய்ச்சிகளின் பயனால் அமோக விளைச்சலைத் தரக்கூடிய விதைகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. பிற வகைப்பட்ட பயிர்களின் உற்பத்திக்காக அதிக ஆராய்ச்சிகள் செய்யப்படவில்லை. தவிர, அப் பயிர்கள் உற்பத்தியாகின்ற இடங் களில் மழைப்பொழிவு குறைவாக உள்ளது. ஆகவே, அவற்றின் உற்பத்தியைக் கூட்டுவதும் கடினமாக இருக்கின்றது. பசுமைப் புரட்சியின் விளைவாக உணவுத் தானியங்களின் உற்பத்தியில்தான் நாம் அதிக அளவு வெற்றியைப் பெற்றுள்ளோம்.

வாணிபப் பயிர்களின் உற்பத்தியை அதிகரிக்க சரியான விலைக் கொள்கை அரசால் பின்பற்றப்படவேண்டும். வேளாண் மைப் பொருள்களின் உற்பத்தியைப் பெருக்குவதற்கான வாய்ப் புகள் இந்தியாவில் ஏராளமாக உள்ளன. இந்திய வேளாண்மையில் எண்ணற்ற சிக்கல்கள் இருப்பினும், அவற்றைத் தீவிரக் கொள்கை களைக் கைக்கொள்வதன்மூலம் தீர்க்கலாம். நிலச் சீர்த் திருத்தங்களைச் சரியாகச் செய்தால் கிராமப் புறங்களினின்றும் வறுமை மறைந்துவிடும்; எல்லாரும் நலமான வாழ்வைப்பெறு வார்கள் நிலவுடைமை முறைகளிலும், உற்பத்தி முறைகளிலும் சில அடிப்படை மாறுதல்கள் தேவைப்படுகின்றன. அவ் வடிப்படை மாற்றங்களைச் செய்ய நிலச் சீர்திருத்தங்களைச் செய்வது தவிர்க்க முடியாததாக இருக்கின்றது. கிராம மக்களின் வருமான உயர்வு, வேளாண்மை உற்பத்திப் பெருக்கம், மூலதனத் திரட்சி, தொழில் முன்னேற்றம் ஆகிய யாவும் நிலச் சீர்திருத்தங்களைச் சார்ந்தே அமையும்.

# 18. அரசும் வேளாண்மையும்

## (State and Agriculture)

வேளாண்மை அடிப்படைத் தொழிலாக இருப்பதால், அரசு அதில் அதிக அக்கறை கொள்ளவேண்டும். நீண்ட காலமாகவே உலகின் பல நாடுகள் வேளாண்மை வளர்ச்சியில் கவனத்தைச் செலுத்தி வருகின்றன; வேளாண்மையைச் சார்ந்தவர்களின் நிலையை உயர்த்த வேண்டியதன் அவசியநிலை உணரப் பட்டுள்ளது. இதற்கு வேளாண்மையில், அமைப்புமுறை மாற்றங்கள் தேவைப்படுகின்றன. அரசு வேளாண்மையில் சில அடிப்படை மாற்றங்களைத் தோற்றுவிக்க முன்வரவேண்டும். வறுமையை விரட்டுவதும், பசிப் பிணியைப் போக்குவதும் அரசின் கடமைகளாகும். இக் கடமைகளை நிறைவேற்ற மக்களின் நலம் காக்கும் ஒவ்வோர் அரசும் பாடுபடவேண்டும்.

வளரும் நாடுகளின் அரசுகள் பொருளாதார முன்னேற்றத்தை விரைவுபடுத்த விழைகின்றன. இதற்கான தீவிர நடவடிக்கைகளை அவை மேற்கொள்கின்றன. சுதந்திரமடைந்த பின்னர், இந்தியாவில் வேளாண்மை வளர்ச்சிக்கே முதல் முக்கியத்துவம் அளிக்கப்பட்டு வருகின்றது. பொருளாதார முன்னேற்றத்திற்கான திட்டங்களிலும் இந்த நிலையை உணர முடிகிறது. உணவுத் தானியங்களின் உற்பத்தியில் தன்னிறைவைப் பெற நாம் முயன்று வருகின்றோம். விவசாயிகளின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கான வழிமுறைகளும் பின்பற்றப்பட்டு வருகின்றன.

வேளாண்மையில் வளர்ச்சியைப் பெற அரசு நிலச்சீர்த் திருத்தங்களைச் செய்ய வேண்டியுள்ளது; உள்ளீட்டின் அளவை உயர்த்த வேண்டியிருக்கின்றது. உற்பத்தியை உயர்த்த நல்ல விதைகளும், உரங்களும், பூச்சிக்கொல்லி மருந்துகளும் பயன் படுத்தப்பட வேண்டும். தொழில் நுட்பம் வாய்ந்த வேளாண்மைக்

கருவிகள் இல்லாவிடில் உற்பத்தியை உயர்த்த இயலாது. போதுமான கடன் வசதிகளைப் பெருக்குவதும் அரசின் முக்கியப் பணிகளில் ஒன்று. நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்காவிட்டால் வேளாண்மை வளர்ச்சியைப் பெறுவது எவ்வழியிலும் சாத்தியமாகாது. கிராமப் புறங்களுக்கு மின்சார வசதியை அளிப்பதன் மூலம் பலதுறைகளின் முன்னேற்றத்தையும் ஒருங்கே பெறுவது எளிது.

விவசாயப் பண்ணை முறைகளில் உள்ள குறைபாடுகளை அரசு நீக்கவேண்டும். இந்தியா முதலிய மக்கள் தொகை மிக்க நாடுகளில் கூட்டுறவுப் பண்ணைகளை வளர்ப்பது நல்லது. அதனால், வேளாண்மையைச் சார்ந்த பலரும் நன்மை அடைவார்கள். அரசு, பரிசோதனை முறையால் கூட்டுறவுப் பண்ணையின் நன்மைகளைக் கிராம மக்களுக்கு உணர்த்தலாம். எல்லாத் துறை முன்னேற்றத்திற்கும் அடிப்படையாக அமைவது வேளாண்மையேயாகும். அரசு வேளாண்மையைத் திட்டமிட்டு வளர்க்க வேண்டும். கிராம மக்களை எழுத்தறிவுள்ளவர்களாக மாற்றுவது இன்றியமையாதது. ஆராய்ச்சி வசதிகளையும், பயிற்சி வசதிகளையும் பெருக்குவது நன்மை பயக்கும். அரசின் வேளாண்மைக் கொள்கை பொருளாதார வளர்ச்சி வீதத்தை உயர்த்துவதாக இருக்கவேண்டும்.

### ஆங்கிலேய ஆட்சிக்கு முன்னரிருந்த நிலைகள்

இந்தியா பாரம்பரிய வேளாண்மை முறையைக் கொண்டிருந்தது. நம் நாட்டில் ஆங்கிலேயரின் ஆட்சி முன்னரிருந்த பொருளாதார சமுதாய அமைப்புகள் தன்னிறைவுக் கிராமங்களையே தந்தன. அவ்வகைத் 'தேக்கச் சமநிலையையே' (Static Equilibrium) இந்தியா கொண்டுள்ளது.[1] இந்திய விவசாயிகள் எழுத்தறிவில்லாதவராக இருப்பினும் அனுபவ அடிப்படையில் பண்ணைச் சாகுபடி முறைகளை நன்கு அறிந்திருக்கின்றார்கள். அவர்களுக்கு வேளாண்மை வாழ்வைத் தருவதாக இருக்கின்றது. இந்திய வேளாண்மைமீதான ராயல் குழு (Royal Commisson on Agriculture in India), பின்வருமாறு குறிப்பிடுகின்றது. 'இந்திய விவசாயி குறிப்பிட்ட சூழ்நிலைகளுக்குத் தக்கவாறு தன்னை மாற்றிக்கொண்டு வாழ்கிறான். அவனுடைய உற்பத்தி முறைகள் அதிக இலாபத்தைத் தருவனவாக இல்லை. கிராமச் சமுதாய அமைப்பு முன்னேற்றத்திற்கு உதவுவதாக இருப்பதில்லை,

1 Nanavati and Anjaria, The Indian Rural Problem, 1960, p.130.

இந்த நிலை உலகின் பல வளராத நாடுகளிலும் அமைந்துள்ளது.'[1] தற்பொழுது வேளாண்மையில் தன்னிறைவிற்கான உற்பத்தி என்னும் நிலை மாறி வருகின்றது. தொழில் துறையின் வளர்ச்சியே இதற்கு முக்கியக் காரணமாகும். பல ஐரோப்பிய நாடுகளிலும் 'தொழில் புரட்சி' (Iudustrial Revolution) ஏற்பட்ட பின்னர், வேளாண்மையில் வியத்தகு மாற்றங்கள் தோன்றின.

## இந்திய வேளாண்மைக் கொள்கையின் தோற்றமும் வளர்ச்சியும்

இந்தியாவில் ஏகாதிபத்தியத்தைக் கொண்டிருந்த ஆங்கிலேய அரசு, தொடக்க காலத்தில் வேளாண்மை வளர்ச்சியில் அக்கறை கொண்டிருக்கவில்லை. கிழக்கிந்தியக் கம்பெனி வாணிபத்தை வளர்ப்பதிலும், நம் நாட்டின் வளங்களைச் சுரண்டுவதிலும் மட்டுமே விருப்புக் கொண்டிருந்தது. 1870 ஆம் ஆண்டு வரை வேளாண்மை வளர்ச்சிகான நடவடிக்கைகள் எடுக்கப்படவில்லை. அதற்குப் பின்னர், நாட்டில் பல பஞ்சங்கள் தொடர்ச்சியாகத் தோன்றின. அதன் காரணமாக அரசின் கவனம் வேளாண்மைக்குத் திரும்பியது. வேளாண்மை வளர்ச்சியின் அவசியத்தை அரசு உணர்ந்தது. வேளாண்மை வளர்ச்சிக்கான அரசின் கொள்கை இவ்வாறு தோற்றம் பெற்றது. 'பஞ்சக் குழுக்கள் (Famine Commissons) 1880, 1898, 1901ஆம் ஆண்டுகளில் அமைக்கப்பட்டன. நீர்ப்பாசனக் குழு (Irrigation Commission), 1903 ஆம் ஆண்டிலும் கூட்டுறவின்மீதான குழு 1915ஆம் ஆண்டிலும் ஏற்படுத்தப்பட்டன. 1866 ஆம் ஆண்டிலேயே பஞ்சக் குழு வேளாண்மைக்கான தனித் துறையை அரசு ஏற்படுத்தவேண்டுமென்று பரிந்துரைத்தது. அப்பொழுதிருந்த அரசு அதை ஏற்றுச் செயல்படுத்தவில்லை.

மிக நீண்ட காலம்வரை அரசு வேளாண்மைக் கொள்கையைக் கைக்கொள்வதில் அக்கறை கொண்டிருக்கவில்லை. 1857ஆம் ஆண்டில் கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆதிக்கம் நீங்கி ஆங்கிலேயரின் ஆட்சி தோன்றியது. இந்தியாவில் பொருளாதார முன்னேற்றத்தை ஏற்படுத்துவது ஆங்கிலேய அரசின் நோக்கமாக இல்லை. அரசியல் நிர்வாகத்தில் இணைப்பான நிலையைப் பெறுவதே அதன் முக்கியநோக்கமாக இருந்தது. 19ஆம் நூற்றுண்டின் இறுதி, 25 ஆண்டுகளில் ஏற்பட்ட பல கடும் பஞ்சங்களின் விளைவாக அரசு இந்திய வேளாண்மையில் இருந்திருந்த குறைபாடுகளைப்பற்றி ஆராய்வது அவசியமாயிற்று, நம் நாட்டின் வேளாண்மை வளர்ச்சிக்காக அரசு அமைத்த பஞ்சக் குழுக்கள் பல ஆலோசனை

1 Report of the Royal Commission Agriculture in India, 1928. p. 479.

களைப் பரிந்துரைத்தன. ஆனால், அப்போதைய அரசின் கொள்கை நிலவரி வசூலிப்பு, பஞ்ச நிவாரணம், தக்கவிக் கடன் அளிப்பது முதலியவற்றைச் சார்ந்தே இருந்தது.

1880ஆம் ஆண்டு நியமிக்கப்பட்ட பஞ்சக் குழுவின் பரிந்துரைகளாலும், லங்காஷயர் பருத்தி ஆலைத் தொழில் இந்தியாவில் நெட்டிழைப் பருத்தியை உற்பத்தி செய்வது அவசியம் என்று உணர்த்தியதாலும், அரசு 1884ஆம் ஆண்டில் வேளாண்மைக்கான தனித் துறையைத் தோற்றுவித்தது. அப் பஞ்சக் குழு, நம் நாட்டின் வேளாண்மை நிலைகளைப்பற்றி விரிவான ஆய்வைச் செய்தது. வேளாண்மை வளர்ச்சிக்கான பல சிறப்பான பரிந்துரைகளை அது தந்தது. அவற்றுள் நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்குவது, செய்தித் தொடர்பு வசதிகளை அதிகரிப்பது, நிலத்தின் மீதான உபரி மக்கள் தொகையை ஈர்ப்பதற்காகத் தொழில் துறையை வளர்ப்பது முதலியன முக்கியமானவையாக இருந்தன. அக் குழுவின் பிற பரிந்துரைகளாவன.

1. கடந்த காலத்தில் ஏற்பட்ட பஞ்சங்களின் நிலைகளை ஆய்வு செய்ய இந்திய அரசு வேளாண்மைத் துறையை ஏற்படுத்த வேண்டும். பஞ்ச நிவாரணத்திற்கான நிரந்தரத் தீர்வைக் காண அது உறுதியான, நிரந்தரமான கொள்கையைக் கைக்கொள்ள வேண்டும்.

2. வேளாண்மை . இயக்குநரின்கீழ்ச் செயல்படக்கூடிய வேளாண்மைத்துறை ஒவ்வொரு பிரதேசத்திலும் ஒரே சமயத்தில் தோற்றுவிக்கப்படவேண்டும். வேளாண்மைத் துறையில் இயக்குநரின்கீழ்ப் பலரும் பணியாற்றுவது அவசியம்.

3. நிலத்தை அடைமானமாகக் கொண்டு அரசு விவசாயிகளுக்குக் கடன் அளிக்கவேண்டும்.

4. விவசாயிகளின் கடன் நிலைகளைப்பற்றி ஆய்வு செய்ய அரசு தனி நீதி நீர்வாக அமைப்புகளைத் தோற்றுவிக்கவேண்டும். பெற்ற கடனைத் தவணை முறையில் திருப்பித் தர விவசாயிகளுக்கு உரிமைகள் வழங்கப்படவேண்டும்.

எனினும் அரசு, குழுவின் பரிந்துரைகளுக்கேற்ப உடனடி நடவடிக்கைகளை எடுக்கவில்லை.[1] அரசு பல கருத்தரங்குகளுக்கு ஏற்பாடு செய்தது; வெவ்வேறு பிரதேசங்களிலும் இருந்த நிலைகளைப் பற்றி ஆய்வு செய்தது. விவசாயிகளின் தேவைகளுக்கேற்ப முன்னேற்றத்தை எவ் வகையில் பெறலாம் என்பது ஆராயப் பட்டது.

1 Report, Op. cit., pp. 17—18.

1880 ஆம் ஆண்டின் பஞ்சக் குழு பெரும்பகுதி மக்கள் தொகை வேளாண்மையை முக்கியத் தொழிலாகக் கொண்டிருப்பது முன்னேற்றத்திற்குத் தடையாக அமையும் என்று கூறியது. அக் குறைபாட்டைத் தவிர்க்கப் பல வகைத் தொழில்களையும் வளர்க்கவேண்டுமென்று அது கருத்துத் தெரிவித்தது.

### ஓல்கெர் அறிக்கையும் (Voelcker's Report) 1905 ஆம் ஆண்டு வரையிலான வேளாண்மைக் கொள்கையும்

ராயல் வேளாண்மைச் சங்கத்தின் (Royal Agricultural Society) ஆலோசகராகப் பணியாற்றிய டக்டர் ஜே. ஏ ஓல்கெர் (Dr. J.A. Voelcker) என்ற 'வேதியியல் நிபுணர்' (Chemist) 1889 ஆம் ஆண்டில் இந்தியாவிற்கு ஆங்கிலேய அரசால் அனுப்பப் பட்டார். அதன் பின்னர்க் குறிப்பிடத்தக்க மாற்றங்கள் இந்திய வேளாண்மையில் தோன்றின. இந்திய வேளாண்மையில் எவ்வித உற்பத்தி முறைகளைப் பின்பற்றலாம் என்பது பற்றிய ஆலோசனை களைக் கூறவே அவர் இங்கு வந்தார். அவர் நாட்டின் பல பகுதி களிலும் விரிவான பயணத்தை மேற்கொண்டார். இந்திய வேளாண்மை வளர்ச்சிக்கான அறிக்கையையும் அவர் சமர்ப் பித்தார். இந்திய விவசாயிகளின் விவேகத்தை அவர் பெரிதும் புகழ்ந்துரைத்தார். ஓல்கெர் குறிப்பிட்டதாவது, 'இந்தியச் சாகு படியாளர் தம்முடைய சக்திக்கேற்ப பாடுபடுகின்றனர். சில நிலைகளில் அவர்கள் ஒரு சராசரி ஆங்கிலேயச் சாகுபடியாளரை விடத் திறமையாகப் பணிபுரிகின்றனர்' என்பது.

இங்கிலாந்து அரசின் இந்தியாவிற்கான செயலாளராக (Secretary) இருந்தவர், ஓல்கெரை இந்தியாவிற்கு அனுப்பினார். 1891வரை அவர் இந்தியாவின் பல இடங்களுக்கும் சென்று நிலைகளை அறிந்தார். அப்போதைய இந்திய விவாசயிகளின் சாகுபடி முறைகளை ஓல்கெர் மிகத் தாழ்வானவை என்று கருத வில்லை. இந்தியாவின் சூழ்நிலைகளுக்கும், நில அமைப்பிற்கும் அவையே ஏற்றவை என்று அவர் குறிப்பிட்டார். இந்திய வேளாண்மையின் வேறுபாடுகளுக்கு மூன்று காரணிகள் காரண மாகத் திகழ்ந்தன என்று அவர் கூறினார். அக் காரணிகளாவன,

1. சாகுபடி செய்யும் வகுப்பினரிடையே இயல்பாகவே வேறு சில வேறுபாடுகள் அமைந்துள்ளன. குறிப்பிட்ட சில சாதியினரோ, அல்லது பிரிவினரோ வேளாண்மைச் சாகுபடியில் ஈடுபடு கின்றனர். பிறவகைத் தொழில்களில் அவர்கள் ஈடுபடுவதே இல்லை.

2. கீழ்க்காணும் புறச் சூழ்நிலைகளாலும் வேறுபாடுகள் அமைகின்றன. அவை, (அ) நில அமைப்பு, தட்பவெப்ப நிலை, தண்ணீர் வசதி, உரங்கள் கிடைக்கும் நிலை முதலிய இயற்கைக் காரணிகள்; (ஆ) மக்கள்தொகை அடர்த்தி, வாழ்க்கைமுறை, குடும்ப அமைப்பு முறை, அரசியல் நிலை முதலிய பொருளாதார, சமுதாயக் காரணிகள் என்பனவாம்.

3. விஞ்ஞான அறிவு வளராமையை நாட்டின் வெவ்வேறு பகுதிகளிலும் மாறுபாடான சாகுபடி முறைகள் அமைந்திருப்பதிலிருந்தே அறிந்து கொள்ளலாம். வேளாண்மையில் வேறுபாடுகள் இதன்மூலமும் எழுகின்றன என்பனவாம்.

சில வேறுபாடுகள் சமுதாய அமைப்பின் குறைபாடுகளால், இந்திய வேளாண்மையில் வேரூன்றி உள்ளன என்று ஓல்கெர் குறிப்பிட்டார். அவற்றில், முன்னேற்றத்தை ஏற்படுத்துவது கடினமானது. பிற வேறுபாடுகளைக் களைந்து முன்னேற்றத்தைப் பெற முடியும் என்று அவர் கருத்துத் தெரிவித்தார். நிலவுடைமை முறைகளின் குறைபாடுகள், மூலதனப் பற்றுக்குறை, கிராமக் கடன் நிலை, சிறிய அளவு நிலவுடைமைகள் ஆகியனவே இந்திய வேளாண்மை உற்பத்தி குறைவாக உள்ளமைக்கான காரணங்கள் என்று அவர் அறிவுறுத்தினார்.

அவரது அறிக்கையில் நில அமைப்பு, வனப் பகுதிகள், கால்நடைப் பராமரிப்பு, கிராமக் கல்வி, ஆராய்ச்சி, புள்ளிவிவரங்களைச் சேகரித்தல், உரங்கள், விதைகள் ஆகிய பல நிலைகளைப்பற்றி ஆய்வு செய்யப்பட்டிருந்தது. உபயோகமான பல பரிந்துரைகளை அவர் அளித்தார். இந்திய வேளாண்மை நடவடிக்கைகளில் ஆராய்ச்சி செய்து முன்னேற்றத்தைக் காண்பது அவசியம் என்று அவர் குறிப்பிட்டார். அவரது பிற பரிந்துரைகள் பின்வருமாறு இருந்திருந்தன.

1. நிலவுடைமை முறைகளின் குறைபாடுகளை நீக்குதல்;

2. அரசின் முதலீடு, தனியார் முதலீடு ஆகியவற்றின்மூலம் வேளாண்மை வளர்ச்சியைப் பெறுவது;

3. உரங்களைச் சிறப்பாகப் பயன்படுத்துவது;

4. வன வளத்தைப் பாதுகாப்பது;

5. அதிக எண்ணிக்கையில் மரங்களை வளர்ப்பது;

6. பொதுக்கல்வி, வேளாண்மைக் கல்வி ஆகியவற்றில் முன்னேற்றத்தைப் பெறுவது;

7. கால்வாய்ப் பாசனத்தையும், பிற நீர்ப்பாசன வசதிகளையும் பெருக்குவது;

8. நல்லினக் கால்நடைகளைப் பரப்புவது;

9. அரசு 'தக்கவிக் கடன்களை' (Taccavi Loans) விவசாயிகளுக்கு அளிப்பது.

அவர் அப்பொழுது குறிப்பிட்ட பரிந்துரைகள் இன்றைய இந்திய வேளாண்மைக்கும் பொருந்துகின்றன.

வேளாண்மைக் கல்வியைப் பரப்ப எளிய முறையில் புத்தகங்கள் வெளியிடப்படவேண்டும் என்று ஓல்கெர் கூறினார். மேலும், தேவையான இடங்களில் நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்க வேண்டும். கிணறுகள் தோண்டுவதற்குத் தக்கவிக் கடன்கள் தரப் படவேண்டும்; உடல் வலிமை மிக்கவர்கள் அப்பணியில் ஈடுபடுத்தப்படவேண்டும். ஒவ்வொரு மாவட்டத்திற்கும் எந்த அளவுக்கு நீர்ப்பாசன வசதி தேவைப்படுகிறது என்பதை வேளாண்மைத் துறை விசாரணையால் அறியவேண்டும். மாட்டுத் தீவனங்களைச் சேமித்து வைக்கவேண்டும். இருப்புப் பாதைகளின் ஓரங்களிலும், கால்வாய்களின் கரைகளிலும் மரங்களை நடவேண்டும். பரிசோதனை ஆராய்ச்சிகளைத் தொடர்ந்து செய்யவேண்டும். புதிய பயிர்கள், உரங்கள், உற்பத்தி முறைகள் ஆகியவற்றை வேதியியல் விஞ்ஞானத்தால் கண்டறிந்து பரப்பவேண்டும். அரசின் பரிசோதனைப் பண்ணைகளில் புதிய முறைக் கருவிகளைப் பயன்படுத்த வேண்டும். உற்பத்தி உயர்வுக்கு உகந்ததென்று அங்கீகரிக்கப் பட்ட கருவிகளை விவசாயிகளுக்கு அளிக்கவேண்டும். வேளாண்மைப் பண்ணைகளுக்குத் தேவையான விதைகள் பகிர்வு செய்யப் படவேண்டும். அரசின் பண்ணைகளில் நல்லினக் கால்நடைகளின் விருத்திக்கான உயர்ரகக் காளைகளையும், எருதுகளையும் பயன் படுத்த வேண்டும் என்ற பரிந்துரைகளையும் அவரே தந்தார்.

1890ஆம் ஆண்டில் சிம்லாவில் நடைபெற்ற வேளாண்மைக் கருத்தரங்கில் டாக்டர் ஓல்கெர் கலந்து கொண்டார். அக் கருத்தரங்கு முக்கியமான இரண்டு முடிவுகளை அங்கீகரித்தது.

முதலாவதாக, வேளாண்மைக் கல்வி, விஞ்ஞான ஆய்வு ஆகியவற்றின்மூலம் இந்திய விவசாயத்தை முன்னேற்றம் பெறச் செய்வதற்கான வாய்ப்பு இருக்கின்றது.

இரண்டாவதாக, விஞ்ஞான ரீதியான ஆய்வைச் செய்வதற்குத் தனித்தேர்ச்சி பெற்ற ஒருவர் தேவை.

இம் முடிவுகளின் விளைவாக இந்திய அரசு வேளாண்மை வேதியியல் நிபுணர் ஒருவரை நியமித்தது. வேளாண்மைச் சிக்கல்களுக்குத் தீர்வு காணவே அவர் நியமிக்கப்பட்டார். அதற்கான ஆராய்ச்சிகள் அவருடைய தலைமையின்கீழ்ச் செய்யப்பட்டன. வேறு வழிகளில் முன்னேற்றத்தைப் பெறுவதும் அவசியம் என்று உணரப்பட்டது. 1901ஆம் ஆண்டில் வேளாமைக்கான இன்ஸ்பெக்டர்—ஜெனரல் நியமிக்கப்பட்டார். அச் சமயத்தில் சிக்காகோவைச் சேர்ந்த திரு. ஹென்றி ஃபிலிப்ஸ் (Henry Philipps) என்பவர், இந்தியாவில் பொது நன்மைக்கான விஞ்ஞான ஆராய்ச்சிகளைச் செய்யக் கர்ஸான் பிரபுவிடம் ரூ. 5,30,000 அன்பளிப்பாகத் தந்தார். இந்த அன்பளிப்பு 'பூசா ஆராய்ச்சிக் கூடத்தை' (Pusa Research Institute) ஏற்படுத்தப் பயன்படுத்தப்பட்டது. அதன் பின்னர், வேளாண்மை இன்ஸ்பெக்டர் ஜெனரல் என்ற பதவிக்குப் பதிலாகப் பூசா வேளாண்மை ஆராய்ச்சிக் கூட இயக்குநர்ப் பதவி ஏற்படுத்தப்பட்டது. 1929ஆம் ஆண்டுவரை அவ் வியக்குநரே இந்திய அரசின் வேளாண்மை ஆலோசகராகவும் இருந்தார். அவ் வாராய்ச்சிக் கூடம் பீஹார் மாநிலத்தில் பூசா என்னுமிடத்தில் 1903ஆம் ஆண்டில் தோற்றுவிக்கப்பட்டது. அங்கு ஆராய்ச்சிக்கு வேண்டிய எல்லா வசதிகளும் இருந்தன. பரிசோதனைமுறைப் பண்ணையும், கால்நடைப் பண்ணையும் அங்கு ஏற்படுத்தப்பட்டிருந்தன. 1908ஆம் ஆண்டில் அவற்றோடு வேளாண்மைக் கல்லூரி ஒன்று தொடர்பு படுத்தப்பட்டது. வேளாண்மை உயர்கல்வி அக் கல்லூரியில் போதிக்கப்பட்டது.

பூசாவில் ஏற்படுத்தப்பட்ட மத்திய ஆராய்ச்சிக் கூடம் கீழ்க்காணும் பணிகளை ஆற்றுவதற்காகத் தோற்றுவிக்கப்பட்டது.

1. வேளாண்மை ஆராய்ச்சியின் பயனை இந்தியா முழுவதும் பரப்புவது; ஆராய்ச்சியின் நன்மைகளை நிரூபித்துக் காட்டுவது;

2. பிற பிரதேசங்களின் இவ் வகை ஆராய்ச்சி நிறுவனங்களுக்கு மாதிரியாக அமைவது;

3. வேளாண்மை ஆராய்ச்சிக்கான திட்டங்களைத் தொடங்குவது;

4. புதிய வகைப் பயிர்களையும், புதிய உற்பத்தி முறைகளையும் கண்டறிவது;

5. எல்லாப் பிரதேசங்களிலும் வெற்றியளிக்கக் கூடிய பரிசோதனைகளைத் தொடர்ந்து செய்வது.

1905ஆம் ஆண்டில் ஒவ்வொரு மாநிலத்திலும் வேளாண்மை வளர்ச்சிக்கான ஆராய்ச்சியை மேற்கொள்ள ஒரு நிறுவனமாவது ஏற்படுத்தப்படவேண்டுமென்று உணரப்பட்டது. அதிக விளைச்சலைத் தரக்கூடிய உற்பத்தி முறைகளைக் கைக்கொள்வது அவசியமென்று அறியப்பட்டது. நாட்டின் பல பகுதிகளுக்கிடையே நில அமைப்பு, நில வளம், நிலத் தன்மை, தட்பவெப்ப நிலை ஆகியன வேறுபடுகின்றன. ஒரு பகுதியில் பொருந்தக் கூடிய உற்பத்தி முறை, வேறொரு பகுதிக்குப் பொருத்தமில்லாமல் இருக்கக்கூடும். 1901 ஆம் ஆண்டு முதல் அமைக்கப்பட்ட பல பஞ்சக் குழுக்களும் வேளாண்மைத் துறையின் ஆராய்ச்சிப் பிரிவை வலுப்படுத்த வேண்டியதன் அவசியத்தை உணர்த்தின. ஆராய்ச்சியின் நன்மைகளை வேளாண்மைச் சிக்கல்களைத் தீர்ப்பதற்குப் பயன்படுத்தவேண்டும்; திறமையான ஆராய்ச்சி தற்காலத்திற்கு அவசியமானது என்று அக் குழுக்கள் கருதின. பரிந்துரைகளின் விளைவாக 1905 ஆம் ஆண்டில் மத்திய நிலையிலும், மாநில அளவுகளிலும் வேளாண்மைத் துறைகள் மாற்றியமைக்கப்பட்டன. அந்த நடவடிக்கைகளால் இந்திய வேளாண்மை பயனடைந்தது; புதிய உற்பத்தி முறைகள் பரவின.

'அகில இந்திய வேளாண்மை வாரியம்' (All India Board of Agriculture), 1905ஆம் ஆண்டில் தோற்றுவிக்கப்பட்டது. மாநிலத் துறையின் நடவடிக்கைகளை இணைப்பதற்காகவே அஃது ஏற்படுத்தப்பட்டது. 1919ஆம் ஆண்டின் சீர்திருத்தங்களுக்குப் பின்னர், வேளாண்மைபற்றிய முழு பொறுப்பும் மாநில அமைச்சரைச் சார்ந்து இருந்தது.

1905ஆம் ஆண்டு வரையிலான காலத்தில் அரசு வேளாண்மை வளர்ச்சிக்கான சில நேரடி நடவடிக்கைகளை எடுத்தது. இந்திய அரசின் வேளாண்மை வேதியியல் நிபுணராக டாக்டர் ஜே. டபிள்யு. லீதர் (Dr. J. W. Leather) நியமிக்கப்பட்டார். 1885 ஆம் ஆண்டிற்கும் 1899ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் பல பஞ்சங்கள் ஏற்பட்டன. 1904ஆம் ஆண்டில் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டம் (Co-operative Societies Act) நிறைவேற்றப்பட்டது. 1905ஆம் ஆண்டு பிரதேச வேளாண்மைத் துறைகள் விரிவாக்கப்பட்டன. ஜனவரி 1902ல் கர்ஸான் பிரபு அரசின் நிலவரிக் கொள்கையை வெளியிட்டார். 1905ஆம் ஆண்டிற்குள் அரசின் வேளாண்மைக் கொள்கையில் பலவித

மாற்றங்கள் தோன்றின. வேளாண்மைத் துறையில் சில சீர்திருத் தங்கள் செய்யப்பட்டன. அவை யாவும் வேளாண்மைப் பொரு ளாதாரத்தில் கணிசமான அளவு முன்னேற்றத்தைக்கூட தோற்று விக்கவில்லை.

## 1905 முதல் 1929 வரையிலான வேளாண்மைக் கொள்கை

டாக்டர் ஜே. ஏ. ஓல்கெர் குறிப்பிட்ட பரிந்துரைகளின் அடிப் படையில் இந்திய வேளாண்மை முன்னேற்றத்திற்கான சில நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. பல பிரதேசங்களிலும் தோற்றுவிக்கப்பட்டிருந்த வேளாண்மைத் துறைகள் வலுவாக்கப் பட்டன. பல பிரதேச அரசுகள், போதுமான புள்ளி விவரங்கள் கிடைக்காமையால் வேளாண்மை முன்னேற்றப் பணிகளைச் சிறப் பாகச் செய்ய முடியவில்லை. வேளாண்மை வளர்ச்சிக்கான பணி களில் அவை தனித்தனியே ஈடுபட்டிருந்தன. 1919ஆம் ஆண்டில் செய்யப்பட்ட சீர்திருத்தங்களின் விளைவாக வேளாண்மை, கூட்டுறவு, உள்ளாட்சித் துறை, பொது ஆரோக்கியம், சுகாதாரம் முதலிய பணிகளைச் செய்யும் உரிமைகள் பிரதேசங்களுக்கு மாற்றி யளிக்கப்பட்டன. எனினும், மத்திய வரி வருவாய் மூலம் பெறப் படும் நிதி, வேளாண்மை ஆராய்ச்சிக்குக் கிடைத்தது. மத்திய நிறுவனங்களில் பணியாற்றும் உழைப்பாளர்களுக்குப் பயிற்சி யளிக்கவும் அந்த நிதி பயன்படுத்தப்பட்டது. பிரதேசங்களுக்குத் தேவையான அளவில் நிதி கிடைக்கவில்லை. இவ்வித நடவடிக் கைகள் பலவும் நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்கவே உதவின.

## வேளாண்மை மீதான ராயல் குழு 1926—1928

இந்திய வேளாண்மையின் நிலைகளையும், பிரச்சினைகளையும் விரிவான ஆய்வின் மூலம் கண்டறிய 1926ஆம் ஆண்டில் ராயல் குழு அமைக்கப்பட்டது. வேளாண்மை நிலை, கிராமப் பொருளா தார நிலை ஆகியவற்றைப்பற்றி ஆய்வு செய்து அறிக்கை சமர்ப் பிக்குமாறு அதனிடம் கேட்டுக்கொள்ளப்பட்டது. வேளாண்மை வளர்ச்சிக்கும், கிராம மக்கள் நலமான வாழ்வைப் பெறுவதற்கும் அது சில வழிமுறைகளைப் பரிந்துரைத்தது. அக் குழு பின்வரும் நிலைகளை ஆய்வதற்காக ஏற்படுத்தப்பட்டது.

1. 'வேளாண்மை, கால்நடை ஆராய்ச்சி முன்னேற்றத்திற் கான நடவடிக்கைகளை எடுப்பது; பரிசோதனையைக் கைக் கொள்வது; பரிசோதனை முறைகளின்மூலம் நன்மைகளை மக்க ளுக்கு உணர்த்துவது; கல்வியைப் பரப்புவது; வேளாண்மைப் புள்ளி விவரங்களைச் சேகரிப்பது; சாகுபடி நடவடிக்கைகளில்

முன்னேற்றம் பெறச் செய்வது; பால் பண்ணைகளை வளர்ப்பது. நல்லினக் கால்நடைகளைப் பரப்புவது;

2. வேளாண்மைப் பொருள்களை விற்பனை செய்வதற்கான போக்குவரத்துகளின் தன்மைகள்பற்றி அறிவது;

3. வேளாண்மை நடவடிக்கைகளின் முறைகள், விவசாயிகள் கடனைப் பெறும் வழிகள்பற்றி அறிவது;

4. வேளாண்மையைச் சார்ந்துள்ள மக்களின் நலத்தையும். கிராமப் பொருளாதார முன்னேற்றத்தையும் தடை செய்யும் காரணிகள்பற்றி அறிவது என்பனவாம்.

நிலவரிச் சிக்கலும், நிலவுடைமைமுறைச் சிக்கலும் முக்கிய மானவை. ஆனால், இவற்றைப்பற்றி ஆய்வு செய்யுமாறு ராயல் குழுவிடம் பணிக்கப்படவில்லை. சில முக்கிய வேளாண்மைப் பிரச்சினைகளைப்பற்றி ஆராயவே அஃது அமைக்கப்பட்டது.

ராயல் குழு தனது விளக்கமான அறிக்கையை 1928ஆம் ஆண்டில் சமர்ப்பித்தது. இந்திய வேளாண்மைச் சமுதாயத்தின் நலத்தைப் பாதிக்கக்கூடிய பல நிலைகளையும் அது குறிப்பிட்டது. நாட்டின் கிராமப் பொருளாதாரத்தில் முன்னேற்றத்தைப் பெற வேளாண்மையை வளர்ப்பது இன்றியமையாதது என்று உணரப் பட்டது. விவசாய வளர்ச்சியைப் பெறவேண்டும் என்ற பொது வான ஊக்கம் பிறந்தது. ராயல் குழு அரசின் கடமையைப் பின் வருமாறு உணர்த்தியது. 'அரசு முன்னேற்றத்திற்கான தொடக்க நடவடிக்கைகளை எடுக்கவேண்டும். இதை உறுதியோடு கூற நாங்கள் தயங்கமாட்டோம்' என்பதே அது. அக் குழு புதிய முறை வேளாண்மைக் கொள்கையைக் கைக்கொள்ள வேண்டியதன் அவசியத்தை அறிவுறுத்தியது. இந்திய வேளாண்மைச் சிக்க லுக்குத் தீர்வுகாணவும், இந்தியக் கிராம வாழ்வை மேம்படுத்தவும் புதிய கொள்கை உதவுமென மேலும் அது கூறியது.

வேளாண்மை ஆராய்ச்சி அமைப்பை ஏற்படுத்த வேண்டுமென ராயல் குழு குறிப்பிட்டது. அதனால், 1929ஆம் ஆண்டில் வேளாண்மை ஆராய்ச்சிக்கான இம்பீரியல் குழு அமைக்கப் பட்டது. விவசாயப் பிரச்சினைகளுக்கு இணைப்பான தீர்வு காணவே இஃது ஏற்படுத்தப்பட்டது. இதன் முக்கியப்பணி வேளாண்மை ஆராய்ச்சியை நாடு முழுவதும் பரப்புவதாகும். அது வேளாண்மை, கால்நடை ஆகியவற்றைப்பற்றிய எல்லா விவரங்களையும் அளிப்பதாக இருந்தது. ஆராய்ச்சிப் பணியாளர் களுக்கான வசதிகளையும் அதுவே செய்ய வேண்டியிருந்தது.

எல்லாப் பரிந்துரைகளிலும் ஆராய்ச்சி அமைப்பை ஏற்படுத்துவதே மிக முக்கியமானது என்று அது கருதியது.

அக்டோபர் 1928-ல் சிம்லாவில் நடைபெற்ற கருத்தரங்கில் குழுவின் பரிந்துரைகள் பரிசீலிக்கப்பட்டன. கிராமப் புனரமைப்புக்காகவும், வேளாண்மை வளர்ச்சிக்காகவும் குழுவின் பரிந்துரைகள் ஏற்றுக்கொள்ளப்பட்டன. குழுவின் விசாரணையில் நிலவரி, நிலவுடைமைமுறை ஆகிய பிரச்சினைகள் ஆராயப்படவில்லை. இவை இரண்டும் இந்திய வேளாண்மையில் உள்ள அடிப்படைச் சிக்கல்களாகும். ராயல் குழு 1928ஆம் ஆண்டில் வெளியிட்ட விளக்கமான அறிக்கையில் சாகுபடி நிலங்கள் உட்பிரிவுபடுத்தப்பட்டிருத்தல், கால்நடை முன்னேற்றம் நீர்ப்பாசனம், விற்பனை வசதி, கூட்டுறவு, கிராமக் கல்வி, கிராமப் புனரமைப்பு முதலியன பற்றிக் குறிப்பிடப்பட்டிருந்தது. பொதுவாகக் கூறுமிடத்துப் பரிந்துரைகளின் நோக்கம் வேளாண்மை உற்பத்தித் திறனைப் பெருக்குவதாகும்.

வேளாண்மை வளர்ச்சிக்கான தொடக்க நடவடிக்கைகளை அரசு எடுக்க வேண்டும்; விவசாயிகள் பரந்த நோக்குக்கொண்டவர்களாக மாற வேண்டும். இதன் மூலமே வேளாண்மையை இலாபகரமான தொழிலாக மாற்ற முடியும் என்று ராயல் குழு தெரிவித்தது. ஓரே சமயத்தில் வேளாண்மையில் உள்ள பல சிக்கல்களுக்கும் தீர்வு காணவேண்டும் என்று அஃது அறிவுறுத்தியது. விவசாயிகளின் உற்பத்தித் திறனை அதிகரிப்பதோடு, அவர்களைப் பரந்த கண்ணோட்டத்தைப் பெற்றவர்களாகவும் ஆக்க வேண்டும். முன்னேற்றத்திற்கான தொடக்க நடவடிக்கைகளை எடுப்பது அரசின் கடமை என்று கூறப்பட்டது.

## 1929 முதல் 1939 வரையிலான வேளாண்மைக் கொள்கை

1929ஆம் ஆண்டில் உலகப் பொருளாதாரப் பெருமந்தம் தோன்றியது. அஃது இந்திய வேளாண்மையையும் பாதித்தது. அரசு முன்னேற்ற நடவடிக்கைகளைத் தொடங்குவதற்கு முன்னரேயே மந்தநிலையில் வேளாண்மை பாதிக்கப்பட்டது. தொழில் பொருள்களைக் காட்டிலும் வேளாண்மைப் பொருள்களின் விலைகள் மிகவும் குறைந்தன. தொழில் முன்னேற்றத்தைப்பெற்ற நாடுகள் பொருளாதாரப் பெருமந்தத்தால் பெருமளவுக்குப் பாதிக்கப்படவில்லை. மந்த நிலை வேளாண்மையை முக்கியத் தொழிலாகக் கொண்ட பொருளாதாரங்களை அதிக அளவுக்குப் பாதித்தது. இந்தியாவில் 1929—30-ஆம் ஆண்டில் பெறப்பட்ட

மொத்த வேளாண்மை வருமானத்தில் சுமார் 50 சதவீதம் மட்டுமே 1933—34 ஆம் ஆண்டில் பெறப்பட்டது. வருமானக் குறைவு ஏற்பட்டமையால் விவசாயிகளின் வாழ்க்கைத் தரமும் தாழ்வுற்றது. கிராமக் கடன் அளவும் கூடியது. அச் சமயத்தில் வேளாண்மைச் சிக்கல்களைத் தீர்ப்பதற்கான சாதாரண நடவடிக்கைகள் மட்டுமே எடுக்கப்பட்டன. சிக்கல்கள் யாவற்றையும் முழுமையாகத் தீர்ப்பதற்கான வழிமுறைகள் பின்பற்றப்படவில்லை. பிற நாடுகளைப் போலன்றி, இந்திய அரசு பொதுப் பணித்திட்டங்களின் செலவை 25 சதவீதம் குறைத்தது.

**ரஸ்ஸெல்-ரைட் விசாரணை (Russell-Wright Enquiry, 1936-37)**

வேளாண்மை மீதான ராயல் குழுவின் பரிந்துரைகளை ஆய்வு செய்வதற்காக வேளாண்மை ஆராய்ச்சி இம்பீரியல் கவுன்சில் (Imperial Council of Agricultural Research) ஏற்படுத்தப்பட்டது. எதிர்காலப் பணிகளை நிறைவேற்றுவதற்கான கருத்துகளை அறிய இங்கிலாந்தினின்றும் சர் ஜான் ரஸ்ஸெல் (Sir John Russell), டாக்டர் என்.சி. ரைட் (Dr. N. C. Wright) ஆகிய இரு நிபுணர்கள் வரவழைக்கப்பட்டனர். இம்பீரியல் கவுன்சில் எவ்வாறு செயல்படுகிறது என்பதை அவர்கள் ஆய்வு செய்தனர். ஆராய்ச்சிப் பணியாளருக்கும், சாகுபடியாளருக்கும் நடுவேயுள்ள இடைவெளியைக் குறைப்பதற்கான பரிந்துரைகளை அவர்கள் தந்தனர். ஆராய்ச்சியின் பயன்கள் சாகுபடியாளர்களை அடையவேண்டுமென்று அவர்கள் குறிப்பிட்டனர்.

வேளாண்மைக் குழு 'இந்திய வேளாண்மை ஆராய்ச்சிக் கவுன்சிலின்' பணிகளை வெவ்வேறு காலங்களிலும் மேற்பார்வையிடத் திறமையாளர்களை நியமிக்கவேண்டுமென்று பரிந்துரைத்தது. பயிர்களின் உற்பத்திபற்றிய கவுன்சிலின் பணிகளை ரஸ்ஸெல் ஆய்வு செய்தார். ஆராய்ச்சியின் நன்மைகளை விவசாயிகளுக்கு அளிப்பதற்கான நல்ல முறைகளை அவர் குறிப்பிட்டார். பயிர்ப் பூச்சிகளைக் கொல்லும் முறைகள், பால் பண்ணை ஆராய்ச்சித் திட்டங்கள், வாணிபப் பயிர்களை உற்பத்தி செய்வதன் அவசியம், தரம்மிக்க விதைகளை வழங்குவதற்கான அமைப்புகளை ஏற்படுத்துதல், நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்குவது, மத்திய நீர்ப்பாசன நிலையத்தை (Central Irrigation Station) ஏற்படுத்துவது, நிலப் பாதுகாப்புக் குழு (Soil Conservation Committee), பயிர்க் காப்புக் குழு (Crop Protection Committee) ஆகியவற்றைத் தோற்றுவிப்பது முதலிய பரிந்துரைகளும் அவர்களால் தரப்பட்டன.

டாக்டர் ரைட் கால்நடை முன்னேற்றம், பால் பண்ணைத் தொழில் வளர்ச்சி ஆகியவற்றில் கவனம் செலுத்த வேண்டுமென்றார். ஆண்டுதோறும் பால் உற்பத்தியை இரு மடங்காவது பெருக்க வேண்டுமென்று அவர் வலியுறுத்தினார். கல்வி, ஆலோசனைப் பணிகள் வளர்வதும், ஆராய்ச்சி முறைகளை மாற்றியமைத்து முன்னேற்றத்தைப் பெறுவதும் அவசியமானவை என்று சொல்லப் பட்டது. எல்லாப் பிரதேசங்களிலும் பால் பண்ணை முன்னேற்ற அலுவலர்கள் நியமிக்கப்படவேண்டும். பால்பண்ணை வளர்ச்சிக் கான பயிற்சி வசதிகள் பெருக வேண்டும், பிரதேசஅளவில் ஆலோ சனைப்பணிகள் அளிக்கப்படவேண்டும், பால்பண்ணை ஆராய்ச்சிக் கான நிறுவனங்கள் முக்கியமான இடங்களில் ஏற்படுத்தவேண்டும் என்பனவாகிய பரிந்துரைகளையும் அவர் அளித்தார். பரிசோதனை முறைப் பண்ணைகளை ஏற்படுத்தி அவற்றின் நன்மைகளை மக்கள் அறியுமாறு செய்யவேண்டும். பால் உற்பத்தியை அதிகரிக்க நல்லினக் கால்நடைகளைப் பரப்பவேண்டும் என்றும் அவர் கருத்துத் தெரிவித்தார். கலப்புப் பண்ணை முறைகளைக் கைக்கொள்வதன் மூலம் விவசாயிகளின் வருமானம் உயரும். கால்நடை மருத்து வத்தை வளர்ப்பதும் அவசியமானதென்று டாக்டர் ரைட் குறிப் பிட்டார்.

## இரண்டாவது உலகப் போர்க் காலத்தில் வேளாண்மைக் கொள்கை

இரண்டாவது உலகப் போர்க் காலத்தில், போரின் காரணமாக வசதிகளைத் திரட்டுவது அவசியமானதாக இருந்தது. வசதிகளைத் திரட்ட வேளாண்மைத் துறையும், தொழில் துறையும் பயன்படுத் தப்பட்டன. அரசு வேளாண்மை வளர்ச்சியில் கவனத்தைச் செலுத்துவது அவசியமாயிற்று. உணவுத் தானியங்களின் அளிப்பை அதிகரிப்பது தேவையாயிற்று. எனவே, அதற்கான நடவடிக்கைகளை அரசு எடுத்தது. அக் காலத்தில் அரசு உணவுத் தானியங்களைக் கொள்முதல் செய்து மக்களிடையே பங்கீட்டு முறையில் பகிர்வு செய்தது. உணவுப் பொருள்களைக் கட்டுப்பாடு களோடு அரசு பகிர்வு செய்யும் முறை அப்போது இருந்தது. உணவுத் தானியங்களின் உற்பத்தியை அதிகரிக்க 'உணவு உற்பத்திப் பெருக்கத் திட்டம்' (Grow-More-Food Campaign), 1943ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டது. உற்பத்தியை உயர்த்து வதற்காக மத்திய அரசியல் அமைப்பு மாநிலங்களுக்குக் கடன் களையும், உதவித்தொகைகளையும் வழங்கியது. இக் காலத்தில் பயிர்ச்சாகுபடி முறையில் சில மாற்றங்கள் தோன்றின; வேளாண் மைப் பொருள்களின் விலைகள் உயர்ந்தன.

அரசின் வேளாண்மைக்கொள்கை உணவுச் சிக்கல் பற்றியதாக இருந்தது. 1942ஆம் ஆண்டில் 'உணவுத் தானியக் கட்டுப்பாட்டு உத்தரவு' (Foodgrain Control Order)பிறப்பிக்கப்பட்டது. மத்திய நிலை உணவுத் துறை ஏற்படுத்தப்பட்டது. அகில இந்திய உணவுக் கருத்தரங்கும் நடைபெற்றது. ஜூலை 1943-ல் 'உணவுத்தானியக் கொள்கைக் குழு' (Foodgrains Policy Committee) நிறுவப்பட்டது. அரசு தன் கொள்கையை ஜனவரி 1946-ல் பின்வருமாறு குறிப்பிட்டது. 'மக்களுடைய நலனைப் பெருக்குவதும், அவர்களுடைய வாழ்க்கைத் தரத்தில் தீவிரமான முன்னேற்றத்தை ஏற்படுத்துவதும் அகில இந்தியக் கொள்கையாகும். தரமான உணவைப் போதுமான அளவில் எல்லாருக்கும் அளிப்பது அரசின் கடமையாகும். இந்த நோக்கத்தை நிறைவேற்ற நாட்டின் உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கான வசதிகள் யாவும் முழுமையாகப் பயன்படுத்தப்படவேண்டும். குறிப்பாக ஓர் ஏக்கருக்கான உற்பத்தியை அதிகரிப்பது அவசியம்; பருவ மழையை நம்பிச் சாகுபடியைக் கைக்கொள்ளும் நிலை மாறவேண்டும்.'

அக்டோபர் 1946-ல் 'ஆலோசனைத் திட்ட வாரியம்' (Advisory Planning Board) அமைக்கப்பெற்றது. அஃது உணவுப் பயிர்கள், வாணிபப் பயிர்கள் ஆகியவற்றின் உற்பத்தியில் சரிசம வளர்ச்சி இருக்கவேண்டும் என்று கூறியது.

**வேளாண்மை ஆராய்ச்சிக்கான இந்தியக் கவுன்சில் (Indian Council of Agricultural Research)**

ராயல் குழுவின் பரிந்துரைகளின்படி 1929ஆம் ஆண்டில் இஃது ஏற்படுத்தப்பட்டது. கவுன்சிலின் ஆலோசனை வாரியத்தில் மாநிலங்களின் பிரதிநிதிக் குழுக்களும், பல்கலைக் கழகங்களும், விஞ்ஞான அமைப்புகளும் அங்கம் வகித்தன. மாநில வேளாண்மை அமைச்சர்களும், பாராளுமன்றப் பிரதிநிதிகளும், சில வணிகர்களும் கவுன்சில் நிர்வாகத்தில் பொறுப்பேற்றவர்கள் ஆவர். பொதுவாக இக் கவுன்சில் ஆராய்ச்சிக்கு உதவியது; எவ் வழிகளில் ஆராய்ச்சிகளைச் செய்யலாம் என்பதைப் பரிந்துரைத்தது. அதுவே, சில ஆராய்ச்சித் திட்டங்களையும் மேற்கொண்டது. அங்கீகரிக்கப்பட்ட ஆராய்ச்சித் திட்டங்களுக்கு நிதியுதவி அளித்தது. விஞ்ஞான ரீதியில் பல ஆலோசனைகளைக் கூறியது.

கவுன்சில் பல குழுக்களை உள்ளடக்கியதாக இருந்தது. அவற்றுள், கோதுமை, அரிசி, சர்க்கரை, கால்நடைத் தீவனம், கால்நடைப் பராமரிப்பு, பால் பண்ணை, உரங்கள், புவியியல், எண்ணெய் ஆகியவற்றிற்கான குழுக்கள் முக்கியமானவை.

திறமையான பணிகளை ஆற்றும் வகையில் இக் கவுன்சில் 1951–ல் முழுமையாக மாற்றியமைக்கப்பட்டது. அதன் கடமைகளைச் சரியாக நிறைவேற்றவே மாற்றங்கள் செய்யப்பட்டன. இதன் விளைவாக வேளாண்மை விரிவாக்கப் பணிகள் கைக்கொள்ளப்பட்டன. நிர்வாக அமைப்புக்கு உதவியாக 'ஆராய்ச்சி வாரியமும்' (Board of Research), 'விரிவாக்க வாரியமும்' (Board of Extension) தற்பொழுது செயல்பட்டு வருகின்றன.

கவுன்சிலுக்கு ஆண்டுதோறும் இருவகைப்பட்ட மானியங்கள் (Grants) வழங்கப்படுகின்றன: அவை, 1. ஒவ்வோர் ஆண்டும் நிர்வாகத்திற்காக அரசு வழங்கும் மானியம். இதன் அளவு வெவ்வேறு ஆண்டுகளிலும் தேவைக்கேற்ப மாறலாம்; 2. வேளாண்மைப் பொருள்களின்மீது விதிக்கப்படுகின்ற 'ஸெஸ்' (Cess) மூலம் கிடைக்கக்கூடிய மொத்த வருமானமும் மானியமாக அளிக்கப்படுகின்றது. இவற்றைத் தவிர சில ஆராய்ச்சிகளை மேற்கொள்வதற்குத் தனியான மானியங்களும் தரப்படுகின்றன.

நோய்களால் அதிக அளவுக்குப் பாதிக்கப்படாத புதிய பயிர்களைக் கவுன்சில் கண்டுபிடித்துள்ளது. அரிசி, கோதுமை, பருப்பு வகைகள் ஆகியவற்றில் புதிய கண்டுபிடிப்புகளை அது செய்திருக்கின்றது. இதனால் அமோக விளைச்சலைத் தரும் பயிர் வகைகள் பல நாடு முழுவதும் பரப்பப்பட்டுள்ளன. விரைவாகப் பரவும் களைகளைக் குறைப்பதற்கான வழிமுறைகளும் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன.

1947ஆம் ஆண்டிற்குப் பின்னர், வேளாண்மை, கால்நடை ஆகியவற்றின் முன்னேற்றம் பிரதேச அடிப்படையில் கைக்கொள்ளப்படவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. அத்தீர்மானத்தின்படி ஆராய்ச்சித் திட்டங்கள் அடிப்படை மட்டத்திலும் பிரதேச மட்டத்திலும், உள்ளாட்சி மட்டத்திலும் பிரிக்கப்பட்டன. அடிப்படை நிலைகள் பெரும்பாலும் மத்திய நிறுவனங்கள், பல்கலைக் கழகங்கள், மத்தியப் பொருள் ஆராய்ச்சி நிலையம் (Central Commodity Research Station) முதலிய நிலையங்கள் ஆகியவற்றிடம் ஒப்படைக்கப்படுகின்றன. பிரதேசச் சிக்கல்களைத் தீர்க்க இந்திய வேளாண்மை ஆராய்ச்சிக் கவுன்சில் நிதியுதவி அளிக்கின்றது. இவ் வகையில் மாநில அரசுகளும் உதவுகின்றன. குறிப்பிட்ட ஆராய்ச்சித் திட்டத்திற்கு மாநில அரசு, கவுன்சில் ஆகிய இரண்டும் சேர்ந்து உதவுவதும் உண்டு. உள்ளாட்சி

மட்டத்தில் உள்ள பிரச்சினைகளைத் தீர்ப்பது குறிப்பிட்ட மாநில அரசுகளின் துறைகளைச் சார்ந்து அமையும்.

பயிர்களின் அடிப்படையில் இந்தியாவில் ஐந்துவகைப் பிரதேசங்கள் அமைந்துள்ளன. அவை, கோதுமை, அரிசி, மலபார்; திணை, ஹிமாலயன்; ஆகியனவாம். வரண்ட வடக்குப் பகுதியில் (கோதுமை): இதில் பஞ்சாப், மேற்கு உத்தரப்பிரதேசம், மேற்கு மத்தியப்பிரதேசம், ராஜஸ்தான் ஆகியவை அடங்குகின்றன. 2. கிழக்கு-மேற்குப் (அரிசி) பகுதி, அஸ்ஸாம், மேற்கு வங்காளம் பீஹார், ஒரிஸ்ஸா, கிழக்கு உத்தரப்பிரதேசம், கிழக்கு மத்தியப் பிரதேசம், வடகிழக்குத் தமிழ் நாடு ஆகியவை அடங்கும்; 3. கிழக்கு, மேற்கு கடலோரப் பகுதிகளில் மைசூர், கேரளம், ஆகிய மாநிலங்கள் அடங்குகின்றன. 4. கிழக்குப் (திணை) பகுதியில் உத்திரப்பிரதேசத்தின் ஜான்சி பகுதி, மத்தியப்பிரதேசம், கிழக்கு அந்திரப் பிரதேசம், மேற்குத் தமிழ்நாடு, மஹாராஷ்டிரம், மைசூரின் சில இடங்கள் ஆகியன அடங்குகின்றன. 5. ஹிமாலயன் பகுதி இரு பிரதேசங்களை உள்ளடக்கியது. கிழக்கு ஹிமாலயன் பகுதியில் .அஸ்ஸாமின்மலைப் பிரதேசம், சிக்கிம், பூட்டான் ஆகியவை உள்ளன. மேற்குப் பகுதியில் காஷ்மீர், சேம்பாகுளு, சிம்லா, கார்வால்முதலிய இடங்கள் இருக்கின்றன.

ஆராய்ச்சிக் கூடங்களின் மூலம் விளைகின்ற நன்மைகள் கிராமவாசிகளைச் சென்றடைவதற்கு நீண்ட காலம் தேவைப் படுகிறது. உரங்களைப் பயன்படுத்தவேண்டும் என்ற எண்ணத்தை விவசாயிகள் பெற்ருல்தான் ஆராய்ச்சிகளின் மூலம் உண்மை நன்மைகளை அடைய இயலும். ஆராய்ச்சி நிலையங்களுக்கும், சாகுபடி நிலங்களுக்கும் நடுவே மிகுதியான இடைவெளி அமைந்திருக்கின்றது. இதைக் குறைக்க அதிக விளம்பரங்கள் தேவைப் படுகின்றன. ஆராய்ச்சிகள் தனித்தனி நிறுவனங்களால் வெவ்வேறு இடங்களில் செய்யப்படுகின்றன. அவற்றிடையே இணைப்பு நிலை அவசியமாகிறது.

இந்தியாவில் வேளாண்மை நிலங்கள் சிறிய அளவில் பிரிக்கப் பட்டிருப்பதைப்போலவே விவசாய ஆராய்ச்சி அமைப்புகளும் சிறிய அளவில் தனித்தனியே அமைந்துள்ளன. இந்த நிலை தவிர்க்கப்பட வேண்டிய ஒன்று. மேலும், வேளாண்மை ஆராய்ச்சியின் பொருளாதார அடிப்படைக்குக் குறைந்த அளவு முக்கியத்துவம் மட்டுமே தரப்பட்டுள்ளது. விவசாயிகளின் சக்திக்கேற்பக் கண்டு பிடிப்புகள் இருக்கவேண்டும். கண்டு

பிடிப்புகள் உற்பத்திச் செலவைக் குறைத்து உற்பத்தியைப் பெருக்குவதாக இருப்பது அவசியம். அப்பொழுதுதான் விவசாயிகள் புதிய உற்பத்தி முறைகளைப் பின்பற்றுவார்கள். பொருளாதார ஆராய்ச்சி வேளாண்மை ஆராய்ச்சி ஆகியவற்றிற்கு இடையேயும் தொடர்பை ஏற்படுத்தவேண்டும். பொருளியல் வல்லுநர்கள் தொழில் நுட்ப வல்லுநர்கள் ஆகியோரிடையே தொடர்பை ஏற்படுத்துவதும் நன்மை பயக்கும். திறமையாளர்களால் உணவுப்பயிர்களைப்பற்றிய ஆராய்ச்சி செய்யப்படவேண்டும். எல்லாவற்றையும்விட ஆராய்ச்சியின் மூலம் உணவுப் பற்றுக்குறையைத் தவிர்க்க முயலுவது இன்றியமையாதது.

## இரண்டாவது உலகப் போருக்குப் பின்னர் வேளாண்மையின் முன்னேற்றங்கள்

இரண்டாவது உலகப்போர், அரசு வேளாண்மைக்கு முக்கியத்துவம் அளிக்கவேண்டும் என்பதை உணர்த்தியது. குறிப்பாக உணவு உற்பத்தியைப் பெருக்க வேண்டியதன் அவசியத்தை அரசு உணர்ந்தது. உணவுப் பங்கீட்டுமுறை கொண்டுவரப்பட்டது. வேறு வகைக் கட்டுப்பாடுகளும் விதிக்கப்பட்டன. 1943-ல் அதிக உணவு உற்பத்தித் திட்டம் தொடங்கப்பட்டது. மாநில அரசுகளுக்கு மத்திய அரசு கடன்களையும், உதவித் தொகைகளையும் வழங்கியது. வேளாண்மைபற்றிய பல நிலைகளையும் ஆராய்ந்து அறிக்கை சமர்ப்பிக்க குழுக்கள் அமைக்கப்பட்டன. அக் குழுக்கள், 1947-ன் இரண்டாவது உணவுத் தானியக்கொள்கைக் குழு (Second Foodgrains Policy Committee); 1952-ன் அதிக அளவு உற்பத்தி விசாரணைக் குழு (Grow More Food Enquiry Committee); 1957-ன் உணவுத் தானிய விசாரணைக் குழு (Foodgrains Enquiry Committee) ஆகியன.

1947ஆம் ஆண்டு சுதந்திரமடைந்த பின்னர், அரசின் கொள்கையில் சில அடிப்படை மாற்றங்கள் தோன்றின. வேளாண்மைத் தொழிலைச் சீரமைத்து உணவுப் பிரச்சினையைத் தீர்க்கவேண்டும் என்று அரசு விரும்பியது. பாய்ட் ஆர் பிரபு (Lord Boyd Orr) முதலிய வல்லுநர்களிடம் ஆலோசனை பெறப்பட்டது. ஆங்கிலேய அரசு பல நதிப் பள்ளத்தாக்குத் திட்டங்களைத் தொடங்கியது. இவை யாவும் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டனவாகும்.

## 1947 ஆம் ஆண்டு முதல் வேளாண்மைக் கொள்கை

ஆகஸ்ட் 1947-ன் நாட்டுப் பிரிவினை, வேளாண்மை உற்பத்தித் திறனைக் குறைத்துவிட்டது. விடுதலை பெற்ற உடனேயே உணவுப்

பொருள்களும், கச்சாப் பொருள்களும் இறக்குமதி செய்யப்பட்டன. இறக்குமதியைக் குறைக்க வேளாண்மை உற்பத்தியை அதிகரிப்பது அவசியமென்று அறியப்பட்டது. உற்பத்தியில் தன்னிறைவைப் பெறுவதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன.

இரண்டாவது உணவுத் தானியக் கொள்கைக் குழு செப்டம்பர் 1647-ல் ஏற்பட்டது. வேளாண்மை நிலைகளைப்பற்றி அறிய அரசு இதைத் தோற்றுவித்தது. இக் குழு, அரசின் உணவு உற்பத்திக் கொள்கையில் அடிப்படை மாற்றம் தேவை. உணவுத் தானியங்களின் உற்பத்தியை மிகக் குறுகிய காலத்திற்குள் பெருக்க வேண்டும் என்று கூறியது. உற்பத்தியைப் பெருக்குவதற்கான பல வழி முறைகளையும் அது குறிப்பிட்டது.

இந்திய அரசு வேளாண்மை ஆக்கத்தை அதிகரிப்பதற்கான நேர்முக நடவடிக்கைகள் பலவற்றையும் எடுத்தது. நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு முழுமையான திட்டமுறை கைக் கொள்ளப்பட்டது. உற்பத்தித் திட்ட முறைகள் பலவும் ஒருங்கிணைக்கப்பட்டன. உற்பத்தியை எந்த அளவுக்குப் பெருக்குவது என்பதற்கான குறியிலக்குகளும் நிர்ணயிக்கப்பட்டன. பங்கீட்டு முறையில் கட்டுப்பாடுகள் தேவை என்பதை அரசு உணர்ந்தது. இவற்றின் அடிப்படையில் 1950—51 ஆம் ஆண்டில் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தைத் தவிர்க்கப் பிற திட்டங்கள் எல்லாவற்றிலும் வேளாண்மை வளர்ச்சிக்கே முதல் முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. திட்டங்களின் முக்கிய நோக்கம் வேளாண்மை உற்பத்தியைப் பெருக்குவது மட்டுமன்று; தாழ்ந்த நிலையில் உள்ள கிராம மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதுமாகும்.

தற்பொழுது இந்திய அரசின் வேளாண்மைக் கொள்கை எத்தகையது என்பதைத் திட்டக்குழு பின்வருமாறு விளக்குகின்றது.

'வேளாண்மைத் துறையில் முயற்சி முக்கியமாக இரு வகைகளில் எடுக்கப்பட வேண்டும். முதலாவதாக, அடுத்த பத்தாண்டுகள்வரை வேளாண்மை உற்பத்தியின் பெருக்கவீதம் ஆண்டுதோறும் 5 சதவீதம் என்ற அளவுக்குத் தொடர்ச்சியாக அதிகரிபபது அவசியம். இரண்டாவதாக, சிறிய சாகுபடியாளர்கள், வறண்ட பகுதிகளின் விவசாயிகள், நிலமற்ற உழைப்பாளர்கள் ஆகிய கிராம மக்கள் தொகையின் பெரும் பகுதியினரை முன்னேற்றத்தில் பங்கு கொள்ளுமாறு செய்து நன்மைகளை அவர்கள் அடையுமாறு செய்யவேண்டும்.'[1]

[1] Approach to the Fourth Five year plan p.9.

**ஃபோர்டு நிறுவனத்தின் வேளாண்மைக்குழு** (Ford Foundation's Agricultural Team) 1959

ஜனவரி-ஏப்ரல் 1959-ல் ஃபோர்டு நிறுவனத்தின் சார்பாக அமெரிக்கா, இங்கிலாந்து ஆகிய நாடுகளைச் சேர்ந்த வல்லுநர்க் குழு இந்தியாவிற்கு விஜயம் செய்தது. நாட்டின் உணவுச் சிக்கலுக்குத் தீர்வு காணவும், வேளாண்மை முன்னேற்றத்தைப் பெறவும் அது பல முறைகளைப் பரிந்துரைத்தது. அப் பரிந்துரைகளில் முக்கியமானவற்றைப் பின்வருமாறு சுருக்கிக் கூறலாம்.

1. உணவு உற்பத்திக்கு அதிக முக்கியத்துவம் அளித்து மூன்ருவது திட்டத்தில் உணவுத் தானியங்களின் உற்பத்திக்கான குறியிலக்கை 110 டன்களாக நிர்ணயிக்க வேண்டும். அவசரமான நடவடிக்கைகளைத் தீவிரமாக நிறைவேற்றினால்தான் இக் குறியிலக்கை எட்ட முடியும். உணவுத் தானியங்களின் உற்பத்தியைப் படிப்படியாக விரைவுபடுத்தவேண்டும். இல்லாவிட்டால் இறக்குமதியின்மூலமோ அல்லது பங்கீட்டு முறையின்மூலமோ சிக்கலுக்குத் தீர்வு காண முடியாது என்று அது பல கருத்துகளைத் தெரிவித்தது.

2. பொதுச் சட்டம் 480 (Public Law 480) மூலம் கிடைக்கக்கூடிய நிதியை அரசு கிராம வேலையின்மையையும், மறைமுக வேலையின்மையையும் நீக்குவதற்குப் பயன்படுத்தவேண்டும். அப்போதுதான் உணவுத் தானியங்களின் உற்பத்தியைப் பெருக்குவதற்கு உழைப்பாளர்களை முழுமையாகப் பயன்படுத்த முடியும்.

3. வேளாண்மை உற்பத்தியை அதிகரிக்க கிணறுகள் தோண்டுதல், குளங்கள் வெட்டுதல், கால்வாய்கள் அமைத்தல், பிற சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களை நிறைவேற்றுதல் முதலிய பொதுப்பணிகளைச் செய்யவேண்டும்.

4. ஓர் ஏக்கருக்கான உற்பத்தியின் அளவை அதிகரிப்பது அவசியம். விரைவாக உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்கான திட்டத்தைக் கைக்கொள்ள வேண்டும். இந்தியச் சாகுபடியாளர்களின் உற்பத்தித் திறனை உயர்த்துவது இன்றியமையாதது.

5. சூழ்நிலைகளுக்குப் பொருந்தக்கூடிய வகையில் வெவ்வேறு இடங்களிலும் மாறுபாடான திட்டங்கள் நிறைவேற்றப்பட வேண்டும். ஒரே மாதிரியான திட்டம் எல்லா இடங்களுக்கும் பொருந்தாது.

6. உழைப்பு, முதலீடு ஆகியவற்றிற்கேற்ற வருமானத்தை விவசாயி பெறுமாறு செய்யவேண்டும். அதன்மூலமே அவன் மேம்பட்டான சாகுபடி முறைகளைக் கைக்கொள்ளவேண்டும் என்ற ஊக்கத்தைப் பெறுவான். சாகுபடியாளர் ஒவ்வொரு வருக்கும் நிலத்தின்மீதான சாகுபடி உரிமைக்கு அரசு உறுதி அளிக்க வேண்டும். கடன் வசதிகளையும், விற்பனை வசதிகளையும் பெருக்குவது அரசின் கடமையாகும். விலை நிலைபேருக்கத்தைப் (Price stabilisation) பெறுவதற்கான நடவடிக்கைகளையும் அரசு எடுக்கவேண்டும். சாகுபடி செய்யப்படும் பயிர்களின்மீதும் அரசு விவசாயிகளுக்குக் கடன் அளிக்கலாம்.

7. எல்லா நிலைகளிலும் சிறப்பான தலைமை இருப்பது அவசியம். திட்டமிடுபவர்கள், நிர்வாகிகள், கல்வியாளர்கள், விஞ்ஞானிகள், உள்ளாட்சித் தலைவர்கள், சாகுபடியாளர்கள் ஆகியோர் திறமையாகவும். உண்மையாகவும், நேர்மையாகவும் பணியாற்றினால்தான் உற்பத்தி பல மடங்கு உயரும். இவர்களுக் கிடையே இணைப்புத்தன்மை நிலைத்திருப்பதும் இன்றியமையாதது.

8. நிர்வாகத்தில் உணவு அமைச்சகம் முக்கியப் பங்கேற்க வேண்டும். தேசிய முன்னேற்றக் கவுன்சில் (National Development Council), திட்டக்குழு முதலியவை திட்டங்களை வரைந்து தரும்போது, அவற்றை நிறைவேற்றும் பொறுப்பு அந்தந்த அமைச்சர்களிடம் ஒப்படைக்கப்படவேண்டும்.

இந்தியாவின் உணவுச் சிக்கலைத் தீர்க்க ஃபோர்டு நிறுவனத்தின் வேளாண்மைக்குழு மேற்கண்ட பரிந்துரைகளைச் செய்தது. அதன் கருத்துகள் பின்வரும் வேறு சில உண்மை களையும் உணர்த்தின. உணவு உற்பத்தியை விரைவாகப் பெருக்காவிட்டால், 1965—66-ல் தேவைக்கும் அளிப்பிற்கும் நடுவே உள்ள இடைவெளி 28 மில்லியன் டன்களாக இருக்கும் எனத் திட்டமிட்டது. இது சுமார் 25 சதவீதப் பற்றுக்குறை நிலையாகும். பொதுப்பணித் திட்டங்கள் வேளாண்மை உற்பத் திக்கு உதவுவதாக அமையவேண்டும்.

இந்தியா பரந்த நாடாக இருப்பதால், தட்ப வெப்ப நிலைகள் வெவ்வேறு இடங்களிலும் மாறுபடுகின்றன. பிரச்சினைகளும் பலவேறு வகைப்பட்டனவாக இருக்கின்றன. எனவே, சூழ் நிலைகளுக்குத் தக்கவாறு வேளாண்மைத் திட்டங்கள் கைக் கொள்ளப்படவேண்டும். இரண்டாவது, மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டங்களில் வேளாண்மைக்கே அதிக முக்கியத்துவம் அளிக்கப் படவேண்டும் என்று கூறப்பட்டது.

நம் நாட்டில் பல இலட்சக்கணக்கான சிறிய விவசாயிகள் உள்ளனர். உற்பத்தியின் மூலம் நேர்மையாகத் திருப்பித்தரும் நிலையில் இருக்கும் விவசாயிகளுக்கு அரசு கடன் அளிக்க வேண்டும். நிலத்தை அடைமானமாக வைத்துக் கடன் அளிப்பதோடு பயிர்களின்மீது கடன் தருவதும் அவசியம். இதுவரை இருந்ததைப்போன்று உணவு அமைச்சகத்துக்கு அதிக முக்கியத்துவம் தரப்படவேண்டும். முக்கியத்துவத்திற்கேற்பக் கிடைக்கக்கூடிய வசதிகள் உற்பத்தியைப் பெருக்கப் பயன்படுத்தப் படவேண்டும். இணைப்பான திட்டங்கள் பலவற்றை ஒருங்கே நிறைவேற்றும்போதுதான் வேளாண்மை உற்பத்தியை அதிகரிக்க முடியுமென்று ஃபோர்டு நிறுவனத்தின் குழு தெரிவித்தது.

**வேளாண்மைத்துறை (Agricultural Deparment)**

1866 ஆம் ஆண்டு ஒரிஸ்ஸாவில் பஞ்சம் ஏற்பட்டபோது வேளாண்மை முன்னேற்றத்தைப் பெறுவதற்கான தனித்துறையை அரசு கொண்டிருக்கவேண்டும் என்ற எண்ணம் தோன்றியது. ஆனால், 1890 ஆம் ஆண்டு பஞ்சக் குழுவின் பரிந்துரைப்படி 1884 ஆம் ஆண்டிலேயே முதன் முதலாக அரசு வேளாண்மைத் துறையை ஏற்படுத்தியது. ஆரம்பத்தில் அத்துறை வேளாண்மைப் புள்ளிவிவரங்களைத் திரட்டுவதைத் தவிர வேளாண்மை வளர்ச்சிக்கான எப் பணியையும் ஆற்றவில்லை. தன்னுடைய கடமைகளை நிறைவேற்றாமல் அது வேறு சில பணிகளை நிறைவேற்றியது. உதாரணமாக அது நிலவுடைமைப் பதிவுகளின் புள்ளி விவரங்களைக் கவனித்து வந்தது. அதற்கு அளிக்கப்பட்ட மானியங்களும் போதுமான அளவில் இருக்கவில்லை.

டாக்டர் ஒல்கெர், 1889 ஆம் ஆண்டில் வேளாண்மைத் துறையின் முக்கியத்துவத்தை வலியுறுத்தினார். அதன் பின்னர், வேளாண்மைமீதான ராயல் குழு, இத் துறையின் அவசியத்தை வலியுறுத்திக் கூறியது. 1905 ஆம் ஆண்டில் கர்ஸான் பிரபு, அதற்கான தொடக்க நடவடிக்கைகளை எடுத்தார். வேளாண்மைத் துறையை வன்மையுள்ளதாக்க அவர் முயற்சிகளை மேற்கொண்டார். அத் துறையில் தேவையற்ற பணிகளை எல்லாம் அவர் குறைத்தார். அதற்கு அதிக நிதி அளிக்கப்பெற்றது. வேளாண்மைப் பரிசோதனைகள் கைக்கொள்ளப்பட்டன. ஆராய்ச்சியின் நன்மைகளை விவசாயிகள் உணருமாறு செய்வதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. பூனா, கான்பூர், நாக்பூர், லால்பூர், கோயம்பத்தூர், மாண்ட்லே அகிய இடங்களில் வேளாண்மைக் கல்லூரிகள் அமைக்கப்பட்டன.

1919 ஆம் ஆண்டின் சீர் திருத்தங்களுக்குப் பின்னர், பிரதேசத் துறைகளை இந்திய அரசு கட்டுப்படுத்தும் நிலை தளர்த்தப்பட்டது. 1921ஆம் ஆண்டு முதல் பிரதேச அமைச்சர்கள் வேளாண்மையைக் கட்டுப்படுத்தினார்கள். தற்பொழுது இந்திய அரசின் வேளாண்மைத்துறை, அகில இந்திய முக்கியத்துவம் கொண்ட வேளாண்மைச் சிக்கல்களைப் பற்றி மட்டுமே கருத்திற்கொண்டு ஆய்கின்றது.

வேளாண்மைத் துறையின் முக்கியமான பணிகளைப் பின்வருமாறு குறிப்பிடலாம்.

1. வேளாண்மை உற்பத்தி;

2. வேளாண்மை ஆராய்ச்சி, கல்வி விரிவாக்கம்;

3. கால் நடைப் பராமரிப்பு, மீன் வளர்ப்பு, வனத்துறை;

4. காய்கறி, பழங்கள், ஆகியவற்றின் தொழில்;

5. வேளாண்மை முன்னேற்றம்;

6. உணவு, 'வேளாண்வை அமைப்பு' (Food and Agriculture Organisation) முதலிய பன்னாட்டு அமைப்புகளோடு தொடர்பு கொள்ளுதல்;

7. உரங்களைக் கொள்முதல் செய்து பகிர்வு செய்வது;

8. வேளாண்மைப் பொருளாதாரத்தைப்பற்றிய புள்ளி விவரங்களைச் சேகரிப்பது;

9. வேளாண்மைப் பொருள்களின் விற்பனை, கூட்டுறவு தரிசு நிலங்களாக மாற்றுவது, சிறிய நீர்ப்பாசனம், நிலவளப் பாதுகாப்பு.

மேற் குறிப்பிட்டுள்ள நிலைகளைச் சார்ந்தே வேளாண்மைத் துறையின் நடவடிக்கைகள் அமைகின்றன.

இந்திய அரசின் வேளாண்மைத் துறை நாட்டின் வெவ்வேறு இடங்களிலும் முக்கியமான சில நிறுவனங்களை நடத்தி வருகின்றது.[1] சமீபத்தில் இது பின்வரும் கொள்கைகளின் அடிப்படையில் மாற்றியமைக்கப்பட்டது.

1. ஆலோசகர்களும், வல்லுநர்களும் முக்கியக் கடமைகளைக் கொண்டிருப்பார்கள். அக் கடமைகளை நிறைவேற்றுவதற்குத்

[1] Ind'an Agricultural Research Institute, New Dethi (Transferred from Pusa to New Delhi in 1636;)

தேவையான வசதிகளும், அந்தஸ்தும் அவர்களுக்கு அளிக்கப் படும்.

2. பல தொழில் நுட்பப் பிரிவுகளை ஒருங்கிணைப்பவர்களாகச் சில தலைமை அலுவலர்கள் இருப்பர்.

3. ஒவ்வொரு பிரிவின் நடவடிக்கைகளும் காலத்திற்கு ஏற்ற வாறு சிறப்பாக அமையும்.

4. சில தலைமை அலுவலர்கள்; எப்போதுமே தொடர்ச்சி யாகப் பணி புரிவர். முக்கியமான திட்டங்களில் அவர்களுக்கும் மாநில அரசுகளுக்கும் இடையே நெருங்கிய தொடர்பு இருக்கும்.

5. ஆராய்ச்சியும், கல்வியும் வேளாண்மை ஆராய்ச்சிபற்றிய இந்தியக் கவுன்சிலின் பொறுப்புகளாகும். அது சுதந்திரமாகச் செயல்படக்கூடிய ஒன்றாகும்.

உணவு, வேளாண்மை அமைச்சகம் ஏப்ரல் 1951-ல் தோற்று விக்கப்பட்டது. அது, பின்வரும் பணிகளை நிறைவேற்றும் பொறுப்புக் கொண்டுள்ளது.

1. இராணுவத்திற்கும், பொது மக்களுக்கும் தேவையான உணவுத் தானியங்களைக் கொள்முதல் செய்வது;

---

குறிப்பு—(241-ம் பக்கத் தொடர்ச்சி)

2. Indian Concil of Agricultural Research, New Delhi;
3. Indian Institute of Veterinary Research, Isatnagar;
4. Indian Dairying Institute, Bangalore;
5. National Dairy Research Institute, Karnal;
6. Creamery, Anand;
7. Lac Research Institute, Ranchi;
8. Indian Cane Breeding Station, Coimbatore;
9. Forest Research Iostitute, Dehra Dun;
10. Sugar Technological Institute Kanpur;
11. Central Rice Research Institute, Cuttack;
12. Central Potato Research Institute, Patna;
13. Central Vegetable Breeding Station, Kulu;
14. Central Marine Fisheries Station. Mandapam;
15. Central Inland Fisheries Station, Manirampur;
16. Central Fisheries Technological Research Stations, Cochin and Ernakulam; and
17. Central Food Technological Research Institute, Mysore.

2. மாநிலங்களுக்கிடையே இறக்குமதி செய்யப்பட்ட உணவுத் தானியங்களைப் பகிர்வது.

3. அகில இந்திய ரீதியில் இணைப்பான உணவுக் கொள்கையைப் பற்றித் திட்டமிட்டு வழி காட்டுவது.

4. உணவுத் தானியங்களின் இறக்குமதியையும், ஏற்றுமதியையும் ஒழுங்குபடுத்துவது.

**மாநில வேளாண்மைத் துறைகளின் பணிகள்**

1921 ஆம் ஆண்டு முதல் வேளாண்மையைப்பற்றிய பொறுப்புகள் மாநில அரசுகளைச் சார்ந்துள்ளன. வேளாண்மைக்கான மாநில அமைச்சர்கள் அப் பொறுப்புகளை ஏற்கின்றனர். மாநில வேளாண்மைத் துறைகள் வேளாண்மை முன்னேற்றத்திற்கான முக்கியப் பணிகளை ஆற்றி வருகின்றன. இதற்காக மாநில அரசுகள் சட்டங்களை இயற்றுகின்றன. லேவாதேவிக்காரர்கள் கட்டுப்படுத்தப்படுகிறார்கள். கிராமக் கடன் வசதிகள் பெருக்கப்படுகின்றன. நிலத்தின்மீதான உரிமை சாகுபடியாளர்களுக்கு வழங்கப்படுகிறது. அதிக உணவு உற்பத்திப் பெருக்கத் திட்டங்கள் கைக்கொள்ளப்பட்டுள்ளன. மானியங்கள், உதவித் தொகைகள், கடன்கள் ஆகியனவும் விவசாயிகளுக்கு வழங்கப்படுகின்றன. தரமான பசுமை எருக்கள், இரசாயன உரங்கள்' விதைகள் முதலியவற்றையும் அவர்கள் குறைந்த விலையில் பெறுகின்றார்கள். நீர்ப்பாசன வசதிகளாலும் வேளாண்மை உற்பத்தி அதிகரித்துள்ளது. காய்கறிகள், பழங்கள் ஆகியவற்றின் உற்பத்தியைக் கூட்ட முயற்சிகள் மேற் கொள்ளப்பட்டிருக்கின்றன. நல்லினக் கால்நடைகளைப் பரப்புவதற்கான நடவடிக்கைகளும் எடுக்கப்பட்டுள்ளன.

'வேளாண்மைக்கான மாநில உதவி' என்ற ரிசர்வ் வங்கியின் வெளியீடு மாநில அரசுகளின் பணிகளை மேற்கண்டவாறு குறிப்பிட்டது. மாநில அரசுகள் பின் வருபவற்றை மேற்பார்வை செய்து கட்டுப்படுத்தவேண்டும்.

1. வேளாண்மைக் கல்வி;

2. வேளாண்மை ஆராய்ச்சி;

3. பரிசோதனை, விளம்பரம்;

4. தொழில் நுணுக்க முன்னேற்றங்கள்;

5. உயர் ரக விதைகள் கருவிகள். செயற்கை உரங்கள் ஆகியவற்றைப் பங்கிடுவது முதலியனவாம்;

**வேளாண்மைக் கல்வி**

சுதந்திரமடைவதற்கு முன்னர், ஆங்கிலேய அரசு வேளாண்மைக் கல்வி முன்னேற்றத்தில் அதிக அக்கறை கொண்டிருக்கவில்லை. அப்பொழுது, இந்தியா முழுமையான ஒரு வேளாண்மை நாடாக இருந்தது. ஆங்கிலேயரின் கல்விக்கொள்கை நாட்டுக்குப் பொருத்தமானதாக இல்லை. அதைத் தவறான கொள்கை என்றே கூறவேண்டும். எனினும், ஆங்கிலேய ஆட்சிக் காலத்தை வேளாண்மைக் கல்வியின் தொடக்க காலம் என்றே கூறலாம். ஏனெனில், அப்பொழுது 12 வேளாண்மை உயர்கல்வி நிலையங்கள் இருந்தன.

1647ஆம் ஆண்டுக்குப் பின்னர், அரசு இவ் வகைக் கல்வி முன்னேற்றத்தில் அதிக ஆர்வம் கொண்டது. நான்காவது திட்டத்தில் விவசாயிகளின் கல்விக்கும், பயிற்சிக்கும் முக்கியத்துவம் தரப்பட்டுள்ளது. கடினமான தொழில் நுணுக்கங்களை விவசாயிகள் அறியுமாறு செய்வது நோக்கமாகின்றது. வேளாண்மைக் கல்வியில் மூன்று பிரிவுகள் உள்ளன.

1. வேளாண்மைப் பல்கலைக் கழகங்கள், ஆராய்ச்சி நிலையங்கள் ஆகியவற்றின் வேளாண்மை விஞ்ஞானிகளைக் கொண்டு பரிசோதனைகளை அமைத்து மக்களுக்கு நன்மைகளை உணர்த்துவது;

2. வானொலி மூலம் வேளாண்மைபற்றிய விவரங்களை ஒலி பரப்புவது; திரைப்படங்கள், சுவரொட்டிகள்மூலம் விவசாயிகளுக்கு வேளாண்மை விவரங்களைப் புரியவைப்பது; விவசாயிகளுக்கிடையே கருத்துகளைப் பரிமாறிக்கொள்ளச் செய்வது;

3. விவசாயிகளுக்கும், விஞ்ஞானிகளுக்கும் இடையே தொடர்பை ஏற்படுத்துவது; வேளாண்மை விரிவாக்க அலுவலர்களும் இவர்களோடு இணைந்து செயல்படும் நிலையைத் தோற்றுவிப்பது.

இவ்வகையில் வேளாண்மைக் கல்வியைப் பரப்புவதற்கான மத்திய அரசின் திட்டம், நாட்டின் 100 மாவட்டங்களில் செயல்படுத்தப்படும். அகில இந்திய வானொலி, கல்வி அமைச்சகம் ஆகியன இதற்கு உதவியாகச் செயல்படும். பிற மாவட்டங்களில் இவை போன்ற திட்டங்கள் மாநில அரசுகளால் நிறைவேற்றப்படும்.

[1] Fourth Five—Year Plan. 1969 –74. Draft, p. 120.

வேளாண்மைக் கல்விமுறைபற்றி நாடு விடுதலை அடைந்த பின்னர், முதன்முறையாக 1949-ல் 'பல்கலைக்கழகக் கல்விக் குழுவின்' (University Education Commission) மூலம் ஆய்வு செய்யப்பட்டது. அது கல்வி முறையை முழுமையாக 'மாற்றியமைக்க வேண்டுமெனப் பரிந்துரைத்தது. வேளாண்மைக் கல்வியை மாற்றியமைப்பதற்குக் கைக்கொள்ளவேண்டிய முக்கிய மூன்று நோக்கங்களை அது பின்வருமாறு குறிப்பிட்டது.

1. விவசாயிகளின் பிள்ளைகளுக்குப் பயிற்சியளித்து அவர்களைத் திரும்பவும் பண்ணைகளுக்கு அனுப்பவேண்டும்; அதன் மூலம் அவர்கள் திறமையான உழைப்பைத் தந்து உற்பத்தியைக் கூட்டுவார்கள்.

2. விரிவாக்கப் பணிகளாலும், பரிசோதனைகளாலும் புதுமையான வேளாண்மை ஆராய்ச்சியின் பயனை விவசாயிகள் அடையுமாறு செய்யவேண்டும்; விவசாயிகளுக்குப் பயிற்சியளிப்பதும் அவசியமானது.

3. வேளாண்மை, கால்நடை பற்றிய சிக்கல்களுக்குத் தீர்வு காண அடிப்படை ஆராய்ச்சிகளை மேற்கொள்ளவேண்டும்; வேளாண்மை முன்னேற்றத்திற்குப் பயிற்சி பெற்றவர்களைப் பயன்படுத்துவது இன்றியமையாதது.

இவ்வித நோக்கங்களை நிறைவேற்றுவதன் வாயிலாக மேம்பாடான சாகுபடி முறைகள் நாடு முழுவதும் பரவும் மாதிரிப் பண்ணைகளை (Model Farms) ஏற்படுத்தவேண்டுமென்றும், கிராமங்களில் உயர் கல்வியைப் பரப்பவேண்டுமென்றும் பல்கலைக் கழகக் கல்விக் குழு பரிந்துரைத்தது.

1955ஆம் ஆண்டில் 'கிராம உயர் கல்விக்குழு' (Committee on Higher Rural Education) அமைக்கப்பட்டது. விவசாயிகளுக்குக் பயிற்சியளிப்பதற்கான வசதிகளைக் கிராமங்களில் ஏற்படுத்த வேண்டுமென்று அது கூறியது. கிராமப் பயிற்சி நிலையங்கள் கீழ்க்காணும் வசதிகளை அளிக்க வேண்டுமென்று அறுவுறுத்தப்பட்டது.

1. அடிப்படைக் கல்வியை முடித்தவர்களுக்கு உயர் கல்வியை அளிப்பதற்கான வசதிகள் பெருக்கப்படவேண்டும்;

2. கிராமச் சுகாதாரம், வேளாண்மை, வேளாண்மைப் பொறியியல் முதலியவற்றில் பயிற்சியளித்துச் சான்றிதழ்களை வழங்கலாம்;

3. வேளாண்மைக் கல்வியைப் போதிப்பதோடு வேளாண்மை விரிவாக்கப் பணிகளையும் பரவலாகக் கைக்கொள்ளவேண்டும்; கல்விக்கும் நடைமுறைச் செயல்களுக்கும் நெருங்கிய தொடர்பு இருத்தல் அவசியம்.

1955ஆம் ஆண்டிலேயே 'வேளாண்மை ஆராய்ச்சி, கல்வி ஆகியவற்றின் மீதான இந்திய-அமெரிக்க இணைப்புக் குழு' (Joint Indo-American Team on Agricultural Research and Education), மேற்கண்ட நிலைகளின் அடிப்படையில் வேளாண்மைபற்றி ஆய்வு செய்தது. இக் குழு 'தொழிற் பள்ளிகளையும்' (Vocational Schools), 'கிராமப் பல்கலைக் கழகங்களையும்' (Rural Universities) ஏற்படுத்த வேண்டுமென்று பரிந்துரைத்தது. அஃது ஒவ்வொரு மாநிலத்திலும் ஒரு கிராமப் பல்கலைக்கழகமாவது இருக்க வேண்டுமென்றும் மாவட்ட அளவில் பல தொழில் பள்ளிகள் அமையவேண்டு மென்றும் வலியுறுத்தியது.

'கிராமக் கல்விக்குழு' (Committee on Rural Education), 1958 ஆம் ஆண்டில் இச் சிக்கல்பற்றி மேலும் ஆய்ந்தது. நாட்டின் வேளாண்மைக் கல்வியை மாற்றியமைப்பதற்கான பல அரிய ஆலோசனைகளை அது குறிப்பிட்டது. கிராமக் கல்வியை மாற்றி யமைத்தது, அது விவசாயிகளின் தேவைகளைப் பூர்த்திசெய்யுமாறு அமைக்கப்படவேண்டுமென்று அறிவுறுத்தப்பெற்றது. அதுவரை வேளாண்மைக் கல்வி நடைமுறைக்கு ஒவ்வாததாக இருந்ததையும் அது விளக்கியது. வேளாண்மைத் தொழிற் கல்வியின் குறை பாடுகளையும் அது கூறியது. இந்திய-அமெரிக்க இணைப்புக் குழுவின் பரிந்துரைகள் அதனால், அங்கீகரிக்கப்பட்டன, கிராமக் கல்விக் குழுவின் முக்கியப் பரிந்துரை வேளாண்மைக் கல்வியை மாற்றியமைப்பதாகும்.

வெவ்வேறு மட்டங்களிலும் இந்தியாவில் வேளாண்மைக் கல்வி போதிக்கப்படுகின்றது. வேளாண்மையின் அடிப்படைக் கல்வி இயல்பானதாக, செயல்முறைக்குப் பொருந்துவதாக இருக்க வேண்டும். பெரும்பாலும் எல்லா மாநிலங்களிலும் இடைநிலைக் கல்வியில் வேளாண்மைப் பயிற்சி புகுத்தப்பட்டுள்ளது. பயிற்சி முடிந்தவர்கள் வேளாண்மையில் ஈடுபட வேண்டுமென்று அரசு விரும்புகிறது. விஞ்ஞான வேளாண்மைபற்றிய உயர்கல்வி, பூனா, நைனி, செஹோர், புலன்ஷர், உதய்பூர், ஜாப்னர், ஜபல்பூர், பெங்களூர், கோயம்பத்தூர், பந்த்நகர், கான்பூர், லூதியானா ஆகிய ஊர்களில் உள்ள வேளாண்மைக் கல்லூரிகளால் அளிக்கப்படு கின்றது. இந்தியாவில் எண்பதுக்கும் மேற்பட்ட வேளாண்மைக்

கல்லூரிகள் உள்ளன. அவற்றின் வாயிலாக வேளாண்மைக் கல்வியும், பயிற்சியும் அளிக்கப்படுகின்றன. வேளாண்மைச் சிக்கல்களைத் தவிர்ப்பதற்கான ஆராய்ச்சிகளையும் அவை மேற்கொள்கின்றன.

அகில இந்திய முக்கியத்துவம் வாய்ந்த ஆராய்ச்சிகளை 'இந்திய வேளாண்மை ஆராய்ச்சிக் குழு' (Indian Concil of Agricultural Research) செய்கின்றது; அல்லது அவ்வகை ஆராய்ச்சிகளை மேற்கொள்ளும் நிறுவனங்களுக்கு உதவுகின்றது. அதிக விளைச்சலைத் தரக்கூடிய புதிய ரக விதைகள் ஆராய்ச்சிகளின் மூலம் கண்டு பிடிக்கப்படுகின்றன. பயிர் நோய்கள் தடுக்கப்படுகின்றன. இவற்றின் காரணமாகப் பஞ்சம் தோன்றுவது தடுக்கப்படுகிறது. நல்ல உரங்களும், தொழில் நுணுக்கம் மிக்க கருவிகளும் வேளாண்மை வளர்ச்சிக்கு உதவியுள்ளன. ஆராய்ச்சிகளின் பலன்கள் பரிசோதனை முறைப் பண்ணைகளில் பரிசீலிக்கப்பட்டன. பரிசோதனை முறைப் பண்ணைகளை வேளாண்மைக் கல்லூரிகளும் ஆராய்ச்சி நிறுவனங்களும் அமைத்திருக்கின்றன.

ஸ்ரீநிகேதன், காந்திக்கிராமம், உதய்பூர், ஜமையாநகர், சுந்தர்நகர், பிராலி, பிச்புரி, சஞேசரா, கோயம்பத்தூர், கார்கோட்டி, அமராவதி, ராஜ்புரா, வார்தா, ஹனுமஞமதி ஆகிய 13 இடங்களில் கிராமப் பயிற்சி நிலையங்கள் செயல்பட்டு வருகின்றன. இந்த நிலையங்கள் கிராம விஞ்ஞானம், வேளாண்மை விஞ்ஞானம், கிராமப் பொறியியல், கிராமச் சுகாதாரம் ஆகியவற்றில், பயிற்சியளித்துச் சான்றிதழ்களை வழங்குகின்றன.

## கல்விக்குழு 1964—66

கல்விக்குழு இந்திய அரசால் ஜூலை 1964-ல் அமைக்கப்பட்டது. அதன் அறிக்கை 1966-ல் வெளி வந்தது. கல்வியின் பல வேறு பிரச்சினைகளை அஃது அலசியது. வேளாண்மைக் கல்வியில் உள்ள சிக்கல்களும் கருத்துள் கொள்ளப்பட்டன. அதன் மூலம் நல்ல பல ஆலோசனைகள் கூறப்பட்டன. வேளாண்மை முன்னேற்றத்திற்கு வேளாண்மைக் கல்வி அவசியமானதென்று வலியுறுத்தப்பட்டது. அக்குழு குறிப்பிட்டதாவது, 'வேளாண்மைக் கல்வி, ஆராய்ச்சி ஆகியவற்றின் தரம் உயரவேண்டும். அவ்வாறு உயராவிட்டால் வேளாண்மை உற்பத்தியை அதிக அளவுக்குப் பெருக்க இயலாது; மூலதன உள்ளீடுகளும் (Capital-inputs) சரியாகப் பயன்படுத்தப்படாமல் வீணடிக்கப்படும் என்பதாம்.'[1]

1 Report of the Education Commission, 1966, p. 348.

பல்கலைக்கழக மானியக் குழு (Unverisity Grants Commisson, 1948-49)ல், வேளாண்மைக் கல்வியில் கணிசமான முன்னேற்றம் ஏற்படவில்லை. முன்னேற்றத்தைப் பெற தீவிர நடவடிக்கைகள் தேவை என்று குறிப்பிட்டது. கல்வியோடு வேளாண்மை நடவடிக்கைகளை இணைக்கவேண்டுமென்று அது கருதியது.

வேளாண்மைக் கல்விபற்றிய கல்விக் குழுவின் முக்கியப் பரிந்துரைகளைப் பின்வருமாறு தொகுத்துக் கூறலாம்.

1. ஒவ்வொரு மாநிலத்திலும் குறைந்தது ஒரு வேளாண்மை பல்கலைக் கழகமாவது இருக்கவேண்டும். இப் பல்கலைக்கழகங்கள் வேளாண்மைக் கல்வியை நாடுமுழுவதும் பரப்புவது அவசியம் வேளாண்மையில் சிறப்புத் தேர்ச்சி பெற்றவர்களால் உற்பத்தியை உறுதியாக உயர்த்த முடியும் வேளாண்மைப் பல்கலைக்கழகங்கள், மாநில வேளாண்மைத் துறைகள் ஆகியவற்றின் பொறுப்புகள் வரையறுக்கப்படவேண்டும். அவற்றில், போதுமான எண்ணிக்கையில் பணியாளர்கள் செயலாற்றவேண்டும். பல வேளாண்மை நூல்களைக்கொண்ட நூலகங்களை அளிப்பது நல்லது. பட்ட மேற்படிப்புக்கும் வகை செய்யவேண்டும். ஒவ்வொரு வேளாண்மைப் பல்கலைக்கழகமும் சுமார் 1000 ஏக்கர்கள் அளவிலான பண்ணைகளை நிர்வகிக்கவேண்டும்.

2. புதிய வேளாண்மைக் கல்லூரிகளை ஏற்படுத்தவேண்டும். வேளாண்மைப் பட்டப்படிப்பையும், பட்டமேற்படிப்பையும் பயிற்சி வசதிகளையும் வேளாண்மைப் பல்கலைக் கழகங்கள் அளிக்க வேண்டும். ஒவ்வொரு வேளாண்மைக் கல்லூரியும் குறைந்தது 200 ஏக்கர்கள் அளவு நிலத்தில் சிறப்பாக நிர்வகிக்கப்படுகின்ற [illegible] பண்ணையையாவது உடைமையாகப் பெற்றிருக்கவேண்டும்.

3. முக்கியத்துவ அடிப்படையில் பள்ளி இறுதிப்படிப்பு முடித்தவர்களுக்கு வேளாண்மைத் தொழில் நுட்பப் பயிற்சி அளிக்கலாம். இது வேளாண்மைப் பல்கலைக் கழகங்களோடு இணைக்கப்படுதல் அவசியம். வேளாண்மைத் தொழில் நுட்பப் பயிற்சிக் கூடங்கள் பல நோக்கங்களை நிறைவேற்றத்தக்கவைகளாக அமையவேண்டும்.

4. அடிப்படைக் கல்வியிலும் இடைநிலைக் கல்வியிலும் வேளாண்மைக் கல்வியைப் போதிப்பதற்கான நடவடிக்கைகளை எடுக்கவேண்டும். இதுவரை இந்த நடவடிக்கைகள் வெற்றி பெறவில்லை. வெற்றியைப் பெறும் வகையில் வேளாண்மைக் கல்வியைப் பரப்பவேண்டும்.

5. தனித் தேர்ச்சி பெற்ற பணியாளர்கள், விவசாயிகள் மேம்பாடான சாகுபடி முறைகளைக் கைக்கொள்வதற்கு உதவுதல் அவசியம். கிராம மக்கள் வேளாண்மைத் தொழிலைச் சிறப்பாகச் செய்பவர்களாக மாறவேண்டும். அதற்கான வசதிகளை வேளாண்மைப் பல்கலைக் கழகங்களும், தொழில் நுட்பப் பயிற்சிக் கூடங்களும் அளிக்கவேண்டும். முக்கியமாகத் தேர்ச்சி பெற்ற பணியாளர்களைக் கிராமப்புறங்களுக்கு அனுப்புவது இவற்றின் கடமையாகும்.

6. சிறப்பான வேளாண்மை வளர்ச்சியைப் பெறத் திரைப்படம் வானொலி முதலியவற்றின் மூலம் விளம்பரங்களைச் செய்யலாம். கிராமச் சமுதாயத்தினர்-குறிப்பாக விவசாயிகள் உயர்வான சாகுபடி முறைகளைப்பற்றி அறிய இவ்வகை வசதிகளைப் பயன்படுத்திக்கொள்ளலாம். அடிப்படை வேளாண்மை விரிவாக்க மையங்கள் நடத்தும் வகுப்புகளுக்குத் தனிப்பட்ட விவசாயிகள் வருமாறு செய்யவேண்டும். விவசாயிகள் தங்களுக்குள்ளாகவே உற்பத்தி முறைகள் பற்றிய கருத்துகளைப் பரிமாறிக் கொள்ளுமாறு செய்வது நன்மை பயக்கும்.

7. வேளாண்மை முன்னேற்றத்திற்கு மனிதச் சக்தி எந்த அளவுக்குத் தேவைப்படும் என்பதுபற்றிய சரியான புள்ளி விவரங்களைச் சேகரிப்பதற்கான முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும். வேளாண்மைப் பட்டதாரிகளின் எண்ணிக்கையையும், வேளாண்மைத் தொழில் நுட்பப் பயிற்சி பெற்றவர்களின் எண்ணிக்கையையும் அடுத்த பத்தாண்டுகளுக்குள் இரு மடங்காக்குவதற்கான தீவிர நடவடிக்கைகளைக் கைக்கொள்வது இன்றியமையாதது.

8. வேளாண்மைக் கல்வியைப் பரப்புவதையும், கல்வி, ஆராய்ச்சி, பயிற்சி, விரிவாக்கப் பணி ஆகியவற்றுக்கிடையே இணைப்பை ஏற்படுத்துவதையும் இந்திய வேளாண்மை ஆராய்ச்சிக் குழுவின், பொறுப்புகளாக விட்டுவிடவேண்டும். அதற்கு உதவக்கூடிய நிரந்தரமான மற்றொரு குழுவை ஏற்படுத்தி அதன் தலைவராகப் புகழ்ப்பெற்ற வேளாண்மை விஞ்ஞானி ஒருவரை நியமிக்கவேண்டும்.

தேவையின் அடிப்படையில் ஆராயும்போது நம் நாட்டில் வேளாண்மைக் கல்வி திருப்திகரமாக வளர்ந்திருக்கவில்லை. 1955—56 ஆம் ஆண்டில் இந்தியாவில் 77 வேளாண்மைப் பள்ளிக் கூடங்கள் மட்டுமே இருந்தன. அவற்றில், படித்த மாணவர்களின் எண்ணிக்கையும் குறைவாகவே இருந்தது. 5,000 என்ற எண்ணிக்கைக்குச் சற்று அதிகமானவர்களே அவற்றில் கல்வி

கற்றூர்கள். இரண்டாவது திட்டத்தில் 150 பள்ளிக் கூடங்கள் புதியனவாகத் தொடங்கக் கருதப்பட்டது. நாட்டின் 310 மாவட்டங்கள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு வேளாண்மைப் பள்ளிக்கூடமாவது நிறுவ வேண்டுமென்று திட்டமிடப்பட்டது. இதை நிறைவேற்றுவதற்கான 10 கிராம நிறுவனங்களை ஏற்படுத்த ரூ. 2 கோடி ஒதுக்கப்பட்டது. கல்வி நிறுவனங்களை ஏற்படுத்தும் திட்டத்தை நிறைவேற்ற 'கிராம உயர் கல்விக்குழு' (Council on Rural Higher Education) அமைக்கப்பட்டது.

மூன்றுவது, ஐந்தாண்டுத் திட்டத்தின் இடைக்கால மதிப்பீடு குறிப்பிட்டதாவது, 'புதிய தானியார்க் கல்லூரிகள் தோற்றுவிக்கப்பட்டமையால் வேளாண்மைக் கல்லுரிகளின் எண்ணிக்கை 65 ஆக உயர்ந்துள்ளது. இக் கல்லூரிகளில் நல்ல முறையில் சிறப்பான வேளாண்மைக் கல்வியைப் பயிற்றுவிப்பது அவசியம். இவ் வேளாண்மைக் கல்லூரிகளில் ஆண்டுதோறும் சேர்த்துக்கொள்ளப்படும் மாணவர்கள் சுமார் 7,500 பேர்களாவர். வேளாண்மைப் பல்கலைக் கழகங்கள் பந்த் நகர் (உத்தரப்பிரதேசம்), லூதியானு (பஞ்சாப்). உதைபூர் (ராஜஸ்தான்) புவனேஸ்வர் (ஒரிஸ்ஸா), ஆகிய இடங்களில் ஏற்படுத்தப்பட்டுள்ளன. ஆந்திரப்பிரதேசம், மைசூர், ஆகிய மாநிலங்களில் இதற்கான சட்டங்கள் இயற்றப்பட்டிருக்கின்றன. அத் திட்டக் காலத்தில் வேளாண்மைக் கல்லூரிகளின் எண்ணிக்கை 53-ல் இருந்து 57 ஆக உயர்ந்தது. ஆண்டுதோறும் அவற்றில் சேர்த்துக்கொள்ளப்பட்ட மாணவர்களின் எண்ணிக்கை 5,600-ல் இருந்து 6,200 ஆக அதிகரித்தது.

வேளாண்மைக் கல்வியின் வள்ர்ச்சியைப் பின்வரும் அட்டவணைமூலம் அறியலாம்.

**வெவ்வேறு ஆண்டுகளில் வேளாண்மைக் கல்லூரிகளில் சேர்த்துக் கொள்ளப்பட்டவர்களின் எண்ணிக்கையும், பட்டதாரிகளின் எண்ணிக்கையும்**

| ஆண்டு | கல்லூரிகளின் எண்ணிக்கை | சேர்த்துக்கொள்ளப்பட்டவர்களின் எண்ணிக்கை | வெளியேறிய பட்டதாரிகளின் எண்ணிக்கை |
|---|---|---|---|
| 1951—52 | 19 | 1060 | 1065 |
| 1955—56 | 30 | 1989 | 886 |
| 1960—61 | 53 | 5934 | 2090 |
| 1964—65 | 66 | 8935 | 4731 |

1 Fourth Five-year Plan—A Draft Outline, p. 120.

மேலே கொடுக்கப்பட்டிருக்கும் அட்டவணையின்படி வேளாண்மைக் கல்லூரிகளின் எண்ணிக்கை மும்மடங்கு பெருகியுள்ளது. சேர்த்துக்கொள்ளப்படும் மாணவர்களின் எண்ணிக்கை முதல் திட்டக் காலத்திலிருந்து சுமார் எட்டு மடங்கு அதிகரித்துள்ளது.

நான்காவது திட்டத்தில் வேளாண்மைப் பட்டதாரிகளின் தேவை 29,000 ஆக இருக்குமெனக் கணிக்கப்பட்டது. ஒவ்வொரு வட்டத்திற்கும் (Block) 10 வேளாண்மை விரிவாக்க அலுவலர்களை நியமித்தால், அவர்களின் தேவை ஐந்தாவது திட்டத்தில் 44,750 ஆக இருக்கும். இந்த அளவுக்கு வேளாண்மைப் பட்டதாரிகளைப் பெற வேண்டுமானால், நான்காவது திட்டத்தின் முதல் ஆண்டில் 8,900 முதல் 9,500 வரையிலான மாணவர்களையும் இறுதி ஆண்டில் 11,500 மாணவர்களையும் வேளாண்மைக் கல்லூரிகளில் சேர்த்துக்கொள்ளப்படும். நான்காவது திட்டக் காலத்தில் வேளாண்மைக் கல்லூரிகளின் எண்ணிக்கையைப் பெருக்குவதற்கான வாய்ப்புகளும் குறைவாகவே உள்ளன.

தற்பொழுது தமிழ்நாட்டில் கோயம்பத்தூரில் இருந்த வேளாண்மைக் கல்லூரி, வேளாண்மைப் பல்கலைக்கழகமாக மாற்றப்பட்டிருக்கின்றது. எனினும், நம் மாநிலத்தில் வேளாண்மைக் கல்லூரிகளின் எண்ணிக்கை அதிகரிக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. புதிதாகக் கல்லூரிகளைத் தொடங்க அதிகச் செலவு பிடிக்கின்றது. ஆகவே, இருக்கக்கூடிய கல்லூரிகளிலேயே சேர்த்துக்கொள்ளப்படும் மாணவர்களின் எண்ணிக்கை உயர்த்தப்பட்டுள்ளது. விவசாயிகளின் சந்ததியினருக்காக 300 வேளாண்மைத் தொழிற்பள்ளிகளை அமைக்கத் திட்டமிடப்பட்டிருக்கின்றது. இப்பொழுது இருக்கக்கூடிய வேளாண்மைப் பல்கலைக்கழகங்கள் விரிவுபடுத்தப்படும். அதன்மூலம் பெறப்படும் அனுபவத்திற்கேற்பவே புதிய வேளாண்மைப் பல்கலைக் கழகங்கள் ஏற்படுத்தப்படும்.

நான்காவது திட்டக் காலத்தில் 80 கிராம சேவக் பயிற்சி மையங்கள்' (Gram Sevak Training Centres) உயர்நிலைப்படுத்தப் படும். மூன்றாவது திட்டத்தில் 20 கிராம சேவக் பயிற்சி மையங்கள் உயர்நிலைப்படுத்தப்பட்டன. அதன் மூலம் கிராம சேவக்குகளுக்கு (Gram Sevaks) உயர்நிலைப் பயிற்சிகள் அளிக்கப்பட்டன. தெரிந்தெடுக்கப்பட்ட கிராம சேவக்குகள் இவ்விதப் பயிற்சிகளைப் பெற்றார்கள். கிராமப் புறங்களில் கல்வி வசதியைப் பெருக்க விவசாயிகளுக்கான கல்வி மையங்கள்' (Farmers' Education

Centres) அமைக்கப்படவேண்டும். ஓரளவு கல்வியறிவையாவது அவர்கள் பெற்றால்தான் வேளாண்மை செழிக்கும். உற்பத்தியைப் பெருக்க வேண்டியதன் அவசியத்தை அவர்கள் உணர்வார்கள். எனவே, ஆதாரக் குறியையாவது விவசாயிகள் பெறுமாறு செய்வது அவசியமாகின்றது. வேளாண்மைப் பல்கலைக்கழகங்களோடு எல்லாப் பயிற்சி மையங்களும், கல்வி நிலையங்களும், விதைப் பண்ணைகளும், ஆராய்ச்சிக் கூடங்களும் தொடர்பைக் கொண்டிருத்தல் இன்றியமையாதது.

### வேளாண்மை ஆராய்ச்சி

வேளாண்மை மீதான ராயல் குழு நம் நாட்டில் வேளாண்மை ஆராய்ச்சியின் அவசியத்தை உணர்த்தியது. அதன் பரிந்துரைகளின் அடிப்படையிலேயே இந்திய வேளாண்மை ஆராய்ச்சிக் குழு 1929ஆம் ஆண்டில் ஏற்படுத்தப்பட்டது. அது முதல் அக் குழு பயனுள்ள பல பணிகளை ஆற்றிவருகிறது. அஃது அமைத்துள்ள மத்திய வேளாண்மை அமைப்புகள் வேளாண்மைச் சிக்கல்களைத் தீர்க்க உதவுகின்றன. கால் நடைப் பராமரிப்புக்கான பல வசதிகள் செய்து தரப்படுகின்றன. நிதியுதவி தரப்படுகிறது. பல அரிய ஆலோசனைகளையும் அவை தருகின்றன. பலவகை ஆராய்ச்சிகளிலும் உள்ள பிரச்சினைகள் தவிர்கப்படுகின்றன. இக் குழு ஆராய்ச்சிப் பணிகளோடு வேளாண்மை விரிவாக்க, முன்னேற்றப் பணிகளிலும் ஈடுபடுகின்றது. இது பல முறை மாற்றியமைக்கப்பட்டது சமீப காலத்தில் இது முற்றிலுமாக மாற்றியமைக்கப்பட்டுத் தானே இயக்கும் பல அதிகாரங்களைக் கொண்ட அமைப்பாக உள்ளது. எல்லா வேளாண்மை ஆராய்ச்சிப் பணிகளையும் கட்டுப்படுத்தி மேற்பார்வையிடும் அமைப்பாக இஃது இருக்கின்றது. வேளாண்மை அமைச்சகத்தின் ஒன்பது ஆராய்ச்சி நிலையங்களையும் நிர்வகித்துக் கட்டுப்படுத்தும் பொறுப்பு இதைச் சார்ந்ததாக இருக்கிறது. இவ் வகை பொறுப்பு இதனிடம் ஏப்ரல் 1966-ல் அளிக்கப்பட்டது. 'மத்தியப் பொருள் குழுவின்' (Central Commodity Committee) ஆராய்ச்சிப் பணிகள் இந்திய வேளாண்மை ஆராய்ச்சிக்குழுவோடு இணைக்கப்பட்டுள்ளன. இக் குழுக்களில் வேளாண்மை விஞ்ஞானிகள் பணியாற்றி வருகின்றனர்கள்.

சிறிய வேளாண்மை ஆராய்ச்சிக் குழு ஒன்பது ஆராய்ச்சி நிலையங்களை ஏற்று நடத்தி வருகின்றது. [1] இஃது எட்டுப் பொருள் ஆராய்ச்சி நிலையங்களின் நிர்வாகத்தைக் கட்டுப்படுத்துகின்றது.[2]

[1] Indian Agricultural Research Institute, New Delhi;

[2] Indian Veterinary Research Institute, Izatnagar;

இந்திய வேளாண்மை ஆராய்ச்சிக் குழு நாட்டில் உள்ள எட்டுவேளாண்மைப் பல்கலைக் கழகங்களின் ஆராய்ச்சி நடவடிக்கைகளில் இணைப்பை ஏற்படுத்துகின்றது. இஃது அகில இந்திய இணைப்பு ஆராய்ச்சித் திட்டங்கள் பலவற்றைத் தொடங்கியுள்ளது. உணவுத் தானியங்கள், கால்நடைத் தீவனங்கள், தொழில் துறைக்குத் தேவையான கச்சாப் பொருள்கள், புவியியல், வேளாண்மைத் தொழில் நுட்பம், கால்நடையியல் முதலிய பல பிரிவுகளிலும் ஆராய்ச்சிகள் செய்யப்படுகின்றன. இத் திட்டங்களின் அடிப்படை நோக்கம் குறுகிய காலத்தில் வேளாண்மை உற்பத்தியைப் பெருக்குவதாகும். நாடு முழுவதும் இவ் வகை ஆராய்ச்சித் திட்டங்கள் கைக்கொள்ளப்படுகின்றன. இந்திய வேளாண்மை ஆராய்ச்சிக் குழு திட்டங்களை நெறிப்படுத்தி மேற்பார்வை இடுகின்றது. தொழில் நுட்ப உதவிகளும் அளிக்கப்படுகின்றன. மத்திய, மாநில ஆராய்ச்சி நிறுவனங்களின் விஞ்ஞானிகள் ஒரு குழுவாக இணைந்து செயல்படுவதும் உண்டு. அவர்கள் தொழில் நுட்பத் திட்டங்களின் விவரங்களைச் சேகரித்து, அதற்கேற்ப முன்னேற்றத்திற்கான வழிமுறைகளைப் பின்பற்றுகின்றார்கள். ஆராய்ச்சிகளின் வெற்றியைப்பற்றி ஆய்வு செய்யப்படுகின்றது. வருங்கால வேளாண்மை வளர்ச்சிக்கு இவையாவும் உதவுகின்றன.

செப்டம்பர் 1967 வரை இக் குழு 26 இணைப்பு ஆராய்ச்சித் திட்டங்களைக் கைக்கொண்டது. அகில இந்திய சோள அபிவிருத்தி இணைப்புத் திட்டமும், அகில இந்திய கோதுமை ஆராய்ச்சித் திட்டமும் வெற்றிகரமாக நிறைவேற்றப்பட்டுள்ளன.

---

(352-ம் பக்கத் தொடர்ச்சி)

3. National Dairy Research Institute, Karnal;
4. Central Rice Research Institute, Cuttack;
5. Central Potato Research Institute, Simla;
6. Central Arid Zone Research Institute, Jodhpur;
7. Central Tuber Crops Research Institute, Trivandrum;
8. Central Sheep and Wool Research Institute, Malpura;
9. Indian Grassland and Fodder Research Institute, Jhansi;

[2] 1. Indian Lac Research Institute, Namkum;
2. Central Tobacco Research Intitute, Rajamundry;
3. Jute Agricultural Research Institute, Barrackpore;
4. Technological Research Laboratory (Cotton) Matunga;
5. Technological Research Laboratory (Jute), Tollygunge;
6. Central Coconut Research Station, Kasargod;
7. Central Arecanut Research Station, Vittal;
8. The Creamery, Anand.

வேளாண்மை உற்பத்தியில் புரட்சிகரமான முன்னேற்றம் தோன்றியுள்ளமைக்குப் பல பயிர்களின் புதிய விதைகளே காரணமாகும். அவ் விதைகள் ஆராய்ச்சிகளின்மூலமே கண்டு பிடிக்கப்பட்டன. அரிசி, கோதுமை, மக்காச்சோளம் முதலியவற்றில் அமோக விளைச்சலைத் தரக்கூடிய விதைகள் நாடு முழுவதும் பரப்பப்பட்டு வருகின்றன. நாட்டில் நிலவும் பசுமைப் புரட்சிக்கு இது முக்கியக் காரணமாகும். 1967-68-ல் பொதுச் சாகுபடிக்காகப் புதிய குட்டை ரக ஷராபதி (Sharbati), சோனோரா (Sonora), கல்யான்சோனு (Kalyansona), சோனலிகா (Sonalika), சேஃப்டு லெர்மா (Safed Ierma), எஸ். 331 (S.331) விதைகள் வெளிக் கொணரப்பட்டன.

வறட்சி நிலைகளிலும்கூட, அதிக உற்பத்தியைத் தரக்கூடிய விதைகளைக் கண்டுபிடிக்க குழு நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளது. பல வேளாண்மைப் பயிர்களுக்கான புதிய விதைகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

### இந்திய வேளாண்மை ஆராய்ச்சி நிறுவனம் (Indian Agriculture Research Institute)

இது பொதுவாகப் 'பூசா நிறுவனம்' என்று அழைக்கப்படுகிறது. 1905ஆம் ஆண்டு பூசாவில் (வடக்கு பீஹார்) ஏற்படுத்தப்பட்ட இந்த நிறுவனம் 1936 ஆம் ஆண்டு புது டில்லிக்கு மாற்றப்பட்டது. பீஹாரில் ஏற்பட்ட பூகம்பமே இதற்குக் காரணமாகும். வேளாண்மை ஆராய்ச்சியில் இது முன்னோடியாகத் திகழ்ந்தது. இந்திய வேளாண்மையில் சிறப்பான மாற்றங்கள் தோன்றியதற்கு இது காரணமாக இருந்தது. இது புகழ்பெற்ற ஒரு வேளாண்மை ஆராய்ச்சி நிறுவனமாகத் தற்போது இருக்கிறது.

முதலில் இந்திய வேளாண்மை ஆராய்ச்சி நிறுவனம் ஐந்து பிரிவுகளை மட்டுமே கொண்டு இயங்கி வந்தது. தற்பொழுது அது 17 பிரிவுகளைக் கொண்டதாக இருக்கின்றது. அது தானே ஆராய்ச்சித் திட்டங்களில் ஈடுபடுவதோடு வேளாண்மை அமைப்புகள், நிறுவனங்கள், மாநில வேளாண்மைத் துறைகள், வெளி நாட்டு நிறுவனங்கள்[1] ஆகியவற்றோடு இணைந்தும் ஆராய்ச்சிகளைச் செய்கின்றது.

[1] Rockofeller Foundation;
Indo—U.S. Technical Co-operation Mission;
U S A I. D;
F. A. O;
Ford Foundation;
International Atomic Energy Agency.

ஒரு பல்கலைக் கழகத்திற்குரிய அந்தஸ்து அந்தநிறுவனத்திற்கு அளிக்கப்பட்டுள்ளது. அது பெரிய நூலகத்தையும், பயிற்சி பெற்ற பெரிய விஞ்ஞானிகளின் குழுவையும் கொண்டிருக்கின்றது. எல்லா வசதிகளையும் கொண்ட பரிசோதனைச் சாலைகள் இருக்கின்றன. சுமார் 22,000 என்ற அளவிற்கும் அதிகமான பூச்சி வகைகள் பாடம் செய்து வைக்கப்பட்டுள்ளன. கிழக்கு ஆசிய நாடுகளிலேயே இஃது ஒரு சிறப்பான ஆராய்ச்சி நிறுவனமாக இயங்கி வருகின்றது. அதனிடம் சுமார் 500 வகைப்பட்ட பயிர்களின் 27,000 மாதிரிகள் உள்ளன.

டில்லியின் புறநகர்க் கிராமங்களில் இது பரந்த சாகுபடித் திட்டத்தைப் பரப்பி வருகின்றது. ஆராய்ச்சியின் நன்மைகள் இவ்வாறு செயல்படுத்தப்படுவதால், விவசாயிகள் பயனடைந்துள்ளார்கள். தோட்டக்கலை வளர்வதற்கும் இஃது உதவுகின்றது. டில்லியின் உள்ள ஒரு கிராமத்தில் விதைகள் மட்டுமே தனித் தேர்ச்சி பெற்றவர்களால் உற்பத்தி செய்யப்படுகின்றன. அவ் விதைகளின் உற்பத்தி டில்லி முழுவதுக்குமே போதுமானதாக இருக்கும். வெவ்வேறு ரக விதைகள் அங்கு உற்பத்தியாகின்றன.

நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் வேளாண்மை ஆராய்ச்சிக்கு முக்கியத்துவம் தரப்பட்டுள்ளது. விஞ்ஞான அடிப்படையில் வேளாண்மையை வளர்க்க வேண்டுமென்று அரசு கருதுகின்றது. உணவுத் தானியங்களின் உற்பத்தியில் தன்னிறைவு பெறுவதற்காக அதிக விளைச்சலைத்தரும் விதைகளைப் பயன்படுத்தும் திட்டங்கள் கைக்கொள்ளப்பட்டுள்ளன. இது பற்றித் திட்டக்குழு குறிப்பிடுவதாவது, 'நாடு முழுவதும் பல வகைப்பட்ட பயிர்களின் உற்பத்தியைப் பெருக்குவதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன. குறிப்பிட்ட வகை விதைகள் விவசாயிகளுக்குப் பரிந்துரைக்கப்படுகின்றன. முக்கியமான காய்கறி வகைகள் பெருக்கப்பட்டு வருகின்றன. புதிய வகைக் கால்நடைத் தீவனங்களும் உற்பத்தியாகின்றன. இவை எல்லாவற்றிலும் ஆராய்ச்சி முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. ஆராய்ச்சி நடவடிக்கைகள் விரிவாக்கம் பெற்றிருக்கின்றன. இதற்காக மேலும் அதிக நிதி ஒதுக்கப்பட இருக்கின்றது. இணைக்கப்பட்ட திட்டங்கள் பல சிறப்பாகச் செயல்பட்டு வருகின்றன. வறட்சிப் பகுதிகளில் பயிரிடத்தக்க விதைகளைக் கண்டுபிடித்துப் பயன்படுத்துவது அவசியம். சிறப்பான நீர்ப்பாசன வசதிகளைக் கொண்டில்லாத இடங்களில் வேளாண்மை உற்பத்தியைப் பெருக்குவதற்கான

நடவடிக்கைகள் எடுக்கப்படவேண்டும். இவற்றிற்கு முக்கியத்துவம் அளிப்பதன் மூலமே உற்பத்தியைக் கூட்ட இயலும்.[1]

மண்ணியல்பு, நீர்ப்பாசனம் ஆகியவற்றைப்பற்றி விஞ்ஞான ரீதியில் ஆய்வு செய்யப்படுகிறது. பேரளவில் உரங்களைச் சோதனை செய்வதற்கான விஞ்ஞானத் திட்டங்களும் உள்ளன. உரங்களின் பயனை விவசாயிகள் அறியுமாறு செய்யப்படுகின்றது. முறையாகவும், விரிவாகவும், விரைவாகவும் பரிசோதனை முறைப் பண்ணைகள் 'இயக்கப்படவேண்டும். விஞ்ஞானச் சாகுபடியின் மூலம் ஏற்படக்கூடிய நன்மைகளை விவாசயிகளுக்கு உணர்த்தும் பணியில் வேளாண்மை விஞ்ஞானிகளும், ஆராய்ச்சிப் பணியாளர்களும் ஈடுபடவேண்டும். 'வேளாண்மை ஆராய்ச்சி, பரிசோதனை நிலையங்கள்' (Agricultural Research and Experimentation Stations) நாடெங்கும் அதிக எண்ணிக்கையில் தோற்றுவிக்கப்படுதல் அவசியம். மேம்பாடான உற்பத்தித் தொழில் நுட்பங்களை விவசாயிகள் பின்பற்றுமாறு செய்யவேண்டும். 1966—67-ல் 2,000 பரிசோதனைகள் செய்யப்பட்டன. அவற்றுள் ஆயிரம் பரிசோதனைகள் நெல் உற்பத்திப் பெருக்கத்திற்காக கைக்கொள்ளப்பட்டன.

### வேளாண்மைப் புள்ளி விவரங்கள்

திட்டமிட்டு வேளாண்மை வளர்ச்சியைப் பெறப் புள்ளி விவரங்கள் தேவைப்படுகின்றன. சுதந்திரமடைவதற்கு முன்னர், வேளாண்மைப் புள்ளி விவரங்கள் போதுமான அளவில் திரட்டப்படவில்லை. நிறைவேற்றப்பட்டுள்ள மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களின் காலத்திலும் புள்ளிவிவரங்களைச் சேகரிப்பதற்கான முயற்சிகளில் சிறப்பான முன்னேற்றம் ஏற்பட்டது. எதிர்காலத்தில் இதில் மேலும் அதிகக் கவனத்தைச் செலுத்துவது அவசியமாகின்றது.

நிலப் பயன்பாடு, உற்பத்திப் பயிர்கள், நீர்ப்பாசனம், காடுகள், கால்நடைகள், கோழிகள், வேளாண்மைப் பொருள்களின் வாணிபம், நுகர்வு, இருப்பு, வேளாண்மை விலைகள், வேளாண்மை உழைப்பாளர், கூலிகள் முதலியன பற்றிய புள்ளிவிவரங்கள் கிடைக்கப் பெறுகின்றன. முக்கியமான வேளாண்மைப் புள்ளி விவரம் பல வகைப் பயிர்களும் எந்த அளவுப் பரப்புள்ள நிலத்தில் சாகுபடி செய்யப்படுகின்றன என்பது பற்றியதேயாகும். இது பற்றிய தெளிவான புள்ளிவிவரம் 1884ஆம் ஆண்டு முதல் கிடைக்கின்றது. இப்பொழுதும் இப் புள்ளி விவரம் தொடர்ந்து சேகரிக்கப்பட்டு வருகிறது.

1. Fourth Five—year plan, A Draft outline. pp. 196—97.

முதல் திட்டத்தின் தொடக்கத்தில் சுமார் 47 சதவீதச் சாகுபடி நிலத்தின் பயன்பாடு பற்றிய முழுமையான புள்ளிவிவரம் கிடைத்தது; சுமார் 22 சதவீத நிலத்தில் தோராயமான கணக்கெடுப்புச் செய்யப்பட்டது; எஞ்சிய 31 சதவீதச் சாகுபடி நிலம் பற்றிய புள்ளிவிவரம் கிடைக்கப் பெறவில்லை.

மூன்று திட்டங்களிலும் மேற்கொண்ட முயற்சிகளின் பயனாக 75 சதவீத நிலம் பற்றிய முழுமையான புள்ளி விவரம் கிடைக்கப் பெற்றது. மாதிரிக் கணக்கெடுப்பின் மூலம் மேலும் 5 சதவீத நிலம் எவ்வாறு பயன்படுத்தப்படுகிறது என்பது அறியப்படுகின்றது. வேறு வழியிலும் சில இடங்களில் நிலப்பயன்பாடு பற்றிய புள்ளிவிவரங்கள் கிடைக்கின்றன. மொத்த நிலத்தில் சுமார் 10 சதவீதம் பற்றிப் புள்ளிவிவரங்களே இப்பொழுது கிடைக்கவில்லை. மாதிரிக் கணக்கெடுப்பின்மூலம் ஒவ்வோர் ஆண்டும் பல வேறு பயிர்களின் உற்பத்தியளவுபற்றிய புள்ளிவிவரங்கள் சேகரிக்கப்படுகின்றன. உணவுத் தானியங்கள் உற்பத்தி செய்யப்படும் நிலத்தில் 95 சதவீதமும், பருப்பு வகைகள் பயிரிடப்படும் நிலத்தில் 75 சதவீதமும், கரும்பு உற்பத்தி செய்யப்படும் நிலத்தில் 90 சதவீதமும், எண்ணெய் வித்துகள் உற்பத்தியாகும் நிலத்தில் 60 சதவீதமும், பருத்தி, சணல் உற்பத்தியாகும் நிலத்தில் 95 சதவீதமும் மாதிரிக் கணக்கெடுப்புகள் செய்யப்பெறுகின்றன.

விரைவில் 'வேளாண்மைக் கணக்கெடுப்பைச்' (Agricultural Census) செய்ய வேண்டுமென 'உணவு, வேளாண்மை அமைப்புப்' பரிந்துரைத்தது நாட்டின் கிராமங்களில் வேளாண்மை முன்னேற்றம் எந்த அளவிற்கு ஏற்பட்டுள்ளது, விவசாயிகள் எவ்வகை உற்பத்தி முறைகளைப் பின்பற்றுகின்றனர் என்பது பற்றிய முறையான புள்ளி விவரங்களைத் திரட்டுவது இன்றியமையாதது. வேளாண்மைத் துறையில் அரசு அதிக முதலீட்டைச் செய்கின்றது. அதன் நன்மைகளை விவசாயிகள் பெறுகிறார்களா என்பதை அறிய புள்ளி விவரங்கள் தேவைப்படுகின்றன. விஞ்ஞான ரீதியில் புள்ளி விவரங்களைச் சேகரிக்கும் முறை அமைந்திருக்க வேண்டும். இதற்குப் புள்ளி விவரங்களைச் சேகரிக்கும் முறைகளிலும், சேகரிக்கும் நிறுவனங்களிலும் உள்ள குறைபாடுகளை நீக்குவது அவசியமாகும்.

### வேளாண்மையில் மனித உழைப்பின் தேவை

இந்தியாவில் வேளாண்மையில் உள்ள குறைபாடுகளைக் களைவதில் போதுமான கவனம் செலுத்தப்படவில்லை. வேளாண்மையில் மனித உழைப்பின் தேவை எந்த அளவிற்கு இருக்கின்றது

என்பதைக் கணக்கிடுவது கடினமாக உள்ளது. அரசின் பண்ணை களில் பணியாற்றுகின்ற உழைப்பாளர்கள், பெரிய நிலக்கிழார் களிடம் பணியாற்றுகின்ற வேளாண்மை உழைப்பாளர்கள் ஆகியோர் பற்றிய கணக்கெடுப்பைச் செய்வது எளிது. இந்திய வேளாண்மையைச் சார்ந்த தொழில்களை வளர்க்கத் திட்ட மிட்டுள்ளது. அத் தொழில்களில் உழைப்பாளர்களின் தேவை யைச் சரியாகக் கணிப்பது கடினம். பகுதி நேர உழைப்பை வேளாண்மையில் தருபவர்களின் எண்ணிக்கையையும் துல்லிய மாக அளவிட முடியாது. கவனமாகவும், சரியாகவும் புள்ளி விவரங்களைத் திரட்டுவதன்மூலம் வேளாண்மை வளர்ச்சித் திட்டங்களில் வெற்றி பெறலாம்.

பயிற்சி பெற்ற வேளாண்மைப் பட்டதாரிகளைப் பற்றிய புள்ளி விவரங்கள் பல நிறுவனங்களின் கணக்கெடுப்பினின்றும் தெரிகின்றது.[1] சான்றிதழ் மட்டும் பெறுகின்ற தொழில் நுட்பப் பயிற்சியாளர்களின் எண்ணிக்கைபற்றிய விவரம் கிடைக்கவில்லை.

'தற்பொழுது வேளாண்மைப் பட்டதாரிகள் பெரும்பாலும் தொழில் நுட்பப் பணியாற்றுகின்றனர்; ஆனால், அவர்களின் எண்ணிக்கை குறைவானதே. அதிக எண்ணிக்கையில் பட்ட தாரிகள் வேளாண்மை விரிவாக்க அலுவலர்களாகப் (Agricultural Extension Officers) பணி புரிகின்றார்கள். 'செறிந்த வேளாண்மை மாவட்டத் திட்டம்' (Intensive Agriculture District Programme IADP) செயல்படுத்தப்படும் மாவட்டங்களில் ஒரு வட்டத்திற்குச் சுமார் 5 வேளாண்மை விரிவாக்க அலுவலர்கள் பணியாற்று கின்றார்கள். பிற மாவட்டங்களில் இவ் வெண்ணிக்கை ஒன்று அல்லது இரண்டாக மட்டுமே இருக்கின்றது.'

இது குறித்து இரு கணக்கெடுப்புகள் கிடைக்கப் பெறுகின்றன. அவை வேளாண்மைப் பட்டம் பெற்றவர்கள் எந்த அளவிற்குத் தேவைப்படுவார்கள், வேளாண்மைப் பட்டதாரிகள் எந்த எண்ணிக்கையில் கிடைப்பார்கள் என்பதை உணர்த்துகின்றன. அக் கணக்கெடுப்புகளின் மதிப்பீடுகளைப் பின்வரும் அட்டவணை களின்மூலம் அறியலாம்:[2]

1 Institute of Applied Manpower Research;
Planning Unit of the Indian Statistical Institute, New Delhi;
Unit for Economic and Statistical Studies on Higher Education;
Perspective Planning Division of the Planning Commission.

2 ISE/LSE Paper quoted in the Report of the Education Commisson, pp. 92—94.

**1961—86ஆம் ஆண்டுகளில் வேளாண்மைப் பட்டதாரிகள் தேவைப்படும் வேலைகளின் எண்ணிக்கை**

| | | 1961 | 1986 |
|---|---|---|---|
| வேளாண்மை வளர்ச்சி, விரிவாக்கம் | ... | 9,780 | 1,00,000 |
| வேளாண்மை ஆராய்ச்சி | ... | 2,976 | 10,000 |
| மற்றவை (பண்ணை, கல்வி கற்பித்தல் நீங்கலாக) | ... | 1,342 | 10,000 |
| பண்ணை | ... | ... | 50,000 |
| இரண்டாவது மட்டக் கல்வி கற்பித்தல் | ... | ... | 1,00,000 |
| பட்டப்படிப்பு, மேல் பட்டப்படிப்பு ஆகியவற்றிற்குக் கல்வி கற்பித்தல் | ... | 1,872 | 35,000 |
| மொத்தம் | ... | 15,970 | 3,05,000 |

**வேளாண்மைப் பட்டதாரிகளின் எண்ணிக்கைபற்றிய மதிப்பீடு**

| | | 1960-61 | 1975-76 | 1985-86 |
|---|---|---|---|---|
| வேளாண்மைப் பட்டதாரிகளின் மொத்தத்தேவை (ஆயிரத்தில்) | ... | 14 | 94 | 305 |
| எல்லாப் பட்டதாரிகள் மொத்த இருப்பில் சதவீதம் | ... | 1.02 | 2.8 | 4.7 |
| வேளாண்மைப் பட்டதாரிகளின் எண்ணிக்கை (ஆயிரத்தில்) | ... | 3 | 13 | 42 |
| எல்லாப் பட்டதாரிகளின் மொத்த எண்ணிக்கையில் சதவீதம் | ... | 2 | 3 | 5 |

அட்டவணையின்படி, 1986ஆம் ஆண்டில் நம் நாட்டில் 3,05,000 என்ற எண்ணிக்கையில் மொத்த வேளாண்மைப் பட்டதாரிகளின் தேவை இருக்கும். ஆயினும் இதில் வேளாண்மைக் கல்லூரிகளில் கல்வி போதிப்பவர்களின் எண்ணிக்கை அடங்கவில்லை. 1960—61ஆம் ஆண்டில் 3,000ஆக இருந்த வேளாண்மைப் பட்டதாரிகளின் எண்ணிக்கை 1985—86ஆம் ஆண்டில் 42,000 ஆக உயரும். ஆனால், இஃது அந்த ஆண்டில் தேவைப்படுகின்ற மொத்த வேளாண்மைப் பட்டதாரிகளின் எண்ணிக்கையில் சுமார் 5 சதவீதம் மட்டுமேயாகும். எண்ணிக்கையைக் கூட்ட

அரசு, மேலும் தீவிர நடவடிக்கைகளை எடுக்கவேண்டுமென்பதை இஃது உணர்த்துகின்றது.

**சுதந்திரமடைந்த பின்னர், வேளாண்மைத் திட்டங்கள்**

முதல் திட்டம் தொடங்கப்பெற்றபோது இந்தியப் பொருளாதாரம் சீர்கேடான நிலையில் இருந்தது. மக்களின் வருமானமும், நுகர்வும் மிகத் தாழ்வான நிலையில் இருந்தன. இரண்டாவது உலகப்போரினாலும், நாடு பிரிவினை செய்யப்பட்டதாலும் உணவுப் பற்றுக்குறையும் கச்சாப் பொருள்களின் போதா நிலையும் தோன்றின. உற்பத்தித் திறனுக்குக் குறைவாகத் தொழில் உற்பத்தியின் அளவு இருந்தது. போக்குவரத்து வசதிகள் போதுமான அளவிற்கு வளர்ந்திருக்கவில்லை. பொது மக்களின் புனர்வாழ்வுப் பணிகளுக்காக அரசு அதிகச் செலவு செய்ய வேண்டியிருந்தது.

ஜூன் 1950-ல் தோன்றிய 'கொரியப் போர்' (Korean War) 1950—51 ஆம் ஆண்டின் வேளாண்மை உற்பத்திக் குறைவு, போன்றவற்றால் நிலைமை மேலும் மோசமடைந்தது. உழைப்பாளர்களின் வேலை ஈடுபாட்டு முறையிலும் குறைபாடு இருந்தது. மொத்த உழைப்பாளர்களில் சுமார் 64 சதவீதத்தினர் வேளாண்மையில் ஈடுபட்டிருந்தனர். எனவே, முதல் ஐந்தாண்டுத் திட்டம் இரு முக்கிய நோக்கங்களின் அடிப்படையில் தொடங்கப்பெற்றது. முதலாவதாக, பொருளாதாரத்தில் இருந்த சமனமற்ற நிலையைப் போக்கக் கருதப்பட்டது. இரண்டாவதாக மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தவும், தேசிய வருமானத்தை அதிகரிக்கவும் பொருளாதாரத்தின் எல்லாத் துறைகளிலும் ஒரே சமயத்தில் சரிசம வளர்ச்சியைப் (Balanced Development) பெறவேண்டியது அவசியமென்று அறியப்பட்டது.

முதல் திட்டத்தில் வேளாண்மை, நீர்ப்பாசனம், மின்சார உற்பத்தி ஆகியவற்றிற்கு முதல் முக்கியத்துவம் தரப்பெற்றது. ஏனெனில், இவற்றில் முன்னேற்றத்தைப் பெறாமல் உணவு உற்பத்தியிலும், தொழில் துறைக்குத் தேவையான அடிப்படைக் கச்சாப் பொருள்களின் உற்பத்தியிலும் கணிசமான உயர்வைப் பெற இயலாது. தொழில் முன்னேற்றத்தைப் பெற வேளாண்மை வளர்ச்சி அடிப்படையாக அமைகின்றது. இதன் காரணமாக மொத்த முதலீடாகிய ரூ. 1,960 கோடியில் ரூ. 291 கோடி வேளாண்மை, சமுதாய முன்னேற்றத்திற்கும் (மொத்த முதலீட்டில்: 15%), ரூ. 310 கோடி பெரிய நடுத்தர நீர்ப்பாசனத் திட்டங்களுக்கும் (16%), ரூ. 260 கோடி இயக்கச் சக்தியின்

உற்பத்திக்கும் (13%), ஒதுக்கப்பட்டன. இத் திட்டம் குறிப்பிடத் தக்க அளவிற்கு வெற்றியைப் பெற்றமைக்கு இஃது காரணமாக அமைந்தது.

### முதல் திட்டத்தின் குறியிலக்குகள்

முதல் ஐந்தாண்டுத் திட்டம் வேளாண்மை வளர்ச்சிக்குச் சிறப்பு முக்கியத்துவம் அளித்திருந்தது. அது வேளாண்மைப் பொருள்களின் உற்பத்தி உயர்வுக்கான குறியிலக்குகளைப் பின் வருமாறு நிர்ணயித்தது: [1]

| பொருள் | அலகு | அடிப்படை ஆண்டு உற்பத்தி | அதிக உற்பத்திக்கான குறியிலக்கு | சதவீத உயர்வு |
|---|---|---|---|---|
| உணவுத் தானியங்கள் ... | மில்லியன் டன்கள் | 54.0 | 7.6 | 14 |
| முக்கிய எண்ணெய் வித்துகள் ... | மில்லியன் டன்கள் | 5.08 | 0.4 | 8 |
| கரும்பு ... | மில்லியன் டன்கள் | 5.6 | 0.7 | 13 |
| பருத்தி ... | மில்லியன் பேல்கள் | 2.9 | 1.3 | 45 |
| சணல் ... | மில்லியன் பேல்கள் | 3.3 | 2.1 | 64 |

முதல் திட்டக் காலத்தில் உணவுத் தானியங்களின் உற்பத்தியை 54 மில்லியன் டன்களிலிருந்து 61.6 மில்லியன் டன்களாகவும் எண்ணெய் வித்துகளின் உற்பத்தியை 5.08 மில்லியன் டன்களிலிருந்து 5.48 மில்லியன் டன்களாகவும்; கரும்பு உற்பத்தியை 5.6 மில்லியன் டன்களிலிருந்து 6.3 மில்லியன் டன்களாகவும், பருத்தி உற்பத்தியை 2.91 மில்லியன் பேல்களிலிருந்து 4.2 மில்லியன் பேல்களாகவும்; சணல் உற்பத்தியை 3.3 மில்லியன் பேல்களிலிருந்து 5.4 மில்லியன் பேல்களாகவும் உயர்த்த திட்டமிடப்பட்டது. இதற்காகவே முதல் திட்டத்தின் மொத்த முதலீட்டில் 16 சதவீதம் வேளாண்மை, சமுதாய முன்னேற்றத்

1 Second Five-Year Plan 1956, p. 255.

திட்டங்களுக்கும் 17 சதவீதம் பல நோக்கு நீர்ப்பாசனத் திட்டங்களுக்கும் ஒதுக்கப்பெற்றது.

வேளாண்மை உற்பத்தியைப் பெருக்குவதற்கான வழி முறைகள் வெவ்வேறு வகைகளில் பின்பற்றப்பட்டன. நிலத்தை உழும் முறைகளில் மாற்றங்கள் தோன்றின. சிறப்பான சாகுபடி முறைகள் கைக்கொள்ளப்பட்டன. அதிக உரங்களும், தரம் மிக்க விதைகளும் பயன்படுத்தப்பெற்றன. நீர்ப்பாசன வசதிகள் பெருக்கப்பட்டன. செறிவு முறையில் நெல் சாகுபடியைச் செய்ய ஜப்பானிய முறை பின்பற்றப்பட்டது. கரும்பு முதலிய பிற பயிர்களைச் செறிவு முறையில் உற்பத்தி செய்யவும் நடவடிக்கைகள் எடுக்கப்பெற்றன. தொழில் நுணுக்க முன்னேற்றங்களோடு விவசாயிகளின் மனத்தைப் பக்குவப்படுத்தவும் அரசு சில பணிகளை மேற்கொண்டது. மேம்பாடான சாகுபடி முறைகளைக் கைக் கொள்ளுமாறு அவர்கள் ஊக்குவிக்கப்பட்டார்கள். விவசாயி களின் உற்பத்தித் திறன் பெருக இவை உதவி வந்தன.

நிலவுடைமை முறைகளிலும், குத்தகை முறையிலும் சீர்திருத் தங்கள் செய்யப்பட்டன. கூட்டுறவு அமைப்புகளின் மூலம் விவசாயிகள் பல நன்மைகளை அடைந்தார்கள். ஆராய்ச்சி மையங்களோடும் விற்பனை அமைப்புகளோடும் அவர்கள் தொடர்பு கொண்டார்கள். வேளாண்மைப் பொருள்களின் விற்பனை, மீன் பிடிப்பு, கால்நடை வளர்ப்பு, நிறுவனப் பாதுகாப்பு, வனவள முன்னேற்றம் ஆகியவற்றிற்கான நடவடிக்கைகளையும் அரசு கைக்கொண்டது.

முதல் திட்டத்தின் வேளாண்மை வளர்ச்சிக்கான முறைகளில் முக்கியமான மூன்று இயல்புகள் பொருந்தியிருந்தன.

1. வேளாண்மை திட்டப் பணிகளையும், அமைப்புப் பணி களையும் மாநில அரசுகள் நிறைவேற்றின. நீர்ப்பாசனத் திட்டங் களையும், மின்சாரத் திட்டங்களையும் அவையே நிர்வகித்தன. மத்திய அரசு அவற்றிற்குப் பொதுவான உதவியையும், ஒத்துழைப்பையும் தந்தது.

2. நீண்ட காலத்தில் பயனளிக்கக்கூடிய திட்டங்களுக்கே அதிக முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. இவற்றின் பயனை இந்திய வேளாண்மை 15 முதல் 20 ஆண்டுகளுக்குப் பின்னர்த்தான் பெறமுடியும். அக் காலத்திற்குப் பின்னரே வேளாண்மை வளர்ச்சி உச்ச நிலையடையும்.

3. வேளாண்மை உற்பத்தியைப் பெருக்குவது மட்டும் திட்டத்தின் நோக்கமன்று; கிராம வாழ்வின் எல்லா நிலைகளிலும் முன்னேற்றத்தைப்பெறும் நோக்கத்தையும் அது கொண்டிருந்தது.

### முதல் திட்டச் சாதனைகள்

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் வெற்றி குறியிலக்குகளை விஞ்சக் கூடியதாக இருந்தது. பின்வரும் அட்டவணை முதல் திட்டத்தின் வெவ்வேறு ஆண்டுகளிலும் முக்கிய வேளாண்மைப் பொருள்களின் உற்பத்தி அளவைக் குறிக்கின்றது.[1]

| பொருள் | அலகு | 1951-52 | 1953-54 | 1954-55 | 1955-56 | [illegible]கை அதிகரிப்பு (+) குறைவு (—) |
|---|---|---|---|---|---|---|
| தானியங்கள் | மில்லியன் டன்கள் | 42.9 | 58.3 | 55.3 | 54.9 | — |
| பருப்பு வகைகள் | மில்லியன் டன்கள் | 8.3 | 10.4 | 10.5 | 10.9 | — |
| மொத்த உணவுத் தானியங்கள் | மில்லியன் டன்கள் | 51.2 | 68.4 | 65.8 | 65.8 | +4.2 |
| முக்கிய எண்ணெய் வித்துகள் | மில்லியன் டன்கள் | 4.9 | 5.3 | 5.9 | 5.6 | +0.1 |
| கரும்பு | மில்லியன் டன்கள் | 6.1 | 4.4 | 5.5 | 6.0 | —0.3 |
| பருத்தி | மில்லியன் பேல்கள் | 3.1 | 3.9 | 4.3 | 4.0 | —0.2 |
| சணல் | மில்லியன் பேல்கள் | 4.7 | 3.1 | 2.9 | 4.2 | —1.2 |
| மொத்தம் | | 95.6 | 114.3 | 116.4 | 116.8 | — |

1950—51-ல் 95.6 ஆக இருந்த வேளாண்மை உற்பத்திக் குறியீட்டெண் 1955—56-ல் 116.8-ஆக உயர்ந்தது. 1953—54ஆம் ஆண்டிற்குள்ளாகவே உணவுத் தானியங்கள், எண்ணெய் வித்துகள் ஆகியவற்றின் உற்பத்தித் திட்டத்தின் குறியளவை

[1] Socond Five-year Plan, 1956, p. 256; Agricultural Statistics of Re-organised States, 1956, pp. 68-71; Third Five-year Plan, p. 302.

எட்டிவிட்டது. பருத்தி உற்பத்திக் குறியளவை எட்டியது 1954—55ஆம் ஆண்டிலாகும். சணல், கரும்பு ஆகியவற்றின் உற்பத்தி 1952—53, 1953—54 ஆண்டுகளில் குறைவடைந்தது. ஆயினும், 1954—55, 1955—56ஆம் ஆண்டுகளில் அவற்றின் உற்பத்தி அதிகரித்தது. 1954—55ஆம் ஆண்டில் சர்க்கரை உற்பத்தி 15.9 இலட்சம் டன்கள் என்ற சாதனை அளவிற்கு உயர்ந்தது. 1955—56ஆம் ஆண்டில் உற்பத்தி 18.7 இலட்சம் டன்களாக மேலும் அதிகரித்தது குறிப்பிடத்தக்கது.

பொதுவாக, முதல் திட்டக் காலத்தில் வேளாண்மை உற்பத்தி, சிறப்பான முன்னேற்றத்தைப்பெற்றது. உணவுத் தானியங்களின் உற்பத்தி 1955—56ஆம் ஆண்டில் 65.8 மில்லியன் டன்களாக இருந்தது. இது 1945—50ஆம் ஆண்டு உற்பத்தி அளவைக் காட்டிலும் சுமார் 11 மில்லியன் டன்கள் அதிகமாயிற்று. 1953—54 ஆம் ஆண்டில் உணவுத் தானியங்களின் உற்பத்தி 68.4 மில்லியன் டன்கள் என்ற உயர் அளவை அடைந்தது. 1954—55ஆம் ஆண்டிலும் உற்பத்தி 65.8 மில்லியன் டன்கள் என்ற சிறப்பளவில் இருந்தது. அத் திட்டக் காலத்தில் மொத்த உற்பத்தி 17 சதவீதம் அதிகரித்தபோது, உணவுத் தானியங்களின் உற்பத்தி 11 மில்லியன் டன்கள் என்ற அளவிற்குக் கூடுதல் அடைந்தது. இதன் காரணமாக உணவுத் தானியங்களின் இறக்குமதி குறைந்தது. அவற்றின் இறக்குமதி 1951-ல் 4.73 மில்லியன் டன்களாகவும், 1953-ல் 2.00 மில்லியன் டன்களாகவும், 1954-ல் 0.89 மில்லியன் டன்களாகவும், 1955-ல் 0.59 மில்லியன் டன்களாகவும் படிப்படியாகக் குறைந்தது.

ஆனால், அத் திட்டக் காலத்தில் வேளாண்மையில் அமைப்பு முறை மாற்றங்கள் தோன்றவில்லை. கூட்டுறவுப் பண்ணைமுறை வெற்றிபெறவில்லை. சிறிய அளவுச் சாகுபடி நிலங்களை இணைப்பதற்கான திட்டங்களும் வெற்றி காணவில்லை. உற்பத்தி உயர்வடைந்தமைக்குச் சாதகமாகப் பருவச் சூழ்நிலைகளே முக்கியக் காரணமாகும்.

### இரண்டாவது திட்டத்தின் கீழ் வேளாண்மை

இரண்டாவது திட்டக் காலத்தில் மக்கள் பெருக்கம், தொழில் வளர்ச்சி ஆகியவற்றின் காரணமாக உணவு, கச்சாப் பொருள்களின் தேவை உயர்ந்தது. வேளாண்மை உற்பத்திக் குறியளவும் உயர்வாக நிர்ணயிக்கப்பெற்றிருந்தது.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் குறியளவுகள் பின்வருமாறு இருந்தன.

உணவுத் தானியங்களின் உற்பத்திக் குறியளவு 65.5 மில்லியன் டன்களாக நிர்ணயிக்கப்பட்டது. 1955—56ஆம் ஆண்டின உற்பத்தியில் 24 சதவீத உயர்வைப் பெறத் திட்டமிடப் பட்டது. எண்ணெய் வித்துகள், கரும்பு, பருத்தி, சணல் ஆகிய வற்றின் உற்பத்தி, முறையே 38, 35, 55, 58, சதவீதங்கள் உயருமென எதிர்பார்க்கப்பட்டது. மொத்த வேளாண்மை உற்பத்தியில் 27 சதவீத உயர்வு ஏற்பட வேண்டுமெனத் தீர்மானிக்கப்பட்டது.

| பொருள் | அலகு | 1955-56 திட்டப்பட்ட உற்பத்தி | உற்பத்திக் குறியளவு | உற்பத்திக் குறியளவின் சதவீத உயர்வு |
|---|---|---|---|---|
| உணவுத் தானியங்கள் | மில்லியன் டன்கள் | 65.0 | 80.0 | 24 |
| எண்ணெய் வித்துகள் | மில்லியன் டன்கள் | 5.5 | 7.6 | 38 |
| கரும்பு | மில்லியன் டன்கள் | 5.8 | 7.8 | 35 |
| பருத்தி | மில்லியன் பேலகள் | 4.2 | 6.5 | 55 |
| சணல் | மில்லியன் பேல்கள் | 4.0 | 5.5 | 38 |
| தேங்காய் எண்ணெய் | இலட்சம் டன்கள் | 1.3 | 2.1 | 62 |
| ஆர்க்காநட் | இலட்சம் மாண்டுகள் | 22.0 | 27.0 | 23 |
| அரக்கு | இலட்சம் மாண்டுகள் | 12.0 | 16.0 | 33 |
| கருப்பு மிளகு | 000 டன்கள் | 26.0 | 36.0 | 37 |
| முந்திரிப் பருப்பு | 000 டன்கள் | 60.0 | 106.0 | 77 |
| தேயிலை | மில்லியன் பவுண்டுகள் | 544.0 | 700.0 | 18 |
| எல்லாப் பொருள்களும் | ... | ... | ... | 27 |

செறிவு முறைச் சாகுபடி. முன்னேற்றமான தொழில் நுணுக்கம் ஆகியவற்றின் மூலம் உற்பத்தியை உயர்த்த வேண்டுமென்று

■ 367 பக்கத்திற் காண்க

**வேளாண்மை உற்பத்தி**

| பொருள் | அலகு | 1956-57 | 1957-58 | 1958-59 | 1959-60 | 1960-61 | குறியிலக்கிற்கு அதிகம் (+) குறியிலக்கிற்குக் குறைவு (—) |
|---|---|---|---|---|---|---|---|
| தானியங்கள் | மில்லியன் டன்கள் | 57.4 | 53.4 | 62.6 | 63.2 | 66.8 | — |
| பருப்பு வகைகள் | மில்லியன் டன்கள் | 11.4 | 9.5 | 12.9 | 11.5 | 12.5 | — |
| மொத்த உணவுத் தானியங்கள் | மில்லியன் டன்கள் | 68.8 | 62.5 | 75.5 | 74.7 | 79.3 | +0.7 |
| எண்ணெய் வித்துகள் | மில்லியன் டன்கள் | 6.3 | 6.1 | 6.9 | 5.9 | 6.5 | —1.1 |
| கரும்பு | மில்லியன் டன்கள் | 6.8 | 6.9 | 7.1 | 7.7 | 10.4 | +2.6 |
| பருத்தி | மில்லியன் பேல்கள் | 4.7 | 4.7 | 4.7 | 3.7 | 5.4 | —1.1 |
| சணல் | மில்லியன் பேல்கள் | 4.3 | 4.1 | 5.2 | 4.6 | 4.0 | —1.5 |
| எல்லாப் பொருள்களுப் 1949-50 ஆண்டின் அடிப்படைக் குறியீட்டெண்=100) | | 124.0 | 114.6 | 132.3 | 128.7 | 139.1 | — |

கருதப்பட்டது. முதல் திட்டத்தில் தானிய உற்பத்திக்கு மட்டுமே முக்கியத்துவம் அளிக்கப்பெற்றது. இரண்டாவது திட்டக் காலத்தில் வேளாண்மைப் பொருளாதார அமைப்பில் மாற்றங்கள் தோற்றுவிக்கப்பட்டன. கிராம மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தப் பல வழிமுறைகள் பின்பற்றப்பட்டன. கால்நடைப் பராமரிப்பில் கவனம் செலுத்தப்பட்டது. நீர்ப்பாசன வசதிகள் பெருகின; நல்ல உரங்களும், எருக்களும் பயன்படுத்தப்பட்டன; தரம் மிக்க விதைகள் அளிக்கப்பட்டன. ஜப்பானிய நெல் சாகுபடி முறை விரிவுபடுத்தப்பட்டது. சாகுபடி முறைகளில் முன்னேற்றங்கள் தோன்றின. வேளாண்மை, உற்பத்திச் செறிவு முறையில் கைக்கொள்ளப்பட்டது.

வேளாண்மைக்காக ரூ. 1,054 கோடி ஒதுக்கப்பட்டது. ஆனால், உண்மையில் செலவிடப்பட்டது, ரூ. 950 கோடி ஆகும். சமுதாய முன்னேற்றத்திற்காக ரூ. 530 கோடியும், பெரிய சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களுக்காக ரூ. 420 கோடியும் செலவிடப்பட்டன.

### இரண்டாவது திட்டச் சாதனைகள்

இரண்டாவது திட்டத்தில் வேளாண்மை வளர்ச்சி துரிதப் படுத்தப்பட்டது. அதன் விளைவாக உற்பத்தி 19 சதவீதம் உயர்ந்தது. உணவுத் தானியங்களின் உற்பத்தியில் சுமார் 13 மில்லியன் டன்கள் கூடுதல் ஏற்பட்டது. குறியிலக்கு 15.5 மில்லியன் டன்களாகும். உற்பத்தி உயர்வு ஆண்டுதோறும் 4 சதவீதமாக இருந்தது.

* முன் பக்கத்தில் கொடுக்கப்பட்டுள்ள அட்டவணையின் மூலம் வேளாண்மைப் பொருள்களின் உற்பத்தி நிலைகளைப்பற்றி அறியலாம். இரண்டாவது திட்டக் காலத்தில் உணவுத் தானியங்கள், வாணிபப் பயிர்கள் ஆகியவற்றின் உற்பத்தியைப் பெருக்கத் தனிக்கவனம் செலுத்தப்பட்டது. புதிய நிலங்கள் சாகுபடியின் கீழ்க் கொண்டு வரப்பட்டன. வேளாண்மை உள்ளீடுகளின் அளவு உயர்ந்தது. நிலத்தின் உற்பத்தித் திறனைப் பெருக்குவதற்கான நடவடிக்கைகள் மேற் கொள்ளப்பட்டன. ஓர் ஏக்கருக்கான உற்பத்தியைக் கூட்டுவது திட்டத்தின் நோக்கமாக இருந்தது.

வெவ்வேறு சாகுபடி முறைகள் பின்பற்றப்பட்டன, இரு போகச் சாகுபடி முறை பல இடங்களில் கைக்கொள்ளப்பட்டது. விதை விதைத்தல், நாற்று நடுதல், களை எடுத்தல் முதலியவற்றில் சிறப்பான முன்னேற்றம் தோன்றியது. போதுமான இடைவெளி

விட்டு நாற்றுகள் நடப்பட்டன. கிணறுகள், குழாய்க் கிணறுகள், அணைகள், கால்வாய்கள் ஆகியவை கட்டப்பட்டன. பழைய நிலையில் இருந்தவை யாவும் பழுது பார்க்கப்பட்டன. தரிசு நிலங்கள் விளை நிலங்களாக மாற்றப்பட்டன. சிறிய அளவில் இருந்த துண்டு நிலங்கள் இணைக்கப்பட்டன.

இவற்றைத் தவிர அரசின் அளிப்புத் திட்டங்களின் மூலம் இராசாயன உரங்கள், முன்னேற்றமான விதைகள் ஆகியவை விநியோகிக்கப்பட்டன. பயிர்ப் பாதுகாப்பு நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. விவசாயிகள் பூச்சிக்கொல்லி மருந்துகளைப் பயன்படுத்தத் தொடங்கினார்கள். அதிகப் பரப்பளவுள்ள நிலத்தில் பசுமை உரங்கள் பயன்படுத்தப்பட்டமையால் உற்பத்தி உயர்ந்தது. காடுகள் அழிக்கப்பட்டு விளை நிலங்களாக மாற்றப்பட்டன.

அரிசி, கேழ்வரகு, சோளம், முதலியவற்றின் உற்பத்தியைக் கூட்ட, செறிவு முறைச் சாகுபடி கைக்கொள்ளப்பட்டது. திட்டத்தின் மூலம் அமைப்புமுறை மாற்றங்கள் செய்யப்பட்டன. நிலவுடைமை முறையில் மாற்றம் தோன்றியது. தொழில் நுணுக்க முன்னேற்றத்தோடு அமைப்பு முறை மாற்றங்களைச் செய்வதும் அவசியமானதென்று அறியப்பட்டது. கல்வி வளர்ச்சியிலும் கவனம் செலுத்தப்பெற்றது. நிலச் சீர்திருத்தங்களின் மூலம் குத்தகையாளர்களுக்கு குத்தகைப் பாதுகாப்பு வழங்கப்பட்டது.

பல நடவடிக்கைகள் எடுக்கப்பட்டாலும், இரண்டாவது திட்டக் காலத்தில் வேளாண்மை வளர்ச்சி சிறப்பாக அமைய வில்லை. அதன் காரணமாக விலைகள் உயர்வடைந்தன. 1956-1961ஆம் ஆண்டுகளுக்கிடையே தானியங்களின் விலைகள் 37 சதவீதமும், பருப்பு வகைகளின் விலைகள் 50 சதவீதமும், சர்க்கரை விலை 61 சதவீதமும், எண்ணெய் வித்துகளின் விலைகள் 76 சதவீதமும், பருத்தி விலை 43 சதவீதமும் உயர்ந்தன. எல்லாப் பொருள்களின் மொத்த விலையுயர்வு 35 சதவீதமாக இருந்தது. உற்பத்திக் குறைவாக இருந்தமையாலும், மக்கள் தொகைப் பெருக்கத்தாலும் உணவுப் பொருள்களை இறக்குமதி செய்வது தவிர்க்க முடியாததாயிற்று. முதல் திட்டக்காலத்தில் இறக்குமதி படிப்படியாகக் குறைந்தது குறிப்பிடத்தக்கது.

### 1951 முதல் 1961 வரை வேளாண்மை வளர்ச்சி

மேலே குறிப்பிடப்பட்ட நடவடிக்கைகளின் விளைவாக 1951 ஆம் ஆண்டிற்கும் 1691 ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் வேளாண்மைப் பொருள்களின் உற்பத்தி 41 சதவீதமும்,

உணவுத் தானியங்களின் உற்பத்தி 46 சதவீதமும் உயர்வடைந்தன. இப் பத்தாண்டுகளில் சமுதாய முன்னேற்றத் திட்டங்கள், நீர்ப்பாசனத் திட்டங்கள் ஆகியவற்றிற்காக ரூ. 1,551 கோடி செலவிடப்பட்டது.

வேளாண்மை உற்பத்தி ஆண்டுதோறும் 3.84 சதவீதம் அதிகரித்தது. உணவுத் தானியங்களின் உற்பத்தி ஆண்டுதோறும் 3.73 சதவீதம் கூடியது. அக் காலத்தில் ஆண்டுதோறும் பருத்தி உற்பத்தி 7.43 சதவீதமும், கரும்பு உற்பத்தி 5.09 சதவீதமும், எண்ணெய் வித்துகள் 4.26 சதவீதமும், சணல் உற்பத்தி 2.19 சதவீதமும் அதிகரித்தன. எல்லாப் பயிர்களின் உற்பத்தியும் 1.54 சதவீதம் மட்டுமே அதிகரித்தது. உணவுத் தானியங்களின் உற்பத்தி 1.70 சதவீதமும், பிற தானியங்களின் உற்பத்தி 0.83 சதவீதமும் கூடின.

**வேளாண்மை உற்பத்தி**

| விவரம் | | அலகு | 1950—51 | 1960—61 |
|---|---|---|---|---|
| வேளாண்மை உற்பத்திக் குறியீட்டெண் 1949—50 = 100 | | — | 95.5 | 139.6 |
| உணவுத் தானியங்கள் | ... | மில்லியன் டன்கள் | 52.2 | 71.7 |
| நைட்ரஜன் உரங்கள் | ... | 000 டன்கள் | 55.0 | 230.0 |
| நீர்ப்பாசன வசதி பெற்ற நிலத்தின் பரப்பளவு | ... | மில்லியன் ஏக்கர்கள் | 51.5 | 70.0 |
| எண்ணெய் வித்துகள் | ... | மில்லியன் டன்கள் | 5.1 | 7.1 |
| கரும்பு | ... | மில்லியன் டன்கள் | 5.6 | 8.0 |
| பருத்தி | ... | மில்லியன் பேல்கள் | 2.9 | 5.1 |
| சணல் | ... | மில்லியன் பேல்கள் | 3.3 | 4.0 |

நீர்ப்பாசன வசதிகளைக் கொண்ட நிலத்தின் பரப்பளவு 1950—51-ல் 51.5 மில்லியன் ஏக்கர்களாக இருந்தது; இது 1960-61-ல் சுமார் 70 மில்லியன் ஏக்கர்களாக உயர்ந்தது. 1960-61 ஆம் ஆண்டிற்குள்ளாகச் சுமார் 4 மில்லியன் ஏக்கர்கள் தரிசு நிலம் புதிதாகச் சாகுபடிக்கு எடுத்துக்கொள்ளப்பட்டது. இயந்திரச் சாகுபடிமுறை 0.5 மில்லியன் ஏக்கர்களுக்கும், நில முன்னேற்ற நடவடிக்கைகள் 1.5 மில்லியன் ஏக்கர்களுக்கும் விஸ்தரிக்கப்பட்டன. நாடு முழுவதும் முன்னேற்றமான விதைகளைப் பரப்ப வேண்டுமென்பதற்காகச் சுமார் 4,000 விதைப் பண்ணைகள் ஏற்படுத்தப்பட்டன. 1950—51, 1960—61 ஆம் ஆண்டுகளுக்

கிடையே நைட்ரஜன் உரங்களின் பயன் 55,000 டன்களிலிருந்து 2,30,000 டன்களாகவும், பாஸ்பேட் உரங்களின் பயன் 7,000 டன்களிலிருந்து 70,000 டன்களாகவும் உயர்ந்தது.

சுமார் 11.8 மில்லியன் ஏக்கரில் பசுந்தாள் உரங்கள் பயன்படுத்தப்பட்டன. நில வளப் பாதுகாப்பு நடவடிக்கைகள் சுமார் 2.7 மில்லியன் ஏக்கர்களில் கைக்கொள்ளப்பட்டன. பால் உற்பத்தியைப் பெருக்கக் கால்நடைப் பராமரிப்பைச் சிறப்படையச் செய்வது அவசியமென்று அறியப்பட்டது. மீன் பிடிப்புத் தொழில் வலுப்பெற்றது. காய்கறிகள், பழங்கள் ஆகியவற்றின் உற்பத்தியை அதிகரிக்கும் வழிமுறைகள் பின்பற்றப்பட்டன. பால் உற்பத்தி 17 மில்லியன் டன்களிலிருந்து 22 மில்லியன் டன்களாகவும், மீன் உற்பத்தி 0.7 மில்லியன் டன்களிலிருந்து 1.4 மில்லியன் டன்களாகவும் உயர்ந்தன. காடுகளை அழித்ததன்மூலம் 0.5 மில்லியன் ஏக்கர்கள் நிலம் பெறப்பட்டது. சமுதாய முன்னேற்ற இயக்கம் 3,70,000 கிராமங்களில் செயல்படுத்தப்பட்டது. இதன் விளைவால் நாட்டில் உள்ள கிராம மக்களில் சுமார் 50 சதவீதத்தினர் பயனடைந்தனர்.

வேளாண்மை வளர்ச்சி வெவ்வேறு ஆண்டுகளிலும் ஏற்றத் தாழ்வுகளைக் கொண்டதாக இருந்தது. 1940—50-ஆம் ஆண்டுகளில் ஆண்டொன்றிற்கான உணவுத் தானியங்களின் சராசரி உற்பத்தி 50 மில்லியன் டன்களாக இருந்தது. 1949—50-ல் 57.6 மில்லியன் டன்களாகவும், 1950—51-ல் 52.2 மில்லியன் டன்களாகவும் உணவுத் தானியங்களின் உற்பத்தி அமைந்திருந்தது. அது 1960—61-ல் 76.1 மில்லியன் டன்களாக உயர்ந்துவிட்டது. இரண்டு திட்டங்களின் விளைவாக ஓர் ஏக்கருக்கான சராசரி உற்பத்தியின் அளவும் கணிசமாக அதிகரித்தது. உதாரணமாக 1950—51-ல் ஓர் ஏக்கருக்கான அரிசி உற்பத்தி 600 பவுண்டுகளாக இருந்தது; இது 1960—61-ல் 807 பவுண்டுகளாக உயர்ந்தது. அதே காலத்தில் 590 பவுண்டுகளாக இருந்த கோதுமை உற்பத்தி 662 பவுண்டுகளாக அதிகரித்தது.

நிகர உணவுத் தானியங்களின் கிடைப்பு அதிகரித்துள்ளமையால், தலா நுகர்வு 13.5 அவுன்சிலிருந்து 15.7 அவுன்சாக உயர்ந்திருக்கின்றது. விஞ்ஞான ரீதியில் ஆராயுமிடத்து ஒரு நபருக்கு நாள்தோறும் குறைந்தது 10 அவுன்ஸ் பால் தேவைப்படுகிறது. ஆனால், நம் நாட்டில் பாலின் தலா நுகர்வு 4.9 அவுன்ஸ் என்ற அளவிலேயே இருக்கின்றது.

## மூன்றுவது திட்டத்தின் கீழ் வேளாண்மை

திட்டக்குழு குறிப்பிட்டதாவது, 'முன்னேற்றத்திற்கான மூன்றுவது திட்டத்தில் வேளாண்மைக்கு முதல் முக்கியத்துவம் அளிப்பது அவசியம். இந்தியப் பொருளாதார முன்னேற்றத்திற்குத் தடையாக இருப்பது வேளாண்மையின் குறைந்த வேக வளர்ச்சி என்பதை முதல் இரண்டு திட்டங்களும் உணர்த்தின. எனவே, இயன்ற அளவிற்கு வேளாண்மை உற்பத்தியை அதிகரிப்பது இன்றியமையாதது. கிராமப் பொருளாதார முன்னேற்றத்திற்கும், வேளாண்மை வளர்ச்சிக்கும் திட்டங்களை வரைந்து செயல்படுத்தவேண்டும். செயல் முறைக்கு உகந்த திட்டங்கள் நிதி வசதிகளுக்கு உட்பட்டவைகளாகவும் இருத்தல் வேண்டும். திட்டங்கள் செயல்படுகின்ற இடங்களிலிருந்தே நிதியைத் திரட்டுவது நல்லது.'

மூன்றுவது திட்டத்தில் வேளாண்மை வளர்ச்சிக்காக நிலப் பாதுகாப்பு, நீர்ப்பாசனம், கூட்டுறவு ஆகியவற்றின் முன்னேற்றத்தில் கவனம் செலுத்தப்பட்டது. இவற்றுக்காக ஒதுக்கப்பட்ட தொகை ரூ. 1,281 கோடியாகும். இரண்டாவது திட்டத்தில் இவற்றின் முன்னேற்றத்திற்காக ரூ. 667 கோடி மட்டுமே ஒதுக்கப் பட்டது. வேளாண்மை உற்பத்தியின் வளர்ச்சியை இரு மடங்காக்க வேண்டுமென்று இத் திட்டங்கள் முயன்றன. மூன்றுவது திட்டம் முக்கியமான இரு நோக்கங்களைக் கொண்டதாக இருந்தது. அவை, (1) தன்னிறைவைப் பெறுவதற்குப் போதுமான அளவில் உணவுத் தானியங்களின் உற்பத்தியைப் பெருக்குவது; (2) ஏற்றுமதிக்கும், தொழிலுக்கும் தேவையான அளவில் போதுமான வாணிபப் பயிர்களை உற்பத்தி செய்வது.

இவ்வகை நோக்கங்களின் அடிப்படையில் வேளாண்மை உற்பத்தியைப் பெருக்குவதற்கான குறியளவு 30 சதவீதமாக நிர்ணயிக்கப்பட்டது. உணவுத் தானியங்களின் உற்பத்தியைச் சுமார் 32 சதவீதமும், அரிசி உற்பத்தியை 41 சதவீதமும், கோதுமை உற்பத்தியை 50 சதவீதமும், பருப்பு வகைகளின் உற்பத்தியை 42 சதவீதமும் உயர்த்தத் திட்டமிடப்பட்டது. வாணிபப் பயிர்களைப் பொறுத்தவரையில், எண்ணெய் வித்துகளின் உற்பத்தியை 38 சதவீதமும், கரும்பு உற்பத்தியை 25 சதவீதமும், பருத்தி உற்பத்தியை 37 சதவீதமும்; சணல் உற்பத்தியை 55 சதவீதமும் அதிகரிப்பதற்கான குறியளவுகள் நிர்ணயிக்கப் பட்டன. இக் குறியளவுகள் ஓர் ஏக்கருக்கான உற்பத்தியையும் கணிசமாக உயர்த்தக் கருதின. ஓர் ஏக்கருக்கான அரிசி

உற்பத்தியை 27 சதவீதமும், கோதுமை உற்பத்தியை 20 சதவீதமும், சணல் உற்பத்தியை 16 சதவீதமும், பருத்தி உற்பத்தியை 14 சதவீதமும் எண்ணெய் வித்துகளின் உற்பத்தியை 11 சதவீதமும் கரும்பு உற்பத்தியை 18 சதவீதமும் அதிகரிக்கத் திட்டமிடப்பட்டது.

## வேளாண்மைப் பொருள்களின் உற்பத்திக் குறியிலக்குகள்

| பொருள் | அடிப்படை அளவு உற்பத்தி (1960-61) | 1960-61-ல் அதிக உற்பத்திக்கான குறியளவு | 1965-66-ல் எதிர்பார்க்கப்பட்ட உற்பத்தி | சதவீத உயர்வு |
|---|---|---|---|---|
| உணவுத் தானியங்கள் (மில்லியன் டன்கள்) | 76.0 | 24.4 | 100.0 | 31.6 |
| எண்ணெய் வித்துகள் (மில்லியன் டன்கள்) | 7.1 | 2.7 | 9.8 | 38.0 |
| கரும்பு (மில்லியன் டன்கள்) | 8.0 | 2.0 | 10.0 | 25.0 |
| பருத்தி (மில்லியன் பேல்கள்) | 5.1 | 1.9 | 7.0 | 37.2 |
| சணல் (மில்லியன் பேல்கள்) | 4.0 | 2.2 | 6.2 | 55.0 |
| தேங்காய் (மில்லியன்) | 4,500 | 775 | 5,275 | 17.2 |
| ஆர்க்காகட் (000 டன்கள்) | [redacted] | 7 | 100 | 7.5 |
| முந்திரிப் பருப்பு (000 டன்கள்) | 73 | 77 | 150 | 105.5 |
| மிளகு (000 டன்கள்) | 26 | 1 | 27 | 3.9 |
| ஏலக்காய் (000 டன்கள்) | 2.26 | 0.36 | 2.62 | 15.9 |
| அரக்கு (000 டன்கள்) | 50 | 12 | 62 | 24.0 |
| புகையிலை (000 டன்கள்) | 300 | 25 | 325 | 8.3 |
| தேயிலை (மில்லியன் பவுண்டுகள்) | 725 | 175 | 900 | 24.1 |
| காஃபி (000 டன்கள்) | 48 | 32 | 80 | 67.7 |
| ரப்பர் (000 டன்கள்) | 26.4 | 18.6 | 45 | 70.5 |

வேளாண்மை உற்பத்திக்கான குறியீட்டெண் (அடிப்படை 1949—50=100)1960—61-ல் 193 ஆகவும், 1965—66-ல் 176 ஆகவும், உணவுத் தானியங்களின் உற்பத்திக் குறியீட்டெண் முறையே 132, 171 ஆகவும் தீர்மானிக்கப்பட்டது. எனவே, மூன்றுவது திட்டம் இந்திய வேளாண்மையின் ஆண்டு வளர்ச்சி வீதத்தைக் கணிசமாக உயர்த்தக் கருதியது. அதிக வளர்ச்சி வீதத்தைப் பெறத் தொழில் நுட்ப உற்பத்தி முறைகள் புகுத்தப்பட்டன. கீழ்க்காணும் திட்டங்களும் மூன்றுவது திட்டத்தில் நிறைவேற்றப்பெற்றன:

1. புதிதாக 20 மில்லியன் ஏக்கர்களுக்கு நீர்ப்பாசன வசதி அளிக்கப்பட்டது. பெரிய, நடுத்தர நீர்ப்பாசனத் திட்டங்களால் 11.5 மில்லியன் ஏக்கர்களும், சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களால் 8.5 மில்லியன் ஏக்கர்களும் பயனடைந்தன. இதனால், நீர்ப்பாசன வசதி பெற்ற நில அளவு 90 மில்லியன் ஏக்கர்களாக அதிகரித்தது.

2. நிலவளப் பாதுகாப்பு நடவடிக்கைகள் 11 மில்லியன் ஏக்கர்களிலும், புன்செய்ப் பயிர்களில் தொழில் நுணுக்க முன்னேற்றங்கள் 22 மில்லியன் ஏக்கர்களிலும் பின்பற்றப்பட்டன. 3.6 மில்லியன் ஏக்கர்கள் தரிசு நிலம் புதிதாகச் சாகுபடிக்கு எடுத்துக்கொள்ளப் பட்டது.

3. உரங்கள் அதிக அளவில் பயன்படுத்தப்பட்டன. நைட்ரஜன் உரங்களின் உற்பத்தியை நான்கு மடங்கும் (2,30,000 டன்களிலிருந்து 1 மில்லியன் டன்களாக), பாஸ்ஃபேட் உரங் களின் உற்பத்தியை ஆறு மடங்கும் (70,000 டன்களிலிருந்து 4,00,000 டன்களாக), பொட்டாசியம் உரங்களின் உற்பத்தியைச் சுமார் எட்டு மடங்கும் (25,000 டன்களிலிருந்து 2,00,000 டன்களாக) உயர்த்தத் திட்டமிடப்பட்டது. பசுந்தாள் உரங்கள் 41 மில்லியன் ஏக்கர்களில் பயன்படுத்தப்படும் என்று கருதப் பட்டது. 1960—61-ல் 11.8 மில்லியன் ஏக்கர்களில் மட்டுமே பசுந் தாள் உரங்கள் பயன்படுத்தப்பெற்றன.

4. முன்னேற்றமான கலப்பைகளைப் பயன்படுத்துவதற்கான தீவிர முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. இரும்புக் கலப்பைகள், பிற பண்ணைச் சாகுபடிக் கருவிகள் ஆகியவற்றின் உற்பத்தி ஊக்குவிக்கப்பட்டது.

5. 800 புதிய விதைப் பண்ணைகளை அமைக்கத் திட்டங்கள் வரையப்பட்டன. ஒவ்வொரு வட்டத்திலும் நல் விதைகளை அளிக்கக் கருதப்பட்டது. தரமான விதைகளை அளிப்பதன்மூலம் சுமார் 150 மில்லியன் ஏக்கர்கள் நிலம் பயனடையும் என்று எதிர் பார்க்கப்பட்டது,

6. அக்டோபர் 1963ஆம் ஆண்டிற்குள்ளாக சமுதாய முன்னேற்றத் திட்டம் எல்லாக் கிராமங்களுக்கும் விரிவுபடுத்தப் பட்டது. அதன் மூலம் சுமார் 360 மில்லியன் விவசாயிகள் பயனடைந்தார்கள். கிராமக் கூட்டுறவுகள் விரிவாக்கப்பட்டுச் சுமார் 60 சதவீதப் பண்ணைக் குடும்பங்கள் நன்மையடைய வேண்டு மென்று கருதப்பட்டது. கிராமக் கூட்டுறவுகளின் உறுப்பினர் எண்ணிக்கை 37 மில்லியனாக உயரும் என்று எதிர்பார்க்கப்பட்டது.

கூட்டுறவுச் சங்கங்களால் அளிக்கப்பட்ட கிராமக் கடன் அளவு மூன்று மடங்கு பெருகியது. மத்திய கால, குறுகிய காலக் கடன்கள் ரூ. 200 கோடியிலிருந்து ரூ. 530 கோடியாகவும், நீண்டகாலக் கடன்கள் ரூ. 34 கோடியிலிருந்து ரூ. 150 கோடியாகவும் உயர்ந்தன. இதனால் சாகுபடியாளர்களில் பலர் பயனடைந்தனர்.

7. நாடு முழுவதும் 1,000 பெரிய தானியக் 'கிடங்குகளையும்' (Warehouses), 9,200 சிறிய தானியக் கிடங்குகளையும் கிராமப் புறங்களில் அமைக்கத் திட்டமிடப்பட்டது. இக் கிடங்குகளின் இருப்புச் சக்தி, முறையே 2.5 மில்லியன் டன்கள், 2 மில்லியன் டன்கள் ஆகும்.

8. பயிர்ப் பாதுகாப்பு முறைகள் சுமார் 50 மில்லியன் ஏக்கர்களில் கைக்கொள்ளப்படும் என்று அறிவிக்கப்பட்டது.

9. கூட்டுறவுப் பண்ணைமுறை ஊக்குவிக்கப்பட்டது. அதற் [redacted] இந்தியாவின் 320 மாவட்டங்களில் 'முன்னோடித்திட்டங்கள் (Pilot Projects) தொடங்கப்பெற்றன. ஒவ்வொரு மாவட்டத்திலும் சராசரியாகச் சுமார் 10 கூட்டுறவுப் பண்ணைகள் ஏற்படுத்தத் திட்டமிட்டார்கள்.

10. 71 புதிய ஆதாரக் கிராமத் திட்டங்களின் வாயிலாக நல்லினக் கால்நடைகள் அபிவிருத்தி அடைந்தன. கால்நடைகளை மேய்ப்பதற்கான வசதிகள் பெருகின. கால்நடைத் தீவனங்களின் உற்பத்தியும் கூடியது.

11. மீன் உற்பத்தி 1.4 மில்லியன் டன்களிருலிந்து 1.8 மில்லியன் டன்களாகவும், ஓராண்டுக்கு ஒரு கோழி இடும் முட்டைகளின் எண்ணிக்கை 60-லிருந்து 70 ஆகவும், பால் உற்பத்தி 22 மில்லியன் டன்களிலிருந்து 25 மில்லியன் டன்களாகவும் உயரும். 55 பால் அளிப்புத் திட்டங்கள் புதியனவாகத் தொடங்கப்படும்.

12. உற்பத்தியைப் பெருக்குவதற்கான வாய்ப்புகள் இருந்த இடங்களில் 'செறிந்த வேளாண்மை மாவட்டத் திட்டங்கள்' (Intensive Agricultural District Programme) பின்பற்றப்பட்டன. எல்லாத் திட்டங்களிலும் இந்த முறை அதிகமாக வலியுறுத்தப்படுகிறது.

13. மூன்றாவது திட்டக் காலத்தில் நிலச் சீர்திருத்த நடவடிக்கைகள் விரைவாக்கப்பட்டன. இவற்றால், குத்தகையாளர்கள் பெரிதும் பயனடைந்தார்கள். குத்தகைக் காலம் உறுதியளிக்கப்

பட்டது. நிலவுடைமைகளின் உரிமைகள்மீதான உறுதியற்ற நிலைகள் குறைக்கப்பட்டன. இதன் காரணமாகக் குத்தகையாளர்கள் உற்பத்தியைப் பெருக்கவேண்டுமென்ற ஊக்கத்தைப் பெற்றுர்கள். பொதுவாக, நிலச் சீர்திருத்தங்களால் சாகுபடியாளர்கள் சில உண்மையான நன்மைகளை அடைந்துள்ளனர்.

மேற்கண்ட குறியளவுகளை எட்டுவதில் திட்டங்கள் வெற்றி கண்டுவிட்டால் ஒரு நாளுக்கான உணவுத்தானியங்களின் தலா நுகர்வு தற்போதுள்ள 16 அவுன்சிலிருந்து 17.5 அவுன்சாகவும், தனியொருவருக்கான துணியின் பயன் தற்போதுள்ள 15.5 கெஜத்திலிருந்து 17.2 கெஜமாகவும் உயரும். இக் குறியளவுகள் யாவும் மக்களின் வாழ்க்கைத் தரம் உயரும் என்ற நம்பிக்கையை அளிக்கின்றன.

### மூன்ருவது திட்டத்தின்கீழ் வளர்ச்சி

திட்டக் காலத்தில் வேளாண்மை வளர்ச்சிக்கான முயற்சிகள் படிப்படியாக அதிகரித்தன. வேளாண்மை உற்பத்தியைப் பெருக்குவதே முக்கிய நோக்கமாக இருந்தது. ஆனால் தொழில் நுட்பம் வளராமையாலும், நிர்வாகக் குறைபாடுகளாலும் திட்டங்களில் எதிர்பார்த்த வெற்றியைப் பெற முடியவில்லை. சாதகமற்ற பருவச் சூழ்நிலைகளும் சில காலங்களில் வேளாண்மை உற்பத்தியைப் பாதித்தன. இதைப் பின்வரும் அட்டவணை நன்கு உணர்த்தும். பல ஆண்டுகளில் வேளாண்மைப் பொருள்களின் உற்பத்தி அளவில் ஏற்றத்தாழ்வுகள் அமைந்திருப்பதை அடுத்த பக்கத்திலுள்ள அட்டவணை அறிவுறுத்தும்.*

உணவுத் தானியங்களின் உற்பத்தியில் தேக்கநிலை இருந்தமையால் இறக்குமதியின் அளவு கூடியது. 1962–ல் 3.64 மில்லியன் டன்களாக இருந்த இறக்குமதி 1963-ல் 4.56 மில்லியன் டன்களாகவும், 1964–ல் 6.26 மில்லியன் டன்களாகவும் 1965-ல் 7.5 மில்லியன் டன்களாகவும் உயர்ந்தது. அரசின் உணவுத் தானியங்களின் இருப்பு வெளிக் கொணரப்பட்டது. 1963-ல் தலா ஒருவருக்குக் கிடைத்த உணவுத் தானியங்களின் அளவு நாளொன்றுக்கு 440 கிராம்களாக இருந்தது. அது 1964-ல் 448 கிராம்களாகவும், 1965–ல் 474 கிராம்களாகவும் அதிகரித்தது.

† பின்வரும் அட்டவணை 1961—62 முதல் 1963—64 வரை வேளாண்மை வளர்ச்சி எவ்வாறு இருந்தது என்பதை உணர்த்தும்.[1]

[1] The Third Plan Mid-term Appraisal, p. 71: Agricultural Situation in India, August 1964, p. 491.

**வேளாண்மை உற்பத்தி** [1]

| பொருள் | அலகு | 1961-62 | 1962-63 | 1963-64 | 1964-65 | 1965-66 | 1966-67 |
|---|---|---|---|---|---|---|---|
| அரிசி | மில்லியன் டன்கள் | 34.8 | 31.9 | 36.5 | 39.6 | 30.6 | 30.4 |
| கோதுமை | ,, | 12,0 | 10.8 | 9.7 | 12.3 | 10.4 | 11.5 |
| பிற தானியங்கள் | ,, | 22.6 | 24.3 | 23.3 | 25.2 | 21.1 | 24.2 |
| பருப்பு வகைகள் | ,, | 11.6 | 11.4 | 9.9 | 12.4 | 9.8 | 8.9 |
| உணவுத் தானியங்கள் | ,, | 8.10 | 78.4 | 79.4 | 89.0 | 72.0 | 75.0 |
| கச்சாப் பருத்தி | மில்லியன் பேல்கள் (1பேல்=180 கிலோ கிராம்) | 4.5 | 5.3 | 5.4 | 5.6 | 4.7 | 4.9 |
| கச்சாச் சணல் | ,, | 8.1 | 7.1 | .7.8 | 7.5 | 5.6 | 6.5 |
| கரும்பு | மில்லியன் டன்கள் | 10.1 | 9.5 | 10.3 | 12.0 | 12.10 | 9.4 |
| எண்ணெய் வித்துகள் | ,, | 7.0 | 7.1 | 7.1 | 10.5 | 8.0 | 8.2 |
| வேளாண்மை உற்பத்தியின் குறியீட்டு எண் (1949—50=100) | — | 141.4 | 137.2 | 140.5 | 158.3 | 132.7 | 132.4 |

■ பக்கம் 375 காண்க

1 Ministry of Finance, The Economic Survey, 1967—68, pp. A. 8.9.

† பக்கம் 375 காண்க.

## வேளாண்மை வளர்ச்சித் திட்டங்கள்

| திட்டங்கள் | அலகு | 1960-61 | குறியிலக்கு | 1961-62 | 1962-63 | 1963-64 | 1965-66-ல் எதிர்பார்க்கப்பட்டது |
|---|---|---|---|---|---|---|---|
| நீர்ப்பாசனம்: | | | | | | | |
| பெரிய, நடுத்தரத் திட்டங்கள் | மில்லியன் ஏக்கர் | — | 12.8 | 0.8 | 1.2 | 1.9 | 7.7 |
| சிறிய திட்டங்கள் | ,, | — | 12.8 | 1.8 | 2.1 | 3.0 | 13.80 |
| நிலப்பாதுகாப்பும், விளை நிலங்களாக மாற்றுவதும்: | | | | | | | |
| வேளாண்மை நிலப்பாதுகாப்பு | ,, | — | 11.0 | 1.0 | 1,4 | 1.8 | 18.00 |
| புன்செய்ப் பண்ணை | ,, | — | 22.0 | 1.9 | 3.0 | 5.5 | — |
| விளை நிலங்காக மாற்றுவது | ,, | — | 3.6 | 1.6 | — | 0.7 | 3.00 |
| நல்ல விதைகள் பயன்படுத்தப்பட்ட புதிய நிலத்தின் அளவு: | ,, | 55 | 2.4 | 67 | 81 | 98 | 164 |
| இரசாயன உரங்களின் அளவு | | | | | | | |
| நைட்ரஜன் | ஆயிரம் டன்கள் | 200 | 1,000 | 280 | 350 | 460 | 650 |
| பாஸ்ஃபேட் | ,, | 70 | 400 | 72 | 80 | 100 | 250 |
| பொட்டாசியம் | ,, | 25 | 200 | 23 | 65 | 70 | 150 |
| அங்கக, பசுமை உரங்கள்: | | | | | | | |
| நகரக் கலப்பு உரம் | மில்லியன் டன்கள் | 2.4 | 5.0 | 2.6 | 2.9 | 3.0 | 4.42 |
| கிராமக் கலப்பு உரம் | ,, | 66.0 | 150.0 | 75 | 83 | 102 | — |
| பசுமை உரம் | மில்லியன் ஏக்கர்கள் | 10.4 | 41.0 | 12.4 | 16.2 | 20.5 | 27·90 |
| பயிர்ப்பாதுகாப்பு | ,, | 16 | 50 | 16 | 19 | 20 | 40.0 |

### நான்காவது திட்டத்தில் வேளாண்மை

மக்கள் தொகைப் பெருக்கம், நுகர்வின் அளவில் உயர்வு ஆகியவற்றின் காரணமாக நான்காவது திட்ட இறுதியில்

உணவுத் தானியங்களின் தேவை 120 மில்லியன் டன்களாக அதிகரிக்கும் என்று எதிர்பார்க்கப்பட்டது.

காய்கறிகள், பழங்கள், பால், மாமிசம், மீன், முட்டை ஆகியவற்றின் உற்பத்தியைக் கணிசமாக உயர்த்தி, மக்களுடைய நலனைப் பெருக்கும் நோக்கமும் அரசுக்கு இருந்தது. சத்துள்ள உணவு வகைகளை மக்கள் பெறுவதற்கான நடவடிக்கைகளும் எடுக்கப்பட்டன. நான்காவது திட்டக் காலத்தில் பழங்கள் உற்பத்தி செய்யப்பட்ட நில அளவை 33.7 இலட்சம் ஏக்கரிலிருந்து 41.00 இலட்சம் ஏக்கராக அதிகரிக்கக் கருதப்பட்டது. அதைப் போன்றே காய்கறிகள் பயிரிடப்பட்ட நில அளவை 17 இலட்சம் ஏக்கரிலிருந்து 40 இலட்சம் ஏக்கராக உயர்த்தத் திட்டமிடப்பட்டது. இந்த நடவடிக்கைகளின் காரணமாக நான்காவது திட்டத்தில் காய்கறிகள், பழங்கள் ஆகியவற்றின் உற்பத்தி 20 மில்லியன் டன்களிலிருந்து 32 மில்லியன் டன்களாக உயரும் என்று எதிர்பார்க்கப்பட்டது. வேளாண்மை, காடு, கால்நடை ஆகியவற்றின் பொருள்களை அதிக அளவிற்கு உற்பத்திசெய்து ஏற்றுமதி செய்யக் கருதப்பட்டது.

**புதிய முறை**

நான்காவது திட்டக் காலத்தில் (1966—67 முதல் 1970—71 வரை) உணவுத் தானியங்கள், பிற பயிர்கள் ஆகியவற்றின் உற்பத்தியில் குறியளவையடைய ஆண்டொன்றுக்கு 5 சதவீத வேளாண்மை வளர்ச்சி இருக்கவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. வேளாண்மை வளர்ச்சிக்கான புதுக் கொள்கை 1966—67 முதல் பின்பற்றப்பட்டு வருகின்றது. இப் புதிய முறையின் மூலம் வேளாண்மையில் விஞ்ஞானமும், தொழில் நுட்பமும் புகுத்தப்பட்டன. ஓர் ஏக்கருக்கான உற்பத்தியைப் பெருக்குவது முக்கிய நோக்கமாக இருந்தது. புதிய முறையின் மூலம் பின்வரும் முக்கியத் திட்டங்கள் கைக்கொள்ளப்பட்டன.

**1. அமோக விளைச்சல் திட்டம்**

உணவுத் தானியங்களின் உற்பத்தியில் விரைவாக அதிக உயர்வைப் பெற இத் திட்டத்திற்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. புதிய முறையின் மையமாக இஃது இருக்கின்றது. நீர்ப்பாசன வசதிகள், சிறந்த மழைப் பொழிவு ஆகியவற்றைக் கொண்ட பகுதிகளில் இத் திட்டம் செயல்படுத்தப்பட்டது. இதற்கான இடங்கள் தெரிந்தெடுக்கப்பட்டன. நான்காவது திட்டக் காலத்தில் 32.5 மில்லியன் ஏக்கர்கள் நிலத்தில் அமோக விளைச்சல்

திட்டத்தைச் செயல்படுத்தக் கருதப்பட்டது. அதிக விளைச்சலைத் தரும் டைச்சங் நேடிவ்—I (Taichung Native-I), டைச்சங்-64 (Taichung-64), டைநன்-3 (Tainan-3). ஆர்-8 (I.R-8) ஆகிய அரிசி, கோதுமை, விதைகள பயன்படுத்தப்பட்டன. புதிய விதைகள் சோள உற்பத்தியையும் அதிகரிக்கின்றன. 1966—67-ல் அதிக விளைச்சலைத் தரும் திட்டம் 6.2 மில்லியன் ஏக்கர்களில் செயல்படுத்தப்பட்டது. பலவகைப்பட்ட பயிர்களின் உற்பத்தி இதனால் கூடியது. புதிய முறைகளைப்பற்றி விவசாயிகள் அறியத் தொடங்கினார்கள்.

## 2. பலபோகச் சாகுபடி முறை

நீர்ப்பாசன வசதிகள் பெருக்கப்பட்டன. செறிவு முறைச் சாகுபடி பின்பற்றப்பட்டது. குறுகிய காலத்தில் பலனளிக்கக் கூடிய பயிர்கள் புகுத்தப்பட்டன. நீண்ட காலத்தில் வளரக் கூடிய பயிர்களின் சாகுபடி குறையத் தொடங்கியது. பாரம்பரிய உற்பத்தி முறைகள் செல்வாக்கிழந்தன. நீர்ப்பாசன வசதிகளைக் கொண்ட இடங்களில் ஆண்டொன்றுக்கு இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட சாகுபடிகளைச் செய்வதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. பசுமை உரங்களையும் இரசாயன உரங்களையும் பயன்படுத்துவதில் தனிக்கவனம் செலுத்தப்பட்டது. இதனால், நிலத்தின் செழுமைத் தன்மை அதிகரித்தது. இருபோக, முப்போகச் சாகுபடி முறைகளால் விவசாயிகளின் வருமானம் உயர்ந்தது. ஆனால், ஏழை விவசாயிகள் பலர் வறுமை நிலையின் காரணமாகப் பல போகச் சாகுபடியைச் செய்ய முடியவில்லை. அவர்கள் செய்த முதலீட்டின் அளவும் குறைவானதேயாகும்.

## 3. புதிய நீர்ப்பாசன வசதிகள்

பஞ்சத்தை விரட்ட நீர்ப்பாசன வசதிகள் தேவை. உத்தம அளவுக்கு வேளாண்மை உற்பத்தியை அதிகரிக்க நீர்ப்பாசன வசதிகள் அவசியமாகின்றன. நம் நாட்டின் வறண்ட நிலப்பரப்பை வளமாக்க நீர்ப்பாசனம் இன்றியமையாதது. செறிவு முறைச் சாகுபடி கைக்கொள்ளப்பட்ட இடங்களில் நீர்ப்பாசன வசதிகள் பெருக்கப்பட்டன. பெரிய நீர்ப்பாசனத் திட்டங்களோடு சிறிய நீர்ப்பாசன வசதிகளும் பெருகின. 'குழாய்க் கிணறுகள்' (Tube-Wells) அமைக்கப் பெற்றன. கால்வாய்களின் மூலம் நீர்ப் பாசனத்தைப் பெறமுடியாதபோது சிறிய நீர்ப்பாசனத் திட்டங்கள் பயனளிக்கின்றன. அரசின் அதிகமான அளவு முதலீட்டைக் கொண்ட நீர்ப்பாசனத் திட்டங்கள் வேளாண்மை வளர்ச்சிக்குப் பெரிதும் உதவுகின்றன.

### 4. ஆயகட்டு முன்னேற்றம்

வேளாண்மை வளர்ச்சிக்கு அணைகள் கட்டுதல், கால்வாய்கள் வெட்டுதல் முதலிய பெரிய நீர்ப்பாசனத் திட்டங்களைக் கைக் கொண்டால் மட்டும் போதாது. நீர்ப்பாசன வசதியோடு பிற சாகுபடி வசதிகளைப் பெருக்குவதும் அவசியம். இதற்காகவே ஆயகட்டு முன்னேற்றத் திட்டம் பின்பற்றப்பட்டது. இதன் மூலம் பெரிய நீர்ப்பாசனத் திட்டங்களால் பயனடைகின்ற நிலங்கள் சமன் செய்யப்பட்டன. அவற்றில் புதிய உற்பத்தி முறைகள் புகுத்தப் பட்டன. பரிசோதனை முறையில் பண்ணைகள் அமைக்கப்பட்டன. கடன் வசதிகள் அளிக்கப்பட்டன; நல்ல உரங்களும்; விதைகளும் தரப்பட்டன. நீர்ப்பாசன வசதிகளோடு இவ்வித வசதிகளையும் அளித்தால்தான் விவசாயிகளால் உற்பத்தியை அதிகரிக்க இயலும். எனவே, இவ்வித வசதிகளைப் பெருக்குவதற்கான நடவடிக்கைகளை அரசு எடுத்தது.

### 5. உரங்கள், விதைகள் ஆகியவற்றின் அளிப்புப் பெருக்கம்

நல்ல விதைகள், உரங்கள்' பூச்சிக்கொல்லி மருந்துகள், பயிர்ப் பாதுகாப்பு ; நடவடிக்கைகள் முதலியனவே அமோக விளைச்சலைத் தரும் திட்டத்திற்கு அடிப்படையாக அமைகின்றன. இவ் வகையில் அரசு உயர்ந்த பட்ச உதவியை அளித்து வருகின்றது. வேளாண்மை உற்பத்தியைப் பெருக்குவதற்கான வசதிகளும் பெருகியுள்ளன. தரம் மிக்க விதைகளை விவசாயிகளுக்கு அளிப்பதற்கான நடவடிக்கைகள் எல்லா மாநிலங்களிலும் எடுக்கப் பட்டுள்ளன. உர உற்பத்தி, பகிர்வு ஆகியனவும் மேற்பார்வை யிடப்படுகின்றன. உரங்களைச் சேமித்து வைக்கும் கிடங்குகள் பல இடங்களிலும் கட்டப்பட்டன. இந்த நடவடிக்கைகளால் விவசாயிகள் உற்பத்தியைப் பெருக்குவதற்கான வசதிகளைப் பெற்றுப் பயனடைகின்றனர்.

### 6. உற்பத்தி உள்ளீடுகளுக்கு முக்கியத்துவம்

உணவு, வேளாண்மை அமைச்சகத்திற்கும் பெட்ரோலியம், இரசாயன அமைச்சகங்களுக்கும் இடையே நெருங்கிய தொடர்பு இருக்கின்றது. தொழில், நிதித் துறைகளும் வேளாண்மை யோடு தொடர்பு கொண்டுள்ளன. திட்டக் குழு வேளாண்மை உற்பத்தி உள்ளீடுகளைப் பெருக்குவதன் அவசியத்தை வலியுறுத் தியது. இரசாயனத் தொழில் வேளாண்மை வளர்ச்சிக்கான இரசாயன உரங்களின் உற்பத்தியைக் கூட்டியது. மின்சாரத் துறைக் கிராமங்களுக்கு மின்சார வசதிகளைப் பெருக்கியது. இறக்கு

மதியைக் குறைத்து, உள் நாட்டிலேயே உர உற்பத்தியைப் பெருக்கவேண்டியதன் அவசியம் உணரப்பட்டது. 1970—71-ல் சுமார் 2 மில்லியன் டன்கள் என்ற அளவுக்கு நைட்ரஜன் உரங்களின் உற்பத்தியைப் பெற குறியிலக்கு நிர்ணயிக்கப்பட்டது.

## 7. வேளாண்மைக் கடன்

அரசு, கூட்டுறவு அமைப்புகளின் மூலம் நீண்ட கால, இடைக் கால, குறுகிய காலக் கடன்களை விவசாயிகளுக்கு அளிப்பதற்கான முயற்சிகளை மேற்கொண்டுள்ளது. 'வேளாண்மை மறுநிதிக் கழகம்' (Agricultural Refinance Corporation), 'வேளாண்மைத் தொழில் கழகங்கள்' (Agro-Industries Corporations) ஆகியவற்றின் மூலமும் அரசு உதவிகளை அளித்து வருகின்றது. குறுகிய கால தக்கவிக் கடன்களையும் அரசு அதிக அளவில் அளிக்கிறது. எனினும், போதுமான அளவிற்கு வேளாண்மைக் கடன் கிடைக்கப்பெற வில்லை. நில அடமான வங்கிகளின்மூலம் பெருநிலக்கிழார்களே பயனடைந்து வருகின்றார்கள். கடனைப் பெறுவதில் அவர்களுடைய செல்வாக்கே ஓங்கியுள்ளது. சிறு விவசாயிகளும், குத்தகையாளர்களும் போதிய கடன் வசதி கிடைக்காமையால், குறைந்த அளவு முதலீட்டைச் செய்கிறார்கள். வறுமையின் பிடியிலிருந்தும், லேவாதேவிக்காரர்களிடமிருந்தும் மீள முடியாதவர்களாக அவர்கள் இருக்கின்றனர்.

இவ்வாறு புதிய முறை பல புதிய வேளாண்மை வளர்ச்சித் திட்டங்களைத் தோற்றுவித்துள்ளது. வேளாண்மை உற்பத்தியில் கணிசமான உயர்வையும் நாம் பெற்றுவருகின்றோம்.

### உற்பத்திக் குறியிலக்குகள்

1970—71ஆம் ஆண்டில் அடையவேண்டிய உற்பத்திக் குறியிலக்குகள் பின்வருமாறு குறிப்பிடப்பட்டன.

| திட்டம் | அலகு | நான்காவது திட்டக் குறியிலக்கு |
|---|---|---|
| நீர்ப்பாசனம்-அதிகப் புதிய பரப்பு | | |
| 1. பெரிய நீர்ப்பாசனத் திட்டங்கள் ... | மில்லியன் ஏக்கர்கள் | 9.0 |
| 2. சிறிய நீர்ப்பாசனத் திட்டங்கள் ... | ,, | 17,0 |
| நிலப்பாதுகாப்பு-அதிகப் புதிய பரப்பு ... | ,, | 20.0 |
| தரிசு நிலங்களை விளை நிலங்களாக மாற்றுவது ... | ,, | 2.5 |

| திட்டம் | | அலகு | நான்காவது திட்டக் குறியிலக்குகள் |
|---|---|---|---|
| இரசாயன உரங்கள்: | | | |
| 1. நைட்ரஜன் | ... | மில்லியன் டன்கள் | 2.4 |
| 2. பாஸ்ஃபேட் | ... | ,, | 1.0 |
| 3. பொட்டாசியம் | ... | ,, | 0.7 |
| அங்கக உரங்களும், பசுமை உரங்களும்: | | | |
| 1. நகரக் கலப்பு உரங்கள் | ... | ,, | 6.0 |
| 2. பசுமை உரங்கள் பயன்படுத்தப் பட்ட நிலப்பரப்பு | ... | மில்லியன் ஏக்கர்கள் | 64.0 |
| முன்னேற்றமான உணவுத் தானிய விதைகள் உபயோகிக்கப்பட்ட நிலப்பரப்பு | | | |
| 1. அமோக விளைச்சல்தரும் வகைகள் | ... | ,, | 32.5 |
| 2. பிற தரம் மிக்க விதைகள் | ... | ,, | 241.5 |
| பயிர்ப் பாதுகாப்பு | ... | ,, | 137.0 |
| இருபோகச் சாகுபடி முறை விரிவாக்கம் செய்யப்பட்ட நிலப்பரப்பு | ... | ,, | நிகர அளவு 210.0<br>மொத்த அளவு 22.0 |

## எதிர்பார்க்கப்பட்ட உற்பத்தி

| பொருள் | அலகு | 1955-56 | 1960-61 | 1965-66 ஆம் ஆண்டு எதிர்பார்க்கப்பட்ட உற்பத்தி | நான்காவது ஐந்தாண்டுத் திட்டம் | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | | அதிக உற்பத்தி | நான்காவது திட்ட இறுதியில் எதிர் பார்க்கப்பட்ட உற்பத்தி | 1965-66 ஆம் ஆண்டின் அடிப்படையில் சதவீத உயர்வு |
| உணவுத் தானியங்கள் | மில்லியன் டன்கள் | 65.82 | 79.69 | 92.00 | 28.00 | 120.00 | 30 |
| கரும்பு | ,, | 5.98 | 10.45 | 11.00 | 2.5 | 13.5 | 23 |
| எண்ணெய் வித்துகள் | ,, | 5.64 | 6.52 | 7.5 | 2.5 | 10.0 | 33 |
| பருத்தி | மில்லியன் பேல்கள் | 4.00 | 5.39 | 6.3 | 2.2 | 8.5 | 35 |
| சணல் | ,, | 4.20 | 3.98 | 6.2 | 1.8 | 8.0 | 29 |

குறிப்பிட்ட குறியிலக்குகளை அடையப் பின்வரும் வழி முறைகள் கைக்கொள்ளப்படவேண்டும்.

1. குறுகிய காலத்தில் பலனளிக்கக்கூடிய திட்டங்களை நிறைவேற்றுவது அவசியம். வேளாண்மைத் திட்டங்களுக்கு இடையே இணைப்பும், தொடர்பும் இருக்கவேண்டும். தேர்ந்தெடுக்கப்பட்ட இடங்களில் திட்டங்களைச் செயல்படுத்துவது நல்லது.

2. இராசாயன உரங்கள், பூச்சிக்கொல்லி மருந்துகள் ஆகியவற்றோடு கால்நடைகளின் சாணம் முதலிய சாதாரண எருக்களும் பயன்படுத்தப்பட வேண்டும்.

3. தொழில் நுட்பம் மிக்க வேளாண்மைக் கருவிகளைப் பயன்படுத்துவது இன்றியமையாதது.

4. கிராமப் புறங்களுக்கு மின்சார வசதிகளை விரிவுபடுத்துவது வேளாண்மை உற்பத்தியைப் பெருக்க உதவும்.

5. நாடு முழுவதும் நிலத்தைப் பற்றிய புள்ளி விவரங்கள் முழுமையாகச் சேகரிக்கப்பட வேண்டும். சரியான புள்ளி விவரங்களைச் சேகரிப்பதன்மூலமே சிறப்பாகத் திட்டங்களைத் தீட்டி வெற்றிகரமாக நிறைவேற்ற இயலும். புள்ளி விவரங்களைத் திரட்டுவது விரைவுபடுத்தப்படவேண்டும்.

6. நாட்டின் நிலவளத்தோடு நீர் வளமும் சிறப்பாகப் பயன்படுத்தப்படவேண்டும். இதற்கு முறையாகவும், படிப்படியாகவும் சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களைக் கைக்கொள்வது அவசியம்.

7. உரிய காலத்தில் பயிர்ப் பாதுகாப்பு நடவடிக்கைகள் எடுக்கப்படவேண்டும். பயிர்கள் நோய்களாலும், பூச்சிகளாலும், வெள்ளத்தாலும், வறட்சியாலும் பாதிக்கப்படுவதைத் தடுப்பது அரசின் முக்கியக் கடமையாகும். பயிர்ப் பாதுகாப்பு நடவடிக்கைகளைப்பற்றிய சிறந்த அறிவை விவசாயிகள் பெற்றிருக்க வேண்டும். அரசு அந்த நடவடிக்கைகளை விவசாயிகளுக்கு உணர்த்தவேண்டும்.

8. தரமான விதைகளை அதிக அளவில் அளிப்பதற்கான வழி முறைகளை அரசு மேற்கொள்ளவேண்டும். இதன் மூலமே வேளாண்மை உற்பத்தியைக் குறுகிய காலத்தில் பெருக்கமுடியும்.

9. கால்நடைப் பராமரிப்பு, கோழிப்பண்ணை, மீன் வளர்ப்பு ஆகியவற்றின் வளர்ச்சியில் அதிக அக்கறை காட்டவேண்டும். இதன் மூலம் விவசாயிகளின் வருமானம் உயர வழி பிறக்கும்.

10. தேவையான காலத்தில் போதுமான நீர்ப்பாசன வசதிகளை அளித்தல் உற்பத்தியைக் கூட்ட உதவும்.

11. வேளாண்மைப் பணிகள் திறமையாகவும், ஆர்வத்தோடும் செய்யப்படவேண்டும். பல வேளாண்மை அமைப்புகளின் கூட்டு முயற்சியால்தான் உற்பத்தியை உயர்த்த இயலும். வேளாண்மை நடவடிக்கைகள் பல பொருளாதார நடவடிக்கைகளோடு தொடர்பு கொண்டுள்ளன. ஆகவே அவற்றிடையே ஒரு [redacted] இணைப்பு நிலை அமைந்திருப்பது அவசியம்.

இவ்வித நடவடிக்கைகளை மேற்கொண்டால் குறியளவுகளை எட்டுவது எளிதானதே. இந்திய வேளாண்மைத் திட்டங்கள் சரியாகவே வரையப்படுகின்றன. அவை சிறப்பாகச் செயல்படுத்தப்படாமையே தோல்விக்குக் காரணமாகின்றது.

நான்காவது திட்ட இறுதியில் எதிர்பார்த்த அளவில் முக்கியப் பயிர்களின் உற்பத்தி அமைந்திருந்தது. குறிப்பாக, உணவுத் தானியங்களின் உற்பத்தி அதிகரித்தது. ஆயினும், அவற்றின் இறக்குமதியை முற்றிலுமாகத் தவிர்க்க முடியவில்லை. பருத்தி உற்பத்தி கூடினாலும்கூட, உயர் ரகப் பருத்தியை இறக்குமதி செய்வது அவசியமாயிற்று. பருத்தி உற்பத்தியைப் பல மடங்கு அதிகரிக்கத் திட்டமிடப்பட்டது. தேவைக்கேற்ப எண்ணெய் வித்துகளின் உற்பத்தியை அதிகரிக்க முடியாது என்று கருதப் பெற்றது. கரும்பு, சணல் ஆகியவற்றின் உற்பத்தி தேவைக்கேற்ப உயரும் என்று கூறப்பட்டது.

### வேளாண்மைக்கான செலவுகள்

நான்காவது திட்டத்தில் வேளாண்மைக்காகவும், வேளாண்மையைச் சார்ந்த பணிகளுக்காகவும் பொதுத் துறையின் மூலம் ரூ. 2,400 கோடி செலவிடப்படும். இதில், முதலீடு சுமார் 1,500 கோடி ரூபாயாகவும், தற்போதைய செலவு சுமார் 900 கோடி ரூபாயாகவும் இருக்கின்றன. தனியார் மூலம் நான்காவது திட்டத்தில் செய்யப்படும் வேளாண்மை முதலீடு ரூ. 700 கோடியாக இருக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. பின்வரும் அட்டவணையில் பொதுத் துறையின் மூலம் செய்யப்படும் செலவுகள் குறிக்கப்பட்டுள்ளன.

## பொதுத் துறையில் வேளாண்மைக்கான செலவுகள் (கோடி ரூபாயில்)

| | முன்னேற்றப் பணிகள் | எதிர்பார்க்கப்பட்ட மூன்றாவது திட்டச் செலவு | நான்காவது திட்டத்தில் குறிக்கப்பட்டுள்ள செலவு | | |
|---|---|---|---|---|---|
| | | | மொத்தம் | முதலீடு | தற்போதைய செலவு |
| 1. | வேளாண்மை உற்பத்தி | 226.07 | 774.00 | 276.44 | 497.56 |
| 2. | சிறிய நீர்ப்பாசனம் | 176.76 | 450.00 | 403.33 | 46 67 |
| 3. | நிலவளப் பாதுகாப்பு | 72.73 | 215.00 | 204.00 | 11.00 |
| 4. | வன வளர்ச்சி | 51.73 | 120.00 | 92.50 | 27.50 |
| 5. | கால்நடைப் பராமரிப்பு | 54.44 | 152.00 | 100.00 | 52.00 |
| 6. | பால் அளிப்பு, பால் பண்டங்களின் உற்பத்தி | 36.03 | 58.00 | 46.85 | 11.15 |
| 7. | வேளாண்மைப் பொருள்களுக்கான விற்பனை வசதி | 41.53 | 49.00 | 47.24 | 1.76 |
| 8. | மீன் துறை | 26.36 | 110.00 | 105.00 | 5.00 |
| 9. | சமுதாய முன்னேற்றம் | 322.00 | 260.00 | 95.00 | 165.00 |
| 10. | கூட்டுறவு | 91.38 | 212.00 | 154.00 | 58.00 |
| | மொத்தம் | 1,098.69 | 2,400.00 | 1,524.36 | 875.65 |

### வேளாண்மை வளர்ச்சிக்குத் திட்டமிடுதலில் உள்ள இடர்ப்பாடுகள்

இந்தியாவில் வேளாண்மைத் திட்டங்களை வெற்றி பெறச் செய்வது கடினமாக உள்ளது. முன்னேற்றத்திற்குத் தடையாகப் பல இடையூறுகள் அமைந்துள்ளன. அந்த இடையூறுகளைப் பின்வருமாறு சுருக்கிக் கூறலாம்.

**முதலாவதாக**, திட்டம் வெற்றியடைய இந்திய விவசாயிகளின் ஒத்துழைப்புத் தேவை. ஆனால், அவர்கள் பழைமை வாதிகளாக இருக்கின்றனர். பாரம்பரியமான உற்பத்தி முறைகளையே அவர்கள் கைக்கொள்கின்றனர். புதிய சாகுபடி முறை சந்தேகிக்கப்படுகின்றது. பொருளாதார முன்னேற்றத் திட்டங்களில் மக்கள் பங்குகொள்வதில்லை. குறியிலக்குகள் எட்டப்படாமைக்கு இஃது ஒரு காரணமாகிறது. சமுதாய நலம் பெருக

எல்லாருடைய கடின உழைப்பும் தேவைப்படுகின்றது. மக்கள் ஆர்வத்தோடு உற்பத்திப் பணிகளில் ஈடுபட வேண்டும். திட்டத்தின் வெற்றிக்காக மக்கள் யாவரும் பாடுபடுவது இன்றியமையாதது. கடின உழைப்பைத் தருவதற்கான விருப்பத்தை மக்கள் கொண்டிருக்கவேண்டும். அரசின் தீவிர நடவடிக்கைகள் வெற்றிபெற மக்களின் கூட்டு முயற்சி தேவை.

விவசாயிகளின் ஒத்துழைப்பை அரசு பெற வேண்டுமென்றால், 1. விவசாயிகள் திட்டம் தங்களுடைய நலனிற்காகவே செயல்படுத்தப்படுகிறது என்பதை உணரவேண்டும்; 2. அவர்களிடத்து நம்பிக்கையை வளர்க்க வேண்டும். குறுகிய காலத்திலேயே திட்டத்தின் நன்மைகளை அவர்கள் அடையுமாறு செய்ய வேண்டும்; 3. திட்டத்தைச் செயல்படுத்துபவர்கள் நேர்மையானவர்களாகவும், தூய்மையானவர்களாகவும், திறமையானவர்களாகவும், தீவிரமானவர்களாகவும் இருத்தல்வேண்டும். அரசியல்வாதிகள் மக்களைச் சுரண்டி வாழ்கின்ற நிலையைத் தவிர்ப்பது அவசியம். அரசாங்க அலுவலர்கள் உண்மையான பணிகளை ஆற்றவேண்டும்.

இதுபற்றித் திட்டக்குழு மேலும் குறிப்பிடுவதாவது, 'சமூக விரோதச் சக்திகள், சமுதாயச் சுரண்டல்கள் முதலியவற்றைக் களைவது அரசின் கடமை. அரசின் நிர்வாகத்தில் குறைபாடுகள் இருப்பதை மக்கள் விரும்பமாட்டார்கள். திட்டத்தைச் செயல்படுத்துவதில் காலதாமதம் ஏற்படக்கூடாது; திட்டத்தை நிறைவேற்றுபவர்கள் திறமை குறைவானவர்களாக இருக்கக் கூடாது. சமுதாயத்தைச் சுரண்டி வாழ்பவர்கள்மீது கடுமையான நடவடிக்கைகள் எடுக்கப்படவேண்டும். நேர்மையற்ற நிர்வாகம் அமைந்திருந்தால், மக்கள் ஊக்கத்தோடு உழைப்பைத் தரமாட்டார்கள். மக்களின் ஒத்துழைப்பு இழக்கப்படுவதற்குக் குறைபாடான அரசியல் நிர்வாகமும் ஒரு காரணமாகிறது.'

இரண்டாவதாக, வேளாண்மைத் திட்டம் வெற்றி பெற அலுவலர்களின் நேர்மையும், திறமையும் தேவைப்படுகிறது. திட்டத்தைச் செம்மையாக நிறைவேற்ற வேளாண்மை அமைப்புகளில் மாற்றங்களை ஏற்படுத்துவது அவசியமாகின்றது. திட்டக்குழு கூறுவதாவது, 'முன்னேற்றத்தின் வேகம் பொது நிர்வாகத்தைச் சார்ந்துள்ளது. அது செயல்படுகின்ற நிலைக்குத் தக்கவாறு மக்களின் ஒத்துழைப்பை அரசு பெறும்.' திட்டங்களை நிறைவேற்றுவதற்குத் தேவையான பயிற்சிபெற்ற அலுவலர்கள் எண்ணிக்கையில் குறைவாக இருக்கின்றனர். திட்டங்களின்

வெற்றிக்குத் திறமையான, நேர்மையான அலுவலர்கள் தேவைப் படுகின்றனர். நல்ல உரங்கள், தரம்மிக்க விதைகள், கடன்கள், ஆகியவற்றை அளிப்பதில் நேர்மைக் குறைவு காணப்படுகின்றது. விவசாயிகள் அரசின் முதலீட்டின் மூலம் சில நிலைகளில் பயனடைவதில்லை. அரசாங்க அலுவலர்கள் முதலீட்டின் நன்மைகளை விவசாயிகள் பெறமுடியாதவாறு செய்து விடுகின்றனர். இவற்றின் காரணமாகவே திட்டங்களில் உற்பத்திக் குறியளவுகளை எட்ட முடிவதில்லை; சாதாரண நிலையில் உள்ள மக்களும் திட்டங்களின் மீதான நம்பிக்கையை இழக்கின்றனர்கள். எனவே திட்டங்களை நேர்மையாக நிறைவேற்றுவதற்கான அமைப்பு ஏற்படுத்தப்பட வேண்டும்.

இக் குறைப்பாடுகளை நீக்க திட்டங்களைச் செயல்படுத்தும் பணி நேர்மையானவர்களிடம் ஒப்புவிக்கப்படவேண்டும். இதற்கான வழிமுறைகளைத் திட்டக்குழு பின்வருமாறு பரிந்துரைத்துள்ளது.

1. அரசியல்வாதிகளோ, அரசின் நிர்வாகிகளோ, தவறிழைக்கும்போது நீதி விசாரணை நடத்தப்படவேண்டும். விசாரணை செய்வதற்கான அமைப்புகளை ஏற்படுத்துவது நல்லது. விசாரணையின் போது உண்மைகள் வெளிக்கொணரப்படவேண்டும்.

2. தற்பொழுதுள்ள சட்டங்கள் அரசின் ஊழியர்கள் தவறிழைக்கும்போது தண்டிப்பதற்குச் சாதகமாக அமைந்திருக்கவில்லை. அரசியல்வாதிகளும் அவர்களுடைய உறவினர்களும் திடீரெனப் பெரும்செல்வந்தர்களாக மாறுகின்றனர். அரசியல் அமைப்புச் சட்டங்களில் உள்ள குறைபாடுகளைக் களைவதன் மூலமே தவறிழைப்பவர்களுக்குத் தண்டனை அளிக்க முடியும். பொதுப்பணியாளர்கள் தவறான வழிகளில் செல்வத்தைக் குவிக்கும் நிலை தவிர்க்கப்படவேண்டும். அரசியல்வாதிகள், அரசின் நிர்வாகிகள், அவர்களுடைய உறவினர்கள் ஆகியோருடைய செல்வம், வருமானம் ஆகியனபற்றிய கணக்குகள் மக்களுக்கு அறிவிக்கப்படவேண்டும்.

3. நேர்மைக் குறைவானவர்களிடம் முக்கியமான பொறுப்புகளை ஒப்படைக்கக்கூடாது. சுரண்டலுக்கான வாய்ப்புகளை அவர்கள் இழக்குமாறு செய்யவேண்டும்.

மூன்றாவதாக, இந்தியக் கிராம வாழ்க்கை முறையில் உள்ள குறைப்பாட்டாலும் வேளாண்மை வளர்ச்சி பாதிக்கப்படுகின்றது. கிராமப்புறங்களில் சாலைப் போக்குவரத்து வசதிகூடச் சிறப்பாக

அமைந்திருப்பதில்லை. உற்பத்தியைப் பெருக்குவதற்கான நீர்ப் பாசன வசதிகளும், பிற வசதிகளும் விவசாயிகளுக்குக் கிடைப்ப தில்லை. இவ் வசதிகள் யாவும் கிராமங்களுக்கு உடனடியாக அளிக்கப்படவேண்டும். திட்டங்களின் உண்மையான நன்மை களை விவசாயிகள் பெறுமாறு செய்வது அவசியம்.

**நான்காவதாக,** வேளாண்மை வளர்ச்சிக்கான பல நிறுவனங் களும், அமைப்புகளும் இணைந்து செயலாற்றவில்லை. உற்பத்தி, விற்பனை, பகிர்வு, நுகர்வு ஆகியவற்றுக்கிடையே தொடர்பை ஏற்படுத்தவேண்டும். இவற்றைச் செய்கின்ற நிறுவனங்கள் ஒருங்கிணைந்து செயல்படும்போதுதான் வேளாண்மை வளர்ச்சியில் வெற்றி காண இயலும். பல நிறுவனங்கள் இணைந்து செயல்படும் போது திட்டத்தை வெற்றிகரமாகச் செயல் படுத்துவதும் எளிதாகின்றது.

மாநில அளவிலும் கூட்டு முயற்சிகள் பயனளிப்பனவாம். மாநில அரசுகள் 'வேளாண்மை உற்பத்திக் குழுக்களை' (Agricultural Production Committees) அமைக்கின்றன. அமைச்சகங்கள் சிறப்பாகச் செயல்பட இவை உதவுகின்றன. வேளாண்மை, சமூக முன்னேற்றம், பஞ்சாயத்துகள், கூட்டுறவு, நீர்ப்பாசனம் முதலிய அரசின் பல துறைகளுக்கும் இக் குழுக்கள் ஆலோசனை அளிக் கின்றன. இவற்றால் வேளாண்மை முன்னேற்றம் காக்கப்படு கின்றது. வேளாண்மை விரிவாக்கப் பணிகளை மாநில அரசுகள் மேற்கொள்கின்றன. திட்டங்கள் வெற்றியடைய மத்திய, மாநில அரசுகளின் நடவடிக்கைகளுக்கு மக்களின் ஒத்துழைப்பு இருக்க வேண்டும்.

**நிறைவுரை**

வேளாண்மைப் பொருளாதாரத்திற்கே உரித்தான குறை பாடுகளை நீக்க அரசின் தலையீடு அவசியமாகின்றது. மாநில அரசுகள் அவற்றின் பொறுப்புகளை உணர்ந்து, அதற்கேற்பச் செயலாற்ற வேண்டும். பொது நலனைப் பெருக்கக்கூடிய உண்மை யான திட்டங்கள் தேவை. இத் திட்டங்கள் சமுதாயத்தில் விழிப் புணர்ச்சியைத் தோற்றுவிக்கும் இயக்க நிலையைக்கொண்டிருப்பது அவசியம். ஓர் ஏக்கருக்கான உற்பத்தியும், ஓர் அலகு உழைப் பிற்கான உற்பத்தியும், ஓர் அலகு மூலதனத்திற்கான உற்பத்தியும் அதிகரிக்க வேண்டும். திட்டங்கள் பின்வரும் வெவ்வேறு வழிகளில் நிறைவேற்றப்படுகின்றன.

1. நீர்ப்பாசனம், மின்சார உற்பத்தி, தரிசு நிலங்களைச் சாகுபடி நிலங்களாக மாற்றுவது, போக்குவரத்து வசதிகளை விரிவாக்கி முன்னேற்றம் பெறச் செய்வது முதலியவற்றின் மூலம் 'சமுதாய மூலதனத்தை' (Social Capital) ஏற்படுத்தவேண்டும்.

2. விஞ்ஞானச் சாகுபடி முறையை விவசாயிகள் பின்பற்றுமாறு செய்யவேண்டும். வேளாண்மை ஆராய்ச்சிக்காக அரசு அதிக மூலதனத்தை ஒதுக்குவது அவசியம். ஆராய்ச்சியின் கண்டுபிடிப்புகள் வேளாண்மை உற்பத்தியைப் பெருக்குவதற்குப் பயன்படுத்தப்படவேண்டும்.

3. மேம்பாடான தொழில் நுட்ப உற்பத்தி முறைகளை வேளாண்மையில் புகுத்துவது அவசியமானது. கால்நடைகளின் பராமரிப்பில் தகுந்த கவனம் செலுத்தப்படவேண்டும். களைகளை நீக்கும் முறைகளில் முன்னேற்றம் தேவை. பயிர்ப் பாதுகாப்புக்காகப் பூச்சிக்கொல்லி மருந்துகளைப் பயன்படுத்தும் வழக்கத்தை விவசாயிகள் கைக்கொள்ளுமாறு செய்யவேண்டும்.

4. விதைகள், உரங்கள், எருக்கள், கருவிகள் ஆகியவற்றைப் பகிர்வு செய்வதை விரைவாக்க வேண்டும். மாநில விதைப் பண்ணைகளின் மூலம் நல்ல விதைகளின் உற்பத்தியைப் பெருக்கி நாடுமுழுவதும் பரப்ப வேண்டும். பதிவு செய்யப்பட்ட தனியாரும் இவ் விதைகளின் உற்பத்தியில் ஈடுபட அனுமதிக்கலாம்.

5. வேளாண்மையை இயந்திரமயமாக்க இங்கிலாந்தில் இருப்பதைப் போன்று 'மாநில இயந்திரக் கலப்பை நிலையங்களை' ஏற்படுத்தலாம். இந்தியாவில் இதுபோன்ற நிலையங்கள் போபால், மேற்கு வங்காளம் ஆகிய இடங்களில் இருக்கின்றன. அல்லது ஸ்காண்டிநேவிய நாடுகளில் உள்ளது போன்று கூட்டுறவுத் துறையின் உதவிகொண்டு வேளாண்மையை இயந்திரமயமக்கலாம்.

6, போதுமான அளவிற்குக் கிராமக் கடன் வசதிகளைப் பெருக்கவேண்டும். வேளாண்மைக் கடன் உற்பத்தித் திட்டங்களோடு தொடர்புப்படுத்தப்படவேண்டும். குடும்ப, கிராம அடிப்படைகளில் வேளாண்மைக் கடன்கள் வழங்கப்படவேண்டும்.

7. வேளாண்மைப் பொருள்களின் விற்பனை வசதிகள் பெருகவேண்டும். விளைபொருள்களைச் சேமித்து வைப்பதற்கான கிடங்குகள் எண்ணிக்கையில் அதிகரிக்கவேண்டும். தானியங்களைத் தரத்திற்கேற்ப பிரிப்பதும் நன்மை பயக்கும்.

8. கிராமப் பகுதிகளில் பின்தங்கிய வகுப்பினருக்குக் கல்வி, ஆரோக்கிய வசதிகளை அளிக்கவேண்டும். ஒதுக்கப்பட்டுக் குறைந்த சலுகைகளைக் கொண்டிருக்கும் கிராமச் சமுதாயத்தினரின் நிலை உயர அரசு ஆவன செய்யவேண்டும்.

9. பரஸ்பர கூட்டுறவின் மூலம் விவசாயிகள் ஒவ்வொருவரும் உதவியைப் பெறவேண்டும். வேளாண்மை விரிவாக்கப் பணிகளால் விவசாயிகள் முன்னேற்றமான சாகுபடி முறைகளைக் கைக்கொள்ளுமாறு செய்யவேண்டும். விவசாயிகளின் நல் வாழ்விற்கு அரசு வழிகாட்ட வேண்டியது அவசியம்.

10. காடுகளை அழித்துச் சாகுபடி நில அளவைக் கூட்டலாம். நில வளப் பாதுகாப்பு நடவடிக்கைகளை மேற்கொள்வது உற்பத்தியை எளிதில் பெருக்க உதவும்.

சமூக மூலதனத்தைப் பெருக்குவதற்கான முதலீட்டு வீதமும், விஞ்ஞானச் சாகுபடி முறையைப் பரப்பும் வேளாண்மை உற்பத்தியின் அளவை நிர்ணயிக்கின்றன. சாகுபடியில் தொழில் நுணுக்க உற்பத்தி முறைகளைப் புகுத்துவது இன்றியமையாதது. இதன் மூலம் வேளாண்மையில் 'நிறை வேலையுடைமை' (Full Employment) ஏற்படும். வேளாண்மைப் பொருளாதாரத்தில் பல வகைப்பட்ட வேலைவாய்ப்புகளை ஏற்படுத்துவதும் அவசியமாகின்றது. உள்ளீட்டு–உற்பத்தி 'வீதங்கள்' (Input-output Ratios) விரைவான முன்னேற்றத்திற்கு உதவவேண்டும்.

திட்டங்களைத் தீட்டிச் செயல்படுத்த நிதி வசதி தேவைப்படுகின்றது. நிதி வசதிக்கேற்பத் திட்டங்கள் வரையப்பட வேண்டும். திட்டங்களால் பயனடைகின்ற மக்களிடமிருந்தே திட்டங்களை நிறைவேற்றுவதற்குத் தேவையான நிதியைத் திரட்டவேண்டும். அந்த நிதியை அரசு வரிவிதிப்பின் மூலம் திரட்டுகின்றது. முன்னேற்றத்திற்குத் தேவையான மூலதனம் 'பற்றுக்குறை நிதியாக்கம்' முதலிய பிற முறைகளாலும் பெறப்படுகின்றது.

இந்தியா முதலிய வளரும் நாடுகளில் அரசின் திட்டங்கள் இன்றி வேளாண்மையில் விரைவான வளர்ச்சியைக் காண முடியாது. நீர்ப்பாசனம், போக்குவரத்து, செய்தித் தொடர்பு, மின்சார உற்பத்தி ஆகியவற்றிற்கான முதலீட்டை அரசே எளிதில் செய்ய இயலும், நம் நாட்டில் மத்திய அரசும், மாநில அரசுகளும் வேளாண்மை வளர்ச்சிக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கின்றன.

# 19. வேளாண்மை வரிவிதிப்பு
## (Agricultural Taxation)

**வளரும் பொருளாதாரத்தில் வேளாண்மை வரிவிதிப்பின் முக்கியத்துவம்**

வளரும் நாடுகளின் தேசிய வருவாயில் சுமார் 50 சதவீதம் வேளாண்மைத் துறையிலிருந்தே கிடைக்கிறது. எனவே, வரி விதிப்புச் சுமையை வேளாண்மைத் துறையும் ஏற்பது அவசிய மாகின்றது. இந்தியாவில் தொழில் சிறப்பாக முன்னேற்றமடைந் திருக்கவில்லை. வாணிபத்தின் மூலம் கிடைக்கக்கூடிய இலாபமும் குறைந்த அளவிற்கே இருக்கின்றது. தொழில், வியாபாரம் ஆகிய வற்றில் இலாபம் அதிக அளவில் பெறப்படுவதில்லை. 'இலாபங் களின் அளவு தேசிய வருவாயில் குறைந்த வீதத்திலேயே இருக்கும்போது, மூலதனத் திரட்சியை விரைவாக்கவேண்டு மென்றால், வேளாண்மைத் துறையின்மீது கணிசமான அளவிற்கு வரிவிதிப்பதைத் தவிர வேறு வழிஇல்லை'[1] என்று பேராசிரியர் ஆர்தர் லூயிஸ் குறிப்பிடுகின்றார்.

இந்தியா முதலிய மேம்பாடடைந்துவரும் நாடுகளில் வேளாண்மை பொருளாதாரத்தின் முக்கியத் துறையாக அமைந் துள்ளது. பொருளாதார முன்னேற்றத்திற்கான செலவின் கணிச மான ஒரு பகுதியை வேளாண்மைத் துறை ஏற்கவேண்டும். பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்காகச் சோவியத் ரஷ்யா, ஜப்பான் முதலிய நாடுகள் வேளாண்மைத் துறையின் மீது அதிக வரிவிதிப்பைச் செய்தன. வேளாண்மைத் துறையின் மீது மட்டுமே மிக அதிக அளவிற்கு அந்த நாடுகள் வரிவிதிப்பைச் செய்தன என்பதை வரலாற்று உண்மைகள் உணர்த்துகின்றன. அந்த நாடுகள் பொருளாதார முன்னேற்றத்தின் தொடக்க

1 Arthur Lewis, W , The Theory of Economic Growth, 1955, p. 231.

காலத்தில் இம் முறையைப் பின்பற்றின. ரஷ்யப் பொருளாதார முன்னேற்றத்தைப் போற்றிப் புகழாதவர்களே இல்லை எனலாம். இந்தியாவில் திட்டத்தைத் தீட்டுபவர்களும், பொருளாதார வல்லுநர்களும் ரஷ்யத் திட்ட முறையைப் புகழ்கின்றனர். எனவே, அவர்கள் இந்தியாவின் பொருளாதார முன்னேற்றத்திற்கான மூல தனத்தை வேளாண்மையினின்றும் பெறுவதற்கான நடவடிக்கைகளை எடுக்கவேண்டும்.

விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்கு வேளாண்மை வரிவிதிப்பு முறையை நன்கு பயன்படுத்திக்கொள்ள வேண்டுமென்று பேராசிரியர் கால்டர் (Prof. Kaldor) கூறுகிறார். கட்டாய வரிவிதிப்பின்மூலமே கிராமப் பொருளாதாரத்தில் முதலீட்டிற்கான சேமிப்பைத் திரட்ட முடியும். வருமானம் உயர் வடைந்தாலும் கிராம மக்கள் தாங்களாகவே சேமிக்கும் பழக்கத்தைக் கொண்டிருப்பதில்லை. வருமானம் உயரும்போது அவர்கள் நுகர்விலேயே ஈடுபடுகின்றார்கள். கிராமங்களிலிருந்து நிதியைத் திரட்டுவதில் வேளாண்மை வரிவிதிப்பு முக்கியப் பங்கைக் கொண்டிருக்கின்றது.

பொருளாதார முன்னேற்ற காலத்தில் வேளாண்மைத் துறை பிற துறைகளுக்குத் தேவையான உணவுப் பொருள்களையும், கச்சாப் பொருள்களையும் அதிக அளவில் உற்பத்தி செய்ய வேண்டும். இப் பொருள்களின் உற்பத்தியில் அதிக உபரி தோன்றுவது அவசியமானதாகும். தொழில், வாணிபம் ஆகிய வற்றின் வளர்ச்சி வேளாண்மையில் உற்பத்தி செய்யப்படுகின்ற கச்சாப் பொருள்களின் அளவைப் பொறுத்து அமையும். வேளாண்மையல்லாத பிற துறைகளுக்குத் தேவையான பொருள் களை வேளாண்மைத் துறை உற்பத்திசெய்ய வேண்டியுள்ளது. இப் பொருள்களின் உற்பத்தியில் விற்பனைக்கான உபரி ஏராளமாக இருக்கவேண்டும்.

இந்தியா முதலிய வளரும் நாடுகளில் மக்கள் தொகையும் விரைவாகப் பெருகிவருகின்றது. பெருகுகின்ற மக்கள் தொகைக்குத் தேவையான உணவுப் பொருள்களை உற்பத்தி செய்கின்ற பொறுப்பும் வேளாண்மைத் துறையைச் சார்கின்றது. முன்னேற்ற மடைந்த பொருளாதாரத்தில் இலாபத்தின் அளவு அதிகமானதாக இருக்கின்றது. தொழில், வாணிபம், வேளாண்மை ஆகியவற்றில் ஈடுபட்டிருப்பவர்கள். உற்பத்தியைப் பெருக்கவேண்டுமென்ற ஊக்கத்தைக் கொண்டுள்ளார்கள். வேளாண்மையின் உபரி உற்பத்தியும் அதிக அளவில் அமைந்துள்ளது. தொழில், வாணிபம்

ஆகியவற்றின் முன்னேற்றம் வேளாண்மை வளர்ச்சியை ஊக்குவிக்கின்றது. வளரும் பொருளாதாரங்களில் இதற்கு மாறுன நிலைகள் அமைந்துள்ளன.

முன்னேற்றமடைந்துவரும் பொருளாதாரங்களில் வேளாண்மை உற்பத்தி சுயதேவைப் பூர்த்திக்காகவே செய்யப்படுகின்றது. சந்தைக்காகச் செய்யப்படுகின்ற உற்பத்தி குறைவாகவே உள்ளது. விவசாயிகள் இலாப நோக்கத்தோடு சாகுபடி நடவடிக்கைகளை மேற்கொள்வதில்லை. உற்பத்தியைப் பெருக்குவதற்கான பொருளாதார ஊக்கங்கள் அவர்களால் பெறப்படுவதில்லை. விரைவாகத் தொழில் மயமாகும் நிலை ஏற்படும்போது உணவுப் பொருள்களின் பற்றுக்குறை தோன்றுகிறது. தொழில் துறைக்குத் தேவையான கச்சாப் பொருள்களும் போதுமான அளவிற்குக் கிடைப்பதில்லை. இந்த நிலையால் விலைகள் உயர்வடைகின்றன. விலைகளின் உயர்வு ஏற்பட்டாலும் உற்பத்தியாளர்கள் உற்பத்தியைப் பெருக்க வேண்டுமென்ற ஊக்கத்தைப் பெறுவதில்லை. இதனுல், வேளாண்மைப் பொருள்களின் அளிப்பில் அதிகரிப்பு ஏற்படுவதில்லை. உண்மையில் இந்த நாடுகளில் உற்பத்தியின் அளவு விலையுயர்வால் குறைந்து விடுகின்றது. இக் குறைபாடுகளைத் தவிர்க்க வரிவிதிப்பு முறையைப் பின்பற்றி விற்பனை உபரியைப் பெருக்கவேண்டும்.

பேராசிரியர் கால்டர் இது பற்றிய தெளிவான கருத்தைக் குறிப்பிடுகின்றுர். 'வேளாண்மைத் துறையின்மீது கட்டாயமான வரிகளை விதிப்பதன் மூலமே பொருளாதார முன்னேற்றத்திற்குத் தேவையான சேமிப்பின் அளிப்பை அதிகரிக்கமுடியும்; விரை [illegible] பொருளாதார முன்னேற்றத்தைப் பெற வேளாண்மை வரி விதிப்புப் பெரிதும் உதவுகின்றது.'[1]

வேளாண்மை வரி விதிப்பை உயர்த்தி முன்னேற்றத் திட்டங்களுக்கான நிதியைப் பெற வேணடுமென்று பல பொருளியலாளர்களும் பரிந்துரைக்கின்றனர். வேளாண்மைத் துறையின் விற்பனை உபரியைப் பெருக்கவும் வேளாண்மை வரிமுறை உதவும். திட்டங்களின் மூலம் பல நன்மைகளையும் அடைந்த வேளாண்மையின் மீது அதிக வரி விதிப்பைச் செய்வது நியாயமே என்றும் அவர்கள் கூறுகிறுர்கள். சமீப காலத்தில் வேளாண்மைத் துறையினரின் வரி செலுத்தும் திறனும் பல மடங்கு பெருகியுள்ளது.

[1] N. Kaldor, 'The Role of Taxation on Economic Development,' quoted by Dr. E. T. Mathew in 'Agricultural Taxation and Economic Development', p. 5.

வேளாண்மை வளர்ச்சிக்கான திட்டங்களை அரசு நிறைவேற்றியுள்ளது. இத் திட்டங்களின்மூலம் நன்மையடைந்துள்ளவர்கள் நிலக்கிழார்களாவர். அவர்களுடைய உற்பத்தியும், வருமானமும் அதிகரித்துள்ளன. உற்பத்தி உயர்விற்கு அரசின் முதலீடுகளே முக்கியக் காரணமாக அமைகின்றன. நிலக்கிழார்கள் தாங்களே அதிக முதலீட்டைச் செய்து உயர்ந்த உற்பத்தியைப் பெறுவதில்லை. அரசு அளிக்கின்ற நல்ல விதைகள், உரங்கள், நீர்ப்பாசன வசதிகள், கருவிகள், பூச்சிக்கொல்லி மருந்துகள், கடன்கள், சமுதாய வளர்ச்சித்திட்டங்கள், வேளாண்மை விரிவாக்கப்பணிகள் ஆகியவற்றின்மூலமே உற்பத்தியின் அளவு பலமடங்கு பெருகியுள்ளது. உயர்ந்த உற்பத்தியினால் அதிக வருமானத்தைப் பெறுகின்ற நிலக்கிழார்கள், வருமானத்தின் பெரும் பகுதியை முதலீடு செய்ய முன் வருவதில்லை. அவர்கள் பல வழிகளிலும் நுகர்விற்காகவே வருமானத்தைப் பயன்படுத்துகின்றனர். எனவே, நுகர்வைக் கட்டுப்படுத்தி முதலீட்டைப் பெருக்க வேளாண்மை வரி விதிப்பு அவசியமாகின்றது.

வேறு சிலர் இதற்கு எதிரான கருத்தையும் தெரிவிக்கின்றனர். நிலவுடைமையாளர்கள் உற்பத்தியைப் பெருக்குவதற்கான ஊக்கத்தைக் கொண்டில்லாமைக்கு, வேளாண்மை வரி விதிப்பு ஒரு காரணமாகின்றது என்று அவர்கள் கூறுகின்றனர். அதிக இலாபத்தைப் பெறுபவர்கள் அதிக வரியைத் தரவேண்டியவர்களாகின்றனர். நிலக்கிழார்கள் உற்பத்திக்கான முதலீட்டைக் குறைந்த அளவில் செய்கின்றமைக்கு இஃது ஒரு காரணமாகின்றது. இந்திய வேளாண்மைப் பொருளாதாரத்தில் 'தலத்திலில்லாத நிலக்கிழார்கள்' (Absentee Landlords) அதிக எண்ணிக்கையில் இருக்கின்றனர். வளர்ச்சிக்குத் தடையாக வேளாண்மை வரி முறை பொருந்தியுள்ளது என்றும் சொல்லப்படுகின்றது. வரி விதிப்பால் இலாபத்தின் அளவு குறைக்கப்படுவதால் முதலீடு செய்வதற்கான ஊக்கம் பெருகுவதில்லை.

பெரிய நிலவுடைமைகளின்மீது நிலவரி விதிக்கப்படுவது நியாயமானதேயாகும். பெரிய நிலவுடைமையாளர்கள் அதிக வருமானம் பெறுபவர்களாகவே இருப்பார்கள். நிலவரி அளிப்பது அவர்களுக்குப் பெரிய சுமையாக இருப்பதில்லை. நிலவரியை வளர்வீதத்தில் அமைப்பது நன்மை தரும் என்று கூறப்படுகிறது. நிலவுடைமையாளர்கள் நிலத்தைச் சிறப்பாகப் பயன்படுத்துமாறு செய்ய அரசு நடவடிக்கைகளை எடுக்கவேண்டும். சிறந்த நிலவுடைமையாளர்களுக்கு நிலவரியிலிருந்து விலக்களித்துப் பெரிய நிலவுடைமையாளர்களின்மீது உயர்வான வரியை விதிக்க

வேண்டும். இதனால் மாநில அரசுகளின் வரி வருவாய் பாதிக்கப் படமாட்டாது; வரி முறையில் சமத்துவத்தையும் நிலை நாட்டலாம்.

வளர்ச்சியடைந்துவரும் நாட்டில் வருமானவரி, வாணிபவரி முதலியவற்றின் மூலமாகவும் அரசு அதிக வரி வருவாயைப் பெற முடியும். எனினும், வளரும் பொருளாதாரத்தில் வேளாண்மை வரிகளும், மறைமுகவரிகளும் (Indirect Taxes) முக்கிய நிலையைக் கொண்டுள்ளன. இவ் வரிகளின்மூலம் மக்களில் பெரும்பாலான வர்களை முன்னேற்றத்திற்கான நிதியைச் செலுத்துவதில் பங்கு பெறச்செய்யலாம். இதனால், முன்னேற்றத்திற்கான நிதியைச் செலுத்துகின்ற மனநிறைவைப் பலரும் பெறுவார்கள். மேலும், இவ்வகை வரிகளின்மூலமே அரசு தேவையான நிதி வசதியை உயர்ந்த அளவில் திரட்ட இயலும்.

பொருளாதார முன்னேற்றத்தை எளிதில் பெற நிலமானது முழுமையாக அதிக உற்பத்தியைப் பெறும் வகையில் பயன் படுத்தப்படவேண்டும். இந்த நிலையைப் பெற உற்பத்திக்குப் பயன் படுத்தாத நிலங்களைக் கொண்டிருக்கும் நிலவுடைமையாளர்களின் மீது அதிக வரி விதிக்கப்படுதல் அவசியமாகும். நிலவுடைமை யாளர்களில் பலர் நிலத்தைப் பெருமைக்காகவும், சமுதாயத்தில் உயர்ந்த செல்வாக்கைப் பெறவேண்டுமென்ற எண்ணத்திற்காகவும் வைத்துள்ளனர். உற்பத்தியைப் பெருக்க வேண்டுமென்பது அவர்களின் நோக்கமாக இருப்பதில்லை. நிலத்தைச் சரியாகப் பயன்படுத்தாதவர்களின் நிலவுடைமை உரிமையை அரசு பிறருக்கு மாற்றிக்கொடுக்கவேண்டும். உழுபவனுக்கே நிலம் சொந்தமாகும் போதுதான் உற்பத்தியின் அளவைப் பல மடங்கு பெருக்கமுடியும். 'ஊக வாணிப' (Speculation) நோக்கத்திலும் சிலர் நிலத்தை உடைமையாகக் கொண்டுள்ளனர். நிலங்களை வாங்கி விற்றல் மூலமாக இவர்கள் அதிக இலாபத்தைப் பெறுகின்றனர். இதைத் தடுக்கத் தீவிரமான 'மூலதன இலாபவரி' (Captial Gains Tax) நில விற்பனைகளின்மீது விதிக்கப்படவேண்டும். சாகுபடிக்கு ஏற்ற, ஆனால், சாகுபடியில் ஈடுபடுத்தாத நிலங்களின்மீது உயர்ந்த அளவில் வரியானது நிர்ணயிக்கப்படவேண்டும். அல்லது சாகுபடி நிலங்களின்மீது எந்த அளவிற்கு நிலவரி விதிக்கப்படுகின்றதோ அதே அளவிற்குத் தரிசு நிலங்களின்மீது நிலவரி விதிக்கப்படுதல் அவசியமாகின்றது.

வேளாண்மை வரி விதிப்பிற்குச் சாதகமான மற்றொரு காரணமும் குறிப்பிடப்படுகிறது. இந்தியாவில் பொருளாதார முன்னேற்றத் திட்டங்களை நிறைவேற்ற 'உள் நாட்டுச் சேமிப்பைப்

(Domestic Saving) பெருக்குவது அவசியமானது. உள் நாட்டு வசதிகளைத் திரட்ட இஃது இன்றியமையாதது. ஐந்தாண்டுத் திட்டங்களை நிறைவேற்றத் தொடங்கிய காலத்திலிருந்தே நிதிச் சிக்கல்கள் ஏற்பட்டு வருகின்றன. உள் நாட்டு நிதிவசதிகள் பற்றுக்குறை நிலையையே கொண்டுள்ளன. திட்டங்களுக்கான நிதியில் உள் நாட்டு மூலதனத்தின் அளவு குறைந்துகொண்டே வருகின்றது. முதல் திட்டத்தின் முதலீட்டில் 90 சதவீதம் மூலதனம் உள் நாட்டிலேயே பெறப்பட்டது; இஃது இரண்டாவது திட்டத்தில் 76 சதவீதமாகவும், மூன்றுவது திட்டத்தில் 63 சதவீதமாகவும் குறைந்து விட்டது. இரண்டாவது திட்டக் காலத்தில் அரசு உள் நாட்டு வசதிகளைத் திரட்டத் தவறி விட்டது. வேளாண்மைத் துறையின் சேமிப்புகளை அரசு திரட்டத் தவறிய நிலையும் இதற்குக் காரணமாக இருந்தது. தொடக்க காலத்திலிருந்தே அரசு வேளாண்மை வளர்ச்சிக்கான முதலீடுகளை அதிக அளவில் செய்து வருகின்றது. மத்திய அரசோடு மாநில அரசுகளும் வேளாண்மை வளர்ச்சிப் பணிகளுக்காக அதிக செலவுகளைச் செய்கின்றன. எனினும், திட்டங்களின் மூலம் அதிக நன்மையடைந்த வேளாண்மைத் துறையினின்றும் குறைந்த வரி வருவாய் மட்டுமே அரசால் பெறப்படுகிறது.

சமீப காலமாக விவசாயிகளின் வருமானம் உயர்ந்து வருகின்றது. அதிகரிக்கின்ற அவ் வருமானத்தினின்றும் கணிசமான ஒரு பகுதியை வரியாகப் பெற அரசு நடவடிக்கைகளை எடுக்கவேண்டும். இந்த முறை பெரிய விவசாயிகளுக்கு மிகவும் பொருத்தமுடையதாக அமையும். திட்டங்களினுல் ஏற்பட்ட பொருளாதார வளர்ச்சியின் மூலம் அதிக நன்மையடைந்தவர்கள் பெரிய விவசாயிகளேயாவர். திட்டங்கள் நிறைவேற்றப்பட்ட காலத்தில் இவர்களுடைய வருமானம் பல மடங்கு அதிகரித்தது. மேலும், நம் நாட்டின் தேசிய வருவாயில் சுமார் 50 சதவீதம் வேளாண்மையிலிருந்தே பெறப்படுகிறது. ஆனுல், அத்துறையிலிருந்து பெறப்படுகின்ற வரிவருவாய் குறைந்த அளவிலேயே உள்ளது. எனவே, பொருளாதார முன்னேற்றத்திற்கான நிதியை அளிப்பதில் வேளாண்மைத்துறை முக்கியப் பங்கேற்கவேண்டும்.

வேளாண்மைத் துறையினர் பெறக்கூடிய அதிக அளவு இலாபத்தின்மீது வளர்வீத வரிகளை அரசு விதிக்கவேண்டும். அரசு செய்கின்ற அதிக முதலீட்டின் காரணமாகவே நிலவுடைமையாளர்கள். உயர்வான வருமானத்தைப் பெறுகின்றனர். சிறிய நிலவுடைமையாளர்கள்மீதும், குத்தகையாளர்கள்மீதும் வரிகள் விதிப்பதை அரசு தவிர்க்க வேண்டும்; நடுத்தரப் பண்ணை

யாளர்கள், பெருநிலக்கிழார்கள், ஆகியோர்மீது வளர்வீத வரிகளை உயர்ந்த அளவில் விதிக்கவேண்டும்.

வேளாண்மைத் துறையின்மீது அதிக வரிவிதிப்பைச் செய்வதன் மூலம் மற்றொரு நன்மையும் பெறப்படுகின்றது. வரிகளைப் பணமாகச் செலுத்தவேண்டியிருப்பதால், வேளாண்மை விளைபொருள்கள் சந்தைக்குக் கொண்டுவரப்பட்டு விற்பனை செய்யப்படுகின்றன. இதனால், 'விற்பனை உபரியின்' (Marketable Surplus) அளவு அதிகரிக்கின்றது. வேளாண்மைப் பொருள்களின் விற்பனை உபரி பெருகும்போது விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவது எளிதாகின்றது. சாதபடியாளர்கள் உணவுப் பொருள்களைத் தாங்களே அதிக அளவிற்கு நுகராமல் வேளாண்மையல்லாத துறைக்கு அளிக்கின்றனர். இவ்வித மாற்றம் பொருளாதார வளர்ச்சியை நிலைப்படுத்துகிறது. அரசு வரியை விளைபொருள்களாகப் பெறலாம்; அல்லது அரசு குறிப்பிட்ட விலையில் உற்பத்திப் பொருள்களைக் கட்டாயக் கொள் முதல் செய்யலாம். கைபிருப்பாக அரசு தானியங்களை வைத் திருப்பதன் மூலம் 'விலைநிலை பெருக்கத்தை' (Price Statilisation) ஏற்படுத்த முடியும். இதனால், ஊக வாணிபம் முதலியவற்றையும் தடுக்க இயலும்.

வளர்ச்சியடைந்துவரும் பொருளாதாரத்தில் வேளாண்மை வரிவிதிப்பு முக்கியமான இரண்டு பணிகளை ஆற்றுகின்றது.

1. பொருளாதாரத்தில் மொத்த சேமிப்பின் அளவை அதிகரிக்கின்றது. விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெறச் சேமிப்பு அவசியமாகத் தேவைப்படுகின்றது. கிராமச் சேமிப்பை ஆக்கத்திற்கு உதவுமாறு பயன்படுத்த வேளாண்மை வரிவிதிப்புத் தேவையாகின்றது.

2. வரிவிதிப்பு விவசாயிகளைத் தங்கள் விளைபொருள்களைச் சந்தைக்குக் கொண்டுசென்று விற்பனைசெய்யத் தூண்டு கின்றது. பொருள்களை விற்பனை செய்து அவர்கள் வேளாண்மை வரிகளைச் செலுத்துகிறார்கள். இதனால் 'விற்பனைக்கான உபரியின் அளவு அதிகரிக்கின்றது.

வேளாண்மைப் பொருள்களின் விற்பனைக்கான உபரி அதிகரிக்கும்போது தொழில் துறையின் உழைப்பாளர்கள் நன்மை யடைகின்றனர். எனவே, பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்கான முக்கிய பணியை விற்பனைக்கான உபரி

ஆற்றுகிறது எனலாம். 'வெவ்வேறு வழிகளிலும் விற்பனை உபரியின் அளவு அதிகரிக்கப்படலாம். உலகின் பல நாடுகளின் பொருளாதார வரலாறு இதை உணர்த்துகின்றது. ஜப்பானில் நில வரியின் மூலமும், சோவியத் ரஷ்யாவில் கட்டாயக் கொள்முதல் மூலமும் அதிக உபரி வேளாண்மைப் பொருள்களின் உற்பத்தியில் பெறப்பட்டது. ரஷ்யாவில் 'கூட்டுப்பண்ணை' (Collective Farm) முறையின் மூலம் வேளாண்மையில் சிறப்பான வளர்ச்சி தோன்றியது. வேளாண்மையல்லாத பிற துறைகளில் பொருள் களின் விலையை உயர்த்தி. வேளாண்மைப் பொருள்களின் விலையைக் கட்டுப்படுத்துவதன் மூலமும் விற்பனை உபரியைப் பெருக்கலாம். இதனால், தொழிற்பொருள்களை வாங்க விவசாயி களுக்கு அதிகச் செலவு பிடிக்கும். வேளாண்மைப் பொருள்களின் விலைகுறைவாக இருக்கும்போது அவர்கள் அதிக அளவில் பொருள்களை விற்பனை செய்வது அவசியமாகின்றது. இம்முறையும் சில நாடுகளில் கைக்கொள்ளப்பட்டது.' [1] இதன் மூலம் தொழில் துறையின் வளர்ச்சியும் சிறப்படைகின்றது. தொழில் முன் னேற்றத் திட்டங்களுக்கு அதிக வேளாண்மைப் பொருள்களின் உபரி உற்பத்தி தேவைப்படுகின்றது.

நிலத்தின்மீதான வரி நீண்டகாலமாகவே இருந்து வருகிறது. நிலத்தின் மதிப்பு, ஓர் ஏக்கரின் ஓராண்டு உற்பத்தி மதிப்பு முதலியவற்றின் அடிப்படையில் நிலவரி விதிக்கப்படுகிறது. தற்காலப் பொருளாதார முன்னேற்றத்திற்கு நிலவரியின் மூலம் கணிசமான நிதி பெறப்படவில்லை. நிலவரியில் உண்மையான சுமை இருக்கவில்லை. இந்தியாவில் நிலவரித் தீர்வையில் மாற்றம் 30 முதல் 40 ஆண்டுகளுக்கொரு முறை செய்யப்படுகின்றது. விலைகளின் அளவிற்கேற்ப நிலவரி நிர்ணயம் செய்யப்படுகிறது. ஆனால், விலைகள் தற்பொழுது பல மடங்கு உயர்ந்துள்ளன. விலையுயர்வோடு ஒப்பிடும்போது நிலவரி அதிக அளவிற்கு உயர்த்தப்படவில்லை. இன்றும் நிலவரிச்சுமை தாழ்ந்த அளவி லேயே உள்ளது. மாநில அரசுகள் நிலவரியை அதிக வீதத்தில் உயர்த்துவதில்லை.

நில வரிவிதிப்பு முறை சிறப்பாகச் செயல்பட வேண்டுமென்றால், அது மூன்றுவித நிபந்தனைகளை நிறைவேற்றுவதாக அமைதல் அவசியமென்று ஜகதீஸ் பகவதி (Jagdish Bhagwati) குறிப்பிடு கின்றார்.

[1] Jagdish Bhagwati, The Economics of Under-developed Countries, 1966, p. 119.

1. வேளாண்மை உற்பத்தியின் பெருக்கத்திற்கு நிலவரி முறை உதவ வேண்டும். உற்பத்திப் பெருக்கத்தால் பொருளாதார வளர்ச்சி ஏற்படும். வளர்ச்சியடைந்த பொருளாதாரத்தில் அதிக வரிவிதிப்பைச் செய்வது எளிதாகும்.

2. நிலவுடைமைகளின் அளவிற்கேற்ப நிலவரி விதிக்கப்படுதல் அவசியமாகும். வரிவிதிப்பு முறையில் சமத்துவநிலை அமைந்திருக்க வேண்டும். வரிவிதிப்பு உற்பத்தியைப் பெருக்குவதற்கான ஊக்கத்தை அளிக்கவேண்டும். முதலீடு செய்யும் ஊக்கமானது வரிவிதிப்பால் பாதிக்கப்படக்கூடாது.

3. நிலவரி விதிப்பு முறையின் நிர்வாகச் செலவு அதிகமாக அமைவதைத் தடுக்கவேண்டும். சிக்கனமான வழிமுறைகளைப் பின்பற்றி வரிவிதிப்பைச் செய்யவேண்டும்.'

எனவே, விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்கு வேளாண்மை வரிவிதிப்பு முறையால் உதவ இயலும். வேளாண்மை உபரியின் அளிப்பை அதிகரிக்க வேளாண்மை வரிவிதிப்பு உதவுகின்றது. இதன் மூலம் பொருளாதார முன்னேற்றத்தை எளிதில் பெறமுடியும். மேயர் குறிப்பிடுவதுபோல, 'வளர்ந்து வரும் நாடுகளில் வேளாண்மைத் துறையின்மீதான வரிவிதிப்பு முறை பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்கான முக்கியக் கருவியாகின்றது. அதன் மூலம் நிலம் சிறப்பாக உற்பத்திக்குப் பயன்படுத்தப்படுகின்றது; நிலவுடைமை முறைகளில் மாற்றங்கள் கொண்டுவரப்படுகின்றன; உற்பத்தியை அதிகரிப்பதற்கான ஊக்கமானது பெருக்கப்படுகின்றது; கிராமச் சமுதாய அமைப்பில் மாற்றங்கள் தோன்றுகின்றன; வேளாண்மை உற்பத்தியில் உபரியின் அளவு கூடுகின்றது; தொழில் துறைக்குத் தேவையான கச்சாப் பொருள்களும் பெறப்படுகின்றன; உற்பத்தியைப் பெருக்குவதற்கான புதிய முதலீடுகள் செய்யப்படுகின்றன; கிராமங்களில் உள்ள உபரி உழைப்பாளர்கள் நகரங்களுக்குக் குடிபெயர்ந்து செல்கின்றார்கள்; நகரப்புறங்களில் வேலைவாய்ப்புகள் பெருகுகின்றன; கிராமப்புறங்களில் அதிக உற்பத்தியைப் பெறுவதற்குத் தடையாக உள்ள 'மறைமுக வேலையின்மை' நீக்கப்படுகின்றது; வேளாண்மையல்லாத பிற துறைகளின் வளர்ச்சிக்கு வேளாண்மை உதவுகின்றது.'[1]

வேளாண்மை வரிகள் வெவ்வேறு வழிகளில் விதிக்கப்படலாம். நிலத்தின் மதிப்பு மீதான 'சொத்துவரி' (Property Tax), ஆண்டு

[1] Meier, Gerald M., Leading Issues in Development Economics, 1964, p. 128.

உற்பத்தியின்மீதான வரி, நில வாரத்தின்மீதானவரி முதலிய பல வகைப்பட்ட வேளாண்மை வரிகள் உள்ளன. வேளாண்மைப் பொருள்களைச் சந்தைப்படுத்தும் நிலையைக் கட்டுப்படுத்தி அரசு பொருள்களின் மீதான வரியை விதிக்கலாம். பொருள்களை அரசே கொள்முதல் செய்யும்போது வரியை அளிக்கத் தேவையில்லை. பொருள்களுக்கான விலையைக் கொடுத்தால் மட்டும் போதுமானது. ஆனால், இவ்வகை வரிமுறையை நிர்வகிப்பது கடினமானதாக இருக்கின்றது. பெரிய தோட்டப் பண்ணைகள் இருக்கின்ற இடங்களில் மட்டுமே இவ் வரி முறையைப் பின்பற்றுவது எளிதாகும். அல்லது ஏற்றுமதிக்காக 'வாணிபப் பயிர்கள்' (Cash-Crops) விவசாயிகளால் உற்பத்தி செய்யப்படும்போது இவ்வரியை விதிக்கலாம். ஏற்றுமதிப் பொருள்களின் மீது ஏற்றமதி வரியும் விதிக்கப்படலாம். ஆனால், இஃது ஏற்றுமதி முன்னேற்றத்தைத் தடைசெய்துவிடும். உற்பத்தியாளர்கள் ஏற்றுமதிக்கான பொருள்களை உற்பத்தி செய்வதற்கான ஊக்கத்தைப் பெற மாட்டார்கள். வளரும் பொருளாதாரங்களில் ஏற்றுமதியின் அளவைக் கூட்டுவது இன்றியமையாதது.

வேளாண்மை உற்பத்திப் பொருள்களின்மீதான வரி, நிலவரி ஆகியவற்றின் நிர்வாகத்தில் பலவித இடர்ப்பாடுகள் இருக்கின்றன. வேளாண்மை வருமான வரி இவ்வித இடர்ப்பாடுகளைக் கொண்டிருக்கவில்லை. இதை நிர்வகிப்பது எளிதானதாகும். இதன் மூலம் சிறு விவசாயிகள் உற்பத்தியைப் பெருக்கவேண்டுமென்ற ஊக்கத்தைப் பெறுவார்கள். சந்தைக்கான உற்பத்தி அவர்களால் செய்யப்படும். குறிப்பிட்ட அளவுவரை வேளாண்மை வருமானத்திற்கு வரிவிதிப்பினின்றும் விலக்களிக்க வேண்டும். இவ்வகை வேளாண்மை வருமானவரி முறை 'யுகாண்டாவில்' (Uganda) சிறப்பாகப் பின்பற்றப்பட்டு வருகின்றது. பண வருமானத்தின் அடிப்படையில் விதிக்கப்படாமல், வரி செலுத்தும் திறனுக்கேற்ப வரியானது இம் முறையில் தீர்மானிக்கப்படுகின்றது. வரிவிதிப்பில் சொத்துகளின் மதிப்பும், விற்பனைக்குக் கொண்டு செல்லப்படாத பொருள்களின் நுகர்வும் கருதப்படுகின்றன. இம் முறையின் மூலம் அரசு அதிக வரிவருவாயைப் பெறலாம். இவ்வரியை நிர்ணயிப்பதும், வசூலிப்பதும் எளிதாகவே அமைகின்றன.

பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்காக ஜப்பானிலும், சீனாவிலும் வேளாண்மை வரிவிதிப்பு முறை பின்பற்றப்பட்டது. 'ஜப்பானில் வேளாண்மை உற்பத்தியைப் பெருக்குவதற்கான பெரிய திட்டம் கைக்கொள்ளப்பட்டது. 1870 முதல் 1880 வரை வேளாண்மை வரிவிதிப்புமூலம் அரசு மொத்த வரிவருவாயில்

65 முதல் 80 சதவீதத்தைப் பெற்றது. வரியானது பணமாகவும் செலுத்தப்படலாம் என்ற நிலை இருந்தது. விவசாயிகள் வரியைச் செலுத்துவதற்காக உற்பத்தியில் 25 முதல் 30சதவீதத்தை இறுக்க வேண்டியிருந்தது.'[1] ஜப்பானில் வேளாண்மை வரிமுறை மிக உயர்ந்த நிலையில் இருந்ததை இஃது உணர்த்துகின்றது. இதன் மூலம் ஜப்பானியர்கள் விரைவான பொருளாதார முன்னேற்றத்தையும் பெற்றார்கள்.

முன்னேற்றமடைந்துவரும் நாடுகளில் அரசியற் காரணங்களால் வேளாண்மை வரிவிதிப்புச் சிறப்பாக அமைவதில்லை. வேளாண்மை வரிவிதிப்பில் உள்ள குறைபாடுகளால் வரி 'ஏய்ப்பு' (Tax Evasion) மிகுதியாயிருக்கின்றது. பெரிய நிலவுடைமையாளர்கள் பலரும் அரசியல் வாதிகளாக இருக்கின்றனர். வளர் வீத வரி முறையை வேளாண்மையில் புகுத்த அவர்கள் அக்கறை கொள்வதில்லை. வளரும் நாடுகளில் வரிதாங்கும் திறனைக்கொண்டவர்களிடமிருந்து வரிகள் வசூலிக்கப்படுவதில்லை. அரசியல் நிர்வாகத்தின் குறைபாடுகளே இதற்குக் காரணமாகும். பெரு நிலக்கிழார்களும் தீவிரமான வேளாண்மை வரிவிதிப்பு முறைக்கு எதிர்ப்புத் தெரிவிக்கின்றனர். இந்தோனேசியா இதற்குச் சரியான சான்றாக அமைந்துள்ளது. அங்குப் பெரிய நிலவுடைமையாளர் களின்மீது வரிகளை விதிப்பதில் பல சிக்கல்கள் உள்ளன. 1939ஆம் ஆண்டில் மொத்த வரி வருவாயில் கிராமப் பகுதி களினின்றும் பெறப்பட்ட வரிகள் 7 சதவீதமாக இருந்தன; 1952ஆம் ஆண்டில் இந்த நிலையானது 1 சதவீதமாகக் குறைந்து விட்டது. எனினும், 1952ஆம் ஆண்டின் தேசிய வருமானத்தில் 81 சதவீதம் வேளாண்மையினின்றும் பெறப்பட்டது குறிப்பிடத் தக்கதாகும். 1939ஆம் ஆண்டிற்கும் 1952ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் நகர்ப்புறங்களைவிடக் கிராமப்புறங்களின் வருமானம் உயர்வான வீதத்தில் அதிகரித்தது. ஆனால், இக் காலத்தில் வேளாண்மைத்துறை அளித்த வரிவீதத்தின் அளவு குறைந்துவிட்டது. இந்தியாவின் அரசியல் அமைப்பு நிர்வாகம் சிறப்பாக இல்லாத நிலையே இதற்குக் காரணமாக இருந்தது.[2] இந்தோனேசியா டச்சுக்காரர்களின் ஆதிக்கத்தில் இருந்தபோது திறமையான நிர்வாக முறை செயல்பட்டது. எனவே, இவ் விதக் குறைபாடுகள் அப்போது இருக்கவில்லை.

'இந்தியாவில் வேளாண்மை வரிவிதிப்பும், பொருளாதார முன்னேற்றமும்' (Agricultural Taxation and Economic Develop-

1 Kindleberger, C. R., Economic Development, p. 157.

2 Ib.d., p 199.

ment in India) என்னும் நூலில் டாக்டர் இ.டி. மாத்யூ (Dr E.T. Mathew), வேளாண்மை வரிவிதிப்புப்பற்றிய பல புள்ளிவிவரங்களைக் கணக்கிட்டுள்ளார். 1958—59-ல் வேளாண்மைத்துறை அதன் நிகர வருமானத்தில் 3.2 சதவீதத்தை வரிகளாகச் செலுத்தியது. இதில் நேர்முக வரிகளும், மறைமுக வரிகளும் அடங்குவனவாகும். அதே ஆண்டில் தொழில்துறை நிகர வருமானத்தில் 7 3 சதவீதத்தை வரிகளாக அளித்தது. வேளாண்மையின்மீதான தலா வரி 16.1 ரூபாயாக இருந்தபோது வேளாண்மையல்லாத துறையின் தலா வரி 98.5 ரூபாயாக இருந்தது.

அக் காலத்திற்குப் பின்னர் வேளாண்மை வரிவிதிப்பில் மேலும் பல குறைபாடுகள் தோன்றலாயின. வேளாண்மைத் துறையில் அதிக வருமானம் பெறுபவர்கள்மீது உயர்ந்த வீதத்தில் வரிகள் விதிக்கப்படவில்லை. குறைந்த வருமானத்தைப் பெறுபவர்களோடு ஒப்பிடும்போது பெரிய நிலவுடைமையாளர்கள் குறைந்த அளவிலேயே வரிவிதிப்பால் பாதிக்கப்பட்டார்கள். 1970—71-ல் வேளாண்மையில் ஈடுபடாத ஒரு குடும்பம் ஆண்டொன்றுக்கு ரூ. 76 500 வருமானம் பெற்றால் அதில் 65 சதவீதத்தை வரிகளாக அளிக்கவேண்டியிருந்தது; அதே வருமானத்தைப் பெற்ற [redacted] வேளாண்மைக் குடும்பம் 5.3 சதவீதத்தை மட்டும் வரிகளாகச் செலுத்தவேண்டியிருந்தது. வரிவிதிப்பால் வேளாண்மைத்துறை குறைந்த அளவே பாதிக்கப்படுகின்ற நிலையை இஃது உணர்த்துகிறது.

நிலவுடைமையாளர்கள் நிலவரியைத்தவிர, பிற வரிகளால் பெரிதும் பாதிக்கப்படுவதில்லை. நிலவரியும் மிகக் குறைந்த அளவிலேயே விதிக்கப்படுகின்றது. நிலப்பரப்பின் அடிப்படையில் 'விகிதாச்சார வரி முறையாக' (Proportional Taxation) இஃது அமைந்துள்ளது. ரூ. 50 000 வருமானம் பெறக்கூடிய பெருநிலக்கிழார்களும் குறைந்த வீதத்திலேயே நிலவரியை அளிக்கின்றார்கள். ஆனால், நகர்ப்புறத்தில் பணியாற்றி ரூ. 10 000 வருமானத்தை அடையக்கூடியவர்கள் வருமான வரியாக ரூ. 88 அளிக்கவேண்டியுள்ளது (1970—71ஆம் ஆண்டு வீதங்களின்படி).

1968—69-ல் 'நிதி அமைச்சகத்தின் வரி விதிப்பு ஆய்வுப்பிரிவு' (The Taxation Research Unit of the Ministry of Finance) மறைமுக வரிகளைப் பற்றிய கணக்கெடுப்பைச் செய்தது. அதன் மூலம் [redacted] மக்கள் தங்களுடைய வருமானத்தில் 16.6 சதவீதத்தை

மறைமுக வரிகளாக அளித்தனர் என்பதையும், கிராம மக்கள் 8 சதவிதத்தை மட்டுமே மறைமுக வரிகளாகத் தந்தனர் என்பதையும் அறியலாம். கிராம மக்கள் நேர்முக வரிகளால் பாதிக்கப்படாதது போலவே மறைமுக வரிகளாலும் அதிக அளவிற்குப் பாதிக்கப்படுவதில்லை.

பெரும்பாலான வளர்ச்சியடைந்துவரும் நாடுகளில் வேளாண் மையல்லாத பிற துறைகளின்மீதே அதிக வரிவிதிப்பின் சுமை ஏறுகின்றது. இந்த நாடுகளில் வேளாண்மை வரிவிதிப்புமுறை பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவும் நிலையைப்பெற்றிருப்ப தில்லை. அதிக வரிவிதிப்பால் வாணிப வளர்ச்சியும் பாதிக்கப்படு கின்றது. தொழில் துறை முன்னேற்றமும் தடைப்படுகின்றது. வேளாண்மையல்லாத துறைகளின்மீதான வரிச்சுமை பொருளா தார முன்னேற்றத்திற்குத் தடையாக உள்ளது. அத்துறைகளில் சேமிப்பின் அளவு குறைவாக உள்ளமைக்கு அதிக வரிவிதிப்பு முக்கியக் காரணமாகிறது.

மேம்பாடடைந்துவரும் நாடுகளில் மக்களில் பெரும்பகுதியினர் குறைந்த வருமானத்தையே பெறுகின்றனர். குறைந்த வருமானத் தைப் பெறுகின்ற அவர்களுக்கு உயர்வான வீதத்தில் வரிகள் விதிக்கப்படுகின்றன. இதனால், அவர்கள் சேமிக்கும் திறனை இழக்கின்றனர்கள். அவர்கள் செய்யக்கூடிய முதலீட்டின் அளவும் இதனால், பாதிக்கப்படுவதால் உற்பத்தியில் சிறப்பான முன்னேற்றம் ஏற்படுவதில்லை. இந்த நாடுகளில் 'வறுமை வட்டத்தை' (Vicious Circle of Poverty) நீக்க முடியாமைக்கான காரணங் களில் இஃதும் ஒன்றாகிறது. உற்பத்தி உபரியைப் பெருக்கத்தக்க வகையில் வேளாண்மை வரிவிதிப்புமுறை இல்லாவிட்டால் விரைவான பொருளாதார முன்னேற்றம் பெறமுடியாத ஒன்றாகி விடும்.

1967ஆம் ஆண்டின் தொடக்கத்திலிருந்து இந்தியாவிலுள்ள பல மாநில அரசுகளும் நிலவரி நீக்கத்தைப்பற்றித் தீவிரமாக ஆராய்ந்து வருகின்றன. நிலவரியில் ஒரு பகுதியையோ அல்லது நிலவரி முழுமையுமோ நீக்க அவை எண்ணிவருகின்றன. பல மாநிலங்களும் வேளாண்மை வரிவிதிப்பு முறையில் அடிப்படை மாற்றங்கள் தேவை என்பதை உணர்ந்துவிட்டன. வேளாண்மைத் துறையின்மீது அதிக வரி விதிப்பதைச் செய்யவேண்டும் என்ற கருத்தைப் பல பொருளாதார நிபுணர்களும் கொண்டிருக்கின்றனர்கள். திட்டக்குழுவும் இக்கருத்தைக் கொண்டதாகவே இருக்கின்றது. நிலவரி முறையை முற்றிலுமாக ஒழித்து அதற்குப் பதிலாகப் புதிய

ஒரு வேளாண்மை வரி முறை தோற்றுவிக்கப்படவேண்டும். இவ்வரிமுறை நிலவரி முறையில் உள்ள குறைபாடுகளைக் களைவதாக இருப்பது அவசியமாகும்.

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் வரையப்பட்டபோது வாணிபப் பயிர்கள் உற்பத்தியாகின்ற நிலங்களின்மீது நிலவரியோடு வளர்வீதத்தில் 'கூடுதல் வரியும்' (Surcharge) விதிக்க வேண்டுமென்று கூறப்பட்டது. தற்பொழுதுள்ள நிலவரி முறைக்குப் பதிலாக வேளாண்மை வருமான வரிமுறை புகுத்தப்படவேண்டுமென்றும் குறிப்பிடப்பட்டது. அரசு பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவக்கூடிய வேளாண்மை வரிவிதிப்பு முறையைப் பின்பற்றவேண்டும்.

## நிலவரி முறைகள்
## (Land Revenue Systems)

### நிலவரி முறைகளின் குறைபாடுகள்

இந்தியாவின் நிலவரி முறைகள் பலநிலைகளிலும் குறைகூறப்படுகின்றன. பொருளாதார நிபுணர்களோடு அரசியல்வாதிகளும் இக் குறைகளைக் குறிப்பிடுகின்றனர். பின்வருவனவற்றை இந்தியாவில் தற்பொழுதுள்ள நிலவரி முறைகளின் குறைபாடுகளாகக் குறிப்பிடலாம்.

1. பெரும்பாலான கிராம மக்களுக்கு நிலவரி பெரிய சுமையாக இருக்கின்றது. இச் சுமையானது எல்லோராலும் ஒரே மாதிரியாக ஏற்கப் படுவதில்லை. கிராமப் பொருளாதாரத்தில் வருமானத்திலும், செல்வப் பங்கீட்டிலும் அதிக ஏற்றத் தாழ்வுகள் இருக்கின்றன. இந்த ஏற்றத்தாழ்வுகளுக்கு ஏற்ப நிலவரி விதிக்கப்படவில்லை. சிறிய நிலவுடைமையாளர்கள்மீதும், பெரிய நிலவுடைமையாளர்கள்மீதும் ஒரே வீதத்திலேயே நிலவரி நிர்ணயிக்கப்பட்டுள்ளது. நிலத்தின் உற்பத்தித் திறனுக்கேற்பவும் அஃது பொருந்தியிருக்கவில்லை. நிலவரியின் அளவு மாநிலங்களுக்கிடையே வேறுபடுகின்றது. மேற்கு வங்காளத்தில் நிலவரியின் அளவு குறைவாக இருக்கும்போது மற்ற மாநிலங்களில் அதிகமாக அமைந்துள்ளது.

இரண்டாவது உலகப்போர் முடிவடைந்த பின்னர், பல பொருள்களின் விலைகள் உயர்வடைந்தன. இதனால், நிலவரியைச் செலுத்துவது சிறு விவசாயிகளுக்குச் சுமையாக மாறியது. பல

மாநிலங்களில் நிலவரியோடு கூடுதல்வரியும் விதிக்கப்படுகின்றது. பொதுவாகக் கூறும்போது, நிலவரி நிலவுடைமையாளர்களுக்குப் பெரிய சுமையாக இருக்கவில்லை. வேளாண்மை இலாபத்திற்கு ஏற்ப நிலவரியின் வீதம் விதிக்கப்படவில்லை.

2. வரிவிதிப்புக் கொள்கைகளின் 'சமத்துவ விதி' நிலவரி முறையில் மீறப்படுகின்றது. சிறிய நிலவுடைமைகளைக் கொண்டு குறைந்த வருமானத்தைப் பெறுபவர்கள்மீதும் நிலவரி விதிக்கப் படுகிறது. பெருநிலக்கிழார்கள் அதிக வருமானத்தைப் பெறுபவர் களாவர். அவர்களுடைய வருமானத்திற்கேற்ப உயர்வான நிலவரி வீதம் இருப்பதில்லை. எனினும், சமீப காலத்தில் சில மாநிலங்கள் வேளாண்மை வருமான வரியை விதித்துள்ளன. இம் மாநிலங்களில் நிலவரி நீக்கப்படாத நிலை குறிப்பிடத்தக்க தாகும். நிலவரி முறையில் சமத்துவ நிலை பொருந்தியிருக்கவில்லை என்பதற்குக் காரணம் அது வளர்வீத வரி முறையாக இல்லா மையேயாகும். மேலும், நிலவுடைமையாளர்களில் எவருக்கும் நிலவரியினின்றும் விலக்களிக்கப்படவில்லை.

3. நிலவரி விதிப்பின் அடிப்படை, குறைபாட்டைக் கொண்டதாக இருக்கிறது. வாரத்தின் அடிப்படையில் நிலவரி நிர்ணயிக்கப்படுகிறது. ஆனால், நிகர இலாபத்தின்மீது வரி விதிப்பதே சிறந்த முறையாகும். சாகுபடியாளர்கள் தங்கள் உழைப்பிற்கேற்ற உற்பத்தியின் பங்கை நிலவரி விதிப்பினால் பெற முடிவதில்லை. எவ்வித உழைப்பையும் தராத பெருநிலக்கிழார்கள் அதிக இலாபத்தைப் பெறுகின்றனர்கள். அதிக இலாபத்தைப் பெறும் அவர்களும், குறைந்த வருமானத்தைப் பெறும் சிறு விவசாயிகளும் ஒரே வீதத்திலேயே நிலவரி செலுத்துகின்றனர்.

4. இந்தியாவின் நிலவரி முறை நெகிழ்ச்சியற்றதாக அமைந் துள்ளது. நிலவரி நீண்ட காலத்தில் 30 முதல் 40 ஆண்டுகளுக்கு ஒரு முறையே மாற்றியமைக்கப்படுகின்றது. இதனால், நிலவரியை நிரந்தரமான அளவைக் கொண்டது என்றும் கருதலாம். இந்தியா விடுதலை பெற்ற பின்னர், வேளாண்மை வளர்ச்சி சிறப்பாக இருந்தது. வேளாண்மை உற்பத்தியும், வருமானமும் அதி கரித்தன. ஆனால், நிலவரி அதிக அளவிற்கு உயர்த்தப்படவில்லை. மிகப் பல ஆண்டுகளாக நிலவரியின் அளவில் மாற்றம் செய்யப்பட வில்லை. இதன் காரணமாக நிலவரி ஒரு பெயரளவு வரியாக மட்டுமே இருக்கின்றது. அதைச் சுமையாகத் தருகின்ற வரி என்று கருத முடியாது.

5. நிலவரி வசூலிப்பில் கடுமையான முறைகள் பின்பற்றப் படுகின்றன. நிலவரியைச் செலுத்தாதவர்களின்மீது அரசால் நடவடிக்கைகள் எடுக்கப்பெறுகின்றன. குறைந்த வருமானத்தைப் பெறுகின்ற சிறிய நிலவுடைமையாளர்கள் இதனால், பாதிக்கப் படுகின்றார்கள்.

6. உண்மையான சாகுபடியாளர்களின்மீது வரி விதிக்கப் படாமையே நிலவரி முறையில் இருக்கக்கூடிய அடிப்படைக் குறைபாடாகும். தலத்திலில்லாத நிலக்கிழார்களின்மீது நிலவரி விதிக்கப்படுகின்றது. நிலவரி முறையில் உள்ள குறைபாட்டிற்கு நிலவுடைமை முறைகளில் உள்ள குறைபாடுகளும் காரண மாகின்றன.

நிலவரி முறையில் உள்ள குறைபாடுகளைச் சுருங்கக் கூறினால், 'அது உண்மையான சுமையின் அளவை உணர்த்தவில்லை; சரியான அளவில் நிர்ணயிக்கப்படுவதில்லை; அதை வசூலிக்கும் முறைகளும் சிறப்பாக அமைந்திருப்பதில்லை. நிலவரிச் சுமை சமமான அளவில் பகிரப்படுவதில்லை; அது நெகிழ்வற்ற தன்மையைக் கொண்டதாகவும் உள்ளது. நிலவரியைச் செலுத்து வதால், சாகுபடியாளர்கள் பெரிய நன்மைகளை அடைவதில்லை. அது மூலதன வளர்ச்சிக்குத் தடையாக இருக்கின்றது. இவற்றின் காரணமாக வேளாண்மை வளர்ச்சியும் தடைப்படுகிறது.'[1]

உற்பத்தி மாற்றங்கள், விலையளவுகள் ஆகியவற்றிற்கேற்ப நிலவரி விதிக்கப்பட்டால் பொருளாதார முன்னேற்றத்தை விரை வாகப் பெறலாம். வரிவிதிப்பில் சமத்துவ நிலையையும் காக்கலாம். சமதர்ம சமுதாயத்தை அமைக்க முயலும் இந்தியாவில் வரி விதிப்பிலும் சமத்துவ நிலை காக்கப்படவேண்டும்.

**நிலவரிச் சீர்திருத்தங்கள்**

தற்பொழுதுள்ள நிலவரி முறையை மாற்றியமைக்க வெவ்வேறு ஆலோசனைகள் கூறப்படுகின்றன. நிலவரி முறையில் சீர்திருத் தங்களைச் செய்யும்போது, அவை முக்கியமான இரண்டு நோக்கங் களைக் கொண்டிருக்கவேண்டும். (1) முதலாவதாக, மிகச் சிறிய நிலவுடைமையாளர்களுக்கு நன்மையளிப்பதாக நிலவரி முறை அமைவது அவசியமாகும்; (2) இரண்டாவதாக, நிலவரியளிப் போர், பிறவகை வரிகளை அளிப்போர் ஆகியோரிடையே வரி விதிப்பின் சுமை சமமாகப் பகிரப்படுதல்வேண்டும்.

[1] Narsimah Iyyangar, Indian Journal of Economics, Vol. VII, p. 147

இவற்றைத் தவிர நிலவரிச் சீர்திருத்தங்களைச் செய்வதற்கான பிற பரிந்துரைகளும் பின்வருமாறு தரப்படுகின்றன.

1. நிரந்தரத் தீர்வை முறையை முடிவுக்குக் கொண்டுவருவது அரசுக்கு அதிக வரி வருவாயைத் தருவதாக இருக்கும். நிலவரி முறையில் இணக்கமான நிலையைத் தோற்றுவிக்கவும் இஃது அவசியமாகிறது. நெகிழ்வுள்ள வரி முறையின்மூலமே அரசு மக்களுக்குப் பல நன்மைகளையும் அளிக்கமுடியும்.

2. சிலருடைய கருத்து நிலவரியை முற்றிலுமாக நீக்கி வேளாண்மை வருமான வரியைப் புகுத்தவேண்டும் என்பதற்குச் சாதகமாக இருக்கின்றது. நிலவரிக்குச் சரியான பதிலியாக இருப்பது வேளாண்மை வருமான வரி என்று அவர்கள் கருதுகின்றனர். சில மாநிலங்களில் நிலவரியோடு, வேளாண்மை வருமான வரியும் விதிக்கப்படுகிறது. ஆனால், அதிக வேளாண்மை வருமானத்தின்மீது மட்டுமேவரி நிர்ணயிக்கப்படுகின்றது.

நிலச் சீர்திருத்தங்களின்மூலம் நிலவுடைமை உரிமைகளுக்கு உச்சவரம்புகள் விதிக்கப்படுகின்றன. இதனால், தனி நிலவுடைமையாளர்கள் அதிக வருமானத்தைப் பெறுவது இயலாது. வேளாண்மை வருமானத்தைச் சரியாகக் கணக்கிடுவதும் கடினமாக இருக்கின்றது. இவற்றின் காரணமாக வேளாண்மை வருமான வரியைப் பின்பற்றுவது இயலாது என்று வேறு சிலர் குறிப்பிடுகின்றனர். ஆயினும், தற்பொழுதுள்ள நிலவரி முறையைவிட வேளாண்மை வருமான வரி விதிப்புச் சிறப்பான முறையாகவே இருக்கும்.

3. வருமான வரி முறையில் பின்பற்றப்படுகின்ற கொள்கைகளை நிலவரி விதிப்பிலும் பின்பற்றலாம். நிலவரி விதிப்பை வளர் வீதத்தில் மாற்றியமைக்கவேண்டும். அதாவது சிறிய நிலவுடைமையாளர்களுக்கு நிலவரியினின்றும் விலக்களித்துப் பெரிய நிலவுடைமையாளர்களின்மீது உயர்ந்த வீதத்தில் நிலவரி விதிக்கப்படவேண்டும். நிலவுடைமைகளின் அளவிற்கேற்ப நிலவரி அமைதல் அவசியமாகும். ஆனால், இம் முறையைப் பின்பற்றுவதன்மூலம் மாநில அரசுகள் அதிக வரி வருவாய் இழப்பை ஏற்கவேண்டிவரும்.

4. ஜமீன்தாரி முறை பெயரளவில் ஒழிக்கப்பட்டுவிட்டாலும், ஜமீன்தாரி முறையின் இயல்புகளைக்கொண்ட நிலவுடைமை இன்னும் திகழ்கின்றன. இந்த நிலையை மாற்றி நிலத்தை உழுபவர்களின்மீது அரசு நேரடியாக நிலவரியை வசூலிக்கவேண்டும்.

நிலவுடைமை முறைகளில் அமைந்திருக்கக்கூடிய இடைநிலையாளர்கள் நீக்கப்படவேண்டும். இந்த நடவடிக்கைகளின்மூலமே நிலவரி முறையில் சீர்திருத்தங்களைச் செய்யமுடியும். கிராமப் பொருளாதாரத்தில் சமத்துவத்தை நிலை நாட்டவும், வேளாண்மையில் சிறப்பான வளர்ச்சியைக் காணவும் இவையாவும் நிறைவேற்றப்படவேண்டும்.

5. நிலவரி விதிப்பில் நிகரச் சொத்துகள் கணக்கில் எடுத்துக் கொள்ளப்படுகின்றன. இந்த நிகரச் சொத்துகளைக் கணக்கிடுவதில் சில குறைபாடுகள் இருக்கின்றன. பஞ்சாப் மாநிலத்தில் இந்த நிலை இருப்பதைச் சிலர் சுட்டிக் காட்டுகின்றனர். நிகர இலாபத்தைக் கணக்கிடும்போது, சாகுபடியாளர்களின் உழைப்பிற்கான ஊதியம், அவர்களுடைய குடும்பத்தினரின் உழைப்பிற்கான ஊதியம், பிற உற்பத்திச் செலவுகள் ஆகியயாவும் மொத்த வருமானத்திலிருந்து கழிக்கப்படவேண்டும். நிலவரி நிர்ணயம் செய்யப்படுவதற்கு முன்னர், இவ்வாறான பல காரணிகளையும் சிறப்பாக ஆராய்வது அவசியமாகின்றது.

### வேளாண்மை வரிவிதிப்பின் தற்போதைய நிலை

விவசாயிகள் நேரடியாகச் செலுத்துகின்ற வரிகளைத் தவிர, மறைமுக வரிகளையும் செலுத்த வேண்டிய நிலையில் இருக்கின்றார்கள். விவசாயிகள் செலுத்துகின்ற நேர்முக வரிகள், மறைமுக வரிகள் ஆகிய இரண்டையுமே வேளாண்மை வரிவிதிப்பு முறையில் அடங்குவனவாகக் கொள்ளவேண்டும். பொருள்களை உற்பத்தி செய்யும் விவசாயிகள் நேரடியாக நிலவரி அல்லது வேளாண்மை வருமான வரியை அளிக்கின்றார்கள். வெவ்வேறு வகைப்பட்ட பொருள்களை நுகரும்போது அவர்கள் மறைமுக வரிகளையும் செலுத்துகின்றார்கள். பல நுகர்பொருள்களின்மீதான 'ஆயத் தீர்வை' (Excise Duty), விற்பனை வரி, இறக்குமதி வரி முதலிய மறைமுக வரிகளையும் அவர்கள் செலுத்தவேண்டிய நிலையில் உள்ளனர்.

இவ் வகைப்பட்ட வரிகளை ஆராய்வதன்மூலம் சரியான வேளாண்மை வரிவிதிப்பு முறையைத் தெரிந்தெடுக்கலாம். சரியான வரிவிதிப்பைச் செய்வதன்மூலமே பொருளாதார முன்னேற்றத்திற்குத் தேவையான மூலதனத்தைப் போதுமான அளவிற்குத் திரட்ட இயலும்.

### நிலவரி

எல்லா வரிகளையும் நிலவரியே மிகப் பழைமையானது. தற்பொழுதும் நிலவரி முக்கியமானதாகவே கருதப்படுகின்றது.

மாநில அரசுகள் நிலவரியை விதித்து வசூலிக்கின்றன. நிலவரியை நிர்ணயிப்பதில் பல காரணிகளும் ஆராயப்படுகின்றன. பல மாநிலங்களும் வெவ்வேறு அடிப்படையில் நிலவரியை நிர்ணயிக்கின்றன. உதாரணமாக நிகரச் சொத்துகள், நிகர உற்பத்தியின் மதிப்பு முதலியவற்றின் அடிப்படையில் நிலவரி தீர்மானிக்கப்படுகிறது. சில மாநிலங்களில் நிலவரியை நிர்ணயிக்கும் பொறுப்பு அரசின் அலுவலர்களிடம் ஒப்படைக்கப்படுகின்றது; அவ்விடங்களில் அரசின் அலுவலர்களே நிலவரியை மதிப்பிடும் அதிகாரத்தைக் கொண்டுள்ளனர். பழைய காலங்களில் குறிப்பிட்ட காலத்திற்கொருமுறை நிலவரி மாற்றியமைக்கப்பட்டது. சமீப காலமாக நிலவரி மாற்றங்களை மாநில அரசுகள் செய்வதில்லை. பல காலமாக நடைமுறையில் இருந்துவரும் நிலவரிமுறை பண்படாத வரி முறையாகவே உள்ளது.

1951—52ஆம் ஆண்டில் நிலவரியின் மூலம் மாநில அரசுகள் ரூ. 52 கோடி வருமானமாகப் பெற்றன. இது 1958—59-ல் ரூ. 96 கோடியாகவும், 1967—68-ல் ரூ. 99,2 கோடியாகவும், 1968—69-ல் ரூ. 108.7 கோடியாகவும் அதிகரித்தது. கணிசமான அளவிற்கு நிலவரி வருவாயில் முன்னேற்றம் ஏற்பட்டமைக்கு அரசு நிலக்கிழார்களிடமிருந்தும், இடைநிலையாளர்களிடமிருந்தும் அதிக பங்கைப் பெற்றமையே காரணமாகும். எனினும், சமீப காலத்தில் நிலவரியின் முக்கியத்துவம் பெரிதும் குறைந்து விட்டது. முக்கியத்துவம் குறைந்தமைக்குப் பணவீக்க நிலையும், பிற வகைப்பட்ட புதிய வரிகள் விதிக்கப்பட்டமையும் காரணமாக அமைகின்றன. பின்வரும் அட்டவணையினால் நிலவரியின் முக்கியத்துவம் குறைந்து வருவதை நன்குணரலாம்.

**மாநில அரசுகளின் வரி வருவாயில் நிலவரியின் பங்கு**

| ஆண்டு | நிலவரி (கோடி ரூபாயில்) | மாநில அரசுகளின் மொத்த வரி வருவாயில் நிலவரியின் சதவீதம் |
|---|---|---|
| 1951—52 | 48 | 12.1 |
| 1960—61 | 97 | 9.6 |
| 1966—67 | 90 | 4.2 |
| 1967—68 | 99 | 4.2 |
| 1968—69 | 109 | 4.2 |

1 Source: Reserve Bank of India Bulletin.

சில மாநிலங்களில் நிலவரி முற்றிலுமாக நீக்கப்பட்டு வருகின்றது. வேறு சிலவற்றில் நிலவரியின் அளவு குறைக்கப்படு கின்றது.

## நிலவரி முறை ஒழிப்பு

1967 ஆம் ஆண்டின் பொதுத் தேர்தலில் நிலவரி நீக்கம் பற்றிய இரு வேறு கருத்துகள் நிலவி வந்தன. சிலர் நிலவரி நீக்கத்திற்குச் சாதகமாகக் கருத்துகளைத் தெரிவித்தபோது, வேறு சிலர் அதற்கு எதிர்ப்புத் தெரிவித்தனர். நிலவரி நீக்கத்தின் முக்கிய நோக்கம் சிறு நிலவுடைமையாளர்களுக்கு நன்மையளிப்பதாக இருக்கின்றது. சிறு நிலவுடைமையாளர்களின் மீதான நிலவரிச் சுமையை நீக்க இது கருதுகின்றது. நிலவரியை நீக்கு வதற்கு முன்னர், பலவித நிலைகளும் நன்கு ஆராயப்படவேண்டும். அவையாவன:

1. பொருளாதார, அரசியல் நோக்கத்தின் அடிப்படையில் நிலவரி நீக்கப்படுவதுண்டு. சிறு நிலவுடைமையாளர்களுக்கு நிலவரியிலிருந்து விலக்களித்தால் மட்டும் போதாது; அவர் களுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கான நடவடிக்கை களையும் அரசு மேற்கொள்ளவேண்டும். சிறு நிலவுடைமையாளர் களின் வசதிகளைப் பெருக்கி, அவர்களையும் பொருளாதார முன்னேற்றத்திற்கான வரிகளை அளிக்குமாறு செய்வது அவசிய மாகின்றது. நிலவரி நீக்கத்தின் மூலமாக அரசுக்கும் சிறுநில வுடைமையாளர்களுக்கும் இடையேயான நேரடித் தொடர்பு பாதிக்கப்படும்.

2. நிலவரி ஒழிப்பைச் செய்தாலும் விவசாயிகள் உற்பத்தியின் உயர்விற்காகப் பாடுபடவேண்டும். உற்பத்தி முறைகளில் முன்னேற்றங்கள் ஏற்படவேண்டும். நிலத்தின் முழுமையான உற்பத்தித் திறனைப் பெறுவதற்கான வழிமுறைகளை விவசாயிகள் பின்பற்றவேண்டும். இவ்வித முன்னேற்றங்கள் ஏற்படும்போது மட்டுமே நிலவரி நீக்கத்தால் விவசாயிகள் நன்மையடைவார்கள்.

3. நிலவரி நீக்கத்தால் அரசுக்கு ஏற்படக்கூடிய வரி வருவாய் இழப்பும் கருதப்படவேண்டும். அரசு நிலவரி நீக்கத்தால் அடைந்த வரிவருவாய் இழப்பைப் பிறவரிகளின் மூலம் ஈடு செய்ய வேண்டியது இன்றியமையாததாகும். இழப்பை ஈடு செய்ய இயலாவிட்டால், சமுதாய நலன் பெரிதும் பாதிக்கப்படும். மக்களுடைய நலனைப் பெருக்க அரசு அதிக செலவுகளைச் செய்ய

வேண்டியுள்ளது. இதன் மூலம் நிலவரி நீக்கத்தால் நன்மை யடைந்த சிறு விவசாயிகளின் நலனும் பாதிக்கப்படும்.

அரசியல் அடிப்படையில் ஆராயும்போது நிலவரியை நீக்க வேண்டுமென்ற அவசிய நிலை இருக்கவில்லை. நிலவரியை நீக்க வேண்டும் என்ற கருத்தைக் கொண்டவர்களாக விவசாயிகள் இருக்கவில்லை. மக்களிடமிருந்து வாக்குகளைப் பெறுவதற்காகவே அரசியல் தலைவர்கள் நிலவரி நீக்கம் செய்யும் உறுதியை அளிக் கின்றனர்கள். ஆட்சியைக் கைப்பற்றவேண்டுமென்ற அரசியல் நோக்கு அதில் பொருந்தியிருக்கின்றது; கிராம மக்களின் உண்மை யான நலத்தில் அக்கறை இருக்கவில்லை. சமுதாய ரீதியில் ஆராயும் போது நிலவரி நீக்கம் எவ்வித நன்மையையும் தராது.

மிகக் குறைந்த வருமானத்தைப் பெறுகின்ற சிறு விவசாயி களின் நலனைக் காக்க நிலவரி நீக்கம் அவசியமாகின்றது. நிலவரியில் சிறு விவசாயிகளையும் கட்டாயமாக வரிசெலுத்தச் செய்யும் நிலை இருக்கின்றது. நிலவரி முறையில் இருக்கும் முக்கியக் குறைபாடு இதுவாகும்.

விவசாயிகளில் பலர் வருமானம் அதிகரிக்கும்போது வீணான செலவுகளைச் செய்கின்றனர்கள். ஆக்கமற்ற பணிகளில் அதிகரித்த வருமானம் செலவிடப்படுகின்றது. பலவகை மதச் சடங்குகளுக்காக அவர்கள் வீணே செலவிடுகின்றனர்கள். கிராம மக்கள் தொகையின் பெருக்க வீதமும் உயர்வாக உள்ளது. அதிகரிக்கின்ற உற்பத்தி பெருகும் மக்கள் தொகையாலும் நுகரப்படுகின்றது. இதனால், விவசாயிகளின் வாழ்க்கைத்தரம் உயர்வடையாத நிலையிலேயே இருக்கின்றது. முன்னேற்றமான சாகுபடி முறைகளையும் அவர்கள் கைக்கொள்ள முடிவதில்லை.

கிராம மக்கள் தொகையின் பெரும்பகுதியினர் வறியவர்களாக உள்ளனர். அதனால் அவர்களுக்கு வரிச் சலுகைகள் அளிக்கப் படுகின்றன. நகர மக்களில் பலரும் குறைந்த வருமானத்தைப் பெறுபவர்களாக இருக்கின்றனர். நகர மக்கள் அளிக்கக்கூடிய மறைமுக வரிகள் எண்ணற்றனவாக இருக்கின்றன, நகர மக்களின் நலனைக் காப்பதற்கான வரிமுறைகளை அரசு பின்பற்று வதில்லை. ஒரே அளவில் வருமானத்தைப் பெறும் கிராம மக்களும், நகர மக்களும் அரசின் வரிவிதிப்புக் கொள்கையால் ஒரே வீதத்தில் பாதிக்கப்படவேண்டும். வருமானத்தின் அடிப்படையில் வரி விதிப்பின் சுமை அமைவது அவசியமாகின்றது.

நிலவரியை நீக்கிவிட்டால் விவசாயிகள் தங்கள் வீணான செலவுகளைக் குறைத்துக்கொள்வார்கள் என்று கூறவியலாது. கடன் பெற்று மதச் சடங்குகளை நிறைவேற்றுபவரே கிராம மக்கள் தொகையில் பெரும் பகுதியினராக இருக்கின்றனர். மத நம்பிக்கைகளை ஒழிப்பதன்மூலமே கிராம மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த முடியும்.

நிலவரியின் அளவு மிகவும் குறைவாகவே உள்ளது. அதை நீக்குவதன்மூலம் விவசாயிகளின் வாழ்க்கை நலன் காக்கப்படும் என்று கருத முடியாது. நிலவரி நீக்கத்தால் விவசாயிகள் முன்னேற்றமான சாகுபடி முறைகளை மேற்கொள்வதற்கான வசதியைப் பெறுவார்கள் என்றும் கூறவியலாது.

நிலவரியை நீக்கி வேளாண்மை வருமான வரிமுறையைப் பின்பற்றினால், மாநில அரசுகளின் வரிவருவாய் பெரிதும் பாதிக்கப்படும். ஏனெனில், வேளாண்மை வருமான வரியைக் குறுப்பிட்ட உயர்ந்த வருமானத்தின்மீது மட்டும்தான் விதிக்க முடியும். வரி ஏய்ப்புகளுக்கான வாய்ப்புகளும் அதில் இருக்கின்றன. பெரிய நிலவுடைமையாளர்களிடமிருந்தும் குறைந்த வரியை மட்டுமே வேளாண்மை வருமான வரிமுறையால் பெற இயலும். நிலவரியின்மூலம் அவர்கள் செலுத்திவரும் தொகையைவிட, வேளாண்மை வருமான வரியின்மூலம் செலுத்துகின்ற தொகை குறைவாக இருக்கும். தற்பொழுது பெருநிலக்கிழார்கள் தங்கள் நிகர வருவாயில் சுமார் 25 சதவீதத்தை நிலவரியாகச் செலுத்துகின்றனர். வேளாண்மை வருமான வரிமுறையில் அவர்கள் இதைக் காட்டிலும் குறைந்த அளவிற்கே வரியைச் செலுத்துவார்கள்.

சிறிய நிலவுடைமையாளர்களுக்கு நிலவரியினின்றும் விலக்களிப்பதற்கு முன்னர், பெரிய நிலவுடைமையாளர்களின் மீதான நிலவரிவீதம் உயர்த்தப்படவேண்டும். மாநில அரசுகளின் வரி வருவாய் குறையாமல் இருப்பதற்கு இதுவே சிறந்த வழியாகும்.

1967ஆம் ஆண்டில் பல அரசியல் கட்சிகளும் தேர்தலில் வெற்றிபெறுவதற்காகப் பல வாக்குறுதிகளைத் தந்தன. அவை 'பூலோக சொர்க்கத்தையே' நிறுவப்போவதாகக் குறிப்பிட்டன. அவை அளித்த பல முக்கிய வாக்குறுதிகளில் நிலவரி நீக்கம் செய்வதும் ஒன்றாக இருந்தது. காங்கிரஸ் கட்சியும் இவ்வாக்குறுதிகளை அளித்த கட்சிகளில் ஒன்றாகும். இந்திய மக்கள் தொகையில்

பெரும் பகுதியினர் விவசாயிகளாக இருக்கின்றனர். நிலவரி நீக்கம் செய்வதன்மூலம் அவர்களுடைய ஆதரவைப் பெறலாம் என்பது பல அரசியல் கட்சிகளின் நோக்கமாக அமைந்திருந்தது.

1967ஆம் ஆண்டு முதல் செப்டம்பர் 1970ஆம் ஆண்டுவரை ஏழு மாநிலங்களில் சிறிய நிலவுடைமைகளின் மீதான நிலவரி நீக்கப் பட்டது. பொருளாதார ரீதியில் நிலவுடைமைகளின் அளவுகள் தீர்மானிக்கப்பட்டன. இந்த நிலவரி நீக்கத்தால், மாநில அரசுகள் ஆண்டொன்றிற்கு ரூ. 25 கோடி என்ற அளவிற்கு இழப்பை ஏற்கின்றன. ஆனால், இச்சிறிய நிலவுடைமையாளர்களால் அரசுக்கு எவ்வித நன்மையும் கிடைக்கப்பெறவில்லை. பிற வரி முறைகளின் மூலமும் இவ்விழப்பானது ஈடுசெய்யப்படவுமில்லை.

தமிழ்நாட்டில் புன்செய் நிலங்களின்மீதான வரி நீக்கப்பட்டு விட்டது; ஆந்திரப் பிரதேசத்தில் 10 ரூபாய்க்குக் குறைவான நிலவரிகள் நீக்கப்பட்டுவிட்டன. மேற்கு வங்காளத்தில் மூன்று ஏக்கருக்குக் குறைவான நிலவுடைமைகளின் மீதான வரி நீக்கப் பட்டுள்ளது; 10 ஏக்கருக்குக் குறைவான நிலங்களின்மீது மத்தியப் பிரதேசத்தில் வரி விதிக்கப்படவில்லை. பஞ்சாபில் 5 மதிப்பளவு ஏக்கருக்குக் (Standard Acre) குறைவான நிலவுடைமைகள்மீது நிலவரி விதிக்கப்படுவதில்லை; 1970ஆம் ஆண்டுப் பிறப்பிலிருந்து உத்தரப்பிரதேச அரசு 6.25 ஏக்கருக்குக் குறைவான நிலங்களின் மீதான வரியை நீக்கிவிட்டது; பொருளாதார ரீதியில் நன்மையளிக் காத, குறைந்த உற்பத்தியைத் தருகின்ற நிலவுடைமைகளின் மீதான வரியை மைசூர் மாநில அரசு நீக்கியுள்ளது. இந்த நடவடிக்கைகளால் 1962—63-ல் ரூ. 126 கோடியாக இருந்த மாநில அரசுகளின் நிலவரி வருவாய் 1668—69-ல் ரூ. 84 கோடியாகக் குறைந்து விட்டது.

**நிலவரி நீக்கத்திற்குச் சாதகமான வாதங்கள்**

மாநில அரசுகள் நிலவரி நீக்கத்தைச் செய்வதற்குச் சாதகமான வாதங்கள் பின்வருமாறு தரப்படுகின்றன.

1. மொத்த வரிவருவாயில் நிலவரியின்மூலம் மாநில அரசுகள் குறைவான வருமானத்தை மட்டுமே பெறுகின்றன. குறைவான அளவில் அமைந்திருப்பதால், நிலவரியை நீக்குவது மாநில அரசு வருமானத்தைப் பெருமளவு பாதிக்காது. பிற வரிகளை விதித்து மாநில அரசுகள் இவ் விழப்பை ஈடு செய்யமுடியும்.

2. நிலவரியை வசூலிப்பதற்கான செலவு மிகவும் அதிகமாக இருக்கின்றது. சில மாநிலங்களில் நிலவரி வருவாயில் 50 சதவீதம் நிலவரி வசூலிப்பதற்காகச் செலவிடப்படுகின்றது. நிலவரியில் வரிவிதிப்புக் கொள்கையின் 'சிக்கன விதி' (Canon of Economy) பின்பற்றப்படவில்லை. நிலவரியால் சிறிய விவசாயிகளின் நலன் பாதிக்கப்படுகிறது. ஏனினும் அவர்கள் செலுத்துகின்ற வரிப் பணத்தில் பாதி வரிவசூலிப்பிற்காகவே செலவிடப்படுகின்றது.

3. நிலவரியின் பெரும்பகுதி குறைந்த வருமானத்தைப் பெறுகின்ற சிறிய நிலவுடைமையாளர்களிடம் இருந்தே வசூல் செய்யப்படுகிறது. சிறு விவசாயிகள் பொருளாதார ரீதியில் அதிக இலாபத்தைப் பெற முடியாத சிறிய நிலவுடைமைகளையே கொண்டுள்ளனர். அவர்களின்மீது விதிக்கப்படுகின்ற நிலவரி நியாயமற்றதாக இருக்கின்றது. வரிவிதிப்புக் கொள்கையின் 'சமத்துவ விதி' (Canon of Equity) நிலவரி முறையில் மீறப்படுகின்றது. இதைத் தவிர்க்க சிறிய நிலவுடைமையாளர்களின் மீதான நிலவரி நீக்கப்படவேண்டும்.

4. நிலவரி முறையை நீக்குவது எளிதானதே. மாநில அரசுகளின் நிதி நிலையில் அதிகப் பாதிப்பை ஏற்படுத்தாமலேயே நிலவரியை நீக்க முடியும். புதிய வேளாண்மை வரிகள் சிலவற்றை விதிப்பதன் மூலம் நிலவரி நீக்கத்தால் ஏற்படக்கூடிய இழப்பை ஈடுசெய்யலாம்.

**மதிப்பீடு**

மேற்குறிப்பிடப்பட்ட வாதங்களைத் தெளிவாக ஆராயும்போது, அவற்றில் தவறுகள் ஏற்பட்டுள்ளன என்பதை அறியலாம். நிலவரி வசூலிப்பிற்கான செலவு அதிகமாக இருக்கின்றது என்பதற்காக நிலவரி முறையை ஒழிக்க வேண்டியதில்லை. மாநில அரசுகள் வரி வசூலிப்புச் செலவைக் குறைப்பதற்கான வழிமுறைகளைப் பின்பற்றவேண்டும். சிக்கனமான நிர்வாக முறையைப் பின்பற்றுவதன்மூலம் இக் குறைபாட்டைத் தவிர்க்க முடியும்.

நிலவரி நீண்டகாலமாகவே வசூலிக்கப்பட்டு வருகின்ற வரியாகும். மிகப்பழைய வரியை வரியென்றே கொள்ளவேண்டிய அவசியமில்லை. ஏனெனில், நிலவரியின் [redacted] மிகவும் குறைவானதாகவே இருக்கிறது. வேளாண்மை விளைபொருள்களின் விலையுயர்வால் இச் சுமை மேலும் குறைந்து வருகிறது. சமீப

காலமாக விவசாயிகள் அதிக வருமானத்தைப் பெறுபவர்களாகவும் இருக்கின்றனர்; அவ் வருமானத்தில் அவர்கள் அளிக்கின்ற நிலவரியின் அளவு மிக்க குறைவானதேயாகும். நிலவரி நீக்கத்தால் மாநில அரசுகள் வரிவருவாயில் பேரிழைப்பை ஏற்க வேண்டிவரும். ஆனால் நிலவரி, நீக்கம் விவசாயிகளுக்கு அதிக நன்மையைத் தந்துவிடாது.

1953—54ஆம் ஆண்டின் 'வரிவிதிப்பு விசாரணைக் குழு மாநில அரசுகள் முன்னேற்றத்திட்டங்களை நிறைவேற்ற அதிக நிதி தேவையைக்கொண்டுள்ளன என்று குறிப்பிட்டது. அதிக வரிவருவாயை மாநில அரசுகளுக்குத் தருவதில் நிலவரிக்குப் பதிலாக (Substitute) எந்தவரியும் இருக்க முடியாது என்றும் அக் குழு கருதியது. முதல் திட்டக் காலத்தில் நிலவரியின் மூலம் ரூ. 327 கோடி பெறப்பட்டது; மூன்றாவது திட்டக் காலத்தில் இதன் அளவு ரூ. 563 கோடியாக உயர்ந்துவிட்டது. மாநில அரசுகள் நிதிப்பற்றுக்குறையால் இந்திய ரிசர்வ் வங்கியிடமிருந்து 'அதிகப்பற்றைப்' (Over draft) பெறுகின்றன. புதிய வரிகளை விதித்தும் தங்களுடைய வரி வருவாயை உயர்த்திக் கொள்ள அவை முயலுகின்றன. இவ்வாறு நிதிப்பற்றுக்குறை நிலை அமைந்துள்ளபோது, கணிசமான வரி வருவாயைத் தரக் கூடிய நிலவரியை நீக்குவது கூடாது.

கேரள அரசின் மொத்த வருவாயில் நிலவரியின் பங்கு [illegible] சதவீதமாக உள்ளது. இஃது அஸ்ஸாம், ஆந்திரப்பிரதேசம், ஜம்மு-காஷ்மீர் ஆகிய மாநிலங்களில் 20 சதவீதமாகவும், மத்தியப் பிரதேசத்தில் 26 சதவீதமாகவும், பீஹாரில் 27 சதவீதமாகவும், உத்தரப்பிரதேசத்தில் 30 சதவீதமாகவும், ராஜஸ்தானில் 31 சதவீதமாகவும் இருக்கின்றது. எனவே, வாக்காளர்களுக்குத் தேர்தலின்போது உறுதியளித்தமைக்காக நிலவரியை நீக்க வேண்டுமென்பது அவசியமில்லை. நிலவரியை நீக்குவதற்கு முன்னர்ப் [illegible] பொருளாதாரக் காரணிகள் ஆராயப்படவேண்டும். சில அரசியற் காரணங்களுக்காக நிலவரியை நீக்குவது தவறானதாகும். பொருளாதாரச் சிக்கல்களுக்குத் தீர்வு காணும் போது அரசியல் நோக்கு பொருந்தியிருக்கக்கூடாது. அரசியல் அமைப்பின் நிலையான தன்மைக்கு விரைவான பொருளாதார முன்னேற்றம் தேவைப்படுகின்றது. பல வளரும் நாடுகளில் அரசியல் குறைபாடுகளால் பொருளாதார முன்னேற்றம் தடைப் படுகிறது. அரசியல் குறைபாடுகளுக்கு அரசியல்வாதிகளே காரணமாகின்றனர்.

மாநில அரசுகள் மத்திய அரசைச் சார்ந்துள்ள நிலை தீவிர மடைந்து வருகின்றது. மார்ச் 31,1951 வரை மத்திய அரசு மாநில அரசுகளுக்கு அளித்திருந்த உதவி ரூ. 191 கோடி என்ற அளவிற்கு இருந்தது; தற்பொழுது இது ரூ. 3,100 கோடியாக உயர்ந்துள்ளது.

நிலவரியை நீக்குவதற்குப்பதில் உயர்த்துவதே சரியானது என்பதற்கான காரணங்கள் பலவும் குறிப்பிடப்படுகின்றன.

1. வேளாண்மைத் துறையில் நிலவரியின் சுமை மிகவும் குறைவானதாகவே இருக்கிறது. வேளாண்மை உற்பத்திப் பொருள்களின் விலைகள் பல மடங்கு உயர்வடைந்துள்ளன. அவ் விலையுயர்வுகளுக்கேற்ப நிலவரியின் உயர்வு வீதம் அதிகரிக்க வில்லை. டாக்டர் லக்டாவாலா (Dr. Lakdawala), 'நிலவரியை நீக்குவது விவசாயிகளுக்கு நன்மையைத் தந்தாலும், பிறரின்மீது தேவையில்லாத சுமையைத் தோற்றுவித்துவிடும்,' என்று குறிப்பிடு கின்றார். நிலவரி ஒழிப்பு விவசாயிகளுக்கு வெகுமதியைப் போன்று அமைந்தாலும், பிறரின்மீது அது சுமையை ஏற்படுத்திவிடு கின்றது.

2. மொத்த உற்பத்தியில் நிலவரியின் பங்கு குறைந்துள்ள மைக்கு ஓர் ஏக்கருக்கான உற்பத்தி அதிகரித்திருக்கின்ற நிலையும் காரணமாகின்றது. பலவித வேளாண்மை வளர்ச்சிப் பணிகளை அரசு நிறைவேற்றியதன் காரணமாக நிலத்தின் உற்பத்தித்திறன் கூடியுள்ளது. 'பசுமைப் புரட்சி' என்று சொல்லத்தக்க அளவிற்கு வேளாண்மை உற்பத்தி உயர்வடைந்துள்ளது. திட்டங்கள் பல வற்றால் நன்மையடைந்த வேளாண்மைத் துறையின்மீது அதிக வரிகளை விதிக்கவேண்டும்.

3. பணவீக்க நிலையின் காரணமாகப் பெரிய விவசாயிகள் அதிக வருமானத்தைப் பெறுகின்றார்கள். எனவே, அவர்களுடைய நிலவுடைமைகளின்மீது அதிக நிலவரியை விதிக்கலாம். பெரிய நிலவுடைமையாளர்கள் வரி செலுத்தும் திறனைக் கொண்டவர் களாகவே இருக்கின்றனர். வருமானத்தின் அளவிற்கேற்ப வரி விதிப்பு அமைந்திருத்தல் சமதர்மத்தைப் பின்பற்றும் ஒரு நாட்டில் இன்றியமையாதது.

4. பெருகி வருகின்ற வாணிப நிலையும் வேளாண்மைத் துறையினருக்கே சாதகமாக உள்ளது. வாணிபத்தின்மூலம் வேளாண்மையல்லாத பிற துறைகளைச் சேர்ந்தவர்கள் அதிக

இலாபத்தை அடைவதில்லை. இதனால் வேளாண்மைத் துறையின் 'வரி தாங்கும் திறன்' வேளாண்மை யல்லாத பிற துறைகளின் வரி தாங்கும் திறனைவிட உயர்வாக அமைகின்றது. ஆகவே, நில வரியை உயர்த்தி மாநில அரசுகள் வரிவருவாயை அதிகரித்துக் கொள்கின்ற நிலையைத் தவறாகக் கருதமுடியாது.

5. தற்பொழுது மாநில, மத்திய அரசுகளின் வரிவிதிப்பு முறைகள் நகர மக்களையே பெரிதும் பாதிக்கின்றன. கிராம மக்கள் வரி விதிப்புகளால் அதிக அளவிற்குப் பாதிக்கப்படுவதில்லை. 1952—53 ஆம் ஆண்டிற்கும் 1958—59ஆம் ஆண்டிற்கும் இடைப் பட்ட காலத்தில் நகரத் துறையின் அதிகரித்த வருமானத்தில் 40 சதவீதம் வரிவிதிப்புகளால் பெறப்பட்டது; இதே காலத்தில் கிராமத் துறையின் அதிகரித்த வருமானத்தில் 14 முதல் 15 சதவீதம்வரை மட்டுமே வரி விதிப்புகளால் அடையப் பட்டது. இதன் காரணமாக வேளாண்மைத் துறையின்மீது அதிக வரிகளை விதிப்பது அவசியமாகின்றது.

6. கிராமப் பொருளாதாரம் அளிக்கக்கூடிய நேர்முக வரி களும், மறைமுக வரிகளும் குறைந்த எண்ணிக்கையிலேயே உள்ளன. உதாரணமாக, ஆண்டொன்றுக்கு ரூ. 3,600 செலவு செய்யும் ஒரு கிராமக் குடும்பம் அதே அளவு செலவைச் செய் கின்ற ஒரு நகரக் குடுமபத்தைக் காட்டிலும் குறைந்த வரிகளையே அளிக்கின்றது. ஆண்டொன்றுக்கு ரூ. 5,542 வருமானம் பெறும் வேளாண்மையல்லாத பிற துறையைச் சார்ந்த ஒரு குடும்பம் அதே வருமானத்தைப் பெறுகின்ற வேளாண்மைக் குடும்பத்தை விட, 74 சதவீதம் அதிக வரிகளைச் செலுத்த வேண்டியுள்ளது. வேளாண்மையல்லாத துறையின் ஒரு குடும்பம் ஆண்டொன்றுக்கு ரூ 76,500 வருமானம் பெறுகின்றபோது 51.5 சதவீத வருமானத்தை வரிகளாக அளிக்க வேண்டியுள்ளது; அதே வருமானத்தைப் பெறுகின்ற வேளாண்மைக் குடும்பம் வருமானத்தில் 5.3 சதவீதத்தை மட்டுமே வரிகளாகத் தருகின்றது.[1] கிராமப்புறங்களில் ரூ. 4,000 முதல் ரூ 5,000 வரை வருமானத்தைப் பெறுபவர்கள் மிகக் குறைந்த வரிகளையே செலுத்துகின்றனர். வரி விதிப்பில் கிராம மக்களுக்கும் நகர மக்களுக்கும் இடையே வேறுபாடுகள் பொருந்தியிருக்கக்கூடாது.

7. மொத்த வேளாண்மை வருமானத்தில் 6 முதல் 7 சதவீதத் திற்கு மேல் வரிவிதிப்புச் செய்யப்படுவதில்லை. நகர்ப்புறங்களில் ஊதியத்திற்குப் பணியாற்றுபவர்களின் வருமானத்தில் பெரும்பகுதி

1 Justice in Taxation in India, p. 134.

வரிகளாக அளிக்கப்படுகின்றது. தொழில் துறையின் மீதான வரிவிதிப்பும் மிக உயர்ந்த அளவிலேயே உள்ளது. வரி விதிப்பு முறையில் உள்ள குறைபாடுகளே இவற்றிற்குக் காரணமாகின்றன.

8. அதிக வருமானத்தைப் பெறுகின்ற விவசாயிகளின்மீது தீவிர வரிவிதிப்பைச் செய்தால் ஐந்தாண்டுகளில் சுமார் 900 கோடி ரூபாயைப் பெறமுடியும்.

நிலவரியை முற்றிலுமாக நீக்குவதைவிட, நிலவரி முறையில் சீர்திருத்தங்களைச் செய்வது நல்லது. முன்னனைவிடத் தற்போது வேளாண்மைத் துறை சிறப்பாக வளர்ச்சியடைந்துள்ளது. கிராம மக்களுக்கும், நகர மக்களுக்கும் இடையே வரிவிதிப்பில் சமத்துவம் நிலவுமாறு அரசு பார்த்துக்கொள்ளவேண்டும். இதன் மூலமே மக்கள் எல்லாருடைய நலத்தையும் காக்கமுடியும்.

பஞ்சங்கள் தோன்றுகின்ற காலங்களில் நிலவரியைக் குறைக்கலாம்; அல்லது முற்றிலுமாக நீக்கலாம். பாதகத் தட்பவெப்ப நிலைகளால் வேளாண்மை உற்பத்தி குறைவடைகின்ற சமயங்களிலும் நிலவரி தள்ளுபடி செய்யப்படலாம். நிரந்தரமாக நிலவரி முறையை ஒழிப்பது நன்மை தராது. ஆனால், நிலவரிக்குப் பதிலாக வேளாண்மை வருமான வரி முதலியவற்றை விதிக்கலாம். தண்ணீர்த் தீர்வையின் அளவை உயர்த்தலாம். இவற்றைத் தவிர புதிய சில வரிகளையும் வேளாண்மைத் துறையின்மீது விதிக்கலாம். நிலவரி முறையை மாற்றி யமைப்பதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்வது நன்மை பயக்கும்.

வேளாண்மைப் பொருள்களின் விலைகள் உயர்வடைந்துள்ளமையாலும், வேளாண்மை வருமானங்கள் அதிகரித்துள்ளமையாலும் வேளாண்மைத் துறையின்மீது அரசை அதிக வரிகளை விதிக்கத் தூண்டுகின்றன. வேளாண்மைமீதான வரிகளைக் குறைக்க வேண்டும் என்று சொல்பவர் ஒரு சிலரேயாவர். வேளாண்மைத் துறையின்மீது வரிவிதிப்பைத் தீவிரப்படுத்த வேண்டும் என்ற கூற்றே நியாயமானதாக இருக்கின்றது. வேளாண்மையல்லாத பிற துறைகளின்மீது அரசு வரிகளை மேலும் மேலும் உயர்த்திக்கொண்டே செல்லமுடியாது. அவ்வாறு செய்தால் அத் துறைகளின் சேமிப்பு, முதலீடு ஆகியன பெரிதும் பாதிக்கப்படும். அதிக வரிவிதிப்பால் பொருள்களின் விலை உயர்வடையும். விலையுயர்வால் நுகர்வு கட்டுப்படுத்தப்படும். தேவைக் குறைவினால் உற்பத்தியின் அளவும் குறைக்கப்படும். வேளாண்மையல்லாத பிற துறைகளின்மீது அதிக வரிவிதிப்பைச் செய்யும்போது இவ்வித இடர்ப்பாடுகள் தோன்றுகின்றன.

தொழில் துறையை எடுத்து ஆராய்ந்தால், அதிக வரிகள் அத்துறையில் விதிக்கப்படுவதை நன்குணரலாம். தொழில் துறையில் உற்பத்தியின் வெவ்வேறு நிலைகளிலும் வரிகள் விதிக்கப்படுகின்றன. தொழிற் பொருள்களின் உற்பத்தி நிலைகளிலும், நுகர்வு நிலைகளிலும் எண்ணற்ற வரிகள் அமைந்துள்ளன. வளர்வீத வரி முறையாக நிலவரி முறையின் அமைப்பை மாற்றியமைத்தல் இன்றியமையாதது. சிறு நிலவுடைமைகளின் மீதான வரியானது நீக்கப்படலாம். சான்றாகச் சுமார் ஐந்து ஏக்கருக்குக் குறைவாக உள்ள நிலவுடைமைகளின் மீதான நிலவரி நீக்கப்படவேண்டும். பெரிய நிலவுடைமைகளின்மீது அதிக வீதத்தில் வரி விதிக்கப்படவேண்டும்.

தற்பொழுதுள்ள நிலவரி முறையில் வரி வசூலிப்பதற்காக அதிகச் செலவு செய்யப்படுகின்றது. நிலவரியின் சுமை மிகக் குறைந்த அளவிலேயே அமைந்துள்ளது. நிலவரி பெயரளவிலேயே வரியாக உள்ளது. நிலவரியை உயர்த்துவதற்கான வாய்ப்புகள் ஏராளமாக உள்ளன. புதிய வரிகளை விதிப்பதற்கான சமூகச் சூழ்நிலைகளும் பொருந்தியிருக்கின்றன. நிலவளம், நில அளவு, உற்பத்திப் பயிர்கள் ஆகியவற்றிற்கு ஏற்ப நிலவரி விதிக்கப்படவேண்டும். நன்செய் நிலங்களின் வரி, புன்செய் நிலங்களின் வரியைவிட அதிக வீதத்தில் இருக்கவேண்டும். நிலவுடைமையாளர்களின் வருமானத்திற்கேற்ப நிலவரியின் அளவும் இருப்பது அவசியமானதாகும்.

### வேளாண்மை வருமான வரி

வேளாண்மை வருமான வரி மாநில அரசுகளால் விதிக்கப்பட்டு வசூலிக்கப்படுகின்றன. முதன் முதலாக 1638ஆம் ஆண்டில் இவ்வரி பீஹாரில் விதிக்கப்பட்டது. தற்பொழுது வேளாண்மை வருமான வரி அஸ்ஸாம், மேற்கு வங்காளம், பீஹார், உத்தரப் பிரதேசம், ராஜஸ்தான், மத்தியப்பிரதேசம், ஒரிஸ்ஸா, கேரளா, மைசூர், தமிழ்நாடு ஆகிய மாநிலங்களில் விதிக்கப்படுகிறது. நகர்ப்புறங்களின் வருமான வரி வீதத்தினின்றும் வேளாண்மை வருமான வரி வீதம் வேறுபட்டுள்ளது. பொதுவாக வேளாண்மை வருமான வரி வீதம் குறைவாகவே இருக்கின்றது. இந்தியாவில் மாநில அரசுகள் வேளாண்மை வருமான வரியின்மூலம் குறைந்த வரி வருவாயை மட்டுமே பெறுகின்றன. இது குறைந்த அளவில் உள்ளமைக்கு வரி ஏய்ப்பும் ஒரு காரணமாகின்றது. வேளாண்மை வருமானத்தைச் சரியாகக் கணக்கிடுவது கடினமாக இருக்கிறது. வேளாண்மை வருமான வரி வீதங்களை உயர்த்துவதன்மூலமே

மாநில அரசுகள் தங்கள் வருமானத்தைப் பெருக்கிக் கொள்ள இயலும்.

வேளாண்மை வருமான வரி [1]

| ஆண்டு | தொகை (கோடி ரூபாயில்) | மாநில வரி வருவாயில் வேளாண்மை வருமான வரியின் சதவீதம் |
|---|---|---|
| 1951—52 | 4.3 | 1.1 |
| 1960—61 | 9.5 | 1.5 |
| 1966—67 | 11.0 | 0.5 |
| 1967—68 | 10.6 | 0.4 |
| 1968—69 | 11.3 | 0.4 |

பெரும்பாலான மாநிலங்களில் வேளாண்மை வருமான வரி விதிக்கப்பட்டாலும், மூன்று மாநிலங்களில் மட்டுமே இதன் மூலம் அதிக வருமானம் பெறப்படுகின்றது.

நிலவரி, வேளாண்மை வருமான வரி ஆகியவற்றைத் தவிர செலவு வரி (Expenditure Tax), அன்பளிப்பு வரி (Gift Tax), பண்ணை வரி (Estate Duty), சொத்து வரி (Wealth Tax) முதலியனவும் வேளாண்மைத் துறையினரால் செலுத்தப்படுகின்றன. இந்தியாவில் இவ் வரிகள் அதிக முக்கியத்துவம் கொண்டனவாக இருக்கவில்லை. முன்னேற்றமடைந்த பொருளாதாரத்தைப் பெற்ற பின்னர், இவ் வரிகள் முக்கியத்துவத்தைப் பெறும். மேலும், இவ் வரிகள் மிக உயர்ந்த வருமானத்தைப் பெறுபவர்கள்மீதே விதிக்கப்படுகின்றன. குறைந்த வருமானத்தையும், செல்வத்தையும் கொண்டவர்கள் இவ் வரிகளினின்றும் விலக்களிக்கப்படுகின்றார்கள். இவற்றின் காரணமாக வேளாண்மைத்துறை வரிகளின் மூலம் பொருளாதார முன்னேற்றத்திற்கு அளிக்கின்ற மூலதனத்தின் அளவு குறைவாகவே இருக்கின்றது.

சில மாநிலங்களில் வேளாண்மை வருமான வரி விதிக்கப்படவில்லை; பல மாநிலங்களில் இவ் வரிமுறை சிறப்பாகச் செயல்படுத்தப்படவில்லை. நல்லதொரு வரியாக இருந்தாலும், பல மாநிலங்கள் இவ் வரியின் நன்மைகளைப் பெறுவதில்லை. சமீப காலமாக இவ் வரி முறையைத் தீவிரமாகவும், சிறப்பாகவும் பின்

1. Source: Reserve Bank of India Bulletin.

பற்ற வேண்டுமென்ற கருத்து நிலவி வருகின்றது, 'இந்திய வரி விதிப்பு விசாரணைக்குழு' சமத்துவத்தின் அடிப்படையில் வேளாண்மை வருமான வரியை வசூலிப்பது அவசியமான தென்று குறிப்பிட்டது. 'பெரிய நிலவுடைமையாளர்களின் உபரி வருமானத்தின் மீது வரி விதிப்புச் செய்யாமல் இருப்பது தவறாகும்[1] என்று அஃது அறிவுறுத்தியது. இக்கருத்து நீண்ட காலமாகவே நிலவி வருகிறது. எனினும் சிறப்பான வேளாண்மை வருமான வரி முறையைச் சில மாநில அரசுகள் மட்டுமே கொண்டுள்ளன. நகர்ப் புறங்களில் செயல்படுத்தப்படுகின்ற வருமான வரிக்கும், வேளாண்மை வருமான வரிக்கும் இடையே யுள்ள வேறுபாடுகள் களையப்பட வேண்டும்.

மிகப்பழைய காலத்திலும்கூட வேளாண்மை வருமான வரி விதிக்கப்பட்டிருந்தது. 1860 முதல் 1873 வரை (இடைப்பட்ட நான்கு ஆண்டுகள் நீங்கலாக) இவ்வரி முறை அமைந்திருந்தது. பின்னர் இவ்வரி முறையானது தொடர்ந்து செயல்படவில்லை. நிலவுடைமையாளர்கள் வருமான வரிக்குப் பதிலாக நிலவரியைச் செலுத்தி வருகிறார்கள் என்று சிலர் தவறாக வாதிடுகின்றனர். நில வரியோடு வேளாண்மை வருமான வரியையும் விதிப்பது இரட்டை வரிவிதிப்பு ஆகிவிடும் என்பது அவர்கள் கூற்றாகும். ஆனால், நில வரி நிரந்தரமானது என்பதை அவர்கள் உணரவில்லை. மேலும், நில வரி மிகநீண்டகாலத்திற்குக் குறைந்த அளவில் விதிக்கப்படுகின்ற ஒன்றாகும். நிலவரி உற்பத்திப் பொருள்களின் அளவிற்கேற்ப வேறுபடுவதில்லை; உற்பத்திப் பொருள்களின் மதிப்பும் அதில் கருதப்படுவதில்லை. எவ்வகையில் ஆராய்ந்தாலும் வேளாண்மை வருமான வரியைப் பின்பற்றுவது நியாயமானதாகவே இருக்கின்றது.

**வேளாண்மை வருமான வரிக்குச் சாதகமான கருத்துகள்**

வேளாண்மை வருமான வரி முறையைப் பின்பற்றுவதனால் ஏற்படக்கூடிய நன்மைகள் பின்வருமாறு விளக்கப்படுகின்றன.

1. மாநில அரசுகள் வரி வருவாயை உயர்த்திக்கொள்ள வேளாண்மை வருமான வரி உதவும். இந்தியாவின் பல மாநிலங்களும் குறைந்த நிதி வசதியையே கொண்டுள்ளன. வளர் வீதத்தில் வேளாண்மை வருமான வரியை விதித்து அவை வருமானத்தைப் பெருக்கிக் கொள்ளலாம்.

2. தற்பொழுது இந்திய வேளாண்மை வரி முறை 'தேய்வு வீத வரி முறையாக' (Regressive Taxation) பொருந்தியிருக்கின்றது.

[1] Indian Taxation Enquiry Committee Report 1924–25, p. 233.

குறைந்த வருமானம் பெறுபவர்களும், அதிக வருமானம் பெறுபவர்களும் ஒரே வீதத்திலேயே நிலவரி செலுத்தி வருகின்றனர். இந்த நிலையை மாற்றுவதற்கு வேளாண்மை வருமான வரி உதவும்.

3. இதன்மூலம் வரிவிதிப்பின் சுமை எல்லாராலும் சமமாக ஏற்கப்படும். இப்போதுள்ள வரிமுறை விவசாயிகளைப் பெரிதும் பாதிக்கவில்லை. பெருநிலக்கிழார்களும் குறைந்த வரிகளை மட்டுமே செலுத்திவருகின்றார்கள். நகர மக்கள் எண்ணற்ற மறைமுக வரிகளோடு நேர்முக வரிகளையும் அளித்து வருகிறார்கள். வரிவிதிப்பின் சுமை அவர்கள்மீது அதிக அளவில் அமைந்துள்ளது. வரிவிதிப்பில் சமத்துவ நிலை ஏற்படவும் வேளாண்மை வருமான வரி உதவுகிறது.

4. வேளாண்மைத் துறையைச் சார்ந்த சிலர் வேளாண்மை வருமானத்தோடு பிற வழிகளிலும் வேறுவகைப்பட்ட வருமானங்களைப் பெறுகின்றார்கள். வேளாண்மை வருமான வரியில் அவர்கள் பெறுகின்ற எல்லா வருமானங்களும் வரி விதிப்பின்போது கணக்கில் கொள்ளப்படுகின்றன. எனவே, இவ்வரி முறையின் மூலமாக அவர்கள் அதிக வரியை அளிக்க வேண்டியவர்களாகின்றனர்.

5. சமீப காலத்தில் அதிக இலாப நோக்கம் கொண்டவர்களும், ஊக வாணிகர்களும் நிலத்தில் உயர்ந்த அளவு முதலீட்டைச் செய்துள்ளார்கள். சிலர் வரிவிதிப்பிலிருந்து தப்புவதற்காக நிலத்தை வாங்கி வேளாண்மைச் சாகுபடியில் ஈடுபட்டுள்ளனர். இவர்கள் அதிக இலாபத்தையும் பெற்று வருகின்றார்கள். அவர்கள் பெறுகின்ற கொள்ளை இலாபத்தின் ஒரு பகுதியை அடைய வேளாண்மை வருமான வரி உதவும். இதன்மூலம் சிலர் வரியளிப்பிற்குப் பயந்து தங்கள் சேமிப்பை நிலங்களில் முதலீடு செய்வதைத் தவிர்க்கலாம்.

6. பல காரணங்களால் வேளாண்மை விளை பொருள்களின் மதிப்புப் பல மடங்கு உயர்ந்துள்ளது. இவ்வாறு வேளாண்மையில் பெறப்படுகின்ற அதிக இலாபத்தின்மீது வேளாண்மை வருமான வரி விதிப்பது நியாயமானதேயாகும். உற்பத்திப் பொருள்களின் விலைகள் பல மடங்கு உயர்ந்திருக்கும்போது வேளாண்மைத் துறையினர் குறைந்த அளவிற்கு மட்டுமே நேர்முக, மறைமுக வரிகளைச் செலுத்தி வருகின்றனர். இந்த நிலையை மாற்ற வளர்வீத வேளாண்மை வருமான வரியை விதிப்பது இன்றியமையாதது.

எல்லா மாநிலங்களிலும் ஆண்டொன்றுக்கு 3,000 ரூபாய்க்கு அதிகமான வேளாண்மை வருமானங்களின்மீது வருமான வரி

விதிக்கப்படவேண்டுமென்று 'வரிவிதிப்பு விசாரணைக்குழு' (1953–55) பரிந்துரைத்தது. இப் பரிந்துரை பல மாநிலங்களிலும் செயல்படுத்தப்பட்டு வருகின்றது. இதன் மூலம் வேளாண்மைத் துறைக்கும், வேளாண்மையல்லாத துறைக்கும் இடையே வரி விதிப்பு முறையில் பொருந்தியிருக்கும் வேறுபாடுகளை நீக்கலாம். பொதுவான வருமான வரியும், வேளாண்மை வருமான வரியும் படிப்படியாக இணைக்கப்படவேண்டும் என்ற கருத்தும் 'வரி விதிப்பு விசாரணைக் குழுவால்' சொல்லப்பட்டது.

இந்தியாவின் நிலவரி முறையைச் செம்மைப் படுத்த வேளாண்மை வருமான வரியைப் பின்பற்றுவது அவசியமாகின்றது. இதன் மூலம் வரிவிதிப்புமுறையில் சமத்துவத்தையும் நிலை நாட்டலாம். வேளாண்மைத்துறையில் அதிக வருமானத்தைப் பெறுபவர்கள் பெருளாதார முன்னேற்றத்திற்கான நிதியைக் குறைந்த அளவிலேயே அளிக்கின்றனர் என்ற குறைபாட்டையும் இதனால், நீக்கமுடியும். வேளாண்மை வருமான வரியின்மீது கூடுதல் வரிகளையும், (Surcharges) விதிக்கலாம் என்று 'வரிவிதிப்பு விசாரணைக்குழு' குறிப்பிட்டது. இக் 'கூடுதல் வரிகள்' நகர்ப்புறகளில் பெருந்தி இருக்கும். வருமான வரியின் இயல்புகளுக்கு ஏற்ப இருத்தல் வேண்டும்; வேளாண்மை தவிரப் பிற வழிகளின்மூலம் பெறப்படுகின்ற வருமானத்திற்கேற்பக் 'கூடுதல் வரிகள்' இருக்க வேண்டுமென்றும் அஃது அறிவுறுத்தியது.

காலஞ்சென்ற டாக்டர் டி. ஆர். கட்கில் (Dr. D. R. Gadgil) திட்டக் குழுவின் துணைத்தலைவராக இருந்தபோது பொதுவருமான வரியையும், வேளாண்மை வருமான வரியையும் இணைக்கலாம் என்று ஆலோசனை தெரிவித்தார். ஆனால், மாநில முதலமைச்சர்கள் இந்த அரிய ஆலோசனையை ஏற்றுக்கொள்ளவில்லை. நம் நாட்டின் வரியமைப்புச் சீரமைவு மீதான அறிக்கையிலும் திரு. பூதலிங்கம் இதையே பரிந்துரைத்துள்ளார். மாநில அரசுகள் வேளாண்மை வருமான வரியின் நன்மைகளைப் பெறத்தவறிவிட்டன என்றும் இவரது அறிக்கை குறிப்பிட்டது. வேளாண்மைத் துறையில் வரியளிக்கும் திறன் அமைந்துள்ளது. அத் திறனை மாநில அரசுகள் அதிக நிதியைத் திரட்டப் பயன்படுத்திக்கொள்வதில்லை.

தேசிய வருமானத்தில் சுமார் 50 சதவீதத்தை அளிக்கின்ற வேளாண்மைத் துறையின்மீது மேலும் அதிக வரிவிதிப்பைச் செய்யவேண்டும். இதன் மூலமே நாட்டின் எல்லா வளங்களையும் நன்கு பயன்படுத்தி, விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப்

பெறுவதற்கான அதிக மூலதனத்தைப் பெறமுடியும். பொது வருமான வரியை மத்திய அரசு பின்பற்றுவதைப்போன்று வேளாண்மை வருமான வரியை மாநில அரசுகள் பின்பற்ற வேண்டும். இவ் வழியில்தான் உண்மையான வரியளிக்கும் திறன் கொண்டவர்களிடம் இருந்து முன்னேற்றத்திற்குத் தேவையான அதிக நிதியைத் திரட்ட முடியும். கணக்கில் வராத பணத்தைக் கொண்டதாகவும் வேளாண்மை வருமானம் இருக்கின்றது. ஒரு வகையில் இதை நகர்ப்புறங்களின் கறுப்புப் பணத்தோடு ஒப்பிடலாம். அதிக வேளாண்மை வருமானத்தைப் பெறுபவர்கள் ஆக்கத்தைப் பெருக்க உதவாத பல வீண்செலவுகளைச் செய்கின்றார்கள். அதிக வரிவிதிப்பின்மூலம் இதைத் தடுக்க வேண்டும்.

வருமான வரியை நிர்ணயிப்பதற்கான வேளாண்மை வருமானங்கள் கவனமாகக் கணக்கிடப்படவேண்டும். பெரிய நிலவுடைமையாளர்கள் பெறுகின்ற நிகர இலாபம் கருதப்பட வேண்டுமே தவிர, மொத்த வருமானம் கருதப்படக்கூடாது. ஆனால், வேளாண்மை வருமானத்தைக் கணக்கிடுவதும், இலாபத்தை அளவிடுவதும் கடினமானவையாக இருக்கின்றன. எனினும், சிறப்பான முறைகளைப் பின்பற்றி இவற்றைத் தீர்மானிக்கமுடியும். தற்பொழுது வேளாண்மை வருமானத்தில் சுமார் 7 சதவீதம் மட்டுமே வரிவிதிப்புச் செய்யப்படுகின்றது. [1] நகர வருமானங்களின்மீது வளர்வீத வரிமுறை அமைந்திருப்பதைப் போலக் கிராம வருமானங்களின்மீது தீவிர வரிமுறை இருக்கவில்லை. இப்போது பெருநிலக்கிழார்கள் அதிக இலாபத்தைப் பெற்றாலும் குறைந்த அளவு வரிகளையே செலுத்துகின்றனர்.

மூன்றாவது திட்டக் காலத்தில் மாநில அரசுகள் சில புதிய வரிகளை விதித்தன. இவ் வரிகளின் விதிப்பால் வேளாண்மைத் துறை அதிக அளவிற்குப் பாதிக்கப்படவில்லை. புதிய வரிகளின்மூலம் வேளாண்மைத்துறையினின்றும் பெற்ற நிதியின் அளவு குறைவாகவே இருந்தது. பொருளாதார முன்னேற்றத்தைப் பெற மூலதன வசதி உயர்வாகத் தேவைப்படுகின்றது. அதிக மூலதன வசதியைப் பெற மாநில அரசுகள் யாவும் சிறப்பான வகையில் வேளாண்மை வருமான வரிமுறையைக் கைக்கொள்ள வேண்டும். சமீப காலமாக வேளாண்மை வருமானம் படிப்படியாக அதிகரித்துக்கொண்டே வருகின்றது. விவசாயிகளின் வருமானத்தைப் பெருக்குவதற்கன நடவடிக்கைகளை மத்திய அரசும், மாநில அரசுகளும் மேற்கொள்ளுகின்றன. அரசு விலைமட்டங்களைச்

1 Bank of Baroda, Weekly Review, January 19, 1968.

சீரமைத்து விவசாயிகளுக்கு உதவுகின்றது. பல நன்மைகளை வேளாண்மைத் துறைக்கு அளித்தாலும், மத்திய அரசும், மாநில அரசுகளும் அதிக வரிகளை விவசாயிகளின்மீது விதிக்கத் தயங்குகின்றன. அரசியல் நோக்கமே இதற்கு அடிப்படையாக இருக்கின்றது. இந்தியாவில் இன்றும் வேளாண்மையைச் சார்ந்த கிராம மக்கள் தொகையே மிகுதியாக உள்ளது. வேளாண்மைத் துறையினரின்மீது அதிக வரிவிதிப்பைச் செய்தால், அவர்களுடைய ஆதரவு தங்களுக்குக் கிடைக்காமல் போய்விடும் என்று அரசியல் வாதிகள் கருதுகின்றனர்கள். இவ்வாறு நாட்டின் பொருளாதார முன்னேற்றம் அரசியல் குறைபாட்டால் தடைப்படுகின்றது.

ஆந்திரப்பிரதேசம், குஜராத் ஆகிய இரண்டையும் தவிரப் பிற மாநிலங்கள் வேளாண்மை வருமான வரிமுறையைப் பின்பற்றி வருகின்றன. ஆனால், இவ் வரி முறை எவ்வாறு அமைந்திருக்க வேண்டுமோ அவ்வாறு அமைந்திருக்கவில்லை. பல மாநிலங்களிலும் பின்பற்றப்படுகின்ற வேளாண்மை வருமானவரி முறையின் இயல்புகள் வெவ்வேறு இடங்களிலும் மாறுபடுகின்றன. அஸ்ஸாம், பீஹார், தமிழ்நாடு, மைசூர், ஒரிஸ்ஸா, மேற்கு வங்காளம், மஹாராஷ்டிரம், ஜம்மு-காஷ்மீர், கேரளம், மத்தியப் பிரதேசம் ஆகிய 10 மாநிலங்களிலும் வேளாண்மை வருமானவரி விதிக்கப்படுகின்றது. உத்தரப்பிரதேசம், பஞ்சாப், ராஜஸ்தான் ஆகிய மூன்று மாநிலங்களிலும் வேளாண்மை வருமான வரியைப் போன்றே இயல்புகளைக்கொண்ட பிறிதொரு வரிவசூலிக்கப்படுகிறது. உத்தரப்பிரதேசத்தில் நிலவுடைமைகளின் உற்பத்தி மதிப்பிற்கேற்ப வரி விதிப்புமுறை அமைந்துள்ளது. இது வளர் வீதத்தில் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும். இவ்வாறு பல மாநிலங்களிலும் வேளாண்மை வருமானவரி முறை இருந்தாலும் அதில் பல குறைபாடுகள் உள்ளன. இதனால், மாநில அரசுகள் இவ் வரியின்மூலம் அதிக வரி வருவாயைப் பெறமுடியாமல் போய்விடுகின்றது.

ரூ. 1,500 முதல் ரூ. 3,000 வரையிலான வேளாண்மை வருமானத்தின்மீது 2 சதவீத வரிவிதிக்கப்படுகிறது. இது குறைந்த பட்ச வரிவீதமாகும். ரூ. 1,15,000 என்ற அளவிற்கு அதிகமான வருமானத்தின்மீது 78 சதவீத வரி நிர்ணயிக்கப்படுகிறது. இஃது அதிக பட்ச வரிவீதமாகும். இந்த அடிப்படை வரியைத் தவிர, சில மாநிலங்கள் வேளாண்மை வருமானத்தின்மீது 'மேல் வரியையும் (Super Tax), 'கூடுதல் வரியையும்' (Surcharge) விதிக்கின்றன.

வேளாண்மை வருமான வரியின்மூலம் 1951—52-ல் ரூ. 4.33 கோடி கிடைக்கப்பெற்றது. இது, 1955—56-ல் ரூ. 7.67 கோடியாகவும் 1690—61-ல் ரூ. 9.49 கோடியாகவும் உயர்வடைந்தது. வேளாண்மை வருமான வரியின்மூலம் மாநில அரசுகளுக்குக் கிடைக்கக்கூடிய வருவாய் 1668—69-ல் ரூ. 11.59 கோடியாகவும், 1969—70-ல் ரூ. 12.48 கோடியாகவும், 1970—71-ல் ரூ. 12.92 கோடியாகவும் இருக்குமென்று மதிப்பிடப்பட்டது.

வேளாண்மை வருமான வரி விதிப்பு முறைபற்றி மதிப்பீடு செய்யும்போது, இவ் வரி மாநிலங்களுக்குக் கணிசமான வரி வருவாயைத் தருவதில்லை என்பதை உணர்ந்து கொள்ளலாம். இவ் வரிவிதிப்பைச் செய்வதற்கான 'வேளாண்மை வருமான வரிச் சட்டங்கள்' (Agricultural Income-Tax Acts) பல சிக்கல்களைக் கொண்டு இருக்கின்றன. விவசாயிகள் கல்வியறிவு இல்லாதவர்களாக உள்ளனர். இவற்றின் காரணமாக வேளாண்மை வருமான வரி முறையை நிர்வகிப்பது கடினமானதாக இருக்கின்றது. பெருமளவிற்கு வரி ஏய்ப்புகளும் செய்யப்படுகின்றன. வேளாண்மை வருமானத்தையும், வேளாண்மையல்லாத பிற துறைகளின் வருமானத்தையும் பாகுபாடு செய்வதால், இவ் விரு வகை வருமானத்தையும் ஒருங்கே பெறுபவர்கள் நன்மையடைகின்றனர்கள். எல்லாவகை வருமானங்களும் சேர்க்கப்பட்டு அவற்றின்மீதே வருமானவரி விதிக்கப்படவேண்டும். வரிவிதிப்பு முறையில் சமத்துவத்தைக் காக்க இஃது அவசியமாகின்றது. வருமான வரிச் சட்டத்தின்கீழ் வெவ்வேறு வகைப்பட்ட பல வருமானங்களையும் இணைப்பது இன்றியமையாதது.

திட்டக்குழு வளர்வீத வேளாண்மை வருமான வரியைப் புகுத்துவது அவசியமானது என்று பரிந்துரைத்தது. இவ் வரி முறையைப் பின்பற்ற வேண்டுமென்ற கருத்து நீண்ட காலமாகவே நிலவிவருகிறது. எனினும், சமீப காலமாகவே இவ் வரி முறையைப் பின்பற்றுவதற்கான சூழ்நிலைகள் தோன்றியுள்ளன.

1. சுதந்திரமடைந்த பின்னர், அரசு வேளாண்மை வளர்ச்சிக்காக அதிக முதலீட்டைச் செய்தது. இதனால், வேளாண்மைத் துறையில் எண்ணற்ற நன்மைகள் விளைந்தன. எனினும், வேளாண்மைத் துறையினின்றும் திட்டமிட்ட பொருளாதார முன்னேற்றத்திற்குத் தேவையான நிதி குறைந்த அளவிலேயே பெறப்பட்டது.

2. சமீப காலமாக நிலவுடைமையாளர்கள் அதிக வருமானத்தைப் பெற்று வருகிறார்கள். அதிகரித்த வருமானத்தின் மீதும்,

இலாபத்தின்மீதும் வரிவிதிப்பு நியாயமானதேயாகும். தற்பொழுது வேளாண்மைத் துறையின் உற்பத்தித் திறன் பல மடங்கு பெருகியுள்ளது. பெரிய நிலக்கிழார்கள் உபரி வருமானத்தை அதிக அளவில் பெறுகின்றார்கள். அவ்வுபரி வருமானத்தின்மீது வரி விதிப்பது தவறாகாது.

அதிக வருமானத்தைப் பெறுகின்ற விவசாயிகளின் எண்ணிக்கை பெருகி வருகிறது. செறிவு முறைச் சாகுபடி பல இடங்களிலும் பின்பற்றப்பட்டமையே இதற்குக் காரணமாக அமைந்தது. இவ் விவசாயிகள் தற்பொழுதுள்ள வரிவிதிப்பு முறையினால், குறைந்த அளவிற்கு மட்டுமே பாதிக்கப்பட்டுள்ளார்கள். செறிவு முறைச் சாகுபடி முறை பின்பற்றப் பட்டமைக்கு வேளாண்மை விரிவாக்கப் பணிகளும், சமுதாய வளர்ச்சித் திட்டங்களும், அரசின் பிற உதவிகளும் அடிப்படையாக இருந்தன. பல நன்மைகளையும் பெற்று அதிக வருமானத்தை அடைகின்ற விவசாயிகளின்மீது வருமான வரியை விதிப்பது பொருத்த முடையதேயாகும்.

திட்டக்குழு வளர்வீத வேளாண்மை வருமான வரிமுறையைப் பின்பற்ற வேண்டுமென்று பரிந்துரை செய்ததை மாநில அரசுகளின் முதலமைச்சர்கள் மறுத்துவிட்டனர். நிலவரி முறையைவிட வேளாண்மை வருமான வரிமுறை சிறந்தது என்பதற்கான காரணங்கள் பலவற்றைக் குறிப்பிடலாம். நிலவரி நிரந்தரமான, மாறாத அளவில் இருக்கின்றது. நிலவரியில் மாற்றம் செய்யப்பட்டாலும், அது குறைந்த அளவினதாகவே இருக்கின்றது. நீண்ட காலத்திலும்கூட மாநில அரசுகள் நிலவரியை அதிக அளவிற்கு உயர்த்துவதில்லை. இதற்கு மாறாக வேளாண்மை வருமான வரி உற்பத்திப் பொருள்களின் அளவிற்கேற்ப விதிக்கப்படுகிறது. இவ் வரிமுறையில் இறுதிநிலை வரி விதிப்பு வீதம் உயர்வாக இருக்கிறது. வளர்வீத வரி முறையாகவும் உள்ளது. நிலவரிமுறையில் வரி விதிப்பின் இறுதி நிலை அதிகரிப்பு வீதம் 'பூஜ்யம்' என்ற நிலையில் இருக்கின்றது.

ஐ. எஸ். குலாத்தி, வி. என் கோத்தாரி முதலியவர்கள் வேறு விதமான கருத்தைக்கொண்டுள்ளார்கள். அவர்கள் கூறுவதாவது, 'வேளாண்மை வருமான வரி நிலத்தைச் சிறப்பாகப் பயன்படுத்துபவர்களின்மீது 'நிலைப்பாடு' (Incidence) கொள்கிறது. நிலத்தைச் சரியாகப் பயன்படுத்தாதவர்கள் வேளாண்மை வருமானவரியால் பாதிக்கப்படுவதில்லை. எனவே, நிலவரியை நீக்கி வேளாண்மை வருமான வரியை விதிக்கும்போது உற்பத்தி

பாதிக்கப்படும். விவசாயிகள் மேம்பாடான உற்பத்தி முறைகளைக் கைக்கொள்ள மாட்டார்கள். உற்பத்தி உயர்ந்து, வருமானம் அதிகரித்தால், அவர்கள் அதிக வரியைச் செலுத்த வேண்டியவர் களாகின்றனர். ஆகவே, அவர்கள் உற்பத்தியைப் பெருக்குவதற் கான முதலீட்டைச் செய்வதில் ஆர்வம் கொண்டிருப்பதில்லை. இதனால், வேளாண்மை வளர்ச்சி தடைப்படுகின்றது; உற்பத்தி குறைகின்றது. நிலமானது அதிக உற்பத்தியைப் பெறும் வகையில் பயன்படுத்தப்படுவதில்லை. வேளாண்மை வருமான வரிமுறை இவ் வகைக் குறைபாடுகளைக் கொண்டதாக இருக்கின்றது.'[1]

மேற் குறிப்பிடப்பட்டுள்ள வாதம் தவறானதாகும். இதற்கு நகரங்களில் விதிக்கப்பட்டிருக்கும் பொது வருமான வரியையே உதாரணமாகக் கொள்ளலாம். அதிக வருமான வரியைச் செலுத்த வேண்டும் என்ற எண்ணத்தில் வருமானத்தைப் பெருக்க விரும் பாதவர்கள் எவரும் இலர். வருமான வரி குறிப்பிட்ட அளவு வருமானத்திற்கு மேல் விதிக்கப்படுகின்றது. வருமான வரி அளிக்க வேண்டிய அளவிற்கு ஒருவருடைய நிலை உயரும்போது, வளர் வீதத்தில் அவர்மீது வரியை விதிப்பது தவறாகாது. வருமான வரி செலுத்தும் ஒருவருடைய வாழ்க்கைத்தரம் மிகவும் தாழ்வானது என்று எவரும் கூறவியலாது. வரியைச் செலுத்தும் திறனில்லாத பலரிடமிருந்து வரியைப் பெறுவதைவிட வரியைச் செலுத்தும் திறனை மிகுதியாகக் கொண்ட சிலரிடமிருந்து அதிக வரியைப் பெறுவது நல்லது. பலருடைய நலனைப் பெருக்க சிலருடைய நலனைக் குறைப்பது எல்லா வகையிலும் சிறந்தது.

நகர்ப்புற வருமானங்களின்மீது வளர்வீத வருமான வரி விதிப்புச் செய்யப்படுகின்றது. ஆனால், வேளாண்மை வருமானங்களின்மீது வளர்வீத வரிவிதிப்பு இருக்கவில்லை. விவசாயிகளின் அதிக அளவு வருமானங்களின்மீது உயர்ந்த அளவிற்கு வரிவிதிப்புச் செய்யப்படுவதில்லை. தங்களுடைய வருமானத்தின் மிகக் குறைந்த வீதத்தையே அவர்கள் வரிகளாகச் செலுத்துகின்றனர். வேளாண்மை வருமான வரி பல மாநிலங்களில் விதிக்கப்படு கிறது; அது வளர்வீதத்திலும் இருக்கிறது. பல மாநிலங்களில் ஆண்டொன்றுக்கு 3,000 ரூபாய்க்கு அதிகமான வேளாண்மை வருமானங்களின்மீது வரிவிதிக்கப்படுகின்றது; சில மாநிலங்களில் 3,500 ரூபாய்க்கு அதிகமான வேளாண்மை வருமானங்களின்மீது மட்டுமே வரி வசூலிக்கப்படுகின்றது.

[1] I.S. Gulati and V.N. Kothari, Economic and Political Weekly (Special Number, July, 1968.)

பல மாநிலங்களுக்கிடையேயும் உயர்ந்த பட்ச வேளாண்மை வருமான வரிவீதம் வேறுபடுகிறது. இது தமிழ்நாட்டில் 45 சதவீதமாகவும், மஹாராஷ்டிரத்தில் 50 சதவீமாகவும், அஸ்ஸாமில் 78 சதவீதமாகவும் அமைந்துள்ளது. 1951—52-ல் வேளாண்மை வருமான வரியின்மூலம் ரூ 4 கோடிக்குச் சற்று அதிக வருவாயை மாநில அரசுகள் பெற்றன; அதன் அளவு 1965—66-ல் ரூ. 10 கோடியாக உயர்ந்துவிட்டது. வேளாண்மை வருமான வரி வீதம் குறைவாக உள்ளமைக்கு மற்றொரு காரணமும் கூறப்படுகிறது. மாநில அரசுகள் நிலவரியைத்தவிர வேறு சில வரிகளையும் வேளாண்மைத் துறையின்மீது விதிக்கின்றன. மேம்பாட்டு வரி (Betterment Levy), Cess (பிரதேசவரி), கூடுதல் வரி (Surcharge), தண்ணீர் வரி முதலியன இவ்வகை வரிகளாக இருக்கின்றன. சாலைகள் அமைக்கவும் கல்வி வசதியைப் பரப்பவும் மேம்பாட்டு வரிகள் வசூலிக்கப்படுகின்றன. வேளாண்மை வருமான வரி குறைந்த அளவில் உள்ளமைக்கு இஃது ஒரு காரணமாகிறது. இதனால் மாநில அரசுகள் இவ் வரிக்கு போதுமான முக்கியத்துவம் அளிப்பதில்லை.

வளர்வீத வேளாண்மை வருமான வரிமுறையைப் பின்பற்றுவதில் சில நிர்வாகச் சிக்கல்களும் அடங்கியுள்ளன. அவ்விதச் சிக்கல்களைப்பற்றி ஆராய்வது அவசியமாகிறது.

1. முதலாவதாக, வரிவிதிப்பதற்கான வேளாண்மை வருமானத்தைக் கணக்கிடுவது கடினமாக உள்ளது. விவசாயிகள் பெறுகின்ற மொத்த வருமானத்திலிருந்து உறபத்திச் செலவைக் கழித்து நிகர வருமானத்தைக் கண்டறிய வேண்டும். வெவ்வேறு வகைப்பட்ட பயிர்களையும் விற்பனை செய்து விவசாயிகள் வருமானத்தைப் பெறுகின்றார்கள். விதைகள், உரங்கள், கால்நடைப் பராமரிப்பு, கருவிகள் முதலியவற்றுக்காக அவர்கள் செலவிடுகின்றார்கள். உற்பத்தி நடவடிக்கைகளில் கூலியாட்களை ஈடுபடுத்தி ஊதியம் அளிக்கிறார்கள். தங்களுடைய உழைப்பிற்கான ஊதியம், மேற்பார்வையிடுவதற்கான ஊதியம், தங்களுடைய குடும்பத்தினரின் உழைப்பிற்கான ஊதியம் முதலியவற்றையும் அவர்கள் கணக்கிட்டு உற்பத்திச் செலவில் சேர்க்கவேண்டும். நிலத்தின் மீது சாகுபடி நடவடிக்கைகளுக்காக அவர்கள் செய்கின்ற எல்லாச் செலவுகளையும் சரியாகக் கணக்கிடுவது அவசியமாகின்றது. ஒரு சாதாரண வேளாண்மைக் குடிமகனால் இச் செலவுகளைக் கணக்கிடுவது இயலாததாகிறது. கல்வியறிவு இல்லாமையே இதற்கு முக்கியக் காரணமாகின்றது. வரவு செலவுகளைப்பற்றிய கணக்கு

களையும் விவசாயிகள் வைத்திருப்பதில்லை. வேளாண்மை வருமான வரியைப் புகுத்துவதில் உள்ள பெரிய இடையூறு இஃதாகும்.

2. இரண்டாவதாக, பலவகைப்பட்ட பயிர்களின் உற்பத்தி அளவுகள், விலைகள் ஆகியவற்றில் அதிக ஏற்றத்தாழ்வுகள் தோன்றியவாறு இருக்கின்றன. இதற்குச் சான்றாக மிளகாயின் விலையைக் குறிப்பிடலாம். கடந்த இரண்டு ஆண்டுகளில் ஒரு குவின்டால் (Quintal) மிளகாயின் விலை 750 ரூபாய்க்கும் 250 ரூபாய்க்கும் இடைப்பட்ட நிலையில் ஏற்றத்தாழ்வுகளைக் கொண்டதாக இருந்தது. வேளாண்மை உற்பத்தியிலும், விலைகளிலும் அதிக ஏற்றத்தாழ்வுகள் ஏற்படும்போது வேளாண்மை வருமானத்திலும் ஏற்றத் தாழ்வுகள் ஏற்படுகின்றன. எனவே, வரி விதிப்பைச் செய்வது கடினமாகிறது. எந்த அடிப்படையில் வரி விதிப்பது என்பதைத் தீர்மானிப்பது இயலாததாகின்றது.

3. மூன்றாவதாக, இந்தியாவில் வெவ்வேறு வகைப்பட்ட நிலவுடைமை முறைகளும், குத்தகை முறைகளும் இருக்கின்றன. சில நிலைகளில் யார் மீது வரி விதிப்பது என்பதைத் தீர்மானிப்பதும் கடினமாகின்றது. பல நிலைகளில் ஒரு குறிப்பிட்ட நிலவுடைமையின்மூலம் பெறப்பட்ட மொத்த வருமானம் வரிவிதிப்பிற்குரியதாக அமைந்திருக்கும். ஆனால், மொத்த, வருமானத்தை நிலவுடைமையாளர்களும், குத்தகையாளர்களும் பகிர்ந்து கொண்டால் வரிவிதிப்பைச் செய்வது முடியாததாகின்றது.

4. இறுதியாக, வேளாண்மை வருமான வரியை வசூலிப்பதற்கு அதிக செலவு பிடிக்கக்கூடும். விவசாயிகள் நாட்டின் எல்லா இடங்களிலும் பரவலாக இருப்பது இதற்கு ஒரு காரணமாக இருக்கிறது. இதைத் தவிர, குறைந்த அளவில் வரியைச் செலுத்தக்கூடிய விவசாயிகளும் எண்ணிக்கையில் அதிகமாக இருப்பார்கள். மொத்த வரி வருவாயில் வரி வசூலிப்பிற்கான செலவு உயர்ந்த வீதத்தில் அமையுமென்றும் சொல்லப்படுகின்றது.

வேளாண்மை வருமான வரிமுறையில் இவ்வகைச் சிக்கல்கள் இருந்தாலும், அவற்றை நீண்ட காலத்தில் நீக்கிவிடலாம். வரி விதிப்பு நிர்வாகம் சீரடையும்போது இக் குறைபாடுகள் நீங்கி விடும். அனுபவமடைந்த வரிவிதிப்பு நிர்வாகத்தின்மூலம் எல்லா நன்மைகளையும் பெறமுடியும். வளர்வீத வரிவிதிப்பு முறையைக் கைக்கொள்வதன்மூலமே வரிவிதிப்புக் கொள்கையின் 'சமத்துவ விதியை' நிலைநாட்டமுடியும். அதிக வருமானத்தைப் பெறுபவர்கள் வெவ்வேறு வழிகளில் வரி ஏய்ப்பைச் செய்கிறார்கள்.

குறிப்பாகத் தொழில், வாணிபத் துறைகளைச் சார்ந்தவர்கள் [redacted] ஏய்ப்பைச் செய்வதில் தேர்ந்தவர்களாக இருக்கின்றனர். எனவே வேளாண்மையல்லாத துறையில் வரிவிதிப்பின் சுமை குறைவானதே என்று சிலர் குறிப்பிடுகின்றனர். விவசாயிகளில் பெரும்பாலோர் வரி ஏய்ப்புகளைச் செய்வதில்லை. வரி ஏய்ப்பு முறைகளும் அவர்களுக்குத் தெரிவதில்லை.

வேளாண்மையல்லாத துறையில் உண்மையான வளர்வீதவரிமுறை இருக்கவில்லை என்பது சிலருடைய கூற்று. வேளாண்மை வருமானங்களின்மீது வளர்வீத வரிமுறை பின்பற்றப்பட்டால் விவசாயிகளின் நிலை பெரிதும் பாதிக்கப்படும் என்று அவர்கள் கூறுகின்றார்கள். வேளாண்மை வளர்ச்சியும் இதனால் தடைப்படும் என்று அவர்கள் கருதுகின்றார்கள். மிக அதிக வருமானத்தைப் பெறக்கூடிய பெருநிலக்கிழார்கள் வரி ஏய்ப்பு முறைகளில் தேர்ந்தவர்களாக மாறி விடுவார்கள்; அரசின் வரி விதிப்பு அலுவலர்களுக்குக் 'கையூட்டு' வழங்கவும் செய்வார்கள். இவ்வாறு வரியை விதிக்கின்ற அரசு பல நிலைகளிலும் ஏய்க்கப்படும். நகரங்களில் அமைந்துள்ள பொதுவான வளர்வீத வருமான வரி முறையைப்போன்று வேளாண்மை வருமான வரி முறையையும் மாற்றியமைக்கும்போது இவ்விதக் குறைபாடுகள் தோன்றுகின்றன.

குறைபாடுகள் தோன்றக்கூடும் என்பதற்காக நல்லதொரு வேளாண்மை வருமான வரிமுறையை மாநில அரசுகள் இழக்கக்கூடாது. அவை, குறைபாடுகளை நீக்கி வரிமுறை சிறப்பாக அமைவதற்கான நடவடிக்கைகளை எடுக்கவேண்டும்.

### மறைமுக வரிகள் (Iudirect Taxes)

சில மறைமுக வரிகள் நகர மக்களைப் பாதிப்பது போலவே கிராம மக்களையும் பாதிக்கின்றன. முத்திரை, வரி, பதிவு வரி, முதலியவற்றைக் கிராம மக்களும் அதிக அளவில் செலுத்துகின்றனர். இதன்மூலம் கணிசமான வருமானத்தை மாநில அரசுகள் பெறுகின்றன. மத்திய அரசு 'ஆயத் தீர்வைகளை' (Excise Duties) விதிக்கின்றது. இதன்மூலம் கிடைத்த வருமானத்தில் 20 சதவீதம் மாநில அரசுகளுக்குத் தரப்படுகிறது. மாநில அரசுகளும் சில வகை ஆயத் தீர்வைகளை விதிக்கின்றன. மது வகைகள், [redacted] வகைகள், போதைப் பொருள்கள் முதலியவற்றின்மீது ஆயத் தீர்வை விதிக்கும் உரிமையை மாநில அரசுகள் கொண்டுள்ளன. பொது விற்பனை வரி முதன்முதலில் தமிழ்நாட்டில் இரண்டாவது

உலகப் போருக்கு முன்னர் விதிக்கப்பட்டது. தற்பொழுது எல்லா மாநிலங்களிலும் அதிக வரிவருவாயைத் தருவதாக இருப்பது விற்பனை வரியேயாகும். மாநில அரசுகளின் வரி வருவாயில் விற்பனை வரி முக்கிய நிலையைக் கொண்டிருக்கிறது. இறக்குமதி வரிகள், கேளிக்கை வரி, மின்சார வரிகள், வாகன வரி முதலிய வரிகளும் கிராம மக்களின் மீது நிலைப்பாடு கொள்கின்றன. ஆனால், இவ் வரிகளின் மூலம் வேளாண்மைத் துறையினர் குறைந்த அளவிற்கே பாதிக்கப்படுகின்றனர்கள்.

மறைமுக வரிகள் மக்கள் அனைவரின்மீதும் நிலைப்பாடு கொள்கின்றது. நகரமக்கள், கிராம மக்கள் ஆகிய எல்லாரும் மறைமுக வரிகளால் பாதிக்கப்படுகின்றனர்கள். மறைமுக வரிகளின் நிலைப்பாட்டை நகரத் துறை, கிராமத் துறை ஆகிய இரண்டிற்கும் இடையே பிரிக்க முடியாது. அவ்வாறு பிரிக்க முடிந்தால் வேளாண்மைத் துறையின் மீதான வரிச்சுமையை எளிதில் கணக்கிட்டு விடலாம். ஒப்பிட்டு நோக்கினால் வேளாண்மைத் துறையின்மீதான வரிச்சுமையைவிட வேளாண்மையல்லாத துறையின்மீதான வரிச்சுமை உயர்வானது என்பதை உணரலாம்.

## இந்தியாவில் வேளாண்மை வரிவிதிப்பின் [redacted] (Burden of Agricultural Taxation in India)

வி. பி. காந்தி, ஐ. எஸ். குலாத்தி, இ. டி. மாத்யு முதலிய ஆசிரியர்கள் சமீப காலத்தில் வேளாண்மை வரி விதிப்பின் சுமையைக் கணக்கிட முயற்சியை மேற்கொண்டார்கள். 1958—59-ல் வேளாண்மை வரிவிதிப்பின் மொத்த சுமை தனியொருவருக்கு $ 14.52 ரூபாயாக இருந்ததென பேராசிரியர் இ. டி. மாத்யு கணக்கிட்டார்.[1] இது வேளாண்மைத் துறையின் தலா வருமானத்தில் 6,8 சதவீதமாகும். வேளாண்மை வரிவிதிப்பின் நிகரச் சுமை 6.88 ரூபாயாக மதிப்பிடப்பட்டது. இது வேளாண்மைத் துறையின் தலா வருமானத்தில் 3.2 சதவீதமாகும். மற்றொரு புறத்தில் 1958—59-ல் வேளாண்மையல்லாத துறையின் மீதான வரி விதிப்பின் மொத்தச் சுமை தனியொருவருக்கு 46 ரூபாயாக இருந்தது. இஃது அத்துறையின் தலா வருமானத்தில் 9.2 சதவீதமாக இருந்தது. வேளாண்மையல்லாத துறையின் மீதான வரி விதிப்பின் நிகரச் சுமை அத்துறையின் தலா வருமானத்தில் 7.2 சதவீதமாக இருந்தது. பேராசிரியர் மாத்யு, இந்தியாவில் வரி விதிப்பின் சுமை குறைவானது என்று குறிப்பிடுகின்றார். பொரு

1 [redacted] T. Mathew, Agricultural Taxation and Economic Development, p. 26.

வாதார முன்னேற்றத்தை விரைவாகப் பெறுவதற்கான நிதி வசதியைப் பெருக்க மேலும் பல வரிகள் விதிக்கப்பட வேண்டு மென்று அவர் கூறுகின்றார். வேளாண்மைத் துறையின் மீதான பல வரிகளையும் ஆராய்ந்து அவர் இம் முடிவுக்கு வந்தார். வேளாண்மைத் துறையினர் குறைந்த அளவிற்கு மட்டுமே வரிகளைச் செலுத்துகின்றனர்; அவர்களிடமிருந்து அதிக வரி வருவாயைப் பெற மாநில அரசுகள் புதிய வழிமுறைகளைப் பின்பற்ற வேண்டுமென்று அவர் கருதுகிறார்.

### வேளாண்மை வரிவிதிப்பின் மொத்த நிலைப்பாடு (Gross Incidence of Agricultural Taxation)

வரியின் நிலைப்பாட்டைப்பற்றியும், வேளாண்மை வரிகளின் சுமையைப் பற்றியும் டாக்டர் வி. பி. காந்தி விளக்கமாகவும், தெளி வாகவும் கணக்கிட்டுள்ளார்.[1] அதன் மூலம் வரிவிதிப்பின் சுமையை உணரலாம்.

**வேளாண்மைத் துறை, வேளாண்மையல்லாத துறை ஆகியவற்றின்மீதான மொத்த வரிகளின் நிலைப்பாடு[2]**

(கோடி ரூபாயில்)

| ஆண்டு | வேளாண்மைத்துறை | வேளாண்மையல்லாத துறை |
|---|---|---|
| 1951—52 | 200 | 451 |
| 1960—61 | 399 | 922 |
| 1962—63 | 619 | 1750 |

மேற்கண்ட அட்டவணையின் மூலம் வேளாண்மையல்லாத துறையைக் காட்டிலும் வேளாண்மைத் துறை குறைந்த அளவிற்கு மட்டுமே வரிகளை அளித்து வருவதை அறியலாம். வேளாண்மை வளர்ச்சிக்கு அரசு அதிக செலவுகளைச் செய் கின்றது; ஆனால், வோளண்மைத் துறையினின்றும் குறைந்த வரி வருவாய் மட்டுமே பெறப்படுகின்றது. மாறாக வேளாண்மை

[1] Dr. Ved P. Gandhi, Tax Burden on Indian Agriculture, chapters 3-5.

[2] Source: Dr. Ved P. Gandhi, Tax Burden on Indian Agriculture, P. 53.

யல்லாத துறையில் அரசின் செலவுகள் குறைவாக இருந்தாலும், அத் துறையினின்றும் அதிக வரி வருவாய் அடையப்படுகின்றது. இதைப் பின் வரும் அட்டவணை உணர்த்துகிறது.

வரிநிலைப்பாடும், செலவு நிலைப்பாடும்

(Tax Incidence and Expenditure Incidence)[1]

கோடி ரூபாயில்

| ஆண்டு | வேளாண்மைத் துறை | | வேளாண்மையல்லாத துறை | |
|---|---|---|---|---|
| | பெற்ற வருவாய் | செய்த செலவு | பெற்ற வருவாய் | செய்த செலவு |
| 1951—52 | 200 | 325 | 450 | 325 |
| 1960—61 | 399 | 721 | 922 | 602 |
| 1962—63 | 502 | 821 | 1326 | 689 |

இந்த அட்டவணை வரி நிலைப்பாட்டையும், செலவு நிலைப்பாட்டையும் விளக்குகிறது. 1950 — 51ஆம் ஆண்டில் வேளாண்மைத் துறை மத்திய அரசுக்கும் மாநில அரசுகளுக்கும், ரூ. 200 கோடி வரிகளாகச் செலுத்தியது. இது வேளாண்மைத் துறையின்மீதான வரிகளின் மொத்தச் சுமையாக இருந்தது. ஆனால், அதே ஆண்டில் மத்திய அரசும், மாநில அரசுகளும் வேளாண்மைத் துறையின் வளர்ச்சிக்காக ரூ. 325 கோடி செலவழித்தன. மத்திய, மாநில அரசுகளின் 'பொதுச் செலவின்' (Pubulic expenditure) மூலம் இத் தொகை வேளாண்மைத் துறையில் செலவிடப்பட்டது. இதைப் போன்றே 1960—61ஆம் ஆண்டில் வேளாண்மைத் துறை வரிகளாக அளித்தது ரூ. 399 கோடியாகும். ஆனால், மத்திய, மாநில அரசுகள் வேளாண்மை வளர்ச்சிப் பணிகளுக்காக ரூ. 721 கோடி செலவிட்டன. மக்கள் அளித்த வரிப்பணத்தின் பெரும் பகுதி வேளாண்மைத் துறையிலேயே முதலீடாக்கப்பட்டது. மற்றொரு புறத்தில் வேளாண்மையல்லாத துறை அதிக வரிகளை மத்திய அரசுக்கும், மாநில அரசுகளுக்கும் செலுத்தியுள்ளது. எனினும், இத் துறையின் வளர்ச்சிக்-

[1] Source: Dr. Ved P. Gandhi, Tax Burden on Indian Ag culture, p. 53 & p. 116.

[redacted] மத்திய, மாநில அரசுகள் குறைந்த செலவுகளை மட்டுமே செய்துள்ளன.

இதிலிருந்து வேளாண்மைத் துறையின்மீதான வரிச் சுமை குறைவானது என்பதை அறியலாம். வரிச் சுமை குறைவாக இருப்பதோடு, அத் துறையின் வளர்ச்சிக்காக அதிக செலவுகள் செய்யப்படுகின்றன. குறைந்த அளவே வரிகளை அளிக்கின்ற வேளாண்மைத்துறை மத்திய, மாநில அரசுகளின் அதிகப் பொதுச் செலவால் பல நன்மைகளையும் பெறுகிறது.

மேற்கண்ட அட்டவணையில் அரசின் 'மூலதன வரவு-செலவுத் திட்டம்' (Capital Budget) பற்றிய புள்ளி விவரங்கள் குறிப்பிடப் படவில்லை. 1962—63ஆம் ஆண்டில் வேளாண்மைத் துறை மூலதன வரவு-செலவுத் திட்டத்திற்காகச் சிறு சேமிப்பு, எதிர்கால வைப்பு நிதி (Provident Fund), வெளிச்சந்தைக் கடன்கள் (Open Market Loans) முதலியவற்றின் மூலம் ரூ. 75 கோடி அளித்தது. ஆனால், 1962—63ஆம் ஆண்டில் அரசு வேளாண்மை வளர்ச்சி, சமுதாய முன்னேற்றம், நீர்ப்பாசனம், வெள்ளத் தடுப்பு முதலியவற்றுக்காக ரூ. 250 கோடி செலவு செய்தது. எனவே, வேளாண்மைத் துறை அளித்ததைவிட ரூ. 175 கோடி என்ற அளவிற்கு அதிகமாக 1962—63ஆம் ஆண்டில் அரசு வேளாண்மை வளர்ச்சிக்காகச் செலவிட்டது. 1962—63ஆம் ஆண்டின் புள்ளி விவரம் பிற ஆண்டுகளுக்கும் பொருந்துவதாகவே இருக்கின்றது.

இந்தியாவின் வரி விதிப்புமுறை பற்றிய சரியான மதிப்பீடு வேளாண்மைத் துறையின் மீதான வரிச்சுமை குறைவானதென்று குறிப்பிடுகின்றது. நம் நாட்டின் பொருளாதார முன்னேற்றத் திற்குத் தேவையான மூலதனத்தை வேளாண்மைத் துறையைச் சார்ந்தவர்கள் குறைவாகவே தருகின்றனர். இந்த நிலையை மாற்றி வேளாண்மைத் துறையினின்றும் அரசு வரி விதிப்பின் மூலம் அதிக நிதியைத் திரட்டவேண்டும். இதுவே, விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்கான சிறந்த வழியாகும். திட்டங்களின் மூலம் நன்மை யடைந்தவர்களிட மிருந்து கணிசமான நிதியை வரி விதிப்பின்மூலம் பெறுவது தவறாகாது.

சராசரி வரி வீதங்கள்: வரிச் சுமையை மேலும் நன்குணர வேளாண்மைத் துறை, வேளாண்மையல்லாத துறை ஆகியவற்றின் மீதான சராசரி வரி வீதங்களை ஆராய்வது அவசியமாகின்றது. பின்வரும் அட்டவணை அதைத் தெளிவாக்கும்.

**வேளாண்மைத் துறையிலும் வேளாண்மையல்லாத துறையிலும் சராசரி வரி வீதங்கள்**[1]

| ஆண்டு | வேளாண்மைத் துறை | | வேளாண்மையல்லாத துறை | |
|---|---|---|---|---|
| | தலா வரிகள் (ரூபாயில்) | தலா வருமானத்தின் வரிகள் வீதம் | தலா வரிகள் (ரூபாயில்) | தலா வருமானத்தின் வரிகளின் வீதம் |
| 1951—52 | 8.0 | 3.8 | 41.8 | 9.5 |
| 1955—56 | 9.5 | 5.4 | 38.4 | 8.9 |
| 1960—61 | 13.4 | 5.6 | 68.9 | 13.0 |

மேலே குறிப்பிட்டுள்ள அட்டவணையிலிருந்து வேளாண்மைத் துறையிலும், வேளாண்மையல்லாத துறையிலும் வருமானங்களின்மீதான தலா வரிகள் அதிகரித்து வருவதை உணரலாம். இரு துறைகளிலும் தலா வருமானத்தின்மீதான வரிகளின் வீதமும் அதிகரித்துள்ளது. வேளாண்மைத் துறையில் தலா வருமானத்தின் மீதான வரிகளின் வீதம் 1951—52-ல் 3.8 என்ற நிலையில் இருந்தது; இது 1960—61-ல் 5.6 என்ற அளவிற்கு உயர்ந்து விட்டது. இதைப் போன்றே வேளாண்மையல்லாத துறையில் தலா வருமானத்தின்மீதான வரிகளின் வீதம் 9.5 என்ற நிலையிலிருந்து 13.0 என்ற அளவிற்கு அதிகரித்தது. ஆனால், வேளாண்மைத்துறை தலா வருமானத்தில் 5.6 சதவீதத்தை வரிகளாகச் செலுத்தும்போது, வேளாண்மையல்லாத துறை 13.0 சதவீதத்தை வரிகளாக அளிக்கின்றது. வேளாண்மைத்துறை வேளாண்மையல்லாத துறை செலுத்தும் வரிகளைவிட மிகக் குறைந்த அளவிலேயே வரிகளைச் செலுத்துகின்றது.

**இறுதிநிலை வரி வீதங்கள்:** சராசரி வரிவீதங்களைவிட இறுதி நிலை வரிவீதங்கள் முக்கிய நிலையைக் கொண்டனவாக இருக்கின்றன.

$$\text{இறுதிநிலை வரிவிதிப்பு வீதம்} = \frac{\text{குறிப்பிட்ட காலத்தில் அதிகரித்த வரிவிதிப்பு}^{2}}{\text{குறிப்பிட்ட காலத்தில் அதிகரித்த வருமானம்}}$$

1 Source: Ved P. Gandhi, Tax Burden on Indian Agriculture, p. 56.

2 $$\text{Marginal Rate of Taxation} = \frac{\text{Additional Taxation during a given Period}}{\text{Additional Income during a given Period}}$$

1950—51 ஆம் ஆண்டிற்கும் 1960—61 ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் வேளாண்மைத்துறையின் வருமானம் ரூ. 1717 கோடி அதிகரித்தது; ஆனால், இதே காலத்தில் வேளாண்மைத் துறையின்மீதான அதிகரித்த வரிவிதிப்பு ரூ. 193 கோடியாகும்.

இந்தக் கணக்கெடுப்பைச் செய்தவர், டாக்டர் வி.பி. காந்தி ஆவார். இதில் வரிவிதிப்பின் இறுதி நிலை வீதம் 11.5 சத வீதமாக உள்ளது. மற்றொருபுறத்தில் வேளாண்மையல்லாத துறையின் வருமானம், இதே காலத்தில் ரூ. 2,420 கோடியாக உயர்ந்தபோது அதிகரித்த வரிவிதிப்பு ரூ. 499 கோடியாக இருந்தது. இறுதி நிலை வரிவிதிப்பு வீதம் 20.6 சதவீதமாக இருந்தது. வேளாண்மையல்லாத துறையின் இறுதிநிலை வரி விதிப்பு வீதம் வேளாண்மைத் துறையின் இறுதிநிலை வரிவிதிப்பு வீதம் வேளாண்மைத்துறையின் இறுதிநிலை வரிவிதிப்பு வீதத்தை விடச் சுமார் இரு மடங்கு அதிகமாக இருப்பது குறிப்பிடத்தக்க தாகும். இதிலிருந்து பொருளாதார முன்னேற்றத்திற்குத் தேவையான மூலதனத்தைப் பெற வேளாண்மையல்லாத துறையின்மீதே அதிக வரிவிதிப்புச் செய்யப்படுவதை அறியலாம்.

அதிக வருவாய், குறைந்த வருவாய் பெறுகின்ற வகுப்பினர் களிடையே இறுதிநிலை வரிச்சுமை எவ்வாறு அமைந்துள்ளது என்பதையும் டாக்டர் வி. பி. காந்தி ஒப்பிடுகின்றார். வேளாண் மைத்துறை, வேளாண்மையல்லாத துறை ஆகியவற்றின் வெவ் வேறு வருமானப் பிரிவைச் சார்ந்தவர்களிடையே வரிச்சுமை எவ்வாறு இருக்கின்றது என்பதை விளக்குகின்றார். முன்னமேயே குறிப்பிட்டபடி வேளாண்மைத் துறையின்மீதான இறுதிநிலை வரிவிதிப்பு வீதம் 11.5 சதவீதமாகும்; ஆனால், அதிக வருமானத் தைப் பெறுபவர்களின்மீதான இறுதிநிலை வரிச்சுமை 7 சதவீதம் மட்டுமேயாகும். இது குறைந்த வருமானத்தைப் பெறுபவர்களின் மீதான இறுதிநிலை வரிச்சுமை உயர்வானது என்பதையும் உணர்த்துகின்றது. இறுதிநிலை வரிச்சுமை தாழ்ந்த வருமானத் தைப் பெறுபவர்களின்மீது சுமார் 12 அல்லது 13 சதவீதம் என்ற அளவிற்கு அமைந்துள்ளது.

இதைப்போன்றே, வேளாண்மையல்லாத துறையில் வரி விதிப்பின் இறுதிநிலைச் சுமை 20.6 சதவீதமாக இருக்கும்போது, அதிக வருமானத்தைப் பெறுபவர்களின்மீதான இறுதிநிலை வரிச் சுமை 13 சதவீதமாக அமைகின்றது. வேளாண்மையல்லாத

துறையின் குறைந்த வருமானத்தைப் பெறுபவர்கள், வரிவிதிப்பின் இறுதி நிலைச் சுமையில், 23 முதல் 24 சதவீதத்தை ஏற்கின்றனர்.

பின்வரும் அட்டவணை மொத்த வருமானங்களில் வரிகளின் சதவீதத்தை உணர்த்துவதாக உள்ளது. கிராமத் துறைக்கும், நகரத் துறைக்கும் இடையே வரிச்சுமையின் நிலைப்பாடு எவ்வாறு அமைகின்றது என்பதை இந்த அட்டவணையின் மூலம் அறியலாம்.

மொத்த வருமானங்களில் வரிகளின் சதவீதம்[1]

| ஆண்டுக் குடும்ப வருமானம் | ரூ. 12 முதல் ரூ. 600 வரை | ரூ. 601 முதல் ரூ. 1200 வரை | ரூ. 1201 முதல் ரூ. 1800 வரை | ரூ. 1801 முதல் ரூ. 3000 வரை | ரூ. 3001 முதல் ரூ. 5000 வரை | 5000 ரூபாய்க்குக் குறைவாகச் சராசரிச் செலவு |
|---|---|---|---|---|---|---|
| கிராமக் குடும்பம் | 3.2 | 4.1 | 4.5 | 5.0 | 6.6 | 4.6 |
| நகரக் குடும்பம் | 3.0 | 4.4 | 5.1 | 5.1 | 9-8 | 7.2 |

கிராமக் குடும்பம், நகரக் குடும்பம் ஆகிய இரண்டிற்குமிடையே வரிச்சுமையின் நிலைப்பாட்டை ஆராயும்போது சில உண்மை நிலைகள் வெளிப்படுகின்றன. ஆண்டொன்றுக்கு 3000 ரூபாய்க்குக் குறைவாக வருமானம் பெறுபவர்களின்மீது அதிக வரிவிதிப்பைச் செய்வதற்கான வாய்ப்புக் குறைவாகவே உள்ளது. ஏனெனில், நகரக் குடும்பத்தினரைப் போலவே கிராமக் குடும்பத்தினரும் ஏறத்தாழ ஒரே வரி வீதத்தை அளிக்கின்றனர். வரி விதிப்புக் கொள்கையின் 'சமத்துவ விதி' பின்பற்றப்படவேண்டுமென்றால், ஆண்டொன்றுக்கு 3000 ரூபாய்க்குக் குறைவாக வருமானம்பெறும் குடும்பத்தினர்மீது அதிக வரிகளை மேலும் விதிக்கக் கூடாது. ஆனால், 3000 ரூபாய்க்கு அதிகமாக வருமானத்தைப்பெறும் கிராமக் குடும்பத்தினர்மீது அதிக வரிவிதிப்பைச் செய்யலாம். ஏனெனில், அவர்கள் தங்களுடைய மொத்த வருமானத்தில் சுமார் 6.6 சதவீதத்தை மட்டுமே வரிகளாகச் செலுத்துகின்றனர். மேலும், அதே வருமானத்தைப் பெறுகின்ற நகரக் குடும்பத்தினர் மொத்த வருமானத்தில் சுமார் 9.8 சதவீதத்தை வரிகளாக அளிக்கின்றனர்.

ஆண்டொன்றுக்கு 5,000 ரூபாய்க்கு அதிகமான வருமானத்தைப்பெறும் நகரக் கிராமக் குடும்பங்களைப்பற்றி அறிவதும் அவசிய

1 Source: Savya Sachi, Economic and Political Weekly, May 25, 1968

மாகிறது. 5,000 ரூபாய்க்கு அதிகமான வருமானத்தைப்பெறும் கிராமக் குடும்பத்தினரின் மீது வரிச்சுமை மிகக் குறைவாகவே இருக்கிறது. அதே வருமானத்தைப் பெறும் நகரக் குடும்பத்தினர் உயர்ந்த அளவில் பல வகைப்பட்ட நேர்முக, மறைமுக வரிகளைச் செலுத்துகின்றனர். இதற்கு முக்கியமான இரண்டு காரணங்களைக் குறிப்பிடலாம்.

1. நகர வருமானங்களின்மீது விதிக்கப்படுகின்ற தனியார் வருமான வரி வளர்வீதத்தில் அமைந்துள்ளது.

2. பல கிராமக் குடும்பங்கள் வேளாண்மை வருமான வரி அளிப்பதில்லை. பல மாநில அரசுகளும் வருமான வரி முறையைச் சிறப்பாகச் செயல்படுத்துவதில்லை. இதைத் தவிர, வேளாண்மை வருமானவரி பெரும்பாலும் பெரிய தோட்டப் பண்ணைகளின்மீது மட்டுமே விதிக்கப்படுகின்றது.

எனவே, சமத்துவ அடிப்படையில் நோக்கும்போது, ஆண்டொன்றுக்கு 3000 ருபாய்க்கு அதிகமான வருமானத்தைப்பெறும் கிராமக் குடும்பங்களின்மீது அதிக வரி விதிப்பைச் செய்யலாம் என்பது புலப்படும். இதற்கு அதிகமாக வருமானத்தைப் பெறுபவர்கள்மீது புதிய வளர்வீத வரிகளை விதிக்கலாம்; பழைய வரி வீதங்களை உயர்த்தலாம்.

இந்தியாவில் வேளாண்மை வரி விதிப்பின் சுமையைப் பின்வருமாறு மதிப்பீடு செய்யலாம்.

1. பொதுவாக, வேளாண்மையல்லாத துறையைவிட வேளாண்மைத்துறை, குறைந்த வரிச்சுமையை ஏற்பதாகவே இருக்கின்றது.

2. இரு துறைகளிலும் அதிக வருமானத்தைப் பெறுபவர்களின்மீது வரிச்சுமை குறைவாகவே உள்ளது.

3. வேளாண்மை வரிவிதிப்பைப் பெருக்குவதற்கான வாய்ப்புகள் ஏராளமாக இருக்கின்றன. குறிப்பாக, உயர்ந்த வருமானத்தைப் பெறும் வகுப்பினரின்மீது அதிக வரிகளை விதிக்கலாம்.

### இந்தியாவில் வேளாண்மை வரிவிதிப்புக் குறைவானதா?

வேளாண்மை வரிவிதிப்பின் சுமைபற்றிய சிக்கல் முன்னமேயே ஆராயப்பட்டது. அதன்மூலம் வேளாண்மைத் துறையின் மீதான வரிச்சுமை குறைவானது என்பது அறியப்பெற்றது. புதிய

வரிகளை விதிப்பதற்கான வாய்ப்புகள் வேளாண்மைத் துறையில் அமைந்துள்ளன. இதுபற்றிய நிலைகளைச் சற்று விளக்கமாக ஆராய்வது இன்றியமையாததாகும். இந்தியாவின் பொருளாதார முன்னேற்றத்திற்கும், வேளாண்மை வரிவிதிப்பிற்கும் நெருங்கிய தொடர்பு அமைந்துள்ளது.

பல பொருளாதார நிபுணர்கள் வேளாண்மைத் துறையின்மீது போதுமான அளவிற்கு வரி விதிப்புச் செய்யப்படவில்லை என்ற கருத்தை நீண்ட காலமாகவே கொண்டுள்ளனர். இதற்கான வாதங்கள் பலவற்றையும் அவர்கள் கூறுகின்றனர்.

1. முதலாவதாக, 1950—51 ஆம் ஆண்டிலிருந்து நிலவரி, வேளாண்மை வருமான வரி முதலிய வேளாண்மையின் மீதான நேர்முக வரிகளில் எவ்வித மாற்றமும் ஏற்படவில்லை. வேளாண்மை உற்பத்தியும், வருமானமும் பல மடங்கு அதிகரித்துள்ளபோது, வேளாண்மைத் துறையின்மீதான நேர்முக வரிகளின் அளவு உயர்த்தப்படவில்லை.

2. இரண்டாவதாகப் பொருளாதார முன்னேற்றத் திட்டங்களின் மூலம் கிராமத் துறையைச் சார்ந்தவர்களின் நலன் பெருகி வருகிறது. ஆனால், அவர்கள் விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்குத் தேவையான நிதியை வரிகளின் மூலம் குறைந்த அளவிற்கே தருகின்றனர். வேளாண்மை வரிகளால் பெறப்படுகின்ற வரி வருவாயின் அளவு குறைவாகவே இருக்கின்றது.

3. மூன்றாவதாக, வேளாண்மைத் துறையினர் தங்களுடைய வருமானத்தில் சுமார் 2 சதவீதத்தை மட்டுமே நேர்முக வரிகளாக அளிக்கின்றனர். 1950—51 ஆம் ஆண்டிலிருந்து இதில் எவ்வித உயர்வும் ஏற்படவில்லை.

4. நான்காவதாக, சமீப காலத்தில் சிலரிடம் அதிக அளவு நிலவுடைமைகள் அமைந்துள்ள நிலை அதிகரித்திருக்கின்றது. தற்பொழுது பெரும்பகுதி நிலச் செல்வத்தை ஒரு சிலரே கொண்டுள்ளனர். உதாரணமாக, சுமார் 50 சதவீத நிலவுடைமையாளர்கள் மொத்த நிலவுடைமைகளின் பரப்பில் 6 சதவீதத்திற்கும் குறைவாகவே பெற்றுள்ளனர். மற்றொரு புறத்தில், மொத்த நிலவுடைமையாளர்களில் அரை சதவீதத்தினர் 11 சதவீதத்திற்கும் அதிகமான நிலப்பரப்பை உடைமையாகக் கொண்டிருக்கின்றனர். வேளாண்மைத் துறையின் மேட்டுக் குடியினர் குறைந்த அளவு

வரிச்சுமையைமட்டுமே ஏற்கின்றனர். ஏனெனில், அவர்கள் அளிக்கின்ற நிலவரி 'வீதாச்சார முறையில்' அமைந்துள்ளது. அவர்களில் பலர் வேளாண்மை வருமான வரியையும் செலுத்துவதில்லை.

5. இறுதியாக, பெரும்பாலான விவசாயிகள் குறைந்த வருமானத்தைப் பெற்றாலும் ஓரளவு சேமிக்கும் திறனையும் அவர்கள் கொண்டுள்ளார்கள். கிராமக் குடும்பத்தினரிடையே உயர்வான நுகர்வின் வீதம் அமைந்துள்ளது. அவர்களுடைய நுகர்வைக் கட்டுப்படுத்தி நிதியைத் திரட்ட வரிவிதிப்பு அவசியமாகின்றது. 'தேசிய மாதிரிக் கணக்கெடுப்பு' (National Sample Survey), கிராமக் குடும்பத்தினரின் நுகர்வுச் செலவின் அளவு 10.36 சதவீதம் என்று மதிப்பிட்டுள்ளது. மதச் சடங்குகள், திருவிழாக்கள் போதைப் பொருள்கள் முதலியவற்றுக்காகக் கிராம மக்கள் அதிக செலவுகளைச் செய்கின்றனர்கள். அவர்களுடைய கேளிக்கைச் செலவும் மிகுதியாக இருக்கின்றது.

இவ் வுண்மைகளின் மூலம் வேளாண்மைத் துறையின் மீது குறைந்த அளவிற்கே வரிகள் விதிக்கப்படுகின்றன என்பதை உணரலாம். இத் துறையின் மீது அதிக வரிகளை வளர்வீதத்தில் விதிக்கும்படி பொருளியலறிஞர்கள் வலியுறுத்துகின்றனர்.

வேளாண்மை யல்லாத துறையோடு ஒப்பிடுவதன்மூலமும் வேளாண்மைத் துறையின்மீதான குறைந்த வரிவிதிப்புச் சுமையை அறியலாம். இரு துறைகளுக்கும் இடையேயான வரிச் சுமை பற்றிய நிலைகள் முன்னமேயே ஆராயப்பட்டன; சராசரி வரிவிதிப்பு வீதம், இறுதிநிலை வரி விதிப்பு வீதம், வரிவிதிப்பின் மொத்த நிலைபாடு, வரிவிதிப்பின் நிகர நிலைப்பாடு ஆகியன அறியப்பட்டன. இவை யாவற்றையும் ஒப்பிட்டு நோக்குவதன் மூலம் வேளாண்மைத் துறையின்மீது குறைந்த அளவிற்கு மட்டுமே வரிகள் விதிக்கப்படுகின்றன என்பதை உணரலாம். எனவே, வேளாண்மைத் துறையை அதிக வரிச்சுமையை ஏற்கு மாறு செய்வது மத்திய அரசு, மாநில அரசுகள் ஆகியவற்றின் கடமையாகும்.

இந்தியாவில் வேளாண்மை வரிவிதிப்பை அதிகரிக்க வேண்டும் என்பதற்குச் சாதகமான மற்றொரு முக்கியக் கருத்தும் கூறப்படுகிறது. இக் கருத்துக் கிராமச் சமுதாயத்தின் சேமிப்பு பற்றியதாக உள்ளது. உயர்வீத சேமிப்பும், மூலதனத் திரட்சியும்

விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்கான முக்கியத் தேவையாக இருக்கின்றது. பொருளாதாரத்தை விரிவடையச் செய்யவும் அதிக மூலதனம் தேவைப்படுகின்றது. இக்கருத்தை மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தின் அடிப்படையில் விளக்கலாம். மூன்றுவது திட்டக் காலத்தில் சராசரி ஆண்டு வளர்ச்சியை 7 சதவீதம் என்ற அளவிற்குப் பெறவேண்டும் என்ற குறியிலக்கைத் திட்டக்குழு நிர்ணயித்தது. இவ் வளர்ச்சி வீதத்தைப்பெற 'உள்நாட்டுச் சேமிப்பு' (Domestic Savings) தேசிய வருமானத்தில் 11.5 சதவீதமாக அமையவேண்டும். ஆனால், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் உள்நாட்டுச் சேமிப்பின் அளவு மிகக் குறைவாக இருந்தது குறிப்பிடத்தக்கதாகும். மூன்றுவது திட்டக்காலத்தின் உண்மையான சேமிப்பு வீதம் கிராமக் குடும்பங்களுக்கிடையே சுமார் 2.6 சதவீதமாகவும் நகரக் குடும்பங்களுக்கிடையே சுமார் 14 சதவீதமாகவும் இருந்தது. இவற்றின் சராசரி சேமிப்பு வீதம் 5.8 சதவீதம் என்ற அளவில் இருந்தது.

மூன்றுவது திட்டக்காலத்தில் கிராம மக்களின் சேமிப்பு வீதம் நகர மக்களின் சேமிப்பு வீதத்தைவிட மிகவும் குறைவாக இருந்தது. நம் நாட்டில் உள்நாட்டுச் சேமிப்பின் அளவைப் பெருக்க வேளாண்மைத் துறையையே எதிர்பார்க்க வேண்டியுள்ளது. தொழில், வாணிபம் முதலிய துறைகளிலிருந்து கணிசமான மூலதனத் திரட்சி சேமிப்பின்மூலம் பெறப்படுகின்றது. நகர மக்களில் பெரும்பாலோர் சேமிக்கும் பழக்கத்தைக் கொண்டுள்ளார்கள். வருமானம் உயரும்போதும் கிராம மக்கள் சேமிப்பதில்லை. எனவே, கட்டாயச் சேமிப்பை அவர்களிடமிருந்து பெற வரி விதிப்பே சிறந்த முறையாகும்.

மேலே குறிப்பிடப்பட்ட காரணங்களால் வேளாண்மைத் துறையின்மீது அதிக வரி விதிப்பைச் செய்வது தவிர்க்க முடியாததாகின்றது. 'தோற்றத் திட்டப் பிரிவு' (Perspective Planning Division), நிலவரியின்மீது கூடுதல் வரிகளை விதிக்கலாம் என்று பரிந்துரைத்தது. வேளாண்மை விளைபொருள்களின்மீது வரிகளை விதிக்கலாம் என்றும் அது கருத்துத் தெரிவித்தது. மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் இவ் வழிமுறைகளைப் பின்பற்றுவதன்மூலம் உள்நாட்டுச் சேமிப்பின் அளவைக் கூட்ட முடியும் என்ற கருத்து நிலவியது. நிதிவசதியைப் பெருக்கிக் கொள்ள மாநில அரசுகள் இவற்றில் சில முறைகளைக் கைக்கொண்டன.

**அதிக வரி விதிப்பிற்கான முறைகள்**

வெவ்வேறு வழிகளில் வேளாண்மைத் துறையின்மீது அதிக வரிகளை விதிப்பதற்கான ஆலோசனைகள் பொருளியலாளர்களால் தரப்பட்டன. திட்டக் குழுவும் மாநில அரசுகளுக்கு நன்மை யளிக்கக்கூடிய வரி முறைகளைப் பரிந்துரைத்தது. இவ் வரி விதிப்பு ஆலோசனைகள் முக்கியமான மூன்று நோக்கங்களைக் கொண்டன வாக இருந்தன.

1. வேளாண்மைத் துறையின் விற்பனை உபரியைப் பெருக்குவது; முதலீடு செய்வதற்குத் தேவையான நிதியை அதிக அளவிற்குத் திரட்டுவது;

2. வேளாண்மை உற்பத்தியைப் பெருக்குவதற்கான ஊக்கத்தை அளிப்பது;

3. வேளாண்மை வரி விதிப்பில் வளர்வீத வரி முறையைப் பின்பற்றி அதில் சமத்துவ நிலையைத் தோற்றுவிப்பது.

வேளாண்மை வரி விதிப்பின் இவ்வகை நோக்கங்களை நிறை வேற்றுவதற்கு நிலவரியின்மீது வளர்வீதத்தில் கூடுதல் வரியும், வாணிபப் பயிர்கள் உற்பத்தியாகின்ற பகுதிகளில் கூடுதல் வரியும், வாணிபப் பயிர்களின்மீது விற்பனை வரியும், கால்நடை வரியும் விதிக்கப்படலாம் என்று 'தோற்றத் திட்டப் பிரிவு' குறிப்பிட்டது. சில பொருளியலறிஞர்கள் நிலவரியின் அளவை வளர்வீதத்தில் உயர்த்த வேண்டுமென்று குறிப்பிடுகின்றனர். தற்பொழுதுள்ள நிலவரியின் அளவு மிகவும் தாழ்வானதென்பது யாவரும் அறிந்ததே யாகும். நிலவரியால் சிறிய நிலவுடைமையாளர்கள் பாதிக்கப்படு வதையும் அவர்கள் சுட்டிக் காட்டுகின்றார்கள். நிலவரி முறையை நீக்கி வளர்வீத வேளாண்மை வருமான வரி முறையைப் பின்பற்ற வேண்டுமென்பது அவர்களுடைய சிறப்பான கருத்தாக உள்ளது.

நகர்ப் புறங்களில் அமைந்திருக்கக்கூடிய பொது வருமான வரி முறையைப் போன்று வேளாண்மை வருமான வரிமுறை அமைய வேண்டும். நீண்ட காலத்தில் இவ்விரு வரி முறைகளும் ஒருங் கிணைக்கப்படவேண்டும். சில மாநிலங்களில் நிலவரி முழுமையாக நீக்கப்பட்டது; வேறு சிலவற்றில் சிறிய நிலவுடைமைகளுக்கு நிலவரியினின்றும் விலக்களிக்கப்பட்டது. இந்தியாவில் மத்திய அரசு தீவிரக் கொள்கைகளைக் கொண்டிருந்தாலும், சிறப்பான ஒத்துழைப்பு, மாநில அரசுகளிடமிருந்து கிடைக்காத காரணத் தால், முன்னேற்றத் திட்டங்களில் வெற்றியைப் பெற முடியவில்லை.

இதற்கு உதாரணமாக நிலச் சீர்திருத்தங்களைக் குறிப்பிடலாம். நிலவுடைமைகளின் உச்ச வரம்புபற்றிய தெளிவான கொள்கையை மத்திய அரசு கொண்டுள்ளது. எனினும், மாநில அரசுகளின் ஒத்துழைப்பு இல்லாமையால் விரைவாக நிலச் சீர்திருத்தங்களைக் கொண்டு வர முடியவில்லை.

**நிலவரியின் மீதான வளர்வீதக் கூடுதல் வரிகள்**

'தோற்றத் திட்டப் பிரிவு' நிலவரியின் மீதான வளர்வீதக் கூடுதல் வரி பின்வருமாறு அமையவேண்டுமென்று குறிப்பிட்டது.

**நிலவரியின் மீது விதிப்பதற்குத் திட்டமிடப்பட்ட கூடுதல் வரி**[1]

| நிலவரி (அமைப்பு-Slab) | | கூடுதல் வரி சதவீதம் |
|---|---|---|
| முதல் 7 ரூபாய் | ... | — |
| அடுத்த 5 ரூபாய் | ... | 40 |
| அடுத்த 5 ரூபாய் | ... | 80 |
| அடுத்த 5 ரூபாய் | ... | 120 |
| அடுத்த 5 ரூபாய் | ... | 160 |
| அடுத்த 5 ரூபாய் | ... | 200 |
| .................... | ... | ... |

இவ் வரிமுறையின்படி 7 ரூபாய்க்குக் குறைவான நிலவரியைச் செலுத்தும் சிறிய நிலவுடைமையாளர்களின்மீது கூடுதல் வரி விதிக்கப்படமாட்டாது. அதற்கு அதிகமாக நிலவரி செலுத்துபவர்கள் நிலவரியின் அளவில் 40 சதவீதம் கூடுதல் வரியையும் சேர்த்துச் செலுத்தவேண்டும். கூடுதல் வரி வளர்வீதத்தில் அதிகரித்துக்கொண்டே செல்லும், நிலவரியின் அதிகரிக்கின்ற ஒவ்வோர் அமைப்பிலும், கூடுதல் வரியைச் செலுத்துவதும் வளர்ந்து செல்கிறது. இரண்டாவது நிலவரி அமைப்பில் நிலவரியில் 40 சதவீதம் கூடுதல் வரியாகச் செலுத்தப்படவேண்டும்; ஆறுவது நிலையில் 200 சதவீதம் கூடுதல் வரியாக அளிக்கப்படவேண்டும். இவ்வாறு வளர்வீத முறையை நிலவரியில் பின்பற்றலாம் என்று 'தோற்றத் திட்டப் பிரிவு' பரிந்துரைத்தது. இதன்

1 Source: Economic and Political Weekly, 25th May, 1968.

மூலம் ஆண்டொன்றுக்கு மாநில அரசுகள் ரூ. 140 கோடி வருமானமாகப் பெறலாம் என்று மதிப்பிடப்பட்டது.

நிலவரியின்மீது விதிப்பதற்குத் திட்டமிட்ட கூடுதல் வரி பற்றிய இரு நிலைகள் ஆராயப்படவேண்டும்.

1. முதலாவதாக, பல மாநிலங்களிலும் நிலவரி நீக்கப்பட்டு வருவதால், கூடுதல் வரியின்மூலம் மாநில அரசுகள் வருமானத்தைப் பெருக்க முடியாது.

2. இரண்டாவதாக, நிலவரியின் மீதான திட்டமிடப்பட்ட கூடுதல் வரியின் மூலம் உண்மையான வளர்வீத வரிமுறையைப் பெற இயலாது.

இம் முறையில் அமைந்துள்ள முக்கியக் குறைபாட்டைச் சாவ்யா சச்சி[1] குறிப்பிடுகின்றார். மிக அதிக வருமானத்தைப் பெறுகின்ற பெரிய நிலவுடைமையாளர்கள் உயர்வாகக் கூடுதல் வரியை அளிக்கமாட்டார்கள் என்பதையும் அவர் உணர்த்துகிறார்.

குறைந்த வருமானம் பெறுபவர்களின்மீதே இது வளர்வீத வரி முறையாக அமையும். ஆண்டு வருமானம் 5,000 ரூபாய்வரை பெறுபவர்களின் மீதுதான் இது வளர்வீத வரியாக இருக்கும். 5,000 ரூபாய்க்கு அதிகமான வருமானங்களில் இது தேய்வு வீத வரியாகவே அமையும். உதாரணமாக, 5,000 ரூபாயை ஆண்டு வருமானமாகப் பெறும் ஒரு கிராமக் குடும்பம் அதன் வருமானத்தில் சுமார் 13 சதவீதத்தை வரிகளாக அளிக்கவேண்டி வரும். ஆனால், ஆண்டொன்றுக்கு 5,000 ரூபாய் முதல் ரூ. 10,000 வரை வருமானத்தைப்பெறும் ஒரு வேளாண்மைக் குடும்பம் அதன் வருமானத்தில் சுமார் 10 சதவீதத்தை மட்டுமே வரிகளாக அளிக்கவேண்டிய நிலை இருக்கும். இதன் காரணமாக, இவ் வரி முறையை உண்மையான வளர்வீத நிலையைக்கொண்டது என்று கூறவியலாது.

## வாணிபப்பயிர்கள் உற்பத்தியாகின்ற இடங்களின் மீதான கூடுதல் வரி (Surcharge [redacted] Area under Commericial Crops)

இவ் [redacted] வரி முறையைப் பின்பற்றலாம் என்ற கருத்தையும் 'தோற்றத் திட்டப் பிரிவே' குறிப்பிட்டது. வாணிபப் பயிர்களை உற்பத்தி செய்கின்ற இடங்களின்மீது கூடுதல் வரியை விதிப்பதன்

[1] Savya Sachi, Economic and Political Weekly, 25th May, 1968.

மூலம் ஆண்டொன்றுக்கு ரூ. 12 கோடி வருமானமாகப் பெறலாம் என்று மதிப்பிடப்பட்டது. வாணிபப் பயிர்களை உற்பத்தி செய்வதன்மூலம் விவசாயிகள் ஓர் ஏக்கரிலிருந்து அதிக வருமானத்தைப் பெறமுடியும். உணவுத் தானியங்களை ஓர் ஏக்கரில் பயிரிட்டுப் பெறக்கூடிய வருமானத்தைவிட இஃது அதிகமாக இருக்கும், இந்த அடிப்படையில்தான் இவ் வரி பரிந்துரைக்கப்பட்டது. இவ் வரிமுறையைப் பின்பற்றுவதற்கு முன்னர், இரு [redacted] நிலைகள் கவனமாக ஆராயப்படுதல் வேண்டும்.

முதலாவதாக, இவ்வரி விதிப்பு வாணிபப் பயிர்களின் உற்பத்தியைப் பாதிக்கக் கூடாது. அதிக வரி விதிப்பினால் விவசாயிகள் வாணிபப் பயிர்களை உற்பத்தி செய்வதற்குப் பதில் உணவுத் தானியங்களை உற்பத்தி செய்யக்கூடும்.

2. இரண்டாவதாக, கூடுதல் வரி அதிக வருமானத்தைத் தரக்கூடிய நிலங்களின்மீது மட்டுமே விதிக்கப்படவேண்டும். வாணிபப் பயிர்கள் உற்பத்தியாகின்ற சில இடங்களில் ஓர் ஏக்கரின்மூலம் பெறப்படுகின்ற வருமானத்தின் அளவு குறைவாக இருப்பதுண்டு. ஓர் ஏக்கருக்கான சராசரி வருமானத்தைவிட கணிசமான அளவில் அதிக வருமானத்தைத் தருகின்ற நிலங்களின்மீதே கூடுதல் வரி வசூலிக்கப்படவேண்டும்.

**வாணிபப் பயிர்களின் மீதான வாங்குதல் வரிகள் (Purchase Taxes on Commercial Crops)**

'தோற்றத் திட்டப் பிரிவு' வாணிபப் பயிர்களின்மீது வாங்குதல் வரிகளை விதிக்கவும் பரிந்துரைத்தது. பருத்தி, சணல், கரும்பு, எண்ணெய் வித்துகள், புகையிலை முதலிய வாணிபப் பயிர்களின்மீது வாங்குதல் வரிகளை விதிக்கலாம் என்று அது குறிப்பிட்டது. இவ் வகை வரிகளை விதிக்கும்போது பின்வரும் நிலைகளை நன்கு கருதுவது அவசியமாகின்றது.

1. வாங்குதல் வரிகளை நிர்வகிப்பது கடினமானதாக இருக்கும்; ஆனால், நீண்ட காலத்தில் அனுபவத்தின்மூலம் சிறப்பான நிர்வாகத்தைப் பெறலாம்.

2. பெரும்பாலான வாணிபப் பயிர்கள் தொழில் துறையின் கச்சாப் பொருள்களாக இருக்கின்றன. வாணிபப் பயிர்களின்மீது வாங்குதல் வரியை விதித்தால் தொழில் பொருள்களின் உற்பத்திச் செலவு அதிகரிக்கும். இறுதியாக, இவ் வரியின் நிலைப்பாடு நுகர்வோர்மீது மாற்றப்படும். தாங்கள் அளித்த வாங்குதல் வரியை உற்பத்தியாளர்கள் பொருள்களின் விலையை உயர்த்தி

ஈடுசெய்து விடுவார்கள். இவ் வரியின்மூலம் நுகர்வோரின் நலன் பாதிக்கப்படும். உற்பத்தியாளர்கள் தங்களுடைய இலாபத்தின் அளவை இழக்க மாட்டார்கள்.

3. வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்ற பொருள்களின் விலைகள் இதனால் அதிகரிக்கக்கூடும். விலைகளின் உயர்வால் இப் பொருள்கள் அயல் நாட்டுச் சந்தைகளில் பிற நாடுகளின் பொருள்களோடு போட்டியிட முடிவதில்லை. இதன் காரணமாக வெளிநாட்டு வாணிபத்தில் பாதகச் செலுத்து இருப்பு நிலை தோன்றக்கூடும். மேம்பாடடைந்துவரும் இந்தியா முதலிய நாடுகள் ஏற்றுமதியைப் பெருக்குவது இன்றியமையாததாக இருக்கின்றது.

வாணிபப் பொருள்களை ஏற்றுமதி செய்து இந்த நாடுகள் தொழில் முன்னேற்றத்திற்குத் தேவையான 'மூலதனப் பொருள்களை' (Capital goods) இறக்குமதி செய்கின்றன. வளரும் பொருளாதாரத்தின் ஏற்றுமதி அளவு வாணிபப் பயிர்களின் மீதான வாங்குதல் வரிகளால் பாதிக்கப்படக்கூடாது.

4. விவசாயிகளின்மீதும், கிராமக் குடும்பங்களின்மீதும் வாங்குதல் வரிகளின் சுமை நிலைப்பாடு கொள்கின்றது. நிலவரி, நிலவரியின்மீதான கூடுதல் வரி, வேளாண்மை வருமான வரி முதலியவற்றோடு வாங்குதல் வரிகளின் சுமையையும் ஏற்பது வேளாண்மைத் துறையினருக்குக் கடினமாக இருக்கும். இதனால், வேளாண்மைத் துறையின்மீதான வரி விதிப்பின் அளவு மிகவும் உயர்ந்த அளவை அடையும். இதன்மூலம் சமத்துவமற்ற வரி முறையே ஏற்படும்.

கால்நடைகள்மீது வரிகளை விதிக்கலாம் என்பது மற்றொரு கருத்தாக அமைந்துள்ளது. ஆண்டுதோறும் சொத்துகளின் மீது வரிகள் விதிக்கப்படவேண்டுமென்பது பிற பொருளியலாளர்களின் பிறிதொரு சிறப்பான பரிந்துரையாக இருக்கின்றது.

**நிறைவுரை**

வேளாண்மைத் துறையின்மீது புதிய முறை வரியைப் பின்பற்ற வேண்டுமென்ற கருத்துப் பொதுவாகப் பல பொருளியலாளர்களிடையேயும் நிலவுகின்றது. இந்திய வேளாண்மையின்மீது குறைந்த வரிச் சுமையே பொருந்தியுள்ளது. வரி விதிப்பைப் பெருக்குவதற்கான வாய்ப்புகள் நம் நாட்டின் வேளாண்மையில் ஏராளமாக இருக்கின்றன.

அதிக வருமானத்தைப் பெறுகின்ற விவசாயிகள் பலர் உள்ளனர். அவர்களின்மீது வளர்வீத வரிகளை விதிப்பது அவ்சிய மாகும். எனினும், வேளாண்மையின்மீது அதிக வரிகளை விதிப் பதற்காகப் பரிந்துரைக்கப்படும் முறைகளில் சில குறைபாடுகள் இருக்கின்றன. அக் குறைபாடுகளைக் களைந்து சிறப்பான வேளாண்மை வரி விதிப்பு முறையைப் பின்பற்றுவது இன்றியமை யாததாகும்.

புதிதாகச் சொல்லப்படுகின்ற வேளாண்மை வரிவிதிப்பு முறைகளால் நிர்வாகச்செலவு அதிகரிக்கும் என்று கருதப்படுகிறது. அதிக நிர்வாகச்செலவு ஏற்பட்டாலும் மாநில அரசுகளின் வருவாயை உயர்த்த இம் முறைகள் உதவும். ஆனால், வெவ்வேறு வகைப்பட்ட பல வரிகளை வேளாண்மைத் துறையின்மீது விதிப்பது தவறாகும். அதனால், விவசாயிகள் அதிக வரிச் சுமையை ஏற்க வேண்டிவரும், இவ்வரிச் சுமை வேளாண்மையல்லாத துறையைக் காட்டிலும் அதிகமாக இருக்கவும் கூடும். வரிவிதிப்பு முறையில் சமத்துவ நிலை காக்கப்பட வேண்டும்.

வேளாண்மை வரிவிதிப்புமுறை சிறு விவசாயிகளின் சுமை யாக இருக்கக்கூடாது. அரசு சரியான வரிவிதிப்பு முறையைப் பின்பற்றினால், வேளாண்மை உற்பத்தியை எளிதில் பெருக்க முடியும் இதன்மூலம் வேளாண்மைப் பொருள்களின் விற்பனை உபரியையும் அதிகரிக்க இயலும். பராமரிப்பு நிலையில் இருக் கின்ற விவசாயிகளுக்கு வரியைச் செலுத்துவதினின்றும் விலக் களிக்க வேண்டும்.

அதிக செல்வத்தையும், வருமானத்தையும் கொண்ட பெரு நிலக்கிழார்களின்மீது எந்த அளவிற்கு வேண்டுமானாலும் வரிகள் விதிக்கப்படலாம். ஆனால், வரிவிதிப்பு முறை உற்பத்தியில் எதிரிடை விளைவுகளைத் தோற்றுவிக்கக் கூடாது. நிலவுடைமை யாளர்களின் முதலீடு பாதிக்கப்படாத வகையில் வரிவிதிப்பு அமைய வேண்டும்.

வருமான அடிப்படையில் வரிவிதிப்பைச் செய்வதே சமத்துவ நிலையைக் காக்க உதவும். வரிவிதிப்பின் எல்லா நன்மைகளையும் பெற அரசின் நிர்வாகம் சிறப்படைய வேண்டும். நிலச் சீர்திருத் தங்களின் மூலம் நிலவுடைமை முறைகளில் மாற்றங்களைக் கொண்டு வருதல் வரிவிதிப்பு முறையைச் செம்மைப்படுத்தும். புதிதாக வரி விதிப்பு முறைகளைப் பின்பற்றும்போது பல தடைகள் தோன்றக் கூடும். நீண்ட காலத்தில் இத் தடைகளை நீக்கி விடலாம்.

எல்லாவற்றையும்விட வரிவிதிப்பு நிர்வாகம் திறமையானதாகவும், நேர்மையானதாகவும் செயல்படவேண்டும். மக்கள் வரியைச் செலுத்துவதைத் தங்களுடைய கடமையாகக் கருதவேண்டும். எல்லாருடைய வருமானங்களின்மீதும் சமத்துவமான முறையில் வரிகள் விதிக்கப்பட்டால் வரி ஏய்ப்புகளைக் குறைக்கலாம்.

நகர்ப்புறங்களில் பொருந்தியிருக்கக்கூடிய பொது வருமான வரியைப்போன்ற வேளாண்மை வருமானவரியைக் கிராமப்புறங் களில் பின்பற்றுவது நல்லது. விரைவான பொருளாதார முன்னேற்றத்தைப் பெறுவதற்குத் தேவையான மூலதனத்தை வேளாண்மைத் துறையின்மீது அதிக வரிகளை விதித்துப் பெறுதல் வேண்டும். சமதர்மச் சமுதாயத்தை அமைக்க விரும்பும் அரசு வரி விதிப்பிலும் சமதர்மத்தைப் பின்பற்றவேண்டும். வருவாயைக் குறைந்த அளவில் பெறுகின்ற சிறு விவசாயிகளிடமும், மிக அதிக வருவாயைப் பெறுகின்ற பெரு நிலக்கிழார்களிடமும் ஒரே வீத நிலவரியை வசூலிக்கும் முறை மாறவேண்டும். வருமான அடிப் படையில் வேளாண்மை வரி விதிப்பு முறை அமைவது அவசிய மானதாகும்.

# 20. இந்தியக் குடியரசின் பதினைந்து ஆண்டுக்கால வேளாண்மைச் சீர்திருத்தங்கள்

**வெவ்வேறு சூழ்நிலைகள், வெவ்வேறு முறைகள்**

சில நாடுகளில் பொருளாதார அடிப்படையிலும், வேறு சில வற்றில் சமுதாய அடிப்படையிலும் நிலச் சீர்திருத்தங்கள் நிறைவேற்றப்பட்டன. மற்றச் சில நாடுகளில் பொருளாதார-சமுதாயக் காரணங்களால் வேளாண்மைச் சீர்திருத்தங்கள் செய்யப்பட்டன. சமுதாய அமைப்பில் உள்ள ஏற்றத்தாழ்வும், வேளாண்மையின் வேலையமைப்பு முறையும் வேளாண்மைச் சீர்திருத்தங்களை அவசியமாக்குகின்றன. வால்சந்த் நகர் முதலாளித்துவப் பண்ணை முறையைக் கொண்டு அதிக உற்பத்தித் திறனைப் பெற்றுள்ளது. நிசாமாபாத் அருகில் உள்ள வெற்றிலைத் தோட்டங்கள் சுதந்திரக் குடியரசுவ முறையில் அமைந்துள்ளன. அவை, செறிவு முறையில் உற்பத்தியைச் செய்கின்றன. தனிப்பட்டவர்களின் நிலங்கள் மிகச் சிறிய அளவில் இருக்கின்றன. மைசூரின் மால் நாடு என்ற பகுதியில் சிறிய தோட்டங்களில் பணியாற்றும் குத்தகையாளர் களும், வேளாண்மை உழைப்பாளர்களும் பொதுவாக மகிழ்ச்சி யாகவே உள்ளனர். எவ்விதப் பணியையும் ஆற்றுமல் கொள்ளை வருமானத்தைப் பெற்ற ஜமின்தார்களும், ஜாகிர்தார்களும் 1950 ஆம் ஆண்டில் அவர்களுடைய உரிமைகளை இழந்தார்கள். நிலவுடைமையாளர்களுக்கும் குத்தகையாளர்களுக்கும் நீண்ட காலமாக நிலவி வந்த கசப்புணர்ச்சியின் காரணமாகக் கேரளத்தில் 'மலபார் குத்தகைச் சட்டம்' நிறைவேற்றப்பட்டது. பொது வுடைமைவாதிகளின் புரட்சி நிலையால் கம்மம் மாவட்டத்தில் குத்தகையாளர்களுக்கு நிலத்தை வாங்கும் உரிமை தரப்பட்டது.

## நிலச் சீர்திருத்தங்களின் நோக்கங்கள்

குத்தகை முறையை ஒழுங்கு படுத்துவது, நிலவுடைமை உரிமைகளை நிர்ணயிப்பது, குத்தகையாளர்களுக்கு நிலத்தை வாங்கும் உரிமையை வழங்குவது, உபரி நிலங்களைப் பெற்று மறுபகிர்வு செய்வது, சிறு துண்டு நிலங்களை ஒருங்கிணைப்பது, கூட்டுறவுப் பண்ணைகளை ஏற்படுத்துவது, முன்னேற்றமான சாகுபடி முறைகளைப் பின்பற்றுமாறு செய்வது முதலியன நிலச் சீர்த்திருத்தங்களின் முக்கிய நோக்கங்களாக இருக்கின்றன. பிரிட்டனிலும், அயர்லாந்திலும் வேளாண்மை மக்கள் தொகையைச் சிறிய நிலவுடைமைகளில் அமர்த்துவதற்காகச் சீர்த்திருத்தங்கள் செய்யப்பட்டன. கிழக்கு ஐரோப்பிய நாடுகளில் குத்தகையாளர்களின் உரிமைகளைக் காப்பது முக்கிய நோக்கமாக இருந்தது. சோவியத் ரஷ்யாவில் கூட்டுப் பண்ணைகள் அமைக்கப்பட்டன. இந்தியாவில் மத்தியப்பிரதேசம், பம்பாய், பஞ்சாப் ஆகியவற்றில் சிறிய நிலவுடைமைகள் இணைக்கப்பட்டன. கூட்டுறவு இயக்கத்தைப் போலவே கூட்டுறவுப் பண்ணைமுறையும் இந்தியாவில் வளர்ந்திருக்கவில்லை. போட்டி நிலை நிலவும்போது கூட்டுறவு முன்னேற்றம் தடைப்படுகின்றது. கூட்டுறவுப் பண்ணைமுறை வளர்ப்பதற்கான வாய்ப்புகளும் குறைவாகவே உள்ளன. கிரேட் பிரிட்டனின் சமீப காலச் சட்டம் உற்பத்தி நடவடிக்கைகளைத் திறம்படுத்துவதை நோக்கமாகக் கொண்டுள்ளது. திறமையின்றி நிர்வகிக்கப்படும் நிலத்தை அரசு எடுத்துக்கொள்வதற்கான உரிமை இச் சட்டத்தால்பெறப்பட்டது. சாகுபடி சரியாகச் செய்யப் படவேண்டும். என்பதற்காகவே இச் சட்டம் நிறைவேற்றப் பட்டது.

## சில அடிப்படை உண்மைகள்

இந்திய வேளாண்மைப் பொருளாதாரத்தின் சில அடிப்படை நிலைகளைப்பற்றி நினைவு கூர்தல் நன்று. 1951ஆம் ஆண்டுக் கணக்கெடுப்பின்படி வாரம் பெற்றவர்கள் 2.1 சதவீதமாகவும், நிலத்தை உடைமையாகக்கொண்டு சாகுபடியில் ஈடுபட்டிருந்தவர்கள் 67.2 சதவீதமாகவும், நிலத்தை உடைமையாகப் பெற்றில்லாத சாகுபடியாளர்கள் 12.7 சதவீதமாகவும், வேளாண்மை உழைப்பாளர்கள் 18.0 சதவீதமாகவும் இருந்தார்கள். மார்ச் 1951 வரையிலும்கூட ஜமின்தாரி, ஜாகிதாரி முறைகளின் ஒழிப்பால் விளைவுகள் தோன்றவில்லை. அதன் பின்னர், வாரத்தைப் பெறுபவர்களின் எண்ணிக்கை குறையத் தலைப்பட்டது. 1964ஆம் ஆண்டிற்குள் நிலத்தை உடைமையாகக்கொண்ட சாகுபடியாளர்களின் எண்ணிக்கை அதிகரித்தது. அப்பள்ளி விவரங்களின்படி

70 சதவீதச் சாகுபடியாளர்கள் சொந்த நிலத்தில் உற்பத்தி நடவடிக்கைகளை மேற் கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு அதிகச் சலுகைகள் தேவைப்படவில்லை.

வாரத்தைப் பெறுபவர்கள் மிகக் குறைவான எண்ணிக்கையில் இருந்தார்கள். நிலச் சீர்திருத்தங்களைச் செய்யாமல் அவர்களை முழுமையாக நீக்க இயலாது. சாகுபடியைச் செய்ய முடியாத பெண்கள், வயதுக்கு வராதவர்கள், நாட்டின் பாதுகாப்புப் பணியில் ஈடுபட்டுள்ளவர்கள், ஊனமுடையவர்கள் முதலியோருக்கு நிலத்தைக் குத்தகைக்கு விடும் உரிமை அளிக்கப் படலாம். நிலத்தை உடைமையாகப் பெற்றில்லாத சாகுபடியாளர் களைக் (12.7 சதவீதம்) காட்டிலும், வேளாண்மை உழைப்பாளர் களின் (18 சதவீதம்) நிலையைத் திருத்துவது அவசியம். ஆனால், இந்திய வேளாண்மைச் சீர்திருத்தங்கள் குத்தகையாளர்களை நிலவுடைமையாளர்களாக மாற்றவேண்டும் என்பதிலேயே அதிக கவனத்தைப் பெற்றுள்ளன. அவர்களுடைய நிலையை உயர்த்து வதே முக்கியமானதாகக் கருதப்படுகின்றது. வேளாண்மை உழைப்பாளர்களின் புனரமைப்பிற்கான திட்டங்கள் குறைந்த அளவிலேயே கைக்கொள்ளப்படுகின்றன. வட இந்தியாவில் அகதிகளின் மறு வாழ்விற்கான திட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. இவை அனைத்தும் முக்கிய நிலைகளைக்கொண்டு அமைந்திருக்க வில்லை.

### ஜாகிர்தார்கள் ஒழிப்பு

நாடு விடுதலையடைந்த பின்னர், எல்லா இடங்களிலும் ஜமீன்தாரி, ஜாகிர்தாரி, முறைகள் ஒழிக்கப்பட்டன. பல மாநிலங் களிலும் இழப்பீட்டுத் தொகைகளின் வீதங்கள் மாறுபட்டிருந்தன. காஷ்மீரில் இழப்பீட்டுத்தொகை அளிக்கப்படவில்லை. பொது வாகக் கூறுமிடத்துத் தொகைகள் தாராளமாகவே தரப்பட்டன. இந்த இரண்டு முறைகளும் முழுமையாக நீக்கப்பட்டது குறிப்பிடத் தக்கதாகும். 200 லட்சம் குத்தகையாளர்களுக்கும் அரசிற்கும் இடையே நேரடித் தொடர்பு ஏற்பட்டது. இதன்மூலம் பெரிய இடைநிலையாளர்கள் ஒழிக்கப்பட்டனர். இவ்வகையில் நிறை வேற்றப்பட்ட சட்டங்கள் நடுவர்களை நீக்க உதவின. அஸ்ஸாம், தமிழ்நாடு, குஜராத், மஹாராஷ்டிரம் ஆகிய மாநிலங்களில் இருந்த சில சிறிய இடைநிலையாளர்கள் இதனால் பாதிக்கப்படவில்லை.

சாகுபடி செய்யப்படாத நிலங்கள், காடுகள். ஆகியவற்றை அரசே எடுத்துக்கொண்டது. கைப்பற்றிய இந்த நிலங்களை அரசு நேரடியாக நிர்வகித்தது; அல்லது கிராமப் பஞ்சாயத்து முதலிய

உள்ளாட்சி அமைப்பிடம் நிர்வகிக்கும் பணி ஒப்படைக்கப்பட்டது. 1961ஆம் ஆண்டில் கேரளத்தில் 'பட்டாசி தேவாஸ்வோம்களை' (Pattazhi Dewaswoms) ஒழிப்பதற்காகவும், குஜராத்தில் 'பட்டேல் வாட்டன்களை' (Patel Watans) முடிவுக்குக் கொண்டு வருவதற்காகவும், தமிழ்நாட்டில் 1936ஆம் ஆண்டின் பெரிய இனும் பண்ணைகளையும், சிறிய இனும் பண்ணைகளையும் நீக்குவதற்காகவும் சட்டங்கள் இயற்றப்பட்டன. அஸ்ஸாமில் மதநிலையங்களும், தரும நிலையங்களும் கொண்டிருந்த நிலங்களைப் பறிமுதல் செய்வதற்காகவும் சட்டம் நிறைவேற்றப்பட்டது.

நடுவர்களை ஒழிப்பதற்கான நடவடிக்கைகளை எடுப்பதில் மாநில அரசுகள் அக்கறை காட்டின. எனினும், அதற்கான இழப்பீட்டுத் தொகை அளிப்பது அவற்றுக்குப் பெரிய சிக்கலாய் இருந்தது. இழப்பீட்டுத் தொகையாகவும், புனரமைப்புக் கொடையாகவும், வட்டியாகவும், கொடுக்க வேண்டியிருந்த மொத்தத் தொகை ரூ. 640 கோடியாகும். அதில் இதுவரை பணமாகவும் கடன் பத்திரங்களாகவும் இடைநிலையாளர்களுக்கு அளிககப் பட்டுள்ள தொகை ரூ. 215.63 கோடியாகும். பின்வரும் அட்டவணை வெவ்வேறு மாநிலங்களிலும் இழப்பீட்டுத்தொகையாக எவ்வளவு அளிக்கப்பட்டுள்ளது. அளிக்கத் திட்டமிட்டுள்ள இழப்பீட்டுத் தொகை எவ்வளவு என்பதை விளக்கும்.

**இடைநிலையாளர்களை ஒழிப்பதற்காக அளிக்கப்படவேண்டிய, அளிக்கப்பட்ட இழப்பீட்டுத் தொகை**

**(கோடி ரூபாயில்)**

| மாநிலம் | | தரவேண்டிய இழப்பீட்டுத் தொகையும் புனரமைப்புக் கொடையும் | அளிக்கப்பட்ட தொகை |
|---|---|---|---|
| ஆந்திரப் பிரதேசம் | .... | 17.57 | 14.87 |
| அஸ்ஸாம் | ... | 5.00 | 0.38 |
| பீஹார் | ... | 238.98 | 14.79 |
| குஜராத், மஹாரஷ்டிரம் | ... | 12,22 | 4.49 |
| கேரளம் | ... | 0 20 | ... |
| மத்தியப்பிரதேசம் | ... | 22.10 | 13.57 |
| தமிழ் நாடு | ... | 7.16 | 6.24 |

(முன்பக்கத் தொடர்ச்சி)

| மாநிலம் | | தரவேண்டிய இழப்பீட்டுத் தொகையும் புனரமைப்புக் கொடையும் | அளிக்கப்பட்ட தொகை |
|---|---|---|---|
| மைசூர் | ... | 3.90 | 1.07 |
| ஒரிஸ்ஸா | ... | 8.25 | 2.23 |
| ராஜஸ்தான் | ... | 50.31 | 26.03 |
| உத்தரப்பிரதேசம் | ... | 198.36 | 119.29 |
| மேற்கு வங்காளம் | ... | 70 00 | 7.15 |
| மொத்தம் [1] | ... | 639.57 | 215.63[2] |

இன்னும் அளிக்கவேண்டிய இழப்பீட்டுத் தொகையைக் கடன் பத்திரங்களாக அளிக்குமாறு மாநில அரசுகள் கேட்டுக் கொள்ளப்பட்டுள்ளன. மூன்றாவது திட்டக் காலத்தில் இடைநிலையாளர்கள் ஒழிப்பால் ஏற்பட்ட நிலவுடைமை முறைகளின் மாற்றங்களைத் தெளிவாகப் பதிவுசெய்யுமாறு கோரப்பட்டது. நிலவுடைமை உரிமைகளைப்பற்றிய புள்ளிவிவரங்களைச் சேகரிக்குமாறு சொல்லப்பட்டது.

### ரயத்துவாரி நிலவுடைமைகள்

ரயத்துவாரிப் பகுதிகளில் உபரி நிலத்தைப் பெற்று மறுபகிர்வு செய்வது வேறு வகைப்பட்டதாக இருந்தது. அங்கெல்லாம் குத்தகையாளர்கள் நிலத்தை வாங்கும் உரிமை பெற்றுள்ளர்கள். நிலவுடைமை முறையில் அமைந்துள்ள இடைநிலையாளர்களை நீக்க வேண்டும் என்ற கொள்கையைத் திட்டக்குழு கொண்டிருந்தது. தேசிய முன்னேற்றக் குழுவும் (National Development Council) அதையே வலியுறுத்தியது. ஜமின்தாரி, ஜாகிர்தாரி பகுதிகளின் குத்தகையாளர் சிக்கலினின்றும் ரயத்துவாரி பகுதிகளின் குத்தகையாளர் சிக்கல் வேறுபட்டதாக இருக்கின்றது.

முதலாவதாக, ஜமின்தார்கள், ஜாகிர்தார்கள் ஆகியோருக்கு நிலம் கொடையாக அளிக்கப்பட்ட ஒன்றாகும். ரயத்துவாரி நிலங்கள் கொடையாக அளிக்கப்பட்டனவல்ல.

[1] முன்னைய ஹைதராபாத் பகுதிகளில் அளிக்கப்பெற்ற ரூ. 5.52 கோடியையும் உள்ளடக்கியது.

[2] சமீபத்தில் இதன் அளவு ரூ. 225 கோடியாக உயர்ந்துள்ளது.

இரண்டாவதாக, ஜமின்தார்களும் ஜாகிர்தார்களும் பெரும்பாலும் சாகுபடியாளர்களாக இல்லை. ரயத்துவாரி முறையில் இருப்பவர்கள் சாகுபடியாளர்களாக இருக்கின்றனர்.

நாடு முழுவதும் இவை பற்றிய புள்ளி விவரங்கள் கிடைக்கவில்லை. 1953—55 ஆண்டுகளில் ஐந்து மாநிலங்களில் புள்ளிவிவரங்கள் திரட்டப்பெற்றன. அவை நாடு முழுதும் இருந்த நிலையை உணர உதவும் மாதிரியாக அமைந்தன. அப் புள்ளிவிவரங்கள் சில உண்மைகளை உணர்த்தின. 100 ஏக்கர்களுக்கு அதிகமான அளவில் நிலத்தைக் கொண்டிருந்த உடைமையாளர்களில் பெரும்பாலானவர்கள் தாங்களே சாகுபடி நடவடிக்கைகளைச் செய்து வந்தனர்.

ஹைதராபாத்தில் எடுக்கப்பட்ட ஒரு கணக்கெடுப்பின்படி ரயத்துவாரி நிலவுடைமைகள் அதிக அளவில் உடைமையாளர்களாலேயே சாகுபடி செய்யப்பட்டன.

ரயத்துவாரி நிலவுடைமையாளர்களுக்கிடையே சாகுபடி செய்யும் குடும்பம், சாகுபடியில் ஈடுபடாத குடும்பம் ஆகியவற்றிடையே வேறுபாட்டைக் காண்பது கடினம். அப் பகுதிகளில் உள்ள மக்கள் தங்கள் விருப்பப்படி எத் தொழிலில் வேண்டுமானாலும் ஈடுபடலாம்.

தற்பொழுது சாகுபடியில் ஈடுபடாதவர்கள் எதிர்காலத்தில் சொந்தமாகச் சாகுபடியைச் செய்யக்கூடும். சொந்தச் சாகுபடி செய்யாத நிலவுடைமையாளர்களில் பலர் கிராமங்களிலோ அல்லது கிராமச் சுற்றுப் புறங்களிலோ இருக்கின்றனர். எந்த நேரத்திலும் அவர்கள் வேளாண்மைச் சாகுபடியில் ஈடுபாடு கொண்டவர்களாக மாறக்கூடும். திறமையான சாகுபடி முறையைப் பின்பற்றி உற்பத்தியைப் பெருக்கவேண்டுமென்ற எண்ணத்தை அவர்கள் பெறக்கூடும்.

பொருளாதார நோக்கில் ஆராயும்போது ஜமின்தாரி, ஜாகிர்தாரி முறைகளின் ஒழிப்பு நியாயமானது என்பதை அறியலாம். சமூக நீதியை நிலைநாட்ட ரயத்துவாரிப் பகுதிகளில் இடைநிலையாளர்களை நீக்குவது அவசியம் என்று சொல்லப்படுகின்றது. இதில் அரசியல் நோக்கும் கலந்துள்ளது.

இவ்வாறு பல்வேறு சூழ்நிலைகள் அமைந்துள்ளமையால்தான் நிலச் சீர்திருத்தங்களை வெற்றிகரமாக நிறைவேற்ற முடிவதில்லை.

**ஐந்து மாநிலங்களில் நிலக்கணக்கெடுப்பு பற்றிய ஆய்வு — 100 ஏக்கர்களுக்கு அதிகமான அளவையுடைய நிலவுடைமைகள்பற்றிய புள்ளி விவரங்கள்**

| மாநிலம் | 100 ஏக்கர்களுக்கு அதிகமான அளவில் உள்ள நிலவுடைமைகளின் எண்ணிக்கை | | 100 ஏக்கர்களுக்கு அதிகமான நிலவுடைமைகளின் பரப்பு | | மொத்த நிலவுடைமைகளின் எண்ணிக்கையின் சதவீதம் | | மொத்தப் பரப்பில் சதவீதம் | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | மொத்தம் | சொந்தச் சாகுபடி நிலப்பரப்பு | மொத்தம் | சொந்தச் சாகுபடி நிலப்பரப்பு | மொத்தம் | சொந்தச் சாகுபடி நிலப்பரப்பு | மொத்தம் | சொந்தச் சாகுபடி நிலப்பரப்பு |
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 |
| ஆந்திரம் | [illegible] | 7 | 1816 | 1151 | 0.4 | 0.3 | 10.1 | 7.3 |
| தெலுங்கானா | 28 | 21 | 5776 | 3936 | 1.7 | 1.5 | 23.1 | 18.2 |
| குஜராத், மஹாராஷ்டிரம் | 42 | 30 | 8160 | 5044 | 0.7 | 0.5 | 10.6 | 7.7 |
| மத்தியப்பிரதேசம் | 22 | 16 | 4119 | 2872 | 0.4 | 0.3 | 8.9 | 6.8 |
| தமிழ்நாடு | 12 | [illegible] | 2799 | 1919 | 0.3 | 0.2 | 10.8 | 8.5 |

**பெரிய நிலவுடைமையாளர்களும், சிறிய நிலவுடைமையாளர்களும்**

முதல் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களிலும் திட்டக்குழு வேளாண்மை உற்பத்திக்கு அதிக முக்கியத்துவம் அளித்தது. இதன் காரணமாகப் பல மாநிலங்களில் நிலவுடைமைகளின் மீதான உச்ச வரம்பு செயல்படுத்தப்படவில்லை. அதன் பின்னர், சிறிய குத்தகையாளர்களை நிலவுடைமையாளர்களாக மாற்றும் முயற்சி மேற்கொள்ளப்பட்டன. இந்த நிலை பல இடையூறுகளைத் தோற்றுவிப்பதாக இருக்கின்றது. குத்தகையாளர்கள் முதிர்ந்த அறிவைப் பெற்றிருப்பதில்லை. போதுமான நிதி வசதிகளையும் அவர்கள் பெற்றிருப்பதில்லை. அவர்களுக்கு முன்னேற்றமான சாகுபடி முறைகளைக் கைக்கொள்ளும் திறமையும் இருப்பதில்லை.

அரசின் நிறுவனங்களும், கூட்டுறவுத் துறையும் இவர்களுக்குத் தேவையான நிதியை அளிப்பதில்லை. கிராம லேவாதேவிக்காரர்களும்கூட குத்தகையாளர்களுக்குக் கடன் தருவதில்லை. நிலச் சீர்திருத்தங்களின் மூலம் குத்தகையாளர்கள் நிலவுடைமையாளர்களாக மாற்றப்படுகின்றனர். எனினும், அவர்கள் நிலத்தின்மீது எல்லா உரிமைகளையும் பெற்றிருப்பதில்லை. அவர்கள்மீது பல கட்டுப்பாடுகள் விதிக்கப்படுகின்றன. இதனால், தான் அவர்களால் எளிதில் கடன் பெற முடிவதில்லை.

நிலத்தை உடைமையாகப் பெற்ற குத்தகையாளர்கள் அதை விற்க இயலாது. அடைமானம் வைத்துக் கடன் பெற முடியாது. நிலத்தை மட்டும் பெறுவது அவர்களுக்குச் சுமையாகவே அமைகிறது. சில இடங்களில் குத்தகை–நிலவுடைமையாளர்கள் திரும்பவும் குத்தகையாளர்களாக மாறுவதைக் காண முடிகிறது. பாதுகாப்பளிக்கப்பட்ட குத்தகையாளர்களில் சிலர், தங்களுக்கு அளிக்கப்பட்ட சான்றிதழ்களை நிலவுடைமையாளர்களிடமோ, தாசில் அலுவலகங்களிலோ தந்து விடுகின்றார்கள். சட்டப் பூர்வமான வாரத்தின் அளவு மொத்த உற்பத்தியில் 16 முதல் 50 சதவீதமாக உள்ளது. ஆனால், உண்மை வாரம் குத்தகையாளரிடையே இருக்கும் போட்டியின் அடிப்படையில் அமைகின்றது. நிலத்தின் வளம் போன்றவற்றிற்கு ஏற்பவும் அது மாறுபடும். பொதுவுடைமைவாதிகளின் செல்வாக்குப் பொருந்தியுள்ள இடங்களில் மட்டுமே வாரம் குறைந்த அளவில் அமைந்துள்ளது. நிலவுடைமையாளர்கள் பல வழிகளில் சட்டங்களை ஏய்க்கின்றார்கள். அரசு நிர்ணயிக்கும் விலைக்கு அதிகமாக நிலங்கள் விற்கப்படுகின்றன. உறவினர்கள், குடும்ப அங்கத்தினர்கள் ஆகியோரிடையே நிலம் பிரித்தளிக்கப்படுகிறது. சொந்தச் சாகுபடி செய்வதாகக்

கூறிப் பல நிலவுடைமையாளர்கள் சட்டத்திற்குப் புறம்பாக நிலத்தை மறைமுகமாகக் குத்தகைக்கு விடுகின்றனர்.

**சிக்கன நிலவுடைமையும், குடும்ப நிலவுடைமையும்**

முதன் முதலில் 'சிக்கன நிலவுடைமை' (Economic holding) என்பது பின்வருமாறு வரையறை செய்யப்பட்டது.

'ஒரு குடும்பத்தின் ஐந்து உறுப்பினர்கள் வாழ்வதற்குப் போதுமான உற்பத்தியை அளிக்கக்கூடிய வகையில் நில அளவு அமைய வேண்டும். ஐந்து உறுப்பினர்களில் நிலவுடைமையாளரும் ஒருவராகின்ருர். போதுமான அளவிற்குச் செலவுகளைச் செய்த பின்னர், எஞ்சுகின்ற உற்பத்தி குறிப்பிடத்தக்க வாழ்க்கைத் தரத்தை அளித்தல் அவசியம். சில சமயங்களில் அக் குடும்பம் சேமிக்கும் திறனையும் பெற்றிருக்கும்.'

சிக்கன நிலவுடைமை முறையில் சிக்கல்கள் பல அமைந்திருந்தன. எனவே, அம் முறை கைவிடப்பட்டது. அதற்குப் பதிலாகக் 'குடும்ப நிலவுடைமை' (Family holding) முறை ஏற்றுக் கொள்ளப்பட்டது. அதற்கான விளக்கம் கீழ்க்காணுமாறு தரப் படுகின்றது.

'சாகுபடி செய்யும் விவசாயியைச் சேர்ந்த 5 பேர் அடங்கிய ஒரு குடும்பம், பழக்கத்தில் உள்ள உற்பத்தி நடவடிக்கைகளை மேற் கொண்டால், ஆண்டொன்றுக்குக் கிடைக்கும் உற்பத்திப் பொருள் களின் மதிப்பு, 50 சதவீதத்தை உற்பத்திச் செலவாகக் கொண்டு கழித்துவிட்டால், அப்பொழுது நிலவும் விலை மட்டத்தின் அடிப் படையில் ரூ. 1,200 ஆக இருக்கவேண்டும்.'

இவ்வித முறையும் தவருகக் கருதப்படுகின்றது. குடும்ப நிலவுடைமைக்' கருத்தைச் செயல்படுத்துவதில் சில சிக்கல்கள் அமைந்திருக்கின்றன.

1. நிலத்திலிருந்து கிடைக்கும் நிகர வருமானம் நிலவும் வேளாண்மைப் பொருள்களின் விலைகளுக்கு ஏற்ப அமையும். அவ் விலைகள் ஆண்டிற்கு ஆண்டு வேறுபடுகின்றன. சில காலங் களில் விலை மட்டங்களில் உயர்வும், வேறு சில காலங்களில் தாழ்வும் தோன்றுகின்றன. உதாரணமாக 1950 ஆம் ஆண்டிற்கும் 1954 ஆம் ஆண்டிற்கும் இடையே வேளாண்மைப் பொருள்களின் விலைகள் குறைவாக இருந்தன. அதன் பின்னர், விலைகள் உயரத் தொடங்கின. [redacted] நாட்டிற்குள்ளாகச் செழிப்பு நிலை, பூரிப்பு நிலை,

மந்த நிலை, பின்னிறக்க நிலை முதலியவை பொருளாதாரத்தில் தோன்றுகின்றன. பன்னாட்டு நிலையில் வேளாண்மைப் பொருள்களின் விலைகளில் சமீபகாலமாக அதிக ஏற்றத்தாழ்வுகள் காணப்படுகின்றன. போட்டிக் காரணிகள் இன்றி, வேறு சில காரணிகளாலும் இந்தியாவில் பல பொருள்களின் விலை மட்டங்கள் பாதிக்கப்படுகின்றன. எனவே, நிலவுகின்ற விலை மட்டங்களின் அடிப்படையில் வருமானத்தை நிர்ணயித்துக் குடும்ப நிலவுடைமையளவைக் கணிப்பது தவறானது. அடிக்கடி மாறுகின்ற விலைகள் உண்மை உணர்த்திகளாக இருக்கமுடியாது.

2. பல ஆண்டுகளிலும் மாறுபடக் கூடிய தட்ப வெப்ப நிலைகளுக்கு ஏற்பவும் நிலத்தின் நிகரவருமானம் அமையும். பருவகாலச் சூழ்நிலைகளில் அதிக அளவு மாற்றங்கள் தோன்றுகின்றன. நிலவரி வருவாய் முறை நிலையானது. மாறுகின்ற பருவநிலைகளுக்கேற்ப அது மாற்றப்படுவதில்லை. ஆனால், சில காலங்களில் நிலவரி குறைக்கப்படுவதுண்டு; அல்லது தள்ளுபடி செய்யப்படுவதும் உண்டு. நிலவரி வருவாய்முறை 30 ஆண்டுகளுக்கு ஒருமுறை மாற்றியமைக்கப்படுகிறது. சிலநிலைகளில் 10 ஆண்டுகளுக்கு ஒரு மாற்றம் செய்யப்படுவதும் உண்டு. நிலத்திலிருந்து பெறும் வருமானத்தின் மிகச் சிறிய பங்காக நிலவரி இருக்கின்றது. நில வருமானம் முழுவதையும நிலவுடைமையாளரே பெறுகின்றார். காலத்திற்குக் காலம் உற்பத்தியளவு மாறுபடுகின்றது; வருமானத்தின் அளவும் வேறுபடுகின்றது. சாகுபடிக்குச் சாதகமான பருவநிலை உற்பத்தியாளருக்கு அதிக வருமானத்தைத் தருகின்றது. பருவநிலை பாதகமாக அமையும் போது வருமானமும் பாதிக்கப்படுகின்றது.

3. வெவ்வேறு வகைப்பயிர்களைச் சாகுபடி செய்யும்போது நிலத்தின் நிகர வருமானம் மாறுபடும். வாணிபப் பயிர்களுக்கான உற்பத்திச் செலவு உயர்வாக உள்ளது. ஆயினும், அவற்றின் விலை உயர்வாக இருப்பதால் வருமானம் அதிக அளவில் பெறப்படுகின்றது. குடும்ப நிலவுடைமையின் அளவை நிர்ணயிக்கும் போது இவை கருதப்படுவதில்லை. ஓர் ஏக்கரில் ஒரு போகச் சாகுபடி செய்யலாம்; அல்லது இருபோக, முப்போகச் சாகுபடி செய்யமுடியும். ஓர் ஏக்கரில் நெல் சாகுபடி செய்யும்போது கிடைக்கும் வருமானமும், ஓர் ஏக்கரில் கரும்பு சாகுபடி செய்யும்போது கிடைக்கும் வருமானமும் ஒரே அளவில் அமையமாட்டா. புன்செய்ப் பயிர்களுக்கிடையே வருமான வேறுபாடுகள் மிகுதியாக உள்ளன. இதற்கு எடுத்துக்காட்டாக புகையிலை, உருளைக்கிழங்கு, பருத்தி, எண்ணெய் வித்துகள் முதலியவற்றைக் கூறலாம்.

4. ஒவ்வொரு குடும்பமும் ஆண்டொன்றுக்கு ரூ. 1,200 நிகர வருமானத்தைப் பெற வேண்டுமெனச் சொல்லப்படுகிறது. இக் கருத்து எல்லாச் சாகுபடிக் குடும்பங்களும் ஒரே தரமான வாழ்வைக் கொண்டிருக்கும் என்ற அடிப்படையில் அமைந்துள்ளது. ஆனுல் அது தவருகும். நிலவுடைமைகளின் அளவிற்கேற்ப குடும்பங்களின் வாழ்க்கைத் தரம் அமையாது. சாகுபடிக் குடும்பத்தினரின் பழக்கவழக்கங்கள், பண்பாடு, உழைக்கும் திறன் உழைக்கும் விருப்பம், உற்பத்திக்கான வசதிகள் ஆகியவற்றிற்கேற்பவே வருமானமும், வாழ்க்கைத் தரமும் அமைகின்றன.

5. ஒரு குடும்பத்திற்கான நிகர ஆண்டு வருமானத்தை ரூ. 1,200 என்று சட்டத்தின்மூலம் நிர்ணயம் செய்வது நல்லதன்று. சட்டத்தில் அடிக்கடி திருத்தங்களைக் கொண்டு வருவதும் விரும்பத்தக்கதன்று. மேலும், இக் கருத்து மக்களின் வாழ்வில் முன்னேற்றம் ஏற்படாது என்று எண்ணத் தோன்றும் நிலையையும் கொண்டிருக்கின்றது. படிப்படியாகக் கிராம மக்களின் வாழ்க்கைத் தரம் உயர்ந்து வருவது குறிப்பிடத்தக்கது. இந்திய அரசியல் அமைப்பு மக்களின் வாழ்க்கைத் தரத்தைப் பல வழிகளிலும் உயர்த்தப் பாடுபடுகின்றது. எனவே, இரு மாறுபட்ட கருத்துகள் நிலவுவதைத் தவிர்த்தல் நல்லது.

6. இந்திய வேளாண்மையும் இயக்க நிலையைக் கொண்டதாகவே இருக்கின்றது. எதிர்கால இந்திய வேளாண்மைப் பொருளாதாரத்தில் பல சிறப்பான மாற்றங்கள் தோன்றக்கூடும். வேளாண்மையல்லாத வருமானத்தையும் விவசாயிகள் பெறுவர். நிலவுடைமைகளின் தாழ்ந்த மட்டத்தை நிர்ணயிக்கும்போது இவ்வகை வருமானத்தைக் கணக்கில் கொள்ளக்கூடாது.

7. நிலத்தின் உற்பத்தித் திறனில் மாறுதல்கள் தோன்றக்கூடும். வெள்ளம், பூமி அதிர்ச்சி முதலியவற்ருல் உற்பத்தி பாதிக்கப்படுகிறது. நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்கும்போது உற்பத்தி உயர்கின்றது. இரண்டாவது, மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டங்களின்மூலம் பெரிய நீர்ப்பாசன வசதிகளால் 34 மில்லியன் ஏக்கர்கள் நிலம் பயனடைந்தது. அந்த நிலத்தின் உற்பத்தித் திறன் கூடியுள்ளது என்று கூறத் தேவையில்லை.

8. போக்குவரத்து வசதிகள், செய்தித் தொடர்பு வசதிகள் முதலியவை எல்லா இடங்களிலும் ஒரே வேகத்தில் வளர்வதில்லை. இவ் வசதிகளும் விலைகளின்மீது ஆதிக்கத்தைச் செலுத்துகின்றன. போக்குவரத்துகள் சிறப்பாக உள்ள இடங்களில் விலைகள்

குறைவாக உள்ளன. பகிர்வு முறையில் அமைந்திருக்கும் சிக்கல்களாலும், தவறுகளாலும் விலை மட்டங்கள் பல வேறு இடங்களிலும் அதிக அளவில் வேறுபடுகின்றன. ஆனால், இவற்றிற்கேற்பச் சட்டம் மாறக்கூடிய நெகிழ்வுத் தன்மையைக் கொண்டிருக்கவில்லை.

## புரட்சிகரமான விளைவுகள்

1950 முதல் 1960 வரை நிறைவேற்றப்பட்ட நிலச் சீர்திருத்தச் சட்டங்களில் குறைபாடுகளும் இருந்தன. வேளாண்மையில் போட்டியைத் தவிர்ப்பதால் ஓர் ஏக்கர் நிலத்திற்கான உற்பத்தி குறையும். இதனால், சமுதாய நலனும் காக்கப்படமாட்டாது. இந்தியாவில் சாதாரண நிலைகளும்கூடப் பெரிய சிக்கல்களாகக் கருதப்படுகின்றன. பொருளாதார முன்னேற்றத்திற்கான திட்டங்களில் பல துறைகளுக்கும் தேவைக்கேற்ப முக்கியத்துவம் தரப்படுவதில்லை.

ஒரு சதுர மைலுக்கான மக்கள் தொகை அடர்த்தி இங்கிலாந்தில 750 ஆகவும், ஜப்பானில் 588 ஆகவும், இந்தியாவில் 384 ஆகவும் உள்ளது. இங்கிலாந்திலும், ஜப்பானிலும் மக்கள் தொகை அடர்த்தி மிகுதியாக உள்ளதைப்பற்றி எவரும் குறிப்பிடுவதில்லை. ஆனால், இந்திய மக்கள் தொகை மிகுதியாக உள்ளது என்று பேசாதவர் எவரும் இல்லை. இங்கு விரைவான மக்கள் பெருக்கம் நாசத்தை விளைவிக்கும் எனப்படுகிறது. எனவே, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்திற்காக அதிக மூலதனம் ஒதுக்கப்பட்டது. மக்களின் நலன் காக்கும் இந்திய அரசு. கிராமப்புறங்களில் குடியிருப்பு வசதிகளைப் பெருக்கவில்லை. இந்தியாவில் வேளாண்மைக் குடும்பங்களுக்கு இடையே சாகுபடி நிலம் சமமாகப் பங்கிடப்பட்டால் ஒவ்வொரு குடும்பத்திற்கும் சராசரியாக 6.4 ஏக்கர்கள் நிலம் கிடைக்கும். ஜப்பானில் சராசரி சாகுபடி நில அளவு 2.5 ஏக்கர்களாக இருக்கிறது. 34 சதவிதச் சாகுபடியாளர்கள் 1.2 ஏக்கர்களுக்கும் குறைவான நிலத்தைக் கொண்டுள்ளார்கள். நிலங்கள் அங்கு உள்பிரிவு படுத்தப்பட்டிருந்தாலும் செறிவு முறைச் சாகுபடி செய்யப்படுவதால், உற்பத்தி உயர்வாக உள்ளது.

சுருக்கமாக விளக்கினால், குத்தகையாளர்களுக்கு நிலத்தை அளிப்பதால் மட்டும் உற்பத்தி உயராது. ரயத்துவாரிப் பகுதிகளில் உபரி நிலங்களைத் திரட்டி மறுபகிர்வு செய்வதன்மூலம் உற்பத்தியைப் பெருக்குவதில் வெற்றி கண்டுவிட முடியாது.

உற்பத்தியை உயர்த்த பல காரணிகளும் ஒருங்கே ஆராயப்பட வேண்டும். ஜமின்தாரி முறையை ஒழித்ததைத் தவறெனக் கருத இயலாது. கடின உழைப்பு அமைந்திருந்தால் எந்த நிலவுடைமை முறையாலும் உற்பத்தியைப் பல மடங்கு கூட்டலாம்.

சமுதாய முன்னேற்றம் ஏற்படப் புரட்சிகரமான மாற்றங்கள் தேவை. நிலச் சீர்திருத்தங்களைச் செய்பவர்கள் பலவற்றையும் கவனமாகக் கருத்தில் கொள்ளவேண்டும். நில முன்னேற்றங்களைச் செய்ய அரசு சில தனித் தீர்வைகளை விதிக்கலாம். வேளாண்மை வருமான வரியை விதிக்கும்போது அது முதலீட்டைப் பாதிக்காமல் பார்த்துக்கொள்ளவேண்டும். நிலத்தில் நிரந்தர முன்னேற்றங்களைச் செய்வது அவசியம். விவசாயிகளுக்குக் குறைந்த வட்டியில் நீண்ட காலக் கடன் அளிக்க நிதி வசதிகளைப் பெருக்குவது இன்றியமையாதது. இவ்வாறு முதலீடுகள் செய்யப்படும்போது நீண்ட காலத்து நன்மைகள் பெறப்படுகின்றன.

### குத்தகைச் சீர்திருத்தங்கள்

குத்தகைச் சீர்திருத்தத்தின் முக்கிய நோக்கங்களாகப் பின்வருபவற்றைத் திட்டக்குழு பரிந்துரைத்தது.

1. வாரத்தின் அளவைக் குறைப்பது;
2. குத்தகை உரிமைக்குப் பாதுகாப்பளிப்பது;
3. குத்தகையாளர்களை நிலவுடைமையாளர்களாக மாற்றுவது;

வெவ்வேறு மாநிலங்களிலும் குத்தகைச் சீர்திருத்தங்கள் கீழ்க்காணுமாறு செய்யப்பட்டன.

### ஆந்திரப்பிரதேசம்

முன்னர் இருந்த, பிரிக்கப்படாத ஆந்திர மாநிலத்தில் குத்தகையாளர்கள், ஜூன், 1956-ல் மூன்றுண்டுகளுக்குக் குறைந்தபட்ச குத்தகை உரிமையைப் பெற்றூர்கள் ஜூன் 1956 ஆம் ஆண்டிற்குப் பின்னர் குத்தகையாளர்களாக அங்கீகரிக்கப்பட்டவர்களுக்குக் குறைந்தபட்சத்தில் 6 ஆண்டுகள் குத்தகை உரிமை உறுதியளிக்கப் பட்டது. அரசின் நீர்ப்பாசன வசதிகளைப் பெறும் நிலங்களில் குத்தகை மொத்த உற்பத்தியில் 50 சதவீதத்திற்கு அதிகமாக இருக்கக்கூடாது. புன்செய் நிலங்களில் குத்தகை 45 சதவீதத்திற்கு அதிகமாகவும், ஏற்றங்களைக்கொண்டு நீர் இறைக்கும் நிலங்

களில் $28\frac{1}{3}$ சதவீதத்திற்கு அதிகமாகவும் இருப்பது தடுக்கப்பட்டது.

தெலுங்கானுப் பகுதியில், ஆறு ஆண்டுகள் தொடர்ச்சியாகச் சாகுபடி செய்த குத்தகையாளர்களுக்குப் பாதுகாப்பளிக்கப்பட்டது. நிலச் சொந்தக்காரர்கள் பிப்ரவரி 4, 1959ஆம் ஆண்டிற்குள் சொந்தச் சாகுபடிக்காக 3 குடும்ப நிலவுடைமைகள் (12 முதல் 180 ஏக்கர்கள்) வரை எடுத்துக் கொள்ளலாம் என்னும் நிலை பொருந்தியிருந்தது. குத்தகையாளர்கள் மொத்த நிலத்தில் பாதியைத் தாங்கள் சாகுபடி செய்வதற்காக வைத்துக்கொள்ளலாம். நிலச் சொந்தக்காரர்கள் இரு குடும்ப நிலவுடைமைகள் அளவிற்கு நிலத்தைப் பெற வாய்ப்பிருந்தால் குத்தகையாளர்கள் ஒரு குடும்ப நிலவுடைமை அளவிற்கு நிலத்தைப் பெறுவார்கள். குத்தகை உற்பத்தியில் நான்கில் ஒரு பங்கு முதல் ஐந்தில் ஒரு பங்கிற்கு அதிகமாக இருக்கக்கூடாது. அல்லது நிலவரியைப் போல 3 முதல் 5 மடங்கிற்கு உயர்வாக இருத்தல்கூடாது. நிலத்தின் தரத்திற்கேற்பவும் குத்தகையின் அளவு வேறுபட்டது.

மாநிலம் முழுவதும் ஒரே மாதிரியான குத்தகைச் சட்டத்தைப் பின்பற்ற வேண்டுமென்ற கருத்து நிலவி வருகிறது. அதற்கான நடவடிக்கைகளும் எடுக்கப்பட்டு வருகின்றன. குத்தகையின் அளவு வெவ்வேறு இடங்களிலும் பல காரணங்களால் மாறுபட்டதாக இருக்கின்றது.

அஸ்ஸாம்

நிலக்கிழார் குத்தகையாளரிடமிருந்து சொந்தச் சாகுபடிக்காக $33\frac{1}{3}$ ஏக்கர்களைப் பெறலாம். ஆனால், குறைந்தது $3\frac{1}{2}$ ஏக்கர்களாவது குத்தகையாளரிடமே இருக்க அனுமதிக்கவேண்டும். குத்தகையாளர்களுக்கு வேறு வகையில் நிலமளிக்கப்படும். நிலத்தைத் திரும்பப்பெறும் உரிமை பிப்ரவரி 18, 1963ஆம் ஆண்டோடு முடிவடைந்துவிட்டது. உற்பத்திச் செலவை நிலக்கிழாரே ஏற்றுக்கொண்டால், உற்பத்தியில் நான்கில் ஒரு பங்கிற்கு மேல் குத்தகை இருக்கக்கூடாது. பிறவற்றில் குத்தகை ஐந்தில் ஒரு பங்காக அமையும்.

பீஹார்

தொடர்ச்சியாக 12 ஆண்டுகள் சாகுபடி செய்த குத்தகையாளர்கள் பாதுகாப்பைப் பெற்றனர். பதிவு செய்யப்பட்ட குத்தகையின்கீழ்ப் பண வாரம் குத்தகை மதிப்பில் 50 சதவீதத்

திற்கு அதிகமாக இருக்கக்கூடாது. மற்றவற்றில் 25 சதவீதத்திற்கு அதிகமாக இருப்பது தடுக்கப்படுகின்றது. பொருள்களாக அளிக்கப்படும்போது மொத்த உற்பத்தியில் வாரம் 7/20 பங்கிற்கு மேல் இருத்தல்கூடாது. குடும்ப அங்கத்தினர்கள், நிலத்தின் தரம் ஆகியவற்றிற்கேற்ப 20 முதல் 120 ஏக்கர்கள் நிலத்தை நிலவுடைமையாளர் திரும்பப் பெறும் வகையில் மசோதா ஒன்று நிறைவேற்றப்பட்டுள்ளது. குத்தகையாளருக்குக் குறைந்த பட்சம் ஓர் ஏக்கர் நிலமாவது சாகுபடிக்கு அளிக்கவேண்டும்.

### குஜராத்

முன்னைய பம்பாய் மாநிலப் பகுதிகளில், நிலக்கிழார் குத்தகை நிலத்தில் பாதியைச் சொந்தச் சாகுபடிக்கு எடுத்துக்கொள்ளலாம். நிலக்கிழார்களில் பலர் தங்களுடைய நிலத்தின் ஒரு பகுதியைச் சொந்தச் சாகுபடிக்காக வைத்திருந்தனர். அந்த நிலத்தை அல்லாது, குத்தகை நிலத்தில் பாதியைத் திரும்பப்பெறும் உரிமையையும் அவர்கள் கொண்டிருந்தனர். ஆனால், சொந்தச் சாகுபடிக்கு எடுத்துக்கொள்ளப்படும் நிலம் மூன்று சிக்கன நிலவுடைமைகளின் அளவிற்கு (12 முதல் 48 ஏக்கர்கள்) அதிகமாக இருத்தல் கூடாது. நிலத்தைத் திரும்பப் பெற முடியாத பகுதிகளில் ஏப்ரல் 1, 1957 முதல் குத்தகையாளர்கள் நிலவுடைமைகளின் உரிமைகளைப் பெற்றனர்கள். சட்டம் 1960ஆம் ஆண்டில் திருத்தப்பட்டது. அதன்மூலம் ஏப்ரல் 1, 1962 முதல் சிறிய நிலவுடைமைகளைக் கொண்டிருந்த குத்தகையாளர்களும் நிலவுடைமையாளர்களாக மாறினர்.

கட்ச் பகுதியில் குத்தகையாளர் சாகுபடி உரிமையைப் பெற வகை செய்யப்பட்டது. நிலவுடைமையாளர்கள் மூன்று சிக்கன நிலவுடைமைகள் அளவிற்கு நிலத்தைச் சொந்தச் சாகுபடிக்காகத் திரும்பப் பெறமுடிந்தது. ஏப்ரல் 1, 1961 முதல் நிலவுடைமை உரிமைகளைக் குத்தகையாளர்களுக்கு மாற்றியமைக்க மாநில அரசு நடவடிக்கைகளை எடுத்தது.

### ஜம்மு காஷ்மீர்

சொந்தச் சாகுபடிக்காக நிலத்தைத் திரும்பப் பெறுவதற்கான வரம்பு, நன்செய், புன்செய் நிலங்களுக்கு இடையே வேறுபடுகிறது. காஷ்மீரில் 2 ஏக்கர்கள் நன்செய் நிலத்தையும் 4 ஏக்கர்கள் புன்செய் நிலத்தையும், ஜம்முவில் 4 ஏக்கர்கள் நன்செய் நிலத்தையும் 6 ஏக்கர்கள் புன்செய் நிலத்தையும் நிலவுடைமையாளர்கள் திரும்பப்பெற்றனர். திரும்பப் பெறமுடியாத பகுதிகளில்

குத்தகையாளர்களுக்குக் குத்தகைக் காலம் உறுதியளிக்கப் பட்டது. $12\frac{1}{2}$ ஏக்கர்களுக்குக் குறைவான நிலத்தைப் பெற்றிருந்த குத்தகையாளர்கள் நிலவுடைமையாளர்களுக்கு நன்செய் நிலத்தின் மொத்த உற்பத்தியில் நான்கில் ஒருபங்கிற்கு மேலாகவும், புன்செய் நிலத்தின் மொத்த உற்பத்தியில் மூன்றில் ஒரு பங்கிற்கு அதிகமாகவும் கொடுக்கத் தேவையில்லை.

### கேரளம்

'கேரள வேளாண்மைத் தொடர்புச் சட்டம்' (Kerala Agrarian Relations Act), சாகுபடி செய்யும் குத்தகையாளர்களுக்குக் குத்தகைக் காலத்தை நிர்ணயித்தது. உச்சவரம்புக்கு அதிகமாக நிலத்தைக் கொண்டிருப்பவர்கள் சொந்தச் சாகுபடிக்கான நிலத்தைத் திரும்பப்பெற அனுமதிக்கப்படவில்லை. மற்றவர்கள் 5 ஏக்கர்கள் இருபோக நெல் சாகுபடி நிலத்தையோ அல்லது அதற்குச் சமமான நிலத்தையோ தாங்களே சாகுபடி செய்வதற்குப் பெற்றனர். சிறிய நிலவுடைமையாளர்கள் தங்களுடைய நிலத்தில் பாதியைத் திரும்பப் பெற்றனர். கொச்சின், மலபார்ப்பகுதிகளில் நிலவுடைமையாளர்கள் நிலத்தைத் திரும்பப் பெறமுடியாது. ஏனெனில், அப்பகுதிகளில் முன்னரேயே பலவிதச் சட்டங்களால் பெரும்பாலான குத்தகையாளர்கள் நிலத்தின் மீதான உரிமைகளைப் பெற்றுவிட்டார்கள். நிலத்தைத் திரும்பப்பெற முடியாத பகுதிகளில், பின்னர்க் குறிப்பிடப்படும் ஒரு தேதியிலிருந்து குத்தகையாளர்கள் நிலத்தின்மீதான உரிமைகளைப் பெறுவார்கள். நெல் சாகுபடி செய்யும் நிலங்களில் உச்சமட்ட வாரம் நான்கில் ஒரு பங்கிலிருந்து பன்னிரண்டில் ஒரு பங்குவரை வேறுபடுகின்றது.

குத்தகை முறையை ஒழுங்குபடுத்தும் சட்டம் பிப்ரவரி 15, 1961ஆம் ஆண்டிலிருந்து செயல்படுத்தப்பட்டது, வாரங்களின் இயல்பு வீதங்கள் மார்ச் 11, 1961ஆம் ஆண்டில் இறுதியாக்கப் பட்டு வெளியிடப்பட்டன. இவ் வீதங்களின் அடிப்படையில் நிலச் சீர்திருத்தக் குழுக்கள் குத்தகையாளர்கள் அளிக்க வேண்டிய நியாய வாரத்தின் அளவை நிர்ணயிக்கும் பணியில் ஈடுபட்டுள்ளன. கேரளத்தில் குத்தகைச் சீர்திருத்தங்கள் சிறப்பான வகையில் நிறைவேற்றப்பட்டுள்ளன.

### மத்தியப்பிரதேசம்

மாற்றியமைக்கப்பட்டுள்ள மத்தியப்பிரதேச மாநிலத்தில் ஒரே மாதிரியான நிலவரி வருவாய் நிர்வாகத்தையும், நிலவுடைமை

முறையையும் பெறுவதற்கான சட்டங்கள் இயற்றப்படுகின்றன. அவற்றின்மூலம் குத்தகையாளர்களுக்குக் குத்தகைக் காலம் நிர்ணயிக்கப்பட்டுள்ளது. குத்தகையாளர்கள் பல உரிமைகளையும், சலுகைகளையும் பெற்றிருக்கின்றனர். 5 ஆண்டுகளுக்குத் தொடர்ச்சியாகச் சாகுபடி செய்த குத்தகையாளருக்கு 25 ஏக்கர்களை அளித்து நிலவுடைமையாளர், 25 ஏக்கர்களைச் சொந்தச் சாகுபடிக்காகக் குத்தகையாளர்களிடம் இருந்து பெறலாம். பிற குத்தகையாளர்கள் 10 ஏக்கர்கள் நிலத்தைப்பெறுவர். அக்டோபர் 2, 1960 ஆம் ஆண்டோடு நிலத்தைத் திரும்பப் பெறுவதற்கான காலவரையறை முடிவடைந்தது. வாரம், நிலவரியைப் போன்று 2 முதல் 4 மடங்குகளுக்கு அதிகமாக இருக்கக்கூடாது. நிலத்தைத் திரும்பப்பெற முடியாத இடங்களில் குத்தகையாளர்களின் பெயரில் நிலவுடைமைகளின் உரிமைகளை மாற்றியமைப்பதற்கான வழிமுறைகள் பின்பற்றப்பட்டு வருகின்றன.

**தமிழ்நாடு**

குத்தகையாளர்களின் நிவாரணத்திற்காக இடைக்காலப் பாதுகாப்பு 1955 ஆம் அண்டில் அமைக்கப்பட்டது. அது செப்டம்பர் 26, 1963 வரை தொடர்ந்து நீடித்தது. நீர்ப்பாசன வசதிகளைக் கொண்ட நிலங்களில் வாரம் மொத்த விளைச்சலில் 40 சதவீதத்திற்கு அதிகமாக இருக்கக்கூடாது என்று நிர்ணயிக்கப்பட்டது. ஏற்ற நீர்ப்பாசனத்தைக்கொண்ட நிலங்களில் வாரத்தின் அளவு 35 சதவீதமாகவும், மற்ற நிலங்களில் $33\frac{1}{3}$ சதவீதமாகவும் இருக்க வேண்டுமென்று வரையறுக்கப்பட்டுள்ளது.

**மஹாராஷ்டிரம்**

முன்னர் இருந்த பம்பாய் மாநிலத்தில், பொதுவாகக் குத்தகையாளர் சாகுபடி நிலத்தில் பாதியைத் தம்மிடமே வைத்துக்கொள்ளும் உரிமையைப் பெற்றுள்ளார். மறு பாதி நிலத்தை நிலக்கிழார் சொந்தச் சாகுப்படிக்காகத் திரும்பப் பெறலாம். நிலத்தைத் திருப்பப் பெறாத பகுதிகளில் குத்தகையாளர்களுக்கு நிலவுடைமைகளின்மீதான உரிமை ஏப்ரல் 1, 1957 முதல் தரப்பட்டது. சிறிய நிலவுடைமைகளைக்கொண்ட குத்தகையாளர்கள் ஏப்ரல் 1, 1962 முதல் நிலவுடைமையாளர்களாக மாற்றப்பட்டார்கள்.

விதர்பா பகுதியில், குஜராத் மாநிலத்தின் கட்ச் பகுதியில் நடைமுறையிலிருக்கும் முறையே செயல்படுகின்றது. 1961 ஆம் ஆண்டில் நிலத்தைத் திரும்பப் பெறாத பகுதிகளில் சிறிய

நிலவுடைமைகளைக் கொண்டிருந்த குத்தகையாளர்களை ஏப்ரல் 1, 1963 முதல் உடைமையாளர்களாக மாற்றுவதற்கான நடவடிக்கை எடுக்கப்பட்டது. மராதவாடா பகுதியில் குத்தகைச் சீர்திருத்தங்கள் ஆந்திரப் பிரதேசத்தின் தெலுங்கானா பகுதியில் இருக்கும் குத்தகைச் சீர்திருத்த முறைகளைப் போன்றே உள்ளன.

மைசூர்

1959 ஆம் ஆண்டில் குத்தகையாளர்களை நிலத்தினின்றும் வெளியேற்றுவதைத் தடுப்பதற்காக இடைக்காலத் தீர்வு எடுக்கப் பட்டது. இதனால் குத்தகையாளர்கள் நன்மையடைந்துள்ளனர். 'கூர்க்' பகுதியில் வாரம் உற்பத்தியில் மூன்றில் ஒரு பங்காக நிர்ணயிக்கப்பெற்றது. பிற பகுதிகளில் முன்னமேயே இயற்றப் பட்ட சட்டங்களின் அடிப்படையில் வாரத்தின் அளவு ஒழுங்கு படுத்தப்பட்டது. முன்னிருந்த பம்பாய்ப் பகுதியில் வாரம், ஆறில் ஒரு பங்கு முதல் முன்னைய தமிழ்நாட்டின் பகுதியில் ஐந்தில் இரு பங்கு வரை குத்தகை அளவு வேறுபட்டிருந்தது.

முழுமையாக மாற்றியமைக்கப்பட்ட மைசூர் மாநிலத்தில் 1961 ஆம் ஆண்டு நிலச் சீர்திருத்த மசோதா கொண்டுவரப்பட்டது. அதன் மூலம், குத்தகையாளர்களுக்குக் குத்தகைக்கான காலம் உறுதியளிக்கப்பட்டது. சாகுபடி நிலத்தில் பாதியைப் பெறும் உரிமையை அவர்கள் பெற்றனர் (பாதுகாப்பளிக்கப்பட்ட குத்தகையாளர்கள் குறைந்தது ஒரு திட்ட அளவு ஏக்கரையாவது (Standand Acre) தங்கள் உடைமையாகக் கொண்டிருக்கலாம்). பிறிதொரு பாதி நிலத்தை நிலவுடைமையாளர்கள் சொந்தச் சாகுபடி செய்வதற்காகத் திரும்பப் பெறலாம். முன்னைய பம்பாய், ஹைதராபாத் பகுதிகளில் முன்னமேயே நிலக்கிழார்கள் தாங்களே சாகுபடி செய்வதற்காக நிலத்தைப் பெற்றிருந்தால் திரும்பவும் பெறமுடியாது. நன்செய் நிலங்களில் வாரத்தின் அளவு உற்பத்தியில் நான்கில் ஒரு பங்கிற்கு அதிகமாகவும், பிற நிலங்களில் ஐந்தில் ஒரு பங்கிற்கு அதிகமாகவும் இருக்கக்கூடாது. சிறிய நிலவுடைமை யாளர்கள் ஐந்தாண்டுகளுக்குள்ளாக நிலத்தைத் திரும்பப் பெறு விட்டால், குத்தகையாளர்களுக்கு அந்த நிலத்தின் உரிமை மாற்றியமைக்கப்படும்.

ஒரிஸ்ஸா

ஒரிஸ்ஸாவில் எல்லா நிலங்களையும் உள்ளடக்கிய நிலச் சீர்திருத்த மசோதா நிறைவேற்றப்பட்டது. அதன் வாயிலாகக் குத்தகையாளர்களுக்குச் சாகுபடிக் காலம் உறுதியளிக்கப் பட்டது. நிலக்கிழார் குத்தகைக்கு விட்டிருக்கும் நிலத்தில்

மூன்றில் இருபகுதி முதல், நான்கில் மூன்று பகுதிவரை சொந்தச் சாகுபடிக்காகத் திரும்பப் பெறமுடியும். ஆனால், உயர்ந்த பட்சத்தில் 25 திட்ட அளவு ஏக்கர்களை மட்டுமே பெற இயலும். நிலத்தைத் திரும்பப் பெறாத பகுதிகளில் குத்தகையாளர்களுக்கு நில உரிமைகள் வழங்கப்படுகின்றன.

குத்தகையாளர்களை நிலத்தை விட்டு வெளியேற்றும் நிலை டிசம்பர் 31, 1962-ல் தடுக்கப்பட்டது. அதிகப் பட்ச வாரத்தின் மொத்த உற்பத்தியில் நான்கில் ஒரு பங்காக உள்ளது. ஆனால், ஓர் அளவு ஏக்கருக்கான வாரம் 4 முதல் 6 மாண்டுகள் (Maunds) நெல்லுக்கு அதிகமாக இருக்கக்கூடாது.

### பஞ்சாப்

நிலக்கிழார்களுக்கு 30 திட்ட அளவு ஏக்கர்கள் சொந்தச் சாகுபடிக்கு அளித்ததுபோகக் குத்தகையாளர்களுக்குக் குத்தகைக்கால உறுதியும் தரப்பட்டுள்ளது. வாரம் மொத்த உற்பத்தியில் அல்லது உற்பத்தி மதிப்பில் மூன்றில் ஒரு பங்கிற்கு அதிகமாக இருக்கக்கூடாது. ஆனால், குத்தகையாளர்கள் ஆறு ஆண்டுக் காலமோ அல்லது அதற்கு அதிகமாகவோ சாகுபடியைத் தொடர்ச்சியாகச் செய்திருக்கவேண்டும்.

### ராஜஸ்தான்

ஒரு குத்தகையாளர் ஆண்டொன்றுக்கு ரூ. 1,200 வருமானத்தைத் தரக்கூடிய நிலத்தைத் தம் உடைமையாகக் கொள்ளலாம். இதன் அளவு கங்காநகரின் 15.6 ஏக்கர்களில் இருந்து ஜெயிஸ்ல்மெரின் (Jaislmer) 125 ஏக்கர்கள்வரை வேறுபட்டதாக இருக்கின்றது. இந்த அளவிற்கு அதிகமாக உபரி நிலத்தைக் குத்தகையாளர்கள் பெற்றிருந்தால், அதை நிலவுடைமையாளர்கள் திரும்பப் பெறலாம். தொடர்ந்து சாகுபடி செய்யச் சம்மதித்த குத்தகையாளர்களுக்கு நிலத்தின்மீதான உரிமைகள் வழங்கப்பட்டன. மொத்த உற்பத்தியில் வாரம் ஆறில் ஒரு பங்கிற்கு அதிகரிக்கக் கூடாது; அல்லது நிலவரியைப்போல இரு மடங்கிற்கு அதிகமாக இருக்கக் கூடாது.

### உத்தரப்பிரதேசம்

குத்தகையாளர்களும், சார்புக் குத்தகையாளர்களும் (Sub tenants) அரசோடு நேரடித் தொடர்பைப் பெற்றார்கள். இவ் வகையில் 20 லட்சம் ஏக்கர்களைச் சாகுபடி செய்த குத்தகையாளர்களும், சார்புக் குத்தகையாளர்களும் அரசோடு நேரடித் தொடர்பைக் கொண்டார்கள். இதன்மூலம் அரசுக்கும் சாகுபடி

யாளர்களுக்கும் நடுவே இருந்த இடைநிலையாளர்களில் பலர் நீக்கப்பட்டனர்.

### மேற்கு வங்காளம்

வாரத்தை வாங்கும் உரிமையை அரசு பெற்றது. அரசுக்கும் சாகுபடிக் குத்தகையாளர்களுக்கும் இடையே நேரடித் தொடர்பு ஏற்படுத்தப்பட்டது. 'பர்காதார்கள்' (Bargadars) குத்தகை அந்தஸ்தைப் பெறவில்லை. ஆனால், குத்தகைக் காலத்திற்கு அவர்கள் உறுதியளிக்கப்பட்டார்கள். குத்தகைக்கு விடப்பட்ட நிலத்தில் மூன்றில் இரண்டு பங்கை நிலவுடைமையாளர் சொந்தச் சாகுபடிக்காகப் பெறலாம். $7\frac{1}{2}$ ஏக்கர்களுக்குக் குறைவான நிலத்தைக் கொண்ட நிலவுடைமையாளர் அந்த நிலம் முழுவதையும் தன் சாகுபடியின்கீழ்க் கொண்டுவர முடியும். உற்பத்திக்கான செலவை நிலக்கிழார் ஏற்றால், குத்தகை 50 சதவீதத்திற்கு அதிகமாக இருக்கக்கூடாது. அவ்வாறே இல்லாவிட்டால் குத்தகை 40 சதவீதத்திற்கு அதிகமாக அமையக்கூடாது.

### யூனியன் பிரதேசங்கள்

டில்லியில் அரசுக்கும் குத்தகையாளர்களுக்கும் இடையே நேரடித் தொடர்பு ஏற்படுத்தப்பட்டுள்ளது. பதினெட்டாயிரம் குத்தகையாளர்கள் 25,000 ஏக்கர்களில் நிலவுடைமையாளர்களாக மாற்றப்பட்டனர். சில சிறப்பு நிலைகளில் குத்தகைமுறை நீடிக்கிறது. அவ்வகை நிலங்களின் மொத்த உற்பத்தியில் வாரம் ஐந்தில் ஒரு பங்கிற்கு மேலாக இருக்கக் கூடாது; அல்லது நில வரியையைப் போன்று நான்கு மடங்கிற்கு அதிகமாக அமையக் கூடாது.

ஹிமாசலப் பிரேசத்தில் 125 ரூபாய்க்கு அதிகமாக நிலவரியைச் செலுத்திய நிலவுடைமையாளர்களின் நிலத்தைச் சாகுபடி செய்த குத்தகையாளர்களுக்கும் அரசுக்குமிடையே நேரடித் தொடர்பு ஏற்பட்டது. சில குத்தகையாளர்கள் இழப்பீட்டுத் தொகை அளித்து, நிலவுடைமை உரிமைகளைப் பெற்றனர். நிலவுடைமையாளர் குத்தகை நிலத்தில் நான்கில் ஒரு பகுதியைச் சொந்தச் சாகுபடிக்காகப் பெறலாம். ஆனால், அதன் உயர்மட்ட அளவு 5 ஏக்கர்களாக நிர்ணயிக்கப்பட்டது. வாரம் மொத்த உற்பத்தி அளவில், நான்கில் ஒரு பங்கிற்கு அதிகமாக இருக்கக் கூடாது.

மணிப்பூரிலும், திருப்பூரிலும் குத்தகையாளர்களின் சாகுபடிக் காலத்தை உறுதியளிப்பதாகச் சட்டங்கள் இயற்றப்பட்டன.

நிலவுடைமையாளர்கள் சொந்தச் சாகுபடிக்காக நிலத்தைப்பெறும் உரிமையைக் கொண்டிருந்தார்கள். சொந்தச் சாகுபடிக்கு நிலம் எடுத்துக்கொள்ளப்படாத இடங்களில் குத்தகையாளர்கள் நிலத்தின் மீதான உரிமைகளைப் பெற்றனர். வாரத்தின் அளவு மொத்த உற்பத்தியில் நான்கில் ஒரு பங்கு ஐந்தில் ஒரு பங்குவரை இருக்கலாம்; அல்லது நிலவரியைப்போல நான்கு மடங்கிற்கு அதிகமாக இருத்தல் கூடாது.

முதல் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களில் நிலவுடைமையாளர்கள் நிலத்தைச் சொந்தச் சாகுபடியின்கீழ்க் கொண்டு வருவதற்கு 5 ஆண்டுகளுக்குமேல் அனுமதிக்கத் தேவையில்லை என்று நிர்ணயிக்கப்பட்டது. மூன்றாவது திட்டத்தின் பரிந்துரை இனியும் நிலத்தைச் சொந்தச் சாகுபடியின்கீழ்க் கொண்டுவர அனுமதிக்கவில்லை ஆனால், குடும்ப நிலவுடைமையின் அளவிலோ அல்லது அதற்குக் குறைவாகவோ நிலத்தைப் பெற்றிருந்தால் சொந்தச் சாகுபடி செய்யும் உரிமை அமைந்துள்ளது. பெரிய நிலடைமைகளைச் சொந்தச் சாகுபடிக்கு எடுத்துக்கொள்வதற்கான காலம் முடிவடைந்துவிட்டது. நிலத்தைச் சொந்தச் சாகுபடிக்குத் திரும்பப் பெறாத இடங்களில் குத்தகையாளர்களுக்கு நிலவுடைமைகளின்மீது உரிமைகளை வழங்க வேண்டும் என்று மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் பரிந்துரைத்தது. மூன்றாவது திட்டக் காலத்திற்குள் இந்த நிலை நிறைவேற்றப்படவேண்டும் என்று குறிப்பிடப்பட்டது.

பல மாநிலங்களுக்கு இடையே உயர்ந்த மட்ட வாரத்தின் அளவு மாறுபடுகின்றது. பல மாநிலங்களில் உயர்ந்தபட்ச வாரம் மொத்த உற்பத்தியில் நான்கில் ஒரு பங்காகவோ அல்லது அதற்குக் குறைவாகவோ பொருந்தியுள்ளது. ஆந்திரப்பிரதேசம், ஜம்முகாஷ்மீர், தமிழ்நாடு, பஞ்சாப், மேற்குவங்காளம் ஆகிய மாநிலங்களில் இன்றும்கூட வாரம் மொத்த உற்பத்தியில் இரண்டில் ஒரு பங்கு முதல் மூன்றில் ஒரு பங்குவரை இருக்கின்றது. பெரும்பாலான மாநிலங்களில் வாரம் விளைபொருள்களின் ஒரு பங்காகவே இருக்கிறது. தானியமாக அளிக்கப்படும்போது வாரத்தை ஒழுங்குபடுத்துவது கடினமாக உள்ளது. குத்தகைச் சீர்திருத்தங்களைச் சிறப்பாகச் செய்யவேண்டுமென்றால், வாரம் பணமாக அளிக்கப்படவேண்டும். ஆனால், வாரத்தைப் பண மதிப்பில் கணக்கிடுவது கடினமாக உள்ளது.

குத்தகையாளர்களின் நலனைக் காக்க எல்லா மாநில அரசுகளும் தீவிர நிலையைக் கொண்ட சட்டங்களை இயற்றவேண்டும்.

சட்டங்கள் இன்றிக் குத்தகைக் காலத்திற்குப் பாதுகாப்பு அளிக்க முடியாது. இந் நிலைகளோடு சிறிய நிலவுடைமையாளர்களின் நலத்தைக் காப்பதும் அவசியமாகிறது. பல மாநிலங்களில் சட்டங்கள் நிறைவேற்றப்பட்டு விட்டாலும், அவை சிறப்பாகச் செயல்படுத்தப்படவில்லை. தற்பொழுதும் நிலவுடைமையாளர்கள் சொந்தச் சாகுபடிக்காக நிலத்தைத் திரும்பப் பெறுவதற்கான வசதி உள்ளது. இதன்மூலம், குத்தகையாளர்கள் பெற்றுள்ள உரிமைகளில் உறுதியின்மை திகழ்வதை அறியலாம். அவர்கள் இப்போதும் போதுமான பாதுகாப்பைப் பெற்றிருக்கவில்லை.

சொந்தச் சாகுபடிககு நிலத்தை எடுத்துக் கொள்வதற்கான காலம் முடிவடைந்துவிட்டதால் அதை அனுமதிக்கக்கூடாது என்று மூன்றுவது திட்டம் பரிந்துரைத்தது. ஆனால், குடும்ப நிலவுடைமையின் அளவுக்குக் குறைவான நிலத்தைக் கொண்ட நிலவுடைமையாளர்கள் இதனால், பாதிக்கப்படவில்லை. குத்தகை நிலங்களைத் தாங்களாகவே அளிக்க நிலவுடைமையாளர்கள் முன் வருவதில்லை. பல விசாரணைகள், ஆய்வுகள் ஆகியவற்றின் மூலமாக இஃது அறியப்பட்டதாக மூன்றுவது திட்டம் குறிப்பிட்டது. இவ் வகைச் சிக்கலைத் தவிர்ப்பதற்கான பரிந்துரைகளும் செய்யப் பட்டன. நிலவுடைமையாளர்கள் குத்தகைச் சீர்திருத்தங்களின் காரணமாக உபரி நிலத்தை அளித்த நிலை, பீஹார், மைசூர், மத்தியப்பிரதேசம், மணிப்பூர், திரிபுரா ஆகிய இடங்களில் மூன்றுவது திட்டத்தின் பரிந்துரைகளுக்கேற்ப ஒழுங்குபடுத்தப் பட்டது. மஹாராஷ்டிரம், குஜராத் ஆகிய மாநிலங்களில் பல நிலைகள் பதிவு செய்யப்பட்டன. எனினும், மூன்றுவது திட்டத்தின் பரிந்துரைகள் யாவும் நிறைவேற்றப்படவில்லை. மொத்தமாக ஆராயுமிடத்துப் பல மாநிலங்களிலும் திட்டத்தின் பரிந்துரைகளுக் கேற்ப நிர்வாக அமைப்புமுறை மாறவில்லை. மாநில அரசுகளின் சட்டங்களும் அவற்றிற்கேற்ப நிறைவேற்றப்படவில்லை.

பழைய முறையும், புதிய முறையும்

பொதுவுடைமை நோக்கைக் கொண்ட அரசியல்வாதிகள், வேளாண்மையிலும், தொழில் துறையிலும் இருக்கக்கூடிய முதலாளித்துவ இயல்பை முடிவுக்குக் கொண்டுவரவேண்டு மென்று கூறுகின்றனர். அதனால், பல நன்மைகள் விளையு மென்றாலும், கிராம மக்கள் அம் முறையில் நம்பிக்கை கொண்ட வர்களாக இருப்பதில்லை. பொதுவுடைமைக் கருத்துக்கான ஆதரவு குறைந்த அளவிலேயே இருக்கின்றது. இந்தியக் கிராம மக்கள் பிறர் உடைமைகளில் ஆசை வைக்காதவர்கள்;

தியாக மனப்பான்மையும் அவர்களுக்கு மிகுதியாக உண்டு. நிலமற்ற குத்தகையாளர்கள் குறித்துக் குல்பர்கா மாநிலத்தின் பஷீர்ஹாதாபாத் என்னுமிடத்தில் விசாரணை ஒன்று நடத்தப் பட்டது. அப்போது அவர்கள் கூறியதாவது,

'பல நூற்றாண்டுகளாக நிலவுடைமையாளர்களும், அவர்களுடைய மூதாதையர்களும் நிலத்தின்மீதான உரிமைகளைக் கொண்டிருந்தார்கள். பழக்க வழக்கங்களின் அடிப்படையில் அந்த நிலத்தை நாங்கள் சாகுபடி செய்தோம். நிலவுடைமையாளர் ஏதாவது ஒரு காரணத்திற்காகச் சொந்தச் சாகுபடி செய்ய நிலத்தைக் கேட்டால் அதைத் திரும்பவும் அவர்களிடமே எவ்வித உளைச்சலும் இன்றி அளித்தல் எங்கள் கடமை. மாவட்ட ஆட்சியாளர் (District Collector) நிலத்தைத் திருப்பித்தரத் தேவையில்லை என்று கூறினால், அதை நாங்கள் மனமுவந்து ஏற்றுக்கொள்ள மாட்டோம். எங்களில், பெரும்பாலானவர்கள் பாதுகாப்புக் குத்தகைச் சான்றிதழ்களை நிலக்கிழார்களிடமோ அல்லது தாசில் அலுவலகத்திலோ அளித்து விட்டோம். அதே நிலங்களில் நாங்கள் கூலி உழைப்பாளர்களாகப் பணியாற்ற முழு மனத்தோடு சம்மதிக்கிறோம். நிலக்கிழார்கள் நிலத்தைத் திரும்பப் பெறச் சம்மதிக்கா விட்டால், நாங்கள் பிற வேலை வாய்ப்புகளைத் தேடிச் செல்ல வேண்டிவரும். அதற்கான உலகம் பெரியதாகவே இருக்கின்றது.'

வேளாண்மைச் சீர்திருத்தச் சட்டங்களில் ஐயப்பாடு கொண்டிருக்கும் குத்தகையாளர்களில் பலர், இன்றும் பல சட்டத்திற்கேற்ப வாரத்தை அளிப்பதில்லை. நீண்ட காலத்திற்கு முன்னர், ஒப்பந்தம் செய்துகொண்ட வாரத்தையே அவர்கள் நிலவுடைமையாளர்களுக்குத் தருகின்றார்கள். உற்பத்தியில் சுமார் 50 சதவீதத்தை வாரமாக அளிப்பவர்களும் இருக்கின்றனர். இதன் காரணமாக உற்பத்தி அதிகரிக்கும்போதும் குத்தகையாளர்கள் அதிக நன்மை அடைவதில்லை. நிலவுடைமையாளர்களுக்கும் குத்தயையாளர்களுக்கும் இடையே ஒருவகைப் பிணைப்பு அமைந்துள்ளது. அப் பிணைப்பைத் தகர்ப்பதில் சட்டங்களால் வெற்றி காண முடிவதில்லை. நீண்ட காலத்தில் மட்டுமே அவர்களுக்கு இடையே அமைந்திருக்கும் தொடர்பை ஓரளவு குறைக்க இயலும். வேளாண்மை மக்கள்தொகை வெவ்வேறு நிலைகளிலும் அறியலாம். ஒத்துழையாமை, அக்கறையின்மை ஆகியவற்றைக் கொண்டுள்ளது. இதில் வேண்டத்தக்க மாற்றங்களைப் பெறப் பத்தாண்டுக் காலமும் போதாது. இவ் வகையில் கிராம மக்களை எழுத்தறிவு

பெற்றவர்களாக மாற்றுவது இன்றியமையாதது. அதன் மூலமே சட்டங்களை இயற்றுவதிலும், நிறைவேற்றுவதிலும் வெற்றியைப் பெற இயலும்.

**நிலவுடைமையாளர் நிலத்தைத் திரும்பப் பெறுவதும், குத்தகை யாளர் நிலத்தை வாங்குவதும்**

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் சொந்தச் சாகுபடிக்காகக் குத்தகை நிலங்களைத் திரும்பப் பெறுவது குறித்தும், அதை ஒழுங்குபடுத்துவதுபற்றியும் சில முக்கிய பரிந்துரைகளைச் செய்தது. அவற்றைப் பின்வருமாறு குறிப்பிடலாம்.

1. குறிப்பிட்ட காலத்திற்குள்ளாகவே சொந்தச் சாகுபடிக்காக எடுத்துக்கொள்ளப்படும் நிலம் அறிவிக்கப்படவேண்டும்; முன்னமேயே அந்த நிலமானது பிரித்தளிக்கப்படவேண்டும்.

2. குடும்ப நிலவுடைமையின் மூன்றில் ஒரு பங்கிற்குக் குறைவான அளவு நிலத்தைக் கொண்டுள்ள சிறிய நிலவுடைமை யாளர் சொந்தச் சாகுபடி செய்ய எல்லா நிலத்தையும் அளிக்க வேண்டும். இதற்கு அதிகமான அளவில் நிலமானது அமைந் திருந்தால், குறைந்தபட்ச நிலத்தைக் குத்தகையாளருக்கு அளித்துவிட்டு எஞ்சியதை நிலவுடைமையாளரே சாகுபடி செய்யலாம்.

3. சொந்தச் சாகுபடிக்காக நிலத்தைத் திரும்பப் பெறுவதற் கான காலம் 5 ஆண்டுகளாக நிர்ணயிக்கப்படவேண்டும்.

4. உடல் ஊனமுற்றோரும், விதவைகளும், வயதுக்கு வராத வர்களும், நாட்டைப் பாதுகாக்கும் பணியில் ஈடுபட்டுள்ளவர்களும் தங்களுடைய நிலத்தைக் குத்தகைக்கு விடமுடியும். தங்களின் குறைபாடுகள் நீங்கிச் சாகுபடி செய்யும் திறனைப் பெற்ற பின்னர், குத்தகை நிலத்தை அவர்கள் திரும்பப் பெறலாம்.

நிறைவேற்றப்பட்ட, நிறைவேற்றப்படும் குத்தகைச் சீர் திருத்தச் சட்டங்களை மாநிலங்களின் அடிப்படையில் நான்கு பெரும் பிரிவுகளாகப் பகுக்கலாம்.

1. உத்தரப் பிரதேசம், டில்லி, மேற்கு வங்காளம் ஆகிய வற்றில் நிலத்தைத் திரும்பப் பெறுவது அனுமதிக்கப்படவில்லை.

2. கேரளம், பீஹார், குஜராத், மத்தியப்பிரதேசம், மைசூர், மஹாராஷ்டிரம், ஒரிஸ்ஸா, ராஜஸ்தான், ஹிமாசலப்பிரதேசம், மணிப்பூர் ஆகிய இடங்களில் ஓரளவு நிலத்தைச் சொந்தச் சாகு

படிக்காகப் பெறுவது அனுமதிக்கப்படுகிறது. ஆனால், குறிப்பிட்ட குறைந்த அளவு நிலம் குத்தகையாளருக்கு அளிக்கப்படவேண்டும்.

3. பஞ்சாப், அஸ்ஸாம் முதலிய மாநிலங்களின் அரசு, குத்தகையாளர்களுக்கு நிலத்தை அளிக்க முயலுகின்றது. அவ்வாறு அரசால் நிலம் அளிக்கப்பட்டுவிட்டால் நிலவுடைமையாளர் சொந்தச் சாகுபடிக்கான நிலத்தைப் பெற்றுவிடலாம். நிலவுடைமையாளர் திரும்பப் பெறும் நிலத்திற்குப் பதிலாகக் குத்தகையாளர் நிலத்தை வேறு வகையில் பெற்றிருக்கவேண்டும். அரசே அந்த நிலத்தை அளிப்பதற்கான முயற்சிகளை மேற்கொள்ளுகின்றது.

4. ஆந்திரப் பிரதேசம், தமிழ்நாடு ஆகிய மாநிலங்களில் ஒரு குறிப்பிட்ட அளவுவரை நிலவுடைமையாளர் சொந்தச் சாகுபடிக்கான நிலத்தைப் பெறலாம். குத்தகையாளர்களுக்கு ஒரு குறிப்பிட்ட குறைந்த அளவு நிலத்தை அளிக்கத் தேவையில்லை. மேற்கு வங்காளத்தின் 'டர்காதார்கள்' தானியங்களைப் பங்கிட்டுக் கொள்பவர்கள் ஆவர். அவர்கள் குத்தகையாளர்களாகக் கருதப் படுவதில்லை. எனவே, குத்தகையாளர்களின் உரிமைகளையும் அவர்கள் பெற்றிருக்கவில்லை. ஆனால், உண்மையான அடிப் படையில் ஆராயும்போது அவர்களுக்குக் குத்தகையாளர்களின் இயல்புகள் பலவும் அமைந்துள்ளன.

நிறைவேற்றப்பட்டுள்ள குத்தகைச் சீர்த்திருத்தச் சட்டங்கள் சில உண்மைகளைப் புலப்படுத்துகின்றன. முதலாவதாக, நில வுடைமையாளர்களுக்கு நிலத்தைச் சொந்தச் சாகுபடிக்காகத் திரும்பப் பெறும் உரிமை அளிக்கப்பட்டமையால், குத்தகையாளர் களின் உரிமையில் உறுதியற்ற நிலை நிலவியது. சட்டத்தின்மூலம் உண்மையான நன்மைகளைக் குத்தகையாளர்கள் பெறவில்லை. முதல் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களிலும் நிலத்தைத் திரும்பப் பெறுவதற்கான கால வரையறை ஐந்தாண்டுகளாக இருக்க வேண்டுமென்று கருதப்பட்டது. குடும்ப நிலவுடைமையின் அளவிற்குக் குறைவான நிலத்தைக் கொண்டவர்களுக்கு நிலத் தைத் திரும்பப் பெறும் உரிமை அளிக்கப்பட்டது. மற்றவர்களுக்கு அவ்வுரிமை அளிக்கப்படக் கூடாது.

குத்தகையாளர்களின் நிலையில் இருக்கும் இவ் வகை உறுதியின்மையின் காரணமாக வேளாண்மை வளர்ச்சி தடைப் படுகின்றது. இரண்டாவதாகக் குடும்ப நிலவுடைமையின்

அளவிற்கோ அல்லது அதற்குக் குறைவாகவோ நிலத்தைக் கொண்டிருப்பவர்களின் நலனைப் பெருக்குவதற்குத் தேவையான நடவடிக்கைகள் எடுக்கப்படவேண்டும். அதற்குத் தனிப்பட்ட வழிமுறைகளைப் பின்பற்றுவது அவசியம். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் அடிப்படை நிலவுடைமைக்குக் (Basic holding) குறைவான நிலத்தைக் கொண்டவர்கள் சொந்தச் சாகுபடி செய்ய அனுமதிக்கப்படவேண்டும் என்று சொல்லப்பட்டது. அல்லது அந்த நிலத்தை அவர்கள் குத்தகைக்கும் விடலாம்.

சிலர் அடிப்படை நிலவுடைமைக்கும், குடும்ப நிலவுடைமைக்கும் இடைப்பட்ட அளவில் நிலத்தைப் பெற்றிருப்பார்கள். அவர்களுக்கும் சொந்தச் சாகுப்படிக்கான நிலத்தை அளிக்கலாம். ஆனால், குறிப்பிட்ட காலத்திற்குள் அவர்கள் அதைச் செய்ய வேண்டும். சாகுபடி நிலத்தில் பாதியை இவர்கள் பெறுமாறு செய்யலாம். எனினும், குத்தகையாளர் குறைந்தது சிக்கனப் பண்ணை அளவிலாவது நிலத்தைப் பெற்றிருக்குமாறு செய்யவேண்டும். அதற்குக் குறைவான அளவில் அவர்கள் நிலத்தைக்கொண்டிருந்தாலோ அல்லது நிலத்தைப் பெற்றில்லாத நிலையிலோ அரசு நிலமளிக்க முன்வர வேண்டியது அவசியம்.

சிறிய நிலவுடைமையாளர்களை ஊக்குவிப்பது பொது நோக்கமாக அமைய வேண்டும். மிகச் சிறிய நிலவுடைமைகளைக் கொண்டுள்ளவர்கள் கூட்டுறவுப் பண்ணைச் சங்கங்களை அமைக்குமாறு செய்வது நல்லது. கூட்டுறவுப் பண்ணைச் சங்கத்தில் உறுப்பினராவதன்மூலம் வேறு வகைப்பட்ட வேலைவாய்ப்புகளும் பெருகும். விருப்பமான தொழிலில் ஈடுபட வழி பிறக்கும். இவ்வித நிலையில் உள்ளவர்கள் குறிப்பிட்ட காலத்திற்குள் சொந்தச் சாகுபடியை மேற்கொள்ளவேண்டும் என்று வரையறுப்பது தேவையில்லை

பெரிய நிலவுடைமையாளர்கள் தங்களுடைய குடும்பத்தினர் உறவினர் ஆகியோருக்கு நிலத்தைப் பிரித்துக் கொடுத்துச் சிறிய நிலவுடைமையாளர்களாக மாறுவதும் உண்டு. நிலச் சீர்த்திருத்தச் சட்டங்களுக்குப் பயந்து நடுத்தர நிலவுடைமையாளர்களும் இம்முறையைப் பின்பற்றுகின்றனர்: இதன் காரணமாகச் சட்டங்களால் எதிர்பார்க்கும் அளவிற்கு நன்மைகளைப் பெற முடிவதில்லை. இக் குறைபாட்டைத் தவிர்ப்பதற்காகக் குஜராத்திலும், மஹாராஷ்டிரத்திலும் 1957ஆம் ஆண்டில் சட்டமானது திருத்தப்பட்டது. அதன்மூலம், ஜனவரி 1, 1952 என்று முன் தேதியிட்டு நிலவுடைமைகளின்மீது உச்சவரம்பு விதிக்கப்பட்டது.

கேரளத்திலும் சிறிய நிலவுடைமையாளர்களுக்குத் தனிச் சலுகைகள் அளிக்கப்பட்டன. ஆனல், சட்ட ஏய்ப்புகளைத் தடுப்பதற்காக டிசம்பர் 18, 1957 என்ற நாளில் இருந்திருந்த நிலவுடைமைகளின் அளவே கணக்கில் எடுத்துக்கொள்ளப் பட்டது. அதற்குப் பின்னர் செய்யப்பட்ட பிரிவினைகளும், விற்பனைகளும் கருதப்படவில்லை. இதன்மூலம் உண்மையான சிறிய நிலவுடைமையாளர்கள் நன்மையடைந்தனர். இவ்விதக் கவன நடவடிக்கைகளால் குத்தகையாளர்களும், சிறிய அளவில் நிலத்தைக் கொண்டிருப்பவர்களும் பயனடைவார்கள்.

## குத்தகையாளர்களுக்கு நிலவுடைமைகளின் மீதான உரிமைகள்

சாகுபடி உரிமைக்குப் பாதுகாப்பளிப்பது, வாரத்தின் அளவைக் குறைப்பது ஆகிய இரண்டும் குத்தகைச் சீர்திருத்தத்தில் முக்கிய நிலைகளைக் கொண்டுள்ளன. பெரும்பாலான குத்தகையாளர்களை நிலவுடைமையாளர்களாக மாற்ற முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. இரண்டாவது திட்டத்தில் ஒவ்வொரு மாநிலமும் சொந்தச் சாகுபடிக்காக நிலம் எடுத்துக்கொள்ளப்படாத பகுதிகளில் குத்தகையாளர்களை நிலவுடைமையாளர்களாக மாற்றுவதற்கான தனித் திட்டத்தைக் கைக்கொள்ள வேண்டுமென்று சொல்லப்பட்டது. நிலக்கிழாருக்கும் குத்தகையாளருக்கும் இடையே நிலவும் கசப்புணர்ச்சியை முற்றிலுமாக நீக்குவது இதன் மூலம் சாத்தியமாகும்.

அரசுக்கும் குத்தகைச் சாகுபடியாளர்களுக்கும் இடையே நேரடித் தொடர்பை ஏற்படுத்த வேண்டுமென்று வலியுறுத்தப் பட்டது. குடும்ப நிலவுடைமையின் அளவிலோ அல்லது அதற்குக் குறைவான அளவிலோ நிலத்தைக் கொண்டிருப்பவர்கள் 5 ஆண்டுகளுக்குள்ளாகச் சொந்தச் சாகுபடிக்காக நிலத்தைத் திரும்பப் பெறலாம். நிலம் திரும்பப் பெறப்படாத இடங்களில் உள்ள குத்தகையாளர்கள் ஐந்தாண்டுகளுக்குப் பின்னர், நிலவுடைமை உரிமைகளைப் பெறுவார்கள். ஆண்டுதோறும் எவ்வளவு குத்தகையாளர்களுக்கு நிலவுடைமை உரிமைகள் வழங்கப்பட்டன என்பதை மாநில அரசுகள் தெரிவிக்கவேண்டுமென்றும் பரிந்துரைக்கப்பட்டது. ஏனெனில், குத்தகையாளர்களின் நிலை எந்த அளவிற்குத் திருந்தியுள்ளது என்பதை அறிவது கடினமாக உள்ளது.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் குத்தகையாளர்களை நிலவுடைமை உரிமை பெற்றவர்களாக மாற்றுவதில்

ஓரளவு முன்னேற்றம் ஏற்பட்டது. பஞ்சாப் முதலிய சில மாநிலங்களில் விருப்பப்பட்ட குத்தகையாளர்களுக்கு மட்டுமே நிலத்தை வாங்கும் உரிமை அளிக்கப்பட்டது. இரண்டாவது திட்ட நோக்கில் ஆராயும்போது இதைத் திருப்திகரமான முறை என்று கூற முடியாது. நிலத்தை வாங்கும் திறனைக் குத்தகையாளர்களில் பலர் கொண்டிருப்பதில்லை. வாங்கும் உரிமையைப் பல குத்தகையாளர்கள் பயன்படுத்திக் கொள்வதில்லை. பல மாநிலங்களில் சொந்தச் சாகுபடிக்கு நிலத்தைத் திரும்பப் பெருத இடங்களின் குத்தகையாளர்களுக்கும் அரசுக்கும் இடையே நேரடித் தொடர்பு ஏற்படுத்தப்பட்டது. இந்த நிலை பின்வரும் மூன்று வழிகளின் வாயிலாகப் பெறப்படலாம்.

1. அரசு குத்தகையாளர்களை உடைமையாளர்களாக அறிவித்து நிலவுடைமையாளர்களுக்குத் தவணை முறையில் இழப்பீட்டுத் தொகையை அளிக்குமாறு செய்யலாம். ஆனல், அளிக்கப்படாத தவணைகள், நிலவரி ஆகியவற்றிற்கு அரசே பொறுப்பேற்கவேண்டும். அவற்றைக் குத்தகையாளர்களிடமிருந்து வசூலிக்கும் பொறுப்பை அரசு ஏற்பது நல்லது.

2. அரசு இழப்பீட்டுத் தொகையை அளித்து உடைமையாளர்களிடமிருந்து நிலத்தைப் பெற்று, அதைக் குத்தகையாளர்களுக்குத் தரலாம். இதன் மூலமும், நிலவுடைமை உரிமைகளைக் குத்தகையாளர்களுக்குத் தரலாம். அரசு இழப்பீட்டுத் தொகையைக் குத்தகையாளர்களிடமிருந்து தவணை முறையில் வசூலித்துக் கொள்ளலாம்.

3. நிலக்கிழார்களின் சாகுபடி நில உரிமைகளை அரசு ஏற்றுக் கொண்டு குத்தகையாளர்களோடு நேரடித் தொடர்பை ஏற்படுத்திக் கொள்ளலாம். நிலக்கிழார்களுக்கு அளிப்பதற்குப் பதிலாக அரசிடம் வாரத்தை அளிக்கவேண்டும். அந்த வாரம் நியாய வாரமாக அமையும். அல்லது இழப்பீட்டுத் தொகையை முழுமையாக அளித்து நிலவுடைமையின் எல்லா உரிமைகளையும் குத்தகையாளர்கள் பெறலாம்.

இவை மூன்றில், முதல் முறை குஜராத், மஹாராஷ்டிரம், மத்தியப்பிரதேசம், ராஜஸ்தான் ஆகிய இடங்களிலும், இரண்டாவது முறை டில்லியிலும், மேற்கு வங்காளத்திலும் பின்பற்றப்படுகின்றன; மூன்ருவது முறை உத்தரப்பிரதேசத்திலும், கேரளத்திலும் கைக்கொள்ளப்படுகின்றது. தமிழ்நாட்டில் குத்தகையாளர்களுக்கு நிலவுடைமை உரிமைகளை வழங்குவதற்கான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படவில்லை. அஸ்ஸாமிலும், பீஹாரிலும் நில உச்ச

வரம்பிற்கு அதிக நிலத்தைக் கொண்டிருக்கும் நிலக்கிழார்களின் நிலத்தைச் சாகுபடி செய்யும் குத்தகையாளர்களுக்கு மட்டுமே நிலவுடைமை உரிமைகள் தரப்படும்.

சமீப காலமாக எண்ணற்ற சட்டங்கள் பல மாநிலங்களிலும் இயற்றப்படுகின்றன. எனினும், எந்த அளவிற்குக் குத்தகையாளர் நிலவுடைமை உரிமைகளைப் பெற்றிருக்கின்றனர் என்பதைச் சரியாக அறிய முடியவில்லை. குஜராத்திலும், மஹாராஷ்டிரத்திலும் நிறைவேற்றப்பட்ட சட்டத்தின் அடிப்படையில் 1.3 மில்லியன் குத்தகையாளர்கள் 2.4 மில்லியன் ஏக்கர்கள் நிலத்தின் மீதான உரிமைகளைப் பெற்றனர். உத்தரப்பிரதேசத்தில் குடும்பப் பண்ணை நிலங்களின் சுமார் 1.5 மில்லியன் குத்தகையாளர்களும், சார்புக் குத்தகையாளர்களும் சுமார் 2 மில்லியன் ஏக்கர்களைக் கொண்டிருந்தார்கள் அவர்களுக்கும் அரசுக்கும் இடையே நேரடித் தொடர்பு ஏற்பட்டது. யூனியன் பிரதேசமாகிய டில்லியில் சுமார் 25,000 ஏக்கர்கள் நிலத்தின் உரிமை சுமார் 18,000 குத்தகையாளர்களுக்கும், சார்புக் குத்தகையாளர்களுக்கும் மாற்றியமைக்கப்பட்டது.

சொந்தச் சாகுபடிக்கு நிலம் எடுத்துக்கொள்ளப்படாத இடங்களின் குத்தகையாளர்களுக்கு நிலவுடைமை உரிமைகளை மூன்றாவது திட்டக் காலத்திற்குள் வழங்க வேண்டுமென்று பரிந்துரைக்கப்பட்டது. வேளாண்மை நிலவுடைமைகளின்மீது உச்ச வரம்பைச் செயல்படுத்தும்போது உபரியாக உள்ள நிலத்தின் உரிமைகளைக் குத்தகையாளர்கள் பெறுவர். குடும்ப நிலவுடைமையின் அளவிற்கு அதிகமாக உள்ள நிலத்தை உடைமையாளர்கள் சொந்தச் சாகுபடிக்காகத் திரும்பப் பெற இயலாத நிலையைச் சட்டத்தின்மூலம் ஏற்படுத்தவேண்டுமென்று முன்னமேயே கூறப்பட்டது. பல மாநிலங்களிலும் குடும்ப நிலவுடைமையின் அளவு மாறுபட்டதாக இருக்கக்கூடும்.

அரசு பெரிய நிலவுடைமையாளர்களின் சாகுபடி நிலவுரிமையைப் பறித்து, அதைக் குத்தகையாளர்களுக்கு அளிக்கலாம். அரசு அவ்வுரிமையை அளித்தமைக்காக இழப்பீட்டுத் தொகையைக் குத்தகையாளர்களிடம் இருந்து தவணை முறையில் வசூலிக்கலாம். இவை யாவற்றிற்கும், தெளிவான சட்டங்களை நிறைவேற்றுவது தேவையாகின்றது. நிலவுடைமையாளர்களிடம் இழப்பீட்டுத் தொகையைக் குத்தகையாளர்கள் அளிப்பதைவிட, அரசிடம் அதை நேரடியாகத் தருவதே சிறந்தது. இதன்மூலம்,

குத்தகைச் சீர்திருத்தச் சட்டம் சிறப்பான நன்மையைத் தரும் வகையில் நிறைவேற்றப்பட்டதாகக் கருதப்படும். நிலக்கிழார்களுக்கும், குத்தகையாளர்களுக்கும் நடுவே எவ்விதப் பூசலும் எழாது.

சிறிய நிலவுடைமையாளர்களின் நிலத்தில் பயிரிடும் குத்தகையாளர்கள் நன்மையடைவார்களா என்ற வினவும் எழுப்பப்படுகிறது. கணக்கற்ற சிறிய நிலவுடைமையாளர்கள் இருக்கின்றமையால், இதற்கான தீர்வைக் காண்பது கடினமாகும். இதில் ஒரே மாதிரியான கொள்கையைக் கடைப்பிடிப்பதும் தவறேயாகும். சூழ்நிலைகளுக்கேற்ப இப் பிரச்சினைக்குத் தீர்வு காண மாநில அரசுகளே முயற்சிகளை மேற்கொள்ளவேண்டும்.

மூன்றாவது திட்டக் காலத்திற்குள் சொந்தச் சாகுபடிக்காக நிலம் எடுத்துக்கொள்ளப்படாத இடங்களில் குத்தகையாளர்களுக்கு நிலவுடைமைகளின் உரிமைகள் வழங்கப்பட்டுவிடும் என்று எதிர்பார்க்கப்பட்டது. குஜராத், மஹாராஷ்டிரம், மத்தியப் பிரதேசம், ராஜஸ்தான், உத்தரப்பிரதேசம், மேற்கு வங்காளம், டில்லி, ஹிமாசலப்பிரதேசம், மணிப்பூர், *திரிபுரா ஆகிய, இடங்களில் குத்தகையாளர்கள், சார்புக் குத்தகையாளர்கள் ஆகியோருக்கும் அரசுக்கும் நேரடித் தொடர்பு ஏற்பட்டது. பஞ்சாப் மாநிலத்தில் இப்பொழுதும் நிலத்தை வாங்குவது குத்தகையாளர்களின் விருப்பம்போல் விடப்பட்டுள்ளது. ஆனால், அவ்வுரிமையைப் பெரும்பாலான குத்தகையாளர்கள் பயன்படுத்திக் கொள்வதில்லை. சில மாநிலங்கள் குத்தகைச் சீர்திருத்தச் சட்டங்களை இயற்றவில்லை. பல மாநிலங்களில் சட்டங்கள் சிறப்பாக நிறைவேற்றப்பட்டாலும், அவை சரியாகச் செயல்படுத்தப்படுவதில்லை.

நிலவுடைமைகளின் மீது உச்சவரம்பு

இரண்டாவது திட்டக்காலத்தில் ஆந்திரப் பிரதேசம், அஸ்ஸாம், குஜராத், கேரளம், மத்தியப்பிரதேசம், மஹாராஷ்டிரம், ஒரிஸ்ஸா, பஞ்சாப், ராஜஸ்தான், உத்தரப்பிரதேசம், மேற்கு வங்காளம், யூனியன் பிரதேசங்கள் ஆகிய இடங்களில் நிலவுடைமைகளின்மீது உச்சவரம்பை நிர்ணயிப்பதற்கான சட்டங்கள் இயற்றப்பட்டன. பீஹார், தமிழ்நாடு, மஹாராஷ்டிரம் ஆகிய மாநிலங்களில் நில உச்சவரம்பிற்கான மசோதா மாநில சட்டப் பேரவைகளில் கொண்டுவரப்பட்டது. பஞ்சாபில் அனுமதிக்கப்பட்ட அளவிற்கு அதிகமாக உள்ள நிலம் குத்தகையாளர்களின் புனர்வாழ்விற்காகப் பயன்படுத்தப்பட்டது. நிலக்கிழார்களால்

வெளியேற்றப்பட்ட குத்தகையாளர்கள் இதன்மூலம் பயனடைந்தனர்.

வெவ்வேறு மாநிலங்களிலும் நில உச்சவரம்பின் அளவு வேறுபட்டதாக இருக்கின்றது. சட்டங்களை நிறைவேற்றிய பின்னர், அவற்றைச் சிறப்பாகச் செயல்படுத்துவதிலேயே வெற்றி அடங்கியுள்ளது. இழப்பீட்டுத் தொகையை அளிக்கும் முறையும் பல மாநிலங்களுக்கிடையே வேறுபடுகின்றது. அம் முறையின் மாறுபாடான பல இயல்புகளைக் கீழ்க்காணுமாறு குறிப்பிடலாம்.

1. இழப்பீட்டுத் தொகை பணமாகவோ, கடன் பத்திரங்களாகவோ அளிக்கப்படலாம்; அல்லது தொகையின் ஒரு பகுதி பணமாகவும், மற்றொரு பகுதி கடன் பத்திரங்களாகவும் தரப்படலாம்.

2. கடன் பத்திரங்கள் இரு வகைப்படும். அவை, 'செலாவணித் தன்மை' (Negotiable) கொண்டவை; 'செலாவணித் தன்மை இல்லாதவை' (Non-negotiable) என்பனவாம்.

3. நிலவுடைமையாளர்களை நிலத்தை நேரிடியாக விற்பனை செய்ய அனுமதிக்கலாம். நிலத்திற்கான விலையை 5 ஆண்டுத் தவணைகளில் வசூலித்துக் கொள்ளலாம். வட்டித் தொகை ஆண்டொன்றுக்கு 4.5 சதவீதமாக இருக்கவேண்டும். ஒரிஸ்ஸாவில் இம் முறை பின்பற்றப்பட்டது.

4. நிலவுடைமையாளர்களின் அந்தஸ்திற்கு ஏற்ப இழப்பீட்டுத் தொகையின் அளவு வேறுபடுகிறது. உதாரணமாக, உத்தரப் பிரதேசத்தில் பூமிதார் (Bhumidar)' நிலவரியைப் போல 40 மடங்கும், 'சர்தார்' (Sardar) 20 மடங்கும், 'அஸாமி' (Asami) 5 மடங்கும் இழப்பீட்டுத் தொகையைப் பெறுகின்றனர்.

5. கேரளத்தில் இழப்பீட்டுத் தொகை முதல் ஐந்து ஏக்கர்களின் ஆண்டு வாரத்தைப் போன்று 16 மடங்குகள் என்று தீர்மானிக்கப்பட்டது. அதற்கு அதிக நிலத்திற்கு இழப்பீட்டுத் தொகை படிப்படியாகக் குறையும். எடுத்துக்காட்டாக 100 ஏக்கர்களுக்கு மேல் உபரி நிலம் இருந்தால், வாரத்தைப்போல 5 மடங்கு இழப்பீட்டுத் தொகை மட்டுமே அளிக்கப்படும்.

6. மைசூர் மாநிலத்தில் கைப்பற்றப்பட்ட நிலத்தின் நிகர ஆண்டு வருமானத்தைப்போல 10 மடங்கு இழப்பீட்டுத் தொகை அளிக்கத் திட்டமிடப்பட்டுள்ளது.

7. கைப்பற்றப்பட்ட நிலம் 'அடிப்படை நிலவுடைமையின்' அளவிற்குக் குறைவாக இருந்தால், இழப்பீட்டுத் தொகை பணமாக அளிக்கப்படும். நிலம் பெரிய அளவில் இருந்தால் பணமும், கடன் பத்திரங்களும் தரப்படும். மிகப் பெரிய அளவு நிலங்களுக்குப் பணம் குறைந்த வீதத்திலும், கடன் பத்திரங்கள் அதிக வீதத்திலும் அளிக்கப்படும்.

8. பீஹாரில் முதல் தர நிலத்திற்கான இழப்பீட்டுத் தொகை ஓர் ஏக்கருக்கு ரூ. 1,200, ஆகவும், நான்காம் தர நிலத்திற்கு ரூ 400 ஆகவும் உள்ளது. நில வளத்திற்கேற்ப இழப்பீட்டுத் தொகையின் அளவு வேறுபடுகின்றது.

தனிப்பட்ட ஒருவரின் நிலவுடைமைமீது உச்சவரம்பை விதிப்பதா அல்லது ஒரு குடும்பத்தினர் கொண்டுள்ள மொத்த நிலவுடைமைமீது உச்சவரம்பைக் கொண்டு வருவதா என்பது பற்றி இரண்டாவது திட்டத்தில் ஆராயப்பட்டது. உச்சவரம்புச் சட்டங்கள் செயல்படுத்தப்படும்போது பல வகையிலும் வேறுபடுகின்றன. ஆந்திரப் பிரதேசம், ஜம்மு-காஷ்மீர், ஒரிஸ்ஸா, பஞ்சாப், உத்தரப்பிரதேசம், மேற்கு வங்காளம் முதலிய பல மாநிலங்களில் தனிப்பட்டவர்களின் நிலவுடைமைமீது உச்ச வரம்பு விதிக்கப்பட்டுள்ளது. இம் மாநிலங்களில் கூட்டு இந்துக் குடும்பங்கள் இருப்பது குறிப்பிடத்தக்கது.

மத்தியப் பிரதேசத்தின் கூட்டு இந்துக் குடும்பத்தில் உள்ள ஒவ்வொருவரும் உச்சவரம்பின் அளவிற்கு நிலத்தைக் கொண்டிருக்க உரிமை பெற்றிருக்கின்றனர். கூட்டு இந்துக் குடும்பங்களுக்கு இது பொருந்துவதாக இருக்கின்றது. அஸ்ஸாம், குஜராத், கேரளம், ராஜஸ்தான், ஆகிய மாநிலங்களில் நில உச்சவரம்பு ஒரு குடும்பத்திற்கான மொத்த நிலத்தின்மீது விதிக்கப்படுகிறது. 'குடும்பம்' என்பது சட்டத்தின்மூலம் வரையறுக்கப்படுகின்றது. இதே முறை தமிழ் நாட்டிலும், மைசூரிலும் பின்பற்றப்பட்டு வருகின்றது. எனவே, பலவேறு மாநிலங்களிலும் அமைந்துள்ள சூழ்நிலைகளுக்கேற்ப உச்ச வரம்பு தனிப்பட்ட ஒருவரின் நிலத்தின்மீதோ, ஒரு குடும்பத்தின் மொத்த நிலத்தின் மீதோ விதிக்கப்படுகின்றது.

ஒரு சட்டம் நிறைவேற்றப்பட்ட பின்னர், அதில் உள்ள குறைகளைத் திருத்தங்களால் சரி செய்ய வேண்டும். திருத்தங்களின் மூலம் சட்டங்களைச் செயல்படுத்துவது எளிதாக அமையும். சட்டங்களில் அடிப்படை மாற்றங்களைச் செய்வது தேவை

யில்லாதது. நில உச்சவரம்பால் பாதிக்கப்பட்டவர்களின் நிலையை ஆராய்வதும் அவசியம். ஒட்டு மொத்தமாகக் கூறுமிடத்து, சமீப ஆண்டுகளில் நிலச் சீர்திருத்தங்களின் முக்கிய நோக்கமாகிய நிலத்தை மறுபகிர்வு செய்யும் நிலை கருதத்தக்க அளவிற்குக்கூட வெற்றியைப் பெற்றிருக்கவில்லை. அவற்றால் கிராமப் பொருளாதாரத்தில் சிறப்பான விளைவுகள் தோன்றி இருக்கவில்லை. நில உச்சவரம்பு விதிப்பால் கிராமப் புறங்களில் தோன்றியுள்ள சிறிதளவு மாற்றம் குறிப்பிடத்தக்கதாக இல்லை.

நில உச்ச வரம்புச் சட்டங்கள்பற்றிப் பெருமளவிற்குப் பேசப்படுகிறது. ஆனால், அவற்றின்மூலம் நன்மைகள் விளைந்திருக்கவில்லை. பல மாநிலங்களிலும் சட்டம் இயற்றப்படுவதற்கு முன்னரே, அதைப்பற்றி மக்கள் அறிந்துகொள்ளுகிறார்கள். எனினும் முன் தேதியிட்டுச் சட்டம் நிறைவேற்றப்படுகிறது. அந்தத் தேதி, மசோதா கொண்டு வரப்பட்ட தேதியாகவும் இருக்கக் கூடும். அந்தத் தேதிக்குப் பின்னர், நிலத்தை மாற்றம் செய்வது அஸ்ஸாம், குஜராத், கேரளம், தமிழ்நாடு, மஹராஷ்டிரம், ராஜஸ்தான், உத்தரப்பிரதேசம், மேற்கு வங்காளம் ஆகிய மாநிலங்களில் அனுமதிக்கப்படுவதில்லை. ஆந்திரப் பிரதேசம் முதலிய ஒரு சில மாநிலங்களில் இவ் வகைக் கட்டுப்பாடு இருக்கவில்லை. சட்டம் இயற்றப்பட்ட பின்னருங்கூட, மத்தியப்பிரதேசம், ஒரிஸ்ஸா ஆகிய மாநிலங்களில் உச்ச வரம்பிற்கு அதிகமாக உள்ள உபரி நிலத்தை விற்க நிலவுடைமையாளர்கள் அனுமதிக்கப்படுகின்றார்கள். ஆனால், குறிப்பிட்ட நிலையில் உள்ள சிலர் மட்டுமே இவ்வாறு செய்ய இயலும்.

குடும்ப அங்கத்தினரிடையே நிலத்தைப் பங்கிட்டுக்கொள்ள வாய்ப்பு இருக்கின்றது. எனவே, தனிப்பட்டவர்களின்மீது உச்ச வரம்பை விதிப்பதைவிடக் குடும்ப நிலவுடைமைகளின்மீது விதிப்பது நல்லது. பல மாநிலங்களில் தனிப்பட்டவர்கள்மீதும், சிலவற்றில் குடும்ப நிலவுடைமைகளின்மீதும் உச்சவரம்பு விதிக்கப்பட்டுள்ளது. இவற்றில் உள்ள குறைபாடுகளை நீக்கச் சட்டத் திருத்தம் தேவை. நிலவுடைமைகள் மாற்றப்படும்போது பின்வரும் முறைகள் நன்கு ஆராயப்படவேண்டும்.

1. பல இடங்களில் உச்சவரம்பினின்றும் பாதிக்கப்படாமல் இருக்க நிலங்கள் மாற்றிக் கொள்ளப்படுகின்றன. இந்த நிலையைத் தவிர்க்க முன் தேதி குறித்து உச்ச வரம்புச் சட்டங்களைச் செயல்படுத்தவேண்டும். தேவைப்பட்டால் சட்டங்களைத் திருத்தி

யமைப்பதும் இன்றியமையாதது. குறிப்பிட்ட இடங்களின் சூழ் நிலைகளுக்கேற்ப முன்தேதி நிர்ணயிக்கப்படலாம்.

2. குறிப்பிட்ட தேதிக்குப் பின்னர்ச் செய்யப்படும் மாற்றங் களின் வேறுபாட்டை உணர்வது அவசியம்.

(அ) குடும்ப உறுப்பினர்களுக்கு இடையே செய்யப்படும் மாற்றங்கள்;

(ஆ) பதிவு செய்யப்பட்ட பத்திரங்களின் அடிப்படையில் செய்யப்படும் மாற்றங்கள்;

(இ) எவ்விதப் பத்திரங்களும் இன்றிச் செய்யப்படும் மாற் றங்கள். முதல் நிலை, மூன்ருவது நிலை ஆகியவற்ருல் செய்யப்படு கின்ற மாற்றங்களைச் செல்லுபடியாகாததாக ஆக்கவேண்டும். இரண்டாவது வழியில் செய்யப்படும் மாற்றங்கள் வேறுபாடான நிலையைக் கொண்டவை. இவ் வழியில் நிலமற்றவர்களும், சிறிய நிலவுடைமையாளர்களும் நிலம் வாங்கக்கூடும். இவ்வகை மாற்றங் களுக்குப் பாதுகாப்பளிப்பது அவசியமாகின்றது. குடும்ப நில வுடைமையின் அளவுவரை நிலம் வாங்குவதை அனுமதிக்கலாம்.

3. மேற் குறிப்பிடப்பட்ட வழிகளில் நில மாற்றங்களைச் செய்யத் திறமையான நிர்வாக அமைப்பை ஏற்படுத்துவதும் அவசியமாகும்.

### விதிவிலக்குகள்

திட்டக்குழு நில உச்சவரம்பிற்கான விதிவிலக்கைப் பின்வரும் நிலைகளுக்காகச் செய்யலாம் என்று பரிந்துரைத்தது.

1. காஃபி, தேயிலை, ரப்பர்த் தோட்டங்கள் (பாக்குமரம், தென்னைமரத் தோட்டங்களுக்கும் விலக்களிக்க வேண்டுமெனக் கோரப்படுகின்றது);

2. பழத்தோட்டங்கள்;

3. பால் பொருள்கள், கம்பளி உற்பத்தி, கால்நடைப் பராமரிப்பு ஆகியவற்றைச் செய்யும் 'சிறப்புத் தேர்ச்சிப் பண்ணைகள்' (Specialised farms);

4. சர்க்கரை ஆலைகளால் நடத்தப்பட்டுவரும் கரும்புப் பண்ணைகள் (மஹாராஷ்டிரத்தில் இவ்விதி விலக்கு அமைந்திருக்க வில்லை. 'மஹாராஷ்டிர மாநிலப் பண்ணைக் கழகம்' (Maharastra

State Farming Corporation) ரூ. 2 கோடி மூலதனத்தைக் கொண்டு சர்க்கரை ஆலைகளால் கரும்புச் சாகுபடி செய்யப்பட்ட 95,000 ஏக்கர்கள் நிலத்தை வாங்கத் திட்டமிட்டது. ஆலை முதலாளிகள் இதனால் தொழில் முன்னேற்றம் பாதிக்கப்பட்டு இலாபம் குறையுமென்று எண்ணினர். மற்றொருபுறத்தில் அரசு ஆலைகளின் நிர்வாக ஊழல்களைத் தவிர்க்கலாம் என்று கருதியது. இதன் வாயிலாகக் கரும்பு உற்பத்தியைப் பலமடங்கு பெருக்கலாம் என்றும் அது எண்ணியது. கரும்புப் பண்ணைகளைத் திறமையாக நடத்தலாம் என்றும் கூறப்பட்டது);

5. அதிக முதலீட்டைக் கொண்டு கணிசமான அளவு நிலங்களில் சிறப்பாக நிர்வகிக்கப்படும் பண்ணைகள்;

6. புதிதாகச் சாகுபடிக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுவரும் நிலம்;

இன்னும் சில மாநிலங்களில் வேறுவகைப்பட்ட விதி விலக்குகளும் அளிக்கப்பட்டுள்ளன. அவையாவன:

7. மாநில அரசுகளும், உள்ளாட்சி அமைப்புகளும் உடைமையாகக் கொண்டுள்ள நிலம்;

8. மத நிறுவனங்களும் தரும அமைப்பு நிறுவனங்களும் பெற்றுள்ள நிலம் (உதாரணமாகப் பசு வதையைத் தடுக்கும் சங்கங்கள், கிராமச் சங்கங்கள் முதலியவற்றைக் கூறலாம்); அன்பளிப்பாகத் தரப்படும் பூதான, கிராமதானப் பகுதிகளில் உள்ள நிலம்;

9. கூட்டுறவுப் பண்ணை நடத்தப்படும் நிலம் என்பனவாம்.

மேற்கண்ட ஒன்பது விதிவிலக்குகளைச் செயல்படுத்துவது இந்தியாவின் பதினைந்து மாநிலங்களுக்கு இடையேயும் ஒரே மாதிரியாக இருப்பதில்லை. சில மாநிலங்களில் நிலச் சீர் திருத்தங்களின் வெவ்வேறு நிலைகளும் நிறைவேற்றப்படும்போது தேதிகள் குறிப்பிடப்படுகின்றன. மேலே குறிப்பிட்ட விதி விலக்குகள் அளிக்கப்படுகின்றமைக்குச் சில காரணங்களும் உள்ளன.

முதலாவதாக, தோட்டப் பண்ணைகளுக்கும் தொழில் நிறுவனங்களுக்கும் நெருங்கிய தொடர்பு இருக்கவேண்டும். வேளாண்மைப் பணிகளைச் சிறப்பாக நிறைவேற்றவும், தொழில் முன்னேற்றத்தைக் காக்கவும் அஃது உதவும்.

இரண்டாவதாக, தோட்டப்பண்ணை, கால்நடைப் பராமரிப்பு, பால் பண்ணை முதலியவற்றிற்கான முதலீடு நீண்ட கால அடிப்படையில் செய்யப்படவேண்டும். நீண்ட காலத்தில் மட்டுமே இவற்றின் உற்பத்தியைப் பெருக்கி இலாபத்தைப் பெற முடியும். எனவே, இவ்வகை வேளாண்மையைச் சார்ந்த தொழில்களுக்கு நில உச்ச வரம்பினின்றும் விலக்களிக்கலாம்.

மூன்றாவதாக, திறமையாக நிர்வகிக்கப்பட்டுச் சிறப்பாகப் பணிபுரியும் பெரிய பண்ணைகளைத் தொடர்ந்து செயல்பட அனுமதிக்கலாம். அவை அதிக முதலீட்டைக் கொண்டவை; நிரந்தரமான அமைப்புகளைப் பெற்றிருப்பவையாகும். அவற்றின் நிலவுடைமைகளின்மீது உச்சவரம்பை விதித்தால் உற்பத்தியின் அளவு குறையக்கூடும். உச்சவரம்பை விதிப்பது பல இடர்களைத் தோற்றுவிக்குமாதலால், அதைத் தவிர்ப்பது நன்று.

எல்லா மாநிலங்களிலும் தோட்டப்பயிர்ப் பண்ணைகளுக்கு உச்சவரம்பிலிருந்து விலக்களிக்கப்பட்டுள்ளது. சிறப்புத் தேர்ச்சிப் பண்ணைகளிலும் இந்த நிலையே திகழ்கின்றது. திறமையாக நிர்வகிக்கப்படும் பண்ணைகள், சர்க்கரை ஆலைகள் உடைமையாகக் கொண்டுள்ள கரும்புப் பண்ணைகள் ஆகியவற்றின்மீது, உச்ச வரம்பு விதிக்கப்படும் நிலை பல மாநிலங்களுக்கு இடையேயும் வேறுபடுகின்றது. ஆந்திரப்பிரதேசம், அஸ்ஸாம், குஜராத், மத்தியப்பிரதேசம், ஒரிஸ்ஸா, பஞ்சாப், ராஜஸ்தான் ஆகிய மாநிலங்களில் திறமையாக நிர்வகிக்கப்படும் பண்ணைகளுக்கு விலக்களிக்கச் சட்டங்கள் நிறைவேற்றப்படுகின்றன. பீஹாரிலும், மைசூரிலும் இதுபற்றி ஆராயப்பட்டு வருகின்றது. சில மாநிலங்களில் விதிவிலக்கு அளிக்கப்பட்டிருந்தாலும், அது செயல்படுத்தப்படவில்லை. கேரளம், மஹாராஷ்டிரம், தமிழ்நாடு ஆகியவற்றில் இவ் வகை விதிவிலக்கு அளிக்கப்படவில்லை. உத்தரப் பிரதேசத்தில் இயந்திரமயமாக்கப்பட்ட பண்ணைகளின் உபரி நிலத்தை அரசு ஏற்றுக்கொண்டது. அந்த நிலத்தில் அரசின் பண்ணைகள் அமைக்கப்பட்டன. திறமையான நிர்வாகத்திற்குப் பொருத்தமான நிர்வாகிகள் நியமிக்கப்பட்டார்கள். அப்பண்ணைகள் சிறப்பாக இயங்கி வருகின்றன.

சர்க்கரை ஆலைகளால் உடைமையாகப் பெறப்பட்டுள்ள கரும்பு உற்பத்திப் பண்ணைகளுக்கு உச்ச வரம்பினின்றும் விலக்களிக்க ஆந்திரப்பிரதேசம், அஸ்ஸாம், மத்தியப்பிரதேசம், ஒரிஸ்ஸா, ராஜஸ்தான், பஞ்சாப் ஆகிய மாநிலங்களில் சட்டங்கள்

நிறைவேற்றப்பட்டுள்ளன. மைசூரிலும், பீஹாரிலும் அதற்கான மசோதா கொண்டுவரப்பட்டுள்ளது. தமிழ்நாட்டில் சட்டத்தின் மூலம் 'கரும்பு ஆலைக்குழு' (Sugar Factory Board) அமைக்கப் பட்டது. அது தனிப்பட்ட ஆலைகளின் நிலங்களுக்கு விலக்கு அளிக்கவேண்டுமா, தேவையில்லையா என்பதை ஆய்வதற்காக ஏற்படுத்தப்பட்ட ஒன்றாகும். சர்க்கரை ஆலையின் நிதி நிலைமை, கரும்பின் தேவை முதலியவற்றைப்பற்றி முடிவு எடுக்கப்படு வதற்கு முன்னர் ஆராயப்படவேண்டும். மஹாராஷ்டிரத்தில் கரும்பு உற்பத்திப் பண்ணைகளுக்கு உச்ச வரம்பினின்றும் விலக் களிக்கப்படவில்லை. ஆனால், அங்குப் போதுமான அளவில் கரும்பு உற்பத்தியைப் பெருக்குவதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்படு கின்றன. பல கரும்புப் பண்ணைகளும் உற்பத்திச் சிக்கனங்களைப் பெறுவதற்காக இணைக்கப்படுகின்றன. இதன் காரணமாக நியாய விலையில் சர்க்கரை ஆலைகளுக்குத் தேவையான கச்சாப் பொருளின் அளிப்புப் போதுமான அளவில் இருக்கின்றது. இணைப்புப் பண்ணைகள் உபரி நிலங்களில் தொடங்கப்படுகின்றன. அவையும் கரும்பு உற்பத்தியில் ஈடுபட்டுள்ளன. கரும்புப் பண்ணை களுக்கு விலக்களிக்காமையால் மஹராஷ்டிரத்தின் சர்க்கரைத் தொழில் பாதிக்கப்படவில்லை.

திறமையாகப் பணியாற்றிய பண்ணைகளுக்கும், சர்க்கரை ஆலைகளின் கரும்புப் பண்ணைகளுக்கும் நில உச்ச வரம்பிலிருந்து விலக்களிக்கலாம் என்று இரண்டாவது திட்டத்தில் பரிந்துரைக்கப் பட்டது. மூன்றாவது திட்டக் காலத்திலும் இப் பரிந்துரைகளைச் செயல்படுத்த முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. இவற்றால், நன்மைகள் விளைந்துள்ளன என்றே கூறவேண்டும். மற்றொரு புறத்தில் வேறொரு மாநிலம் இப் பரிந்துரைகளைச் செயல்படுத்த இயலாத சூழ்நிலைகளைக் கொண்டிருக்கக்கூடும், எனவே, அங்குப் புதியதொரு முறை கைக்கொள்ளப்படுகின்றது. உச்ச வரம்பி னின்றும் விலக்களிக்காவிட்டாலும் சர்க்கரை ஆலைகளுக்குப் போதுமான அளவில் கரும்பு உற்பத்தி அமையுமாறு காத்தல் நல்லது.

### உபரி நிலங்களின் மறுபகிர்வு

வேளாண்மை நிலவுடைமைகளின்மீது உச்சவரம்பு இரு முக்கிய நோக்கங்களுக்காக விதிக்கப்படுகிறது. முதலாவதாக, ஏற்றத்தாழ்வுகளைக் குறைத்துத் தீவிரக் கூட்டுறவுக் கிராமப் பொருளாதாரத்தின் முன்னேற்றத்திற்கு வழி கோலவும், இரண்டா வதாக, கிராமப்புறங்களில் நிலமற்றவர்களுக்கு நிலமளிப்பதற்

காகவும் நிலவுடைமைகள் மறுபகிர்வு செய்யப்படுகின்றன. இந்த நோக்கங்களை வெற்றி கொள்வது எளிதன்று. மேலும் உச்ச வரம்பு விதிப்பால் கிடைக்கும் உபரி நிலம் குறைவான அளவிலேயே அமையும். உபரி நிலத்தை விரைவாக மறுபகிர்வு செய்வதற்கான நடவடிக்கையை எடுப்பதும் அவசியம். உச்ச வரம்பு விதிப்பால் பெறப்படும் உபரி நிலம், தரிசு நிலம், பூதான இயக்கத்தின் மூலம் கிடைக்கப்பெறும் நிலம் ஆகியவற்றை ஒருங்கு திரட்டி மறுபங்கீடு செய்யலாம். இதன் வாயிலாகக் கணிசமான அளவிற்கு நிலத்தைத் திரட்ட முடியும்.

நிலத்தைப் பெற்றவர்களுக்குப் போதுமான கடன் வசதிகள் அளிக்கப்படவேண்டும். பிற வசதிகளையும் அவர்களுக்குத் தருதல் நல்லது. இவற்ருல் சாகுபடியின் திறன் உயரும். சொந்தச் சாகுபடிக்காக நிலக்கிழார்கள் எடுத்துக்கொண்டதால் நிலமிழந்த குத்தகையாளர்கள் இருக்கின்றனர்; நிலமற்ற கூலி உழைப்பாளர்கள் உள்ளனர். இவர்களைத் தவிர மிகச் சிறிய அளவில் நிலத்தைக்கொண்ட விவசாயிகளும் இருக்கின்ருர்கள். உச்ச வரம்பு விதிப்பால் பெறப்பட்ட உபரி நிலத்தை இவர்களுக்கு அளிக்கலாம் என்று இரண்டாவது திட்டத்தில் பரிந்துரைக்கப் பட்டது. கூட்டுறவு முறையின் அடிப்படையில் நிலப்பகிர்வைச் செய்வது நல்லது எனவும் கூறப்பட்டது. பொதுவாக, சட்டங்கள் இயற்றப்பட்டபோது இப் பரிந்துரைகள் ஏற்றுக்கொள்ளப்பட்டன. பொருளாதார ரீதியில் இலாபகரமான நிலவுடைமைகளைக்கொண்ட சிறிய விவசாயிகளைக் கூட்டுறவுப் பண்ணைச் சங்கத்தோடு சேர்ப்பது நல்லது என்றும் இண்டாவது திட்டம் தெரிவித்தது. ஆனுல், அவர்கள் தங்களுடைய நிலத்தைக் கூட்டுறவுப் பண்ணை நிலத்தோடு இணைக்க ஒப்புதல் அளிக்கவேண்டும். இந்த நடவடிக்கையோடு நிதி வசதியையும், தொழில் நுணுக்க உதவியையும் அளித்தல் அவசியமாகின்றது. மூன்ருவது திட்டக் காலத்தில் கூட்டுறவுப் பண்ணைகளின் வளர்ச்சிக்கான நடவடிக் கைகள் எடுக்கப்பட்டன.

திட்டக்குழு உபரி நிலங்களைத் திரட்டுவதிலும், மறு பகிர்வு செய்வதிலும் உள்ள நடைமுறைச் சிக்கல்களைப் பின்வருமாறு குறிப்பிடுகின்றது.

1. வருமான வரிவிதிப்பில் வருமானத்தின் அளவைக் கணிப்பது கடினமாக உள்ளது. அது போன்றே நில உச்சவரம்பை விதிக்கும் போது ஒருவர் பல இடங்களிலும் கொண்டிருக்கும் நிலவுடை மைகளைக் கணக்கில் கொள்ளவேண்டும். ஒருவர் ஒரு கிராமத்தில்

மட்டுமே தம் நிலம் முழுவதையும் கொண்டிருப்பார் என்று உறுதியாகக் கூற முடியாது. அவர் அதே தாலுக்காவில் உள்ள வேறொரு கிராமத்திலோ, அல்லது வேறொரு மாவட்டத்திலோ, மாநிலத்திலோ நிலத்தை உடைமையாகக் கொண்டிருக்கலாம். தற்போதுள்ள கிராமப் பதிவேடுகளின்மூலம் புள்ளி விவரங்களை எளிதாகப் பெறமுடிவதில்லை. ஒரே கிராமத்தில் உள்ள பலவேறு இடங்களில் நிலத் துண்டுகளைக் கொண்டுள்ள ஒருவரின் மொத்த நில அளவை அறிவதும் கடினமாக உள்ளது. அவ்வாறு இருக்கும்போது வெவ்வேறு மாவட்டங்களிலும், மாநிலங்களிலும் உள்ள ஒருவரின் மொத்த நிலத்தைக் கணக்கிடுவது எங்ஙனம்? நிலவுடைமையாளர்களில் எவரும் தங்களுடைய உண்மையான நில அளவைக் கூற முன்வரமாட்டார்கள். வருமான வரி செலுத்தும் பலரும் தங்கள் உண்மை வருமானத்தை ஒப்புக்கொள்ள மறுக்கின்றனர். இந்தியாவில் வருமான வரி ஏய்ப்பு ஆண்டு தோறும் ரூ. 100 கோடி என்ற அளவிற்கும் அதிகமாக இருக்கின்றது. ஆயினும், நம் நாட்டில் வருமான வரி நிர்வாகம் சிறப்பாகவும், திறமையாகவும் இயங்கி வருகிறது. வரி ஏய்ப்புச் செய்பவர் மீது அதிக அபராதங்கள் விதிக்கப்படுகின்றன. இவ்வளவு வசதிகள் இருந்தும் வரி ஏய்ப்புச் செய்யப்படுவது குறிப்பிடத்தக்கது.

2. பெரிய அளவில் நிலவுடைமைகளைக் கொண்டுள்ளவர்கள் பல தரப்பட்ட நிலங்களையும் கொண்டிருப்பார்கள். நில உச்ச வரம்பால் பாதிக்கப்படும்போது அவர்கள் தரக் குறைவான நிலங்களை அளிக்கவே முன்வருவர். எனவே, உச்சவரம்பின் மூலம் பெறப்படும் உபரி நிலங்கள் தரத்தில் தாழ்ந்தவையாகவே இருக்கும்.

3. வெவ்வேறு இடங்களில் சிதறிக்கிடக்கும் சிறிய நிலங்களையும், தரக் குறைவான நிலங்களையும் சாகுபடி செய்யப் பலரும் தயங்குவர். சாகுபடி செய்ய முன்வந்தாலும் கடன், உதவித் தொகை முதலியவற்றை அரசு அளிப்பது அவசியமாகின்றது. தொடர்ந்து எப்பொழுதுமே அரசு இவ்வித உதவிகளை விவசாயிகளுக்கு அளித்து வர முடியாது. சிறு விவசாயிகள் இடர்களையும், இழப்புகளையும் ஏற்கும் திறனற்றவர்களாக இருக்கின்றனர். வசதிகள் குன்றிய நிலையில் சிறு விவசாயிகள் சாகுபடி செய்வதை நிறுத்தி விடுவார்கள்.

**மஹாராஷ்டிரத்தில் நில உச்சவரம்பு**

மஹாராஷ்டிர நில உச்சவரம்புச் சட்டம் சில அடிப்படை நிலைகளை உணர்த்துவதாக இருக்கின்றது. இந்திய அரசியல்

அமைப்புச் சட்டம் மக்கள் யாவரும் தாம் விருப்பம் தொழிலில் ஈடுபடலாம் என்ற உரிமையை அளிக்கிறது. ஆனால், நிலக்கிழார்கள் சொந்தச் சாகுபடிக்காகக் குத்தகையாளர்களிடமிருந்து நிலத்தைப் பெற வழிகள் உள்ளன. தனி ஒருவருக்குக் கிடைக்கக்கூடிய சாகுபடி நிலத்தின் அளவு சுருங்கிக்கொண்டே வருகின்றது. வருமான அடிப்படையில் நிலவுடைமைகளின்மீது உச்சவரம்பு விதிக்கப்படுகிறது. வருமானத்தில் அளவு கட்டுப்படுத்தப்படுவதோடு அதிக வருமானத்தைத் தரக்கூடிய சொத்துகளும் அரசால் பறிக்கப்படுகின்றன. அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியும் திட்டக்குழுவும் நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கான திட்டங்களைத் தீர்மானிக்கின்றன. அத்திட்டங்களை அரசு செயல்படுத்துகிறது.

நிலவுடைமைகளின்மீது உச்சவரம்பு விதிப்பது சிலரால் குறை கூறப்படுகின்றது. ஒரு தொழிற்சாலை உரிமையாளர் ஆண்டொன்றுக்கு ரூ. 30 லட்சம் வருமானமாகப் பெறுகிறார் என்று வைத்துக் கொண்டால், அவர் தம் வருமானத்தில 80 சதவீதத்திற்கு மேல் வருமான வரியாகச் செலுத்த வேண்டும். மிக உயர்ந்த வருமானத்தைப் பெறுபவர்கள் 100 சதவீதத்திற்கும் அதிகமான சொத்து வரியையும் செலுத்த வேண்டியுள்ளது. ஆனால், உரிமையாளரின் தொழிற்சாலையை அரசு ஏற்று அதைத் தொழிற்சாலைத் தொழிலாளர்களிடையே மறுபகிர்வு செய்ய வேண்டுமென்று எவரும் கூற இயலாது. வேளாண்மை நிலங்களின்மீது உச்சவரம்பு விதிக்கப்படும்போது வருமானம் குறைக்கப்படுவதில்லை; வருமானத்தைத் தரக்கூடிய சொத்தே பறிக்கப்படுகிறது. கிராம மக்களில் பலர் வேளாண்மை நிலத்தை மட்டுமே சொத்தாகக் கொண்டிருக்கின்றனர்.

நிலச் சொத்து ஒரு குடும்பத்தில் உள்ள பல உறுப்பினரிடையே பங்கிடப்படுகின்றது. இதனால், தனி ஒருவருக்கான பங்கு நிலம் மிகச் சிறிய அளவில் இருக்கிறது. எனவே, பலர் வசதிக் குறைவால் சாகுபடி செய்வதையே நிறுத்தி விடுகின்றனர். ஆனால் சாகுபடி செய்யாமல் நிறுத்திவிட வேண்டுமென்பது அவர்கள் விருப்பமன்று. தவிர, சில மாநிலங்களில் வேளாண்மை வருமான வரியும் விதிக்கப்படுகின்றது. நில உச்சவரம்பை விதிப்பதைத் தவிர்த்து வளர்வீத வரிமுறையே வேளாண்மைத் துறையில் பின்பற்றலாம். அதன்மூலம் திட்டங்களை நிறைவேற்றத் தேவையான நிதி வசதியையும் பெறலாம். சாகுபடி நிலங்கள் பிரிக்கப்பட்டுத் துண்டாடப்படுகின்ற நிலையையும் குறைக்கலாம்.

உச்சவரம்பை நிலவுடைமைகளின்மீது விதிப்பதன்மூலம் அரசுக்கு உபரி நிலம் கிடைக்கும். உபரி நிலம் கிடைக்கும்போது அரசு பல புதிய பொறுப்புகளையும் ஏற்கவேண்டியுள்ளது. வேலையிழப்பவர்களுக்கு வேலைவாய்ப்பை அளிப்பது அரசின் கடமை. நிலமற்றவர்களிடம் உபரி நிலத்தை அளிக்கும்போது அரசு கடன்களையும் தர வேண்டியுள்ளது; பிற வசதிகளைப் பெருக்குவதும் அவசியமாகின்றது.

பம்பாய் மாநிலத்தில்தான் முதன் முதலாக 1938ஆம் ஆண்டில் வேளாண்மைச் சட்டம் கொண்டு வரப்பட்டது. அதில் பல திருத்தங்களும் செய்யப்பட்டன. நில உச்சவரம்பு விதிப்பது குறித்தும் பம்பாயில் மூன்று சட்டங்கள் இயற்றப்பட்டன. அவை ஒரியல்பான தன்மையைக் கொண்டில்லாமையாலும், திறமைக் குறைவோடு நிறைவேற்றப்பட்டமையாலும் நன்மைகள் விளையவில்லை. எனவே, நான்காவது சட்டம் மஹாராஷ்டிரச் சட்டப் பேரவையால் இயற்றப்பட்டது. நான்காவது சட்டத்தைத் திருத்த ஐந்தாவது மசோதா கொண்டுவரப்பட்டாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. இயற்றப்படுகின்ற சட்டங்கள் பலவும் குறைபாடுகளைக் கொண்டனவாக இருக்கின்றன.

திட்டக்குழு அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி, தேசிய முன்னேற்றக்குழு (National Development Council) ஆகியவை நிலச் சீர்திருத்தங்களைப்பற்றி விரைவான தீர்மானங்களை எடுக்கின்றன. ஒவ்வோர் இரண்டு அல்லது மூன்று ஆண்டுகளுக்கு ஒரு முறை அவற்றின் கொள்கைகளிலும் மாற்றங்கள் தோன்றுகின்றன. சராசரி நிலவுடைமையாளரின் மனத்தில் இதன் காரணமாக உறுதியின்மையும், ஐயப்பாடும் எழுகின்றன. பம்பாய், குத்தகைச் சீர்திருத்தச் சட்டத்தால் முழுமையான நன்மைகள் தோன்றவில்லை என்பதை ஒரு கணக்கெடுப்பு உணர்த்துகிறது. அச் சட்டத்தின்மூலம் நியாய வாரம் நிர்ணயிக்கப்பட்டது. குத்தகையாளர்களுக்குச் சாகுபடிக் காலம் உறுதியளிக்கப்பட்டது. பல உழைப்பாளர் ஒப்பந்தங்களால் நடைமுறையில் இந்த நன்மைகளைக் குத்தகையாளர்கள் பெற முடியாமல் போய்விடுகின்றது.

உற்பத்தியில் 16 முதல் 30 சதவீதம்வரை வாரமாக அளித்தால் போதுமானது என்ற நிலையைக் குத்தகைச் சீர்திருத்தச் சட்டங்கள் ஏற்படுத்தியுள்ளன. எனினும், பல இடங்களில் இன்னும் 50சதவீத உற்பத்தி நிலவுடைமையாளர்களுக்கு வாரமாகத் தரப்படுகின்றது. இதைப் போன்றே நில உச்ச வரம்புச் சட்டத்திலும் குறைபாடுகள்

இருக்கின்றன. அச் சட்டம் நிறைவேற்றப்படுவதற்கு முன்னரே நிலங்கள் விற்பனை செய்யப்பட்டன; குடும்ப அங்கத்தினர்கள், உறவினர்கள் ஆகியோரிடையே பிரிவினை செய்யப்பட்டன. இக் குறைபாடுகளைக் களையவே முன் தேதியிட்டு உச்சவரம்புச் சட்டங்கள் நிறைவேற்றப்படுகின்றன. எனினும், அவை நில வுடைமையாளர்களால் பல வழிகளிலும் ஏய்க்கப்படுகின்றன.

நிலவுடைமைகளின்மீது உச்சவரம்பை விதிப்பதால் 1.1 மில்லியன் ஏக்கர்கள் உபரி நிலம் கிடைக்குமென்று எதிர்பார்க்கப் பட்டது. ஆனால், அந்த நிலத்தின் பெரும்பகுதி தரக்குறைவான தாகவே இருக்கும். தரக்குறைவான நிலம் சிறிய அளவில் தரப்பட் டாலும் அன்பளிப்பாகத் தரப்படும்போது எவரும் அதை மறுப்ப தில்லை. நிலமற்ற சாகுபடியாளர்களும், சிறிய குத்தகையாளர் களும் வறிய நிலையைப் பெற்றுள்ளார்கள். அவர்கள் வெவ்வேறு இடங்களுக்குப் பெயர்ந்து செல்லவும் விரும்புவதில்லை. இதனால், பொருளாதார முன்னேற்றத்திற்கான திட்டங்கள் பாதிக்கப்படு கின்றன. ஆனால், இலவசமாக நிலம் அளிக்கப்படும்போது உழைப்புப் பெயர்ச்சியுள்ள காரணியாக மாறிவிடும். நிலத்தோடு கடன் வசதிகளையும் அளித்தல் அவசியம். அரசு உபரி நிலத்தை மறுபகிர்வு செய்யாமல் வீணே வைத்திருக்கக் கூடாது. அரசின் ஆதரவோடு சாகுபடி நடவடிக்கைகள் நடைபெறவேண்டும்.

கூட்டுறவுப் பண்ணை முறை பல காரணங்களால் வெற்றி பெறுவதில்லை. பொதுவுடைமை நாடுகளாகிய சீனாவிலும், ரஷ்யாவிலும் கூட்டுப்பண்ணை முறையின் மூலம் சிறப்பான வெற்றி பெறப்பட்டுள்ளது. இஸ்ரேல் நாட்டில் கூட்டுறவுப் பண்ணைகள் நல்ல வளர்ச்சியைக் கண்டிருக்கின்றன. முதலாளித்துவம் அமைந் துள்ள அமெரிக்காவிலும், இங்கிலாந்திலும் பெரிய அளவில் தனியார் சாகுபடிப் பண்ணைகள் இருக்கின்றன. இவற்றில் இயந் திரமயமான உற்பத்தி முறை அமைந்துள்ளது. இதன் காரணமாக உற்பத்தியின் அளவு வியத்தகு உயர்வைப் பெற்றிருக்கின்றது. மனித உழைப்புக் குறைவாகவே பயன்படுத்தப்படுகிறது. மஹாராஷ்டிரத்தில் ஒய்வு பெறும் நிலவுடைமையாளர்கள் ரூ. 33 கோடியை இழப்பீட்டுத் தொகையாகப் பெறுவார்கள். அத் தொகை 3 சதவீத வட்டியைத்தரும் கடன்பத்திரங்களாக அளிக்கப்படும். ஓர் ஏக்கருக்கான சராசரி இழப்பீட்டுத் தொகை ரூ. 300 ஆகும். இது சந்தையில் நிலவும் நிலத்தின் விலையைவிடக் குறைவானது. மஹாராஷ்டிரத்திலும் நில உச்சவரம்புச் சட்டத்தை எதிர்த்து 'ரிட் மனுக்கள்' தாக்கல் செய்யப்படுகின்றன.

பதினைந்து ஆண்டுக்கால தவணை முறையின்மூலம் நிலத்தைப் பெறுபவர்களுடமிருந்து இழப்பீட்டுத் தொகை வசூலிக்கப்படும். ஆனால் தவணைகளை வசூலிப்பதில் தோல்வியே நிலவுகின்றது. நில முன்னேற்றத்திற்காக அளிக்கப்படும் 'தக்கவிக் கடன்களையும்' (Taccavi loans), பிற கூட்டுறவுக் கடன்களையும் வசூலிப்பது கடினமாக உள்ளது. இழப்பீட்டுத் தொகையை அளிக்க ரூ. 33 கோடியைத் திரட்டுவதும் எளிதன்று. அரசுக்கு இது பெரிய சுமையாகவே அமையும். மாநில அரசுகள் நிதி வசதியைக் குறைந்த அளவிலேயே கொண்டுள்ளன. குத்தகைச் சீர்திருத்தங்களில் இவ்வாறு சில தவிர்க்க முடியாத சிக்கல்கள் அடங்கியுள்ளன.

நில உச்ச வரம்பை விதிப்பதன்மூலம் சாகுபடி நிலங்கள் சிறிய அளவில் அமையும். அதனால், ஆண்டுதோறும் பல கோடிக் கணக்கான ரூபாய்கள் நஷ்டம் ஏற்படும். குத்தகைச் சீர்திருத்தங்களால் திறமையானவர்கள் நகர்ப் புறங்களுக்குச் சென்று குடியேறி விடுவர். இதன் காரணமாக வேளாண்மைத் தொழில் திறமையான வகையில் செய்யப்படமாட்டாது. நீர்ப்பாசன வசதிகள் பல வேறு இடங்களிலும் மாறுபடுகின்றன. அதற்கேற்ற நில உச்ச வரம்பின் அளவும் வேறுபடுகிறது. புதிதாகச் சாகுபடிக்கு எடுத்துக் கொள்ளப்படும் நிலங்கள் அமைந்துள்ள இடங்களுக்கு நீர்ப்பாசன வசதிகளை அளிப்பது அவசியம்.

### தமிழ் நாட்டில் நில உச்சவரம்பு

கூட்டுறவு இணைப்புப் பண்ணைகளை ஏற்படுத்துவதற்குப் பதிலாகச் சேவைக் கூட்டுறவுகளை ஏற்படுத்துவதற்குத் தமிழ் நாட்டில் அதிக முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளது. இவ்வகையில் தமிழ்நாடு நில உச்சவரம்பு மசோதா சிறப்பியல்பைக் கொண்டிருக்கின்றது. சாகுபடி நிலங்கள் யாவற்றையும் ஒருங்கிணைக்கும் நோக்கம் அமைந்திருந்தால் தனிப்பட்டவர்களின் நிலவுடைமைகளுக்கு உயர்மட்ட வரம்பு விதிக்கத் தேவையில்லை.

ஒரிஸ்ஸா, பீஹார், கேரளம், மைசூர் ஆகிய மாநிலங்களில் நில அளவிற்கேற்ப உச்சவரம்பு விதிக்கப்படுகிறது. ஆனால், தமிழ் நாட்டில் வேளாண்மை வருமான அடிப்படையில் உச்சவரம்பு நிர்ணயிக்கப்படுகின்றது. இது சிறந்த முறையாகும். மேலும், ஆண்டொன்றுக்கு ரூ. 10 நிலவரித் தீர்வை விதிக்கப்படும் நன்செய் நிலம் ஒரு 'திட்ட அளவை ஏக்கர்' என்று வரையறுக்கப் பட்டுள்ளது. இங்கு ஒரு போகச் சாகுபடி, இருபோகச் சாகுபடி ஆகியவற்றிற்கிடையே வேற்றுமை பாராட்டப்படுவதில்லை.

ஆந்திரப் பிரதேசத்தில் செய்யப்பட்ட ஒரு விசாரணையின்படி நன்செய் நிலத்தின் சராசரி நிகர உற்பத்தி கீழ்க்கண்டவாறு கணக்கிடப்பட்டுள்ளது:

| | ஓர் ஏக்கருக்கான நிகர வருமானம் (ரூபாயில்) | |
|---|---|---|
| | முதல் தரம் | இரண்டாம் தரம் |
| ஒரு போகப் பயிர் ... | 191.1 | 111.13 |
| இரு போகப் பயிர் ... | 302.9 | 178.0 |

வேளாண்மைப் பொருள்களின் விலைகள் கடந்த பத்தாண்டுகளில் பல மடங்கு உயர்ந்துள்ளன. தமிழ்நாட்டின் வேளாண்மை உற்பத்தியும் அதிகரித்துள்ளது. எனவே, நம் மாநிலத்தில் ஓர் ஏக்கருக்கான சாரசரி நிகர உற்பத்தி ரூ. 200 என்று கொள்ளலாம். தொடக்கத்தில் கொண்டுவரப்பட்ட மசோதாவின்படி 30 திட்ட அளவை ஏக்கர்கள் அனுமதிக்கப்பட்டன. அஃதாவது ஆண்டொன்றுக்கு ரூ. 6,000 நிகர வருமானத்தைத் தரக்கூடிய அளவு வரை நிலம் வைத்திருக்க அனுமதிக்கப்பட்டது, பம்பாயில் ரூ. 3,600 வருமானத்தைத் தரக்கூடிய நிலத்தையும், ஆந்திரப் பிரதேசத்தில் ரூ. 5,400 வருமானத்தை அளிக்கக்கூடிய நிலத்தையும் உடைமையாகக் கொண்டிருக்கலாம். குடும்ப அங்கத்தினர்களின் எண்ணிக்கை ஐந்துக்கு மேலாக இருந்தால், அதற்கேற்ப அதிக நிலத்தை உடைமையாகப் பெறலாம். வேறு சில மாநிலங்களில் புன்செய் நிலம் திட்ட அளவையாக எடுத்துக் கொள்ளப்படுகிறது. திட்ட அளவை ஏக்கர் என்பது ஒரு மாநிலத்தின் பல பகுதிகளுக்குள்ளாகவே வேறுபடுகின்றது. அதன் அளவு சரியாகக் கணக்கிடப்படுகிறது என்றும் கூற இயலாது.

தரும ஸ்தாபனங்கள், சர்க்கரை ஆலைகளின் கரும்புப் பண்ணைகள், கால்நடைப் பராமரிப்புப் பண்ணைகள், தோட்டப் பயிர்ப் பண்ணைகள் முதலியவற்றிற்கு நில உச்சவரம்பினின்றும் விலக்களிக்கப்படுகின்றது. தமிழ்நாட்டில் சிறப்பாக நிர்வகிக்கப் படும் பண்ணைகள், பழத்தோட்டங்கள், புதிதாகச் சாகுபடிக்கு எடுத்துக் கொள்ளப்படும் நிலம் ஆகியவற்றிற்கு நில உச்சவரம்பிலிருந்து விலக்களிக்கப்படுவதில்லை. சாதாரண நிலவுடைமையாளர்களைப் போலவே குத்தகையாளர்களுக்கும், நிலத்தை அடைமானமாகக் கொண்டவர்களுக்கும் நில உச்சவரம்பு

பொருந்தும். குத்தகையாளர்கள் நிலத்தை வாங்கவேண்டுமென்று இங்கு வற்புறுத்தப்படுவதில்லை.

தமிழ்நாட்டில் குத்தகையாளர்களுக்குப் பாதுகாப்பு வழங்கப் படுகின்றது. நியாய வாரம் நிர்ணயிக்கப்பட்டுள்ளது. நேர்மையற்ற வழிகளில் குத்தகையாளர்களின் உரிமை பறிக்கப்படுவது தடுக்கப் படுகின்றது. பிறமா நிலங்களில் தலத்திலில்லா நிலக்கிழார் முறையை ஒழிப்பதற்கான சட்டங்கள் நிறைவேற்றப்பட்டுள்ளன. தமிழ் நாட்டின் குத்தகைச் சீர்த்திருத்தச் சட்டம் நடைமுறைக்குப் பொருந்தும் நல்லியல்புகள் பலவற்றைக் கொண்டிருக்கின்றது.

ஆனால், நிலவுடைமையாளர் 5 திட்ட அளவை ஏக்கர்களுக்கு அதிகமான நிலத்தைச் சொந்தச் சாகுபடிக்காக எடுத்துக்கொள்ள முடியாது. இது நியாயமற்ற நிலையைக் கொண்டிருக்கின்றது. ஏனெனில், சொந்தப் பண்ணைகளை வைத்திருப்பவர்கள் 30 திட்ட அளவை ஏக்கர்கள்வரை உடைமையாகக் கொண்டிருக்கலாம் என்ற நிலை இருக்கும் போது, நிலத்தைக் குத்தகையாளரிடம் கொடுத்திருக்கும் நிலவுடைமையாளர்கள் 5 திட்ட அளவை ஏக்கர்கள் வரைதான் சொந்தச் சாகுபடிக்கு வைத்துக்கொள்ளலாம் என்பது நியாயமற்றதேயாகும். ஆகவே, நில உச்ச வரம்பால் சொந்தப்பண்ணை வைத்துள்ள பெருநிலக்கிழார்கள் பாதிக்கப்படாத போது, குத்தகைக்கு நிலத்தை அளித்திருக்கும் சிறிய நில வுடைமையாளர்கள் பெரிதும் பாதிக்கப்படுகின்றனர்.

இந்திய அரசியல் அமைப்பு ஒவ்வொருவரும் தங்கள் விருப்பத் திற்கேற்ற வேலையில் ஈடுபடுவதற்கான உறுதியை அளிக்கின்றது. எனினும் அவ்வுறுதி மாநில அரசுகள் இயற்றும் குத்தகைச் சீர் திருத்தச் சட்டங்களால் குலைக்கப்படுகின்றது.

நிலவுடைமையாளருக்கு இழப்பீட்டுத் தொகை 8 அல்லது 10 ஆண்டுத் தவணைகளில் அளிக்கப்படும். அரசு உபரி நிலத்தைப் பெற்றுக் கணிசமான வட்டித் தொகையைக் கொண்ட கடன் பத்திரங்களையும் தரலாம். நிலத்தின் ஆண்டு நிகர உற்பத்தியைப் போல் 9 முதல் 12 மடங்கு என்ற அளவில் இழப்பீட்டுத் தொகை வழங்கப்படும். ஓர் ஏக்கர் நன்செய் நிலத்திற்கான சராசரி இழப்பீட்டுத் தொகை ரூ. 2,400 ஆக அமைந்தது. மிகப் பெரிய நிலக்கிழார்கள் ரூ. 1,800 மட்டுமே ஓர் ஏக்கருக்கான இழப்பீட்டுத் தொகையாகப் பெறுவர். எந்த அளவு உபரி நிலம் கிடைக்கும், எந்த அளவிற்கு இழப்பீட்டுத் தொகை அளிக்கப்படும் என்பது பற்றிய புள்ளிவிவரங்கள் கிடைக்கவில்லை.

ஒரு குடும்பத்தின் அளவு எல்லாக் காலத்திலும் நிலையாக இருப்பதில்லை. அது மாறக்கூடிய ஒன்று. ஒரு காலத்தில் ஒரு குடும்பத்தினரின் எண்ணிக்கை குறைவாக இருக்கக்கூடும். ஆனால், சில காலம் சென்று அங்கத்தினரின் எண்ணிக்கை பெருகவும் வாய்ப்பு உண்டு. இது குறித்துத் திட்டக் குழுவும் சரியான விளக்கத்தைத் தரவில்லை. மேலும் ஒருவர் வேறு தாலுக்காவிலோ, மாவட்டத்திலோ, அல்லது மாநிலத்திலோ நில வுடைமைகளைக் கொண்டிருக்கலாம். நிலவுடைமைகளின் மீதான உச்ச வரம்பு பெரும்பாலும் ஒரு கிராமத்திற்குள்ளாகவே இருக்கும் சாகுபடி நிலங்களையே பாதிக்கிறது. உண்மையான சொத்துகளின் அளவை வெளிப்படையாகவும், நேர்மையோடும் கூற எவரும் முன்வருவதில்லை.

நாட்டின் பல வேறு பகுதிகளிலும் எடுக்கப்பட்ட கணக்கெடுப்பு களின்படி குறைந்த அளவிற்கு மட்டுமே உபரி நிலம் கிடைக்கும் என்று தெரிகின்றது. இதைக் கொண்டு அதிக எண்ணிக் கையில் இருக்கும் நிலமற்ற விவசாயிகளின் நிலப்பசியைத் தீர்க்க முடியாது. நிஜலிங்கப்பா குழு கூட்டுறவு இணைப்புப் பண்ணைகளைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளது. அப் பண்ணைகளைப் பரிசோதனை முறையில் எடுத்துக்கொள்ள வேண்டுமென்றும் அது பரிந் துரைத்தது. கூட்டுறவுப் பண்ணைகளை அமைக்க விவசாயிகள் தாங்களாகவே முன்வரவேண்டும். திட்டக்குழுவின் பரிந்துரைகள் யாவும் தமிழ்நாட்டின் நில உச்ச வரம்பு மசோதாவில் ஏற்றுக் கொள்ளப்படவில்லை. இங்குள்ள சூழ்நிலைகளுக்கேற்பச் சில பரிந் துரைகள் தவிர்க்கப்பட்டுள்ளன. பொதுவாக ஆராயும்போது தமிழ்நாட்டில் குத்தகைச் சீர்திருத்தங்கள் சிறப்பாகவே செய்யப் படுகின்றன.

மைசூரில் நில உச்சவரம்பு

மைசூர் மாநிலத்தில் நிலத்தின் ஆண்டு நிகர வருமானத்திற் கேற்ப உச்சவரம்பு நிர்ணயிக்கப்படவில்லை. அங்கு ஓர் அடிப்படை நிலவுடைமை 2 திட்ட அளவு ஏக்கர்களுக்குச் சமமாகவும், ஒரு குடும்ப நிலவுடைமை 6 திட்ட அளவு ஏக்கர்களுக்குச் சமமாகவும் இருக்கின்றன. வேளாண்மை நிலம் தரத்திற்கேற்ப 7 வகைகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. முதல் தர நிலம் இரு போகச் சாகுபடி செய்யக்கூடியதாகவும், நீர்ப்பாசன வசதிகளைக் கொண்டதாகவும் இருக்கிறது. பொதுவாக, நில உச்சவரம்பு உயர்வாக இருந்தால் தான் தனியார் ஊக்கத்தைக் காக்கமுடியும். அதிக முதலீட்டைச் செய்யவும் அது வழி கோலும்.

உச்ச வரம்பை உயர்வாக நிர்ணயிக்கும்போது உபரி நிலத்தைக் குறைந்த அளவிலேயே பெற இயலும்; குறைந்த அளவில் நிர்ணயம் செய்யும்போது அதிக உபரி நிலத்தைப் பெறலாம். மைசூரின் நில உச்சவரம்பு மசோதாவில் சில சிறப்பியல்புகள் காணப்படுகின்றன. உச்சவரம்பு பற்றிய நிலைகளைத் தீர்மானிக்க நீதி நிர்வாக அலுவலர்கள் நியமிக்கப்படுகின்றனர். இதனால், கையூட்டுகள் வாங்குவது தடுக்கப்படுகின்றது. வரி வருவாய்த் துறை அலுவலர்கள் நியமிக்கப்படும்போது நேர்மையற்ற நிலை அமையக்கூடும்.

மைசூரில் நில உச்ச வரம்பு உயர்வாகவே நிர்ணயிக்கப்பட்டுள்ளது. காஃபி, தேயிலை, ரப்பர்த் தோட்டங்களுக்கு உச்ச வரம்பினின்றும் விலக்களிக்கப்பட்டுள்ளது. ஆனால், மிளகு, உற்பத்தி செய்யப்படும் நிலங்களுக்கும், தென்னந் தோப்புகளுக்கும் விலக்களிக்கப்படவில்லை. பழத் தோட்டங்களுக்கும், அதிக முதலீடு செய்யப்பட்டுத் திறம்பட இயங்கிவரும் பண்ணைகளுக்கும் விலக்களிக்கப்பட்டபோது, மடங்கள் தரும ஸ்தாபனங்கள், கல்வி நிலையங்கள் ஆகியன உடைமையாகக் கொண்டிருந்த நிலங்களுக்கு விலக்களிக்கப்படவில்லை. சர்க்கரை ஆலைகளின் கரும்புப் பண்ணைகள், கால்நடைப் பராமரிப்புப் பண்ணைகள் கம்பளி உற்பத்திக்குப் பயன்படுத்தப்பட்ட நிலங்கள் ஆகியன உச்ச வரம்பால் பாதிக்கப்படவில்லை. சொந்தச் சாகுபடி செய்யும் ஒருவர், நிலம் உள்ள பகுதியின் 10 மைல் சுற்று வட்டாரத்திற்குள் வசிக்க வேண்டும்.

இழப்பீட்டுத் தொகை ஆண்டு நிகர உற்பத்தி மதிப்பைப் போன்று 10 மடங்காக இருந்தது. ஆனால், அதை அளிக்கும் முறை தாராளமானதாக இருந்தது. ரூ. 18,000 வரை பணமாகவும், எஞ்சியுள்ள தொகை மாற்றக்கூடிய வட்டி தரும் கடன் பத்திரங்களாகவும் அளிக்கப்படும். நிலத்தைப் பெறுபவர் அரசிடம் முழுத் தொகையையும் கொடுத்து நிலவுடைமை உரிமையைப் பெறலாம்; அல்லது 20 ஆண்டுத் தவணைகளிலும் செலுத்தலாம்.

விவசாயிகள் சுதந்திர உணர்வோடு கூட்டுறவுப் பண்ணைச் சங்கங்களில் உறுப்பினர்களாகச் சேரவேண்டும். கூட்டுறவுப் பண்ணை முறையை விரைவாகக் குறுகிய காலத்தில் வளர்க்கக் கருதுவது தவறாகும். இரண்டு அல்லது மூன்று தொடர்புள்ள கிராமங்களின் பத்துச் சாகுபடியாளர்கள் (நிலவுடைமையாளர்கள் அல்லது குத்தகையாளர்கள்) இணைந்து கூட்டுறவுப் பண்ணைச் சங்கத்தைத் தொடங்கலாம். ஆனால், அவர்கள் குறைந்தது 50 திட்ட அளவு ஏக்கர்கள் நிலத்தையாவது திரட்டி இருக்கவேண்டும்.

அரசியல் வாதிகளில் சிலர் தீவிரவாதிகளாக இருக்கின்றனர். அவர்கள் தோட்டப் பண்ணைகளின்மீதும் உச்சவரம்பை விதிக்க வேண்டுமென்று கூறுகின்றனர். சிலர் மிதவாதிகளாக இருப்பதால் நில உச்சவரம்பை உயர்த்த வேண்டுமென்ற கருத்தும் நிலவுகின்றது. எல்லா உற்பத்திச் சாதனங்களையும் பொதுவுடைமை ஆக்க வேண்டுமென்பது தீவிரவாதிகளின் கருத்தாகும். நடைமுறைக்கு ஏற்ற நல்லியல்புகளைக் கொண்டதாக மைசூரின் நில உச்சவரம்பு மசோதா உள்ளது. ஆந்திரப்பிரதேசம், மஹராஷ்டிரம், தமிழ்நாடு ஆகிய மாநிலங்கள் சட்டமியற்றுவதற்கு முன்னர் அவ்வியல்புகளை அறிவது நல்லது.

### மைசூர் உச்சவரம்புச் சட்டத்தில் செய்யப்படவேண்டிய திருத்தங்கள்

கீழ்க்காணும் கருத்துகளை மத்திய அரசும், திட்டக் குழுவும் தெரிவித்துள்ளன.

நிலவுடைமைகளின் மீதான குத்தகையாளரின் உரிமைகள் காக்கப்படவேண்டும். நவம்பர் 29, 1958-க்குப் பின்னர் நில உச்சவரம்பைத் தவிர்ப்பதற்காகச் செய்யப்பட்ட நிலவுடைமை மாற்றங்களைச் சட்டத்தின்மூலம் செல்லாததாக்கி விடவேண்டும்.

'சொந்த மேற்பார்வை' செய்பவர் வேளாண்மை உற்பத்தி செய்யப்படும் காலங்களில் கிராமத்திலேயே தங்கி இருக்க வேண்டும். அல்லது சாகுபடியாளர்க் குடும்பத்தின் ஓர் உறுப்பினராவது இருப்பது அவசியம்.

காலக்கெடு முடிவடைந்த பின்னர், நிலவுடைமையாளர்களுக்குச் சொந்தச் சாகுபடி செய்வதற்காக நிலம் அளிக்கக் கூடாது.

பெறப்படும் உபரி நிலம், வரிவருவாய் அலுவலர்கள் மூலம் பதிவு செய்யப்படவேண்டும். அனுமதிக்கப்படுகின்ற அளவுவரை நிலத்தை நிலக்கிழாரிடம் அளித்து, எஞ்சிய உபரி நிலத்தை அரசிடம் அவர்கள் சேர்ப்பிக்கவேண்டும்.

ஆறு ஆண்டுகள் தொடர்ந்து சாகுபடி செய்த குத்தகையாளர்களுக்கு மட்டுமே பாதுகாப்பு அளிக்கப்படுகிறது. நிலவுடைமைகளினின்றும் வெளியேற்றப்படும் எல்லாக் குத்தகையாளர்களுக்கும் நிலமளிக்க முயற்சிகளை மேற்கொள்ளலாம்.

இவற்றின்மூலம் நில உச்சவரம்புச் சட்டங்களை நிறைவேற்றுவதில் உள்ள இடர்ப்பாடுகளை அறியலாம். வேளாண்மைச் சீர்திருத்தங்கள் யாவற்றையும் ஐந்தாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்திற்குள் செய்து முடிப்பதற்கான அறிகுறிகள் காணப்படவில்லை. வேளாண்மை அமைப்புகளில் பல அடிப்படை மாற்றங்களைச் செய்யவேண்டி இருப்பதால்தான் கால தாமதம் ஏற்படுகின்றது.

## வெவ்வேறு மாநிலங்களிலும் நில உச்சவரம்பு

ஒரு சில மாநிலங்களைத் தவிர இந்தியாவின் எல்லா மாநிலங்களிலும் நில உச்சவரம்புச் சட்டங்கள் நிறைவேற்றப்பட்டு விட்டன. ஆனால், அவையாவும் ஒரியல்பானவையாக இல்லை. அச் சட்டங்கள் பலவற்றிலும் குறைபாடுகள் இருக்கின்றன. அவற்றைத் தவிர்க்கச் சட்டங்களில் திருத்தங்களைச் செய்வது அவசியமாகின்றது.

பல பெரிய நிலவுடைமையாளர்கள் நிலத்தை விற்பதாலும், நில வருமானத்தாலும் பெறப்படுகின்ற மூலதனத்தை நகர்ப்புறங்களில் முதலீடாக்குகின்றனர். நகரங்களில் வீடுகளை வாங்குகின்றனர். அதிகரிக்கின்ற வருமானத்தை அவர்கள் நிலத்திலேயே முதலீடாக்குவதில்லை. புதிதாக நிலத்தை வாங்கிப் பெரிய பண்ணைகளை அமைக்க அவர்கள் தயங்குகின்றனர். நிலவுடைமைகளின்மீதான உச்ச வரம்பு அதற்கு ஒரு காரணமாகிறது. இந்த நிலையின் காரணமாகக் கிராமங்களில் வறியவர்களின் எண்ணிக்கை பெருகுகின்றது. அவ் வறியவர்கள் தங்களுடைய நிலையை உயர்த்திக்கொள்ளும் வசதிகளைப் பெற்றிருப்பதில்லை. இவ்வாறு வசதி மிக்கவர்களும், திறமையானவர்களும் கிராமங்களைவிட்டு வெளியேறுவதை அனுமதிப்பது நல்லதன்று. அவர்களை திரும்பவும் வேளாண்மை வளர்ச்சி நடவடிக்கைகளில் ஈடுபடுமாறு செய்வது இன்றியமையாதது. கிராமங்களில் உள்ள வளங்கள் யாவற்றையும் சிறப்பாகப் பயன்படுத்த இதுவே சிறந்த வழியாகும். எனினும் இதைப்பற்றித் திட்டமிடுபவர்களும், அரசும் கருதியதாகத் தெரியவில்லை.

மக்களை அரசு கட்டுப்படுத்தும் நிலையும், கட்டாயப்படுத்தும் நிலையும் படிப்படியாகத் தோன்றுகின்றன. கட்டாயச் சேமிப்புகள் முதலியன ஏற்பட்டிருப்பதை இதற்கு உதாரணமாகக் கூறலாம். நில உச்சவரம்பைக்கொண்டு வருவதற்குக் கிராம மக்கள் பெருமளவிற்கு எதிர்ப்புத் தெரிவிப்பதில்லை. பல தொழில் நிறுவனங்

களைக்கூட அரசு தேசியமயமாக்கத் தயங்குகின்றது. அதற்கான காரணங்கள் அரசியல் சார்புடையவை. நகர்ப்புறங்களில் அதிகச் சொத்துகளைக்கொண்டு உயர்ந்த வருமானத்தைப் பெறுபவர்கள் இருக்கின்றார்கள். அவர்களுடைய வருமானத்தைக் கட்டுப் படுத்துவதற்கான நடவடிக்கைகள் அரசால் எடுக்கப்படுவதில்லை. தொழில் முதலாளிகள் பலரும் அரசியல் செல்வாக்கு உடையவர் களாக இருக்கின்றனர். இதனால், அவர்கள் அரசிடமிருந்து பல வழிகளில் சலுகைகளைப் பெறுகின்றார்கள். அரசின் வரிக் கொள்கையும் அவர்களை அதிகமாகப் பாதிப்பதில்லை.

## நிலவுடைமைகளின் இணைப்பு

முதல் இரண்டு ஐந்தாண்டுத் திட்டக் காலங்களிலும் சிறிய சாகுபடி நிலவுடைமைகளை இணைப்பதன் அவசியநிலை உணர்த்தப் பட்டது. சமுதாய வளர்ச்சித் திட்டங்கள் நிறைவேற்றப்படும் இடங்களில் நிலவுடைமைகளை இணைக்கலாம் என்று திட்டக்குழு பரிந்துரைத்தது. வேளாண்மை முன்னேற்றத்திற்கு இது பெரிதும் உதவும் என்று கருதப்பட்டது. மார்ச் 1961ஆம் ஆண்டிற்குள் 293 இலட்சம் ஏக்கர்கள் நிலம் இணைக்கப்பெற்றது; 107 இலட்சம் ஏக்கர்கள் நிலத்தை இணைப்பதற்கான நடவடிக்கைகள் எடுக்கப் பட்டு வந்தன. மூன்றாவது திட்டத்தில் நிலவுடைமைகளை இணைப் பதற்கான குறியிலக்கு 313 இலட்சம் ஏக்கர்களாக நிர்ணயிக்கப் பட்டது.

பின் வரும் அட்டவணை பல மாநிலங்களிலும் மார்ச் 31, 1961 வரை நிலவுடைமைகளின் இணைப்புப்பற்றிய நிலையை விளக்கும்.

### இந்தியாவில் நிலவுடைமைகளின் இணைப்பு
(இலட்சம் ஏக்கர்களில்)

| மாநிலம்/யூனியன் பிரதேசம் | | 31-3-1961 அன்றுவரை நிறைவேற்றப் பட்டிருந்த பணி | 31-3-1961 அன்று நிறைவேற்றிக் கொண்டிருந்த பணி |
|---|---|---|---|
| ஆந்திரப் பிரதேசம் | ... | 3.12 | 3.55 |
| பீஹார் | ... | 0.60 | 2.43 |
| குஜராத் | ... | 6.52 | 9.21 |
| மஹாராஷ்டிரம் | ... | 13.23 | 20.02 |
| மத்தியப்பிரதேசம் | ... | 40.88 | 4.15 |
| மைசூர் | ... | 9.82 | 4.17 |

முன்பக்கத் தொடர்ச்சி :

| மாநிலம்/யூனியன் பிரதேசம் | | 31.3.1961 அன்றுவரை நிறைவேற்றப் பட்டிருந்த பணி | 31.3.1961 அன்று நிறைவேற்றிக் கொண்டிருந்த பணி |
|---|---|---|---|
| பஞ்சாப் | ... | 147.28 | 14.28 |
| ராஜஸ்தான் | ... | 14.30 | 6.12 |
| உத்தரப்பிரதேசம் | ... | 53.95 | 42.98 |
| டில்லி | ... | 2.04 | — |
| ஹிமாச்சலப்பிரதேசம் | ... | 1.26 | 0.21 |
| மொத்தம் | ... | 293.00 | 107.12 |

நிலவுடைமைகள் ஒருங்கிணைக்கப்பட்ட பின்னர், நிலவுடைமை யாளர்கள் தங்களுக்கான பங்கு நிலத்தைப் பெறுகின்றார்கள். இதன்மூலம் சாகுபடி நில அளவு பெருகுகின்றது. நிலவுடைமை யாளர்கள் ஒரே இடத்தில் தங்களுடைய நிலத்தைப் பெறும் வாய்ப்பும் ஏற்படுகின்றது. திறமையாகச் சாகுபடி நடவடிக்கைகளை மேற்கொள்ள இது வழி வகுக்கின்றது. இயந்திரங்களைப் பயன் படுத்துவதற்கான வாய்ப்பும் தோன்றுகின்றது. அதிக அளவு உற்பத்தி இவற்றின் விளைவாகின்றது.

சொத்துப் பேறு உரிமைச்சட்டங்களில் உள்ள குறைபாடு களால் சாகுபடி நிலங்கள் பிரிக்கப்பட்டு வெவ்வேறு இடங்களிலும் சிறிய அளவில் சிதறிக் கிடக்கின்றன. வேளாண்மை உற்பத்திப் பெருக்கத்திற்கு இது தடையாக உள்ளது. நிலவுடைமை மாற் றங்களை ஒழுங்குபடுத்தவும், குத்தகைக்கு நிலத்தை விடுவதைக் குறைக்கவும், நிலங்கள் உட்பிரிவுப்படுத்தப்படுவதைத் தடுக்கவும், அஸ்ஸாம், பீஹார், குஜராத், மத்தியப் பிரதேசம், மஹாராஷ்டிரம் ஒரிஸ்ஸா, பஞ்சாப், ராஜஸ்தான், உத்தரப் பிரதேசம், மேற்கு வங்காளம், மணிப்பூர், திரிபுரா. ஆந்திரப் பிரதேசம், மைசூர் ஆகிய இடங்களில் சட்டங்கள் நிறைவேற்றப்பட்டுள்ளன. எனினும் ஒரிஸ்ஸா, மேற்கு வங்காளம், பஞ்சாப், ஆகிய மாநிலங்களில் சட்டங்கள் செயல்படுத்தப்படவில்லை. இச் சட்டங்களால் எதிர் பார்த்த அளவிற்கு நன்மைகளை அளிக்க முடியவில்லை.

இரண்டாவது திட்ட இறுதிக்குள் 29.5 மில்லியன் ஏக்கர்கள் இணைக்கப்பெற்றன, மூன்றாவது திட்டக் காலத்திற்கான குறியீடு 31 மில்லியன் ஏக்கர்களாக இருந்தது. மூன்றாவது திட்டத்தின் முதல் இரண்டு ஆண்டுகளில் 14.6 மில்லியன் ஏக்கர்கள் ஒருங்

கிணைக்கப்பட்டன. 1662—63 ஆம் ஆண்டின் இறுதியில் 8 மில்லியன் ஏக்கர்களை இணைக்கும் பணி முடிவடைந்து விட்டது. வேளாண்மைத் தொழிற் சீரமைப்பிற்கு நிலவுடைமைகளை இணைப்பது இன்றியமையாதது.

## பூதானமும், கிராமதானமும்

ஆச்சார்ய விநோபா பாவேயின் தூண்டுதலால் நிலவுடைமை யாளர்களில் பலர் நிலத்தை அன்பளிப்பாகத் தர முன்வந்தார்கள். நிலம் எல்லாருக்கும் பொதுவானது; வறியவர்களும் அதில் பங்கு கேட்பது தவருகாது என்று அவர் கூறினர். நிலவுடைமை யாளர்கள் தங்களுடைய நிலத்தில் ஆறில் ஒரு பகுதியைத் தாங்களாகவே அளிக்க முன்வரவேண்டும். அந்த நிலம் நிலமற்ற விவசாயிகளுக்கு அளிக்கப்படும். ஏப்ரல் 18, 1951-ல் தொடங்கப் பெற்ற இவ் வியக்கம் இன்று இந்தியா முழுவதும் பரவி உள்ளது. பூதான இயக்க வளர்ச்சியை எளிதாக்க ஆந்திரப்பிரதேசம், பீஹார், குஜராத், மத்தியப்பிரதேசம், தமிழ்நாடு, மைசூர், ஒரிஸ்ஸா, பஞ்சாப், ராஜஸ்தான், உத்தரப்பிரதேசம், டில்லி, ஹிமாசலப்பிரதேசம் ஆகிய மாநிலங்களில் சட்டங்கள் இயற்றப் பட்டன. கிராமதானக் கிராமங்களை நிர்வகிப்பதற்கான தனிச் சட்டங்கள் அஸ்ஸாமிலும், ராஜஸ்தானிலும், நிறைவேற்றப் பட்டன. 1962ஆம் ஆண்டின் இறுதிவரை சுமார் 50 இலட்சம் ஏக்கர்கள் பூதானமாக அளிக்கப்பட்டன. அவற்றுள் 10 இலட்சம் ஏக்கர்கள் மறுபகிர்வு செய்யப்பட்டுவிட்டன. 5,342 கிராமங்கள் கிராமதான இயக்கத்தில் சேர்ந்துள்ளன. இவ் வியக்கங்கள் நிலச் சீர்த்திருத்தங்களில் முக்கிய நிலையைக்கொண்டிருந்தன.

டிசம்பர் 31, 1961 வரை வெவ்வேறு மாநிலங்களிலும் அளிக்கப்பட்ட பூதான, கிராமதான அளவுகளைப் பின்வரும் அட்டவணை விளக்கும்.

**பூதான, கிராமதான அன்பளிப்புகள்**

| மாநிலம்/யூனியன் பிரதேசம் | | பூதான அன்பளிப்பு (ஏக்கர்களில்) | பகிரப்பட்ட பூதான நிலம் (ஏக்கர்களில்) | கிராம தானம் (எண்ணிக்கை) |
|---|---|---|---|---|
| 1 | | 2 | 3 | 4 |
| ஆந்திரப்பிரதேசம் | ... | 2,41,952 | 96,947 | 587 |
| அஸ்ஸாம் | ... | 9,752 | ... | 415 |
| பீஹார் | ... | 20,53,094 | 2,57,069 | 85 |
| குஜராத் | ... | 1,03,132 | 49,958 | 148 |



முன்பக்கத் தொடர்ச்சி:

| மாநிலம்/யூனியன் பிரதேசம் | | பூதான அன்பளிப்பு (ஏக்கர்களில்) | பகிரப்பட்ட பூதான நிலம் (ஏக்கர்களில்) | கிராம தானம் (எண்ணிக்கை) |
|---|---|---|---|---|
| கேரளம் | ... | 29,002 | 5,391 | 403 |
| மத்தியப்பிரதேசம் | ... | 3,85,890 | 1,11 039 | 153 |
| தமிழ்நாடு | ... | 80,430 | 18,380 | 254 |
| மஹாராஷ்டிரம் | ... | 1,46,087 | 86 647 | 282 |
| மைசூர் | ... | 19,983 | 2,915 | 58 |
| ஒரிஸ்ஸா | ... | 1,53,042 | 12,940 | 1,929 |
| பஞ்சாப் | ... | 12,897 | 2,706 | 6 |
| ராஜஸ்தான் | ... | 3,53 358 | 89,890 | 234 |
| உத்தரப்பிரதேசம் | ... | 4,19,545 | 1,29,267 | 57 |
| மேற்கு வங்காளம் | ... | 12,608 | 3,488 | 25 |
| ஹிமாசலப்பிரதேசம் | ... | 1,56,800 | 2 100 | 4 |
| மொத்தம் | ... | 41,77,572 | 8,68,737 | 4,640 |

கிராமதானப் பகுதிகளில் வேளாண்மை உற்பத்தியைப் பெருக்க ஒரு கோடி ரூபாய் நிதியுதவி அளிக்கப்பட்டுள்ளது. இவ்வுதவி கூட்டுறவுச் சங்கங்களின் மூலம் தரப்படும். தரிசு நிலத்தை விளை நிலமாக மாற்றுவது நில முன்னேற்றம், விதைகள் கருவிகள் முதலியவற்றை வாங்குவது, கால்நடைக் கொட்டகைகளைக் கட்டுவது, தானியச் சேமிப்புக் கிடங்குகளை அமைப்பது ஆகியவற்றிற்காக நிதியுதவி அளிக்கப்படும். குறுகிய கால, மத்திய கால நீண்ட காலக் கடன்களும், உதவித் தொகைகளும் தேவைக்கேற்ப தரப்படும். இந்த நிதியுதவியைக் கணிசமான அளவினதாகவே கருதவேண்டும்.

பல கிராமதானப் பகுதிகளில் கூட்டுறவுச் சங்கங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. அவற்றின் எண்ணிக்கை சுமார் 271 ஆக இருக்கிறது. நிலமற்ற விவசாயிகளின் மறுவாழ்வுத் திட்டத்திற்காக அளிக்கப்பட்ட ரூ. 8 கோடியில் கிராமதானப் பகுதிகளில் கூட்டுறவுச் சங்கங்களின் மூலம் வேளாண்மை வளர்ச்சிக்கு உதவி ஒரு கோடி ரூபாய் தரப்பட்டது.

சமுதாய வளர்ச்சி, கூட்டுறவு அமைச்சகம் கிராமதானக் கிராமங்களில் உள்ள கூட்டுறவுச் சங்கங்களின்மூலம் வேளாண்மை வளர்ச்சிக்குப் பல வழிகளிலும் உதவி வருகின்றது. கூட்டுறவுச்

சங்கங்கள் வளர்ந்தில்லாத மாநிலங்களிலும் நிதி உதவி வேறு வழிகளில் அளிக்கப்படுகின்றது. தற்பொழுது சுமார் 6,000 கிராம தானக் கிராமங்கள் இருக்கின்றன.

**நிலச்சீர்த் திருத்தங்களைச் செய்வதில் உள்ள சிக்கல்கள்**

1. சில மாநிலங்களில் இயந்திரமயமாக்கப்பட்ட சாகுபடிப் பண்ணைகளுக்கு நில உச்சவரம்பினின்றும் விலக்களிக்கப்படுகின்றது. சிலர் தங்கள் நிலவுடைமைகளில் சற்றுக் காலம் தாழ்த்தி இயந்திரங்களைப் பயன்படுத்தக் கருதலாம். அப்பொழுது அவர் தான் முன்னர் அளித்த உபரி நிலத்தைத் திரும்பப் பெறமுடியுமா என்ற வினா எழுப்பப்படுகின்றது. நிலவுடைமையாளரிடையே சிலருக்கு மட்டும் சலுகைகளை அளிப்பது தவறு. அதைச் சமதர்மம் என்று கருத முடியாது.

2. வேளாண்மைத் துறையைத் தவிர்த்த பிறவற்றினின்றும் வருமானத்தைப் பெருத நிலவுடைமையாளர்கள் நில உச்ச வரம்பின் அளவுவரை சொந்தச் சாகுபடிக்கான நிலத்தைப் பெற்றிருக்கலாம் என்ற நிலை சில மாநிலங்களில் அமைந்துள்ளது. ஒருவர் வேளாண்மையிலிருந்து மட்டுமே வருமானம் பெறுகின்ருரா என்பதை அறிவது எளிதன்று. வேளாண்மையல்லாத பிற துறைகளிலிருந்தும் அவர் வருமானம் பெறக்கூடும். சில மாநிலங்களில் வேளாண்மை வருமானத்தை முக்கியமானதாகக் கொண்டவர்களும் சொந்தச் சாகுபடிக்கான நிலத்தைப் பெறும் உரிமையைக் கொண்டிருக்கின்றனர். அஃதாவது, ஒருவர் தன் மொத்த வருமானத்தில் 51 சதவீதத்திற்குமேல் வேளாண்மையினின்றும் பெற்ருல், அவர் சொந்தச் சாகுபடிக்கான நிலத்தைப் பெறும் உரிமையை அடைகின்ருர். ஆனால் வேளாண்மை வருமானம், வேளாண்மையல்லாத வருமானம் ஆகியவற்றைக் கணக்கிடுவது கடினமானது. பலரும் தங்களுடைய உண்மை வருமான நிலைகளை நேர்மையோடு தெரிவிக்க முன்வரமாட்டார்கள்.

3. குத்தகையாளராக இருந்து நிலத்தைப் பெறுபவர் அதைச் சிறப்பாகப் பயன்படுத்துவார் என்று உறுதியாகக் கூறமுடியாது. நில முன்னேற்றத்தில் அவர் அக்கறையின்றியும் இருக்கக்கூடும். வேளாண்மையல்லாத பணிகளுக்காகவும் அந்த நிலம் அவரால் பயன்படுத்தப்படலாம். இதன்மூலம் உற்பத்தி உயர்வடைவதற்கானவழி தோன்ருது.

4. குத்தகையாளர்களாக இருந்து நிலத்தை வாங்குபவர்கள் முழு விலையையும் அளிக்கும் திறனைப் பெற்றிருப்பதில்லை,

விலைக்கான தவணைகளைச் செலுத்துவதிலும் அவர்கள் தவறி விடுகின்றார்கள்; தவணைகளைச் சரியாகச் செலுத்துவதற்கான வசதிகளை அவர்கள் கொண்டிருப்பதில்லை.

5. நில உச்சவரம்பின் மூலம் நிலவுடைமையாளர்கள் சொந்தச் சாகுபடி செய்யும் நிலை கட்டுப்படுத்தப்படுகிறது. சாகுபடி செய்யாதவர்கள் நிலவுடைமைகளைப் பெறுகின்றார்கள். இதன் காரணமாகக் கிராம மக்கள் தங்களுக்கு விருப்பமான தொழில்களில் ஈடுபடமுடிவதில்லை. ஆனால், இந்திய அரசியல் அமைப்புச் சட்டம் ஒவ்வொருவரும் தங்களுக்கு விருப்பமான தொழில் செய்யலாம் என்பதற்கு உறுதி அளிக்கிறது. நடைமுறையில் இவ்வுறுதி குலைக்கப்படுகின்றது.

6. உபரி நிலத்தை அளிக்கக்கூடிய நிலச்சுவான்தார்களுக்கான இழப்பீட்டுத் தொகையை அளிக்கும் முறையில் மாற்றம் தேவை. இழப்பீட்டுத் தொகையின் அளவிலும் மாறுதல் செய்வது அவசியமாகின்றது. ஜமீன்தார்களுக்கும், ஜாகிர்தார்களுக்கும் இழப்பீட்டுத் தொகையாக ரூ. 639.57 கோடி அளிக்கப்பட்டது. இதைக் குறைவான தொகை என்று கூற இயலாது. மன்னர் மானியம் அளிப்பது தேவை இல்லாதது. மானியத்தை எதிர் பார்த்து முன்னாள் மன்னர்கள் வாழவில்லை. மானியம் வழங்கப் படாவிட்டால் அவர்கள் வாழ்க்கை நலனும் பாதிக்கப்படமாட்டாது. அதுபோன்றே மிகப்பெரிய நிலக்கிழார்களுக்குக் குறைந்த வீதத்தில் இழப்பீட்டுத் தொகை வழங்கினால் போதுமானது. நிலமின்றி மிகக் குறைந்த வருமானத்தைப் பெறுபவர்கள் எண்ணற்றவர்களாக இருக்கும்போது, நிலவுடைமைகளைக் கொண்டு அதிக வருமானத்தைப் பெறுபவர்களுக்கு இழப்பீட்டுத் தொகை அளிப்பது தேவையா?

7. நிலச் சீர்திருத்தங்களில் வேளாண்மை உழைப்பாளர்களுடைய முன்னேற்றத்திற்கான நடவடிக்கைகள் குறைந்த அளவிலேயே எடுக்கப்படுகின்றன. அவற்றுள் அவர்களுடைய தவறு எதுவுமே இல்லை. அவர்கள் நிலமற்றவர்களாகப் பிறந்ததை விபத்து என்று கூறலாம். வேளாண்மை மக்கள் தொகையில் கூலி உழைப்பாளர்கள் 18 சதவீதமும், குத்தகையாளர்கள் 12.7 சதவீதமும் இருக்கின்றார்கள். இவ்வகையில் வினோபாவின் பூதான இயக்கம் முக்கிய நிலையைக் கொண்டுள்ளது. பூதான இயக்கம், அன்பளிப்பாகப் பெற்ற நிலத்தை மறுபங்கீடு செய்யும் போது, வேளாண்மை உழைப்பாளர்களுக்கு முதல் முக்கியத்துவம் அளிக்கின்றது. இந்த முறை விரும்பத்தக்கதாகவும், போற்றத்

தக்காவும் இருக்கின்றது. நிலச்சீர்திருத்தச் சட்டங்களின் மூலம் கூலி உழைப்பாளர்களுடைய நிலையை உயர்த்துவதற்கான வழி முறைகளைப் பின்பற்றவேண்டும்.

8. நிலவுடைமைகளின்மீது உச்சவரம்பு விதிக்கப்படுவதால், வேளாண்மை வருமான வரி செலுத்துபவர்களின் எண்ணிக்கை குறைந்துவிடும். சிறிய நிலவுடைமைகள் குறைந்த வருமானத்தை மட்டுமே தரக்கூடியவை. மாநில அரசுகளின் வரி வருவாய்களில் வேளாண்மை வருமான வரி முக்கியமானதாக இருக்கின்றது. ஆனல், இவ் வரியால் மாநில அரசுகள் குறைந்த வருமானத்தை மட்டுமே பெறுகின்றன. நில உச்சவரம்பு இவ்வகையில் வேளாண் மை வருமான வரியின் நிலையைத் தாழ்த்திவிடும். சில மாநிலங் களில் நிலவரி ரத்துச் செய்யப்பட்டுள்ளது. நிலவரியையும், வேளாண்மை வருமான வரியையும் வளர்வீதத்தில் விதிக்கலாம். அதிக வேளாண்மை வருமானத்தைப் பெறுபவர்களின்மீது அதிக வருமான வரியையும், அதிக அளவு தரமான நிலத்தைக்கொண்ட வர்களின்மீது உயர்வான நிலவரியையும் விதிப்பது நன்மை தரும். பொருளாதார முன்னேற்றத் திட்டங்களின்மூலம் வேளாண்மைத் துறை பல நன்மைகளைப் பெற்றிருக்கின்றது. ஆயினும், அது திட்டங்களுக்குத் தேவையான மூலதனத்தைக் குறைந்த அளவில் மட்டுமே அளிக்கிறது. இந்த நிலையை மாற்ற வேளாண்மைத் துறையின்மீது அதிக வரிகளை விதிக்கவேண்டும்.

9. இரண்டாவது, மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டக் காலங் களில் 34 மில்லியன் ஏக்கர்கள் நிலம் நீர்ப்பாசனத் திட்டங்களில் பயனடையும் என்று கூறப்பட்டது. மேலும் பல சாகுபடிக்கான வசதிகளும் பெருக்கப்பட்டன. அவ் வசதிகளை முழுமையாகப் பயன்படுத்தும் நிலையில் சாகுபடியாளர்கள் இருக்கவேண்டும். குத்தகையாளர்களும், வேளாண்மை உழைப்பாளர்களும் உற்பத் தியை உயர்த்துவதற்கு உதவமாட்டார்கள். அவர்கள் வசதி குறைந்தவர்களாக இருப்பதே இதற்குக் காரணமாகும். சொந்த நிலத்தைப் பெற்ற பின்னரும்கூட அவர்களால் சிறப்பான பணிகளை மேற்கொள்ள இயலாது. தவிர, நம் நாட்டில் நீர்ப்பாசன வசதிகள் முழுமையாகப் பயன்படுத்தப்படுவதில்லை. இது போன்ற பல வசதிகளைச் சிறப்பாகப் பயன்படுத்த வசதி மிக்க விவசாயிகள் தேவை.

10. நிலச் சீர்திருத்தங்கள் பல மாநிலங்களுக்கு இடையே வேறுபடுகின்றன. இவை பொது மக்களையும், அரசியல்வாதி களையும், நிர்வாகிகளையும் குழப்புகின்றன. சீர்திருத்தங்களின்

பல நிலைகளும் வெவ்வேறு வகையில் வரையறை செய்யப்படுகின்றன. குத்தகையாளர், சார்புக் குத்தகையாளர் முதலிய பதங்கள் தெளிவாக விளக்கப்படுவதில்லை. சில முக்கிய சொற்களின் பொருள் எல்லா மாநிலங்களுக்கும் பொருந்தக் கூடிய வகையில் வரையறுக்கப்படவேண்டும். மாநிலங்களுக்கிடையே இச் சொற்களின் பொருள் மாறுபடக் கூடாது.

11. மாநில அரசுகளே நிலச் சீர்திருத்தங்களைச் செய்ய வேண்டும். இதன் காரணமாகவே மாநிலங்களுக்கு இடையே நிலச் சீர்திருத்தங்களின் இயல்புகள் வேறுபடுகின்றன. எல்லா மாநிலங்களிலும் ஒரே மாதிரியான சூழ்நிலைகள் அமைந்திருப்பதில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது. திட்டக்குழு குறிப்பிடும் வேளாண்மைச் சீர்திருத்த முறைகளை எல்லா மாநிலங்களும் ஒரே மாதிரியாகச் செயல்படுத்துவது நல்லது. எல்லா மாநில அரசுகளும் திட்டக்குழு குறிப்பிடும் முறைகளுக்கேற்ப நிலச் சீர்திருத்தங்களைச் செய்யவேண்டும் என்று மத்திய அரசு கட்டாயப்படுத்தலாம். சூழ்நிலைகளின் இயல்பிற்கேற்ப சிறிதளவு மாற்றங்கள் அமைய அனுமதிக்கலாம். வேளாண்மைச் சீர்திருத்தங்கள் வெற்றியடைய மத்திய அரசு, திட்டக்குழு, மாநில அரசுகள் ஆகியவை ஒருங்கிணைந்து செயல்படவேண்டும்.

12. நிலவுடைமைகளின்மீது மட்டும் உச்சவரம்பை விதிப்பது போதுமானதாகாது. பிறவகைச் சொத்துகள், வருமானம் ஆகியவற்றின்மீது உச்சவரம்பை நிர்ணயிப்பது அவசியமானது. நகரச் சொத்துகளின்மீது உச்சவரம்பு விதிக்கப்படவேண்டுமென்ற கருத்துச் சமீப காலமாக நிலவி வருகின்றது. சமதர்மச் சமுதாயத்தை அமைக்கும்போது கிராம மக்களுக்கும், நகர மக்களுக்குமிடையே வேற்றுமை பாராட்டக் கூடாது.

13. உபரி நிலத்தைப் பெறுவதும், மறுபங்கீடு செய்யப்படுவதும் எளிதாக்கப்படவேண்டும். இந்தியப் பொருளாதாரத்தில் உள்ள முதலாளித்துவ இயல்புகளைப் படிப்படியாகக் களைய வேண்டும். பொதுவுடைமை முறையின் அடிப்படையில் வேளாண்மைச் சீர்திருத்தங்களைச் செய்வது எளிது. ஆனால், அஃது இந்தியச் சமதர்மக் குடியரசு முறைக்கு ஏற்றதாக இல்லை. இந்தியாவில் முழுமையான முதலாளித்துவமோ, பொதுவுடைமையோ பின்பற்றப்படவில்லை. இரண்டிற்கும் இடைப்பட்ட சமதர்மம் இங்குக் கைக்கொள்ளப்பட்டுள்ளது. இம் முறையின் மூலம் முதலாளித்துவத்தின் நன்மைகளையும், பொதுவுடைமையின் நன்மைகளையும்

பெறமுடியவில்லை. அவற்றின் தீமைகளே சமதர்ம முறையில் பெருவாரியாக அமைந்துள்ளன.

14. நில உச்சவரம்பின்மூலம் சிறிய விவசாயிகளின் எண்ணிக்கை பெருகும். அவர்கள் உற்பத்தியைப் பெருக்கும் நடவடிக்கைகளில் தீவிரமாக ஈடுபட மாட்டார்கள், இக்குறையைத் தவிர்க்கக் கூட்டுறவுப் பண்ணை முறையை வளர்க்க வேண்டும்,

### கூட்டுறவு இணைப்புப் பண்ணை (Co-operative Joint Farming)

கூட்டுறவுப் பண்ணை முறைபற்றிய அகில இந்தியக் காங்கிரஸின் நாக்பூர் தீர்மானம், பின்வரும் முக்கிய இயல்புகளைக் கொண்டதாக இருந்தது.

1. நிலவுடைமை உரிமைகளைப் பறிக்காமல் கூட்டுறவுப் பண்ணைகளை அமைப்பது அவசியம்;

2. நிலவுடைமையாளர்கள் தாங்களே விரும்பிக் கூட்டுறவுப் பண்ணைகளின் உறுப்பினர்களாகச் சேர வேண்டும்;

3. வேளாண்மையை இயந்திரமயமாக்க வேண்டுமென்று வலியுறுத்தக்கூடாது.

இந்திய அரசியல் அமைப்புச் சட்டங்கள் திருத்தப்படுகின்றன. ஆனால், காங்கிரஸின் நாக்பூர் தீர்மானத்தில் இதுவரை மாற்றங்கள் தோன்றவில்லை. வேளாண்மை வளர்ச்சி குன்றிய நிலையில் உள்ளமைக்கு நிலச் சீர்திருத்தங்களில் உள்ள குறைபாடுகள் முக்கியக் காரணமாக அமைகின்றன.

### அயல்நாடுகளில் கூட்டுறவுப் பண்ணைமுறை

இஸ்ரேல் நாட்டில் கூட்டுறவுப் பண்ணைமுறை வெற்றியடைந்துள்ளது. ஆனால், ஒவ்வொரு விவசாயியும் அங்குத் தனிப்பட்ட பண்ணைகளை வைத்திருக்கின்றனர்கள். இஸ்ரேல் கல்வியில் வளர்ச்சிபெற்ற நாடு. அங்குப் பயிற்சி வசதிகளும் அமைந்துள்ளன. சோவியத் ரஷ்யாவின் கூட்டுப் பண்ணைகளையும் ஒரு வகையில் கூட்டுறவுப் பண்ணைகளாகக் கருதலாம். கூட்டுப் பண்ணைகள் அரசால் உற்பத்தி நிர்வகிக்கப்படுகின்றன. உற்பத்தி குறைந்தமையால் சமீபகாலத்தில் இதில் சில மாற்றங்கள் செய்யப்பட்டன. ரஷ்யாவில் அரசின் பண்ணைகளும், கூட்டுப் பண்ணைகளும் வேறுப்படுத்தப்பட்டுள்ளன. சீனாவில் 'கம்யூன்களின்' (Communes) மூலம் சாகுபடி நடவடிக்கைகள் நிறைவேற்றப்படுகின்றன. உழைப்

பாளர்களை உறுப்பினர்களாகக் கொண்ட கம்யூன்களில் பல வசதிகளும் அமைந்துள்ளன. உழைப்பாளர்களுக்கு உண்ண உணவு, உடுக்க உடை, இருக்க இடம் ஆகியவை அளிக்கப்படுகின்றன. கல்வி, மருத்துவம் முதலிய வசதிகளையும் அவர்கள் பெறுகின்றனர். இந்தியாவில் சில ஆயிரக் கணக்கான கூட்டுறவுப் பண்ணைகள் மட்டுமே உள்ளன. அவை சிறப்பாக இயங்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இந்தியாவில் கூட்டுறவுப் பண்ணைகள் பெயரளவிலேயே இருக்கின்றன.

**கிராமிய அடிப்படை**

கிராமங்களில் சில வளர்ச்சியடைந்தனவாக இருக்கின்றன. அவை நகரங்களுக்கு மிக அருகில் அமைந்துள்ளன. அங்குள்ள மக்கள் பொதுக் கல்வியைப் பெற்றிருக்கின்றனர். வாணிபத் தொடர்புகளை ஏற்படுத்துவதிலும் அவர்கள் ஈடுபடுகின்றனர். தொழில் துறையிலும் அவர்கள் பணியாற்றுகின்றனர். ஆனால், பல கிராமங்கள் பின்தங்கிய மக்கள் தொகையைக் கொண்டுள்ளன. பல இலட்சக்கணக்கான கிராமங்களில் உள்ள பலருக்குப் பத்துக்கு மேல் எண்ணத்தெரியாது. மூடநம்பிக்கைகளையும் அறியாமையையும் அவர்கள் கொண்டுள்ளனர். வாழ்க்கைத் தரம் மிகத் தாழ்வாக உள்ளது. வகுப்பு வாதச் சிக்கல்களும், தோன்றுகின்றன. அவர்கள் எளிதில் உணர்ச்சிவசப்படுகிறார்கள். முன்னேற வேண்டுமென்றே ஊக்கம் அவர்களிடம் இருப்பதில்லை. வரட்டு கௌரவத்திற்காக ஒருவர் தம் மூதாதையரின் சொத்தாகிய வாழை மரத்தைக் கட்டிக்கொண்டு பசியால் வாடவும், தயாராக இருப்பார். வேறு தொழிலில் உழைத்து வருமானத்தைப் பெற வேண்டுமென்று அவர் விரும்பமாட்டார்.

இந்தியாவில் வயதுவந்த யாவருக்கும் ஓட்டுரிமை அளிக்கப்பட்டுள்ளமையால் ஓரளவு அரசியல் விழிப்புணர்ச்சி அமைந்துள்ளது. பல தலைமுறைகளாக ஒரே குடும்பத்தினர் கிராம அலுவலர்களாகப் பணியாற்றும் நிலை மாறிவருகின்றது. லேவாதேவிக்காரர்களைக் குறைப்பதற்கான நடவடிக்கைகளையும் அரசு எடுத்து வருகிறது. சமுதாய வளர்ச்சித் திட்டங்கள் கிராம மக்களுக்குப் பல வழிகளிலும் உதவி வருகின்றன. ஆனால், விரைவாக நிறைவேற்றப்படும் சட்டங்கள் ஐயப்பாட்டையும், வெறுப்புணர்ச்சியையும் மக்கள் மனத்தில் தோற்றுவித்துள்ளன. கிராமப் புனரமைப்புத் திட்டங்களை மேற்கொள்ளும்போது இவை யாவற்றையும் கருத்தில் கொள்ளவேண்டும்.

**கிராம மக்களின் மனோபாவம்**

நிலத்தோடு விவசாயிகள் தங்களையே ஒன்றுபடுத்திக் கொள்ளுகின்றார்கள். நிலத்தின்மீது அவர்களுக்கு இருக்கும் ஆர்வத்தை உணர்ச்சியை எவராலும் குறைக்க இயலாது. நிலம் அவர்களிடமிருந்து பிரிக்கப்பட்டு நிலவுரிமைகளை மட்டும் பெற்றிருப்பதை அவர்கள் விரும்புவதில்லை. சொந்தச் சாகுபடி நடவடிக்கைகளை மேற்கொள்ளவே அவர்கள் விரும்புகின்றனர். கூட்டுறவுப் பண்ணை முறை வெற்றி பெறுமைக்கு இது முக்கியக் காரணமாக அமைகின்றது.

காலம் சென்ற பண்டித ஜவஹர்லால் நேரு, கூட்டுறவு இணைப்புப் பண்ணை முறையில் அக்கறை கொணடவராக இருந்தார். கூட்டுறவுப் பண்ணைகளை அமைக்க மக்கள் தாங்களாகவே முன்வர வேண்டுமென்று அவர் கூறினார். கூட்டுறவுப் பண்ணை ஒரே இடத்தில் பெரிய அளவில் நிலத்தைக் கொண்டிருக்கவேண்டும் ஆனால், ஒரு கிராமத்தில் உள்ள எல்லாரும் கூட்டுறவுப் பண்ணை முறையை விரும்பி ஏற்பார்கள் என்று கூற முடியாது. உறுப்பினராக முன்வரும் நிலவுடைமையாளர்களின் நிலங்களும் ஒரே இடத்தில் அமைந்திருப்பதில்லை. வெவ்வேறு இடங்களில் அமைந்துள்ள சிறிய அளவு நிலங்களில் கூட்டுறவுப் பண்ணை முறையைச் சிக்கனமாகக் கைக்கொள்ள இயலாது. ஒரு கிராமம் முழுவதும் உள்ள நிலம் கூட்டுறவுப் பண்ணை முறையில் ஈடுபடுத்தப்பட்டால் பல நன்மைகளும் விளையும்.

நிலவுடைமைகள் இணைக்கப்பட்டபோது கட்டாயப்படுத்தும் நிலையும் மேற்கொள்ளப்பட்டது. பெரும்பாலான நிலவுடைமையாளர்கள் சீர்திருத்தங்களை வேண்டும்போது சில நிலவுடைமையாளர்களைக் கட்டாயப்படுத்துவது தவறாகாது. கூட்டுறவுப் பண்ணைகளில் சாகுபடி நிலங்கள் திரட்டிப் பயன்படுத்துவதைப் போலவே, உற்பத்திப் பணிகளில் உழைப்பாளர்களும் கூட்டாக ஈடுபடுகின்றார்கள். இதன் காரணமாக உழைப்பின் திறன் பாதிக்கப்படவும் வாய்ப்பு உண்டு.

சோவியத் ரஷ்யாவில் வீட்டைச் சார்ந்த குறிப்பிட்ட நிலப் பரப்பில் மட்டுமே தோட்டப் பயிர்களைச் சொந்தமாகச் சாகுபடி செய்யலாம். பொதுவுடைமை அரசு அங்கு அமைந்திருப்பதால் தான் கூட்டுப் பண்ணை முறை வெற்றி கண்டுள்ளது. இந்திய அரசியல் அமைப்புக் கூட்டுறவுப் பண்ணைமுறையின் வளர்ச்சிக்குச் சாதகமாக இல்லை. நிலவுடைமையாளர்கள் நிலத்தைக் கூட்டுறவுப் பண்ணைமுறைக்காக அளிக்க முன்வந்தாலும், நிலம் முழுவதையும்

தரவேண்டுமா, அல்லது, நிலத்தின் ஒரு பங்கைத் தந்தால் போதுமானதா என்ற ஐயங்கள் எழுகின்றன. கூட்டுறவுப் பண்ணைக்கு அளித்த நிலத்தைத் திரும்பப் பெறமுடியாது என்றும் நிலவுடைமையாளர்கள் ஐயுறுகின்றனர். இவ்விதச் சூழ்நிலைகள் அமைந்திருப்பதால் 5 சதவீத நிலவுடைமையாளர்கள்கூடக் கூட்டுறவுப் பண்ணைகளை அமைக்க முன் வருவதில்லை.

கட்டாய முறையின் அடிப்படையில் தோற்றுவிக்கப்பட்டால் கூட்டுறவுப் பண்ணைகள் தோல்வியடையக்கூடும். போதுமான மூலதனம் கிடைக்காது; உழைப்பாளர்கள் சிறப்பாகப் பணியாற்ற மாட்டார்கள். கிராம மக்கள் நகரங்களுக்குக் குடி பெயரக்கூடும். இதனால், நிலத்தின் மதிப்புக் குறையும். கால்நடைகள் எண்ணிக்கையில் சுருங்கும். கூட்டுறவுப் பண்ணைகளால் பொருளாதாரத்தில் விரைவான இயக்கத்தைத் தோற்றுவிக்க முடியாது. விரைவான பொருளாதார இயக்கத்தின்மூலமே உயர்வான வளர்ச்சி வீதத்தைப் பெற முடியும். கூட்டுறவுப் பண்ணைகளைப் பரட்புவதற்கு முன்னர் இவை யாவற்றையும் நன்கு ஆய்வு செய்யவேண்டும்.

### செறிவு முறைச் சாகுபடிக்கான வாய்ப்பு

செறிவுமுறைச் சாகுபடியின்மூலம் சிலவகைப் பயிர்களில் ஓர் ஏக்கருக்கான உற்பத்தியின் அளவைக் கூட்டலாம். இயந்திரமயமாக்குவதாலும் வேளாண்மை உற்பத்தியை அதிகரிக்கலாம். இந்தியாவில் இயந்திரங்களைச் சாகுபடியில் புகுத்துவதற்கான வாய்ப்புகள் ஓர் எல்லைக்குள்பட்டனவாக இருக்கின்றன. ஆனால், செறிவுமுறைச் சாகுபடியை எந்த அளவிற்கு வேண்டுமானாலும் பின்பற்றலாம். அதற்குத் தனிப்பட்டவர்களின் ஊக்கமும், அதிக மூலதனமும் தேவையாக இருக்கின்றன. செறிவு முறைச் சாகுபடியால் உற்பத்தி உயர்வதை ஜப்பான் நாட்டின் வேளாண்மையால் உணரலாம். இந்தியாவில் 'பரந்த முறைச் சாகுபடி' (Extensive cultivation) உள்ளதையும், ஜப்பானில் 'செறிவு முறைச் சாகுபடி' (Intensive cultivation) உள்ளதையும் பின்வரும் புள்ளி விவரங்கள் உணர்த்தும்.

| உணவுத் தானியம் | ஓர் ஏக்கருக்கான சராசரி உற்பத்தி (பவுண்டுகளில்) | |
|---|---|---|
| | இந்தியா | ஜப்பான் |
| கோதுமை | 662 | 1,713 |
| அரிசி | 807 | 3,444 |

கடன் வசதிகள், புதுமையான கருவிகள், தொழில் நுணுக்க உதவி, விற்பனை வசதிகள் முதலியவையே ஜப்பானில் உற்பத்தி உயர்விற்குக் காரணங்களாகின்றன. ஜவஹர்லால் நேரு கூட்டுறவுப் பண்ணை முறைமூலமே இந்தியாவில் வேளாண்மை உற்பத்தியைக் கூட்ட முடியும் என்று கூறினார். ஆனால், ஜப்பானில் கூட்டுறவுப் பண்ணை முறையைப் பின்பற்றாமலேயே அதிக வேளாண்மை உற்பத்தி பெறப்படுகின்றது.

**வேளாண்மைக் கடன் தீர்வு**

இந்திய விவசாயிகளில் பலர் கடனிலே பிறந்து, கடனிலே வாழ்ந்து, கடனிலே இறப்பதாகச் சொல்லப்படுகிறது. 'மாதிரிக் கணக்கெடுப்புகளின்' (Sample surveys) அடிப்படையில் விவசாயிகளைப் பின்வரும் வகைகளாகப் பிரித்து ஆராயலாம்.

1. கடனில்லாத குடும்பங்கள்;

2. கடனாளியாக இருந்தாலும் தனியாரிடம் இருந்து மேலும் கடன் பெற்று நிலைகளை நிர்வகிக்கக் கூடியவர்கள்;

3. கூட்டுறவின் மூலம் கடன் வசதி அளிக்கப்படவேண்டியவர்கள்;

4. சிறப்பு முறைகள், தனிப்பட்ட அமைப்புகள் ஆகியவற்றின் மூலம் புனர்வாழ்வைப் பெறுவதற்காக உதவப்படவேண்டிய கடனாளிகள்;

5. சொத்துகள் இல்லாமை, குறைந்த வருமானம், அக்கறையின்மை ஆகியவற்றின் காரணமாக எவ்வித வுதவியையும் பெற முடியாத கடனாளிகள்.

ஆனால், இந்தியாவில் விவசாயிகளை இவ்வகைகளில் பிரித்துக் கிராமக் கடன் நிலை ஆராயப்படவில்லை. கிராமக் கடன் தீர்வு முறைகள் சிறப்பாக அமையாமைக்கு இது காரணமாகிறது. கூட்டுறவுப் பண்ணைகளைத் தோற்றுவித்தாலும் உறுப்பினர்களின் கடனைத் தீர்ப்பது பெரும் சுமையாக அமையும். அந்த அளவிற்கு நிதி வசதியைக் கொண்டனவாகக் கூட்டுறவுப் பண்ணைகள் இருப்பதில்லை. மேலும், கடனைத் திருப்பித் தர உதவினாலும் கூட்டுறவுப் பண்ணைகளுக்கு ஆண்டுதோறும் கிடைக்கும் இலாப அளவு சுருங்கிவிடும். உறுப்பினர்களின் கடனைத் தீர்க்காமல் இருப்பது நேர்மையாகாது. ஏனெனில், கடன் அளித்தவர் நிலத்தின் மீது உரிமை பாராட்டியோ அல்லது உற்பத்தியின்மீது உரிமை பாராட்டியோ சட்ட ரீதியான நடவடிக்கைகளை எடுக்க முடியாது.

எதிர்காலத்தில் கூட்டுறவுப் பண்ணைகள் புதிய வழிமுறைகளைப் பரிசோதனை செய்து பார்க்கலாம். ஆண்டுக்கு ஒரு முறை கூட்டுறவுப் பண்ணைச் சங்கம் இலாபத்தைப் பிரித்தளிப்பதற்குப் பதிலாக அத் தொகையை வாரந்தோறுமோ, மாதந்தோறுமோ, அளிக்கலாம். ஏனெனில் உறுப்பினர்கள் வெவ்வேறு காலங்களில் உடைகள் வாங்குதல், வீட்டைப் பழுதுபார்த்தல், திருமணம், பிறப்பு இறப்புச் சடங்குகள், மதயாத்திரை முதலியவற்றுக்காகப் பணத் தேவையைக் கொண்டுள்ளனர். கூட்டுறவுப் பண்ணைச் சங்கத்தைத் தவிர்த்த பிற முறைகளிலும் அவர்கள் கடனைப்பெற முடியாதவர்களாகின்றனர்.

கூட்டுறவுப் பண்ணைகளில் உற்பத்தி நடவடிக்கைகள் சிறப்பாக மேற்கொள்ளப்படும் என்று கூற இயலாது. பணிகளை நிறைவேற்றுவதில் கூட்டுப்பொறுப்பு மட்டுமே அமைந்துள்ளது. இதனால், உண்மையான உழைப்பைத் தருபவர்கள் குறைந்த எண்ணிக்கையிலேயே இருப்பர். கூட்டுப்பண்ணை விவசாயத்தில் சிலர் திறமையாக உழைக்கக்கூடும். ஆனால், எல்லாரும் உண்மையான உழைப்பைத் தருவதில்லை. ஆயினும் அனைவருக்கும் ஒரே வீதத்திலேயே கூலி அளிக்கப்படுகிறது. ரஷ்யாவிலும், சீனாவிலும் உழைப்பின் அளவிற்கேற்ப ஊதியங்கள் வழங்கப் படுகின்றன. இந்தியாவிலும் அந்த முறையைப் பின்பற்றலாம்.

### அமைப்பு, நிர்வாகம், நிதிமுறை ஆகியவற்றில் உள்ள இடர்ப்பாடுகள்

கிராமப் பொருளாதாரத்தின் குறைபாடுகள் யாவற்றையும் களைய கூட்டுறவுப் பண்ணை முறையை வளர்க்க வேண்டுமென்று ஜவஹர்லால் நேரு கருதினார். ஆனால், இந்த முறை வெற்றியைப் பெறாதது வருந்தத்தக்கது. கூட்டுறவுமுறை சிறந்த நோக்கங்களைக் கொண்டிருக்கிறது. அந்த நோக்கங்களை நிறைவேற்றுவதிலேயே இடையூறுகள் இருக்கின்றன.

சோவியத் ரஷ்யா முதலிய நாடுகளில் மிக நீண்ட காலத்திற்கான திட்டங்கள் வரையப்படுகின்றன; குறியிலக்குகள் நிர்ணயிக்கப்பட்டு அதற்கேற்ப நடவடிக்கைகள் நிறைவேற்றப் படுகின்றன. இந்தியாவில் திட்டங்கள் சிறப்பாகத் தீட்டப் பட்டாலும், அவற்றை நிறைவேற்றுவதில் பல குறைபாடுகள் உள்ளன. அமைப்புமுறை, நிர்வாக ஊழல், நிதி பற்றுக்குறை முதலியவற்றால் வேளாண்மைத் திட்டங்கள் தோல்வியுறுகின்றன.

கூட்டுறவுப் பண்ணைகளை ஏற்படுத்துவதற்கு முன்னர், சேவைக் கூட்டுறவுகளைப் பரப்ப வேண்டுமென்றக் கருத்துத்

பொழுது நிலவி வருகின்றது. மேலும், எல்லா மாநிலங்களிலும் அரசின் அதிக அளவு உதவியோடு கூட்டுறவு 'முன்னோடிப் பண்ணைகள் (Pilot Farms) அமைக்கப்பட்டுள்ளன. அவற்றின் நன்மைகளை மக்கள் உணர்ந்து கூட்டுறவுப் பண்ணைகளைத் தொடங்குவார்கள் என்று அரசு எதிர்பார்க்கின்றது.

அமைப்பு, நிர்வாகம், சட்டம், நீதிமுறை ஆகியவற்றில் உள்ள குறைபாடுகளே வேளாண்மைச் சீர்த்திருத்தங்கள் வெற்றி பெருமைக்குக் காரணமாகும். அரசு தீவிர நடவடிக்கைகளை மேற்கொண்டு இந்தக் குறைபாடுகளை நீக்கவேண்டும். போதுமான அளவிற்கு நிதி வசதிகளைப் பெருக்குவதும் இன்றியமையாதது. நிர்வாகத்தில் உள்ள ஊழல்களைக் களைவது அரசின் கடமையாகும். எளியவர்களைச் சுரண்டி வாழும் அரசியல்வாதிகளின் மீது கடுமையான நடவடிக்கைகள் எடுக்கப்படவேண்டும். கிராம மக்களின் நல்வாழ்வு நிலச் சீர்திருத்தங்களின் வெற்றியைச் சார்ந்தே அமையும். சீரிய சட்டங்கள் செவ்வனே நிறைவேற்றப் படும்போது மக்களின் வாழ்க்கைத்தரம் உயரும்

# 21. பசுமைப் புரட்சி

## (Green Revolution)

பல காலமாக இந்திய வேளாண்மை தேக்க நிலையில் இருந்தது. இப்பொழுது அந்நிலை மாறி இயக்கநிலை தோன்றியுள்ளது. இந்திய வேளாண்மையில் புரட்சி நிலை ஏற்பட்டிருக்கின்றது. 1966—67-ல் 75 மில்லியன் டன்களாக இருந்த உணவுத் தானியங்களின் உற்பத்தி 1967—68-ல் 96 மில்லியன் டன்களாக 25 சதவீதம் உயர்ந்தது. இது போற்றத்தக்க சாதனையே ஆகும். வரலாறு காணாத வகையில் விவசாயிகள் நன்மைகளை அடைந்து வருகிறார்கள். சுமார் ஐந்து ஆண்டுகளுக்கு முன்னர்க்கூட அமோக உற்பத்தியைத் தரக்கூடிய விதைகள் அதிகமாகப் பயன்படுத்தப் படவில்லை. சாயாத, குட்டை வகை கல்யாண் எஸ்-227 கோதுமை உயர் அளவில் ஓர் ஏக்கருக்கு 37 குவிண்டால்கள் உற்பத்தியைத் தருகின்றது. சராசரியாக இவ் வகைக் கோதுமை ஓர் ஏக்கருக்கான உற்பத்தியை 18 குவிண்டால்கள் அளிக்கின்றது. அதைப் போன்றே கம்பு எச். பி—1, நூறு சதவீத உற்பத்தி உயர்வைத் தந்துள்ளது. பரிசோதனைக்காக எடுத்துக்கொள்ளப்பட்ட ஓராண்டுக் காலத்திலேயே இச் சாதனை புரியப்பட்டது. பிற வகைப்பட்ட பயிர்களிலும் உற்பத்தி கணிசமான அளவில் உயர்ந்திருக்கின்றது.

அதிக விளைச்சலைத் தரக்கூடிய விதைகளை டாக்டர் நார்மன் இ. போர்லாங் (Dr. Norman E. Borlang) என்பவர் கண்டு பிடித்தார். அவருடைய பணிக்காக நோபெல் பரிசும் அளிக்கப் பட்டது. புதிய விதைகளின்மூலம் வேளாண்மை உற்பத்தி புரட்சிக்கரமான வகையில் உயர்ந்தது. அதுவே, 'பசுமைப் புரட்சி' என்று வழங்கப்பட்டது. இப் புதியமுறை 1944—1945 ஆம் ஆண்டுகளில் மெக்ஸிகோவில் பரிசோதனை முறையில் கைக் கொள்ளப்பட்டது. 'யாக் பள்ளத்தாக்கில்' (Yaqui Valley) ஓர் ஏக்கருக்கான கோதுமை உற்பத்தி 20 புஷ்ஷல் என்ற அளவுக்கு

உயர்ந்தது. அமெரிக்காவில் அப்பொழுது அதுவே உயர்ந்த அளவு உற்பத்தியாகும். சில நிலைகளில் உற்பத்தி பத்துமடங்குக்கும் அதிகமாகப் பெருகியது. போர்லாங் கண்டுபிடித்த புதிய கோதுமை விதைகளால் 1950ஆம் ஆண்டுக்குப் பின்னர் மெக்ஸிகோ உற்பத்தியில் தன்னிறைவைப் பெற்றது.

பசுமைப் புரட்சியின் தொடக்கம் இந்தியாவில் 1965ஆம் ஆண்டில் ஏற்பட்டதெனலாம். ஏனெனில், அந்த ஆண்டில் இருந்துதான் இங்கு முறையாக அதிக உற்பத்தியைத் தரக் கூடிய விதைகள் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. நம் நாட்டில் 'செறிந்த வேளாண்மை மாவட்டத் திட்டம்' (Intensive Agricultural District Programme) குறைந்த அளவு வெற்றியை மட்டுமே தந்தது. உணவு உற்பத்தி விரைவாகப் பெருகவில்லை. உற்பத்தி போதுமான அளவில் இல்லையாதலால் 'அதிக விளைச்சல் தரும் திட்டம்' (அ.வி.தி) கைக்கொள்ளப்பட்டது. அரசின் புதிய வேளாண்மைக் கொள்கையில் இஃது ஒரு முக்கியப்பிரிவாக அமைந்தது. இதன் நோக்கங்கள் அமோக விளைச்சலைத் தரும் விதைகளைப் பயன்படுத்துவது, குறுகிய காலத்தில் பயனளிக்கும். பல போகச் சாகுபடி முறையைப் பின்பற்றுவது. சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களைப் பெருக்குவது, இரசாயன உரங்களின் நன்மைகளைப் பெறுவது, தொழில் நுட்பம் வாய்ந்த கருவிகளை உற்பத்தியில் ஈடுபடுத்துவது ஆகியனவாகும். இந்த நடவடிக்கைகள் யாவற்றையும் ஒருங்கே எடுக்கும்போது 'பசுமைப் புரட்சி' தோன்றுமென்று கருதப்பட்டது. அவற்றின் வாயிலாக உணவுத் தானியங்களின் உற்பத்தியில் தன்னிறைவைப் பெறுவதோடு ஏற்றுமதிக்குத் தேவையான 'உபரியையும்' பெறலாம்.

### பசுமைப் புரட்சிக்கு உதவிய காரணிகள்

பல காரணிகள் நம் நாட்டில் பசுமைப் புரட்சி தோன்றுவதற்குக் காரணங்களாக இருந்தன. 'இந்திய வேளாண்மை ஆராய்ச்சிக்குழு' (Indian Council of Agricultural Research-I. C. A. R.), லூதியானாவில் உள்ள பஞ்சாப் வேளாண்மைப் பல்கலைக்கழகம், உத்தரப்பிரதேசத்தின் பந்த் நகரில் உள்ள வேளாண்மைப் பல்கலைக்கழகம் ஆகியவை உற்பத்தி உயரப் பெரிதும் உதவியுள்ளன. அமோக விளைச்சலைத் தரும் தானியங்களின் விதைகளை அவை கண்டுபிடித்தன. அதன் விளைவே இன்றைய பசுமைப் புரட்சியாகும். இதைத் தவிர உள்ளீடுகள் (Inputs), ஊக்கங்கள் (Incentives) முதலியவற்றையும் புரட்சிக்கான காரணங்கள் என்று கூறலாம்.

இந்தியாவில் வேளாண்மைப் புரட்சி சமீப காலத்தில் தோன்றியுள்ளமைக்கான காரணங்களைப் பின்வருமாறு சுருக்கித் தரலாம்.

1. **விந்தை விதைகள்** (Wonder Seeds)

வியத்தகு அளவில் இன்று புதிய விதைகள் ஓர் ஏக்கருக்கான உற்பத்தியை உயர்த்தியுள்ளன. அவற்றுள், முக்கியமாகக் குட்டை வகைக் கோதுமைக்கு பி.வி-18 (P.V–18), கல்யாண் சோனு 227 (Kalyan Sona), சோனுலிகா (Sona Lika–S-308), கம்புக்கு எச்.பி-1 (H.B.–1), சோளத்துக்கு 'விஜய்', அரிசிக்கு ஐ.ஆர்–8 (I.R–8) ஜோனு 351 (Jhona 351), கரும்புக்கு கோ-1148, கோ–67-11, மூங்க்ஃபாலி–145 (Mungfali–145), பருத்திக்கு ஜே–34 (J-34) ஆகியவற்றைக் குறிப்பிடலாம். 'செறிவு வேளாண்மை மாவட்டத் திட்டங்கள்' பின்பற்றப்படும் பகுதிகளில் உற்பத்தி 40 சதவீதத்திற்கும் அதிகமாக உயர்ந்துள்ளது. அப் பகுதிகளில் தரம் மிக்க விதைகளைப் பயன்படுத்துவதே இதற்கு, முக்கியக் காரணமாகும்.

2. **உரங்கள்**

இந்திய வேளாண்மையில் திருப்பு நிலை ஏற்பட்டுள்ளமைக்கு உரங்களைப் பயன்படுத்துகின்ற நிலையும் ஒரு காரணமாகும். 1950 முதல் 1959 வரை நைட்ரஜன் உரங்களின் பயன் ஆண்டொன்றுக்கு 14 சதவீதமும், பாஸ்பேட் உரங்களின் பயன் 17 சதவீதமும் உயர்ந்தது. 1950 முதல் 1959 வரை நைட்ரஜன் பாஸ்பேட் உரங்களின் பயன் ஆண்டொன்றுக்கு 24 சதவீதமும் 1960 முதல் 1969 வரை 27 சதவீதமும் கூடியது.

3. **பசுமை முக்கோணம்** (Green Triangle)

புதிய விதைகள் குறுகிய காலத்திலேயே பயனளிக்கக் கூடியனவாக உள்ளன. இதனால் ஆண்டொன்றுக்கு மூன்று அல்லது நான்கு முறை சாகுபடி செய்ய முடிகிறது. இந்திய வேளாண்மையில் இவ்வாறு சில அடிப்படை மாற்றங்கள் தோன்றி இருக்கின்றன. சொனுரா 64 (Sonara 64) ஷர்பாதி சனோரா (Sharbati Sanora), சோனுலிகா (Sona Lika), சேஃப்டு லெர்மா (Safed Lerma), என். பி. 830 (N. P. 830) முதலிய குட்டை ரக கோதுமை வகைகள் குறுகிய காலத்திலேயே பலனளிக்கின்றன. இவற்றை டிசம்பர் மத்தியிலிருந்து ஜனவரி மத்திவரை விதைக்கலாம். அறுவடை ஏப்ரல் இறுதிக்குள் முடிந்துவிடும். அதன் பின்னர், 65—70 நாட்களில் முதிரும் 'பூசா பைசக்கி' (Pusa Baisakhi) கோதுமையைப் பயிரிடலாம். இந்த அறுவடைக்குப்

பின்னரும் வேறொரு சாகுபடியை மேற்கொள்ள வாய்ப்பு இருக்கின்றது. இவ்வாறு, மூன்று போகச் சாகுபடியைச் செய்வதற்கான வாய்ப்புப் புதிய விதைகளால் தான் தோன்றியுள்ளது.

**4. புதிய இயந்திரங்களும், கருவிகளும்**

கால்நடைகளைப் பயன்படுத்துவது படிப்படியாகக் குறைந்து வருகிறது. புதுமையான இயந்திரக் கலப்பைகள், அறுவடை இயந்திரங்கள் பம்புசெட்டுகள் முதலியன வேளாண்மையில் கணிசமான அளவில் பயன்படுகின்றன: குழாய்க் கிணறுகளால் நீர்ப்பாசன வசதி பெருக்கப்படுகிறது. இதனால், நேரமானது சேமிக்கப்படுவதால் பல போகச் சாகுபடியைச் செய்வது எளிதாகின்றது. அமோக விளைச்சலைத் தரும் விதைகள் பாசனவசதிகளைக் கொண்ட இடங்களில் விதைக்கப்படுகின்றன. உற்பத்தியை விரைவுபடுத்தவும், அதிகரிக்கவும் இவை பெரிதும் உதவுகின்றன.

**5. விலை ஊக்கங்கள் (Price Incentives)**

உழைப்புக்கும், முதலீட்டிற்கும் தக்கவாறு விவசாயிகளின் வருமானம் அமையவேண்டுமென்று அரசு கருதுகின்றது. எனவே, உற்பத்தியாளருக்குக் குறைந்தபட்ச விலை உறுதியளிக்கப்படுகிறது. 1968—70 ஆம் ஆண்டுகளில் வேளாண்மைப் பொருள்களின் அளிப்புச் சந்தையில் மிகுதியாக இருந்தது. அதற்கு முன்னமேயே அரசு 'கொள் முதல் விலையை' (Procurement Price) அறிவித்திருந்தது. அரசே அவ்விலையில் குறிப்பிட்ட அளவு வேளாண்மைப் பொருள்களைக் கொள்முதல் செய்தது. இந்த நடவடிக்கை எடுக்கப்படாமல் இருந்தால் விவசாயிகளின் நிலை பெருமளவுக்குப் பாதிக்கப்பட்டிருக்கும்.

**6. நீர்ப்பாசன விரிவாக்கம்**

நாட்டின் நீர்ப்பாசன வசதிகள் பெருக்கப்பட்டு வருகின்றன. புதிய வேளாண்மைக் கொள்கை பின்பற்றப்படும் இடங்களில் பாசன வசதிகளை அதிகரிக்கத் தீவிர நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன. கடந்த மூன்று அல்லது நான்கு ஆண்டுகளாக மின்சாரப் பம்பு செட்டுகள், குழாய்க் கிணறுகள் ஆகியவற்றின் பயனை விவசாயிகள் அதிகமாகப் பெற்று வருகின்றனர். சாகுபடிக்கு அடிப்படைத் தேவை நீரப்பாசனமாகும். ஆகவே, அரசு நீர்ப்பாசனத்தைப் பெருக்க அதிக முதலீட்டைச் செய்கின்றது.

**7, சேமிப்பு, விற்பனை வசதிகள்**

வேளாண்மை உற்பத்தி உயர்வின் நன்மைகளைப்பெற சேமிப்பு, விற்பனை வசதிகள் தேவை. இவ் வசதிகள் யாவும்

முன்னேற்றம் பெற்று வருகின்றன, கூட்டுறவு முறையில் தானியச் சேமிப்புக் கிடங்குகள் அமைக்கப்படுகின்றன. கிராமப்புறங்களில் சாலைப் போக்குவரத்தின் வளர்ச்சியும் விற்பனையை எளிதாக்கு கின்றது.

## 8. கடன் வசதிகள்

வேளாண்மைக் கடன் வசதிகளைப் பெருக்குவதில் அரசு தனிக் கவனத்தைச் செலுத்தி வருகின்றது. விவசாயிகள் எவ்வித இடையூறும் இன்றிச் சாகுபடி நடவடிக்கைகளை மேற்கொள்ளக் கடன் வசதிகள் அவசியமாகின்றன. லேவாதேவிக்காரர்களின் நிலை ஓரளவு ஒடுக்கப்பட்டுள்ளது. வங்கிகள், கூட்டுறவுகள், மாநில அரசுகள் முதலியன ஜூன் 1969-ல் சுமார் 40 சதவீத வேளாண்மைக் கடனை அளித்திருந்தன. சமீபத்தில் 14 பெரிய வங்கிகள் தேசியமயமாக்கப் பட்டுள்ளன, விவசாயிகளுக்குக் கடன் அளிக்க வேண்டுமென்ற நோக்கத்தோடும் இந்த வங்கிகள் அரசுடைமையாக்கப்பட்டன. இதன்மூலம் வேளாண்மைத்துறைக் கான கடன் வசதிகள் மேலும் அதிகரிக்கும்,

## 9, சாதகப் பருவச் சூழ்நிலை

சில காலமாக இந்திய வேளாண்மை சாதகமான தட்ப வெப்ப நிலையையும், மழைப் பொழிவையும் கொண்டுள்ளது. உற்பத்தி உயர்வுக்கும், பசுமைப் புரட்சிக்கும் இது முக்கியக் காரண மாகிறது.

பேராசிரியர் எம். எல். தந்த்வாலா நிலச் சீர்திருத்தங்களால் அன்றித் தொழில் நுணுக்க உற்பத்திமுறைகளாலேயே பசுமைப் புரட்சி தோன்றியுள்ளதாகக் கூறுகின்றார். வேளாண்மையில் அமைப்புமுறை மாற்றங்கள் சிறப்பான அளவுக்கு ஏற்பட்டிருக்க வில்லை என்று அவர் கருதுகிறார்.

## வளர்ச்சி: பசுமைப் புரட்சி என்பது உண்மையானதா?

பசுமைப் புரட்சிக்கான வேளாண்மைத் தொழில் நுணுக்க முன்னேற்றம் பல வகைப்பட்டதாக இருக்கின்றது. இணைப்பான பல வசதிகளும் ஒருங்கே அளிக்கப்படும்போதுதான் உற்பத்தி கூடுகின்றது. தரமிக்க விதைகள், உரங்கள், நீர்ப்பாசன வசதிகள் முதலிய பலவும் கூட்டாகத் தேவைப்படுகின்றன. விவசாயிகள் உற்பத்தியை அதிகரிப்பதற்கான ஊக்கத்தைக் கொண்டிருக்கவேண்டும். இயந்திரமயமான சாகுபடி, பயிர்ப் பாதுகாப்பு, பூச்சி மருந்துகளைப் பயன்படுத்துவது முதலியவற்றின்

மூலம் உற்பத்தியைப் பல மடங்கு கூட்டலாம், 1966ஆம் ஆண்டு 'அதிக விளைச்சல் தரும் திட்டம்' (அ.வி.தி.) நீர்ப்பாசன வசதிகளைக்கொண்ட சில தெரிந்தெடுக்கப்பட்ட பகுதிகளில் மட்டும் தொடங்கப்பட்டது. அதன் பின்னர், அ. வி. தி. விதைகள் 1966—67-ல் 1.89 மில்லியன் ஹெக்டேர் நிலத்தில் பயன்படுத்தப்பட்டன. இதன் அளவு 1967—68-ல் 6.07 மில்லியன் ஹெக்டேராகவும், 1968—69-ல் 9.3 மில்லியன் ஹெக்டேராகவும் உயர்ந்தது. 1969—70ஆம் ஆண்டின் குறியளவு 11 மில்லியன் ஹெக்டேராக நிர்ணயிக்கப்பட்டது. அதாவது அ.வி.தி. விதைகள் பயன்படுத்தப்படும் நில அளவு மூன்றாண்டுகளில் 5 முதல் 6 மடங்கு அதிகரித்திருக்கின்றது.

இது போன்றே உரங்களைப் பயன்படுத்தும் நிலையும் உயர்ந்துள்ளது. 1965—66-ல் 5.8 லட்சம் டன்களாகப் பயன்படுத்தப்பட்ட நைட்ரஜன் உரங்கள் 1968—69-ல் 12 லட்சம் டன்களாக உயர்ந்தது. அதன் அளவு 1969—70-ல் 20 லட்சம் டன்காளாகக் கூடியது. பாஸ்ஃபேட் உரங்களின் பயன் 1965—69-ல் 1.3 லட்சம் டன்களாக இருந்தது; அது 1969—70-ல் 6.5 இலட்சம் டன்களாக அதிகரித்தது.

நீர்ப்பாசனப் பெருக்க வசதிகளைப் பொறுத்தவரையில், 1965—66, 1966—67ஆம் ஆண்டுகளில் 2.5 லட்சம் குழாய்க் கிணறுகள் அமைக்கப்பெற்றன. 1968 — 69ஆம் ஆண்டின் இறுதியில் 10.69 லட்சம் குழாய்க் கிணறுகள் பயன்படுத்தப்பட்டதாகக் கணக்கெடுப்புகள் கூறுகின்றன. சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களால் 1967—68-ல் 13.7 இலட்சம் ஹெக்டேர் நிலமும், 1968—69-ல் 14.6 இலட்சம் ஹெக்டேர் நிலமும் பயன்பெற்றன.

அ. வி. தி. கொள்கை வேளாண்மை உற்பத்தியைப் பெருக்குவதை மட்டும் நோக்கமாகக் கொண்டிருக்கவில்லை. விவசாயிகள் செறிவுமுறைச் சாகுபடியைக் கைக்கொள்ளவும் அது தூண்டுகிறது. குறுகிய காலப் பயிர்களால் பயிர்ச் சுழற்சியைச் செய்வது எளிதாகின்றது. பல போகச் சாகுபடிமுறைத் திட்டம் 1967—68-ல் தொடங்கப்பெற்றது. இத் திட்டம் 1968—69-ல் சுமார் 6 மில்லியன் ஹெக்டேர் நிலத்துக்கும், 1969—70-ல் சுமார் [illegible] மில்லியன் ஹெக்டேர் நிலத்துக்கும் விஸ்தரிக்கப்படும் என்று கூறப்பட்டது.

1960—61-ல் 31,000ஆக இருந்த இயந்திரக் கலப்பைகளின் எண்ணிக்கை 91,000ஆக உயர்ந்துள்ளது. இது மூன்று மடங்கு கூடுதலாகும். பயிர்ப் பாதுகாப்பு நடவடிக்கைகள் 6.4 மில்லியன் ஹெக்டேர்களிலிருந்து 40 மில்லியன் ஹெடேர்களுக்கு விஸ்தரிக்

கப்பட்டன. குறுகியகால, நீண்ட காலக் கடன்கள் கூட்டுறவுகளின் மூலம் 1960—61-ல் ரூ. 203 கோடியும், 1969—70-ல் ரூ. 450 கோடியும் அளிக்கப்பட்டன. இதே காலத்தில் தரப்பட்ட நீண்ட காலக் கடன் ரூ. 12 கோடியாகவும், ரூ. 115 கோடியாகவும் இருந்தது.

**உற்பத்தி நிலைகள்**

திட்டக் காலத்தில் உள்ளீடுகளின் அளவு பெருகியது. உள்ளீடுகளின் அளவு பெருகியதோடு அவற்றின் தரமும் உயர்ந்தது. இதனால் உற்பத்தி எந்த அளவுக்கு உயர்ந்தது என்பதையும் அறிய வேண்டும். உற்பத்தி உயர்ந்ததோடு பயிர்ச்சாகுபடி முறையிலும் மாற்றங்கள் தோன்றின. இதன் விளைவுகளை வேளாண்மையில் ஏற்பட்டுள்ள திருப்பு நிலை என்று சிலர் குறிப்பிடுகின்றனர். அதையே அவர்கள் 'பசுமைப் புரட்சி' என்று கூறுகின்றனர்.

முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலத்திலிருந்து உணவுத் தானியங்களின் உற்பத்தி எவ்வாறு இருந்தது என்பதைப் பின்வரும் அட்டவணை உணர்த்தும். அதில் மூன்று திட்டங்களின் முதல் ஆண்டும், இறுதி ஆண்டும், 1964—65-ல் இருந்து தொடர்ச்சியாகவும் புள்ளிவிவரங்கள் தரப்பட்டுள்ளன. 1964—65-ல் உற்பத்தி புதிய சாதனையை எட்டியதால் அதிலிருந்து புள்ளிவிவரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

**1950—51 முதல் 1969—70 வரை உணவுத் தானியங்களின் உற்பத்தி**

(மில்லியன் மெட்ரிக் டன்களில்)

| ஆண்டு | மொத்த உணவுத் தானியங்கள் | அரிசி | கோதுமை | சோளம் | கம்பு | பிற தானியங்கள் | பருப்புகள் |
|---|---|---|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) | (8) |
| 1950—51 | 54.9 | 22.1 | 6.8 | 6.2 | 2.7 | 7.9 | 9.2 |
| 1955—56 | 69.3 | 28.7 | 8.9 | 6.7 | 3.5 | 10.1 | 10.8 |
| 1960—61 | 82·0 | 34.6 | 11.0 | 9·8 | 3.3 | 10.6 | 12.7 |
| 1964—65 | 89.0 | 39.3 | 12.4 | 9.8 | 4.4 | 11.0 | 12.4 |
| 1965—66 | 72.0 | 30.7 | 10.4 | 7.5 | 3.7 | 10.0 | 9.8 |
| 1966—67 | 74.2 | 30.4 | 11.4 | 9.2 | 4.5 | 10.4 | 8.4 |
| 1967—68 | 95.6 | 37.9 | 16.6 | 10.1 | 5.1 | 13.7 | 12.2 |
| 1968—69 | 94.0 | 39.8 | 18.7 | 9.8 | 3.8 | 11.6 | 10.4 |
| 1969—70 | 99.5 | 40.4 | 20.1 | 9.7 | 5.3 | 12.2 | 11,7 |

அட்டவணையில் குறிப்பிட்டுள்ள முதல் மூன்று ஆண்டுகளிலும் உற்பத்தி உயர்ந்தமைக்கு அ.வி.தி. காரணமாக அமைந்தது. அதைத் தொடர்ந்தும் உணவுத் தானியங்களின் உற்பத்தி படிப் படியாக அதிகரித்தது. 1966—67-ல் 30.4 மில்லியன் டன்களாக இருந்த அரிசி, உற்பத்தி 1969—70-ல் 40.4 டன்களாக உயர்ந்தது. 1664—95-ன் சாதனை உற்பத்தியாகிய 39.3 டன்களைவிட இது அதிகமானதாகும். 1968—69ஆம் ஆண்டு பசுமைப் புரட்சியை உறுதிப்படுத்தியது. அந்த ஆண்டு தட்ப வெப்ப நிலைகள் சாதக மாக இல்லை எனினும் கோதுமை உற்பத்தி 18.7 மில்லியன் டன் களாக இருந்தது. அதற்கு முந்தைய ஐந்து ஆண்டுகளிலும் உற்பத்தி சராசரியாக 11 மில்லியன் டன்களாக மட்டுமே அமைந்திருந்தது. 1970—71-ல் உணவுத் தானியங்களின் உற்பத்தி புதிய சாதனை அளவாகிய 107.8 மில்லியன் டன்களை எட்டியது. அவ்வாண்டிற்கு ஐந்தாண்டுகள் முன்பாக உற்பத்தி 72 மில்லியன் டன்கள் என்ற அளவில் இருந்தது.

அ. வி. தி. தொழில் நுட்பத்தால் உற்பத்தி உயர்ந்ததையும் புள்ளிவிவரங்கள் உணர்த்துகின்றன. 1951ஆம் ஆண்டிற்கும் 1965 ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் வேளாண்மை உற்பத்தி உயர்வில் பாதி சாகுபடி நிலப் பெருக்கத்தால் ஏற்பட்டதாகும். 1950—59-ல் பெரும்பாலான புதிய நிலங்கள் சாகுபடியின் கீழ்க் கொண்டுவரப்பட்டன. மூன்றுவது திட்டக் காலத்தில் மிகக் குறைந்த நிலம் மட்டுமே புதிதாகச் சாகுபடிக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது. எனவே, புதுக்கொள்கை கைக்கொள்ளப்படு வதற்கு முன்னரே வேளாண்மைக்கு ஏற்ற நிலங்களின் பெரும்பகுதி சாகுபடியின்கீழ்க் கொண்டுவரப்பட்டுவிட்டது, 1966—67ஆம் ஆண்டிற்குப் பின்னர், புதிய விதைகள், உரங்கள், தொழில் நுட்ப முறைகள் ஆகியவற்றாலேயே உற்பத்தி உயர்வடைந்தது. இயற் கைக் காரணிகள் சாதகமாக அமைந்ததால் சில ஆண்டுகளில் உற்பத்தி அதிகரித்தது. அரசு பின்பற்றும் புதிய வேளாண்மைக் கொள்கை சமீப கால உற்பத்தி உயர்வுக்கு வழிகோலுகின்றது.

'அதிக விளைச்சல் திட்டம் கணிசமான வெற்றி கண்டுள்ளது. இத் திட்டம் புதுமையானதாக இருக்கின்றது. ஆகவே, அதற்கேற்ப வேளாண்மைத் துறையில் சில அடிப்படை மாற்றங்களைச் செய்ய வேண்டும்.'[1] பசுமைப் புரட்சி உண்மையானதா என்பதை அறிய வேறு சில நிலைகளையும் ஆராய்வது அவசியம். மொத்த

[1] Ralph W. Cummings, Jr. &. S.K. Ray, 'The New Agricultual Strategy: Its Contribution to 1967—68, Production' in Economic and Political Weekly March 29, 1969, p. A. 7-

வேளாண்மை உற்பத்தி கூடியிருந்தாலும் தனிப்பட்ட பல பயிர்களின் உற்பத்தி ஒரே மாதிரியாக உயர்ந்திருக்கவில்லை. உணவுத் தானியங்களின் மொத்த உற்பத்தி உயர்வில் சுமார் நான்கில் மூன்று பகுதி கோதுமை உற்பத்திப் பெருக்கத்தால் கிடைக்கப் பெற்றது. 1967-68, 1964-65 ஆம் ஆண்டுகளின் அரிசி உற்பத்தியில் அதிக வேறுபாடு காணப்படவில்லை. சில ஆண்டுகளில் குறைந்திருப்பதும் குறிப்பிடத்தக்கது. பிற தானிய வகைகளின் உற்பத்தியிலும் வெவ்வேறு ஆண்டுகளில் ஏற்றத்தாழ்வுகள் அமைந்துள்ளன.

பசுமைப் புரட்சியால் கோதுமை உற்பத்தியே அதிகமாகக் கூடியுள்ளது. நீர்ப்பாசன வசதி கொண்ட கோதுமை விளை நிலங்களில் அ.வி.தி. அதிகமாகச் செயல்படுத்தப்படுகிறது. பஞ்சாபில் கோதுமை, சாகுபடி செய்யப்படும் 80 முதல் 90 சதவீத நிலத்தில் புதிய விதைகள் பயன்படுத்தப்படுகின்றன. தொடர்ச்சியாகக் கோதுமை உற்பத்தி அதிகரித்து வருவது குறிப்பிடத்தக்கது. அரிசி, பிற தானியங்கள் ஆகியவற்றின் உற்பத்தி சிறப்பான அளவுக்கு உயரவில்லை. இந்திய வேளாண்மை நிலையை ஆய்வு செய்த சிலர் தற்போதய 'பசுமைப் புரட்சியை' 'கோதுமைப் புரட்சி' (Wheat Revolution) என்று அழைப்பதே பொருத்தமுடையது. என்று கூறுகின்றனர்.

உணவுத் தானியங்கள் உற்பத்தி செய்யப்படும் மொத்த நிலத்தில் சுமார் எட்டில் ஒரு பங்கு நிலம் கோதுமை உற்பத்தியில் அமைந்துள்ளது. மொத்த நிலத்தில் சுமார் மூன்றில் ஒரு பங்கு அரிசி உற்பத்தியில் ஈடுபடுத்தப் பட்டிருக்கின்றது. அரிசி உற்பத்தியின் வளர்ச்சிவீதம், கோதுமை உற்பத்தியின் வளர்ச்சி வீதத்தைப்போன்று மிக உயர்வாக இல்லை. இவ் வேறுபாட்டிற்கான காரணங்கள் பலவாக இருக்கின்றன. அரிசியைக் காட்டிலும் கேதுமையில் புதிய ரக விதைகள் அதிகமாகக் கண்டுபிடிக்கப் பட்டுள்ளன. புதிய கோதுமை விதைகளைப் பயன்படுத்தும் ஊக்கத்தை விவசாயிகள் பெற்றிருக்கின்றனர். பழைய விதைகளை விடப் புதிய விதைகள் மிக அதிக உற்பத்தியைத் தரக்கூடியவை. நுகர்வோரும் புதிய கோதுமையை விரும்பி வாங்குகின்றனர். மற்றொரு புறத்தில் புதிய நெல் விதைகளை உபயோகிக்கும்போது பயிர்கள் நோய்களால் எளிதில் பாதிக்கப்படுகின்றன. புதிய நெல் ரகங்களின் தரம் தாழ்வாக உள்ளது. சமையலுக்கு ஏற்றவையாக அவை அமையவில்லை. புதிய கோதுமை ரகத்தை உற்பத்தி செய்வதைவிடப் புதிய நெல் ரகத்தை உற்பத்தி செய்வது அதிக இலாபத்தைத் தராது.

கோதுமைச் சாகுபடி செய்யப்படும் நிலங்களில் சிறிய நீர்ப் பாசன வசதிகள் பெருகியுள்ளன. குழாய்க் கிணறுகளையும், பம்பு செட்டுகளையும் விவசாயிகள் நன்கு பயன்படுத்துகின்றார்கள். நெல் சாகுபடியாகும் மாநிலங்கள் சிலவற்றில் நீர்ப்பாசனம், வடிகால் முதலிய வசதிகள் சிறப்பாக அமைந்திருக்கவில்லை. குறிப்பாக அஸ்ஸாம், மேற்கு வங்காளம் ஆகிய மாநிலங்களில் பாசன வசதிகள் உயர்வாக இல்லை. நெல் உற்பத்திப் பெருக்கத்திற்கு இது, தடையாக இருக்கின்றது.

நெல் உற்பத்தியில் உள்ள சிக்கல்களை ஆராய்ச்சியாலும், விரிவாக்கப் பணிகளாலும் தீர்க்கலாம். நம்பிக்கை அளிக்கக்கூடிய நெல் வகைகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இவை சாகுபடி யாளருக்கு அதிக இலாபத்தைத் தருகின்றன. இப் பகுதிகளில் நீர்ப்பாசன வசதிகளும் பெருக்கப்பட்டு வருகின்றன. மழைப் பொழிவுள்ள இடங்களிலும் நீர்ப்பாசன வசதிகள் பெருக்கப்பட்டு வருவது குறிப்பிடத்தக்கது.

மக்கள் சத்தான உணவை உட்கொள்வதற்குப் பல வகை வேளாண்மைப் பொருள்களின் உற்பத்தியளவைக் கூட்ட வேண்டும். உணவுத் தானியங்கள், வாணிபப் பயிர்கள், பருப்பு வகைகள் ஆகியவற்றின் உற்பத்தியை அதிகரிக்க ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. பசுமைப் புரட்சி எல்லாப் பயிர்களிலும் ஏற்பட்டிருக்கவில்லை. வளர்ச்சியின் நிலைகளில் ஏற்றத்தாழ்வுகள் உள்ளன. வெவ்வேறு பயிர்களின் உற்பத்தியிலும் சரிசமனற்ற நிலை திகழ்கின்றது. புதுமையான வேளாண்மை உள்ளீடுகளால் உணவுத் தானியங்களை உற்பத்தி செய்பவர்களின் இலாபம் அதிகரித்துள்ளது. இதனால் வாணிபப் பயிர்கள், பருப்பு வகைகள் ஆகியவற்றை உற்பத்தி செய்பவர்கள் உணவுத் தானியங்களைச் சாகுபடி செய்யக்கூடும். தொழில்களுக்குத் தேவையான கச்சாப் பொருட்களின் விலை அதிகரிக்கும். தொழில் பொருள்களின் உற்பத்திச் செலவும் கூடும். நுகர்வோரின் நலன் பெரிதும் பாதிக் கப்படும்.

**மதிப்பீடு**

சிலர் அமோக விளைச்சல் திட்டத்தால் வெற்றி கிட்டவில்லை என்கிறார்கள். 'பசுமையோ' 'புரட்சியோ' வேளாண்மையில் தோன்றவில்லை என்பது அவர்கள் கருத்து.[1] எனினும் புதிய

1 Tewari, S. C.,' Green Revolution is a Misnomer,' Yojana, January 26, 1970, pp. 36, 66.

முறைத் திட்டம் 1966-67-ல் தொடங்கப்பட்ட பின்னர்க் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் வேளாண்மையில் ஏற்பட்டுள்ளது. நான்காவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் ஆண்டொன்றுக்கு 5 சதவீத வேளாண்மை உற்பத்தி உயர்வைப் பெறக் கருதப்பட்டிருக்கின்றது. பசுமைப் புரட்சி இலட்சோப இலட்சம் விவசாயிகளின் மனத்தில் பொருந்த வேண்டுமென்ற புரட்சி எண்ணத்தைத் தோற்றுவித்துள்ளது. இந்திய வேளாண்மை வளர்ச்சி வரலாற்றில் முதன் முதலாக விவசாயிகள் வாணிப நோக்கத்தோடு சாகுபடியைச் செய்யும் நிலை தோன்றியுள்ளது. தற்பொழுது அவர்கள் வாழ்வுக்காக மட்டும் வேளாண்மையில் ஈடுபடுவதில்லை. பழைமையான முறைகளுக்குப் பதிலாகப் புதுமைச் சாகுபடி முறைகளை விவசாயிகள் பின்பற்றுகின்றனர். இந்திய வேளாண்மை இன்று முன்னேற்றமில்லாத் தேக்கநிலையில் இருக்கவில்லை.

பசுமைப் புரட்சி எதிர்கால வளர்ச்சிக்குத் தேவையான ஊக்கத்தையும், நம்பிக்கையையும் அளித்துள்ளது. புதிய வேளாண்மைக் கொள்கை சரியாகத் தொடங்கப்பட்டு ஒழுங்கான பாதையில் சென்று கொண்டிருக்கின்றது. ஆனால், வெற்றி கணிசமான அளவில் மட்டுமே பெறப்பட்டுள்ளது.

பல மாநிலங்களுக்கும் இடையே பசுமைப் புரட்சியில் வேறுபாடுகள் உள்ளன. பஞ்சாப், ஹரியானா, குஜராத், தமிழ்நாடு ஆகிய மாநிலங்களில் புதிய வேளாண்மைத் தொழில் நுட்பம் சிறப்பாகப் பரவியுள்ளது. நீர்ப்பாசனம், நிலவளம் ஆகியவற்றின் வேறுபாடுகள் மாநிலங்களுக்கிடையே உற்பத்தியில் ஏற்றத்தாழ்வான நிலைகளுக்குக் காரணங்களாகின்றன. சில பகுதிகளில் உரங்கள் அதிகமாகவும் பிற பகுதிகளில் குறைவாகவும் பயன்படுத்தப்படுகின்றன.

வறண்ட நிலங்களில் உற்பத்தியைப் பெருக்குவதற்கான வழிமுறைகளை நம் வேளாண்மை விஞ்ஞானிகள் கண்டுபிடிக்கவில்லை. அவர்களுடைய கண்டுபிடிப்புகள் நீர்ப்பாசன வசதிமிக்க இடங்களுக்கே பொருத்தமுடையனவாக இருக்கின்றன. இந்தியாவின் பல இடங்களிலும் உள்ள 84 மாவட்டங்களில் மழைப்பொழிவு ஆண்டொன்றுக்கு 40 செ. மீ. முதல் 100 செ. மீ. வரை மட்டுமே உள்ளது. இவற்றில் நான்கில் ஒரு பகுதி மட்டுமே நீர்ப்பாசன வசதியைப் பெறுகின்றது. இவை மொத்தச் சாகுபடி நிலத்தில் சுமார் 36 சதவீதம் அமைந்துள்ளன. இப் பகுதிகளில் புதிய வேளாண்மை முறை சிறப்பான அளவுக்கு நன்மையைத் தருமாறு செய்யவேண்டும்.

வெவ்வேறு வேளாண்மைப் பயிர்களுக்கும் இடையே உற்பத்தி உயர்வு வீதங்கள் வேறுபடுகின்றன. கோதுமை உற்பத்தியில் மிகச் சிறப்பான வெற்றி கிடைத்துள்ளது. சோளம், கம்பு, அரிசி, மக்காச் சோளம் ஆகியவற்றின் உற்பத்தி உயர்வு வீதம் மிகச் சிறப்பாக அமையவில்லை. எண்ணெய் வித்துகள், கரும்பு, பருத்தி, சணல், தோட்டப் பயிர்கள் முதலியவை அமோக விளைச்சலைத் தரவில்லை. இவற்றின் உற்பத்தியைக் கூட்ட ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்பட வேண்டும்.

மேலும், பசுமைப் புரட்சி பெரிய விவசாயிகளுக்கு மட்டுமே நன்மைகளை அளித்துள்ளது. பெரிய நிலவுடைமையாளர்கள் அதிக முதலீட்டைச் செய்து உயர்ந்த உற்பத்தியைப் பெறுகின்றனர். தங்களுடைய விளைபொருள்களையும் அவர்கள் அதிக விலையில் விற்கின்றனர். விற்பனைக்கான உபரி அவர்களிடம் ஏராளமாக இருக்கின்றது. பசுமைப் புரட்சியின் நன்மைகளை வேளாண்மை உழைப்பாளர்களும், சிறிய விவசாயிகளும் பெறுவதில்லை. பழைய நிலையிலேயே அவர்கள் இன்றும் உள்ளனர். உற்பத்தியைப் பெருக்குவதற்கான வாய்ப்புகள் இருந்தும் அவற்றைப் பயன்படுத்துவதற்கான நிதி வசதிகளைச் சிறிய விவசாயிகள் கொண்டிருப்பதில்லை. சிறிய நிலவுடைமைகளில் குறைந்த வசதிகளைக் கொண்ட அவர்களால் எவ்வித முன்னேற்றத்தையும் செய்யமுடிவதில்லை.

'இந்தியாவின் 47 சதவீதப் பண்ணைக் குடும்பங்கள் ஓர் ஏக்கருக்கும் குறைவான நிலத்தைக் கொண்டுள்ளன; 22 சதவீதம் நிலமற்றனவாக உள்ளன. 3 முதல் 4 சதவீதப் பெரிய சாகுபடியாளர்கள் மட்டுமே எல்லாச் செல்வாக்கையும் கொண்டுள்ளார்கள். கிராம மக்களில் சுமார் 50 சதவீதத்தினர் நன்மைகளைப் பெறுவதில்லை. திறமை மிக்க பெரிய விவசாயிகள் எல்லா வசதிகளையும் பெற்றிருக்கின்றார்கள்; ஆக்க நடவடிக்கைகளின் முடிவுகளை அவர்களே எடுக்கின்றார்கள்.'[1]

சில பகுதிகளில் குத்தகையாளர்கள் உழைப்பாளர்களாக மாற வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது. புதிய சாகுபடி முறை இலாபமளிப்பதாக இருப்பதால் நிலவுடைமையாளர்கள் குத்தகையாளர்களிடமிருந்து நிலத்தைப் பெறுகின்றார்கள்; சொந்தச் சாகுபடியில் ஈடுபடுகின்றார்கள். நிலமற்றவர்களின் வருமானம் ஓரளவுக்கு மட்டுமே கூடியுள்ளது. அவர்களுக்கும் நிலவுடைமையாளர்களுக்கும் நடுவே உள்ள இடைவெளி மிகுந்து வருகின்றது.

1 Presidential address by Mr. Jagjiwan Ram to the Congress Session in Bombay on December 28, 1969.

கிராமச் சமுதாயத்தில் பொருளாதார ரீதியில் அதிக ஏற்றத் தாழ்வுகள் அமைந்துள்ளன. 'சமதர்ம இந்தியாவில்' தோன்றியுள்ள 'முதலாளித்துவப் புரட்சியே' (Capitalist Revolution) பசுமைப் புரட்சி என்றும் சிலர் இயம்புகின்றனர். செல்வ நிலையில் உள்ள விவசாயிகள் அதிக வருமானத்தைக் குவிக்கின்றார்கள். சமுதாய மக்கள் அனைவருக்கும் முன்னேறுவதற்கான வாய்ப்புச் சமமாகத் தரப்படவில்லை. பலவிதமான அரசியல் கொந்தளிப்புகளுக்கும் இதுவே காரணமாகும். இடதுசாரிக் கட்சியினரின் செல்வாக்கு ஓங்கி வளர்வதற்கு இஃது அடிப்படைக் காரணமாக அமைகின்றது. அதிக வருமானத்தைப் பெற்றுச் செல்வ நிலையில் உள்ள சில நிலக்கிழார்களுக்கும் குத்தகையாளர்கள், வேளாண்மை உழைப்பாளர்கள் ஆகியோருக்கும் இடையே பகையுணர்ச்சி மூண்டு வருகின்றது.

புதிய உற்பத்தி முறைகளால் இவர்களிடையே பகையுணர்ச்சி தோன்றுமெனக் கூறமுடியாது. ஏனெனில், நல்ல விதைகளும், உரங்களும் பெரிய நிலவுடைமைகளிலும், சிறிய நிலவுடைமைகளிலும் ஒரே வீதத்திலேயே, உற்பத்தி உயர்வைத் தருகின்றன. ஆனால், புதிய சாகுபடி முறைகள் கிராம மக்களிடையே வருமானத்தில் அதிக ஏற்றத் தாழ்வுகளை ஏற்படுத்தியுள்ளன. கிராமச் சமுதாயத்தில் அமைதியின்மை நிலவுவதற்கு இது காரணமாகும்.

பசுமைப் புரட்சியைப்பற்றி மற்றொரு ஆய்வாளர் குறிப்பிடுவதாவது, 'புதிய வேளாண்மைத் தொழில் நுட்பத்தால் கிராமப் புறங்களில் ஏற்றத் தாழ்வுகள் ஏற்பட்டுள்ளன என்று கூற இயலாது. உண்மையான தேவையைக் கொண்டவர்களுக்குக் கடன்கள் வழங்கப்படுவதில்லை. வேளாண்மை விரிவாக்கப் பணிகள் எதிர்பார்த்த அளவுக்குப் பயனளிக்கவில்லை. பஞ்சாயத்துகள் முன்னேற்ற நோக்கமின்றி அரசியல் நோக்கம் கொண்ட அமைப்புகளாக இருக்கின்றன. நிலவுடைமைகளின் மீதான உரிமைகளை முழுமையாகச் சாகுபடியாளர்கள் பெற்றிருக்கவில்லை. வாரத்தின் அளவு உயர்வாக உள்ளது. நில உச்சவரம்பால் எந்த நன்மையும் விளையவில்லை. குத்தகைச் சீர்திருத்தங்களால் அதிகப் பயன்கள் தோன்றவில்லை. சட்டங்கள் சரியாகச் செயல்படுத்தப்படுவதில்லை. ஆன்மாவையும், உடலையும் ஒருங்கே வைத்திருப்பதற்குப் போதுமான கூலிகள்கூட வழங்கப்படுவதில்லை. வேளாண்மை அமைப்பு நிலைகளில் இவ்வித ஏற்ற இறக்கங்கள் இருக்கின்றன. இக் குறைபாடுகள் யாவற்றையும் ஒருங்கே

நீக்குவதென்பது எளிதானதன்று. எனவே, பொருளாதார, சமுதாய நீதியைக் காப்பதற்கான சில நடவடிக்கைகளாவது எடுக்கப்படவேண்டும். குறிப்பாகக் குத்தகையாளர்களுக்கான பாதுகாப்பு, நியாய வாரம், உற்பத்தி நடவடிக்கைகளை மேற் கொள்வதற்கான கடன் வசதி ஆகியவற்றிற்கு அரசு உறுதி அளித்தல் அவசியம். இவை யாவும் பொருளாதார முன்னேற்றத் திற்குத் தேவையானவைகளாகவும் இருக்கின்றன. பசுமைப் புரட்சியை மேலும் தீவிரப்படுத்த இவ்வசதிகள் பெரிதும் உதவும்.'[1]

ஆட்சியாளர்களும், விஞ்ஞானிகளும் அமோக விளைச்சல் திட்டத்தை உற்பத்தியளவின் அடிப்படையிலேயே நோக்கு கின்றார்கள். மனிதாபிமான சமுதாய நோக்கு அங்கு அமைந் திருக்கவில்லை. உற்பத்தி குறைந்த வேகத்தில் அதிகரிப்பினும் மக்கள் அனைவருடைய நலனையும் காப்பதே மிக அவசியமானதும், அவசரமானதும் ஆகும்.

## பசுமைப் புரட்சியும், கிராம வேலைவாய்ப்பும்

செறிவு முறைச் சாகுபடி கைக்கொள்ளப்படும்போது உழைப் பாளர்களின் தேவை அதிகரிக்கின்றது. பழைய உற்பத்தி முறை களின் மூலம் புதிய வகைப் பயிர்களைச் சாகுபடி செய்ய முடியாது. உரங்களை இடுவதற்கும், களைகளை நீக்குவதற்கும் அதிக உழைப்புத் தேவைப்படுகிறது.

புதிய நிலங்கள் சாகுபடிக்கு எடுத்துக்கொள்ளப்படுவதாலும், பல போகச் சாகுபடி முறைகள் பின்பற்றப்படுவதாலும் கிராமங் களில் உழைப்பாளர்கள் அதிக எண்ணிக்கையில் தேவைப்படு கின்றார்கள். இது, பொருளாதார நோக்கில் இலாபமளிப்பதாக இருக்கின்றது. முதன் முதலாக உழைப்பாளர்களின் பற்றுக்குறை சில இடங்களில் தோன்றியுள்ளது. பஞ்சாபில் சாகுபடிக் காலங் களில் உழைப்பாளர்கள் போதுமான அளவுக்குக் கிடைப்பதில்லை. இதனால் வேளாண்மை மேலும் இயந்திரமயமாக்கப்படுகின்றது. இயந்திரங்களைப் பயன்படுத்தினால், உழைப்பாளர்கள் வேலையிழக்க மாட்டார்கள் என்பதை இஃது உணர்த்துகிறது; உழைப்பாளர் களின் திறமையும், உற்பத்தித் திறனும் கூடுகின்றன.

'செறிந்த வேளாண்மை முன்னேற்றத்திட்டம்' செயல்படுத்தப் பட்ட ராய்ப்பூர் மாவட்டத்தில் 1964–65 முதல் 1968—69 வரை சாகுபடி வேலை வாய்ப்புகள் பெருகின. ஊதிய வீதங்களும்

1 Wolf Ladejinsky, Green Revolution in Bihar-The Kosi Area; A Field Trip,' Economic and Political Weekly, Sept. 27, 1969.

உயர்ந்தன. அக்காலத்தில் உழைப்பு நாட்களின் அடிப்படையில் உழைப்பாளர்களுக்கான வேலை வாய்ப்புகள் மூன்று மடங்கு அதிகரித்தன. இவ் வுயர்வோடுகூடச் சிறிய நிலவுடைமையாளர்கள் தங்களுடைய சாகுபடிப் பணிகளையும் நிறைவேற்றினர். உழைப்பாளர்களின் ஊதிய வீதங்கள் சாகுபடிக் காலங்களில் 150 சதவீதமாகவும், பிற காலங்களில் 100 சதவீதமாகவும் உயர்ந்தன.[1]

## பசுமைப் புரட்சியும் வேளாண்மை உழைப்பாளர்களும்

பசுமைப் புரட்சியால் வேளாண்மை உழைப்பாளர்கள் நன்மை அடைந்ததாகத் தெரியவில்லை. உழைப்பாளர்களின் கூலி வீதங்கள் உயர்ந்துள்ளன. ஆனால், அதைக்காட்டிலும் பொருள்களின் விலைகள் அதிகரித்துள்ளன. எனவே, உண்மைக் கூலியின் அளவு தாழ்வாகவே அமைகிறது. பஞ்சாப், ஹரியானா ஆகிய மாநிலங்களின் 15 மாவட்டங்களில் கூலிகள் பற்றிய விசாரணை செய்யப்பட்டது. அதன்மூலம் 1960 — 61ஆம் ஆண்டிற்கும் 1967 — 68 ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் வேளாண்மை உழைப்பாளர்களின் கூலி 89 சதவிதம் அதிகரித்தது அறியப்பட்டது. ஆயினும் அதே காலத்தில் வேளாண்மை உழைப்பாளர்கள் பயன்படுத்தக்கூடிய பொருள்களின் விலைகள் 93 சதவீதம் கூடின.'[2]

புதிய வேளாண்மைமுறை நன்மை அளிப்பதால் விவசாயிகள் அதிக முதலீட்டைச் செய்ய முன்வருகிறார்கள். இதனால், உற்பத்தி அதிகரித்து விவசாயிகளின் வருமானம் கூடுகின்றது. அதிகரித்த வருமானம் திரும்பவும் முதலீடாக்கப்படுகின்றது. இதுபற்றி பஞ்சாப் வேளாண்மைப் பல்கலைக்கழகம் ஆய்வு ஒன்றை மேற்கொண்டது. அதன் வாயிலாக மொத்தப் பண்ணைக் குடும்ப வருமானத்தில் சுமார் 18.47 சதவீதம் முதலீடு செய்யப்படுவதாகத் தெரிய வருகின்றது. அதில், 7.02 சதவீத வருமானம் நில முன்னேற்றத்திற்காகச் செலவழிக்கப்படுகிறது. நல்ல தரமான விதைகள், உரங்கள், பூச்சிக்கொல்லி மருந்துகள், நீர்ப்பாசனம், கூலி உழைப்பு ஆகியவற்றிற்காக வேளாண்மைக் குடும்பங்களின் வருமானத்தில் சுமார் 36.23 சதவீதம் செலவிடப்படுகின்றது. மொத்தத்தில் ஒரு வேளாண்மைப் பண்ணைக் குடும்பம் சாகுபடி

[1] B. D. Shastry, 'Quickening the Pace in Village Improvement,' Intensive Agricultural Development Programme, July 1969, cited in Martin E, Abel in 'Agriculture in India in the 1970's, in Economic and Political Weekly, March 28, 1970, p. A-10

[2] Economic and Political Weekly, Special Number, 1970, P. 1240.

முன்னேற்றத்திற்காக அதன் வருமானத்தில் 55 சதவீதத்தைச் செலவிடுகின்றது.'[1]

**பொருளாதார வளர்ச்சியை உறுதிப்படுத்துவதற்கான அடிப்படை**

அரசின் விலை நிலைபேருக்கக் கொள்கைகளின் வெற்றி பசுமைப் புரட்சியையே சார்ந்துள்ளது. தேசிய வருமானத்தில் சுமார் 50 சதவீதம் வேளாண்மையின்மூலம் கிடைக்கின்றது. புதிய வேளாண்மைக் கொள்கை ஆண்டுதோறும் உற்பத்தியை 5 சதவீதம் அதிகரிக்க உதவும். பசுமைப் புரட்சியால் மக்களுடைய வாங்கும் திறன் அதிகரித்துள்ளது. உற்பத்தி, நுகர்வு ஆகியவை உயர இதுவரை செய்யும் வேளாண்மை அல்லாத துறைகளின் வளர்ச்சியும் இதனால் காக்கப்படும். பொருளாதார வளர்ச்சி வீதத்தை உயர்த்த இந்நிலைகள் யாவும் தேவைப்படுகின்றன. விரும்பும் வீதத்தில் பொருளாதார முன்னேற்றத்தைப் பெற வேளாண்மை மேம்பாடு இன்றியமையாதது. இந்திய மக்களின் மொத்த நுகர்வில் சுமார் 85 சதவீதம் வேளாண்மைப் பொருள்களாகவும், கச்சாப் பொருள்களை வேளாண்மையினின்றும் பெறுகின்ற தொழில் பொருள்களாகவும் இருக்கின்றன. ஆகவே பொதுவான விலைநிலைபேருக்கத்திற்கு வேளாண்மைப் பொருள்களின் உற்பத்தியைக் கூட்டுவது அவசியம்.

**பசுமைப் புரட்சியின் சிக்கல்களும், உறுதியற்ற நிலைகளும்**

கடன், நீர்ப்பாசனம், பயிர் நோய், விற்பனை, விலை ஊக்கங்கள் உள்ளீடுகளுக்கான செலவு, அமைப்புச் சீர்திருத்தம், விக்வாக்கப் பணிகள், அயலகச் செலாவணி முதலியவற்றில் பல சிக்கல்கள் அமைந்துள்ளன. இவற்றில் உள்ள சிக்கல்களைத் தீர்ப்பதற்கான முயற்சிகளை முடிந்தவரை எடுக்கவேண்டும். பாரம்பரிய வேளாண்மை உற்பத்திமுறைகள் மறைந்து வருகின்றன. பிற நாடுகளில் பின்பற்றப்படும் முன்னேற்றச் சாகுபடிமுறைகள் நம் நாட்டிலும் கைக்கொள்ளப்பட்டுள்ளன. இதன் காரணமாக எதிர்காலத்தில் உற்பத்தி மேலும் உயருமென எதிர்பார்க்கலாம்.

**கடன் தேவைகள்**

பண்ணை உள்ளீடுகளை வாங்குவதற்கான நிதி வசதியைப் பெரிய விவசாயிகள் மட்டுமே கொண்டுள்ளனர். அதிக வருமானத்தைப் பெறும் அவர்கள் கடன்களைப் பெறத் தேவையில்லை. சிறிய விவசாயிகள் புதிய உற்பத்தி முறைகளைப் பின்பற்றும் வீதம்

1 A.S. Kahlon, 'Creen Revolution and Changing Rural Scene', Economic Times, July 30, 1969, p. 5.

கிடைக்கக்கூடிய கடன் வசதிகளுக்கேற்ப அமையும். கடன்களைக் குறைந்த வட்டிக்குக் கிடைக்குமாறு செய்யவேண்டும். பெரும்பாலான சிறிய விவசாயிகள் 20 முதல் 100 சதவீதக் கடனை லேவாதேவிக்காரர்களிடமிருந்து பெறுகின்றனர்கள். உரங்கள் முதலிய புதிய உள்ளீடுகளின் பயனை அவர்களால் பெற முடிவதில்லை. ஏனெனில், அவர்கள் உயர் வட்டி வீதத்தில் கடனைப் பெறுகிறார்கள். உரங்களைப் பயன்படுத்தும் நிலை சமீப காலத்தில் தாழ்ந்துள்ளது. நியாயமான வட்டியில் போதுமான கடன் வசதிகள் இல்லாமையே இதற்குக் காரணமாகும். இதைத் தவிர்க்க நிறுவனக்கடன் வசதிகள் பெருக்கப்படவேண்டும். விலையுயர்ந்த உற்பத்திச் சாதனப் பொருள்களைப் பயன்படுத்த கடன் வசதிகள் தேவையாகின்றது.

செறிவு முறைச் சாகுபடியில் உழைப்பும் அதிகமாகத் தேவைப்படுகிறது. எல்லா வசதிகளையும் பெறக் கடன் அவசியமாகின்றது. அகில இந்தியக் கிராமக் கடன் பரிசீலனைக் குழு' (All India Rural Credit Review Committee, 1969) 1973-74-ல் உற்பத்திக்கான குறுகிய காலக் கடன் தேவைகள் சுமார் ரூ. 2,000 கோடி என்ற அளவில் இருக்குமெனக் குறிப்பிட்டது. திட்டக் காலம் முழுமைக்கும் இடைக்கால, நீண்ட காலக் கடன்கள் முறையே ரூ. 500 கோடி' 1,500 கோடி என்ற அளவுகளில் இருக்குமென்று மதிப்பிடப்பட்டுள்ளது.[1]

**உரங்கள்**

புதிய வேளாண்மை உற்பத்தி முறையால் உரங்களின் நுகர்வு அதிகரித்துள்ளது. புதிய தானிய வகைகளின் உற்பத்தியை உத்தம அளவுக்கு உயர்த்தவேண்டும். அதற்கு உரங்களை அதிகமாகப் பயன்படுத்துவது அவசியமாகின்றது. பயிர்களின் செழுமையான வளர்ச்சிக்கு உரங்கள் தேவை. நான்காவது திட்டத்தின் நோக்கம் உரங்களின் நுகர்வை மூன்று மடங்கு அதிகரிப்பதாக இருக்கின்றது. இது சம்பந்தமான சில முக்கியப் பிரச்சினைகள் உள்ளன.

1. வேளாண்மை விரிவாக்கம், விற்பனை முன்னேற்றம் ஆகியவற்றைச் செறிவுபடுத்தினால்தான் உர நுகர்வை அதிகரிக்க இயலும்.

2. விவசாயிகள் உரங்களை எளிதில் பெறுவதற்கான வசதிகள் அமைந்திருக்கவேண்டும்.

[1] Fourth Five-Year Plan (Final), May, 1970, p. 14).

3. உரங்களின் உற்பத்தியைப் பெருக்குவதோடு அவற்றின் தரத்தையும் அதிகரிக்கவேண்டும். உரங்களை எவ்விதத்தில் பயன்படுத்துவது என்பதுபற்றிய அறிவையும் விவசாயிகள் கொண்டிருக்கவேண்டும்.

### நீர்ப்பாசன முன்னேற்றம்

அமோக விளைச்சல் திட்டத்தின் செறிவு முறைச் சாகுபடி அதிக நீர்ப்பாசன வசதியைத் தேவையாகக் கொண்டுள்ளது. சாகுபடிக் காலங்களில் பாசனவசதி கிடைக்குமாறு அரசு பார்த்துக்கொள்கிறது. தண்ணீர்த் தேவையைச் சரியாகக் கணக்கிடாமையால், அமோக விளைச்சல் திட்டம் சில இடங்களில் தோல்வி யடைந்தது.[1] நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களுக்குப் போதிய முக்கியத்துவம் தரப்படவில்லை.[2] தற்பொழுது நம் நாட்டில் கால்வாய்ப் பாசனம் போதுமானதாக இல்லை. எனவே, குழாய்க் கிணறுகளை நாடு முழுவதும் அதிக எண்ணிக்கையில் எடுக்கவேண்டும். பல வகைப்பட்ட நீர்ப்பாசன வசதிகளைக்கொண்ட தஞ்சாவூர், லூதியானா, மேற்குக் கோதாவரி ஆகிய மாவட்டங்களில் வேளாண்மை உற்பத்தி பலமடங்கு அதிகரித்துள்ளது. எல்லாப் பகுதிகளிலும் உற்பத்தியைக் கூட்ட புதுமையான முறைகளில் பாசன வசதிகளைப் பெருக்குதற்கு முயலவேண்டும். பாசன வசதி இல்லாவிடில் அதிக முதலீடு செய்தாலும் உற்பத்தியைப் பெருக்க இயலாது.

### பயிர்ப் பாதுகாப்பு

புதிய வேளாண்மை முறையில் பயிர்ப்பாதுகாப்புக்கு முக்கியத்துவம் தரப்படுகின்றது. அதிக விளைச்சலைத் தரக்கூடிய பயிர்கள் பூச்சிகளாலும், நோய்களாலும், களைகளாலும் எளிதில் பாதிக்கப்படுகின்றன. புதிய முறைக்கான உற்பத்திச் செலவு அதிகமாக இருக்கின்றது. அதிக செலவோடு பயிர்கள் பாதிக்கப்படும் என்ற நிலையால் விவசாயிகள் புதிய முறையைப் பின்பற்றத் தயங்குகின்றார்கள். பழைய முறையைப் பின்பற்றினால், ஒரு குறிப்பிட்ட அளவு உற்பத்தியையாவது பெறமுடியும் என்ற நம்பிக்கை அவர்களுக்கு உள்ளது. புதிய முறையில் உள்ளீடுகளுக்கான செலவு அதிகமாக இருந்தாலும் நன்மைகள் பெறப்படுகின்றன. ஆனால், அந்த நன்மைகளை முழுமையாகப் பெறப் பயிர்ப் பாதுகாப்பு நடவடிக்கைகள் எடுக்கப்படவேண்டும். களைகள் மண்டுவதைத் தடுப்பது அவசியம். பூச்சிக்கொல்லி மருந்துகளைப் பயன்படுத்து

1 Ashok Thapar, 'Higher Farm Yield' in Yojana, June 1, 1969, p. 12.
2 Ibid

வதன் மூலம் உற்பத்தியைக் கூட்டலாம். நோய்களால் பாதிக்கப் படாத பயிர் வகைகளைக் கண்டுபிடிக்கலாம்.

**விற்பனை வசதிகளும், விலை ஊக்கங்களும்**

இந்தியாவில் வேளாண்மைப் பொருள்களின் விற்பனை வசதிகள் பெருகியிருக்கவில்லை. போக்குவரத்து வளர்ச்சி குறைந்த வேகத்தில் ஏற்படுவதும் இதற்குக் காரணமாகும். விரிவான சந்தைகள் இங்கு அமைந்திருக்கவில்லை. வேளாண்மை உற்பத்தியைப் பெருக்குவதற்கான நடவடிக்கைகளை அரசு எடுத்து வருகின்றதே தவிர விற்பனை வசதியை அதிகரிப்பதில் கவனத்தைச் செலுத்தவில்லை. இதன் காரணமாக உற்பத்தி உயர்வின் நன்மைகளை விவசாயிகள் பெறமுடியவில்லை. கிராமங்களுக்கும் சந்தைகளுக்கும் இடையே போக்குவரத்து வசதிகளை அதிகரிக்க வேண்டும். விளைபொருள்களைச் சேமித்து வைப்பதற்கான கிடங்குகளை ஏற்படுத்துதல் இன்றியமையாதது. தானியங்களைத் தரத்திற்கேற்ப வகைப்படுத்தினால், விவசாயிகள் அதிக வருமானத்தைப் பெறுவர். வேளாண்மைப் பொருள்களை ஏற்றுமதி செய்வதற்கான வழிமுறைகளைப் பின்பற்றுவதும் அவசியம். சந்தையில் விலை நிலவரங்களைப்பற்றி விவசாயிகள் அறிந்திருக்கவேண்டும். இவ்வகையில் இந்திய வேளாண்மைத் தொழில் சீரமைப்பைத் தேவையாகக் கொண்டுள்ளது.

முக்கிய வேளாண்மைப் பொருள்களுக்குக் குறைந்த மட்ட விலைகள் நிர்ணயிக்கப்படுகின்றன. ஆனால் இது மட்டும் போதுமானதாகாது. 'இந்திய உணவுக் கழகம்' (Food Corporation of India), 'அரசின் வாணிபக் கழகம்' (State Trading Corporation), கூட்டுறவு விற்பனை அமைப்புகள் முதலியவற்றின் பணிகள் அதிகரிக்கப்படவேண்டும். இவ் வமைப்புகள் சாகுபடியாளர்களுக்கு நன்மையளிக்கத்தக்க வகையில் இயங்கவேண்டும். விதை விதைக்கும் பருவத்திற்கு முன்னராகவே விலைகளை அறிவித்து விடுவது நல்லது. அவ் விலைகளை விளம்பரங்களின்மூலம் விவசாயிகள் அறியுமாறு செய்யவேண்டும். தேவை ஏற்படும் போது அரசு, அவ் விலைகளில் விளைபொருள்களை வாங்கத் தயாராக இருக்கவேண்டும். வேளாண்மைப் பொருள்களுக்குக் குறைந்தபட்ச விலையையாவது அரசு உறுதியளித்தல் முக்கியமானது. அப்பொழுதுதான், விவசாயிகள் நிலத்தில் பல நிரந்தரமான முன்னேற்றங்களைச் செய்வார்கள். நீண்ட காலத்தில் விலை நிலைபேருக்கத்தைப் பெற முயலவேண்டும். குறுகிய காலத்தில் விலைகளில் ஏற்றத்தாழ்வுகள் இருப்பதைத் தவிர்க்க முடியாது.

### நிலச் சீர்திருத்தங்கள்

பசுமைப் புரட்சியைத் தீவிரப்படுத்த நிலச் சீர்திருத்தங்களைச் செய்யவேண்டும். புதிய உற்பத்தி முறைகளைப் பின்பற்றுவதற்குப் பல சமுதாயத் தடைகள் இருக்கின்றன. அமோக விளைச்சல் திட்டத்தில் விவசாயிகள் ஊக்கத்தோடு ஈடுபடவேண்டுமானால், நிலவுடைமைகளின்மீதான அவர்களுடைய உரிமைகள் காக்கப்பட வேண்டும். பல மாநிலங்களில் நிலக்கிழார்கள் சொந்தச் சாகுபடிக்காக நிலத்தைக் குத்தகையாளர்களிடமிருந்து திரும்பப் பெறும் உரிமையைக் கொண்டிருக்கின்றனர். இதனால், குத்தகையாளர்கள் நிலத்தின்மீதான உரிமைகளை உறுதியற்ற நிலையில் பெற்றிருக்கின்றனர். சாகுபடி செய்யும் குத்தகையாளர்களுக்கான உரிமைகள் பெருக்கப்படவேண்டும். உழுபவர்களுக்கு நிலத்தைச் சொந்தமாக்குவது நன்மையளிக்கும். பெரு நிலக்கிழார்கள் குத்தகையாளர்களிடமிருந்த நிலத்தைத் திரும்பப் பெறுவதற்கு அனுமதிக்கக்கூடாது. நிலத்தின் நிரந்தர உரிமைகள் சாகுபடியாளர்களுக்கே அளிக்கப்படவேண்டும். தைவான், தென் கொரியா ஆகிய நாடுகளில் புதிய பண்ணை முறைகள் பெரு வெற்றியை அளித்துள்ளன. அங்கு நிறைவேற்றப்பட்ட சீரிய நிலச் சீர்திருத்தங்களே இதற்கான முக்கியக் காரணமாகும்.

### பண்ணை உள்ளீடுகளின் விலைகள்

இந்தியாவின் புதிய வேளாண்மை உற்பத்திமுறை அதிக உற்பத்திச் செலவைக் கொண்டதாகவும் இருக்கிறது. விதைகள், உரங்கள், கருவிகள், பூச்சிக் கொல்லி மருந்துகள், நீர்ப்பாசன வசதிகள் ஆகியவற்றைப் பெறுவதற்கான செலவு உயர்வாக உள்ளது. வேளாண்மை படிப்படியாக இயந்திரமயமாக்கப்பட்டு வருகின்றது. கால்நடைச் சக்திக்குப் பதிலாக இயந்திரச் சக்தி பயன்படுத்தப்படுகின்றது. உழைப்பாளர்களின் கூலியும் சமீப காலத்தில் உயர்ந்துள்ளது. பண்ணைச் செலவுகளில் மனித உழைப்புக்கான செலவு சுமார் 30 முதல் 50 சதவீதமாக இருக்கின்றது. செறிவுமுறைச் சாகுபடியைப் பின்பற்றும்போது உழைப்பின் தேவை கூடுகின்றது. விஞ்ஞான ரீதியில் சாகுபடியைப் பின்பற்ற அதிக மூலதனம் தேவைப்படுகின்றது. அந்த அளவு மூலதனத்தை இந்திய விவசாயிகளில் பலர் கொண்டிருப்பதில்லை. அதிக விலை கொடுத்து உள்ளீடுகளை வாங்கிப் பயன்படுத்தினாலும், பெறக்கூடிய இலாபத்தின் வீதம் உயர்வாகவே இருக்கும். இவ்வாறு இலாபத்திற்கும் முதலீட்டிற்கும் இடையே நெருங்கிய தொடர்பு பொருந்தியுள்ளது.[1]

1 Jai Krishna, 'A Pattern for Integrated Farm Policy,' Economic Times, June, 1959, pp. 5,7.

புதிய உற்பத்திமுறை பின்பற்றப்படுவதால் உள்ளீடுகளுக்கான விலைகள் கூடிவிட்டன. சமீப காலத்தில் வேளாண்மை உழைப்பாளர்களுக்கான கூலியும் அதிகரித்துள்ளது. உணவு, வேளாண்மை அமைச்சகத்தின் பொருளாதாரப் புள்ளி விவர இயக்குநரகம், வேளாண்மை உற்பத்திச் செலவுக் குறியீட்டெண்களைக் கணித்தது. அதன்படி தேர்ந்தெடுக்கப்பட்ட மாவட்டங்களில் சில பயிர்களின் உற்பத்திச் செலவு 1965—66ஆம் ஆண்டிற்கும் 1966–67ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் 40 சதவீதம் அதிகரித்தது. புதிய பண்ணை முறைகளை விரிவு படுத்த உள்ளீடுகளின் விலைகளை நிலைப்படுத்த வேண்டும். அவ் விலைகள் நியாயமான அளவிலும் இருத்தல்வேண்டும். அவ்வாறில்லாவிடில் பசுமைப் புரட்சியைத் தொடர்ந்து நீடிக்கச் செய்ய முடியாது.

### விரிவாக்கப் பணிகள்

புதிய சாகுபடி முறைகளைக் கைக்கொள்ளுகின்ற பண்ணைகளை நிர்வகிப்பது எளிதானதன்று. இன்று விவசாயிகள் எண்ணற்ற முடிவுகளை எடுக்க வேண்டியுள்ளது. அவர்கள் சரியான முடிவுகளைத் திறமையாக உரிய காலத்தில் எடுக்கவேண்டும். கிடைக்கக்கூடிய வசதிகள் யாவற்றையும் அவர்கள் முழுமையாகப் பயன்படுத்திக் கொள்ளுதல் அவசியம். அதன் மூலம் பண்ணைத் தொழிலின் இலாபத்தை மிகையாகப் பெறலாம். கடந்த காலத்தைவிடத் தற்பொழுது விவசாயிகள் அதிகத் திறமையோடு பணியாற்ற வேண்டியுள்ளது. தற்போதைய விரிவாக்கப் பணிகள் உற்பத்திக்கான எல்லா வசதிகளையும் தருவதாக இல்லை.

வேளாண்மை விரிவாக்கப் பணிகளில் உள்ள குறைபாடுகள் யாவும் நீக்கப்படவேண்டும். தொழில் நுட்ப ஆலோசனைகளை அளிப்பதோடுகூட உரங்கள், விதைகள் முதலிய உள்ளீடுகளையும் போதுமான அளவுக்கு அளித்தல் அவசியமானது. வேளாண்மை விரிவாக்கப் பணியாளர்களின் பணிகள் மேற்பார்வை செய்யப்பட வேண்டும். பணியாளர்களை அடிக்கடி இடமாற்றம் செய்வது நல்லது. ஆராய்ச்சியின் பயன்கள் யாவும் சாகுபடியாளர்களைச் சென்று சேர வேண்டும். பசுமைப் புரட்சி தொடர்ந்து நீடிக்க திட்டத்தைத் தீட்டுபவர்கள் சரியான கொள்கைகளைக் கைக் கொள்ளவேண்டும். விரிவாக்கப் பணிகளில் மாற்றங்களைச் சீரிய முறையில் செய்வது இன்றியமையாதது. பண்ணை வசதிகளைப் பயன்படுத்தி உற்பத்தியை உயர்ந்த திறமையான விரிவாக்கப் பணிகள் பின்பற்றப்படவேண்டும். அப்பொழுதுதான் வேளாண்

மைத் தொழில் நுட்ப முன்னேற்றத்தின் நன்மைகள் பலவற்றையும் பெற இயலும்.

வேளாண்மை வளர்ச்சி பின்வரும் பல காரணிகளைச் சார்ந்துள்ளது. (1) நிலவுடைமை முறை; (2) பண்ணைச் சமுதாயத்தினரின் பழக்க வழக்கங்கள்; (3) நிலவுடைமைகளின் அளவு; (4) கிராம மக்களின் கல்வி நிலை; (5) நிலச் சீர்திருத்தங்களின் தீவிரம்; (6) உள்ளீடுகளின் அளிப்பு நிலை; (7) வேளாண்மையைச் சார்ந்த தொழில்களின் முன்னேற்றம் என்பன.

**நான்காவது திட்டத்தின் கீழ் அமோக விளைச்சல் திட்டம்**

புதிய கொள்கையின் மூலம் நான்காவது திட்டக் காலத்தில் உற்பத்தியைப் பெருக்க நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன. இத் திட்டத்தின்மூலம் உணவுத் தானியங்களின் உற்பத்தியை 31 மில்லியன் டன்கள் என்ற அளவுக்கு உயர்த்த வழி முறைகள் பின்பற்றப்படுகின்றன. அதில் சுமார் 21 மில்லியன் டன்கள் (அதாவது சுமார் 70 சதவீதம்) அமோக விளைச்சல் திட்டத்தின் வாயிலாகப் பெறப்படும். 1968—69-ல் அமோக விளைச்சல் திட்டம் 9.2 மில்லியன் ஹெக்டேர்களில் மட்டுமே பின்பற்றப்பட்டது. ஆனால், இத் திட்டம் 1973—74ஆம் ஆண்டிற்குள் 25 மில்லியன் ஹெக்டேர்களுக்கு விஸ்தரிக்கப்படும். 1970—71ஆம், ஆண்டில் மட்டுமே சுமார் 15 மில்லியன் ஹெக்டேர்களில் அதிக விளைச்சலைத் தரக்கூடிய விதைகளைப் பயன்படுத்தத் தீர்மானிக்கப்பட்டது. பின்வரும் அட்டவணையில் இத் திட்டத்தின் குறியிலக்குகள் கொடுக்கப்பட்டுள்ளன.

**அமோக விளைச்சல் திட்டக் குறியிலக்குகள்**[1]

| எண் | பயிர் | அடிப்படை அளவு (1968—69) | குறியளவு (1973—74) | அதிகக் குறியிலக்குகள் (மில்லியன் ஹெக்டேர்களில்) |
|---|---|---|---|---|
| 1. | நெல் | ... 2.6 | 10.1 | 7.5 |
| 2. | கோதுமை | ... 4.8 | 7.7 | 2.9 |
| 3. | மக்காச் சோளம் | ... 0.4 | 1.2 | 8.0 |
| 4. | சோளம் | ... 0.7 | 3.2 | 2.5 |
| 5. | கம்பு | ... 0.7 | 2.8 | 2.1 |
| 6. | மொத்தம் | ... 9.2 | 25.2 | 15.8 |

1 Fourth Five-Year Plan (Final), May, 1970, p. 122.

நான்காவது திட்டத்தில் உற்பத்திக் குறியிலக்குகளை எட்டுவதற்குப் பல முறைகள் பின்பற்றப்படுகின்றன. உணவுத் தானியங்கள், வாணிபப் பயிர்கள் ஆகியவற்றின் உற்பத்தியைக் கூட்ட, பல போகச் சாகுபடிமுறை கைக்கொள்ளப்பட்டுள்ளது. புதிதாக 9 மில்லியன் ஹெக்டேர்களில் குறுகிய காலத்தில் பயனளிக்கக் கூடிய பயிர் வகைகள் சாகுபடி செய்யப்படும். 3.2 மில்லியன் ஹெக்டேர்களுக்குப் புதிதாகச் சிறிய நீர்ப்பாசன வசதிகள் செய்து தரப்படும். உரங்களின் நுகர்வு திட்டக் காலத்திற்கு முன்பிருந்ததைவிட மூன்று மடங்கு அதிகரிக்கும். திட்ட இறுதிக்குள் 80 மில்லியன் ஹெக்டேர்களில் பயிர்ப்பாதுகாப்பு நடவடிக்கைகள் எடுக்கப்படும். இதுபோன்றே, வேளாண்மைக் கடன், விற்பனை, கிடங்கு வசதிகளும் பெருக்கப்படும். சாகுபடியாளர்களுக்குப் பாதுகாப்பளிக்க முக்கிய வேளாண்மைப் பொருள்களுக்குக் குறைந்தபட்ச விலைகள் உறுதியளிக்கப்படும்.

தனிப்பட்ட பயிர்கள் ஒவ்வொன்றுக்கும் உற்பத்தியைப் பெருக்குவதற்கான திட்டங்கள் நிறைவேற்றப்படுகின்றன. சிறிய விவசாயிகளும் தொழில் நுட்ப உற்பத்தி முறையைப் பின்பற்றப் பல வசதிகள் அளிக்கப்படுகின்றன. புன்செய்ப் பயிர்களின் உற்பத்தியை அதிகரிக்கவும் நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன.

பசுமைப் புரட்சி கிராமச் சமுதாயத்தில் அதிக ஏற்றத்தாழ்வுகளை ஏற்படுத்தியுள்ளது. அதைக் குறைப்பதற்காகவே நிலச்சீர்திருத்தங்கள் நிறைவேற்றப்பட்டு வருகின்றன.

## முடிவுரை

இந்தியாவில் மக்கள் தொகைப் பெருக்கம் உயர்வாக இருப்பதால், வேளாண்மை உற்பத்திப் பெருக்கம் ஆண்டொன்றுக்கு 3.5 முதல் 4.0 சதவீதம் என்ற அளவில் அமையவேண்டும். திட்டமிட்டுள்ளபடி உற்பத்தி பெருகினால் பணவீக்கம் தோன்றாது. ஏற்றுமதியை அதிகரித்து இறக்குமதியைக் குறைப்பதற்கான வாய்ப்புகளும் ஏற்படும். வேளாண்மை வளர்ச்சியில்தான் மக்களின் ஒளிமயமான எதிர்காலம் அடங்கியுள்ளது.

நான்காவது திட்டம் வேளாண்மை உற்பத்தியை 5 சதவீதமும், உணவுத் தானியங்களின் உற்பத்தியைச் சுமார் 6 சதவீதமும் உயர்த்த குறியிலக்குகளை நிர்ணயித்திருக்கின்றது.

பசுமைப் புரட்சியைத் தொடர்ந்து[1] நீடிக்குமாறு செய்தால், இக் குறியிலக்குகளை எட்டுவது எளிதானதேயாகும். ஆனால், இது வரை நாம் பெற்ற அனுபவங்கள் இக்குறியளவுகளை எட்டுவது கடினமானதே என்று எண்ணத் தோன்றுகின்றது.[2] வேளாண்மைத் திட்டங்களின் நன்மைகளை மக்கள் யாவரும் பெறுமாறு செய்வது அரசின் கடமையாகும். நிலச் சீர்திருத்தங்களில் உண்மையான சமதர்மம் பிரதிபலிக்கவேண்டும். பொருளாதார முன்னேற்ற வேகம் சிறிது குறைவடைந்தாலும் வருமானத்திலும், செல்வப் பங்கீட்டிலும் உள்ள அதிக வேறுபாட்டைத் தவிர்ப்பது அவசியமாகும். வறியவர்கள், செல்வந்தர்கள் என்று பாகுபாடு செய்ய முடியாத அளவுக்கு மக்கள் யாவரும் வளமான வாழ்வைப் பெறவேண்டும்.

1 E. A. G. Robinson, 'Economic Progress in India,' The Three Banks Review, March, 1970, No. 85, pp. 16—17.

2 Dharam Narain 'Has Our Farm Revolution Gone Awry?' Times of India, Independence Day Supplement, August 15, 1969.

# 22. நிறைவுரை விளக்கம்

மத்திய அரசு மக்களின் பேராதரவோடு பதவிக்கு வந்துள்ளது. வறுமை ஒழிக்கப்படும் என்ற நம்பிக்கையில்தான் மக்கள் தங்களுடைய ஆதரவைத் தந்துள்ளார்கள். நிலச் சீர்திருத்தங்களின் மூலம் வறுமையை விரட்டலாம். நில உச்சவரம்பை விதிப்பதால் உபரி நிலம் கிடைக்கப்படும். நிலமற்றவர்களுக்கு அந்த நிலம் வழங்கப்படலாம். உழுபவர்களை நிலவுடைமையாளர்களாக்குவது நல்லது. காங்கிரஸ் கட்சி அதன் தேர்தல் அறிக்கையில் நில உச்சவரம்பு விதிப்பதுபற்றிக் குறிப்பிட்டது. ஐந்து பேர்கள் அடங்கிய ஒரு குடும்பத்திற்கு நிரந்தர நீர்ப்பாசன வசதியைக் கொண்டு இரு போகச் சாகுபடி செய்யக்கூடிய நிலத்தை 10 முதல் 18 ஏக்கர்கள்வரை அனுமதிக்கலாம் என்று கூறப்பட்டது.

மத்திய நிலச் சீர்திருத்தக் குழுவின் பரிந்துரைகள் ஆகஸ்ட் 1971-ல் வெளிவந்தன. அவற்றையே காங்கிரஸ் கட்சி தன்னுடைய தேர்தல் அறிக்கையில் குறிப்பிட்டது. 10 முதல் 18 ஏக்கர்கள் வரையான உச்சவரம்பு அரசாங்க நீர்ப்பாசன வசதிகளைக் கொண்ட நிலவுடைமைகளுக்கு மட்டுமே பொருந்தும். பிற வழிகளில் நீர்ப்பாசன வசதிகளைப் பெறுகின்ற நிலங்களில் உச்ச வரம்புச் சட்டங்கள் செல்லுபடியாக மாட்டா. மத்திய நிலச் சீர்திருத்தக் குழுவால் இக் கருத்துப் பரிந்துரைக்கப்பட்டது. இது மத்திய வேளாண்மைத் துறையின் நிலச் சீர்திருத்தங்களின் ஒரு பிரிவாகச் சேர்த்துக் கொள்ளப்பட்டதாக அதன் ஆண்டறிக்கை கூறுகின்றது.

சில மாநிலங்களில் செல்வ நிலையில் உள்ள விவசாயிகள் குழாய்க் கிணறுகளின்மூலம் நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்கிக் கொண்டுள்ளார்கள். அவர்கள் நில உச்ச வரம்பால் பாதிக்கப்பட மாட்டார்கள். நில உச்ச வரம்பினின்றும் தங்களைக் காத்துக் கொள்ளக் குழாய்க் கிணறுகளை அமைக்காத விவசாயிகளும்

அவற்றை அமைக்க முன்வருவர். தனியார் முயற்சியின்மூலம் பெறப்படுகின்ற நீர்ப்பாசனம், அரசின் நீர்ப்பாசனம் ஆகியவற்றிடையே வேறுபாடு காட்டி நில உச்சவரம்பை விதிப்பது தவறு. அவ்வாறு, வேறுபாடு காட்டினால், சமுதாயத்தில் உள்ள சிலர் பாதிக்கப்படாதபோது மற்றவர்கள் பாதிக்கப்படுவர். இதைச் சமதர்மமுறை என்று கூற முடியாது.

நில உச்ச வரம்பு விதிப்பில் உள்ள இக் குறைபாட்டை மத்திய அரசு உணர்ந்துள்ளது. மாநில முதலமைச்சர்கள் நில உச்ச வரம்பின் அளவைக் குறைப்பதில் அதிக ஆர்வம் கொண்டிருக்கவில்லை. தேர்தல் அறிக்கையில் குறிப்பிட்டவாறு நிலச் சீர்திருத்தங்கள் நிறைவேற்றப்படும் என்று மத்திய அமைச்சர் திரு, பக்ருதீன் அலி அஹமது கூறியிருக்கின்றார்.

உழுபவரை நிலவுடைமையாளராக மாற்றவேண்டும் என்ற நோக்கில் பம்பாய்க் குத்தகைச் சட்டம் மஹாராஷ்டிரா-குஜராத் மாநிலங்களால் இயற்றப்பட்டது. குத்தகை முறையை ஒழிக்க வேண்டும் என்பது அதன் நோக்கமாக இருந்தது. அரசுக்கும் நிலத்தை உழுபவர்களுக்கும் இடையே நேரடித் தொடர்பை ஏற்படுத்துவது முக்கியமானது என்று கூறப்பட்டது. இச் சட்டம் 1955-ல் திருத்தம் செய்யப்பட்டது. 1957 ஏப்ரல் முதல் தேதி 'உழைப்பாளர் தினமாயிற்று' (Tillers' Day). அதன் பின்னர், நிலக்கிழாரிடமிருந்து நிலத்தை வாங்கும் உரிமை குத்தகையாளருக்கு அளிக்கப்பட்டது. நில உச்சவரம்பின் அளவு வரை குத்தகையாளர் நிலத்தை வாங்கும் உரிமை பெற்றவராவர். ஆனால், மொத்த நிலத்தில் பாதியை நிலக்கிழாரின் சொந்தச் சாகுபடிக்கு அனுமதிக்கவேண்டும். குத்தகையாளர் விரும்பாவிட்டாலும், அவர் தொடர்ச்சியாக நான்குமுறை குத்தகை செலுத்தாவிட்டாலும் குத்தகை நிலத்தை வாங்கும் உரிமை இழந்துவிடுவார். தந்த்வாலா, ஷா ஆகியவர்களுடைய ஆய்வின்படி டிசம்பர் 1963 வரை குத்தகை நிலத்தைக் குத்தகையாளர்கள் 26 (Satara) முதல் 57 (Karjat) சதவீதம்வரை வாங்கி இருந்தார்கள். இதுபற்றி நீதி மன்றங்களில் சில வழக்குகள் தொடரப்பட்டன. சில வகை நிலங்களுக்கு நில உச்சவரம்பினின்றும் நிரந்தரமாக விலக்களிக்கப்பட்டது. இவற்றின் காரணமாக, மேலே குறிப்பிடப்பட்ட சதவீதம் 32 முதல் 67 ஆக மாறியது,

பம்பாய்க் குத்தகைச் சட்டத்தின் அடிப்படையில் குத்தகையாளர்களில் 44.36 சதவீதத்தினர் நிலத்தை வாங்கினர் என்று தேசாய் அறிக்கை குறிப்பிடுகின்றது. சுமார் 44 சதவீதக் குத்தகை

நிலபரப்பை அவர்கள் வாங்கினர்கள். இத் திட்டத்தின்கீழ் மற்றொரு கணக்கெடுப்பு 65 கிராமங்களில் செய்யப்பட்டது. அதன் படி குத்தகையாளர்களில் 54 சதவீதத்தினர் மொத்தக் குத்தகை நிலத்தில் 57 சதவீதத்தை வாங்கினர்.

குத்தகை ஒழிப்பின் நன்மைகள் குறிப்பிடத்தக்க அளவில் இருக்கின்றன. இரு அறிக்கைகளும் குத்தகை நிலப்பரப்பில் சுமார் பாதி குத்தகையாளர்களால் வாங்கப்பட்டதை உணர்த்துகின்றன. ஆனல், 1955ஆம் ஆண்டு திருத்தத்திற்கு முன்னர், பம்பாய்க் குத்தகைச் சட்டம் எவ்வாறு செயல்பட்டது என்பது குறித்துக் குந்தாபூரின் கோக்கலே நிறுவனத்தைச் சேர்ந்த தந்தேகரால் ஆராயப்பட்டது. அவருடைய முடிவு மேலே கூறப்பட்ட இரண்டு அறிக்கைகளின் கருத்தினின்றும் வேறுபட்டதாக இருந்தது.

நில உரிமைப் பதிவேடுகளில் குத்தகையாளர்களைப்பற்றிக் குறிப்பிடப்பட்டிருக்கவில்லை. தந்த்வாலா, ஷா ஆகியவர்களால் செய்யப்பட்ட ஆய்வு, பல நிலைகளைப்பற்றியதாக இருந்தது. 1956—57-ல் குத்தகையாளர்களாக இருந்தவர்கள் 1964—65-ல் அவ்வாறு இருக்கவில்லை. நிலவுடைமையாளர்கள் குத்தகையாளர்களிடமிருந்து நிலத்தைப் பறித்து வேறு புதியவர்களிடம் குத்தகைக்கு விட்டார்கள். தந்த்வாலா, ஷா ஆய்வால், வேறு சில உண்மைகளும் புலப்படுகின்றன. 1956-ல் 29 சதவீதமாக இருந்த குத்தகை நிலம் 1965-ல் 10 சதவீதமாகக் குறைந்தது. நிலக்கிழார்கள் சொந்தச் சாகுபடிக்கு நிலத்தை எடுத்துக்கொண்டமையும், குத்தகையாளர்கள் சட்டப்பூர்வமாக நிலவுடைமையாளர்களாக மாற்றப்பட்டமையும் இதற்குக் காரணமாகும்.

மஹாராஷ்டிரம், குஜராத் ஆகிய மாநிலங்களில் குத்தகைச் சீர்திருத்தங்களின் மூலம் சிறப்பான நன்மைகள் ஏற்பட்டுள்ளன. பிற மாநிலங்களைக் காட்டிலும் இவ்விரு மாநிலங்களில் நிலச் சீர்திருத்தங்கள் குறிப்பிடத்தக்க வெற்றியைப் பெற்றிருக்கின்றன. குறிப்பிட்ட காலத்திற்குள் நிலச் சீர்திருத்தங்கள் நிறைவேற்றப்பட்டமையே இதற்குக் காரணமாகும். பம்பாய்க் குத்தகைச் சட்டம் அதற்கு வகை செய்தது, செய்யப்பட்ட ஆய்வுகள் நிலச் சீர்திருத்த முறைகளின் குறைபாடுகளைக் களைய உதவின. அந்த ஆய்வுகளின் முடிவுகளுக்கேற்ப குஜராத், மஹாராஷ்டிர மாநில அரசுகள் சீர்திருத்தங்களைச் செய்தன. கடின நிலைகளுக்கிடையே நிலச் சீர்திருத்தங்கள் இவ்விரு மாநிலங்களிலும் குறிப்பிடத்தக்க வெற்றியைப் பெறும் வகையில் நிறைவேற்றப்பட்டுள்ளன.

மத்திய நிலச் சீர்திருத்தக் குழு நீர்ப்பாசன வசதிகளைத் தொடர்ச்சியாகக் கொண்டு இரு போகச் சாகுபடி செய்யத்தக்க நிலங்களின் மீது விதிப்பதற்கான உச்சவரம்பைக் குறிப்பிட்டது. அரசாங்கத் திட்டங்களின்மூலம் பாசன வசதியைப் பெறுதல், நிலவுடைமையாளர்கள் தாங்களே பாசன வசதியைப் பெருக்கிக் கொள்ளுதல் முதலியவற்றுக்கிடையே பேதம் காட்டப்படுகிறது. எவ் வழியில் பெறப்பட்டாலும் நீர்ப்பாசன வசதிக்கேற்பவே உற்பத்தியளவு அமையுமாதலால் இவ்வித வேறுபாட்டைக் கருதவேண்டாம் என்று சிலர் குறிப்பிடுகின்றனர்.

ஆண்டொன்றுக்கு இருமுறை சாகுபடி செய்யத்தக்க நிலங்களின்மீது 10 முதல் 18 ஏக்கர்கள் என்ற அளவில் உச்சவரம்பை விதிக்கலாம் என்று கூறப்படுகிறது. ஒரு போகச் சாகுபடி மட்டும் செய்யத்தக்க நீர்ப்பாசன வசதியைக்கொண்ட நிலங்களின்மீது உச்சவரம்பை 26 ஏக்கர்களுக்குள்ளாகவும், பிறவகை நிலங்கள்மீது உச்சவரம்பை 54 ஏக்கர்களுக்குள்ளாகவும் நிர்ணயிக்கலாம். ஸ்டாண்டர்டு ஏக்கர் என்பதைச் சரியாகக் கணிக்க இயலாது. எனவே, வெவ்வேறு வகைப்பட்ட நிலங்களுக்கும் மாறுபாடான உச்சவரம்பைச் சாதாரண ஏக்கர்களிலேயே குறிப்பிட வேண்டும்.

நில உச்சவரம்புக்கு அதிகமான நிலத்தை உடைமையாகக் கொண்டவர்களிடமிருந்து உபரி நிலத்தைப் பறிக்கும்போது இழப்பீட்டுத்தொகை அளிக்கத் தேவையில்லை என்று தீவிரவாதிகள் குறிப்பிடுகின்றனர். இந்தியா ஒரு ஜனநாயகக் குடியரசு நாடு. இஃது ஒரு பொதுவுடைமை நாடன்று. எனவே, அரசு மக்களின் கருத்திற்கேற்ப பெருநிலக்கிழார்களின் நிலவுடைமை உரிமைகள் பறிக்கப்படும்போது இழப்பீட்டுத்தொகை வழங்கப்பட வேண்டுமென்றே பலரும் குறிப்பிடுகின்றனர்.

நிலவரி வீதத்திற்கேற்ப இழப்பீட்டுத் தொகை வழங்கப்படலாம். என்பது ஒரு கருத்து. ஆனால், பல மாநிலங்களுக்கிடையே நிலத்தின் உற்பத்தித் திறனுக்கேற்ப நிலவரி ஒரே மாதிரியாக அமைந்திருக்கவில்லை. சில மாநிலங்களில் நிலவரி நீக்கப்பட்டுள்ளது. பிறவற்றில், நில வரியின் வீதம் மிகக் குறைவாக இருக்கின்றது. நிலத்தின் சந்தை விலைக்கேற்ப இழப்பீட்டுத் தொகையை வழங்குவதும் இயலாது. ஏனெனில், அவ்விலை மிகவும் உயர்வானதாக உள்ளது. மாநில அரசுகள் அதிகத் தொகையை அளிப்பதற்கான நிதி வசதியைப் பெற்றிருக்கவில்லை.

குறைபாடுகளோடு நிலச் சீர்திருத்தச் சட்டங்கள் நிறைவேற்றப்பட்டால், சிறிய நிலவுடைமைகளுக்கு அதிக இழப்பீட்டுத் தொகையும் பெரிய நிலவுடைமைகளுக்குக் குறைந்த இழப்பீட்டுத் தொகையும் வழங்கப்படக்கூடும். நிலத்தின் உற்பத்தித் திறனுக்கேற்ப இழப்பீட்டுத் தொகையை வழங்குவது இன்றியமையாதது.

ஐந்து பேர்கள் அடங்கிய ஒரு குடும்பத்திற்கான உச்ச வரம்பு விதிக்கப்படுகிறது. குடும்ப அங்கத்தினரிடையே வயது வந்தவர்கள், வயதுக்கு வராதவர்கள் என்ற பேதம் பாராட்டத் தேவையில்லை. குடும்ப அங்கத்தினரின் எண்ணிக்கை அதிகரிக்கும் போது அதிக அளவு நிலத்தை அனுமதிக்கலாம். இஃது உச்ச வரம்பின் அளவுக்கு அதிகமாக இருக்கலாம். ஐந்து பேர்களுக்குக் குறைவான அங்கத்தினர்களைக் கொண்ட குடும்பங்களுக்கு நில உச்சவரம்பை மேலும் குறைக்கலாம். ஐந்து பேர்களுக்கு அதிகமாக உள்ள ஒவ்வொரு குடும்ப அங்கத்தினருக்கும் உச்சவரம்பின் ஐந்தில் ஒரு பங்கை உயர்வாக அளிக்கலாம். இந்தியாவில் மக்கள் பெருக்கத்தைக் குறைக்க நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன. குடும்ப அளவுக்கேற்ப உச்ச வரம்பை விதித்தால் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டங்கள் வெற்றி பெறமாட்டா என்று கருதப்படுகின்றது.

நிலச் சீர்திருத்தங்களின்மீதான ஒன்பது பேர்கள் அடங்கிய காங்கிரஸ் குழு, இருபோகச் சாகுபடி செய்யப்படுகின்ற எல்லா நிலங்களுக்கும் உச்ச வரம்பு 10 முதல் 18 திட்ட அளவு ஏக்கர்களாக (Standard Acres) இருக்க வேண்டுமென்று குறிப்பிட்டது. நீர்ப்பாசன வசதிகள் எவ்வகையில் பெறப்பட்டாலும் இவ் உச்ச வரம்பே விதிக்கப்படவேண்டுமென்று அக்குழு கூறியது. மத்தியத் திட்ட அமைச்சர் திரு. சுப்பிரமணியம், இந்த உச்ச வரம்பு எல்லா மாநிலங்களிலும் விரைவில் செயல்படுத்தப்படும் என்று மே 31, 1972-ல் குறிப்பிட்டார். எனினும், நில உச்ச வரம்புபற்றிய இறுதி முடிவை மாநில முதலமைச்சர்களே எடுப்பார்கள். பிரதம மந்திரி நில உச்ச வரம்பை விதிப்பதில் உள்ள கடின நிலைகளை விளக்கியுள்ளார்கள்.

நிலங்களுக்கு உச்ச வரம்பு விதிக்கப்படுவதைப் போல நகரச் சொத்துகளின்மீதும் உச்ச வரம்பை விதிக்கவேண்டுமென்ற கருத்துப் பலரிடையே சமீப காலமாக இருந்து வருகின்றது. மதிப்பின் அடிப்படையில் உச்ச வரம்பை விதிக்கும்போது பல சிக்கல்கள் எழக்கூடும். உதாரணமாக நகர்ப்புறத்தில் உள்ள ஒரு

கட்டடத்தின் மதிப்பு உச்ச வரம்பிற்கு அதிகமாக இருந்தால், எவ்வகை நடவடிக்கையை எடுப்பது என்ற வினு எழுகின்றது.

நிலச் சீர்திருத்தங்களின்மீதான காங்கிரஸ் குழு மத, கல்வி ஸ்தாபனங்கள் உடைமையாகக் கொண்டுள்ள நிலங்களின் மீதும் உச்ச வரம்பை விதிக்கவேண்டுமென்று குறிப்பிட்டுள்ளது தோட்டப் பயிர்ப் பண்ணைகளுக்கு உச்ச வரம்பினின்று விலக்கு அளிக்க வேண்டுமென்று கூறப்படுகிறது. பழத் தோட்டங்களுக்கு 10 முதல் 18 ஏக்கர்கள் என்ற அளவிலேயே உச்ச வரம்பு இருக்கலாம். உச்ச வரம்பு ஐந்து பேர்கள் அடங்கிய ஒரு குடும்பத்தின்மீது விதிக்கப்படுகின்றது புன்செய் நிலங்களுக்கு உச்ச வரம்பு 54 ஏக்கர்களாக இருக்கலாம் என்று பரிந்துரைக்கப்பட்டது. செப்டம்பர் 1970 முதல் நிலச் சீர்த்திருத்தச் சட்டங்கள் (குறிப்பாக நில உச்ச வரம்பு) செயல்படுத்தத் தக்கவைகளாக இருக்க வேண்டும் என்றும் கூறப்பட்டது. இக் குழு 'திட்ட அளவு ஏக்கர்' என்பதைச் சரியாக வரையறுத்து விளக்கவில்லை.

இந்தியாவின் பல மாநிலங்களில் நிலச் சீர்திருத்தங்கள் நிறைவேற்றப்பட்டிருந்தாலும் அவை செயல்படுத்தப்படவில்லை. இதன் காரணமாகவே பலவிதமான பிரச்சினைகளும் தோன்றுகின்றன. ஐந்து ஆண்டுகளுக்கு முன்னர், 'நக்சல்பாரி இயக்கம்' இருக்கவில்லை. மேற்கு வங்காளத்தின் டார்ஜீலிங் மாவட்டத்திலேயே கொடிய வறுமையால் இவ் வியக்கம் தோற்றம் பெற்றது. பெரு நிலக்கிழார்களின் சாகுபடியாளர்களைச் சுரண்டி வாழ்ந்தார்கள். எனவே மார்ச், ஜூன் 1967-ல் விவசாயிகளின் புரட்சி அங்குத் தோன்றியது. இவ் வியக்கமே இன்று இந்தியாவில் மா-சே-துங் கருத்துகள் பரவியமைக்கு அடிப்படையாக இருந்தது. நம் நாட்டில் இக்கருத்துகள் கடந்த ஐந்து ஆண்டுகளில்தான் பரவின. மார்க்ஸிய பொதுவுடைமைக் கட்சி 1964-ல் தோற்றம் பெற்றது. இது மிகத் தீவிரக் கொள்கைகளைக் கொண்டதாகும்.

நக்சல்பாரி இயக்கம் தோன்றி வளர்ந்து வருகின்றமைக்கு வேறொரு காரணமும் சொல்லப்படுகிறது. புதிய வேளாண்மைக் கொள்கையால், தொழில் நுணுக்கம் வாய்ந்த உற்பத்தி முறைகள் பரப்பப்படுகின்றன. உள்ளீடுகளின் அளவும் பெருகியுள்ளது. உழைப்பாளர்களுக்குப் பதிலாகப் பெரிய இயந்திரங்கள் பயன்படுத்தப்படுவதால் பல சமுதாயச் சிக்கல்கள் உருவெடுக்கின்றன.

பசுமைப் புரட்சி கிராம மக்கள் எல்லாருடைய வளமான வாழ்விற்கும் வழி வகுக்கவில்லை. 1969-ல் மத்திய உள்ளாட்சித்

துறை அமைச்சகம் செய்த ஆய்வு பசுமைப் புரட்சி, கிராம மக்களிடையே ஒரு வகைக் கொந்தளிப்பைத் தோற்றுவித்துள்ளமையைக் குறிப்பிட்டது. வேளாண்மைத் திட்டங்கள் பெரிய விவசாயிகளுக்கே பெரிதும் உதவியுள்ளன. பசுமைப் புரட்சி அதிக மூலதனத் திரட்சிக்கும் வகை செய்யவில்லை. நாட்டின் வளங்களைச் சிறப்பாகப் பயன்படுத்தவும், தொழில் துறையை வளர்க்கவும், சமூக மேலமைப்பு மூலதனத்தைப் பெருக்கவும் அதிக நிதி தேவை. அந்த நிதியை வேளாண்மையினின்றும் பெற முயல வேண்டும். பொதுவாகப் பொதுத் துறை வளர்ச்சிக்கான மூலதனத்தை வேளாண்மைத் துறையிலிருந்து பெறுவது நல்லது. கிராமங்களில் உள்ள செல்வந்தர்களும் நகரப் பொருளாதாரத்திற்கும் தொடர்பு இருக்கவேண்டும். நகரத் தொழில்களில் முதலீடு செய்ய அதிக வருமானத்தைப் பெறுகின்ற கிராம மக்கள் முன்வருதல் அவசியம்.

கிராம வருமானத்தில் ஏற்றத் தாழ்வுகள் மிகுதியாக இருப்பதற்கும் பசுமைப் புரட்சி ஒரு காரணமாகிறது. கிராம மக்களிடையேயான கொந்தளிப்பு மறைந்துள்ள தன்மையைக் கொண்டிருக்கின்றது. வேளாண்மைத் துறையில் உறுதியற்றநிலை ஏற்றத் தாழ்வான நிலை ஆகியவை நீக்கப்படவில்லை. 'நிலப்பசியைக்' கொண்ட கிராம மக்களுக்கு அநீதி இழைக்கப்படும்போது புரட்சி தோன்றுகின்றது'. நிலக்கிழார்களுக்கு எதிரான நடவடிக்கைகளில் சாகுபடியாளர்கள் ஈடுபடுகின்றனர்.

1947 ஆம் ஆண்டு முதல் நிறைவேற்றப்பட்டு வருகின்ற நிலச் சீர்திருத்தங்கள் வெற்றி பெறுமையே கிராம மக்களிடையே குழப்ப நிலைகள் அமைந்துள்ளமைக்குக் காரணமாகும். நிலச் சீர்திருத்தங்கள்மூலம் அரசுக்கும், சாகுபடியாளர்களுக்கும் நடுவே உள்ள இடைநிலையாளர்கள் நீக்கப்படவில்லை. இன்றும் ஒரு சிலரிடையே நிலம் அதிக அளவில் இருக்கிறது. நிலமற்றவர்களுக்கு மிகக் குறைந்த அளவில் நிலங்கள் அளிக்கப்பெறுகின்றன. அவற்றில், உற்பத்தியை இலாபகரமாகச் செய்ய முடிவதில்லை. குத்தகையாளர்களுக்குப் போதுமான பாதுகாப்பு அளிக்கப்படவில்லை.

வேளாண்மைச் சீர்திருத்தங்களால் நிலத்தை உழுபவர்கள் அதிக நன்மையை அடையவில்லை. கிராம மக்களிடையே ஒரு சிலரிடம் செல்வம் குவிந்திருக்கின்றது. இந்திய மக்கள் தொகையில் சுமார் 70 சதவீதம் வாழ்வுக்கு வேளாண்மையைச் சார்ந்திருக்கின்றது. மக்கள் தொகையில் மூன்றில் ஒரு பகுதியினர் நிலமற்ற உழைப்பாளர்களாக இருக்கின்றனர்.

சுமார் 47 சதவீதப் பண்ணைக் குடும்பங்கள் ஓர் ஏக்கருக்கும் குறைவான நிலத்தையே உடைமையாகக் கொண்டுள்ளன. 22 சதவீதக் குடும்பங்கள் நிலமற்றவைகளாக இருக்கின்றன. மூன்று முதல் நான்கு சதவீத விவசாயிகள் மட்டுமே எல்லாச் சக்திகளையும், செல்வாக்குகளையும் கொண்டுள்ளார்கள். அரசின் எல்லாத் திட்டங்களும் அவர்களுக்கே நன்மையளிக்கின்றன. அதிக இலாபத்தையும் அவர்களே பெறுகின்றனர்.

1969—70-ல் எண்ணற்ற 'நிலப்பறி இயக்கங்கள்' (Landgrab Movements) தோன்றின. சில அரசியல் கட்சிகள் ஆதரவிருந்தும் அவை வெற்றி பெறவில்லை, இவ்வியக்கங்கள் சமுதாயத்தில் அமைந்திருக்கும் கொந்தளிப்பு நிலையை உணர்த்துகின்றன. நில உச்சவரம்புச் சட்டங்கள் சரிவர நிறைவேற்றப்படாமையால் நிலவுடைமைகளின் பகிர்வு சிறப்பாக அமையவில்லை. சிறிய அளவு நிலங்களில் பயிரிடும் குத்தகைச் சாகுபடியர்களுக்கும் போதுமான பாதுகாப்புகள் வழங்கப்படவில்லை. அதிக அளவு வாரத்தை அவர்கள் பணமாகவோ அல்லது விளைபொருளாகவோ செலுத்தி வருகின்றார்கள்.

வறிய நிலையைக் கொண்டுள்ள விவசாயிகளுக்குப் பாதுகாப்பு இல்லாததோடு அநீதியும் இழைக்கப்படுகிறது. நக்சல்பாரி இயக்கங்கள் நாட்டின் பல மாநிலங்களிலும் பரவுகின்றமைக்கு இது முக்கியக் காரணமாகும். வறுமையின் பிடி இறுகுவதால் சீனப் பொதுவுடைமைக் கருத்துகளும் பரவுகின்றன. 1969-ல் மத்திய உள்ளாட்சித் துறை அமைச்சராக இருந்த திரு ஒய். பி. சவான் நிலச் சீர்திருத்தங்களைப் பற்றி விவாதிக்க மாநில முதலமைச்சர்களின் கூட்டம் ஒன்றை நடத்தினார். அப்பொழுது, அவர் குறிப்பிட்டதாவது, 'பசுமைப் புரட்சி பசுமையாகவே இருக்கவேண்டுமென்றால், அப் புரட்சியைத் தொடர்ந்து சமூக நீதியைக் காப்பதிலும் புரட்சி ஏற்படவேண்டும்.' நிலச் சீர்திருத்தங்கள் சரியாகச் செய்யப்படாவிட்டால் பசுமைப் புரட்சி சிவந்த புரட்சியாக மாறிவிடும் என்று சில தீவிரவாதிகள் கூறுகின்றனர் என்பது.

மத்திய நிலச்சீர்திருத்தக் குழு நில உச்சவரம்புச் சட்டத்தை 1970ஆம் ஆண்டு செப்டம்பர் 26-ல் இருந்து செயல்படுத்த வேண்டுமென்று பரிந்துரைத்ததை முதலமைச்சர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. கூட்டுறவு அமைப்புகளுக்கும், பழத் தோட்டங்களுக்கும் உச்சவரம்பினின்றும் அளிக்கப்பட்ட விலக்குகள் நீக்கப்படவேண்டுமென்று அவர்கள் கூறினார்கள். பின்வரும் நிலச்

சீர்திருத்த நிலைகளைப்பற்றிக் கருத்துத் தெரிவிக்க ஒன்பது பேர்கள் அடங்கிய குழு அமைக்கப்பட்டது.

1. தலத்திலில்லா நிலக்கிழார்முறை நீக்கப்பட்டு உழுபவர்களுக்கே நிலம் சொந்தமாக்கப்படவேண்டும்.

2. பல வகைப்பட்ட நிலவுடைமைகளையும், நிலவுடைமை முறைகளையும் குறைக்கவேண்டும். அதன்மூலமே நிலச் சீர்த்திருத்தங்களில் உள்ள குறைபாடுகளை நீக்க இயலும்.

3. நிலவுடைமைகளைக் குறிப்பிட்ட அளவுக்குக் குறைவாக உள்பிரிவுபடுத்த அனுமதிக்கக் கூடாது.

4. உபரி நிலத்தைப் பகிர்ந்தளிக்கும்போது நிலமற்ற விவசாயிகளுக்கு முக்கியத்துவம் அளிக்கவேண்டும்.

5. சமீப காலத்தில் செய்யப்பட்ட நில மாற்றம், விற்பனை பற்றிய விசாரணையைச் செய்யவேண்டும்.

6. கூட்டுறவுச் சங்கங்கள், பழத்தோட்டங்கள் ஆகியவற்றிற்கு உச்சவரம்பினின்றும் அளிக்கப்பட்டுள்ள விலக்கு மறுபரிசீலனை செய்யப்படவேண்டும்.

7. எவ்வழிகளில் நிலச் சீர்திருத்தங்களைச் செய்யவேண்டும்; எம் முறைகளில் உபரி நிலத்தைப் பகிர்ந்தளிக்கலாம் என்பதைப் பற்றியும் குழு கருத்துகளைத் தெரிவிக்கவேண்டும்.

தேர்தல் சமயத்தில் அளிக்கப்பட்ட எல்லா வாக்குறுதிகளும் நிறைவேற்றப்படும் என்று பிரதமர் உறுதியளித்துள்ளார். மத்திய அரசுக்கு மாநில அரசுகளின் ஒத்துழைப்பு இருந்தால்தான், நிலச் சீர்திருத்தங்களைச் செய்வதில் வெற்றி பெறமுடியுமென்று அவர் குறிப்பிட்டுள்ளார். நிலவுடைமை உரிமைகள்பற்றிய புள்ளி விவரங்கள் சரியாகக் கிடைக்காத நிலையையும் விளக்கியுள்ளார். நிலச்சீர்திருத்தங்களில் சில தீவிர அடிப்படை மாற்றங்களைச் செய்யவும் அரசு தயங்காது என்று அவர் கூறியிருக்கின்றார்.

சிலர் வெவ்வேறு மாநிலங்களிலும் நிலங்களை உடைமையாகக் கொண்டுள்ளனர். அவர்கள் உச்சவரம்புச் சட்டத்தினால் பாதிக்கப் படமாட்டார்கள். மஹாராஷ்டிரத்தில் உச்சவரம்பைச் செயல் படுத்துவது கடினமன்று என்று முதலமைச்சர் வி. பி. நாய்க் கூறியுள்ளார். ஏனெனில், அங்குக் குழாய்க் கிணறுகள் அமைக்கப்பட்டிருக்கவில்லை. அரசின் நீர்ப்பாசன வசதிகளையே எல்லாச் சாகுபடியாளர்களும் பெறுகின்றார்கள். ஆந்திர முதல் அமைச்சர்

பி. வி. நரசிம்மராவ், ஆந்திரத்தில் வேளாண்மை, குழாய்க் கிணறுகளின் உதவிகொண்டு செய்யப்படவில்லை என்று குறிப்பிட்டார். இராஜஸ்தான் முதல் அமைச்சர் பார்கதுல்லாகான் அங்குக் குழாய்க் கிணறுகளைப் பயன்படுத்தும் தனியாருக்குச் சலுகைகள் வழங்கப்படவேண்டுமென்று கோரினர்.

நில உச்சவரம்பின் அளவுகள் பல மாநிலங்களிலும் குறைவாகவே உள்ளன. அவற்றை மேலும் குறைப்பது நல்லதன்று. சோவியத் ரஷ்யாவில் உணவுச் சிக்கல் தோன்றியுள்ளது. கூட்டுப் பண்ணைகள், அரசின் பண்ணைகள் அங்கு அமைந்திருப்பினும் உணவு உற்பத்தியில் தற்பொழுது போதாநிலை ஏற்பட்டுள்ளது. கடந்த 55 ஆண்டுகளில் அங்குப் பரிசோதனை முறையில் வேளாண்மைச் சாகுபடி முறையில் பின்பற்றப்பட்டன. ஒரு காலத்தில் ரஷ்யா மேலை நாடுகளுக்குக் கோதுமையை ஏற்றுமதி செய்தது. இப்பொழுது வேளாண்மையில் ஏற்பட்டுள்ள தோல்வியால், அஃது அமெரிக்காவிலிருந்து அதிக அளவு கோதுமையை இறக்குமதி செய்கின்றது, இறக்குமதி செய்யும் கோதுமையின் மதிப்புக்கேற்ப ரஷ்ய அரசு தங்கத்தை அளிக்கிறது. இவ்வகையில் ரஷ்யா 1972 ஆகஸ்டில் 9,43,870 அவுன்ஸ் தங்கத்தையும், செப்டம்பரில் 105,000 அவுன்ஸ் தங்கத்தையும் அமெரிக்காவுக்கு அளித்துள்ளது.

உணவு நிலை மோசமாக உள்ள சில இடங்களில் மாமிச உணவு அதிகமாக உட்கொள்ளப்படுகிறது. அவ்விடங்களில் கால்நடைகளின் எண்ணிக்கை குறைந்து வருவது குறிப்பிடத்தக்கது. 30 மில்லியன் டன்கள் தானியங்களை இறக்குமதி செய்ய ரஷ்ய அரசு அயல் நாடுகளோடு ஒப்பந்தங்களைச் செய்துள்ளது. அதில் பெரும்பகுதி இறக்குமதி, அமெரிக்கா, கனடா ஆகிய நாடுகளினின்றும் செய்யப்படும். ஆஸ்திரேலியா, ஃபிரான்ஸ், மேற்கு ஜெர்மனி, ஸ்வீடன், ஃபின்லாந்து, ருமேனியா ஆகிய நாடுகளிலிருந்தும் ரஷ்யா உணவுப் பொருள்களை இறக்குமதி செய்ய இருக்கின்றது.

சீனுவின் நிலச்சீர்திருத்தங்கள் ரஷ்யாவின் நிலச் சீர்திருத்தங்களினின்றும் அதிக வேறுபாட்டைக் கொண்டிருக்கவில்லை. அதிக விலை கொடுத்து சீனு கனடாவிடமிருந்து கோதுமையைப் பெறுகின்றது. இந்த நிலையில் இந்தியாவில் நில உச்சவரம்பின் அளவை மேலும் குறைக்கவேண்டுமெனத் தீவிரவாதிகள் கூறுகின்றார்கள். அவ்வாறு செய்தால், வேளாண்மை இலாபகரமான

தொழிலாக அமையாது. நில உச்சவரம்பு செயல்படுத்தப்பட்டுள்ள இடங்களில் உற்பத்தி உயர்ந்திருக்கின்றதா என்பது ஆய்வு செய்யப்படவேண்டும். அவ் விடங்களில் அரிசி உற்பத்தியில் சிறப்பான முன்னேற்றம் தோன்றி இருக்கவில்லை. இரசாயன, பொறி நுட்ப உற்பத்தி முறைகள் சரியான நிர்வாகத்துடன் மேற்கொள்ளப்பட்டால்தான் ஆக்கத்தின் அளவு அதிகரிக்கும். புரட்சி முன்னேற்றத்தைத் தோற்றுவிக்கக்கூடியவை. இரசாயனம், பொறியியல், நிர்வாகம் ஆகியனவாகும். இந்தியாவில் செறிவு முறையிலும், விஞ்ஞான ரீதியிலும் சாகுபடியைச் செய்ய முடியாமைக்கு மிகச் சிறிய அளவு உட்பிரிவு படுத்தப்பட்ட நிலங்களே முக்கியக் காரணமாகும்.

ஜப்பானிய முறையில் சிறிய நிலவுடைமைகளில் சாகுபடி செய்வது இயலாததாக இருக்கின்றது. ஏனெனில், இந்தியாவின் வேளாண்மையில் ஒரு சாகுபடியாளர் வெவ்வேறு இடங்களில் துண்டு நிலங்களை உடைமையாகக் கொண்டிருக்கின்றார். ஒரே இடத்திலேயே ஒருவரின் நிலம் அமையப் பெற்றிருந்தால்தான் சிறப்பான வழியில் செறிவு முறைச் சாகுபடியைப் பின்பற்றலாம்.

சுமார் பத்து ஆண்டுகளுக்கு மேலாக இந்தியாவில் நில உச்சவரம்புச் சட்டங்கள் நிறைவேற்றப்பட்டு வருகின்றன. நிலங்கள் உள்பிரிவுபடுத்தப்படும் நிலையை இவை மேலும் தீவிரப்படுத்துகின்றன. சிறிய அளவு நிலங்களில் உற்பத்திச் சாதனங்களைச் சரியாகப் பயன்படுத்த முடிவதில்லை. நிலமற்றவர்களுக்கு மிகக் குறைந்த அளவு நிலத்தை அளிப்பதால் எவ்விதப் பயனையும் பெற முடியாது.

நிலச் சீர்திருத்தங்களுக்கும் பசுமைப் புரட்சிக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை என்றே கூறவேண்டும். வேளாண்மை உற்பத்தி உயரத் திட்டங்களின்மூலம் அரசு செய்த அதிக முதலீடும், சாதகமான பருவச் சூழ்நிலைகளுமே காரணங்களாகும். அரிசி உற்பத்தியில் நாம் தோல்வியையே கண்டுள்ளோம். பருப்பு வகைகளின் உற்பத்தியில் கடந்த பத்து ஆண்டுகளாகச் சிறப்பான வளர்ச்சி காணப்படவில்லை. பசுமைப் புரட்சி ஏற்பட்டிருந்தாலும் உணவுப் பொருள்களின் தேவைக்கும், அளிப்புக்கும் உள்ள தொடர்பு பற்றுக்குறை நிலையையே கொண்டிருக்கிறது.

பஞ்சாபில் நில உச்சவரம்பை 11 ஹெக்டேர்களாக (27.5 ஏக்கர்களாக) நிர்ணயித்துப் பஞ்சாப் அரசு மசோதா ஒன்றை

நிறைவேற்றியுள்ளது. அம் மசோதாவில் சில குறைபாடுகள் உள்ளன. அங்கு நில உச்சவரம்புச் சட்டத்தினின்றும் பாதிக்கப் படாமல் இருக்கச் சாகுபடி நிலங்களைப் பழத்தோட்டங்களாக மாற்ற இயலும். நகரச் சொத்துக்களுக்கு உச்சவரம்பை விதிப் பதற்கான மசோதாவும் கொண்டு வரப்பட்டுள்ளது. பஞ்சாபின் இரு மசோதாக்களும் மத்திய அரசின் கொள்கைக்கு எதிரான வையாக இருக்கின்றன. தேர்தல் அறிக்கையில் காங்கிரஸ் குறிப்பிட்டிருந்த வாக்குறுதிகள் இம் மசோதாக்களில் பொருந்தி இருக்கவில்லை. ஆந்திரப் பிரதேசத்தில் உச்சவரம்பை ஏய்ப்பதற் காகச் செய்யப்படும் நிலவுடைமை மாற்றங்கள் சிறப்பாகத் தடுக் கப்படுகின்றன. அவ் வழிமுறைகளைப் பிற மாநிலங்களும் பின் பற்றுவது நல்லது.

நிலவுகின்ற சூழ்நிலைகள் மத்திய அரசு உண்மையிலேயே தீவிர அடிப்படை மாற்றங்களைச் செய்ய விரும்புகின்றதா என்று ஐயுறுமாறு செய்கின்றன. தேர்தல் அறிக்கையில் குறிப்பிட்டிருந்த வாக்குறுதிகள் நிறைவேற்றப்பட்டால்தான் உண்மையான சமதர் மத்தை அரசு ஏற்படுத்த விரும்புகின்றது என்று பொருள். நிலச் சீர்திருத்தங்கள் விரைவாக நிறைவேற்றப்படாமைக்கு எதிர்க் கட்சியாளர்களும், தீவிரவாதிகளும் எதிர்ப்புத் தெரிவிக்கின்றார்கள். காங்கிரஸ் கட்சியிலேயே சிலர் நில உச்சவரம்பைக் குறைப்பதில் விருப்பம் கொண்டிருக்கவில்லை.

மத்திய நிலச் சீர்திருத்தக் குழு நல்ல பல பரிந்துரைகளை அளித் திருக்கின்றது. ஆனால், அப் பரிந்துரைகள் யாவும் ஒரே மாதிரியாக எல்லா மாநிலங்களாலும் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. சில அடிப் படை மாற்றங்களைச் செய்யக்கூடிய நிலச் சீர்திருத்தச் சட்டத்தை முதலில் இயற்றிய மாநிலம் கேரளம் ஆகும். அச் சட்டம் டிசம்பர் 1959-ல் அப்போது ஆட்சியில் இருந்த பொதுவுடைமைக் கட்சியால் கொண்டுவரப்பட்டது. தற்பொழுது அங்குப் பொதுவுடைமைக் கட்சி ஆட்சி செலுத்தவில்லை. பின்னர், ஆட்சிக்கு வந்த காங்கிரஸ் கட்சி 'கேரள நிலச் சீர்திருத்தங்களின் சட்டத்தை' 1963-ல் நிறை வேற்றியது.

1996-ல், 1963ஆம் ஆண்டுச் சட்டம் முற்றிலுமாகத் திருத்தம் செய்யப்பெற்றது. பின்னர் 1971-ல் பொதுவுடைமைக் கட்சியின் மந்திரி சபை காங்கிரஸ் ஆதரவோடு மேலும் பல அடிப்படை மாற்றங்களைச் செய்தது. எனவே, சுமார் 12 ஆண்டுக் காலத்தில் நிலச்சீர்த்திருத்தச் சட்டங்களில் எண்ணற்ற மாறுதல்கள் செய்யப் பட்டுள்ளன. தற்போதைய கேரள நிலச் சீர்திருத்தச் சட்டத்தைப்

பிரதமர் புகழ்ந்துரைத்துள்ளார். மக்கள் தரமான வாழ்வைப் பெறவும், கிராமப் புறங்களில் அமைதி நிலவவும் இவ்வகைச் சட்டங்களே நிறைவேற்றப்படவேண்டும்.

நிலவுடைமையாளர்கள் நீதி மன்றங்களில் வழக்குரைப்பதாலும் நில உச்ச வரம்பைச் செயல்படுத்துவதில் தாமதம் ஏற்படுகின்றது. உச்சவரம்பை விதிப்பதன்மூலம் அதிக அளவு உபரி நிலத்தைப் பெற முடியாது. தமிழ்நாட்டின் தஞ்சை மாவட்டத்தில் உள்ள சாகுபடி நிலத்தில் ஐந்தில் ஒரு பங்கைக் கோயில்களும், மடங்களும் உடைமையாகக் கொண்டுள்ளன. அந்த நிலத்தின் பெரும்பகுதியைப் பெருநிலக்கிழார்கள் பலர் குத்தகை அடிப்படையில் சாகுபடி செய்து வருகிறார்கள். அவர்களுடைய பெயர்களிலேயே பட்டாக்களும் இருக்கின்றன. இதைத்தவிர அதே நிலக்கிழார்கள் அரசின் புறம்போக்கு நிலங்களையும், பொது நிலங்களையும், குளங்களையும் பயன்படுத்தி வருகிறார்கள். நிலமற்ற விவசாயிகளிடையே கொந்தளிப்பு நிலவுகின்றமைக்கு இஃதும் ஒரு காரணமாகும். பெரு நிலக்கிழார்கள் தங்களுடைய சொந்த நிலத்தையும் கோயில் நிலத்தையும் இணைத்து உச்ச வரம்பினின்றும் தப்பித்துக் கொள்கின்றார்கள். தங்களுடைய குடும்ப அங்கத்தினரின் பெயர்களிலும் நிலத்தைப் பிரித்து எழுதி வைக்கிறார்கள். சட்டங்களில் உள்ள குறைபாடுகளால் இவ்வித ஏய்ப்புகள் செய்யப்படுகின்றன.

தஞ்சை மாவட்டத்தில் சுமார் 1000 ஏக்கர் நிலம் மட்டுமே வினோபாவின் பூதான இயக்கத்திற்குத் தானமாக அளிக்கப்பட்டுள்ளது. கோயில் நிலங்களையும், மதச் சார்புடைய மடங்களின் நிலங்களையும் உடைமையாகக் கொண்டவர்கள்கூட நிலத்தைத் தானமாகத் தர முன்வருவதில்லை. கிராமதான இயக்கத்தில் நிலக் கிழார்கள் சேரவில்லை; மாறாகச் சிறிய நிலவுடைமையாளர், நிலமற்றவர்கள் மட்டுமே சேர்ந்தார்கள். நிலக்கிழார்களுக்கும், நிலமற்றவர்களுக்கும் இடையே சுமுகமான உறவு நிலவவில்லை. பசுமைப் புரட்சியின் நன்மைகளைப் பெரு நிலக்கிழார்கள் மட்டுமே பெற்று வருவதால், நிலமற்ற உழைப்பாளர்கள் கொந்தளிப்பு நிலையைக் கொண்டுள்ளார்கள். இந்த நிலையை நீடிக்க அனுமதித்தால் இரத்தப் புரட்சியும் ஏற்படக்கூடும்.

அஹிம்சையைப் பரப்பச் சர்வோதயத் தொண்டர்கள் நாட்டின் பல இடங்களிலும் 'காந்தி அமைதி மையங்'களை (Gandhi Peace Centres) ஏற்படுத்தியுள்ளனர். தமிழ் நாட்டின் நாகப்பட்டினம் தாலுக்காவில் பொதுவுடைமைவாதிகளின் செல்வாக்கு

மிகுதியாக உள்ளது. அங்கு மூன்று காந்தி அமைதி மையங்கள் அமைக்கப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். மூன்று வெவ் வேறு வட்டங்களில் அவை அமைக்கப்பட்டுள்ளன. கோயில் நிலங்களை ஆக்கிரமித்துப் பயிரிடுபவர்களின் பெயர்கள் அரசுக்கு அறிவிக்கப்படுகின்றன.

கோயில் நிலங்களைக் கைப்பற்றுபவர்கள் அவற்றைக் குத்தகைக்கும் விடுகின்றார்கள். பெரும்பாலான நிலைகளில் குத்தகையாளர்கள் அவர்களால் சுரண்டப்படுகின்றனர். இச் சுரண்டலைத் தடுப்பதற்கான சட்டங்களும் ஏற்படவில்லை. இவ்வகை நிலங்களை நிலமற்ற விவசாயிகளுக்குப் பகிர்ந்தளிக்க அரசு நடவடிக்கைகளை எடுக்கவேண்டும்.

சில நிலைகளில் 'இனும் ஒழிப்புச் சட்டத்தைப்' (Inan Abolition Act) பயன்படுத்திக் கோயில் நிலங்கள் பட்டா நிலங்களாக மாற்றப்படுகின்றன. இனும் ஒழிப்புச் சட்டத்தைச் செயல்படுத்திய அரசாங்க அலுவலர் ஒருவர், நில உச்ச வரம்புச் சட்டத்தை மறந்து ஒரு பெரு நிலக்கிழாருக்கு 80 ஏக்கர் கோயில் நிலத்தை அனுமதித்தார். இது போன்றே மற்றொரு குடும்பத்துக்கு 132 ஏக்கர் கோயில் நிலம் அளிக்கப்பட்டுள்ளது. இவ்வாறான தவறுகளைச் சர்வோதயத் தொண்டர்கள், கிராமச் சபைகளின்மூலம் தெரிவித்தார்கள். ஆனால், நிலக்கிழார்கள் தங்களுடைய மூதாதையரின் நிலங்களோடு இந்த நிலங்களையும் இணைத்துப் பிரித்து விட்டமையால், அரசு அவர்களின்மீது எவ்வகை நடவடிக்கையையும் எடுக்கமுடியவில்லை. இதன் காரணமாக எல்லா அரசியல் கட்சிகளும் சேர்ந்து சத்யாக்கிரஹம் செய்தன. அதற்காகச் சுமார் 600 பேர்கள் கைது செய்யப்பட்டனர்.

தஞ்சை மாவட்டத்தில் பெருநிலக்கிழார்கள் ஏமாற்று வழிகளில் சுமார் ஓர் இலட்சம் ஏக்கர் கோயில் நிலங்களையும், தர்ம ஸ்தாபனங்களின் நிலங்களையும் கைப்பற்றி உள்ளார்கள். தமிழ் நாடு அரசு, பொது நிலங்கள் இவ்வாறு தவறாகக் கைப்பற்றப் படுவதைத் தடுக்கச் சரியான நிலச் சீர்திருத்தச் சட்டங்களை இயற்றவேண்டும். அவை விரைவாகச் செயல்படுத்தப்படுவதும் இன்றியமையாதது.

குஜராத் முதலமைச்சர் அம் மாநிலத்தில் உள்ள பல குத்தகையாளர்களை நிலவுடைமையாளர்களாக மாற்றுவதில் உள்ள சிக்கல்களைக் குறிப்பிட்டுள்ளார். நிலவுடைமைகளை வாங்குவதற்குரிய நிதி வசதியைக் குத்தகையாளர்கள் பெற்றிருக்கவில்லை.

குஜராத்தில் குத்தகைச் சீர்த்திருத்தச் சட்டங்கள் அதிக நன்மைகளைத் தோற்றுவிக்கவில்லை. அதைப்பற்றி ஆராய அங்கு 6 பேர்கள் அடங்கிய நிபுணர்கள் குழு நியமிக்கப்பட்டுள்ளது. அது கூடிய விரைவில் அறிக்கையைச் சமர்ப்பிக்க இருக்கின்றது. அக் குழு நிலச் சீர்திருத்தங்களைச் செயல்படுத்துவதில் உள்ள குறைபாடுகளை அறிந்து அவற்றைத் தவிர்ப்பதற்கான ஆலோசனைகளை அளிக்கும்.

மாநிலங்களுக்கான மத்திய உழைப்பாளர் நல அமைச்சர் திரு. ஆர். டி. காடில்கர் வருமானத்தின்மீது உச்சவரம்பை விதிக்க வேண்டுமென்று கூறியுள்ளார். கிராம, நகர வருமானங்களின்மீது உடனடியாக உச்சவரம்பை நிர்ணயிப்பது அவசியமானது என்று அவர் அறிவுறுத்தியுள்ளார். மஹாராஷ்டிர காங்கிரஸ் கட்சியின் கூட்டம் பம்பாயில் நடந்தபோது காடில்கர் 'மனிதன் செல்வத்தைக் குவிக்கும் பேராசையைக் கொண்டிருக்கிறான்' என்று குறிப்பிட்டார்.

கிராமத் துறைக்கும், நகரத் துறைக்கும் இடையே அரசு வேற்றுமை பாராட்டக்கூடாது. தற்பொழுதுள்ள நிலவுச்ச வரம்புச் சட்டத்தின்படி ஒரிஸ்ஸாவில் ஒரு குடும்பத்துக்கு 20 திட்ட அளவு ஏக்கர்கள் அனுமதிக்கப்படுகின்றன. இந்த உச்சவரம்பு முன் தேதியிட்டு மேலும் குறைக்கப்படும் என்று அந்த மாநிலத்தின் வரி வருமான அமைச்சர் கூறியுள்ளார். அவர் நிலச் சீர்திருத்தங்களைத் தீவிரமாக நிறைவேற்ற வேண்டுமென்றும் கருத்துத் தெரிவித்தார். தீவிரமான முறைகளின் மூலம் நிலச் சீர்திருத்தங்கள் ஒரிஸ்ஸாவில் செய்யப்படும் என்று அவர் உறுதியளித்துள்ளார்.

அந்திரப் பிரதேச சட்ட மேலவை 1972-ல் சட்ட மன்றத்தால் நிறைவேற்றப்பட்ட மசோதாவுக்கு அனுமதி அளித்துள்ளது. எதிர்க் கட்சிகளின் மறுப்புகளுக்கிடையே இச் சட்டம் நிறைவேற்றப்பட்டிருக்கின்றது. அஸ்ஸாம் சட்டமன்றம் நிலவுடைமைகளின்மீதான உச்சவரம்பு விதிப்பு மசோதாவை (1972) நிறைவேற்றி இருக்கின்றது. இந்த மசோதா வேளாண்மை நிலத்தின் உச்சவரம்பைத் தற்பொழுதுள்ள 25 ஏக்கர்களிலிருந்து 16.6 ஏக்கர்களாகக் குறைக்கும். பழத் தோட்டங்கள் அமைந்திருக்கும் நிலத்தின் மீதான உச்சவரம்பு 10 ஏக்கர்களிலிருந்து 5 ஏக்கர்களாகக் குறைக்கப்படும். உச்சவரம்புக்கு அதிகமான உபரி நிலங்களுக்கு இழப்பீட்டுத் தொகை வழங்கப்படும். அஸ்ஸாமில் இழப்பீட்டுத் தொகையை வழங்கச் சுமார் ஒரு கோடி ரூபாய் தேவைப்படும் என்று மதிப்பிடப்பட்டுள்ளது.

மைசூர் அரசு மறுபகிர்வு செய்யச் சுமார் 12 இலட்சம் ஏக்கர்கள் நிலத்தை உபரியாகப்பெற்றது. அதில் சுமார் 5 இலட்சம் ஏக்கர்கள் சாகுபடி செய்யத் தகுதியானவைகளாகும். அங்கு 1967—70-ல் 54,000 ஏக்கர்கள் நிலமற்ற உழைப்பாளர்களுக்குப் பகிர்ந்தளிக்கப்பட்டன. 1971-ல் 85 000 ஏக்கர்கள் வழங்கப்பட்டன. 1973 மார்ச் மாதத்திற்குள் எல்லா உபரி நிலங்களும் மறுபகிர்வு செய்யப்படும். நிலப் பகிர்வை விரைவுபடுத்த மைசூர் அரசு பல மாவட்டங்களிலும் தனி அலுவலர்களை நியமித்துள்ளது. மேலும், அங்கு 50 சதவீத உபரி நிலம் மிகவும் தாழ்ந்த சாதியினர் என்று ஒதுக்கப்பட்ட பிரிவினருக்கே அளிக்கப்பட இருக்கின்றது. இது தாழ்ந்த நிலையில் வாழ்பவர்களின் நிலையை உயர்த்த உதவும்.

மைசூரில் 44.61 இலட்சம் நிலவுடைமையாளர்கள் இருக்கின்றனர். அதில், 11.72 இலட்சம் பேர்கள் மட்டுமே பட்டாக்களைக்’ கொண்டுள்ளனர். மிக விரைவில் எல்லாருக்கும் பட்டாக்களை வழங்க மைசூர் அரசு நடவடிக்கைகளை எடுத்து வருகின்றது.

மத்திய அரசு டாக்டர் கே. என். ராஜ் தலைமையில் வேளாண்மைச் சொத்து, வருமானம் ஆகியவற்றின் மீது வரிவிதிப்பு செய்வது பற்றி ஆய்வுசெய்யக் குழு ஒன்றை அமைத்திருக்கிறது. மைசூர் மாநிலத்தில் ஆளுங்கட்சிக்கு எதிரான கட்சிகள் 10 ஏக்கர்களுக்குக் குறைவான சாகுபடி நிலத்தின்மீதான நிலவரி நீக்கப்பட வேண்டுமென்று கோருகின்றன. ராஜ் குழுவின் பரிந்துரைக்கேற்ப நடவடிக்கை மேற்கொள்ளப்படும் என்று மைசூர் அரசு கூறியிருக்கின்றது.

நில உச்சவரம்பின் அளவைக் குறைக்கவும் நகரச் சொத்துகளின்மீது உச்சவரம்பை விதிக்கவும் பீஹார் அரசு ஜனாதிபதியின் ஒப்புதலை வேண்டுகிறது. கணவன், மனைவி, மூன்று குழந்தைகள் அடங்கிய ஒரு குடும்பம் 15 திட்ட அளவு ஏக்கர்கள்வரை அங்குச் சாகுபடி நிலத்தை உடைமையாகக் கொண்டிருக்கலாம்; ஐந்து பேர்கள் அடங்கிய ஒரு நகரக் குடும்பம் ரூ. 2 இலட்சம் மதிப்புக்குக் குறைவான நகரச் சொத்தை மட்டுமே பெற்றிருக்கலாம் என்று வரையறுக்கப்பெறும் சட்டங்கள் பீஹாரில் நிறைவேற்றப்படும். மூன்று குழந்தைகளுக்கு அதிகமாக உள்ள குடும்பம் அதிகம் இருக்கும் ஒவ்வொரு குழந்தைக்கும் நில உச்சவரம்பில் பத்தில் ஒருபங்கு நிலத்தை அதிகமாகப் பெறலாம். ஆனால், ஒரு குடும்பத்திற்கான மொத்தச் சாகுபடி நிலத்தின் அளவு 22.5 ஏக்கர்களுக்கு அதிகமாக இருக்கக்கூடாது. இது போன்றே நகரத்தில் உள்ள ஒரு குடும்பம் அதிகமுள்ள ஒவ்வொரு

குழந்தைக்கும் ரூ. 20,000 மதிப்புள்ள அதிகச் சொத்தை உடைமையாகக் கொண்டிருக்கலாம். எனினும், ஒரு குடும்பம் ரூ. 3. இலட்சம் மதிப்புக்கு அதிகமான சொத்துகளை உடைமையாகப் பெற்றிருக்கக்கூடாது.

பீஹார் மாநில அரசு சிறிய நிலவுடைமைகள் இணைப்புச் சட்டத்தையும் திருத்த இருக்கின்றது. ஒவ்வொரு நிலவுடைமையாளரும் மூன்று நிலத் துண்டுகளுள்ளாகவே நிலத்தை அமைக்க வேண்டும் என்று அங்குக் கட்டாயப்படுத்தப்படும். முதலில், நில இணைப்பு நடவடிக்கைகள் மூன்று மாவட்டங்களில் கைக்கொள்ளப்பட இருக்கின்றன. இத் திட்டத்திற்குச் சுமார் 36 கோடி ரூபாய் தேவைப்படும் என்று மதிப்பிடப்பட்டுள்ளது. அதில் அத்திட்டத்தை நிறைவேற்றும் தனிப்பணியாளர்களுக்கான செலவு ரூ. 8. கோடி ஆகும். இவ்வாறு பீஹார் அரசு நல்ல நிலச்சீர்திருத்தச் சட்டங்களை இயற்றுகின்றது. எனினும், இச் சட்டங்களை விரைவாக நிறைவேற்றுவதற்குத் தீவிர நடவடிக்கைகளை அரசு எடுக்க வேண்டும்.

நாட்டின் பல மாநிலங்களிலும் நில உச்சவரம்பின் அளவு குறைக்கப்படுகிறது. உச்சவரம்பைக் குறைப்பதால் ஏற்படக்கூடிய விளைவுகளை ஆராய்வது அவசியமாகும். மத்திய நிலச் சீர்திருத்தக் குழுவின் பரிந்துரைகளுக்குப் பலரும் எதிர்ப்புத் தெரிவித்துள்ளார்கள். புதிய நடவடிக்கைகளின் மூலம் ஏற்படக்கூடிய சமுதாய, பொருளாதார மாற்றங்களை ஆய்வதும் இன்றியமையாதது.

முதலில், பொருளாதார மாற்றங்களை ஆய்வு செய்யலாம். குறைந்த அளவு நிலவுடைமையைக்கொண்ட விவசாயிகள் குறைவான வருமானத்தையே பெறுவர். இயந்திரமயமான உற்பத்தி முறையைக் கைக்கொள்ளக் குறைந்தது 20 முதல் 30 ஏக்கர்கள் நிலம் தேவைப்படும். தற்போதைய நில உச்சவரம்புச் சட்டங்கள் செயல்படுத்தப்படும்போது தனி ஒருவர் 12 முதல் 18 ஏக்கர்கள் வரை மட்டுமே நிலத்தைப் பெற இயலும். இவ் வகை நிலங்களில் 'செலவு-நன்மை வீதம்' (Cost - Benefit Ratio) மிகக் குறைவாகவே இருக்கும். தொழில் நுணுக்க முன்னேற்றத்தின் நன்மைகளையும் பெற முடியாது.

பஞ்சாபில் 32,000 இயந்திரக் கலப்பைகளும், 1,84,000 குழாய்க் கிணறுகளும், 10,00,000 சாதாரணக் கலப்பைகளும் உள்ளன. சிறிய நிலவுடைமைகளைக் கொண்டுள்ள விவசாயிகள் மிகக் குறைந்த உபரி உற்பத்தியை மட்டுமே பெறுகின்றனர். கடனுக்கான

தவணையையும், வட்டியையும் கொடுக்கக்கூட அவர்களால் முடிவதில்லை. கடனைத் திருப்பித்தர இயலாத விவசாயிகளின் உற்பத்திச் சாதனப் பொருள்கள் கடனளித்தவர்களால் பறிமுதல் செய்யப்படுகின்றன. இதன் காரணமாகச் சில விவசாயிகள் தங்களுடைய சாகுபடி இயந்திரங்களையும் இழந்து விடுகின்றனர். சண்டை சச்சரவுகள் தோன்றவும் இது வழி வகுக்கின்றது. வங்கிகள் சில விவசாயிகளுக்குக் கடனளிக்கின்றன. கடன் மீட்கப்படாதபோது விவசாயிகளின் உடைமைகளை அவை கைப்பற்றுகின்றன. வங்கிகள் பணத்தை இழக்கும்போது விவசாயிகள் தங்களுடைய உற்பத்திக் கருவிகளை இழக்கின்றனர்.

வேளாண்மைச் சீர்திருத்தங்களின் மூலம் மிகச் சிறிய அளவுத் துண்டு நிலங்கள் குத்தகையாளர்களுக்கும், நிலமற்ற உழைப்பாளர்களுக்கும் அளிக்கப்படுகின்றன. பொருளாதார ரீதியில் இலாபத்தை அளிக்கக்கூடிய நிலங்களாக இவை அமைவதில்லை. அவற்றில் திறமையான சாகுபடி முறைகளைப் பின்பற்ற முடியாது. உற்பத்தியின் அளவு குறைவாகவே அமையும். புதிதாக நிலத்தைப் பெறுபவர்கள் நிர்வாகத் திறமையைக் கொண்டிருப்பதில்லை. திறமைக் குறைவு, நிதிப் பற்றுக்குறை ஆகியவற்றைக் கொண்டுள்ள அவர்கள் தங்களுடைய தொழிலைச் சிறப்பாகச் செய்ய இயலாது.

பஞ்சாப் வேளாண்மைப் பல்கலைக் கழகம் செய்த ஆய்வு சிறிய நிலவுடைமைகளைக் காட்டிலும் பெரிய, நடுத்தர நிலவுடைமைகளில் ஓர் ஏக்கருக்கான உற்பத்தி உயர்வாக இருப்பதையும், உற்பத்திச் செலவு குறைவாக இருப்பதையும் நன்கு உணர்த்துகின்றது. பஞ்சாபில் கோதுமை உற்பத்தி சிறிய பண்ணைகளில் ஓர் ஏக்கருக்கு 8 33 குவின்டால்களாகவும், நடுத்தரப் பண்ணைகளில் 8.62 குவின்டால்களாகவும், பெரிய பண்ணைகளில் 10 குவின்டால்களாகவும் இருக்கின்றது. ஒரு குவின்டாலுக்கான உற்பத்திச் செலவு (குடும்ப உழைப்பாளரின் செலவைச் சேர்க்காமல்) சிறிய பண்ணைகளில் ரூ.56.21 ஆக உள்ளது. குடும்ப உழைப்பாளரின் செலவையும் சேர்த்தால் கோதுமையின் விலை குவின்டால் ஒன்றுக்கு ரூ.76 ஆக இருக்கும்போது சிறிய பண்ணைகள் எவ்வித இலாபத்தையும் பெற முடியாது. நடுத்தர, பெரிய பண்ணைகள் நிலத்தின் அளவுக்கேற்ப கணிசமான இலாபத்தையும், அதிக அளவு இலாபத்தையும் அடைகின்றன.

நிலவுடைமை அளவுகள் மாறும்போது, அவற்றின் விற்பனை உபரியின் அளவுகளும் மாறுகின்றன. இதுபற்றிய ஆய்வு பஞ்சாப்

வேளாண்மைப் பல்கலைக்கழகத்தால் 1970-71-ல் செய்யப்பட்டது. வெவ்வேறு அளவு நிலங்களில் கோதுமை, சோளம், நிலக்கடலை ஆகியவற்றின் விற்பனை உபரிச் சதவீதம் எந்த அளவுகளில் இருந்தது என்பதைப் பின்வரும் அட்டவணை உணர்த்தும்.

| நில அளவு | கோதுமை | சோளம் | நிலக்கடலை |
|---|---|---|---|
| 14 ஏக்கர்களுகுள்ளாக (சராசரி அளவு 7.90) | 69.76 | 59.19 | 69.72 |
| 14–28 ஏக்கர்கள் (சராசரி அளவு 18.79) | 76.31 | 66.48 | 80.34 |
| 28 ஏக்கர்களுக்கு மேலாக (சராரிச அளவு 46.22) | 84.48 | 69.82 | 83.93 |

மக்கள் அதிக அளவு நன்மைகளைப் பெற விற்பனை உபரியின் அளவு பெருக்கப்படவேண்டும். உயர்ந்த அளவில் விற்பனை உபரி பெருக்கப்படும்போது சமுதாயத்தினரின் வாழ்க்கைத்தரம் உயர்கின்றது.

பஞ்சாப்பில் 75 சதவீதத்திற்கு அதிகமான நிலவுடைமைகள் 5 ஏக்கர்களுக்கும் குறைவாக இருக்கின்றன. அந்த நிலங்களில் சாகுபடி நடவடிக்கைகள் குடும்ப அங்கத்தினர்களாலேயே செய்யப்படுகின்றன. சுமார் 13 சதவீத நிலவுடைமைகள் 5 முதல் 10 ஏக்கர்கள் என்ற அளவில் உள்ளன. இவ்வகை நிலவுடைமைகளில் குடும்ப அங்கத்தினர்களோடு கூலி உழைப்பாளர்களின் பணியும் பெறப்படுகின்றது. விதை விதைத்தல், களைபறித்தல், அறுவடை செய்தல் முதலியவற்றில் கூலி உழைப்பாளர்கள் ஈடுபடுத்தப்படுகிறார்கள். குடும்ப அங்கத்தினர்களின் எண்ணிக்கைக்கு ஏற்பக் கூலியாட்களின் எண்ணிக்கை மாறுபடுகிறது. போதுமான குடும்ப அங்கத்தினர்கள் இருந்தால் கூலியாட்கள் நியமிக்கப்படுவதில்லை. சுமார் 9 சதவீத நிலவுடைமைகள் 10 முதல் 20 ஏக்கர்கள் என்ற அளவில் இருக்கின்றன. இப்பிரிவில் அமைந்துள்ள நிலவுடைமையாளர்கள் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட உழைப்பாளர்களை நிரந்தரமாக வைத்துக் கொள்ளுகின்றனர், சாகுபடி நிலைக்கேற்பக் கூலி உழைப்பாளர்களும் நியமிக்கப்படுகின்றார்கள்.

பஞ்சாப் மாநிலத்தின் மொத்த நிலவுடைமைகளில் சுமார் 5 சதவீதம் 20 ஏக்கர்களுக்கு அதிகமான அளவில் இருக்

கின்றன. இந்த நிலவுடைமையாளர்கள் தீவிரமான முற்போக்கு எண்ணங்களைக் கொண்டவர்கள். முன்னேற்றமான தொழில் நுட்ப உற்பத்திமுறைகளை இவர்கள் பின்பற்றுகின்றார்கள். அமோக விளைச்சலைத் தரக்கூடிய நல்ல விதைகளையும், உரங்களையும் பயன்படுத்துகின்றார்கள். இயந்திரமயமான சாகுபடி முறைகளைக் கைக்கொள்ளுபவர்களும் அவர்களே ஆவர். இவ்விவசாயிகள் பல போகச் சாகுபடியைச் செய்கின்றார்கள். இவ்வகைப் பண்ணைகளில்தான் அதிக வேளாண்மை உழைப்பாளர்கள் இருக்கின்றனர். இப் பண்ணைகளில் அளிப்பைக் காட்டிலும் உழைப்பின் தேவை பெருகியுள்ளது. 1955-66ல் இருந்து உழைப்பாளர் ஊதியம் சுமார் 80 முதல் 100 சதவீதம் அதகரித்திருக்கின்றது. இந்த நிலவுடைமையாளர்கள் புதிய சாகுபடி முறைகளைக் கண்டுபிடித்துப் பின்பற்றுகிறார்கள். அப் புதிய முறைகள் நாடு முழுவதும் படிப்படியாகப் பரவுகின்றன.

நிறைவேற்றப்பட இருக்கின்ற நில உச்சவரம்புச் சட்டம் இவ்வகைப் பெரிய நிலவுடைமையாளர்களைப் பாதிக்கும். பஞ்சாப் அரசு நில உச்சவரம்பின் அளவைக் குறைக்கக் கருதியுள்ளது. இதனால், உழைப்பாளர்கள் வேலை இழக்கக்கூடும். உழைப்பாளர் பிரச்சினைத் தீர்க்கப்படாமல் மேலும், தீவிரமடையும். தவிர வேளாண்மை உற்பத்தி அதிகரித்து வருகின்ற நிலையும் பாதிக்கப்படும். வேளாண்மை இயந்திரமயமாக்கப்படும் நிலை தடைப்படும்; உற்பத்தித் திறன் குறைவடையும். நில உச்சவரம்பின் அளவைக் குறைக்கும்போது அதிக வருமானத்தைப் பெறுகின்ற பெருநிலக் கிழார்கள் குறைந்த வருமானத்தைப் பெறுபவர்களாக மாறுவர். சிறிய விவசாயிகளாகவும் அவர்கள் மாறி விடுவார்கள். கடந்த இருபது ஆண்டுகளாகச் சிறிய நிலவுடைமைகளை இணைப்பதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன. அதன்மூலம் பெறப்பட்டுள்ள ஓரளவு நன்மைகள் நில உச்சவரம்பைக் குறைப்பதன் மூலம் மறைந்துவிடும்.

உச்சவரம்பின் அளவைக் குறைப்பதால் வேறு சில சமுதாய மாற்றங்களும் தோன்றக்கூடும். பல தலைமுறைகளாகக் கிராமச் சமுதாயம் பின்தங்கிய நிலையிலேயே இருக்கின்றது. பாரம்பரிய உற்பத்தி முறைகளையே கிராம மக்கள் பின்பற்றி வருகின்றார்கள். அவர்கள் கல்வியறிவற்றவர்களாகவும் இருக்கின்றனர். சமீப காலமாகக் கிராமப் புறங்களில் ஓரளவு கல்வி வளர்ச்சி ஏற்பட்டு வருகின்றது. விவசாயிகளின் குழந்தைகள் உயர் கல்வியையும் பெறுகின்றார்கள்; புதிய வேலைகளிலும் ஈடுபடுகின்றார்கள். கிராம

மக்களிடையே தீவிரப் போக்கும், கல்வியறிவும் வளர்ந்து வருகின்றன. நில உச்சவரம்பைக் குறைப்பதன்மூலம் வேளாண்மை வளர்ச்சி குன்றிவிடும்.

குறைந்த வருமானத்தைப் பெறுகின்ற விவசாயிகளின் குழந்தைகள் உயர் கல்வியைப் பெறுவதில்லை. சிறிய விவசாயிகள் உயர்கல்வியைத் தங்களுடைய பிள்ளைகளுக்கு அளிப்பதற்குப் போதுமான நிதி வசதியைக் கொண்டிருப்பதில்லை. சிறிய விவசாயக் குடும்பத்தினர் மருத்துவக் கல்வியையோ, பொறியியற் கல்வியையோ பெரும்பாலும் பெறுவதில்லை. பொதுவாகக் கிராம மக்கள் குறைந்த வசதிகளை மட்டுமே அனுபவிக்கின்றனர். போக்குவரத்து, செய்தித் தொடர்பு, கல்வி, மருத்துவம் முதலிய வசதிகள் சிறப்பான வகையில் நகரங்களிலேயே உள்ளன. பொதுப் பயன் பணிகள் யாவும் கிராம மக்களுக்கும் அளிக்கப்படவேண்டும். விவசாயிகளும், அவர்களுடைய குடும்பத்தினரும் அடிப்படை வசதிகளைப் பெற்றால்தான் உற்பத்தியைப் பெருக்கவேண்டும் என்ற உணர்ச்சியால் உந்தப்படுவார்கள். பல வசதிகளையும் அளித்துக் கிராம மக்களுக்கு வாழ்க்கையில் விருப்பும், பிடிப்பும் தோன்றுமாறு செய்யவேண்டும். கல்வி கற்கும் மாணவர்களுக்கு அரசு சலுகைகள் அளிக்கலாம்; உதவித் தொகைகள் வழங்கலாம். நில உடைமைகளின்மீது உச்சவரம்பை விதிப்பதற்கு முன்னர், கிராம மக்களுக்குப் போதிய வசதிகள் அளிக்கப்படவேண்டும்.

தொழில் துறை நிறுவனங்கள், வாணிப நிறுவனங்கள் ஆகியவை பெறக்கூடிய வருமானத்தின்மீது உச்சவரம்பு விதிக்கப்படவில்லை. அத் துறைகளில் அதிக முதலீடு செய்யப்பட்டிருப்பது அதற்குக் காரணமாகக் கூறப்படுகின்றது. மேலும், அவற்றின் தொழில் முயல்வோர் திறமையானவர்களாகவும் இருக்கின்றனர். ஆனால், இதைச் சரியான வாதம் என்று கருதத் தோன்றவில்லை. ஏனெனில், பல பெரிய விவசாயிகளும் நிலத்தின் மீது அதிக முதலீட்டைச் செய்கின்றனர்கள். அவர்கள் திறமையான பணிகளையும் ஆற்றுகின்றனர். உச்சவரம்பால் அவர்கள் செய்யக்கூடிய முதலீட்டின் அளவு குறையும். தொழிலிலும், வாணிபத்திலும் அவர்கள் தங்களுடைய மூலதனத்தை முதலீடாக்கி இருந்தால் உச்சவரம்பால் பாதிக்கப்படமாட்டார்கள்.

இந்தியச் சமுதாயத்தில் வறுமை ஒரு பெரிய சிக்கலாக அமைந்துள்ளது. வருமானத்திலும், செல்வப் பங்கீட்டிலும் உள்ள ஏற்றத்தாழ்வுகளைக் குறைக்கவேண்டுமென்று அரசு விரும்புகின்றது. நில உச்ச வரம்பு விவசாயிகளைப் பாதிக்கும். தொழில்,

வாணிபம் முதலியவற்றில் ஈடுபட்டுள்ளவர்களின் நிலை பாதுகாப்பாக இருக்கின்றது. அவர்கள்மீது எவ்வகை உச்ச வரம்பும் விதிக்கப்படவில்லை. இதன்மூலம் சமத்துவம், சமுதாய நீதி ஆகியவை காக்கப்படாமையை அறிகின்றோம். நில உச்ச வரம்பு விதிப்பால் பலரும் நிலத்தில் முதலீடு செய்ய விரும்பமாட்டார்கள். பிற துறைகளில் அவர்கள் முதலீடு செய்யத் தொடங்கும்போது வேளாண்மை உற்பத்தி குறையும். எவரும் வேளாண்மைச் சாகுபடி நடவடிக்கைகளில் ஆர்வத்தோடு ஈடுபடமாட்டார்கள்.

நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்க கிணறுகள் தோண்டப்படுகின்றன; பம்பு செட்டுகள் பயன்படுத்தப்படுகின்றன. குழாய்க் கிணறுகள் அமைக்கப்படுகின்றன; சில இடங்களில் குளங்கள் வெட்டப்படுகின்றன. சமுதாய அமைப்பில் மாற்றங்களைப் பெற கிராமங்களில் கழகங்கள் அமைக்கப்படுகின்றன. கூட்டுறவுச் சங்கங்கள் கிராம மக்களிடையே நட்பை வளர்க்கின்றன. கிராமங்களில் மருத்துவச் சாலைகள், ஆதாரக் கல்விக் கூடங்கள், தாய்-சேய் நல விடுதிகள் ஆகியவை அமைக்கப்படுகின்றன. கால் நடைப் பராமரிப்பை மேம்படுத்த நோய்த் தடுப்பு நடவடிக்கைகளும் எடுக்கப்பெறுகின்றன.

கிராமப் புனரமைப்புக்குக் கூட்டுறவு வளர்ச்சி அவசியமான தென்பதை அரசு உணர்ந்துள்ளது. முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் கிராமங்களில் சமுதாய, பொருளாதார மாற்றங்களைப் பெறக் கூட்டுறவு நிர்வாகம் பரிந்துரைக்கப்பட்டது. கூட்டுறவுக் கடன், கூட்டுறவு விற்பனை, கூட்டுறவுப் பண்ணை, சேவைக் கூட்டுறவுகள், பல நோக்குக் கூட்டுறவுகள் முதலியவற்றின் வளர்ச்சிக்காக அரசு அதிக மூலதனத்தை ஒதுக்கியது.

நிலச் சீர்திருத்தங்களால் உழைப்பாளர்கள் சுரண்டப்படும் நிலை ஓரளவு குறைந்துள்ளது. எனினும், நிலச் சீர்திருத்தச் சட்டங்களின் மூலம் நன்மையடைந்துள்ளவர்கள் ஒரு சிலரே ஆவர். வசதி மிக்க குத்தகையாளர்கள் நிலவுடைமையாளர்களாக மாறியுள்ளனர். பெரும்பாலான சாகுபடியாளர்களுக்கும் அரசுக்கும் இடையே நேரடித் தொடர்பு ஏற்பட்டுள்ளது.

அவர்களே நிலவரியை அரசுக்கு நேரடியாகச் செலுத்தி வருகின்றனர். குத்தகை நிலத்தின் அளவும் குறைந்துள்ளது. நாணுவதி, அச்சாரியா ஆகியோருடைய கணிப்பின்படி 1960-61-ல் சுமார் 78 சதவீத வேளாண்மை நிலம் சொந்தச் சாகுபடியிலேயே அமைந்திருந்தது.

நிலச் சீர்திருத்தங்களின் நோக்கங்களில் நாம் இன்னும் வெற்றி பெறவில்லை. இன்றும் பலர் பெரிய அளவு நிலங்களை உடைமையாகக் கொண்டுள்ளார்கள். நிலச் சீர்த்திருத்தச் சட்டங்கள் சிறப்பாகவும், விரைவாகவும் செயல்படுத்தப்படவில்லை. விவசாயிகள் நிலச் சீர்த்திருத்தங்களின் நன்மைகளைப் பெற சட்டங்கள் சரியாகச் செயல்படுத்தப்படவேண்டும்.

1960—61-ல் 61 சதவீதச் சாகுபடி நிலத்தை 12 சதவீத கிராமக் குடும்பத்தினர் உடைமையாகக் கொண்டிருந்தனர். அந்த நிலவுடைமைகளின் சராசரி நில அளவு 10 ஏக்கர்களுக்கும் மேலாக இருந்தது. கிராமக் குடும்பங்களில் 5 சதவீதம் மட்டுமே 20 ஏக்கர்களுக்கும். அதிக அளவில் நிலத்தை உடைமையாகப் பெற்றிருந்தன. இக் குடும்பங்கள் மொத்தச் சாகுபடி நிலத்தில் 35 சதவீதத்தைக் கொண்டிருந்தன. 7.25 மில்லியன் கிராமக் குடும்பத்தினர் 318,000,000 ஏக்கர்கள் நிலத்தைப் பெற்றிருந்தனர். அதில் 3.6 மில்லியன் குடும்பங்கள் 111,000,000 ஏக்கர்கள் நிலத்தை உடைமையாகக் கொண்டிருந்தன. 1953—54-ல் 7.6 ஏக்கர்களாக இருந்த சராசரி நிலவுடைமையின் அளவு 1960—61-ல் 6.5 ஏக்கர்களாகக் குறைந்துவிட்டது.

தன்னிறைவைப் பெற அரசு 'செறிவு வேளாண்மை முன்னேற்றத் திட்டத்தையும்' (Intensive Agricultural Development Progromme), 'செறிவு வேளாண்மைப் பகுதித் திட்டத்தையும்' (Intensive Agricultural Area Programme) கைக்கொண்டது. இந்தத் திட்டங்களின் முக்கிய நோக்கம் முன்னேற்றமான சாகுபடி முறைகளை விவசாயிகள் பின்பற்றுமாறு தூண்டுவதேயாகும். ஓர் ஏக்கருக்கான உற்பத்தியைக் கணிசமான அளவு உயர்த்தவும் கருதப்பட்டுள்ளது.

வேளாண்மையைப் புதுமைப்படுத்திச் சிறிய விவசாயிகளுக்கு நன்மையளிக்க வேண்டுமென்று அரசு விரும்புகிறது. விவசாயிகள் ஒரு குறிப்பிட்ட அளவு நிலத்தையாவது உடைமையாகக் கொண்டிருந்தால்தான், அரசு திட்டங்களின்மூலம் செய்யும் முதலீட்டின் நன்மைகளைப் பெறலாம். ஊக்கமளிக்கும் வகையில் அரசு விலைக் கொள்கைகளையும் மாற்றி அமைக்கிறது. நிலமுடையவர்கள் மட்டுமே அரசின் வேளாண்மைத் திட்டங்களால் நன்மையடைகின்றனர். வேளாண்மை வருமான வரிவிதிப்புமுறை பல மாநிலங்களில் சிறப்பாக அமைந்திருக்கவில்லை. வளர்வீத வரிமுறை கிராமங்களின் பெரு நிலக்கிழார்களை அதிகமாகப் பாதிப்பதில்லை.

சமீப காலத்தில் இந்திய வேளாண்மைத் துறையில் உற்பத்தி கூடியிருந்தாலும்கூட உற்பத்திச் செலவும் அதிகரித்துள்ளது. வேளாண்மைச் சீர்திருத்தங்கள் செய்யப்பட்ட பின்னரும், குத்தகையாளர்கள் கூலி உழைப்பாளர்கள் ஆகியோருடைய நிலை திருந்தவில்லை. சமூக நீதியைக் காத்து உற்பத்தியைத் திடீரென்று குறுகிய காலத்தில் உயர்த்துவது கடினமானது. அமோக விளைச்சல் திட்டம் உற்பத்தியைப் பெருக்கி இருக்கின்றது. எனினும், கிராமங்களில் மக்களிடையே கொந்தளிப்பு நீடிக்கின்றமைக்கும் இதுவே காரணமாகின்றது. குத்தகையாளர்களுக்கும், நிலக்கிழார்களுக்கும், உழைப்பாளர்களுக்கும் இடையே கசப்புணர்ச்சி அமைந்துள்ளது.

கிராமப் புறங்களில் விவசாயிகளை நிதிவசதி கொண்டவர்களாக மாற்றவேண்டும். நகர்ப் புறங்களில் உள்ள தொழில் முயல்வோருக்கு அளிக்கக்கூடிய ஊக்கங்களை அரசு, விவசாயிகளுக்கும் அளிப்பது அவசியம். சமதர்மத்தைப் பின்பற்றும் இந்தியாவில் வருமானத்திலும், செல்வப் பங்கீட்டிலும் உள்ள ஏற்றத்தாழ்வுகள் நீக்கப்படவில்லை. முன்னேறுவதற்கான வாய்ப்புச் சிலருக்கு மட்டுமே உள்ளது; மற்றவர்களுக்கு அவ்வாய்ப்புக் கிட்டுவதில்லை.

பொருளாதார முன்னேற்றத்தைப் பெறத் தொழில் துறையின் வளர்ச்சி இன்றியமையாதது என்பதை யாவரும் அறிவர். வேளாண்மையில் உள்ள உபரி உழைப்பாளர்களைத் தொழில் வளர்ச்சிக்குப் பயன்படுத்தலாம். அதற்குத் தொழில் துறையில் வேலை வாய்ப்புகளை அதிகரிக்கவேண்டும். அணுசக்தி-பாதுகாப்பு போன்ற தொழில்களை அரசு முற்றுரிமையாகக் கொண்டுள்ளது. பல முக்கியப் பெரிய தொழில்களை அரசே தொடங்கியது. தொழில் துறைக்கு அரசு தனிச் சலுகைகளை வழங்குகிறது. கடந்த இருபது ஆண்டுகளில் தொழில் துறை அரசு பல திட்டங்களை நிறைவேற்றியது. அவற்றில் ஓரளவு வெற்றியும் கிட்டியுள்ளது. வேளாண்மை வளர்ச்சிக்கும் அரசு அதிக முதலீட்டைச் செய்தது. எனினும் மிகச் சிறப்பான வெற்றி வேளாண்மையில் கிடைக்கவில்லை. திட்டத்தின் நன்மைகளைப் பெரிய விவசாயிகளே பெற்று வருகின்றனர்.

ஓரே மாதிரியான நில உச்சவரம்புச் சட்டங்களை இயற்ற வேண்டியதன் அவசியத்தை மாநில முதலமைச்சர்கள் ஒப்புக்கொண்டுள்ளனர். குத்தகையாளர்களுக்கு நிலவுடைமைகளின் உரிமைகளை வழங்க வேண்டுமென்ற கருத்தும் நிலவி வருகின்றது. 'குத்தகையாளர்கள் நிதிக்கழகம்' (Tenants' Finance Corporation)-

அமைத்துக் குத்தகையாளர்களுக்கு நிலத்தை வாங்குவதற்கான நிதியைக் கடனாக அளிக்கலாம்.

பொருளாதார முன்னேற்றத்திற்கும் நிலச் சீர்திருத்தங்களுக்கும் இடையே நெருங்கிய தொடர்பு உள்ளது. சரியான சட்டங்களை இயற்றி அவற்றை விரைவாக நிறைவேற்றுவதிலேயே வெற்றி அடங்கி இருக்கிறது. நிலச் சீர்திருத்தங்கள் தொழில் முன்னேற்றத்திற்கு உதவவேண்டும்; வருமானத்திலும், செய்வப் பங்கீட்டிலும் உள்ள ஏற்றத் தாழ்வுகளைக் குறைக்க வகைசெய்யவேண்டும் உண்மையான சமதர்மம் மலர மத்திய அரசின் கொள்கைகளுக்கு மாநில அரசின் ஒத்துழைப்புத் தேவைப்படுகிறது. வேளாண்மை வளர்ச்சியடையக் கடன், விற்பனை, போக்குவரத்து, செய்தித் தொடர்பு ஆகிய வசதிகளைப் பெருக்குவது அவசியம். விவசாயிகளை எழுத்தறிவுள்ளவர்களாக மாற்றுவதும் இன்றியமையாதது.

சமுதாய நீதியைக் காக்க நிலச் சீர்திருத்தங்கள் செய்யப்படுகின்றன. பொருளாதார முன்னேற்றம் சமுதாய நீதி காக்கப்படும்போது பாதிக்கப்படக்கூடும். விரைவான முன்னேற்றத்தைப் பெற முயலுவதைவிடச் சமுதாய நீதியைக் காப்பதே சாலச் சிறந்தது. அரசின் சட்டங்கள் ஒவ்வொரு மனிதனுக்கும் அடிப்படைத் தேவைகளையாவது பூர்த்திசெய்யுமாறு அமையவேண்டும். ஒரு சிலர் வாழும்போது, பலர் வாடுமாறு நிலச் சீர்திருத்தச் சட்டங்கள் அமையக்கூடாது. எல்லாரும் நலம் பெறும் வகையிலும், பொருளாதார முன்னேற்றம் விரைவுபடும் வழியிலும் நிலச் சீர்திருத்தச் சட்டங்களைச் செயல்படுத்துவது இன்றியமையாதது.

# BIBLIOGRAPHY


Agarwal, G. D. —'Agraian Reforms and Agricultural Reforms'.

Anisimov — 'Soviet Agriculture'.

Baden Powell — 'Land Revenue in British India'.

Baden Powell — 'Land System of British India'.

Baljit Singh — 'Study of Land Reform in Uttar Pradesh'.

Baljit Singh — 'Next Step in Village India'.

Banerjee, F. — 'Co-operation in India'.

Bhargava, S.K. — 'Indian Peasant Proprietorship'.

Bhattacharjee, J. P. (Ed.) — 'Studies in Indian Agricultural Economics'.

Bhattacharya, K N. — 'Indian Plans'.

Bhowani Sen — 'Evolution of Agrarian Relations in India'.

Carl K. Eicher and Lawrence W. Witt (Ed.) — 'Agriculture in Economice Development',

Charan Singh — 'India's Poverty and Its Solution'.

Coldwell, M. J. and others — Reports of a C. D. Mission in India'.

Daniel Thorner — 'Agrarian Prospects in India'.

Daniel Thorner Land and Labour in India'.

Darling, M.L. — 'The Punjab Peasant in Prosperity and Debt'.

Das, D.D. — 'Peasant Proprietorship in India'.

Desai, A.R. — 'Rural India in Transition'.

Dey, S.K. — 'Community Development'.

Digby, M. — 'Co-operative Farming'.

Driver, P.N. — 'Problems of Zamindari and Land Tenure Reconstruction'.

Dube, S.C. — 'India's Changing Villages'.

Easterbook, L.F. — Farming and Mechanised Agriculture'.

Efferson, J.N. — Principles of Farm Management'.

Einsminger Douglas — 'A Guide to Community Dev elop ment'.

Fedor Belov — 'The History of Soviet Collective Farms'.

Forester — 'Farm Management'.

Gadgary, D.A. — 'Mechanical Cultivation in India'.

Ganbhi, V.P. — 'Tax Burden on Indian Agriculture'.

Goyal, S.K. — 'Co operative Farming in India'.

Gunnar Myrdal — 'Asian Drama', Vol II, Chap. 26 (Agricultural Policy).

Gnru Charan Singh — 'Recent Trends in Agrarian Reforms'.

Halcrow, H. G. — 'Contemporary Readings in Agricultural Economics, Chapter on Theories concerning Land Tenure, by Rainer Schickele.

Haxari, R.K. — 'The Economics of State Farming'.

Henry Wolfe — 'Co-operative Movement in India'.

Hough, E.N. — 'The Co-operative Movement in India'.

Jacoby, E. H. — 'Inter - relationship between Agrarian Reforms and Agricultural Development'.

Jain, S. C. — 'Community Development and Panchayat Raj in India'.

Jasny, N. — 'The Socialised Agriculture of the U.S.S.R'.

Karuna Mukherjee — 'Land Reforms'.

Kavoosi, J.C. and Singh, B.N. — 'History of Rural Development in Modern India'.

Khusro, A. M. and Agarwal, A. N. — 'Problems of Co-operative Farming in India'.

Krishan Dev Bagai — 'Community Projects and Co-operative Farming in India'.

Krishnamachari, V. T. — 'Community Development in India'.

Luxminarayan and Kanungo — 'Glimpses of Co-operative Farming in India'.

Malaviya, H.D. — 'Land Reforms in India'.

Manmohan Choudri — 'The Gramdan Movement'.

Masani, R.P. — 'The Five Gifts'.

Mathew, E.T. — 'Agricultural Taxation and Economic Development in India'.

Mehta, V.L. — 'Co-operative Farming'.

Mehta, S. B. — 'Co - operative Farming and Agrarian Development in India'.

Misra, B. R. — 'V for Vinoba: The Economics of the Bhoodan Movement'

Mukherjee, R. K. — 'Economic Problems of Modern India', Vol. I.

Mukherjee, R.K. — 'Indian Land System'.

Mukherjee R.K. — 'Land Problems of India'.

Mukherjee, B. — 'Community Development in India'.

Nanavati, M.B. — 'Land Tenures in India'.

Nanda, G.L. — 'Progress of Land Reforms in India'.

Otto Schiller — 'Co-operative Farming and Individual Farming on Co-operative Lines'.

Patel, G.D. — 'Indian Land Problem and Legislation'.

Pillay, T.S. — 'An Outline of Co-operative Movement in India'.

Qureshi, A.I. — Future of Co - operative Movement in India'.

Rajeswar Dayal — 'Community Development in India'.

Raj Krishna and others — 'Co-operative Farming: Some Reflections, Indian Co-operative Union, New Delhi'.

Randhava. M.S. — 'Development Village India'.

Ranga, N. G. — 'The Peasant and Co-operative Farming'.

Sachin Sen — 'Tenure of Agricultural Land'.

Singh Mann, H. — 'Analysis of Some Problems of Community Development'.

Sonachalam, K. S. — 'Land Reforms in Tamilnadu: Evaluation and Implementation'.

Srinivas, M.N. — 'India's Villages'.

Srivastava, G.P. — 'Traditional Forms of Co-operation in India'.

Strickland, C.F. — 'Co-operation in India'.

Sudhir Sen — 'Land and Its Problems'.

Suresh Ram — 'Progress of a Pilgrimage'.

Suresh Ram — 'Vinoba and His Mission'.

Tandon, P D. — 'Vincba Bhave, The Man and His Mission'.

Thorner, D. — 'Agrarian Prospects in India.'

Umrao Singh — 'Community Development in India'.

Vinoba Bhave — Bhoodan Yajna (Lond Gift Mission'.)

# REPORTS AND JOURNALS

UNITED NATIONS

Progress in Land Reforms (1954).

Land Reforms: Defects in Agrarian Structure as Obstacles to Economic Development, 1954.

Report of Community Development Evaluation Mission in India (1957).

Rural Progress Through Co-operatives (1954).

GOVERNMENT OF INDIA

First Five Year Plan.

Second Five Year Plan.

Third Five Year Plan.

The Third Plan Mid-Term Appraisal, The Third Plan Progress Report.

The Annual Plans 1966—67, 1967—68, 1668—69,

India- 1965-1969.

Fourth Five Year Plan.

Report of the Central Banking Enquiry Committee (1930).

Report of the Co-operative Planning Committee, (1948).

Co-operation—Today and Tomorrow (1960).

Co-operation for Rural Development, (1958).

Annual Reports of the Agricultural Refinance Corporation.

Community Devolopment Programme in India, (1955).

Road to the Welfare State, (1955).

Community Development: Programme and Benefits, (1958).

Report of the Team for the Study of Community Projects and National Extension Service, (1957).

Kurukshetra: A Symposium on Community Projects and National Extension Service, (1957)

Annual Reports: Ministry of Food, Agriculture, Community Development and Co-operation.

Co-operative Farming, (1949).

Report of the Working Group on Co-operative Farming, (1959).

Land Reforms in India, (1955).

Memorandum on Consolidation of Holdings, (1958).

Report of Indian Delegation to China on Agrarian Co-operatives, (1957).

Report of the Indian Delegation to China on Agricultural Planning and Techniques, (1957).

The Land Revenue Policy.

RESERVE BANK OF INDIA

Report of the All-India Rural Credit Follow-up Survey, (1960).

Report of the All India Rural Credit Survey, Vol. II, (1954).

Role of Bank Reserve Bank of India in the Scheme of Agricultural Credit, (1943).

Land Mortgage Banks. (1951).

Review of the Co-operative Movement in India, (1962-64).

PLANNING COMMISSION

Progress of Land Reforms, (1963).

Reports on the Committee of the Panel of Land Reforms, (1959).

Report of the Land Reforms Implementation Committee, (1964).

Implementation of Land Reforms—A Review by the Land Reforms Implementation Committee of the National Development Council, (August 1966).

OTHER REPORTS

AICC—Congress Agrarian Reforms Committee Report (1949).

National Sample Survey Report No. 74.

Report of the Bengal Land Revenue Commission Vol. I. (1940).

Report of the Taxation Enquiry Commision, Vol. III, (1953-54).

Report of the U.P. Zamindar Abolision Committee, (1948).

I.S.A.E.-Conference No. of Agricultural Economics, No. 1, 1962 (114–195).

JOURNALS

Indian Economic Journal.

Indian Journal of Economics.

The Indian Economic Review.

The Economic Weekly.

The Commerce.

The Eastern Economist.

The Yojana.

AICC Economic Review.

The American Economic Review.

The Journal of Political Economy.

The Oxford Economic Papers.

The Quarterly Journal of Economics.

The Economic Journal.

Economic Bulletin for Asia and Far East.

The IMF Staff Papers.

# கலைச்சொற்கள்

## A

Absentee-Landlord — தலத்திலில்லாத நிலக்கிழார்

Absentee-Landlordism — தலத்திலில்லா நிலக்கிழார் முறை

Advisory Planning Board — ஆலோசனைத் திட்ட வாரியம்

Agrarian Serfdom — வேளாண்மை அடிமைத்துவம்

Agricultural Census — வேளாண்மைக் கணக்கெடுப்பு

Agricultural Extension Officer — வேளாண்மை விரிவாக்க அலுவலர்

Agricultural In-come-Tax Acts — வேளாண்மை வருமான வரிச் சட்டங்கள்

Agricultural Labour Enquiry Committee — வேளாண்மை உழைப்பு விசாரணைக் குழு

Agricultural Labour in India — இந்தியாவில் வேளாண்மை உழைப்பு

Agricultural Prices Commission — வேளாண்மை விலைகள் குழு

Agricultural Production Committee — வேளாண்மை உற்பத்திக் குழு

Agricultural Refinance Corporation — வேளாண்மை மறுநிதிக் கழகம்

Agricultural Research and Experimentation Stations — வேளாண்மை ஆராய்ச்சி, பரிசோதனை நிலையங்கள்

Agricultural Serf — வேளாண்மைப் பண்ணையாள்

Agricultural Taxation — வேளாண்மை வரிவிதிப்பு

Agricultural Taxation and Economic Development in India — இந்தியாவில் வேளாண்மை வரிவிதிப்பும், பொருளாதார முன்னேற்றமும்

Agro Industries Corportions — வேளாண்மைத் தொழில் கழகங்கள்

Akhil Bhart Sarva Seva Sangh — அகில பாரத சர்வ சேவா சங்கம்

All-India Board of Agriculture — அகில இந்திய வேளாண்மை வாரியம்

All-India Rural Credit Survey Report — அகில இந்தியக் கிராமக் கடன் கணக்கெடுப்பு அறிக்கை.

All-India Rural Credit Review Committee — அகில இந்தியக் கிராமக் கடன் பரிசீலனைக் குழு

Artisans — கைவினைஞர்கள்

Attached Labourers — இணைப்புக் கொண்ட உழைப்பாளர்கள், இணைப்பு உழைப்பாளர்கள்

Attached Laboer households — இணைப்பு உழைப்பாளர்க் குடும்பங்கள்

B

Balanced Development — சரிசம வளர்ச்சி

Balance of Payments — அயல் நாட்டுச் செலுத்து இருப்பு நிலை

Baramasiya — பரமசியா

Bargadars — பர்காதார்கள்

Bargaining Capacity — பேரம் பேசும் திறன்

Basic Holding — அடிப்படை நிலவுடைமை

Betterment Levy — மேம்பாட்டு வரி

Bhoodan Boards — பூதான வாரியங்கள்

Block — வட்டம்

Board — வாரியம்

Board of Extension — விரிவாக்க வாரியம்

Board of Research — ஆராய்ச்சி வாரியம்

Bond-Servants — கடன் பத்திரப் பணியாளர்கள்

Buddhidan — புத்திதானம்

Burden of Agricultural taxation in India — இந்தியாவில் வேளாண்மை வரி விதிப்பின் சுமை

C

Canon of Economy — சிக்கன விதி

Canon of Equity — சமத்துவ விதி

Capital Budget — மூலதன வரவு-செலவுத் திட்டம்

Capital Gains Tax — மூலதன இலாப வரி
Capital goods — மூலதனப் பொருள்கள்
Capital input — மூலதன உள்ளீடு
Capitalist Revolution — முதலாளித்துவப் புரட்சி
Capital-output Ratio — மூலதன-உற்பத்தி வீதம்
Cash-Crops — வாணிபப் பயிர்கள்
Casual Labourer — சாதாரண உழைப்பாளர்
Central Advisory Committee — மத்திய ஆலோசனைக் குழு
Central Commodity Committee மத்தியப் பொருள் குழு
Central Commodity Research Station — மத்தியப் பொருள் ஆராய்ச்சி நிலையம்
Central Food Advisory Council — மத்திய உணவு ஆலோசனைக் குழு
Central Irrigation Station — மத்திய நீர்ப்பாசன நிலையம்
Central Statistical Organi Sation — மத்தியப் புள்ளிவிவர அமைப்பு
Central Tractor Organisation — மத்திய இயந்திரக் கலப்பை நிறுவனம்
Cess — பிரதேச வரி
Chairman — தலைவர்
Chakars — சக்கார்கள்
Chemist — வேதியியல் நிபுணர்
Collective Farm — கூட்டுப் பண்ணை
Colis — கோலிகள்
Combined Drill — இணைக்கப்பட்ட துளையிடும் கருவி
Combined Harvester — இணைக்கப்பட்ட அறுவடைக் கருவி
Committee of Price Stebili Sation — விலை நிலைபேருக்கக் குழு
Committee of Higher Rural Education — கிராம உயர் கல்விக் குழு
Committee on Rural Education — கிராமக் கல்விக்குழு
Community Development Blocks — சமுதாய முன்னேற்றப்பிரிவுகள்
Community Development Programme — சமுதாய வளர்ச்சித் திட்டம்
Consumer' Price — நுகர்வோர் விலை
ontrols — கட்டுப்பாடுகள்
Co-operative Joint Farming — கூட்டுறவு இணைப்புப் பண்ணை

